# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஐந்தாம் மடலம் - முதல் பாகம்

## ந - நா

## Vol. V - Part - I


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## ஐந்தாம் மடலம் - முதல் பாகம்

## ந, நா

## Vol. V - Part - I


முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

அரசு செயலாளர்,

தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட

இயக்கக வெளியீடு

2005

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 13

முதற் பதிப்பு : 2005

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. V, Part - I

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE
### VOL. V- PART I

ஐந்தாம் மடலம் - முதல் பாகம்

(ந - நா)


பதிப்புக் குழு

முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.

*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத் துறை*

மற்றும்

இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்கள்

புலவர் த.சரவணத் தமிழன்

திரு.மா.பூங்குன்றன்

தொகுப்பாளர்கள்

திரு.முத்து.பிச்சை (பகுதிப் பொறுப்பாளர்)

முனைவர் மு.கண்ணன்

முனைவர் பா.வெற்றிச்செல்வன்

முனைவர் ச.செந்திலாண்டவன்

முனைவர் இரா.கு.ஆல்துரை

திரு.கா.இளமுருகு

திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)

*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

# ஜெ ஜெயலலிதா

முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை–600 009.

நாள்........26.12.2005

## அணிந்துரை

'வானம் அளந்தது அனைத்தும் அளந்திடும் வண்மொழி தமிழ்!' அந்த வண்டமிழ், 'ஏழ்கடல் வைப்பினும் தன்மணம் வீசி இசை கொண்டு வாழ' ஏற்ற பணிகளை ஆற்றி வருகிறது எனது அரசு.

தமிழ்நாடு அரசு, தமிழ் நாடும் அரசாக விளங்குகின்றது. இந்திய அரசின் ஆட்சி மொழியாகத் தமிழை ஆக்கவும், இணையற்ற தமிழ் மறையாம் திருக்குறளை இந்தியாவின் தேசிய இலக்கியமாக ஆக்கவும், ஒல்லும் வகையான் ஓயாது முயன்று வருகிறது தமிழ்நாடு அரசு. 'முன்னைப் பழமைக்கும் முன்னைப் பழமையதாய் விளங்கும் நம் தமிழ், பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியதாய்' விளங்க வேண்டும் என்ற விழைவோடு, முத்தமிழோடு நான்காம் தமிழாக அறிவியல் தமிழை அறிமுகப்படுத்தி, அதனை மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை, மாணவ மாணவியர் கற்க ஏற்பாடு செய்தேன்.

உயர்தனிச் செம்மொழியாம் தமிழின் வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருவதுடன் நில்லாது, தமிழ் வளர்த்த சான்றோர்கள் நினைவைப் போற்றும் வகையில் விழாக்கள் எடுத்தும், நினைவிடங்கள் அமைத்தும், அவர்தம் நூல்களைப் பொது உடைமையாக்கியும் சிறப்பித்து வருகிறது எனது அரசு. அந்த வகையிலே, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு பிறந்த நாள் விழாவைக் கொண்டாடி மகிழ்ந்ததுடன், அவரது நினைவை என்றென்றும் போற்றிப் பாராட்டிடும் வகையில் மதுரை மாநகரில் மணி மண்டபம் உருவாக்கிடவும் முனைந்துள்ளது.

தமிழ் மொழியின் தனிப் பெரும் வளர்ச்சி குறித்த கவிஞர்களின் கனவுகள் நனவாக்கப்பட வேண்டும் என்பது என் விருப்பம்

"வெளியுலகில், சிந்தனையில் புதிது புதிதாக
விளைந்துள்ள எவற்றினுக்கும் பெயர்களெலாங் கண்டு
தெளி உறுத்தும் படங்களோடு சுவடியெலாம் செய்து
செந்தமிழைச் செழுந்தமிழாய்ச் செய்வதுவும் வேண்டும்"

என்ற பாவேந்தர் பாரதிதாசன் அவர்களின் கனவு மெய்ப்படும் விதத்தில், தமிழ் மொழியின் சொல் வளத்தைப் பெருக்க 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி' (A Comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் சார்பாக கடந்த 2002–ஆம் ஆண்டு வரை ஆறு பகுதிகள் மட்டுமே வெளியிடப்பட்டிருந்தன. 2002–2003–ஆம் ஆண்டில், சட்டமன்றப் பேரவையில், எஞ்சிய 25 பகுதிகள் நான்காண்டுகளில் தொகுத்து முடிக்கப் பெறும் என்ற அரசின் அறிவிப்பினைத் தொடர்ந்து, தொய்வுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்குப் புத்துயிர் ஊட்டி, போதுமான நிதியுதவியும் வழங்கி, பணிகள் முடுக்கிவிடப்பட்டதன் விளைவாய், ஆண்டுக்கு ஆறு பகுதிகள் என்ற முறையில், முதற்கட்டமாகத் தொகுத்து அச்சிட்டு முடிக்கப்பட்ட 'ச' மற்றும் 'த' வரிசைச் சொற்களின் 6 பகுதிகள் அண்மையில் 9.8.2005 அன்று என்னால் வெளியிடப்பெற்றன. அதனைத் தொடர்ந்து இரண்டாவது கட்டமாக 'ந' மற்றும் 'ப' வரிசை சொற்களில், 6 பகுதிகள் தொகுத்து முடிக்கப்பட்டு அச்சிடப்பட்டு அவை தற்போது வெளியிடப்படுவதை அறிந்து பெரு மகிழ்வு அடைகிறேன்.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலிப்' பணி சீரிய பணி. அந்தச் சீரிய பணியில் ஈடுபட்டு செந்தமிழைச் செழுந்தமிழாய் ஆக்கிவரும் அனைவருக்கும் என்னுடைய வாழ்த்துகள்.

தமிழ் வாழ்க ! தமிழ்ப் பணி வளர்க !

ஜெ ஜெயலலிதா
தமிழக முதலமைச்சர்

## தமிழ்நாடு அரசு

சி.வி.சண்முகம்
கல்வி மற்றும் வணிகவரித் துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை – 600 009.

# அணிந்துரை

"தமிழுண்டு தமிழ் மக்களுண்டு – இன்பத்
தமிழுக்கு நாளும் செய்வோம் நல்ல தொண்டு"
– (பாவேந்தர்)

மிகப் பழங் காலந்தொட்டு மொழி பற்றிய ஆய்வு இருந்து வந்துள்ளது என்பதற்குச் சான்றுகள் உள்ளன என்பர் மொழியாராய்ச்சியாளர்கள். தொல்காப்பியம் போன்ற இலக்கண நூல்கள் பண்டைக் காலத்தில் கொண்டிருந்த மொழி பற்றிய தெளிவான அறிவினைத் தெற்றெனத் தெரிவிப்பனவாக இருப்பதைக் காணலாம். மொழியானது மாறும் தன்மை கொண்டது; பழமையான மொழிக் கூறுகளில் சில அழிவதும் புதியதாக சில தோன்றுவதும் மொழி வழக்கில் இயல்பு என்பர் அறிஞர் பெருமக்கள்.

தமிழ் மொழியைப் பொறுத்தவரை, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு மேலான இடைவெளியில் சிற்சில மாற்றங்கள் ஏற்பட்டுள்ளதை மறுக்கவியலாது. பழைய சொற்கள் சில வழக்கொழிந்துள்ளன. புதிய சொற்கள் பல உருவாகியுள்ளன. புதிய கண்டுபிடிப்புகளையும், புதுப்புனைவுகளையும் வெளிப்படுத்த புதுச் சொற்கள் தேவை. இது மொழி வளர்ச்சிக்கு உறுதுணையாய் அமையும் என்பதில் ஐயமில்லை.

ஞாலத் தொன்மொழிகளுள் தாய்மையும், தலைமையும், தகைமையும் கொண்டது நம் தமிழ்மொழியாகும். தமிழின் தூய்மையையும், மாண்பையும், தனித்தியங்கும் ஆற்றலையும், இயற்கைச் சிறப்பையும் இனிமையையும், எளிமையையும் விரிவாக எடுத்துக்காட்டி நிலைநாட்டிய பெருமை 'மொழிஞாயிறு' தேவநேயப் பாவாணர் அவர்களுக்கு உண்டு. சொற்களை அகழ்வாய்வு செய்வதன்வழி மொழிக்கு அகழ்வாய்வு என்ற துறையைத் தமிழுக்கு அறிமுகப்படுத்திய பெருமை அவரைச் சாரும்.

அத்தகைய மாபெரும் அறிஞர் காட்டியுள்ள நெறிமுறைகளை அடியொற்றி செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி பகுதிகள் வெளிவந்த வண்ணம் உள்ளன. அண்மையில் 'ச'கரம் மற்றும் 'த'கரம் வரிசையில் 6 பகுதிகள் மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின்

திருக்கரங்களினால் வெளியிடப்பெற்றுள்ளன. அதனைத் தொடர்ந்து தற்போது 'ந'கரம் மற்றும் 'ப'கரம் வரிசையில் 6 பகுதிகள் வெளியிடப் பெறுகின்றன என்பதையறிந்து மகிழ்கிறேன். இந்த சீரியத் திட்டத்திற்கு அனைத்து வகையிலும் பேராக்கமும், பேராதரவும் நல்கி வரும் நம் தமிழக முதலமைச்சர் மாண்புமிகு புரட்சித் தலைவி 'அம்மா' அவர்களுக்கு மனமார்ந்த நன்றியினை முதற்கண் தெரிவித்துக் கொள்கிறேன். இந்தியாவிலேயே, ஏன் ஆசியக் கண்டத்திலேயே தலைசிறந்து விளங்கும், தன்னிகரில்லாத் தங்கத் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா அவர்களின் ஆட்சிக் காலம் பொற்காலம் என்று மேனாட்டரும் புகழ்பாடுகின்றனர். சோதனைகளை முறியடித்து, சாதனைக்கு மேல் சாதனைப் படைத்து, வெற்றிக் கொடி நாட்டி வரும் மாண்புமிகு முதலமைச்சர் 'அம்மா' அவர்களின் சாதனைகள் நீண்டு தொடரும் என்பதில் அணுவளவும் ஐயமில்லை.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி வெளியீடுகள் வருவதில் அரும்பங்காற்றிய செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டத்தின் பொறுப்பு இயக்குநாகப் பதவி வகிக்கும் தமிழ் வளர்ச்சிப் பண்பாடு மற்றும் அறநிலையத் துறை அரசு செயலாளர் முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப., அவர்களுக்கும், நூல்களை உருவாக்குவதற்கு அயராதுழைத்த அகரமுதலித் திட்ட இயக்ககப் பணியாளர்களுக்கும் என் மனமுவந்த பாராட்டுக்கள்.

2.11.13

சி.வி.சண்முகம்

சென்னை.

*முனைவர் பு.ஏ.இராமையா, இ.ஆ.ப.,*
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம)
அறநிலையத் துறை மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்.

## பதிப்புரை

"சொற்பிறப்பியற் பணிக்கென்றே
தம்மை இறைவன் படைத்தனன்"

என்று உளங்கூர்ந்துரைத்து, அப்பணியிலேயே அரை நூற்றாண்டுக் காலம் மூழ்கி, உலக மொழியியல் அரங்கில், தமிழ் மொழியைத் தலைநிமிரச் செய்த பெருமை, செந்தமிழ் வேழம் தேவநேயப் பாவாணரையே சாரும். 'சொல்லில் உயர்வு தமிழ்ச்சொல்லே', என்னும் உண்மையை, உலகினில் வாழும் ஒவ்வொரு தமிழனுக்கும் உணர்த்தியவர் அவர். ஞாலம் முழுவதும் சிதறுண்டு வாழுந் தமிழினத்தை ஒன்று சேர்த்த, அப்பேரறிஞரின் அறிவார்ந்த அடிச்சுவட்டில், அவரெழுதிய ஆய்வு நூல்களை உறுதுணையாகக் கொண்டு செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி ஐந்தாம் மடலத்தின் முதற்பகுதி (ந, நா) அணியமாக்கப்பட்டுள்ளது. இந்நூல் பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் பதின்மூன்றாவது பகுதியாகும்.

இதுகாறும் வடசொற்களென்று கருதப்பட்டு வந்த, நகம், நந்தி, நாசம், நாட்டியம் முதலானவை, மொழிமீட்பரின் சொற்பிறப்பு நெறிமுறைக் கோட்பாட்டின் அடிப்படையில், மோனியர் வில்லியம்சின் வடமொழியகரமுதலிப் பொருளை முன்மொழிந்து, இலக்கிய வழக்கு, உலக வழக்கு, முதலானவற்றின் துணையுடன், சொற்பொருளைக் கால முறை வரிசையில் எடுத்துக்காட்டி, பொருத்தமான பொருள் விளக்கங்களுடன் வேர்மூலங் காட்டி விளக்கப்பட்டுள்ளன. எடுத்துக்காட்டாக, 'நாட்டியம்' என்ற சொல்லின் விளக்கம் வருமாறு:–

நாட்டியம் *nATTiyam* பெ.(n.) 1. கூத்து; dancing, acting. *"நாட்டிய நன்னூல்" (சிலப்.158).* 2. கை, முதலியவற்றில் காட்டுங் குறிப்பு; hint, signal.

மறுவ. நடனம்

த. நாட்டியம் > skt. *nATya*

[நள்→நளி→நடி→நடு→ நட்டு→நாட்டு + இயம். இயம் = சொல்லாக்க ஈறு. ஒ.நோ. இலக்கியம், இன்னியம், பண்ணியம், பாவியம், தமிழியம், ஓவியம், வாழ்வியம்.]

.....2......

'நள்' எனும் பொருந்துதற் கருத்து வேரிலிருந்து கிளைத்த சொல்லே, நாட்டியம். நள்→நளி→நளிதல் = ஒத்தல், ஒத்துச் செய்தல் என்னும் பொருண்மையில் இலக்கியங்களில், வழக்கூன்றியுள்ளதால், இச்சொல், தமிழ்ச்சொல்லே எனலாம். நடி என்னும் முதனிலையே, நாட்டியம் என்பதன் அடிச்சொல். வடவர் காட்டும் 'நாட்ய' என்ற நலிந்த வடிவம், நடு, நட்டு, நட்டம் என்னும் தீந்தமிழ்ச் சொற்களைத் திரித்த வடிவமாகும். பண்டைத் தமிழ் நாட்டியமே, இன்று பரதநாட்டியம் என்றழைக்கப்படுகிறது என்பார் பாவாணர்.

எம்மொழிச்சொல்லையும், நம்மொழிச் சொல்லாக்கும் தனிச்சிறப்புமிக்க சொல் வளத்தினைத் தன்னகத்தே கொண்ட, ஈடிணையில்லாச் சொற்கட்டமைப்புடன் திகழும் இயன்மொழி, நம் தமிழ்மொழி; அத்தன்மைக்கு ஏற்றவண்ணம், நகம், நந்தி, நகரம், நாணயம் போன்ற சொற்கள் செம்மையாகப் பதிப்பிக்கப் பெற்றுள்ளன.

இயன்றவரை, இந்நூலில் முன்னொட்டுகள், பின்னொட்டுகள், இடையொட்டுக்கள், ஈறுகள் முதலானவை, உரியவாறு பிரித்து விளக்கப்பட்டுள்ளன. நாட்டுப்புற மக்கள் நாவில் நிலைபெற்றுத் திகழும் பழமொழிகள், இடவழக்குகள் முதலானவை நேரிய வகையில் இணைத்துக் காட்டப்பட்டுள்ளன.

இக்கால வழக்குகளும் நாளிதழ், நாட்டுநடப்பு, நாடி, நாடிபார்த்தல், நாட்டுக்கட்டை போன்ற சொற்களில் நன்கு பொருத்திக் காட்டப்பட்டுள்ளன.

அகரமுதலித் திட்டத்திற்கு அனைத்து நிலைகளிலும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வரும் மாண்புமிகு தமிழக முதலமைச்சர் அவர்களுக்கும், அவர்கள் காட்டிய வழியில் அனைத்து உதவிகளையும் அளித்திடும் மாண்புமிகு கல்வி அமைச்சர் அவர்களுக்கும் கனிவான நன்றியறிதலைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

இந்நூல் வெளிவருவதில் அரும்பணியாற்றிய தொகுப்பாளர் (பகுதிப் பொறுப்பாளர்), பதிப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள் மற்றும் திட்டப் பணியாளர்கள் அனைவரும் பாராட்டுக்குரியோராவர். நூலை நன் முறையில் அச்சிட்டுத் தந்த உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திற்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

(பு.ஏ.இராமையா)

சென்னை

.07.2005

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# ந

**ந்** *n*, மெய்களுள் எட்டாவதானதும், பல்லின மூக்கொலியுடையதுமான மெல்லெழுத்து; the eighth consonant, dental nasal

*[ந் = தகரம் பிறக்கின்ற இடத்தில் நாவும், பல்லும் நிற்க, வாய்வழியாக மட்டுமன்றி, மூக்கின் வழியாகவும், உயிர்வளி வெளிவர, மேலண்ணம் கீழிறங்க ஒலிக்கும். மூக்கொலியாதலின் மெல்லெழுத்து எனப் பெயர் பெறும். பந்து, கந்து, சந்து, என்பது போல, தகரத்தின் முன்வரும் இடங்களில் மட்டும், தகரத்திற்கு ஒத்த மெல்லெழுத்தாகவே, இது ஒலிக்கும்.]*

**ந**[1] *na*, பெ. (n.), நகர மெய்யும், அகர வுயிரும் புணர்ந்து பிறக்கும், உயிர்மெய் யெழுத்து; a syllabic letter which consists of (n + a) n (ந்) and the vowel a (அ).

ந் + அ → ந.

"ந"கர உயிர்மெய்யின் பிறப்பிடத்தைத் தொல்காப்பியர் பின்வருமாறு வரையறுத் துள்ளார்.

"அண்ணம் நண்ணிய பல்முதல் மருங்கின் நாநுனி பரந்து மெய்யுற ஒற்றத் தாமினிது பிறக்கும் தகார நகாரம்"
(தொல்.எழுத்து.93)

தமிழ், மலையாளம் முதலிய சில மொழிகளிலன்றிப் பிற திரவிட மொழிகளில் ன–ந வேற்றுமை இல்லை.

அஞ்ஞை (அன்னை) செய்குந முதலான வழக்குகள் கழகக்காலச் செய்யுட்களில் மட்டும் சிறப்பாகக் காணப்படுபவை எனலாம்.

**நகரவுயிர்மெய் வரிவடிவ வளர்ச்சி:–**

படுக்கைக் கோட்டில் அமைந்த செங்குத்துக் கோடே, நகரவுயிர்மெய்யின் முந்துதமிழ் வரிவடிவாகும். இவ் வரிவடித்தின் காலம் கி.மு.6. கொற்கைப் பானையோட்டில் காணப்படுவதும், இக் குறியே ஆகும்.

இக்குறியே தமிழகக் குகைக் கல்வெட்டு களில் பரவலாகக் காணப்படுகிறது. தமிழி அல்லது தாமிழியெழுத்தென்று கல்வெட் டறிஞர்களால் குறிக்கப்படுவதும், இஃதேயாகும். இந்தியமொழிகளில் தமிழ்பிராமி அல்லது அசோகன் பிராமி என்று அழைக்கப்படுகிறது. பிராமி என்பதைப் புரோமி என்றும் வழங்குவர். அசோகன் புரோமிக்கு முந்தியது தமிழி. கி.மு.3 ஆம் நூற்றாண்டு முதல் தமிழகத்திலும், வடஇந்தியாவில் சிறு மாற்றத்துடன் மோரியர் குசானர், குப்தர் கல்வெட்டுகளிலும் தமிழி காணப்படுகிறது.

திருநாதற்குன்று குகைக் கல்வெட்டில் காணப்படும். தமிழியெழுத்து

கி.பி.7 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில்

கி.பி.8 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில்

கி.பி.9 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில்

கி.பி.10 ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டுகளில்

கி . பி . 1 1 ஆ ம் நூ ற் ற ா ண் டு க் கல்வெட்டுகளில்

கி . பி . 1 2 ஆ ம் நூ ற் ற ா ண் டு க் கல்வெட்டுகளில்

கி . பி . 1 3 ஆ ம் நூ ற் ற ா ண் டு க் கல்வெட்டுகளில்

கி . பி . 1 4 ஆ ம் நூ ற் ற ா ண் டு க் கல்வெட்டுகளில்

**ந²** *na,* பெ. (n), 1. சிறப்புப் பொருளுணர்த்தும் இடைச்சொல் (நன். 420, மயிலை); a particle denoting excellence as, நப்பின்னை, நக்கீரன், நக்கடகம். 2. மிகுதிப் பொருளுணர்த்தும் இடைச்சொல்; expressing abundance, excess. *"நக்கரைந்து போம் இத்தனை"* (திவ். திருநெடுந் 7, வ்யா. 59).

*[ந் + அ = ந.]*

*'ந' என்பது– ந் + அ → ந. 'ந' என்பது, நக்கீரன் என்பதிற் போலச் சிறப்பினையும், நக்கரைந்து (மி கக்கரைந்து) என்பதிற் போல, மிகுதிப் பொருண்மை குறித்த தமிழ் முன்னீடாக (Prefix) வழங்கும். இம் முன்னொட்டினை, வடமொழியாளர் எதிர்மறைப் பொருண்மையில் பயன் கொண்டனர். நமித்திரர் (மித்திரர் அல்லார்). (எ.டு.) 'நல்' என்பதன் திரிபுமாகலாம். (எ.டு) நல்லந்துவனார். மொழிக்கு முதலில் நகரம் எல்லா உயிர் எழுத்துக்களோடும், பயிலுந் தன்மைத்து. வெரிந், பொருந் போன்ற கழகக் காலச் சொல்லாட்சிகளில், மொழிக்கு ஈறாகி வந்தது. காலப் போக்கில் நகரவீறு, 'உ'கரச்சாரியை பெறுவது, இயல்பாயிற்று.*

**நக்கச்சூது** *nakka-c-cūdu,* பெ. (n), நரியின்குணமொத்த நயவஞ்சகம்; mean trick, sly device, as of a fox.

**க.** நக்கே = நரி.

**தெ.** நக்கு.

*[நக்கை → நக்கு → நக்க + சூது. நக்கன் = நரி.]*

**நக்கசாரணர்** *nakka-šāraṇar,* பெ. (n.), நாகரினத்தவர்; a tribe of nāgas *"நக்க சாரணர் நாகர் வாழ்மலை"* (மணிமே. 16:15).

*[நாகர் → நக்கர். அரணம் → சரணம் → சாரணம் → சாரணர்.]*

**நக்கண்ணையார்** *na-k-kaṇṇaiyār* பெ. (n). புகழ்பெற்ற சங்கப்புலவர்; an eminent šangam poetess

*[நல் + கண்ணையார்.]*

*ஒருகா. நற் + கண்ணையார் → நக்கண்ணையார்.*

நக்கண்ணையார் - அழகிய கண்கள் வாய்க்கப் பெற்ற கழகக்காலப் பெண்பாற் புலவர்; இவரைப் பெருங்கோழி நாய்கன் மகள் நக்கண்ணை, என்பர். இவர் பாடல்கள் அகநானூற்றிலும் (அகம்.252), புறநானூற்றிலும், (புறம். 83, 84, 85) நற்றிணையிலும், (நற். 19, 87) காணப்படுகின்றன. புறநானூற்றில் இவர் பாடிய பாடல்களில், சோழமன்னன் தத்தன் மகனான, போர்வைக் கோப்பெருநற்கிள்ளியைப் பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன. கோப்பெருநற்கிள்ளிபால், காதற்காமம் கொண்டு தொடி நெகிழ்ந்து, பசப்பெய்திய பான்மையினைப் புறநானூறு 83–வது பாடலில் பாடுகிறார். இவர்தம் பாடல்கள், பெருநற்கிள்ளி தன் தந்தையொடு மாறுபட்டு, நாடிழந்து, புல்லரிசிக் கூழுண்டு வருந்திய நிலையினையும், ஆமூர்மல்லனைப் போரில் வென்ற திறத்தினையும் வியந்து கூறும், காமுற்ற காரிகையின் கூற்றுப்போல், அமைந்துள்ளன. இவர் பாடிய புறநானூற்றுப்

பாடல்களில் (புறம்.83,84,85), சோழன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளிபால், இவர் கொண்ட கைக்கிளைக் காமக்காதல், திறம்படச் சித்தரிக்கப்படுகின்றன எனில், மிகையன்று.

"அடிபுனை தொடுகழன் மையணற் காளைக்கென் தொடிகழித் திடுதல்யான் யாயஞ் சுவலே அடுதோண் முயங்க லவைநா ணுவலே என்போற் பெருவிதுப் புறுக; என்றும் ஒருபாற் படாஅ தாகி இருபாற் பட்டவிம் மையலூரே." (புறம்–83).

காதலொழுக்கம் மேற்கொண்ட மகளிர், தம் காதலரைப் பிரிந்த ஞான்றும், தலைக்கூடப் பெறாத போழ்தும், உடம்பு பசந்து, நனி சுருங்கித் தொடியும், வளையும் கழல, வருந்துவாராதலின், இங்கே பெருநற்கிள்ளியைத் தலைக்கூடப் பெறாத நக்கண்ணையார், "மையணற் காளைக்குத் தொடிகழித்திடுதல் அஞ்சுவல்" என்றும், தன்னொழுக்கத்திற்குத் தாய் இடையூறாதலின், "யா யஞ்சுவல்" என்றும் கூறினார். சான்றோர் கூடிய அவையினர் ஒருத்தியை ஒருவற்குத் திருமணத்தால் கூட்டி வைப்பாராதலின், அவர் தாம் விரும்பியவாறு, தாமே சென்று கூடற்கு, அவ்வவையினர் இகழ்வர் என்பது பற்றி, "அவை நாணுவல்" என்றார். தமது மையலை ஊர்மேலேற்றி "மையலூர்" என்றார். (புறம்.83. ஒளவை. சு. துரைசாமியார் உரை.)

**நக்கணி[1]** *nakkaṇi,* பெ. (n), கருங்காரை வகை; (L.); black honey thorn.

**நக்கணி[2]** *nakkaṇi,* பெ. (n.), *நக்கேணி[2]* பார்க்க; see *nakkēṇi[2]*

**நக்கத்தனம்** *nakka-t-taṉam,* பெ. (n), இவறன்மை (இ.வ.); miserliness stinginess. வீட்டில் உள்ள நக்கத்தனமே வெளியிலும் வளரும் (உ.வ.). ஈரக்கையால் காக்காய் ஓட்டாத நக்கத்தனம் நாட்டில் பெருகி வருகிறது (உ.வ.). நக்கத்தனத்திற்கு நாட்டில் பஞ்சமில்லை (இ.வ.).

*[நக்கு → நக்க + தனம்.]*

**நக்கப்பறையன்** *nakka-p-paṟaiyaṉ,* பெ. (n), பறையர் தலைவன்; headman of the paraiyās (G. Tp. D, I, 131).

*[நக்க + பறையன்.]*

**நக்கப்பிட்டிஇலை** *nakka-p-piṭṭi-ilai,* பெ. (n), மருந்திலை வகை; a kind of medicinal herb

*[நக்கப்பிட்டி + இலை.]*

**நக்கபாரம்** *nakka-pāram,* பெ. (n.), *நக்கவாரம்* பார்க்க (யாழ்.அக.); see *nakka-vāram.*

*[நக்கவாரம் → நக்கபாரம்.]*

**நக்கபாரி** *nakka-pāri,* பெ. (n.), *நக்கவாரி* பார்க்க (யாழ். அக.).; see *nakka-vāri*

*[நக்கவாரி → நக்கபாரி.]*

**நக்கபூசவெண்ணெய்** *nakka-pūša-v-eṇṇey,* பெ. (n.), உள்ளுக்குச் சாப்பிடவும், வெளிக்கு மேல் மருந்தாகத் தடவவும், பயன்படும்படிக் காய்ச்சி வடித்த எண்ணெய். a medicated oil prepared so as to be useful for taking internally and also as an external application

*[நக்கல் + பூசுதல் + எண்ணெய்.]*

ஒரே சமயத்தில் இரு வழிகளில் பயன்தரும் பொருட்டுக் காய்ச்சிவடித்த எண்ணெய். சித்தமருத்துவத்தில்தான் எண்ணெயின் பயன்பாடு இருவழிகளில் அமையும். சித்தமருத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு அமைந்த ஆயுள்வேதத்திலும், எண்ணெய்ப் பூச்சு மருத்துவம், காணப்படுகிறது.

**நக்கம்** *nakkam,* பெ. (n.), **1.** ஆடையின்மை; nakedness. *"நக்கம்வந்து பலியிடென்றார்க்கு"* (தேவா. 91:2). 2. வறுமை; poverty.

**த.** நக்கம் → skt. nagna., pkt. nakka.

*[நக்கு + அம் → நக்கம்.]*

மறைந்த வளமை. ஆடையற்ற வெறுமை நிலை. நக்கர் என்னும் சொல், தமிழகத்தின் வடக்கே, ஆடை அற்றவர் எனும் பொருண்மையில், இன்றும் வழங்குவதறிக. ஒன்றுமற்ற நிலையை, நக்கநிலை என்பர். வெறுமை நிலையை விளக்கும், வறுமை குறித்த சொல்.

ஆடையற்ற உடம்பு வெறுமையாய்த் தோன்றுதல் போல், பொருளற்ற வாழ்வும் வறுமையாயிருத்தல் இயல்பே. இலக்கிய வழக்கிலும், வாழ்வியல் பொருண்மையிலும், நக்கம் என்னும் இச் சொல், இன்மை குறித்த வழக்காக, வழங்கி வந்துள்ளது.

**நக்கர்** *nakkar,* பெ. (n.), நாகரிகத்தில், பிந்தியவர்களாக இயல்பாகவே, ஆடையின்றி வாழும் பழங்குடியினர்; uncivilized and unclothed (naked) tribals

*[நக்கு + அர் → நக்கர்.]*

**நக்கரம்[1]** *nakkaram,* பெ. (n.), முதலை; crocodile "நக்கரக் கடற்புறத்து" (கம்பரா. நட்புக் கோட். 68).

த. நக்கரம் → skt. nakra.

*[நக்கு + அரம்.]*

நக்க : மறைந்த பொருள், மறைந்திருக்கும் பொருள், மறைந்திருந்து, அரவம் போன்ற தனது நாவினால், உணவினைப் பிடிப்பதாலும், பிடித்த உணவினைக் கற்பொந்துகளில் மறைத்து வைத்து உண்பதாலும், இப் பெயர் வழங்கிற்று.

**நக்கரம்[2]** *nakkaram,* பெ. (n.), தேள்; scorpion.

*[நாக்கு→ நக்கு + அரம். ]* அரம் போன்று கூர்மையான கொடுக்கினையுடைய தேள்.



**நக்கரா** *nakkarā,* பெ. (n.), *நகரா* (இ. வ.) பார்க்க; see *nagarā*

*[ நற்கரா → நக்கரா (இ. வ.)]*

**நக்கரி[1]–த்தல்** *nakkari-,* 4.செ. கு. வி. (v.i.), **1.** நகர்ந்து செல்லுதல்; to move along in a sitting posture, as a lame or sick person **2.** தவழ்தல்; to creep with difficulty, as a weak child, a wounded reptile **3.** படுகிடையாதல்; to be bedridden. 4. படுக்கையிற் புரண்டு கிடத்தல்; to roll in bed

*[நகர் → நக்கர் → நக்கரி–.]*

**நக்கரி[2]** *nakkari,* பெ. (n.), *நகரிகவுளி* பார்க்க; see *nagari kavuḷi*

*[நகர் → நக்கரி.]*

**நக்கரை—தல்** *nakkarai-,* 2 செ.கு.வி. (v.i.), மிகக்கரைதல்; to stout loudly.

*[ந + கரை—.]*

ந = அளவிற்கு அதிகமாகக் கத்துதல் எனும் பொருண்மையில் பயின்றுவரும் மிகுதிப் பொருள் முன்னொட்டு.

**நக்கல்[1]** *nakkal,* பெ. (n.), **1.** உணவு உட்கொள்ளும் ஐந்து முறைகளுள் ஒன்று; [ஐந்து முறைகளாவன: கடித்தல், மெல்லல், விழுங்கல், பருகல், நக்கல்] food taken by licking. **2.** நக்கியுண்ணும் இளகியம் (வின்.); electuary taken by licking with the tongue. **3.** நாவால் பருகல்; electuary which is taken by the tongue **4.** எச்சில் (வின்.); leaving, scrapings. **5.** உண்ணுகை (அரு. நி.); eating. **6.** தீண்டுகை (அக. நி.); touching. நீர்நக்கல் (கல்). **7.** இவறன்; miser. ***"இந்நக்கலின் துர்க்குணத் தால்"*** (ஆதியூரவதானி—27).

*[நா → நாக்கு → நக்கு → நக்கல்.]*
*நக்கல் = நக்கி உண்ணல்*

**நக்கல்[2]** *nakkal,* பெ. (n.), **1.** சோறு (அரு. நி); boiled rice. **2.** நக்கியுண்ணும் உணவு; food taken by licking.

அரிசி சோறாக்கப்பட்டதும் ஒளி மிகுந்திருத்தல் பற்றி வந்த பெயரென்க. சோற்றை மோர் ஊற்றிப் பிசைந்து நக்கியுண்ணுங்கால் வந்த பெயராகலாம்.

**நக்கல்[3]** *nakkal,* பெ. (n.), **1.** சிரிப்பு (சூடா); laughing. நக்கலாய்ப் பேசுவதில் அவன் கெட்டிக்காரன் (உ.வ.). **2.** ஏளனம், பகடி (பரிகாசம்); mockery. ஏன் சும்மா அவனையே எல்லோரும் சேர்ந்து நக்கல் செய்கிறீர்கள். சிரிப்பு, நையாண்டித்தனம் 'அவன் நக்கலாய்ப் பேசுகிறான்'. (உ.வ.) **3.** ஒளி; brightness, splendour

மறுவ. குத்தல்பேச்சு

*[நகு → நகல் → நக்கல் = இகழ்ச்சி.]*

**நக்கல்[4]** *nakkal,* பெ. (n.), வடுச்சொல், குத்தல் பேச்சு; sarcasm. 'குறைகளைச் சொன்னால் அவற்றைத் தீர்த்து விடவா போகிறீர்கள்' என்று நக்கலாகக் கேட்டார் (உ.வ.).

*[நகு → நகல் → நக்கல்]*

**நக்கல்[5]** *nakkal,* பெ. (n.), *நகல்* பார்க்க; see *nagal.*

*[நகு → நக்கு → நக்கல்]*

**நக்கல்செய்—தல்** *nakkal-sey-,* 1 செ.குன்றாவி. (V.t.), *நங்கு—தல்* பார்க்க; see *nangu-.*

*[நக்கு → நக்கல் + செய்—,]*

நக்கல் செய்தல் இன்று, பொதுவாக மக்களிடையே வழக்கூன்றிவிட்டது. சிற்றூர்களிலும், பேரூர்களிலும், ஒருவரை ஒருவர் நக்கல் செய்து பேசுதல் இன்று இயல்பாய்க் காணப்படுகிறது.

**நக்கலம்** *nakkalam,* பெ. (n.), ஊர்வன; crawling insects

இச் சொல்லடியில் பிறந்த சொற்கள் நாகம், நகுலம் (ஊர்ந்து செல்வது) நண்டு, நந்து— முதலானவை, ஊர்தல் கருத்தினடிப்படையில் தோன்றின எனலாம்.

**நக்கலாதகம்** *nakkalādagam,* பெ. (n.), தகரை; ring worm plant - Cassia tora.

**நக்கலெண்ணெய்** *nakkal-enney,* பெ. (n.), நாவால் நக்கியுண்ணு மெண்ணெய்; a medicated oil just taken internally by licking.

*[நக்கல் + எண்ணெய்.]*

நக்கல் = நாவால் நக்கி உண்ணுதல்.

எள் + நெய் → எண்ணெய்.

**நக்கவரி** *nakkavari,* பெ. (n.), வறட்சுண்டி; floating sensitive plant.

**மறுவ.** நகரி, தொட்டால்சிணுங்கி.

*[நக்க + வரி.]*

*[ஒருகா. நமக்காரி → நக்கவரி.]*

**நக்கவாரக்கச்சவடம்** *nakkavāra-k-kacca-vaḍam,* பெ. (n.), கைமேற் பணம் பெற்று நம்பிக்கையற்ற நக்கவாரத்தீவினர் செய்யும் வணிகம், நம்பிக்கையற்ற வணிகம்; a trade with ready cash alone is his vogue, traffic in which trust and good faith do not find a place.

*[நக்கவாரம் + கச்சவடம்.]*

நக்கவார மக்களிடையே நடந்த வணிகத்தில், கைமேற்பணம் பெறுவது நம்பிக்கையற்று இருந்தமையால், இப் பெயர் வழங்கியிருக்கக்கூடும்.

**நக்கவாரத்தாழை** *nakkavāra-t-tāḻai,* பெ. (n.), நக்கவாரத்தீவில் விளையும் தாழை; Nicobar bread fruit plant, screw pine growing in Nicobar island.

*[நக்கவாரம் + தாழை.]*

*(நக்கவாரம் = வங்காளக் குடாக்கடலில் உள்ள தீவு)*

**நக்கவாரத்தென்னை** *nakkavāra-t-teṉṉai,* பெ. (n.), *நக்கவாரப்பிள்ளை* பார்க்க; see *nakkavārap-piḷḷai.*

*[நக்கவாரம் + தென்னை.]*

**நக்கவாரப்படு—தல்** *nakkavāra-p-paḍu-,* 20 செ. கு. வி. (v.i.), மிக்கவறுமையடைதல்; to be in pinching poverty, in straitened circumstances.

*[நக்கவாரம் = வறுமை, ஏதுமற்ற நிலை. நக்கவாரம் + படு—.]*

**நக்கவாரப்பேச்சு** *nakkavāra-p-pēccu;* பெ. (n.), நம்பிக்கையற்ற பேச்சு (வின்.); talk betraying want of faith.

*[நக்கவாரம் + பேச்சு.]*
நம்பியவரைக் காட்டிக்கொடுக்கும் பேச்சு; இரண்டகத் தன்மையுள்ள பேச்சு; உண்மைக்கு ஊறுவிளைவிக்கும் தவறான பேச்சு.

**நக்கவாரம்[1]** *nakkavāram,* பெ. (n.), வங்கக் கடலில் அந்தமான் தீவிற்குத் தெற்கே உள்ள தீவு; "தேனக்க வார்பொழில் மாநக்க வாரமும்" (முதல் இராசேந்திரன் மெய்க்கீர்த்தி); an island in bay of bengal which is situated southward of Andamāṉ islands.

*[நக்க + வாரம்.]*

**நக்கவாரம்[2]** *nakkavāram,* பெ. (n.), வறுமை; indigence.

*[நக்க + வாரம்.]*

ஆடையற்ற மக்கள் வாழும் இடம். வறுமையின் உச்சகட்டம் ஆடையின்மை யாதலின், இது வறுமையைக் குறிப்பதாயிருக்கலாம்.

**நக்கவாரம்பிடி–த்தல்** *nakkavāram-pidi-,* 4. செ. கு. வி. (v.i.), வறுமையாதல் (வின்.); to become poor.

*[நக்கவாரம் + பிடி–.]*

**நக்கவாரம்பிள்ளை** *nakkavāram-piḷḷai-,* பெ. (n.), நக்கவாரத் தீவிலுள்ள தென்னை; a coconut tree found in Nicōbar island.

*[நக்கவாரம் + பிள்ளை.]*

மிகுதியான இளநீருடன், மஞ்சள் வண்ண தேங்காய்களை அதிகமாகத் தரும் தென்னம்பிள்ளை.

**நக்கவாரமாய்ப்போ–தல்** *nakkavāramāy-p-pō-,* 8. செ. கு. வி. (v.i.), ***நக்கவாரப்படு –.*** (வின்.) பார்க்க; see *nakkavāra-p-paḍu-,*

*[நக்கவாரம் + ஆய் + போ–.]*

**நக்கவாரி[1]** *nakkavāri,* பெ. (n.), 1. நக்கவாரத் தீவினர் (வின்.); native of the Nicobars. 2. கைமேற்பணம் பெற்றுச் செய்யும் வணிகர்(வின்.); one who trades for ready money 3. நம்பிக்கையற்ற வணிகர் (யாழ். அக.); a merchant who has no confidence in his customers.

*[நக்கவாரம் → நக்கவாரி.]*

**நக்கவாரி[2]** *nakkavāri,* பெ. (n.), 1. நக்கவாரத்திலுள்ளதும், மூன்றாண்டுகளில் காய்ப்பதுமான, குறுகிய காலத்தென்னை வகை (சங்.அக.); dwarf coconut of the Nicobars that bears fruit in its third year. 2. குள்ளமானது; that which is dwarfed or stunted.

*[நக்கவாரம் → நக்கவாரி.]*

**நக்கவாரிமூலி** *nakkavāri-mūli,* பெ. (n.), விடத்தாரி; sore eye plant- Mimosa cineria alias - Acacia cineria

*[நக்கவாரி + மூலி.]*

மூலிகை = இறுதி எழுத்து கெட்டது.

**நக்கன்[1]** *nakkaṉ,* பெ. (n.), 1. ஆடையற்றவன்; naked person "*அம்மணமாயுள்ளவன் திகம்பரனாகையாலே நக்கனென்று பேராய்*" (திவ். திருவாய் 10:8. பன்னீ). 2. அருகன் (சூடா); Arhat. "*வெல்வினை யறியா நக்கன்*" (திருவிளை. பாண்டி. 10). 3. சிவன்; śivaṉ. "*நக்கன்காண்*" (தேவா. 619:2).

**த.** நக்கன் → skt. nagna.

*[நகு → நக்கல் → நக்கன்.]*

முதற்கண் ஆடையற்ற மாந்தனைக் குறித்த இச் சொல், அடுத்த நிலையில், ஆடையின்மை யால் வெளிப்படும் கொள்கைச் சிறப்பினைக் குறித்ததென்க.

ஆடையைத் துறப்பதுபோல், உலகப் பற்று அனைத்தையும் துறந்து, கடவுள் இல்லை, வேள்வி தவறு, கொலையும் புலையும் பிழை என்று உணர்த்திய அருக தேவனைக் குறித்து வழங்கிய பொருண்மை வளர்ச்சியினையும், "நக்கன்[1]" என்னும் சொல் உள்ளடக்கியது எனலாம்.

**நக்கன்[2]** *nakkaṉ,* பெ. (n ), நடனமகளிர்க்கு முற்காலத்து வழங்கிய சிறப்புப்பெயர்; ancient title of dancing girls attached to temples

*[நகு → நக்கு + அன் → நக்கன்.]*

நகுதல் விளங்கித் தோன்றுதல். மிக்கு ஒளியுடன் பளபளப்பாயிருத்தல்.

நக்கன் = பளபளப்புடன் நடனமேடையில் விளங்கித் தோன்றும் பெண். நடனமகளிர் மேடையில் நடனமாடுங்கால், பல்வகையணிகளைப் பாங்குடன் பூண்டு, மிக்கு ஒளியுடன் மிளிர்தல் இயல்பே.

நக்கன் எனுஞ்சிறப்புப் பெயர் பூண்ட நடனமகளிர் பற்றிய செய்திகள், தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டுகளில் மிகுதியாகக் காணப்படுகின்றன.

தஞ்சைப் பெருவுடையார் கோயில் கல்வெட்டுகள் எண்.7.

(எ.டு) 1. "பழையாறு அவனி நாரணபுரத்து நக்கன் திருவையாறு" 2. "தஞ்சாவூர் பிரமகுட்டத்து நக்கன் திருமகளாம்" 3. "திருவையாறு பெரியதளிச்சேரி நக்கன் கண்டியூர்" 4. "இத்தளி நக்கன் சோழகுல சுந்தரிக்குப் பங்கு ஒன்றும்" (S.I.I.ii.261.).

இக் கல்வெட்டுகளில் காணப்படும் தளிச்சேரிப் பெண்டுகளில் பெரும்பாண்மையோர் பெயர்கள், ஊர்களால் பெற்ற பெயர்களாகவும் அமைந்துள்ளன. இவர்களுக்கு ஊர்ப்பெயர்கள் இருந்து மறைந்தனவா, அல்லது ஊர்ப்பெயர்களே இயற்பெயர்களாக அமைந்தனவா, என்பது புலப்படவில்லை.

'நக்கன்' என்ற சிறப்புப்பெயர், சோழப்பேரரசன் அரசர்க்கரசனாம், இராசராசன் கல்வெட்டுகளில் மிகுதியாகக் காணப்படுகிறது. இவர்கள் சித்தத்தைச் சிவன்பாலே வைத்தமையால், ஆடல்வல்லானான நடராசனுக்குப் பெயராய் அமைந்த 'நக்கன்' என்னும் பெயரை, தம் பெயரில் முதலாக வைத்தனர் போலும்.

**நக்கன்³** *nakkaṉ,* பெ. (n.), நரி; fox.

**க.** நக்கெ; **தெ.** நக்க.

*[நக்க → நக்கன், நக்க + அன்.]*

அன் = ஆ. பா. ஈறு.

**நக்கனத்துவம்** *nakkaṉa-t-tuvam,* பெ. (n.), *நக்கனம்* (வின்.)பார்க்க; see *nakkaṉam*

**நக்கனம்** *nakkaṉam,* பெ. (n.), ஆடையற்றநிலை; nakedness, nudity "*நக்கனத்தோடு நடஞ் செய்வான்*" (உபதேசிகா. சிவத்துரோ. 420)

**த.** நக்கனம் →*skt nagna*

*[நக்கன் + அம் + நக்கனம்.]*

**நக்காரி** *nakkāri,* பெ. (n), வறட்சுண்டி; a kind of sensitive plant.

**நக்கி¹** *nakki,* பெ. (n.), 1. ஏழை; poor. 2. இவறன்; miser

**ம.** நக்கி.

*[நக்கு + இ. 'இ' = சொல்லாக்க விகுதி.]*

**நக்கி²** *nakki,* பெ. (n.), ஆடை, திரை போன்றவற்றின் ஓரங்களில் அழகுமிளிர அமைக்கப்படும் பின்னல் (G.Tp.D.I 161), a kind of braid ornamentally stitched on to the borders of garments and curtains.

**த.** நக்கி → U nakki

*[நகு → நக்கு → நக்கி.]*

ஆடைகள் விளங்கித் தோன்றுவதற்கு ஏதுவாக, அழகு மிளிர அமைக்கப்படும் கரை அல்லது ஆடைமுந்தி. திரைச் சீலையின் ஓரத்தில் மின்னும் தன்மையில் அமைந்த, பின்னல் வேலைப்பாடு.

**நக்கி³** *nakki,* பெ. (n), உணவினை நக்கியுண்ணும் தன்மையன்; destitute person, as one who licks scrapings.

**ம.** நக்கி.

*[நகு → நக்கு → நக்கி.]*

**நக்கிடல்** *nakkiḍal,* பெ. (n.), நக்குதல்; licking, taking in by the tongue

*[நக்கு + இடு + அல். இடு= துணைவினை. அல்லீற்றுத் தொழிற்பெயர்.]*

**நக்கிதம்** *nakkidam,* பெ. (n.), **1.** இரண்டு (சங். அக); two. **2.** இண்டு, புலித் தொடக்கி (சா.அக); tiger stopper.

*[நக்கு + இதம்.]*

**நக்கிப்பூ** *nakki-p-pū,* பெ. (n.), தேட்கொடுக்கி (சா.அக.); scorpion sting plant. Indian turnsole.

*[நக்கு + இ+ பூ.]*

**நக்கிரப்பலகை** *nakkira-p-palagai,* பெ. (n.), முதலை வடிவுள்ள காலால், தாங்கப்பட்ட பலகை; a plank supported by the image of a crocodile. "*நக்கிரப் பலகையும் நறுஞ்சாந் தம்மியும்*" (பெருங். உஞ்சைக் 38:171).

*[நக்கிரம் + பலகை.]*

கால்கள் நான்கும் முதலைக்கால் போல் அமைந்த பலகையையோ, மரப்பலகை மேல் முதலை பொறிக்கப்பட்டதாலோ வந்த, பெயராக இருக்கலாம்.

**நக்கிரம்**[1] *nakkiram,* பெ. (n.), முதலை(சிவதரு. சுவர்க்கநரக. 117); alligator.

*[நா → நக்கு → நக்கிரம்.]*

நாக்கினால் வளைத்து உணவினை வாயகப்படுத்தும் தன்மையினால், இப் பெயர் பெற்றதாக இருக்கலாம்.



**நக்கிரம்**[2] *nakkiram,* பெ. (n.), மேல்வாயிற்படி (யாழ். அக.); top beam of a door-frame

**நக்கிரா** *nakkirā,* பெ. (n.), நக்கிப்பூ; indian turnsole.

**நக்கிராக்கியம்** *nakkirākkiyam,* பெ. (n.), நிரைய வகை (சிவதரு. சுவர்க்கநரக. 117); a hell.

முறை திறம்புபவர்களை நிரையத்துள், முதலைவாழ் அகழியில் தள்ளித் துன்புறுத்துவதாக, மக்களால் கருதப்படும் பகுதி.

**நக்கிரை** *nakkirai,* பெ. (n.), தேட்கொடுக்கி; Indian turnsole

*[நக்கிரா → நக்கிரை.]*

**நக்கினகம்** *nakkinagam,* பெ. (n.), பருத்தி; cotton.

**நக்கினம்** *nakkinam,* பெ. (n), **1.** ஆடையின்மை; nudity **2.** இறந்தபின் உடல் எரிப்பி (தகனத்தி)ற்குப் பிறகு செய்யப்படும், முதல் சடங்கு; the first ceremony performed in honour of a deceased person. **3.** பெண் குறி; pudendum muliebre.

**த.** நக்கினம் → skt. nagna

**நக்கினிக்கரணம்** *nakkini-k-karaṇam,* பெ. (n), **1.** ஆடை பெயர்த்தல்; stripping naked. **2.** இன்ப விளையாட்டு; a love play in which the woman is stripped naked

**நக்கினிகை** *nakkiṉigai,* பெ. (n.), 1. ஆடையற்றவள் (யாழ். அக.); a naked woman. 2. பெதும்பை; adolescent girl, a girl who is ten years old.

த. நக்கினகை → skt. nagnigā

நக்கு = ஆடையற்ற நிலை.

*[நக்கணிகை → நக்கினிகை. நக்கு + இனி + கை.]*

**நக்கீரத்தனம்** *nakkīrattaṉam,* பெ. (n.), யாருக்கும் அஞ்சாமல், தவற்றைத் தவறு என்று சுட்டிக் காட்டும் குணம்; the quality of not fearing to criticize the authority.

*[நக்கீரர் + தனம்.]*

தன்மை + அம். 'அம்', சொல்லாக்க ஈறு. பாண்டிய மன்னன், தன், மனைவியோடு தனித்திருந்தபோது வந்த மணம், கூந்தலின் இயற்கைமணமா? வேறா? என்று எண்ணி, ஐயமுற்றதனை, அவைக்களத்தில் மொழிந்து, தீர்வு செய்யும் பாப்புனைவாருக்குப் பரிசில் 1000 பொற்காசுகள் என்று அறிவித்தான்.

இக் கூற்றினைச் செவிமடுத்த தருமி, இறையனார் எழுதிய பாவினைக் கொணர்ந்து பாடுங்கால், மனமகிழ்ந்த மன்னன் பரிசு வழங்க முற்பட்ட ஞான்று, நக்கீரன் தடுத்து கூந்தல் மயிர்க் கற்றைக்கு இயற்கைமணம் எப்போதுமில்லை என்று மொழிந்து, இறையனார் முன்பும் எதிர்ச்சொல்லாடி, நிலைநிறுத்திய பண்பே, நக்கீரத்தனம் என்றறிக.

**நக்கீரதேவநாயனார்** *nakkīra-tēva-nāyaṉār,* பெ. (n.), பதினோராந்திருமுறை யிலுள்ள நூல்கள் சிலவற்றை இயற்றியவர்; a canonized šaivam saint the author of certain works in patinōrāṉ-tirumuṟai.

*[நக்கீரதேவர் + நாயனார்.]*

நக்கீரதேவ நாயனார், பதினோராந்திரு முறையில் ஒன்பது நூல்களை இயற்றியுள்ளார்.

1. திருவீங்கோய்மலை எழுபது. 70 – செய்யுட்களடங்கிய இந் நூலுள், 48 முதல் 61 வரையுள்ள பாக்கள் மறைந்து விட்டன.
2. கைலைபாதி காளத்திபாதி அந்தாதி.
3. திருவலஞ்சுழி மும்மணிக்கோவை.
4. திருஎழுகூற்றிருக்கை.
5. பெருந்தேவபாணி.
6. கோபப்பிரசாதம்.
7. காரெட்டு.
8. போற்றித்திருக்கலிவெண்பா.
9. திருக்கண்ணப்ப தேவர் திருமறம்.

**நக்கீரர்**[1] *nakkīrar,* பெ. (n.), திருமுருகாற்றுப் படை முதலியவை இயற்றியவரும், கடைச் சங்கத்தில் சிறந்து விளங்கியவருமான புலவர்; a celebrated poet of the last šaṅgam, author of Tirumurugāṟṟu-p-paḍai, and other poems "*கணக்காயனார் மகனார் நக்கீரருமென*" (இறை. 1, உரை). காலம் கி.மு.200–கி.பி.200 என்பர்.

மறுவ. நக்கீரனார்.

*[நல் + கீரர் → நற்கீரர் → நக்கீரர்.]*

கீரர் = இயற்பெயர்.

நக்கீரரைச் சிறப்பித்துக் கூறுமுகத்தான், 'நல்' என்னும் சிறப்புப்பொருளுணர்த்தும் 'ந' என்னும் எழுத்தை முன்வைத்துக் கூறினர்.

(ஒ.நோ.) *[நல் + அந்துவனார்]* 'ஆர்'– மதிப்பினையுணர்த்தும் விகுதி.

கழகக்காலப் புலவர் நிரலில் தலைமை பெற்ற இவர், மதுரைக் கணக்காயனார்க்கு மகனாராவார்; இவர்தம் பாடல்கள் வாயிலாகத்

தமிழகத்தை ஆண்ட சேர, சோழ, பாண்டியர் தம் அரசியல் நிகழ்வு, சிற்றரசர்கள் பற்றிய செய்திகளையும் தெரிந்துகொள்கிறோம். பாண்டியன், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனது, ஆலங்கானப் போரைப் பற்றிய குறிப்பினை அறியலாம்.

பொலம் பூண்கிள்ளி யென்பவன், கோயரென்பாரைவென்று, நிலங்கொண்ட திறத்தினையும், சேரமான்கோதை மார்பனுக்குப் பகையாய் இருந்த கிள்ளிவளவனைப் பழையன் மாறன் என்பான் வென்று, சேரனுக்கு உவகையெய்து வித்த திறமும், பிறவும் நக்கீரரால் நவிலப்படுவனவாகும்.

மதுரைமாநகரின் மாண்பினைப் பலபடப் பாராட்டும் பாடல் வரிகள் வருமாறு :–

(எ.டு) 1. "அரண் பலகடந்த முரண்கொள்தானை, வாடாவேம்பின் வழுதிகூடல்" 2. "மாடமலி மறுகிற்கூடல்". 3. "பொன்மலி நெடுநகர்க் கூடல்". மதுரையை மட்டுமன்றி, அன்றைய தமிழகத்து அனைத்து ஊர்களும் இவரால் சிறப்பிக்கப்படுகின்றன.

மருங்கூர்ப்பட்டினம், காவிரிபூம்பட்டினம் முசிறி, கருவூர், உறையூர் முதலான வரலாற்றுப் புகழ் மிக்க இடங்களும், இவரால் சிறப்பிக்கப் படுகின்றன. வேள் பாரியைத் தமிழ் வேந்தர் மூவரும், நெடுங்காலம் முற்றுகையிட்டிருந்த காலத்துக் கபிலர், கிளிகளைப் பயிற்றி, வெளியே விளைபுலங்களிலிருந்து, நெற்கதிர் கொணர்வித்து, உணவுக்குறைவு உண்டாகா வண்ணம் உறுதுணை புரிந்து, பேணிக்காத்த பெருமையினை, நக்கீரர் குறித்துள்ளார். கபிலரை இவர், "உலகுடன் திரிதரும் பலர்புகழ் நல்லிசை, வாய்மொழிக்கபிலன்" எனச் சிறப்பித்துள்ளார். தூங்கலோரியார் என்னும் புலவர், இவர் காலத்தே சிறப்புற்றிருந்த செய்தி, இவர் பாட்டால் விளங்குகிறது. இவர் பாடியுள்ள பொருண் மொழிக்காஞ்சி, ஒவ்வொரு செல்வமகனும் படித்து இன்புறுதற்குரியது. இவரைப் பற்றிக் கூறப்படும் வரலாறுகள் பல.

நக்கீரர், பொதுவாகத் தமிழ்மூவேந்தரையும் வேண்டுமிடங்களிற் சிறப்பித்துப் பாடியிருப்பினும், சிறப்பாகப் பாண்டியன் இலவந்திகைப்பள்ளித் துஞ்சிய நன்மாறனையும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனையும் பாடிப் பெரும்பரிசில் பெற்றவர். திருமுருகாற்றுப்படை பாடி முருகன் திருவருள் சிறப்பிக்கப்பெற்றவர். தமிழகம் முழுவதையும் நன்கறிந்தவர். இவர் அந்தணரல்லர்.

பாராளும் வேந்தனுக்கும், காட்டில் வேட்டையாடும் வேடனுக்கும் இன்றியமையாது வேண்டற்பாலது, உண்பதற்கு நாழித்தவசமும், உடுப்பதற்கு இரண்டு உடையுமே. தமக்கென்று ஒருவர் எவ்வளவுதான் பொருள் சேர்த்து வைத்தாலும், அனைத்தையும் பயன்கொள்ளல் அரிதேயாகும். படைப்புப் பல படைத்து, பலரோடு கூடியுண்பதே செல்வத்துப் பயனாகும். ஒருவர் தாம் பெற்ற செல்வத்துப் பயன், பிறர்க்கு ஈந்து மகிழ்தலேயாகும். அதனால்தான் வள்ளுவப் பெருந்தகையும், ஈத்துவக்கும் இன்பமே ஈடில்லாப்பெரும் பேரின்பமென்றார். இவ்வாழ்வியல் அறத்தினைப் பின் வருமாறு பேசுகிறார்.

"தெண்கடல்வளாகம் பொதுமையின்றி
வெண்குடை நிழற்றிய
வொருமையோர்க்கும்
நடுநாள் யாமத்தும் பகலுந்துஞ்சான்
கடுமாப் பார்க்குங் கல்லா வொருவற்கும்
உண்பது நாழி யுடுப்பவை யிரண்டே
பிறவுமெல்லாமோரொக்கும்மே
செல்வத்துப் பயன் யீதல்
துய்ப்பே மெனினே தப்புந பலவே"
(புறம்–189)

இப் பாடலின் வாழ்வியல் அறம் யாதெனின், செல்வர் ஈதலைக் கடனாகக் கோடலே அறம். அவ்வாறன்றி, அனைத்தையும் தாமே துய்ப்போம் என்றால், நம்மை விட்டு நீங்குவதே மிகுதியாகும் அதனாற்றான்.

"துய்ப்பே மெனினே தப்புந பலவே" என்றார். இன்றைய செல்வர் ஈதலைக் கடனாகக் கொள்ளாததால்தான், குமுகாயத்தில் கிளர்ச்சி யும், பொருள் முட்டுப்பாடும் ஏற்படுகிறது.

கீரன் என்பது இவர்தம் இயற்பெயர். இப் பெயர் கொண்டோர் பலர், அக் காலத்தில் இருந்தனர். அதனால், இவரை, "*கணக்காயனார் மகனார் நக்கீரனாரென*" இறையனார் களவியலுரை சிறப்பிக்கிறது. தொல்காப்பிய உரையாசிரியர் பேராசிரியர், செய்யுளியல் 197– ஆவது நூற்பாவுரையில் காணப்படும் நக்கீரன் பற்றிய குறிப்பு வருமாறு:– "இவை தெற்கண்வாயில் திறவாத பட்டிமண்டபத்தார் பொருட்டு, நக்கீரர் ஒருவன் வாழவும், ஒருவன் சாவவும் பாடிய", என்னும் இக் குறிப்பு ஓர்ந்துணரத்தக்கது. இவர்தம் திருமுருகாற்றுப் படை, ஆற்றுப்படை இலக்கியங்களுள் தலைசிறந்தது. இவர் பாடிய நெடுநல்வாடைப் பாட்டு, சொற்சுவை, பொருட்சுவை செறிந்தது. நக்கீரர் பாடியனவாகப் பத்துப்பாட்டில் இரண்டும், நற்றிணையில் ஏழும், குறுந்தொகையில் எட்டும், அகத்தில் பதினேழும், புறநானூற்றில் மூன்றும், திருவள்ளுவமாலையில் ஒன்றுமாக, 38 பாடல்கள் கிடைத்திருக்கின்றன.

**நக்கீரர்[2]** *nakkīrar,* பெ. (n.) இறையனார் களவியல் நூலின் உரையாசிரியர்; the commentator of iṟaiyaṉār kaḷaviyal a grammar on Agapporuḷ by Iṟaiyaṉār.

மறுவ. நக்கீரனார்.

*[நல் + கீரர் → நற்கீரர் → நக்கீரர்.]*

*இறையனார் களவியல்* என்னும் அகப்பொருள் இலக்கணத்திற்கு, உரையெழுதியவர்.

பாண்டிக்கோவையைப் பாட்டுடைத் தலைவனாகக் கொண்ட பாண்டிய மன்னன் காலம் கி.பி. 640–670. இறையனார் களவியலுரையில், பாண்டிக்கோவைப் பாடல்கள், மேற்கோள் பாடல்களாக எடுத்தாளப்பட்டுள்ளன. அகப்பொருள் இலக்கணங்கூறும், இக் களவியலுரையை இயற்றிய, இந் நக்கீரரின் காலம் கி.பி. 640–670–க்குப் பிற்பட்டது எனலாம்.

களவியற்கு அமைந்த உரைகளுள் சிறந்த ஒன்றைத் தேர்ந்தெடுப்பதற்காக, இறைவனால் அருளப்பட்ட உருத்திரசன்மன், கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்தஇடத்துப் பதந்தொறும் கண்ணீர் வார்ந்து, மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான் இருப்ப ஆர்த்தெடுத்து, 'மெய்யுரை பெற்றாம் இந்நூற்கு' என்றார், என வருவதும், "மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு, நக்கீரனாரால் உரைகண்டு குமார சுவாமியால் கேட்கப்பட்டது என்க", என வருவதும்,

"தூண்டில் வேட்டுவன் வாங்க வாராது என்று சான்றோர் சொல்லியது என்பது", எனவரும் எடுத்துக்காட்டுகளால், இந் நக்கீரர்[2] சங்ககாலத்திற்குப் பிற்பட்டவர் என்பதை, வெள்ளிடைமலையென விளக்கும் ஏதுக்களாகத் திகழ்கின்றன.

**நக்கீரர்[3]** *nakkīrar,* பெ. (n.), பத்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த இலக்கண நூலாசிரியர்; treatises on grammar, by Nakkīrar, 10th Centurary

மறுவ. நக்கீரனார்.

*[நல் + கீரர் → நற்கீரர் → நக்கீரர்.]*

இலக்கண நூலாசிரியராகிய இந் நக்கீரர்[3], நக்கீரர் நாலடி நானூறு, நக்கீரர் அடிநூல் என்னும் இலக்கண நூல்களை இயற்றிதாக, யாப்பருங்கல விருத்தியுரை உரைக்கின்றது.

1. நக்கீரர் அடிநூல்:– வெண்பாவில் ஐஞ்சீரடி வாராதென்பதே, இந் நூலின் சிறப்புச் செய்தியாகும்.

"ஐஞ்சீர் வெள்ளையுட் புகாமை எவற்றாற் பெறுதும் எனின், "ஐஞ்சீர் அடுக்கலும் மண்டிலம் ஆக்கலும் வெண்பா யாப்பிற்குரியவல்ல" என்று நக்கீரனார் அடிநூலுள் எடுத்தோதப்பட்டமை யாற் பெறுதும், என்கிறார்.

"ஐஞ்சீரடி வெண்பாவிற் புகாது என்று கூறினமையால், அகவற் பாவிலும் கலிப்பாவிலும் வரும்" என்பதறிக.

2. நக்கீரர் நாலடி நானூறு:- பாவினுள் பயின்று வரும் வண்ணங்களுள் தூங்கல் வண்ணமும் ஒன்று. "தூங்கல் வண்ணம்வஞ்சி பயிலும்'' .(தொல்.செய்யுள்.228.) என்பது தொல்காப்பிய நூற்பாவாகும்.

யாப்பருங்கல விருத்தியில் வரும் நக்கீரர் நாலடி நானூறு பற்றிய குறிப்பு வருமாறு:- "இன்னவை பிறவும், நக்கீரர் நாலடி நானூற்றில் வண்ணத்தால் வருவனவும் எல்லாம் தூங்கிசைச் செப்பலோசை" எனுங் குறிப்பினின்று, நக்கீரர் நாலடி நானூறு தூங்கிசைச் செப்பலோசையால் அமைந்த 400 வெண்பாக்களையுடையது என்ற உண்மை வெளிப்படுகின்றது.

இவ்விரண்டு நூல்களும் யாப்பிலக்கணம் கூறுவன. யாப்பருங்கல விருத்தியார் காலம் கி.பி. 10 – ஆம் நூற்றாண்டு.

யாப்பருங்கலவிருத்தியார் இந் நூலை மேற்கோள் .காட்டியுள்ளமையால், இந்த நக்கீரர்[3] கி.பி.10 ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்டவர் எனலாம்.

**நக்கீரர்கோயில்** *nakkīrar-koyil*, பெ. (n.), மதுரை, மேலாமாசி வீதியிலுள்ள, நக்கீரர் திருக்கோயில்; Nakkīrar's temple, located in Madurai west māsi street.

மறுவ. சங்கத்தார் கோயில்.

*[நக்கீரர் + கோயில்.]*

திருவிளையாடல் தொன்மத்தில், (புராணம்) நக்கீரர் கோயில் பற்றிய குறிப்பு காணப்படுகிறது.

**நக்கு[1]–தல்** *nakku-*, 5 செ. குன்றாவி. (v.t) **1.** நாவினாற் தடவுதல், அல்லது துழாவுதல்; to lick, lap *"ஆமாபோ னக்கி"* (நாலடி, 377.). பரிவுடன் ஆ (பசு) தன் கன்றை நக்கியது (இக்.வ.). நாய் நீரை நக்கிக் குடிக்கும் (இக்.வ.). நக்குகிற போது நாவு எழும்புமா (பழ.). நக்குகிற நாய்க்குச் செக்கும் தெரியாது, சிவலிங்கமும் தெரியாது (பழ.). **2.** தீண்டுதல்; to touch *"நகைமணி மார்பநக்கி... சுடுசுரம் பரந்தவன்றே"* (சீவக. 799.); **3.** அழித்தல்; to consume. *"உலகை நக்குங் கேடறு நிலைமைக் காலன்"* (ஞானவா. சுக்கிரன். 33.). **4.** சுடுதல்; to burn *"நனந்தலைப் பேரூ ரெரியு நக்க"* (புறநா. 57.).

**தெ.**, நகு, **க.**, நக்கு, **து.**, நக்குனி.

கோண். நாகானா. குவி. நாகலி, கூய். நாக, நாகி. கொண்டா. நாக், கோட நாகானா.

*[நாக்கு → நக்கு + தல்*
*'தல் = தல்லீற்றுத் தொழிற்பெயர்.]*

**நக்கு[2]–தல்** *nakku-*, 5 செ. கு. வி. (v.i.) வறுமைப்படுதல்; to be destitute அவன் கஞ்சிக்கு இல்லாமல் நக்குகிறான் (இ.வ.). நக்கத் தவிடுமில்லை, குடிக்க நீருமில்லை (பழ.). நாய்நக்கத் தண்ணியில்லை, நடந்து போகப் பாதையுமில்லை (பழ.).

**க**, நக்கு., நெக்கு. **தெ.** நாகு. ம. நக்குக. **து.**, நக்குனி. **கோத.**, நக்கி. நக்., **துட.**. நொக் **கோத.**, நக்கி (nakki)., **து.** நக்குனி., **கொலா.** நக். நாய்கி. நாக், (nāk ) **பாலி.**நேக் (nēk) **கத்யா.**, நாக் (nāk). **கோண்.** நாகானா. **குவி.**, நாகலி. **கூய்.**, நாக, நாகி. **கொண்டா.**, நாக்., **கோட.**, நாகானா.

*[நக்கு + தல்.]*

'தல்' = தல்லீற்றுத் தொழிற்பெயர்.

**நக்கு[3]** *nakku*, பெ. (n.) ஆடையற்ற நிலை (தேவா. 215, 6.); nakedness

**த.** நக்கு → skt nagna.

**நக்குடகம்** *nakkudagam,* பெ. (n.) மூக்கு; nose.

*[நக்கு + ஊடு → உடு + அகம்.]*

**நக்குணி** *nakkuṇi,* பெ. (n.) 1. உணவிற்குத் திண்டாடுவோன்; mean cadger of food. 2. சிறுபையன்(வின்); little boy. 3. பாம்புவகை (வின்.); a small snake

*[நக்கு + உண்ணி→நக்குண்ணி→நக்குணி.]*

**நக்குநிற்றல்** *nakku-niṟṟal,* பெ. (n.) 1. ஆடையற்று இருத்தல்; without dress, to be naked "பொக்கம் மிக்கவர் பூவும் நீருங் கொண்டு நக்குநிற்பர் அவர்தம்மை நாணியே" (நாவுக்கரசர் தேவாரம்.). 2. வறுமையில் வாடுதல்; to wail in poverty.

*[நக்கு + நிற்றல்.]*

உண்ணும் உணவிற்கும், உடுக்கும் உடைக்கும் வாய்ப்பற்று இருத்தல்.

**நக்குப்பொறுக்கி** *nakku-p-poṟukki,* பெ. (n.) 1. எச்சிற்பொறுக்கி யுண்போன்; beggar, as one who lives on refuse food *"நக்குப் பொறுக்கிகளும் பறப்பர்"* (தனிப்பா. i 290, 7.). 2. இவறன் (வின்.); miser

*[நக்கு + பொறுக்கி.]*

**நக்குமருந்து** *nakku-marundu,* பெ. (n.) நாவாற் பருகும் மருந்து; a thick syrupy medicament to be taken by licking-Lincture.

*[நக்கு + மருந்து.]*

தேன் முதலியனவற்றுடன் நாவினால் நக்கியுண்ணும் மருந்து.

**நக்கேணி**[1] *nakkēṇi,* பெ. (n.) காரை வகை; a kind of honey thorn, m. tr., Canthium Didymum.

**தெ.** நக்கேரு.

**நக்கேணி**[2] *nakkēṇi,* பெ. (n.) கருப்புமரம் (சா.அக.); a black jujube

**நகக்கண்** *naga-k-kaṇ,* பெ. (n.) விரல் நுனிக்கும், நகத்துக்கும் இடைப்பட்ட பகுதி; the part between the tip of the finger and the nail நகக் கண்ணில் அழுக்குச் சேரவிடக்கூடாது (இக்.வ.).

*[நகம் + கண்.]*

**நகக்கண்நோய்** *naga-k-kaṇ-nōy,* பெ. (n.) உடம்பில் வளி, பித்தம் முதலியவற்றால், கொப்புளம் எழும்புகை (சா.அக.); a disease of the finger in which the flesh of the finger nail is vitiated by deranged wind and bile in the system

**மறுவ.** நகச்சுற்றி.

*[நகக்கண் + நோய்.]*

**நகக்கணுக்கட்டி** *naga-k-kaṇu-k-kaṭṭi,* பெ. (n.) விரல் நுனியிற் காணும் கட்டி (சா.அக.); an abscess occuring at the end of the finger.

**மறுவ.** நகச்சுற்றி, விரற்சுற்றி.

*[நகக்கணு + கட்டி.]*

**நகக்கணுநோய்** *naga-k-kaṇu-nōy,* பெ. (n.) நகத்தினடியிற் காணும் ஒருவகைத் தோல் நோய் (சா.அக.); a kind of skin disease occuring an one side of the root of the nail.

*[நகக்கண்ணு நோய் → நகக்கணு நோய்.]*

**நகக்கணுவிரணம்** *naga-k-kaṇu-v-iraṇam,* பெ. (n.) கொப்புளம் எழும்பாமலே விரற் சதையிற் காணும் நோய் (அல்லது) விரற்சுற்றி (சா.அக.); a form of whitlow occuring in the bulbous end of the finger.

*[நகக்கணு + Skt. விரணம்.]*

**நகக்கால்** *naga-k-kāl,* பெ. (n.) *நகக்கண்* (யாழ்.அக.) பார்க்க; see *naga-k-kaṇ.*

*[நகம் + கால்.]*

**நகக்காளான்** *naga-k-kāḷāṉ,* பெ. (n.) களைந்தெறிந்த நகத்தினின்று முளைப்பதாகக் கருதப்படும் காளான் வகை (வின்.); a kind of fungus believed to spiring from nail parings.

**மறுவ.** சிப்பிக்காளான்.

*[நகம் + காளான்.]*

**நகக்கீறல்** *naga-k-kīṟal,* பெ. (n.) *நகக்குறி* பார்க்க; see *naga-k-kuṟi.*

**நகக்குத்தன்** *naga-k-kuttaṉ,* பெ. (n.) முடிதிருத்துவோன் (யாழ்.அக.); barber.

*[நகம் + குத்தன்.]*

*முன்னாளில், சிற்றூர்களில், முடிதிருத்துவோர் முடிவெட்டுங்கால், விரல்களைத் தூய்மைப்படுத்தி, நகக் கண்ணிலுள்ள அழுக்குகளையெடுப்பர். இக் காலத்தேயும், சிற்றூர்ப்புறத்தே இந் நிகழ்வினைக் காணலாம்.*

**நகக்குறி**[1] *naga-k-kuṟi,* பெ. (n.) நகத்தினாலேற் பட்ட தழும்பு; a scar or impression left by nail

*[நகம் + குறி.]*

**நகக்குறி**[2] *naga-k-kuṟi,* பெ. (n.) கலவிக் காலத்தில், மகளிர் உடலில், ஆடவர் நகத்தினாற் பதிக்கும் அரைமதி, மண்டலம், புலிநகம், மயில்அடி, முயலடி, அல்லிஇதழ் என்ற அறுவகை அடையாளங்கள் (கொக்கோ); nail marks, imprinted on the different parts of the women's body during sexual union,six in number, viz., arai-madi,maṇḍalam, puli-nagam, mayil-aḍi, muyal-aḍi, alli-y-idaḻ

*[நகம் + குறி.]*

**நகக்கொடி** *naga-k-koḍi,* பெ. (n.) விரல்களின் நகங்களைக் கொடியைப் போல் வளரவிட்ட சுருட்டை; nails allowed to grow long and tortuously

*[நகம் + கொடி.]*

**நகங்கறு—த்தல்** *naganikaṟu-,* 4. செ.குன்றா. வி. (v.t.) 1. இறப்பினுக்கு அறிகுறியாக, விரல்களிலுள்ள நகங்கள் கறுத்துக் காணப்படல்; nail's turning dark which is considered as a symptom of death; 2. ஓர் சாக்குறி; a symbol of death.

*[நகம் + கறு—.]*

**நகங்கிருதி** *nagaṅ-kirudi,* பெ. (n.) எழுவகை புண்ணியங்களுள் ஒன்றான, ஆணவமற்ற நிலை (வின்.); humility, absence of pride and self importance, one of seven puṇṇiyam.

*[நகம் + Skt கிருதி.]*

*[நகு → நகம்.]* எழுவகைப் புண்ணியமாவன. 1. நகங்கிருதி; 2. தானம்; 3. நோன்பு (விரதம்); 4. நட்பு (சினேகம்); 5. நயம் பாராட்டல்; (நயபோசனம்); 6. கனம்; 7. ஊக்கம் (உற்சாகம்)விளங்குகை, ஒளிர்கை, மிளிர்கை. மனிதன், ஆணவமற்று, சுடச்சுட ஒளிரும்

பொன்போல், உயர் குணத்துடன் மிளிர்தல். இவ் வுயர்குணம் எழுவகை அறத்துள் ஒன்று.

**நகச்சதை** *naga-c-cadai,* பெ. (n.) நகத்தைச் சுற்றிலுமுள்ள சதைப்பகுதி; the portion of tissue around the nail.

*[நகம் + சதை.]*

*[தடி > தசை > சதை=திரிபு.]*

**நகச்சிராய்** *naga-c-cirāy,* பெ. (n.) நகத்தருகு கிழிந்த சிம்பு (யாழ்ப்.); splintery fragment of a nail.

*[நகம் + சிராய்.]*

**நகச்சிலந்தி** *naga-c-cilandi,* பெ. (n.) கொப்புளம் இன்றி விரலிலேற்படும் கட்டி (சா.அக.); a form of whitlow occuring in the bulbous and of the finger.

மறுவ. நகச்சுற்று.

*[நகம் + சிலந்தி.]*

**நகச்சுவர்** *nagā-c-cuvar,* பெ. (n.) நகத்தைச் சுற்றிய தசை; tissues around the nail.

*[நகம் + சுவர்.]*

*[சுவல் → சுவர்=திரிபு.]*

**நகச்சுற்றி** *naga-c-cuṟṟi,* பெ. (n.) பொதுவாக நகக்கண் அல்லது நுனி விரலிற்காணும் புண்; a common name for several forms of whitlow.

ம. நகச்சுற்று.

*[நகம் + சுற்றி.]*

நகத்தைச் சுற்றிவரும் புண் அல்லது கட்டி.

**நகச்சூடு** *naga-c-cūḍu,* பெ. (n.) 1. இளஞ்சூடு (வின்.); luke warm. 2. சிறுசூடு; moderati warm.

*[நகம் + சூடு.]*

**நகச்சூரம்** *naga-c-cūram,* பெ. (n) பூனைப் புல் (சா.அக.); a kind of grass.

*[நகம் + சூரம்.]*

**நகச்சொத்தை** *naga-c-cottai,* பெ. (n) சிதைவுற்ற நகம்; decayed and deformed nail

*[நகம் + சொத்தை.]*

*[சொள்ளை → சொற்றை → சொத்தை.]*

**நகச்சொல்(லு)—தல்** *naga-c-col(lu)-,* 8 செ. குன்றாவி. (v.t) கூடிமகிழுமாறு இனிய சொற்களைக் கூறுதல்; to utter pleasant words. *"பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி நட்பாடல் தேற்றா தவர்"* (குறள், 187.).

*[நகு → நக + சொல்(லு)—தல்.]*

**நகச்சொற்றை** *nagaccoṟṟai,* பெ. (n.) சிதைவுற்ற நகம்; worm eaten nail or decayed nail.

மறுவ: நகச் சொத்தை.

*[நகம் + சொத்தை. சொள்ளை → சொற்றை.]*

**நகசிரிதம்** *naga-śiridam,* பெ. (n.) குன்றிச் செடியின் சிவப்புவிதை; the red seed of crab's eye.

*[நகம் + Skt சிரிதம்.]*

**நகட்டல்** *nagattal,* பெ. (n.) *நகட்டுகை* பார்க்க; see *nagattugai.*

*[நகட்டு → நகட்டல்.]*

**நகட்டு—தல்** *nagattu-,* 5. செ.குன்றா.வி. (v.t.) 1. இடம்விட்டுப் பெயரச்செய்தல்; to push away, shove. 2. காலந்தாழ்த்துதல்; to delay, procrastinate அவன் கருமத்தைச் செய்யாமல் நகட்டுகிறான் (உ.வ.). 3. நன்றாய் புடைத்தல்; to thrash. 4. அரைத்தல்; to pound, grind. 5. ஆவலுடன் உண்டுவிடுதல்; to eat up with avidity.

*[நகர்த்து → நகட்டு—தல். ]*

**நகட்டுகை** *nagattugai,* பெ. (n.) 1. இடம் பெயர்க்கை; to push away. 2. அரைக்கை; grinding. அம்மியில் மிளகாய் வற்றலை வைத்து நகட்டு. (பே.வ.). 3. நசுக்குகை; crushing.

*[நகர்த்து → நகட்டு. ]*

*[நகட்டு → நகட்டுகை.]*

**நகடு** *nagadu,* பெ. (n.) உடல் வெளுக்கை; pale complexion. *'மண்டின்றுவந்த நகடுபோலன்றிறே'* (ஈடு 6, 2, ப்ர.).

*[நகு → நக → நகடு.]*

*நகுதல் = மிளிர்தல், விளங்குதல், வெண்மையாதல், அரத்த மின்மையால் உடல் வெண்மையாய்த் திகழ்தல்.]*

**நகணம்** *naganam,* பெ. (n.) முடக்கொற்றான்; palsycurer.

**நகத்தடம்** *naga-t-tadam,* பெ. (n.) *நகக்குறி* பார்க்க; see *naga-k-kuri.*

*[நகம் + தடம்.]*

**நகத்துயிர்** *naga-tt-ayir,* பெ. (n.) பூச்சருக்கரைக் கிழங்கு (தைலவ. தைல. 125.); panicled bindweed.

மறுவ. நிலச்சருக்கரைக்கிழங்கு.

**நகத்தழும்பு** *naga-t-talumbu,* பெ. (n.) *நகக்குறி* பார்க்க; see *naga-k-kuri.*

*[நகம் + தழும்பு.]*

**நகத்திருகாணி** *naga-t-tiruganị,* பெ. (n.) கட்டை விரல் நகத்தைப் பயன்படுத்தித் திருகிவிடக் கூடிய திருகாணி; thumb screw.

*[நகம் + திருகு + ஆணி.]*

**நகத்துரோணம்** *naga-t-turōnam,* பெ. (n.) தும்பை (சா.அக.); leucas flower, Leucas Linifolia.

**நகதிபீசம்** *nagadipišam,* பெ. (n.) புலிதொடக்கி (மூ.அ.); a prickly shrub said to be capable of stopping the tiger - Tiger stopper

**நகநந்தினி** *naga-nandiṇi,* பெ. (n.) மலைமகள் (யாழ்.அக.); Malaimagaḷ as the daughter of the Himalaya mountain.

*[நகம் + நந்தினி.]*

**நகநாகு** *naga-nāgu,* பெ. (n.) புளிக்கவைத்துச் சாராயம் இறக்குவதற்காகப் பயன்படுத்துமொரு மூலிகை; a drug used for fermenting spirituous liquor.

*[நகம் + நாகு.]*

**நகநாதிகம்** *naga-nādigam,* பெ. (n.) சிவப்பு அடுக்கலரி (சா.அக.); oleander rosebay-Nerium odorum.

**நகநோக்கி** *naga-nōkki,* பெ. (n.) வேலிப்பருத்தி (சங்.அக.); hedge-twiner.

*[நகம் + நோக்கி.]*

**நகநோகரம்** *naga-nōgaram,* பெ. (n.) மஞ்சிட்டி (சா.அக.); munject indian madder.

மறுவ. நீர்ப்பூடு.

**நகப்புண்** *naga-p-puṇ,* பெ. (n.) 1. நகத்திற் காணும் புண்; boil on the edge of the nail. 2. நகங்கீறுவதாலுண்டான புண்; scratch of a nail.

மறுவ. நகச்சுற்றி.

*[நகம் + புண்.]*

**நகப்புள்ளி** *naga-p-puḷḷi,* பெ. (n.) நகத்திற் காணும் புள்ளி; dot on the nail.

*[நகம் + புள்ளி.]*

**நகப்பூ** *naga-p-pū,* பெ. (n.) நகத்தில் உண்டாகும் வெண்புள்ளி; white spots occuring on the surface of nails

*[நகம் + பூ.]*

**நகப்பூச்சு** *naga-p-pūccu,* பெ. (n.). நகத்தில் பூசும் வண்ணப்பொருள்; nail polish. தற்போது நகப்பூச்சுகள் பல வண்ணங்களில் வருகின்றன. (உ.வ.).

*[நகம் + பூச்சு.]*

**நகபதம்** *naga-padam,* பெ. (n.) *நகக்குறி* பார்க்க; see *naga-k-kuṟi.*

*[நகம் + Skt. பதம்]*

**நகபர்ணி** *naga-parṇi,* பெ. (n.) ஒருசெடி (சா.அக.); a plant

*[நகம் + Skt. பர்ணி.]*

**நகபுட்பி** *nagapuṭpi,* பெ. (n.) ஒருவகை-வெந்தயம்; hourse shoe fenugreek-Trigonella corniculata

**நகம்[1]** *nagam,* பெ. (n.) 1. மலை (பிங்.); mountain. *"நகராசன் மடந்தை"* (பதினொா. திருக்கைலா. 12.). 2. நிலம் (பிங்.); earth. 3. மரம் (சூடா.); tree. 4. நாகணமென்னும் மணப் பொருள்; an article of incense. *"கடிநகந் தேவதூப முதலிய விரைகளிட்டு"* (தைலவ. தைல. 43.).

*[நகு + அம்.].*

*'நகு' என்னும் தோன்றுதற் கருத்தினின்று தோன்றிய சொல், விளங்கித் தோன்றுதல் என்னும் பொருண்மையில், மல்கும் வளமிக்க மலையைக் குறித்து நின்றது. மல்லல்மா ஞாலமாம் மாநில மடந்தையின் மடியினில் விளங்கித் தோன்றுவதே மலை. மலையிடைத் தோன்றி விளங்குபவையே, மணங்கமழ் நாகணமும், நறுஞ்சாந்தம் தரும் மரமும் என்றறிக.*

**நகம்[2]** *nagam,* பெ. (n.) 1. உகிர் (பிங்.); nail. 2. பறவையுகிர்; talon daw. *"மூக்காற கொத்தா நகத்தாற் குடையா"* (கம்பரா. சடாயுவு. 113.). 3. அடிக்குளம்பு (வின்.); extremity or lower part of a hoof. 4. வெற்றிலை கிள்ளும்போது அணியும் விரலுறை (இ.வ.); thimble used in plucking betel-leaf. 5. பங்கு (யாழ்.அக.); portion.

*[ஒருகா. நகு → நகல் → (நுகன்) → நகம்.]*

*நெகு → நகு. நகு → நகல் = ஒளி. நகு → நாகார் = விளங்கித் தோன்றும் பல் (வே.க.3.21.)*

**த** → நகம் → **வ.** nakha.

மோனியர் வில்லியம் வடமொழி அகரமுதலி, வளைவு, கூர்மை முதலான பொருள்களையே கூறுகிறது. தமிழில் அமைந்துள்ள வேர்ப்பொருள், இயல்பாகத் தோன்றி வெளிப்படுதல் என்னும் அடிப்படைப் பொருண்மையில் ஆளப்படுகிறது. மாந்தன், பறவை, விலங்கு முதலியவற்றின் உடலோடு, இயல்பாகத் தோன்றி வெளிப்படுவது என்னும், இயற்கைப் பொருண்மையில், இயன்மொழியாம் தமிழ்மொழியில் யாவரும் மறுக்கவியலா வண்ணம் அமைந்துள்ளமை கண்கூடு. வடமொழியாளர், தோன்றுதற் பொருண்மை யல்லாது, வளைவு, கூர்மை மட்டுமே கூறியுள்ளனர்.

1. கை அல்லது கால்விரல்களில் விளங்கித் தோன்றுவது.

2. கொம்பைப் போன்ற தகட்டுப் பாகத் தினையுடையது.

3. இதன், மீத்தோல் சதைப்பகுதியினின்று திரண்டு எழும்பித் தோன்றுவது.

4. விரல்நுனியின் மேற்பகுதியில் கவிழ்ந்திருப்பது.

**நகம்பிடுங்கி** *nagam-piḍuṅgi,* பெ. (n.) உண்மையை வரவழைக்கும் பொருட்டு குற்றவாளிகளின் நகத்தைப் பிடுங்க காவல்துறையினர் பயன்படுத்தும் கருவி; an instrument used to pluck nails of culprit at jail.

*[நகம் + பிடுங்கி.]*

**நகம்வாங்கி** *nagam-vāṅgi,* பெ. (n.) நகமெடுக்குங்கருவி; nail-parer

*[நகம் + வாங்கி.]*

**நகம்வெட்டி** *nagam-veṭṭi,* பெ. (n) நகம் வாங்கி (வின்.) பார்க்க; see nagam-vāṅgi.

*[நகம் + வெட்டி.]*



**நகமுசம்** *nagamušam,* பெ. (n.) வில் (யாழ்.அக.); bow.

*[நகம் + முசம்.]*

**நகமுண்ணி** *nagamu-ṇ-ṇi,* பெ. (n) 1. நகம் குறைந்து அல்லது விழுந்து போகும் ஒருவகை நகச்சுற்று; a form of whitlow in which the nail is destroyed. 2. விரற்குறையும் குட்டம்; a form of leprosy in which the fingers with nails are mutilated.

*[நகம் + உண்ணி.]*

உடலுறுப்புகளைக் குறைத்து, முடமாக்கிப் பயனற்று விழச்செய்யும் தொழுநோய்.

**நகமுடி** *naga-mūḍi,* பெ. (n.) ஐவண்ணவணியுள் ஒன்றாய்ப் பரவமகளிர், வலக்காற் பெருவிரலில்

அணியும் அணிகலன்; ring worn on the right toe by Parava women, one of ai-vannam, q.v.

*[நகம் + மூடி.]*

**நகர்[1]–தல்** *nagar-,* 2 செ.கு.வி. (v.i.) **1.** ஊர்தல்; to creep, as a reptile. **2.** தவழ்தல்; to crawl or move along in a lying or sitting posture, as an infant. **3.** மறைவாய்ப் போதல்; to steal away, skulk.

*[நக → நகர்–தல்.]*

**நகர்[2]–த்தல்** *nagar,* 8செ.குன்றாவி. (v.t.) *நகர்த்து–தல்* பார்க்க; see *nagarttu-*.

**நகர்[3]** *nagar,* பெ. (n.) **1.** நகரம்; town, city. *"நெடுநகர் வினைபுனை நல்லில்"* (புறநா. 23.). **2.** மாளிகை; house, abode, mansion *"பாழியன்ன கடியுடை வியனகர்"* (அகநா. 15). **3.** கோவில்; temple, sacred shrine. *"முக்கட் செல்வர் நகர்"* (புறநா. 6.). **4.** அரண்மனை; palace. *"நிதிதுஞ்சு வியனகர்"* (சிலப். 27, 200.). **5.** (சடங்கு) நிகழ்வு செய்யு மிடம்; dais for performing ceremonies. *"தூநக ரிழைத்து"* (சீவக. 2633.). **6.** சிறப்பு நிகழ்வுகள் நிகழும் மண்டபம்; a furnished hall or place, decorated for ceremonial functions. *"அணிநகர் முன்னினானே"* (சீவக. 701.). **7.** மனைவி; wife. *"வருவிருந்தோம்பித் தன்னகர் விழையக்கூடி"* (கலித். 8.).

**தெ. து.** நகரு. **ம.** நகர்.

**த.** நகர் → skt. nagara.

*[நகு → நகல் → நகர்.]*

ஒளிர்தற் கருத்தினின்று கிளைத்த சொல்லாகும். விளங்கித் தோன்றும் மாளிகை; வளமனை; அரண்மனை; அரண்மனையையொத்த கோவில். மாளிகையும் அரண்மனையும், மண்டபமும் கோயிலும் போன்ற கட்டடங்களாற் சிறந்து விளங்கும் ஊர் (வே.க. 3. 25.).

நகா என்னும் சொல் முதன்முதலில், ஒரு வளமனையை அல்லது மாளிகையையே, குறித்தது.

காலப்போக்கில், மாளிகை அரசனுக்கே சிறப்பாக வுரியதாதலால் அரண்மனையைக் குறிக்கலாயிற்று. அடுத்த நிலையில், அரசனது அரண்மனை போன்று திகழும், இறைவன் கோயிலையும் குறித்தது.

கோயிலின் கண்ணே, சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும் மண்டபம், மாளிகை போன்றிருத் தலால், இச் சொல்லை, மண்டபம் என்னும் பொருளில் திருத்தக்கதேவர் ஆளுகின்றார்.

நகர் என்னுஞ்சொல், செந்தமிழுக்குரிய தலைமைப் பண்பை நிலைநிறுத்தும் சொற்களுள் தலையாயது. இச் சொல்லினின்றே நகரி,நகரம், நாகரிகம் போன்ற சொற்கள் கிளைக்கின்றன. நகர், நகரி, நகரம், நாகரிகம் போன்ற சொற்களுக்குரிய வேரடி வடிமொழியில் இல்லை; இச் சொற்களுக்குரிய 'நகு' என்னும் வேர்ச்சொல் நந்தமிழுக்கே உரியது. 'நகு' என்னும் மூலம் வடமொழியில் இல்லை. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழகர முதலியில், இவ் வடிப்படை உண்மையை உணராது, நகர், நகரி, நகரம் ஆகிய மூன்று சொல்லையும், வடசொல்லென்று குறித்துள்ளனர்.

சிப்பிச் சுண்ணாம்புச் சாந்தினால் தீற்றப்பெற்று, வெள்ளையடிக்கப்பட்ட காரைச்சுவர்க் கட்டடம், மண்சுவர்க் கூரைவீட்டோடு ஒப்பு நோக்கும்போது, மிக விளங்கித் தோன்றலால், மாளிகை நகர் என்னப்பட்டது. நகுதல்=விளங்குதல்.

நகு → நகல் → நகர்.

நகர் என்னுஞ்சொல், தனி மாளிகையையும், அதனை உடைய பேரூரையும், குறித்ததினால், இம் மயக்கை நீக்கும் பொருட்டு 'இ'கர வீறு கொண்ட நகரி என்னுஞ் சொல் எழுந்தது. (ப.த.நா.பண்.பக்.3).

நகர் என்பது சிறந்து விளங்கும் கட்டடங்களை உடையது. வித்தகர் இயற்றிய வெண்சுதை விளக்கத்துடன் கூடிய கூடகோபுரங்களையும், ஒளி விளங்கும் மாடமாளிகைகளையும் தன்னகத்தே கொண்டது. இத் தகு சிறப்புகள் செறிந்த வேர்ச்சொல்லே 'நகு' என்பது. இப் பொருண்மை பொதிந்த வேரடி வடமொழியில் இல்லை.

த.> நகர் + அம் → நகரம் → வ. → நகர.

நகரம் என்னும் இச் சொல்,ஒளிர்தற்கருத்து எனும் பொருண்மையும், "அம்" என்னும் பெருமைப் பொருட் பின்னொட்டும், செந்தமிழின் இலக்கியச் செழுமையையும், மரபார்ந்த இலக்கண வளத்தையும் எடுத்துக்காட்டுவது.

பெருநகரை, நகரம் என்று சொல்லினும் போதும். ஆயின், அவ்விலக்கணம் இன்று அறியப் படாமையால், மாநகர் என்று சொல்ல வேண்டியதாகின்றது. (ப.த.நா.பண்.பக்.4).

நாம் "யாதும் ஊரே யாவருங் கேளிர்" என்னும், உயர்ந்த பண்பாட்டை யுடையவரேனும், நாட்டு வரலாறொத்த மொழிவரலாற்றைச் சிதைப்பதும், உலகில் முதன்முதல் நாகரிக விளக்கேற்றிய, நம் முன்னோரைத் தகவிலாரெனக் காட்டுவதும், அவர் ஆயிரக்கணக்கான ஆண்டுகள் அரும்பாடுபட்டுத் தேடிவைத்த அருஞ் செல்வத்தைப் போற்றாது வாரி, வாரியில் எறிவதும், அறியாமையையோ, படுகோழைத் தனத்தையோ, தமிழைப் பகைவர்க்கு வெளிப்படையாகக் காட்டிக் கொடுக்கும் நாண மில்லாச் செயலையோதான் காட்டும். பண்பாடுவேறு; காட்டிக் கொடுப்பு வேறு.

மக்களின் பழக்க வழக்கங்கள், முதன்முதல் நகர் அல்லது நகரத்திலேயே திருந்தின. அதனால், சிற்றூர்வாணனையோ, நாகரிகமில்லாதவனையோ, நாட்டுப்புறத்தான் என்று அழைப்பது இன்றும் வழக்கமாயிருக்கின்றது. முதற்கண், நகர்வாழ்விற்கு அடிப்படையானதும், விளங்கித் தோன்றுவதுமான வாழ்க்கைத் திருத்தம் அல்லது பண்பாடு, நகரத்தில் தோன்றியதானாலேயே, நாகரிகம் என்னும் பெயர் பெற்றது. நகர மாந்தரே புறநாகரிகத்தின் பாதுகாவலராயினர். நேர்த்தியாக உடுத்தத் தலைப்பட்டனர். வளமனைகளில் வதிந்தனர்.

நகரப்பதிவாழ்நர்தான், நாகரிகத்தையும், பண்பாட்டையும் நாட்டுப்புறத்தார்க்குக் கற்றுத் தந்தனர். நகரி, நகரம், நாகரிகம் முதலான சொற்கள், மிக்கு ஒளியுடன் விளங்கித் தோன்றுதல் என்னும் பொருண்மையில், 'நகு' என்னும் ஒளிர்தற்கருத்து, வேரினை மூலமாகக் கொண்டு முகிழ்த்தவை.

நகு → நகர் = விளங்கித்தோன்றும் மாளிகை

நகு → நகர் → நகரி = வெண்சுதை பூசிச் சிறந்து விளங்கும் உயர்ந்த கட்டடங்களை யுடைய ஊர்.

த. நகரி → வ. நகரீ. 'இ.' சினைமுதலீறு.

நகர் + அம் → நகரம்.

'அம்' = பெருமைப்பொருட் பின்னொட்டு. இப் பின்னொட்டு தமிழ்மொழிக்கே உரியது. வடமொழியில் இல்லை.

(எ.டு) தமிழ் + அம் = நகரம்.

அவை + அம் → அவையம்.

இற்றைத்தமிழர் இப் பின்னொட்டின் பெருமையை அறியாது, பொதுப்பொருளில் வழங்குகின்றனர்.

த. நகரம் → வ. நகர.

நகர் என்னும் மூலச்சொல்லும், 'நகு' என்னும் மூலமும், வடமொழியில் இல்லை நகர் என்னும் மூலச்சொல்லே, நாகரிகம் என்னும் சொல்லிற்கும் அடிப்படை.

நகர்→நகரகம்→நகரிகம்→நாகரிகம். நகரிப்பழக்கம் = நகர்வாணரின் திருந்திய ஒழுக்கம்.

நகர்ப்புறத்தான் = நாகரிகன். நாட்டுப்புறத்தான் அல்லது பட்டிக்காட்டான் = திருந்தாத பழக்க வழக்கத்தான்.

E. urban = living in a city or town.

(ஒ.நோ.)E. urban = polite

urbanity = polished manners.

L. civis = citizen.

Civil = polite.

Civilization = advanced stage in social development (வே.க.3.).

இச் சொல் கழக இலக்கியங்களிலும், பாவிய(காப்பிய)ப் பனுவல்களிலும், மக்கள் வழக்கிலும், உலகவழக்கிலும், பழமொழி வழக்கிலும் பரவலாகக் காணப்படுகின்றது. நகர், நகரி, திருநகர், ஆழ்வார்திருநகர், ஆழ்வார் திருநகரி என்னும் இடப்பெயர்கள், தென்னக மாவட்டங்களில் பெருவாரியாகக் காணப்படுகிறது.

(எ.டு) 1. நகருக்குப் போனாலும் நாட்டுப்புறம் மாறாது (உ.வ.).

2. நகர் சென்று வந்தால் நாலும் தெரிஞ்சுக்கலாம். (இ.வ.).

3. நகர்தேடிப் போனால்தான் நாலுகாசு சேரும் (உ.வ.).

4. நாய்போல் திரிந்து நகரில் பிழைத்தாலும், நாட்டுப்புறம் வந்தவுடன் நாட்டாமை செய்திடுவர் (இ.வ.).

5. நகரத்தில் இரண்டாந்தர ஊழியனாய் உழைப்பதைவிட, நாட்டுப்புறத்தில் தலைவனாக வாழ்வதே மேல். (பழ.).

மேற் குறித்த பொருண்மை பொதிந்த பொருட்பொருத்தப்பாட்டில் பயின்று வருவதாலும், கழக இலக்கியம் முதலாக, பழமொழியிலக்கியம் ஈறாக, வழக்கூன்றியிருப்பதால், 'நகர்' எனுஞ்சொல் தூயதென்சொல்லென்று துணியவாம்.

**நகர்த்து—தல்** *nagarttu-,* 5. செ.குன்றாவி. (v.t.) 1. விரும்பியேற்றுச் சிறிது தள்ளுதல்; to push with difficulty, shove a long. 2. சிறுகச் சிறுகக் களவாடுதல்; to pilfer steal little by little. 3. காலம் கடத்துதல்; to delay. வேலையை நகர்த்துகிறான் (உ.வ.) 4. நன்றாகப் புடைத்தல்; to thrash,give a good drubbing. 5. செவ்வையாகச் செய்தல்; to do well

*[நகர் → நகர்த்து- .]*

*நகர் (த.வி) → நகர்த்து(பி.வி.)*

**நகர்துரோணம்** *nagar-turōṇam,* பெ. (n.) தும்பை (சா.அக.); leucas flower.

*[நகர் + Skt. துரோணம்.]*

**நகர்ப்புறத்திட்டம்** *nakar-p-puṟa-t-tiṭṭam,* பெ. (n.) மக்கள் நெருக்கம் மிகுதியாக உள்ள நகரினைப் பற்றிய திட்டம்; urban planning. "சாலை பேணுதல் நகர்ப்புறத் திட்டத்துள் ஒன்று" (உ.வ.).

*[நகர்ப்புறம் + திட்டம்.]*

**நகர்ப்புறம்** *nagar-p-puṟam,* பெ. (n.) நகரமும், நகரத்தைச் சார்ந்த பகுதியும்; city and its sub-urban area. நகர்ப்புறத்திலேயே வளர்ந்த பையன். (உ.வ.). நகர்ப்புறத்தின் வளர்ச்சி, அதைச் சுற்றியுள்ள சிற்றூர்களிலும் பரவலாகக் காணப்படுகிறது. (இ.வ.). மேலைநாட்டு நாகரிகம் நகர்ப்புறத்தில்தான் முதலில் பரவுகிறது.

*[நகர் + புறம்.]*

நகரமாகிய (உள்)புறம் என்றும், நகரத்துக்குக் (சுற்றுப்)புறம் என்றும் பொருள்படல் காண்க.

**நகர்ப்புறவளர்ச்சி** *nagar-p-puṟa-vaḷarcci,* பெ. (n.) நகர் சார்ந்த பகுதிகளின் வளர்ச்சி; urban development 'சில ஆண்டுகளாக நகர்ப்புற வளர்ச்சி சிறப்பாக அமையவில்லை' (உ.வ.). நகர்ப்புறவளர்ச்சியினால் நாட்டுப்புற மக்களுக்கு வேலை கிடைக்கிறது (இ.வ.).

*[நகர்ப்புறம் + வளர்ச்சி.]*

**நகர்படுதிரவியம்** *nagar-paḍu-tiraviyam,* பெ. (n.) நகரத்துக்கு உரியனவாகிய கண்ணாடி, பித்தன், கருங்குரங்கு, காட்டானை, வேந்தன் என்ற ஐவகைப் பொருள்கள் (பிங்.); things peculiar to a city. as kaṇṇāḍi, pittaṉ, karuṅ-kuraṅgu; kāṭṭāṉai, vēndaṉ.

*[நகர் + படு + திரவியம்.]*

**நகர்மை** *nagarmai,* பெ. (n.) அசையும் தன்மை; mobility. *'உயவு நெய்யின் கண்டு பிடிப்பால் ஊர்திகளின் நகர்மைத்திறன் அதிகரித் துள்ளது.'*

*[நகர் = அசைவு, நகர் → நகர்மை.]*

**நகர்வாற்றல்** *nagar-v-āṟṟal,* பெ. (n.) பொருள்களை இடமாற்றத் தேவைப்படும் ஆற்றல்; drift energy

*[நகர்வு + ஆற்றல்.]*

**நகர்வியக்கம்** *nagar-v-iyakkam,* பெ. (n.) இடம் மாற்ற முயலும் இயக்கம்; drift mobility.

*[நகர்வு + இயக்கம்.]*

**நகர்வு** *nagarvu,* பெ. (n.) புலம் பெயர்வு, இருப்பிட மாற்றம்; migration. "தற்போது நகரங்களை நோக்கியே மக்கள் நகர்வு அதிகமாக நிகழ்கிறது". (உ.வ.).

*[நகர் → நகர்வு.]*

**நகர்வுச்சான்றிதழ்** *nagarvu-c-cāṉṟidaḻ,* பெ. (n.) புலம் பெயர்வு உறுதிச் சீட்டு; migration -certificate. 'நகர்வுச் சான்றிதழ் இல்லாத வெளி நாட்டினர் ஆறு மாதங்களுக்கு மேல் இங்கு தங்கமுடியாது. (இக்.வ.).

*[நகர்வு + சான்றிதழ்.]*

**நகர்வுதிசைவேகம்** *nagarvu-tišai-vēgam,* பெ. (n.) இடமாற்றத்திற்குத் தேவைப்படும் தூண்டல் இயக்கம்; drift velocity.

*[நகர்வுதிசை + வேகம்.]*

**நகர்வுயிரி** *nagar-v-uyiri,* பெ. (n.) புழு, பாம்பு முதலான தரையில் ஊர்ந்து செல்லும் உயிரிகள்; crawling worms, reptiles, and snakes.

[நகர்வு + உயிரி.]

நகர்ந்து அல்லது ஊர்ந்து செல்லும் உயிரிகள்.

1. புழுவகைகள்– மண்புழு, ஒளிப்புழு, துணிப்புழு, அரக்குப்புழு.
2. பூச்சி வகைகள்.
3. பாம்பு வகைகள்.
4. பூரான் வகைகள்.
5. பல்லி வகைகள்.
6. ஓணான் வகைகள்.

**நகர்வுவெளி** *nagarvu-veḷi,* பெ. (n.) இடமாற்றப் பகுதி; drift space.

**நகரஅரசு** *nagara-arašu,* பெ. (n.) கிமு. 5000 ஆண்டுகளுக்கு முன்பு கிரேக்கம், ஏதென்சு ஆகிய நாடுகளில் இருந்து முதன்முதல் உருவான சிறிய அரசியல் கூட்டமைப்பு: polis or city state-is a small independent-self-contained political society it existed in Athens and Greek, before 5000 years. polis-old greek.

*[நகர் + அரசு.]*

*"மக்களாட்சியின் தாயகம்" "ஏதென்சு" என்று வரலாற்று வல்லுநர் கூறுவர். தன்னாட்சியுடனும், தன்னிறை வுடனும் திகழ்ந்த சிறிய அரசியல் சமுதாயம் பழங்கிரேக்கத்தில், "polis or city state" என்று அழைக்கப்பட்டது.*

**நகரக்கரணத்தான்** *nagara-k-karaṇattāṉ,* பெ. (n.) வணிகக் கணக்கு மேற்பார்வை யாளன்; commercial account's supervisor. "திருநெய்த்தானம் ஸ்ரீகார்யம் ஆராயப்பெற்ற அரயன் நாமக் கோடனார். இவ்வூர் நகரக் கரணத்தான் பனையூருடையானைக் குற்றத்தண்டம் கொண்ட பொன்". (S.I.I.V 592)

*[நகரம் + கரணத்தான்.]*

**நகரக்கல்** *nagara-k-kal,* பெ. (n.) வணிகர்கள் வைத்திருக்கும் எடைகற்களுக்குச் சான்றாக, அரசு தணிக்கை செய்து, முத்திரையிட்டு வழங்கச் செய்த எடுத்தலளவைக்கல்; weighing stone duly sealed by government authorities.

*'திருவாலந்துறை மகாதேவற்கு வைத்த வெள்ளியிற் கலசம் நகரக்கல்லால் நூற்று தொண்ணூற்று முக்கழஞ்சரை"* (S.I.I V.67.).

*[நகரம் + கல்.]*

**நகரக்கோயில்** *nagara-k-kōyil,* பெ. (n.) 1. நாட்டுக்கோட்டைச்செட்டிவகுப்பினர் தலைமுறைதோறும் வணங்கும் ஒன்பது சிவன் கோயில்கள் (இ.வ.); the nine Šivaṉ shrines of Chettṉāḍu, each of which is worshipped by particular sections of chetty families. 2. நாட்டுக் கோட்டைச் செட்டிகளுள் ஒரு வகுப்பு; exogamous section of Nāṭṭu-kōṭṭai chetṭies.

*[நகரம் + கோயில்.]*

**நகரகாதம்** *nagara-kādam,* பெ. (n.) யானை (யாழ். அக.); elephant.

த. நகரகாதம் skt. nagara-ghāda.
*[நகர் + அ + காது+ அம்.]*

அசைந்தவண்ணம் இருக்கும், காதுகளையுடையது. கேரளத்தில் அரச குடும்பத்தினர் யானையை வீட்டில் வைத்து வளர்க்கும் பழக்கம், இன்றும் காணப்படுகிறது.

**நகரங்கம்**[1] *nagaraṅgam,* பெ. (n.) மணப் பொருள் (யாழ்.அக.); fragrant substance.

*[நகரம்+கம்.]*

மணப்பொருள் காற்றில் கலந்து மணம் பரப்பும். இக் காற்றினை நுகருங்கால் மூக்கடைத்துக் காற்று "கம்" மென்று, மணம் வீசுவதாகக் கூறும் இயல்பு, இன்றும் மக்களிடையே பெருவழக்கூன்றி யுள்ளது.

**நகரங்கம்**[2] *nagaraṅgam,* பெ. (n.) நகக்குறி பார்க்க; see naga-k-kuṟi.

**நகரங்களிலார்** *nagaraṅgaḷilār,* பெ. (n.) வணிகர்களின் அவைக்குரிய உறுப்பினர்கள்; member's of the merchant's council.

*[நகரங்கள் + இல் + ஆர்.]*

நகரத்தில் தலைமைப் பொறுப்பில் இருக்கும் வணிகர், ஏனைய ஊர்களில் உள்ள வணிகர்களை, வணிகப் பேரவைக்கு உறுப்பினராகச் சேர்த்தல்.

**நகரசபை** *nagara-šabai,* பெ. (n) நகராட்சிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களைக் கொண்ட அவை; municipal council

**மறுவ.** நகரமன்றம்.

*[நகரம் + சபை.]*

நகர்மன்ற உறுப்பினர் ஒன்றுகூடி. மக்களது இன்றியமையாத தேவைகளை நிறைவேற்றும் அவை.

**த.** சபை → skt. சபா.
அமைதல் = பொருந்துதல்.
கூடுதல், நிறைதல்.
அமை = கூட்டம்.
அமை → அவை.
அவை → சவை → சபை.
வ → ப=திரிபு.

**ஒ.நோ.** உருவு → உருபு. செய்வவர் → செய்பவர். சபையென்னும் தென்சொல்லே, வடமொழியில் சபா என்று திரிந்துள்ளது.

**நகரசம்** *nagara-šam,* பெ. (n.) யானை, (சங்.அக.); elephant

*[நகர் + அசம்.]*

**நகரசனி** *nagara - šaṉi,* பெ. (n.) செடியும் அதன் காயும்; a plant and its fruit.

*[நகர் + அசனி.]*

**நகரசுவாமி** *nagara-šuvāmy,* பெ. (n.) வணிகர்கள் தலைவன், வணிகர் பேரவைத் தலைவன்; leader of merchants, leader of the merchant's council.

[நகரம் + skt. சுவாமி.]

ஸ்வம்+ஆ+மி என்று வட சொல்லைப் பிரித்து, செல்வன் என்று பொருள் கூறுவர். ஆயின், சொம்+து= சொத்து என்னும் தமிழ் வேர்ப்பகுதி. அப் பொருள் தருதல் காண்க.

**நகரத்தந்தை** *nagara-t-tandai,* பெ. (n.), மாநகராட்சி உறுப்பினர்களால் ஆட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக் கப்பட்டு, நகரின் முதல் குடிமகனாக மதிக்கப்படுபவர். mayor of a city council. (கிரி.அக.).

*[நகரம் + தந்தை.]*

கிரியா அகரமுதலியில், நகரத்தந்தை, ஆண்டிற்கொருமுறை நகர்மன்ற உறுப்பினர்கள் வாயிலாகத் தேர்வு செய்யப்படுவதாக குறிக்கப்பட்டுள்ளது. ஆனால், ஐந்தாண்டுகட்கு ஒருமுறை மக்களால் நேரடியாகத் தேர்ந்தெடுக்கப் படுபவரே, நகரத்தந்தை.

**நகரத்தார்** *nagarattār,* பெ. (n.) 1. நகர வாசிகள்; townsmen, inhabitants of city 2. நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் (இ.வ.); nāṭṭu-k-kōṭṭai-cheṭṭies. 3. வணிகர்கள் (வியாபாரிகள்); merchants.

அங்காடிகள் = தஞ்சைப் பெரியகோயில் கல்வெட்டில், கோயில் கணபதிக்குரிய (நிவேதன)ப் படையல் வாழைப்பழத்திற்குரிய முதற்பொருளை, வட்டிக்குக் கொண்டவர்கள். அங்காடிகள் என்று பொதுவாகக் குறிப்பிட்டுள்ளபடி, அவ்வாறு வட்டிக்குக் கொண்டவர்கள் (கல்.அக.).

1. தஞ்சாவூர் புறம்படி நித்த வினோதப் பெருந்தெருவில் நகரத்தார். 2. தஞ்சாவூர் கூற்றுத்துத் தஞ்சாவூர் புறம்படி மும்முடிச்சோழப் பெருந்தெருவில் நகரத்தார். 3. தஞ்சாவூர் கூற்றத்துத் தஞ்சாவூர்ப் புறம்படி திரிபுவந மாதேவிப் பேரங்காடி நகரத்தார் என்றெல்லாம், விளக்கமாகக் குறிப்பிடப் படுவதால், நகரத்தார் என்பது வாணிகர் களையே பெரும்பாலும் குறிப்பிடுபவையே. அவர்கள் வணிகம் செய்து வாழ்ந்து வரும் ஊரும், *"நகரம் என்று பெயர் பெற்றுள்ளது என்பதும், புலனாகும். பூந்த மலியான உய்யக் கொண்டான் சோழபுரத்து வாணிகர் நக்ரத்தோம்"* (S.I.I.vol 7. Ins.537.) "தஞ்சாவூர் புறம்படி திரிபுவநமாதேவிப் பேரங்காடி நகரத்தார்". (S.I.I.vol. 2:2 Ins.37.). போன்றவை நகரத்தார் பற்றிய கல்வெட்டுச் சான்றுகளாகும்.

[நகரம் + அத்து + ஆர்.]

நகரம் என்ற சொல், ஒளி மிகுந்த விளக்குகளுடன் விளங்கித் தோன்றும் கோவில், அரண்மனை, கோட்டை, தலைநகர் முதலியவற்றைக் குறிக்கலாயின. சிப்பிச் சுண்ணாம்பு பூசப்பெற்று பளபளப்புடன் விளங்கித் தோன்றும் மாளிகைகள் நிறைந்தது நகரம்.

நாட்டுக்கோட்டைச்செட்டியார் பேரூர், நகரம் என்றே அழைக்கப்பட்டது. நகரத்தார் எனும் சிறப்புப்பெயர், நாட்டுக்கோட்டாச் செட்டி வணிகர்களுக்கு வழங்கிவந்ததை கல்வெட்டுகள் தெளிவுறுத்துகின்றன.

முதற்கண், நகரத்தில் வதிந்தவர், நகரத்தார் என்னும் பொதுப் பொருண்மையில் அழைக் கப்பட்டனர்.

நாட்டுக்கோட்டைச்சொட்டியார், வணிகம் புரிந்தமையாலும், பளபளப்பாக விளங்கித் தோன்றும் ஒளிமிக்கமாளிகையில் வதிந்த மையாலும், நகரத்தார் எனும் சிறப்புப்பெயர் பெற்றனர்.

**நகரத்தார்ஊர்** *nagarattār-ūr,* பெ. (n.) நாட்டுக்கோட்டைச்செட்டிமார் வாழும் ஊர்; dwelling place (village) of nāṭṭu-k-kōṭṭai-c-ceṭṭiyār's. நகரத்தார் = வணிகர். வட்டித்தொழில் செய்தவர்.

*[நகரத்தார்+ ஊர்.]*

**நகரத்தார்கடை** *nagarattār-kaḍai,* பெ. (n.) நாட்டுக்கோட்டைச் செட்டிமார் நடத்தும் வட்டிக்கடை; nāṭṭu-k-kōṭṭai-c-ceṭṭiyar's shop for money lending business.

*[நகரத்தார் + கடை.]*

**நகரத்தார்கலை** *nagarattār-kalai,* பெ. (n.) நாட்டுக்கோட்டை வணிகத்தார் கட்டிய கோவில்களில் காணப்படும் கலைப்பாங்கு; the specific features found in nāṭṭu-k-kōṭṭai-c-ceṭṭiyar's art and architecture.

*[நகரத்தார் + கலை.]*

கண்ணாத்தாள் கோவில், பிள்ளையார்பட்டி, குன்றக்குடி போன்ற இடங்களில், மிகப் பிற்காலத்தே கட்டப்பட்ட, முக மண்டபங்களில் காணப்படும் கொடுங்கைகள், நாட்டுக்கோட்டைச் செட்டிமார் தம் கலைத் திறனுக்குச் சிறந்த எடுத்துக்காட்டு எனலாம்.

**நகரத்தார்பாணி** *nagarattār-pāṇi,* பெ. (n.) நாட்டுக்கோட்டைச்செட்டிமார் கட்டிய கோவில்களில் காணப்படும் ஒருமித்த கலையமைப்பு; the common architecture found in temples built by nāṭṭu-k-kōṭṭai-c-ceṭṭiyār's

*[நகரத்தார் + பாணி.]*

**நகரத்துச்செட்டி** *nagarattu-c-ceṭṭi,* பெ. (n.) செட்டிச் இனத்தாருள் ஒருவகையினர் (E.T V 92); a sub caste of chetties

*[நகரம் + அத்து + செட்டி.]*

*[செட்டு + இ → செட்டி.]*

**நகரத்துவெள்ளாளர்** *nagarattu-veḷḷāḷar,* பெ. (n.) வேளாளர் வகையினர். a sub sect of vēḷāḷas.

*[நகரத்து+வேளாளர் → வெள்ளாளர்.]*

**நகரத்தோர்** *nagarattōr,* பெ. (n) முற் காலத்திலிருந்த நகரமாந்தர் அவை (கல்வெட்டு); council of the citizens, in ancient times.

*[நகரம் + அத்து + ஆர்> ஓர். நகரத்தார் → நகரத்தோர்.]*

**நகரப்பட்டினி** *nagara-p-paṭṭiṉi,* பெ. (n) நகரதேவதையைக் குறித்து மேற்கொள்ளும் நோன்பு; a fasting vow in honour of the guardian deity of a city. "*தூநீராடி மேவருடங்குயர் நகரப்பட்டினியும் பாரணமும் விதியினாற்றி*" (சேதுபு. அகத்திய. 19.).

*[நகரம்+பட்டினி.]*

நகு → நகர் + அம் + பட்டினி.

பட்டு+இன்+இ = பசித்துயரால் துன்பம் பட்டுக்கிடக்கும் நிலை. 'இன்' ஈண்டு சாரியையாகி வந்தது. இன் சாரியை இன்றிவரும் பட்டு+இ= பட்டி என்பது, ஓர் எல்லைக்குள் உட்பட்டு நிற்கும் ஊரைக் குறிக்கும்.

**நகரப்பதி** *nagara-p-padi,* பெ. (n.), தலைநகர் (திவா.); capital

*[நகரம் + பதி.]*

நகரம் என்பது ஒளிமிக்க இடத்தையும், அங்கு பலர் வதிந்திருக்கும் பொருண்மையில், தலைநகரையும் குறிக்கும்.

அரசன் இருக்கும் அல்லது சென்று தங்கும் இடம் தலைநகர்.

மாடமாளிகைகள் விளங்கித்திகழும் பேரூரைப் பதி என்னுஞ்சொல் குறிக்கின்றது.

மாளிகை முதலில் அரசனுக்கே உரியதாயிருந்தது. அரசன் வாழுமூரே தலைநகர். வளமனை, மாளிகை அரண்மனை. கோயில், மண்டபம் போன்ற இடங்கள், சிறந்த ஓவிய வேலைபாட்டுடன் சிப்பிச்சுண்ணாம்புச் சாந்து தீற்றப் பெற்று விளங்கித் தோன்றும் பதியே, நகரப்பதி என்றறிக.

**நகரப்பதிவாழ்நர்** *nagara-p-padi-vāḻnar,* பெ. (n.), 1. தலைநகரில் வாழ்வோர்; inhabitants of a capital. 2. நாகரிகமுள்ளோர். (திவா.); civilised persons.

*[நகரப்பதி + வாழ்நர்.]*

ஈண்டு நகரப்பதி வாழ்நர் என்பது, சிறப்பாகத் தலைநகரில் வாழ்பவரையே குறித்தது.

அரசனுக்கு அருந்தொண்டாற்றும் அமைச்சர்களும், அமைச்சர்க்கு உற்ற நேரத்தில் உறுதுணை புரியும் அதிகாரிகள் உறையுமிடமே நகரப்பதி.

இந் நகரப்பதியே தலைநகர். இத் தலைநகரின் வானளாவிய வளமனைகள் விளங்கித் தோன்றும்.

இத் தலைநகரில் வதியும் அமைச்சர்களும், அதிகாரிகளும், ஐம்பெருங்குழு, எண்பேராயத்தில் பணியாற்று பவேரே. இவர்களே, நகரப்பதி வாழ்நர்.

**நகரம்**[1] *nagaram,* பெ. (n.), 1. பேரூர் (சூடா); city, town, capital, metropolis. 2. அரண்மனை (யாழ்.அக.); palace 3. கோயில்; temple. "*மேழிவல னுயர்த்த வெள்ளை நகரமும்*" (சிலப். 14, 9.). 4. வாழிடம்; residence, place. "நகர மரருள்புரிந்து நான் முகற்குப் பூமேல்" (திவ். இயற்.முதற் 33.) 5. வளமனை, மாடமாளிகை, அனைத்தும் நிறைந்து, விளங்கித் தோன்றுவது. fabulous palace, elaborate wealhty houses and the unique historical temples are found in a prosperous city as town.

**த.** நகரம் → skt. nagara.

*[நகு → நகல் → நகர் → நகரம்.]*

"அம்" – பெருமைப்பொருள் பின்னொட்டு.

நகர் என்னும் சொல் 'அம்' என்னும் பெருமைப்பொருட் பின்னொட்டுப் பெற்று நகரம் என்றாகும். விளங்கித் தோன்றும் வெண்மை என்பதே இதன் வேர்ப் பொருள்.

"ஒய்மா நாட்டு நகரம் உலோக மாதேவி புரத்து வியாபாரி ஆர்வலங்கிழான்" (S.I.I.Vol V.1000).

இன்று 'நகரம்' என்னும் சொல், பெருநகர் என்னும் பொருண்மையில் வழக்கூன்றியுள்ளது. முதற்கண், அரசன் வாழும் தலைநகரையும், பின்பு அவன் சென்று தங்குமிடத்தையுஞ் சுட்டிற்று.

நகரம் என்னுந் தென்சொல்லை வடமொழியாளர், வேருந்தூரும் மொழிப் பொருட்கரணியமுமின்றி நகர, நகரீ எனத் திரித்தமைத்துக் கொண்டனர். (ப.த.நா.ப.பப்.4.)

**நகரம்பழம்** *nagaram-paḻam,* பெ. (n.) நவரம்பழம் வாழைப்பழ வகையு ளொன்று; a kind of plantain.

**மறுவ.** நவரை

*[நவரம் > நகரம் + பழம்.]*

**நகரமன்றம்** *nagara-maṉṟam,* பெ. (n.) நகரத்துக்கான உள்ளாட்சி அமைப்பு; municipality.

*[நகரம் + மன்றம்.]*

**நகரமாக்கள்** *nagara-mākkaḷ,* பெ. (n.), *நகரமாந்தர்*[2] (பிங்) பார்க்க; see *nagara māndar*[2]

[நகரம் + மாக்கள்.]

**நகரமாகஇசைந்தநகரத்தோம்** *nagaram-āga-iśainda-nagarattōm,* பெ. (n.) வணிகர் குடியுருப்புப் பகுதியாக அரசின் வாயிலாக உரிமம் பெற்று வாழும் நகரத்தார்; commercial residence approved by government. "நகரமாக இசைந்த நகரத்தோம், சுந்தரசோழபுரமான தேசியுகந்து பட்டனம்" (புதுக்கோட்டை கல்வெட்டு எண்.422.).

**நகரமாந்தர்** *nagara-māndar,* பெ. (n.) 1. நகர்வாழ்நர்; city people. 2. அரசருக்குரிய எண்பெருந்துணைவருள் தலைமைபெற்ற நகர்வாழ்நர் (திவா.); chief citizen, one of eṉperuṅ-tuṇaivar.

**நகரமீன்** *nagara-mīṉ,* பெ. (n), பரவமகளிர்தம் ஐந்து வண்ணஅணிகளுள் காலின் சுண்டுவிரலிற் பூணும் அணிவகை. ring worn on the little toe by parava women, one of ai-vaṇṇam.

மறுவ. நவரை.

[நகரை → நகரமீன்.]



**நகரமூக்கத்தி** *nagara-mūkkatti,* பெ. (n.) நாகமூக்கொற்றிச் செடி; moon - flower

**நகரவரை** *nagar-avarai,* பெ. (n.) அவரைவகை (வின்.); a kind of bean. Dolichos - rugosus.

மறுவ. மொச்சை.

*[நகர் + அவரை.]*

புரதம் செறிந்த இம் மொச்சை, அவரைவகையுளொன்று. உண்ணுவதற்கு பெரிதும் உகந்தது.

**நகரவனுச்சை** *nagara-v-aṉuccai,* பெ. (n), நகரத்தார் அமைத்துக்கொள்ளும் ஒழுங்குமுறை, ஊர்க்கட்டுபாடு; *self control order between nagarattar* *"நகரவனுச்சையால் வைத்துக் கொடுத்தோம்"* (S.I.I vol. 2–III:223.).

**நகரவாயிற்பழம்** *nagara-vāyiṟ-paḻam,* பெ. (n.) புளிப்புச்சுவையுள்ள பழம்; grewia, asiatica a small and fruit.

மறுவ. பலசம்.

*[நகரம் + வாயிற்பழம்.]*

இயல்பாகவே புளிப்புச் சுவையுள்ள இப் பழச்சாற்றினின்று, கோடை வெப்பத்தைத் தணிக்கும், இனிய கலவையினை உருவாக்குவர். இவ் வின் பருகத்தினை மென்மேலும் புளிக்கவைத்து, தேட்கடுப்பன்ன புளிக்குந் தேறலாக மாற்றுவர். இத் தேறலுக்குத் துவர்ப்பு, புளிப்பு, குளிர்ச்சி முதலான குணங்களுண்டு.

நகரவாயிற் பழப்பட்டையினின்று, கடைச் சரக்குகளைச் சேர்த்து, கருக்குநீராகக் காய்ச்சிக் குடிப்பதனால், மிகுபித்தம், வெப்பு நோய் முதலானவை அகலும். (சா. அக.).

**நகரவாரியம்** *nagara-vāriyam,* பெ. (n.) நகரமாகக் கொள்ளப்பட்ட ஊர்களில், வணிகத் தொடர்பான செயல்களைக் கண்காணிக்கும் குழு. இத்தகைய வாரியம் சிறந்த வாணிகர் வாழும் ஊர்களிலேயே, அமைக்கப்பெறும்; supervising authority of merchant's council.

"*இவ்வூர் அங்காடியில் ஊராள்வார்கள் பெறும் அங்காடிக்கூலி கொண்ட இவ்வூர் நகரவாரியம் செய்வோமாக*" (S.I.I. vol. 5. 597.)

*[நகரம் + வாரியம்.]*

**நகரவிடுதி** *nagara-viḍudi,* பெ. (n.) நாட்டுக்கோட்டை நகரத்தார் வந்து தங்கு வதற்காக, அமைக்கப்பட்ட கட்டடம். a lodging-place specially intended for Nāṭṭuk-kōṭṭai cheṭṭies.

*[நகரம் + விடுதி.]*

**நகரவியக்கி** *nagaraviyakki,* பெ. (n.), புலித் தொடக்கி (சங். அக.); a thorny sensitive plant.

மறுவ: நகவியாக்கிரம்.

**நகரவிரம்** *nagaraviram,* பெ. (n.), மயில் (சங்.அக.); peacock.

**நகரா** *nagarā,* பெ. (n.), பெருமுரசுவகை; a large kettle-drum. "*நகரா முழுங்க*" (கொண்டல்விடு. 508.).

**நகராசிடமண்** *nagarāśiḍa-maṇ,* பெ. (n.), சவட்டு மண்; saline material in earth.

நகரப்பகுதிகளில் சுவர் எடுக்கப் பயன்படுத்தும், பற்றுக்கோடான உவர்ப்புக் கலந்த மண்.

**நகராட்சி** *nagarāṭci,* பெ. (n.) நகரத்துக்கான உள்ளாட்சி அமைப்பு; municipality. நகராட்சித்தேர்தல் அண்மையில் நடந்து முடிந்தது.

*[நகர் + ஆட்சி.]*

**நகராட்சிமன்றம்** *nagarāṭci-maṉṟam,* பெ. (n.) *நகரசபை* பார்க்க; see *nagara-sabai*

*[நகராட்சி + மன்றம்.]*

**நகராணம்** *nagarāṇam,* பெ. (n.), ஒளிநீர் (விந்து) (சங். அக.); semen. 2. விதை; seed.

**நகராபார்** *nāgarā-pār,* பெ. (n), மீன்வகையுளொன்று; yellow goat fish. மஞ்சள் வண்ணமுள்ள இறுகிய சதைப்பற்றுள்ள மீன்.

மறுவ: நகரை.

**நகராமண்டபம்** *nagarā-maṇḍabam,* பெ. (n.), வழிபாடு செய்வன், திருவில்லிப்புத்தூர் நாய்ச்சியாருக்கு வழிபாடு முடிந்தபின்பே,

உண்பது என்ற நோன்புமுடைமையால், அதனை அறிவித்தற் பொருட்டு, அவ்வூரிலிருந்து, மதுரைவரை, நகரா என்னும் முரசு மூலம், செய்தி அறிவிக்குமாறு வழிநெடுகத் திருமலை நாயக்கரால் அமைக்கப்பட்டுள்ள, மண்டபங்கள்; kettle-drum stations established by Tirumalai naikar along the road from *srivilliputtūr* to his palace at Madurai for announcing the Goddess at *Srivilliputtūr*, after which he would take his food;

[நகர் + ஆ = நகரா + மண்பம்.]

மண்டபம் = சிறப்பு நிகழ்ச்சிகள் நடைபெறும் மாளிகை போன்றமைந்த இடம். திருத்தக்க தேவர் நகர் என்னும் சொல்லை மண்டபம் என்னும் பொருளில் ஆண்டார் (எ.டு) "அணிநகர் முன்னினானே" (சீவக.701.)

நகரா + மண்பம் = முரசுக்கட்டில்கள் அமைப்பதற்காக மன்னர்களால் அமைக்கப் பெறும் பெருமாளிகை.

**நகராமுசி** *nagarāmuši*, பெ. (n.), 1. ஈரல் (சங். அக.); liver. 2. நுரையீரல்; the lungs.

[நகர் + ஆம் + உசி.]

உயிர்ப்புக்காற்று உள்வாங்கி வெளிவிடும் போது, நகர்வதுபோல் தோன்றலாகும் தன்மை உடையது.

**நகராவம்** *nagarāvam*, பெ. (n.), அலரி; olearder. nerum odorum.

**நகரி¹** *nagari*, பெ. (n.), 1. நகரம் (சூடா); city, capital. 2. அரசுக்குரிய புறம்போக்கு நிலம்; land belonging to government (R.T).

**த.** நகரி → skt. nagarī.

[நகு→நகல் → நகர் → நகரி.] - நகர மாளிகையையும் செல்வச்செழிப்பு நிறைந்து திகழும் வளமனைகளும் விளங்கித் தோன்றும் ஊர்.

[நகர் + இ.]

'இ' உடைமையை உணர்த்தும் ஒன்றன் பாலீறு.

ஒ.நோ. காடைக்கண்ணி, நாற்காலி.

ஆழ்வார் திருநகர் + இ.

நகர் என்னும் சொல் தனி மாளிகையையும், அதனையுடைய பேரூரையுங் குறித்ததனால், இம் மயக்கத்தை நீக்கும் பொருட்டு, பேரூரை மட்டும் குறித்தற்கு 'இ' கரவீறு கொண்ட நகரி என்னுஞ்சொல் எழுந்தது. நகரை (மாளிகையை) யுடையது நகரி.

'நகரி' என்னுமிச்சொல் வடமொழியில் 'நகரீ' என்று ஈறு நீண்டு வழங்கினும், அதன் ஈற்றிற்கு அங்கு தனிப்பொருள் இல்லை. (ப.த.நா.ப.பக்.4.).

வீட்டைக்குறிக்கும் 'குடி' என்னுஞ்சொல், காலப்போக்கில் குடிமிக்க ஊரைக் குறிக்கப் பயன்படுத்தப்பட்டது.

(எ.டு) காரைக்குடி; மன்னார்குடி.

நகுதல் = விளங்குதல்; விளங்கித் தோன்றுதல்.

வெண்சாந்து பூசிய காரைவீடு, கூரைவேய்ந்த மண்வீட்டோடு ஒப்பு நோக்கியபோது விளங்கித் தோன்றியதனால், 'நகர்' என்றுபெயர் பெற்றது.

[நகு → நகல் → நகர் → நகரி.]

நகர்களை (காரைவீடுகளை) உடையது நகரி. விளங்கும் மாளிகைகள் மிகுதியாக வுள்ள பேரூரே நகரி.

**நகரி[2]** *nagari,* பெ. (n.), வறட்சுண்டி (மலை); a sensitive plant. Indian worm killer.

**நகரிகவுளி** *nagari-kavuḷi,* பெ. (n.), தேட்கொடுக்கி; scorpion sting plant Heliotropium indicum.

*[நகரி + கவுளி.]*



**நகரிகாவலர்** *nagari-kāvalar,* பெ. (n.), நகரக் காவலாளிகள் (வின்.); city watchmen.

*[நகரி + காவலர்.]*

**நகரிசோதனை** *nagari-sōdaṉai,* பெ. (n.) அரசன் இரவில் வேற்றுருக்கொண்டு, தன் நகரத்தைச் சுற்றி ஆய்வு பார்க்கை (இ. வ.); nightly inspection of a city by its king incognito.

*[நகர் → நகரி + skt. சோதனை.]*

**நகரிநிலம்** *nagari-nilam,* பெ. (n) தீர்வையில்லாத சாகுபடிநிலம்; unassessed cultivable land. (R.T.).

*[நகரி + நிலம்.]*

**நகரிப்பழக்கம்** *nagari-p-paḻakkam.* பெ. (n.) நகர்வாழ்நர் நல்லொழுக்கம். (வின்.); urban manners, urbanity

*[நகர் → நகரி + பழக்கம் = நகரமாந்தர்களின் திருந்திய ஒழுக்கம்.]*

*மக்களின் பழக்கவழக்கங்கள் முதன்முதல் நகர் அல்லது நகரத்திலேயே திருந்தின. அக் காலத்தே, பண்பட்ட பழக்க வழக்கத்தின் உறைவிடமாகவும், நகர் வாழ்நர் விளங்கினர். அகத்தே நல்லொழுக்கம் பூண்டு, உணவு, உடை, உறையுள் முதலான அனைத்து நிலையிலும், நாகரிகத்துடன் மிளிர்ந்த, நகரமாந்தர்தம் நல்வாழ்வுப் பழக்கமே, நகரிப்பழக்கம் எனப்பட்டது.*

**நகரிபகம்** *nagari-pagam,* பெ. (n.), காகம் (மூ.அ.); crow.

**நகரிபதம்** *nagari-padam.* பெ. (n.) *நகரிபகம்* பார்க்க; see *nagari-pagam*

**நகரிமாக்கள்** *nagari-mākkaḷ,* பெ. (n) *நகர மாக்கள்* (சூடா.) பார்க்க; see *nagara-mākkaḷ.*

[நகர் → நகரி + மாக்கள்.]

ஒ.நோ. ஆழ்வார்திருநகர் → ஆழ்வார் திருநகரி.

மா + கள் என்று, விலங்குகளைக் குறிப்பினும், மக்கள் பொருளிலும் வரும்.

**நகரியம்** *nagar-iyam,* பெ. (n.) குறிப்பிட்ட தொழிலை ஒட்டி உருவாக்கிய நகரின் நிருவாகத்திற்காகத் தேர்தல்மூலம் அல்லாமல், அமைக்கப்படும் உள்ளாட்சி ஆளுகை; township.

*[நகர் + இயம்.]*

**நகரிவகம்** *nagarivagam,* பெ. (n.), *நகரிபகம்* (யாழ். அக.) பார்க்க; see *nagaribagam.*

*[நகரிபகம் → நகரிவகம்.]*

**நகரு—தல்** *nagaru-,* 2.செ. கு. வி. (v.i.) *நகர்—தல்,* பார்க்க; see *nagar-.*

*[நகர் → நகரு.]*

**நகரூடம்** *nagarūḍam,* பெ. (n.), மூக்கு (சங். அக.); nose.

**நகரேகை** *naga-rēgai,* பெ. (n.) *நகக்குறி* (யாழ். அக.) பார்க்க; see *naga-k-kuṟi.*

மறுவ. நகத்தழும்பு.

*[நகம் + skt. ரேகை.]*

**நகரை**[1] *nagarai,* பெ. (n.) 1. நறுள்மரம்; small lance leaved, olive linden. 2. மீன் வகையு ளொன்று; a kind of fish.

**நகரை**[2] *nagarai,* பெ. (n.) 1. *நவரை* பார்க்க; see *navarai.* 2. *பேய் நவரை* பார்க்க; see *pēy-navarai.* 3. ஓர் அரிசி வகை a kind of rice.

**நகரௌடதி** *nagarauḍadi,* பெ. (n.) வாழை; plantain tree.

**நகல்**[1] *nagal,* பெ. (n.) 1. சிரிக்கை; smiling, laughing. 2. மகிழ்ச்சி; rejoicing, gladness. "தம்முட் குழீஇ நகலி னினிதாயின் (நாலடி.137.). 3. நட்பு; friendship. "நகலானா நன்னயமென்னுஞ்செருக்கு" (குறள், 860). 4. எளனம்(பிங்); ridicule, derision. 5. மினுமினுக்கம் (அரு.நி); brilliance.

க. து. நகலி.

*[நகு→ நகல்.]*

**நகலேகம்** *nagalēgam,* பெ. (n.) நகத்தாற் பீறிய காயம்; a scratch with the nail.

**நகலேகை** *naga-lēgai,* பெ. (n.) *நகரேகை* (யாழ். அக.) பார்க்க; see *nag-rēgai.*

**நகவாதம்** *naga-vādam,* பெ. (n.) மூலிகை மருந்து வகையுளொன்று; a kind of herbal medicine.

*[நகம் + Skt வாதம்.]*

மிகுவளி (வாயு), ஊதை(வாதம்) போன்ற நோய்களுக்கு ஏற்ற மூலிகை.

**நகவியாக்கிரம்** *naga-viyākkiram,* பெ. (n.) *புலிதொடக்கி* (மூ.அ.) பார்க்க; see *puli-toḍakki.*

**நகவிராணம்** *nagaviraṇām,* பெ. (n.), *நகக்கணுவிரணம்* பார்க்க; see *naga-k-kaṇuviraṇam.*

**நகவுளி** *naga-v-uḷi,* பெ. (n), 1. நகம்வாங்கி; barber's instrument for paring nails. 2. தச்சுக்கருவி வகை (யாழ். அக.); carpenter's gouge.

மறுவ. நகவெட்டி.

*[நகம் + உளி.]*

**நகவுறை** *naga-v-uṟai,* பெ. (n), தைக்கும் பொழுது சுட்டுவிரல் நுனியில் அணியும், மாழையினால் ஆகிய மூடி; a cap, wear at the time of stiching by needle.

[நகம் + உறை.]

செங்கோட்டு யாழில் அமைந்துள்ள நரம்புகளை மீட்டுங்கால், விரல் அறுபடாமல் இருப்பதன்பொருட்டு அணியும், விரல்மேலுறை.

**நகழ்¹–தல்** *nagal-*, 4.செ.கு.வி. (v.i.), 1. கடும்வலியால் துன்பப்படுதல்; to suffer acute pain. "*நகழமால் வரைக் கீழிட் டரக்கர் கோனை*" (தேவா. 175: 10).

[நகு + அல் > அழ்–.]

**நகழ்²–தல்** *nagal-*, 4. செ.கு.வி. (v.i.), நகர்ந்து செல்லுதல்; to creep, crawl along. "*நகழ்வனசில*" (கம்பரா. அதிகா. 136).

[நகர் → நகழ்–.]

ஒ.நோ: உமிர் → உமிழ்.

**நகழ்வாதனம்** *nagal-v-ādanam*, பெ. (n.), இருக்கை வகைகளுளொன்று (தத்துவப். 107. உரை); a kind of posture.

கால்கைகளைத் தரையில் ஊன்றி, மோவாய் தரையிற்படத் தலையைக் குனிந்தும், பிறகு நிமிர்ந்தும் இருக்கும் ஓகவிருக்கை வகை.

[நகர் → நகழ் → நகழ்வு +skt. (ஆதனம் = இருக்கை).]

**நகழ்வு** *nagalvu*, பெ. (n.), 1. துன்பம்; pain. "*நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி*" (திருமந். 2669). 2. *நகழ்வாதனம்* பார்க்க; see *nagal-v-ādanam*.

[நெகு→நெகிழ்வு→நகழ்வு.]

**நகள்¹(ளு)–தல்** *nagal(lu)-*, 2.செ. கு. வி. (v.i.), நகர்ந்து செல்லுதல். to creep, crawl along.

[நகர்→நகள்.]

**நகள்²(ளு)–தல்** *nagal(lu)-*, 2.செ. கு. வி. (v.i.), 1. *நகழ்¹* பார்க்க; see *nagal¹*; 2. நசுக்குண்ணுதல்; to be crushed.

**நகாஅர்** *nagāar*, பெ. (n.), சிரிக்கும்போது தோன்றும் பல்; tooth as appearing in laughter. "*மடவோர் நகாஅ ரன்ன நளிநீர் முத்தம்*" (சிறுபாண் 57.).

[நகு → நகாஅர்]

நகைக்குங்கால், மிளிரும் நிலையிலும், ஒளிருந்தன்மையிலும் விளங்கித் தோன்றும் பல்.

**நகாஅல்** *nagāal*, பெ. (n.), சிரிப்பு; laughter. "*நல்ல நகாஅலிர் மற்கொலோ*" (கலித். 142. 16).

[நகு →நகா→அர் →நகாஅல்.]

ஒளிரும் இயல்பால் விளங்கச் சிரிக்கும் சிரிப்பு.

**நகாசு¹** *nagāsu*, பெ. (n.), நெற்றி (யாழ். அக.); forehead.

[நகு →நகாஅ + சு -ஒளிரும் நெற்றி]

கருமைநிறத்தவருக்கும், வெண்மை நிறத்தவருக்கும், வெயில்படும் பகுதியாக நெற்றி, ஒளிரும் தன்மையில் அமைந்த பாகமாகும். நெற்றிக்கு உள் இருக்கும் மூளையின் இயக்கமே, மாந்தர் தம் செயல்பாடு. ஆதலால் 'நுதல்', நெற்றி, எண்ணுதல் என்னும் பொருளில், பயின்று வருகின்றதெனலாம்.

**நகாசு**[2] *nagāsu*, பெ. (n.), நகை முதலியவற்றிற் செய்யப்படும் அழகிய நுணுக்க வேலை; delicate ornamental work.

த. நகாசு. பி. nagāsi.

[நகு→ நகா→ நகாசு.]

பொலிவுடன் மிளிர்ந்து, அழகுடன் விளங்கித் தோன்றும் நுணுக்க வேலை.]

**நகாசுமணி** *nagāsu-mani*, பெ. (n.), 1. *நகாசு*[2] பார்க்க; see *nagāsu*[2]. 2. பரதவமகளிர் கழுத்தணி; necklace worn by paratava women.

*[நகாசு → நகு + ஆசு. மணி = அழகுடன் ஒளிரும்மணி.]*

*கடற்படு பொருள்களில், கோர்த்தணியும் கழுத்தணி ஒளிமிக்கிருத்தலின், ஐந்து நிலங்களில், நெய்தல் நிலத்துக் கழுத்தணி, குறிக்கப்படுதல் காண்க.*

**நகாசுவேலை** *nagāsu-vēlai*, பெ. (n.), நகை முதலியவற்றிற் செய்யப்படும் அழகிய நுணுக்க வேலை; delicate ornamental work done by goldsmiths.

*[நகை + காசு + வேலை.]*

**நகாயுதம்**[1] *nagāyudam*, பெ. (n.), 1. நகத்தைப் படைக் கருவியாகக் கொள்ளுவது; that which uses its claws as weapon. 2. புலி (யாழ்.அக.); tiger 3. பூனை(யாழ். அக.); cat

[நகு → நகம் + skt. ஆயுதம்.]

புலி, பூனைகளைக் குறிப்பது சினையாகு பெயர்.

**நகாயுதம்**[2] *nagāyudam*, பெ. (n.), 1. (சேவல்;) கோழி; cock fowl. 2. நகமுள்ள விலங்கு அல்லது பறவை; any bird or beast possessing talons.

ஈண்டு பறவைக்குச் சினையாகு பெயராயிற்று. முட்டைகளை அடைகாத்துக் குஞ்சு பொறித்திருக்கும் சில நாட்களில், கழுகு போன்றவை கவ்வ வருங்கால், கோழி உகிர்க்கருவியைப் போர்க்கருவியாகக் கொண்டு பாயும்.

[நகம் + skt. ஆயுதம்.]

**நகார்** *nagār*, பெ. (n.), 1. முத்தையொத்த வெண்பல்; tooth like pearls *"மகாஅர் அன்ன மந்தி நகாஅர் அன்ன நளிநீர் முத்தம் மடவோர்"* (சிறுபாண். 57).

[நகு → நகார்.]

முத்துப்பற்கள். ஒளிரு தற் கருத்துவேர். நகையென்னுஞ் சொல், முதற்கண் ஒளிருதலைக் குறித்து. அடுத்த நிலையில் ஒளிரும் பற்களையும், சிரிப்பினையும் குறிக்கலாயிற்று.

**நகிர்** *nagir*, பெ. (n.), தேள் கொடுக்கி (மூ.அ.); indian turnsole.

**நகில்** *nagil*, பெ. (n.), முலை; woman's breast. *"நகின்முகத்தி னேவுண்டு"* (கம்பரா.மிதிலை.45).

[நகு → நகில் - அழகுடன் விளங்கித் தோன்றும் கொங்கை.]

கொங்கை குழந்தையர்க்குப் பாலூட்டும் உறுப்பாயினும், ஆண்மையைக் கவரும் இயற்கைப் பண்பில், ஒளிமிக்க இட மாகும்.

**நகிலம்** *nagilam*, பெ. (n.), முலை; female breast.

[நகில் + அம்.]

**நகிலெலும்பு** *nagil-elumbu,* பெ. (n.), முலைக்காம்புருவாய்க் காதின் முன்புறம் இருக்கும் ஓர் எலும்பின் பாகம்; the bone resembling the nipple or breast behind the ear.

[நகில் + எலும்பு.]

**நகு[1]-தல்** *nagu-,* 4.செ. கு. வி. (v.i.), 1. சிரித்தல்; to laugh, smile. "*நகுதற் பொருட்டன்று நட்டல்*" (குறள், 784). 2. மகிழ்தல்; to rejoice "*மெய்வேல் பறியா நகும்*" (குறள், 774). 3. மலர்தல்; to bloom, as a flower "*நக்க கண்போ னெய்தல்*" (ஐங்குறு. 151). 4. கட்டவிழ்தல்; to open or expand "*நக்கலர் துழாய் நாறிணர்க் கண்ணியை*" (பரிபா, 4 58). 5. ஒளிர்தல்; to shine, glitter. 'பொன்னக்கன்ன சடை' (தேவா. 644:1). 6.. புள்ளிசைத்தல்; to hoot, as an owl; to sing, as a bird "*நற்பகலுங் கூகை நகும்*" (பு. வெ. 3,4).

க., நகு(g) தெ. நவ்வு., நகவு.

/நெகு → நகு - (வே. க. 3. 24)/

இஃது, ஒளிருதற் கருத்து வேரினின்று முகிழ்த்த சொல்லாகும். விளங்குதல், திகழ்தல், முகம்விளங்குமாறு சிரித்தலென்னும் பொருண்மை பொதிந்தது. முகம் விளங்குதற்கேற்ப, அகம் மகிழ்தலும் இயல்பே யென்றறிக.

**நகு[2]-தல்** *nagu-,* 4.செ. குன்றாவி. (v.t.). 1. இழிவாகக் கருதுதல்; to despise. "*ஈகென்பவனை நகுவானும்*" (திரிகடு. 74). 2. தாழ்த்துதல்; to surpass, overcome. defeat, "*மானக்க நோக்கின் மடவார்*" (சீவக. 1866).

*[நெகு → நகு-. (வே. க. 3.24.)]*

நகுதல், ஈண்டு எள்ளல் பற்றியது.

**நகுடம்[1]** *nagudam,* பெ. (n.), மூக்கு (யாழ். அக.). ; nose.

**நகுடம்[2]** *nagudam,* பெ. (n.), அமுக்கிரா (நாமதீப.); Indian winter cherry

**நகுடன்** *nagudan,* பெ. (n.), நகுலன் பார்க்க; see nagulan. "*நகுட னாமவேல் நராதி பனாகருக் கரசாய்*" (பாரத. குருகுல. 14).

[நகுலன்→நகுடன்.]

**நகுத்தம்** *naguttam,* பெ. (n.), 1. புன்கு; indian beech tree 2. காட்டுப் பச்சிலை வகை; a kind of rosewood, caps albergia larborea

**நகுதலிலை** *nagudalilai,* பெ. (n.). நெட்டைநாரத்தை; common cherry nutmeg.

**நகுதாக்கட்டை** *naguda-k-kattai,* பெ. (n.), காக்காய்ச் சரிகைக்கண்டு; reel of imitation lace thread

[நகுதா + கட்டை.]

ஒளியற்ற கருமைநூல் கண்டு.

**நகுதாளிலை** *nagudalilai,* பெ. (n), நூலிலை; common cherry nutmeg.

[நகு + தாள் + இலை.]

ஒளிமிக்க காம்போடுகூடிய இலை.

**நகுநயமறைத்தல்** *nagu-naya-maraittal,* பெ. (n.), களவுக்கூட்டத்தின் முன் தலைவி, நாணத்தால் உள்ளடங்கிய தன்மகிழ்ச்சியைத் தலைவர்க்குப் புலனாகாதவாறு மறைக்கை (தொல். பொருள். 261), .a theme in which a

mistress coyly hides from her lover the inward delight she feels at the prospect of a clandestine union.

[நகு + நயம் + மறைத்தல்.]

**நகுலம்** *nagulam,* பெ. (n.), விலங்குவகை கீரி; mungoose, herpestes mungo. "*பிள்ளை நகுலம் பெரும்பிறிதாக*" (சிலப். 15, 54).

[நகு(து)ல் + அம்:]

குதிரை போன்ற விலங்குகள் கனைக்கும்பொழுது, சிரிப்பது போலிருக்கும்.

**நகுலமலைக்குறவஞ்சி** *nagulamalai-k-kuṟavañji,* பெ. (n.), ஒரு நூல்; a book. இந்நூல் யாழ்ப்பாணத்தைச் சேர்ந்த விசுவநாத சாத்திரியாரால் எழுதப்பட்டது.

இந் நூலில் இரட்டுறமொழிவுச் செய்யுள்களைப் பாடியுள்ளார்.

[நகுல மலை + குறவஞ்சி.]

**நகுலன்** *nagulaṉ,* பெ. (n.), 1. ஐவருள் (பஞ்ச பாண்டவருள்) ஒருவன்; one of pāṇḍavar prince; "*சசிகுல நகுலனென்றும்*" (பாரத. சம்பவ. 87); 2. பரிமா உகைப்போன்; skilful horseman. 3. அறிஞன்; intelligent person. 4. சிவன்; šivaṉ 5. புதல்வன் (யாழ்.அக.); son.

[நல் + குலன்.].

**நகுலாந்தியம்** *nagulāndiyam,* பெ. (n.), 1. கண்குருடு; blindness. 2. ஒரு வகை கண்நோய்; a kind of eye disease.

**நகுலார்த்தமம்** *nagulārttamam,* பெ. (n.), கீரிப்பிள்ளை கண்கள் போலாகி, இரவில் கண் தெரியாதிருத்தல்; the eyes become like those of mungoose, and loose vision during night.

**நகுலி** *naguli,* பெ. (n.), 1. பட்டுப்பருத்தி; red silk - cotton. 2. மணமுள்ள பொருள்; a scent

**நகுலேட்டை** *nagulēṭṭai,* பெ. (n.), பூடுவகை (யாழ்.அக.); a kind of shrub.

**நகுவல்** *naguval,* பெ. (n), ஏளனம்; pleasantry. "நானெனதென்று நகுவறீர" (பாடு.105, பாம்பாட்டு).

[நகு+அல்.]

**நகுனகி** *nagunagi,* பெ. (n.), 1. மையல் கொண்ட பெண்; a lustful woman. 2. பருவமடையாப் பெண். a girl before menstruation.

[நகுவில் + நகு + இல் = நகி(ல்).]

**நகேசன்** *nagēšaṉ,* பெ. (n.), மலைகட்குத் தலைமையாய்த் திகழும் இமயமலை (யாழ். அக.); the Himalayas as lord of the mountains.

[ஒருகா. நாக> நக + ஈசன்.]

**நகேசனங்கை** *nagēša-ṉaṅgai,* பெ. (n.), மலைமகள் (யாழ்.அக.); Malaimagaḷ,

[நாக + ஈசன் + நங்கை.]

**நகேசிகம்** *nagēšigam,* பெ. (n.), புல்லூரி; parasitic plant.

**நகேசிறு** *nagēšiṟu,* பெ. (n), புல்லுருவி (மூ.அ.); honey-suckle mistletoe.

**நகை**[1] *nagai,* பெ. (n.), **1.** சிரிப்பு; smile, laughter "*நகைமுகங்கோட்டி நின்றாள்*" (சீவக 1568). **2.** மகிழ்ச்சி; cheerfulness. "*இன்னகை யாயமோ டிருந்தோற் குறுகி*" (சிறுபாண். 220). **3.** இன்பம்; delight,gratification, pleasure, joy. "*இன்னகை மேய*" (பதிற்றுப் 68, 14). **4.** இகழ்ச்சிச் சிரிப்பு, இகழ்ச்சிப் பேச்சு, அவமதிப்பு; contemptuous laughter, sneer, derision, scorn. "*பெறுபவே........பலரா னகை*" (நாலடி, 377). **5.** இளிப்பு; grinning. **6.** ஏளனம்; pleasantry. "*நகையினும் பொய்யா வாய்மை*" (பதிற்றுப் 70,12). **7.** நட்பு; friendship. "*பகைநகை நொதும லின்றி*" (விநாயகபு. நைமி . 25). **8.** நயச்சொல்(திவா); pleasant word. **9.** விளையாட்டு; play. "*நகையேயும் வேண்டற்பாற் றன்று*" (குறள், 871). **10.** மலர்; flower. "*எரிநகை யிடையிடு பிழைத்த நறுந்தார்*" (பரிபா. 13,59). **11.** பூவின் மலர்ச்சி; blossoming of flowers. "*நகைத்தாரான் தான் விரும்பு நாடு*" (பு. வெ. 9, 17). **12.** ஒளி; brightness, splendour. "*நகைதாழ்பு துயல் வரூஉம்*" (திருமுரு 86). **13.** பல்; teeth. "*நிரைமுத் தனைய நகையுங் காணாய்*" (மணிமே. 20, 49). **14.** பல்லீறு(வின்); the gums. **15.** முத்து; pearl "*அங்கதிர் மணிநகை யலமரு முலைவளர் கொங்கணி குழலவள்*" (சீவக. 603). **16.** முத்துமாலை; garland of pearls. "*செயலமை கோதை நகையொருத்தி*" (கலித். 92,33). **17.** அணிகலன்; jewels. 'நகைக்கு மகிழ்ச்சி நட்புக்கு நஞ்சு' (பழ.). **18.** ஒப்பு; resemblance, comparison. "*நகை........ பிறவும்.......... உவமச்சொல்லே*" (தண்டி. 33).

**க.** நகெ(g) நக(g), **தெ. ம.,** **து.,** நக.

*[நகு → நகை (வே. க. 3:24.]*

*தகத்தகவெனச் சொலித்து மின்னும் அணிகலன் நகையென்று பெயர் பெறும்.*

*விளங்கித்தோன்றி, ஒளிரும் பற்களின் சிரிப்பும் நகையெனப்படும்.*

**நகை[2]-த்தல்** *nagai-,* 4.செ. குன்றாவி. (v.t.), சிரித்தல்; to laugh "*ஊர் நகைத்துட்க*" (கல்லா. 88, 1).

**ம.** நகெக்க.

*[நகு → நகை-.]*

**நகைக்கடை** *nagai-k-kaḍai,* பெ.(n.) அணிகலன் விற்பனைக்கடை; Jewels shop

*[நகை + கடை.]*

**நகைக்கடைத்தெரு** *nagai-k-kaḍai-t-teru,* பெ. (n.) அணிகலன்கள் விற்பனை செய்யும் கடைகள் நிரம்பிய தெரு; the street of jewellery shops.

**மறுவ.** காசுக்கடைத் தெரு.

*[நகைக்கடை + தெரு.]*

**நகைக்கும் பறவை** *nagaikkum-paṟavai,* பெ. (n.) *நகைப்பறவை* பார்க்க; see *nagai-p-paṟavai.*

**நகைச்சுவை** *nagai-c-cuvai,* (பெ.) (n.) **1.** சிரிப்பும்; மகிழ்ச்சியும் மிளிரும் வண்ணம் உள்ள பேச்சு-செயல்; humour, comic. அவருடைய பேச்சிலும், எழுத்திலும் நகைச்சுவை மிளிரும்(உ.வ.). பெண் பார்க்கப்போனதைப் பற்றி, நண்பர் மிகவும் நகைச்சுவையுடன் எழுதியிருந்தார்; கலைவாணர் மிகச்சிறந்த நகைச்சுவை நடிகர் (இக்.வ.). 2.சிரிப்பு உண்டாகும்படிப் பேசுதல்; humourous talk, joke.

*[நகை + சுவை.]*

**நகைச்சுவைக்கலை** - *nagaiccuvai-k-kalai,* பெ.(n.) *நகையாட்டுக்கலை* பார்க்க; see *nagai-y-yāṭṭu-k-kalai.*

*[நகைச்சுவை+கலை.]*

**நகைச்சுவைத்திறன்** *nagai-c-cuvai-t-tiraṉ,* பெ.(n) பிறரை மகிழ்விக்கும் அல்லது சிரிக்கவைக்கும் ஆற்றல்; the skill of humour.

*[நகைச்சுவை + திறன்.]*

**நகைச்செல்லம்** *nagai-c-cellam,* பெ. (n.) சிறிய அணிகலப்பெட்டி, அணிகல இருப்பு (இ.வ.); jewel-case.

*[நகு → நகை + செல்வம் → செல்லம்.]*

வைப்பகம் இல்லாத காலத்தில், இருப்புக் கணக்காக, நகை கருதப்பட்டது.

**நகைச்சேதாரம்** *nagai-c-cēdāram,* பெ. (n.) அணிகலன் செய்யும் போது பொன்னை அறுத்து அராவுங்கால் ஏற்படும் இழப்பு; wastage of gold in making jewels due to filing, etc. ஆடித்திருவிழாவில் அணிகலன் வாங்குபவர்க்கு நகைச்சேதாரம், செய்கூலி இல்லை (இ.வ.).

*[நகை + சிதை + அம் → சிதயம் → சேதம் + ஆரம்.]*

சேதம் = இழப்பு; அழிவு. பொன்னாலேனும், வெள்ளியாலேனும் நகை முதலியன செய்யும் போது, ஏற்படும் தேய்மான இழப்பே நகைச்சேதாரம். இச்சொல், இன்று நகர்ப்புறத்தும், நாட்டுப்புறத்தும் பரவலாக வழக்கில் உள்ளது. நகையின் எடையைப் பொறுத்து இச் சேதாரத்தின் மதிப்பு அமையும்.

**நகைச்சொல்** *nagai-c-col,* பெ. (n.) 1. இகழ்ச்சிமொழி; ridicule, derisive words. நகைச்சொல் தருதல் பகைக்கு ஏதுவாகும் (பழ.). 2. வேடிக்கைப்பேச்சு; pleasantry, joking.

மறுவ. *நக்கல்பேச்சு.*

*[நகை + சொல்.]*

பிறரை எள்ளி நகையாடி ஏளனப் படுத்தும், சிறுபிள்ளைத்தனமான பேச்சு.

**நகைச்சோதி** *nagai-c-šōdi,* பெ. (n.) மின்மினிப்பூச்சி; fire fly.

*[நகு + ஐ = நகை. Skt சோதி.]*

நகைபோன்று மின்னுந்தன்மையுள்ள பூச்சி.

**நகைத்திறச்சுவை** *nagai-t-tira-c-cuvai,* பெ. (n.) கோமாளிக்கூத்து (சிலப்.3,12,உரை.); comic dancing.

**மறுவ.** எள்ளற்கூத்து; நகையாட்டு; சிரிப்புக்கூத்து. கேளிக்கூத்து.

*[நகுதிறம் → நகைத்திறம் + சுவை.]*

பிறரை மகிழ்விக்குந்திறம். அறிவுறுத் திறத்தால், அனைவருக்கும் இன்பமூட்டி, அக மகிழ்விப்பவரே, நகைத்திறமிக்கவர். இந் நகைத்திறம், எந் நிலையிலும், எவர்தம்மையும், எள்ளிநகையாடாதிருத்தலே, விழுமியது என்றறிக.

**நகைநட்டு** *nagai-naṭṭu,* பெ. (n.) நகை முதலான பொருள்கள்; jewel and other valuables நகை நட்டையெல்லாம் விற்றுவிட்டாள் (இ.வ.).

*[நகு → நகை + நள் + து → நட்டு - நகை + நட்டு.]* நகையும் திருகும் என்று பொருள்படும் வழக்கு.

இஃது ஒளிருதற் கருத்தினின்று தோன்றிய மரபிணை மொழி வழக்கு. இன்று நாட்டுப்புறத்தே நன்கு வழக்கூன்றியுள்ளது.

எ.டு. 1. நகைநட்டு போட்டு வந்ததால், அவளைப் பிடிக்க முடியவில்லை (இ.வ.).
2. நகைநட்டு போடாமலே, நாட்டாமை செலுத்துகிறாள் (உ.வ.).

**நகைநாணயம்[1]** *nagai-nāṇayam,* பெ. (n.) நகை முதலிய பொருள்கள்; jewels and other valuables.

*[நகை + நாணயம் = காசு.]*

**நகைநாணயம்[2]** *nagai-nāṇayam,* பெ. (n) நகையை இரவல் வாங்கிப் பயன்படுத்திய பின்பு, மீண்டும் திருப்பித்தரும் ஒழுங்கு; prompt and punctual borrowed return of the jewels

*[நகை + நாணயம்=நம்பிக்கை.]*

**நகைநோக்கம்** *nagai-nōkkam,* பெ. (n.) 1. மஞ்சள் (மலை.); turmeric 2. பட்டுப் பருத்தி; silk-coton tree-Bombox malabaricum.

**நகைப்பறவை** *nagai-p-paṟavai,* பெ. (n.) மக்களை மகிழ்விக்கும் இன்முகப்பறவை; charming and cheerful bird.

*[நகை + பறவை.]*

ஆத்திரேலியாவில் மருத்துவமனை நோயாளிகளை, மகிழ்விக்கும் பறவை.

நாவலந்தேயத்து (இந்தியநாட்டு) மீன்குத்திப் பறவையினைப் போன்றது. இதன் தலையும் வயிறும் கருமை கலந்த செந்நிறத்தது. பின்புறம் நீலங்கலந்த பசுமையானது. இதன் உணவு இறைச்சியாகும். மிகக் கடுமையான நோயினால் தாக்குண்ட மருத்துவமனை நோயாளிகளின் நோயினை, மறக்கச் செய்வதற்கு, இப் பறவையின் இன்னியங் கலந்த, 'ஆ' 'ஆ' என்னும் நகைப்பொலி பேருதவி புரிகின்றது.

ஆத்திரேலியாவில் உள்ள மருத்துவ மனைகளில், இப் பறவை வளர்க்கப் படுகின்றது. இப் பறவைகளின், ஈடில்லா இன்னிசையால், நோயின் கடுமை குறைகின்றது. நோயாளிகள், கண்ணுறங்கச் செல்லும் போதும், இன்னிசையினை எழுப்பி மகிழ்விக் கின்றது.

(அபி.சிந்.பக்.915.).



**நகைப்பு** *nagaippu,* பெ. (n.) 1. சிரிப்பு (இ.வ.); smiling. கிண்டல் செய்து நகைப்பூட்டுவதில் இந்த நண்பர் கைதேர்ந்தவர் (இக்.வ.). 2. பகடி, எள்ளப்படும் பொருள்; derision. நகைப்பிற்கு இடமான செய்கை (உ.வ.).

*தெ.* நகவு.

*மறுவ.* எள்ளல்; கேளி.

*[நகு → நகை → நகைப்பு.]*

**நகைப்புலவாணர்** *nagai-p-pula-vāṇar,* பெ. (n.) நட்புக்குரியரானவர்; favourites, friends "*நகைப்புலவாணர் நல்குரவகற்றி*" (புறநா.387.).

*[நகைப்புலம் + வாழ்நர் → வாணர்.]*

ஒ.நோ. சோழநாடு → சோணாடு நகைப்புலவாணர் என்பவர், அறிவுத் திறத்தால், அனைவரையும் அகமகிழ்விக்கும், ஆற்றல் மிக்கவர்.

**நகைப்பெட்டி** *nagai-p-peṭṭi,* பெ. (n.) அணிகலன்களைப் பாதுகாப்பாக வைக்கும் பெட்டி; jewel - box.

*[நகை + பெட்டி.]*



**நகைப்பொலி** *nagai-p-poli,* பெ. (n.) சிரிப்பொலி; laughter sound. நகைப்பொலி அடங்கச் சிறிது நேரமாயிற்று. (உ.வ.).

*[நகைப்பு + ஒலி.]*

**நகைமதிப்பீட்டாளர்** *nagai-madippiṭṭāḷar,* பெ. (n.) பணவைப்பகங்களிலும் (வங்கி), பிறவற்றிலும் அணிகலன்களை, மதிப்பீடு செய்பவர்; appraiser.

*[நகை + மதிப்பீடு + ஆளர்.]*

**நகைமுகம்** *nagai-mugam,* பெ. (n.) 1. சிரித்த முகம்; cheerful countenance. "நகைமுகத்த நன்கு மதிப்பு" (நீதிநெறி.39.); 2. உடன்பட்டமை தோற்றும் முகப்பொலிவு; smile of acquiescence. "*நகைமுக மழிந்து நின்றேன்*" (சீவக.478.).

*[நகை + முகம்.]*

**நகையரல்** *nagai-y-aral,* பெ. (n.) கிலுகிலுப்பை (மூ.அ.); a species of rattle-wort.

*[நகை + அரல்.]*

உரத்த குரலில் நகைப்பது போன்ற ஒலி எழுப்புதல் பற்றியோ, குழந்தைகளுக்குச் சிரிப்பொலி எழுப்புதல் பற்றியோ, அமைந்த பெயர்.

**நகையா** *nagai-y-ā,* பெ. (n.) 1. குறுப்பாலை; grey barked nageia-Putranjiva roxburghi. 2. வெள்ளை ஒழுக்கைப் போக்கும் ஒரு மூலிகை; drug for curing gonorrhoea.

*[நகை → நகையா.]*

நோய்த்துயர் மகிழ முடியாமையை ஏற்படுத்தலால், அமைந்த பெயர்.

**நகையாட்டாளர்** *nagai-y-āṭṭāḷar,* பெ. (n.) நாடகத்திலும், திரைப்படத்திலும், பிறரை நகைப்பில் ஆழ்த்தும்வண்ணம், சொல்லாடுபவர்; humorous actor. இருபதாம் நூற்றாண்டில் கலைவாணர் கருத்தாழமிக்க நகையாட்டாளர் என்று, மக்களால் போற்றப் படுகின்றார். (சென்னை).

*[நகை + ஆடு + ஆளர்.]*

**நகையாட்டு** *nagai-y-āṭṭu-,* பெ. (n.) பிறரை மகிழ வைக்கை; the art of humour

*[நகை + ஆடு (கு.வி.) → ஆட்டு (பி.வி.).]*

**நகையாட்டுக்கலை** *nagai-y-āṭṭu-k-kalai,* பெ. (n.) பிறரை மகிழ்விக்கும் அல்லது அவர்தம் துன்பத்தை மறக்கச் செய்து, இன்பத்துள் ஆழ்த்தும் கலை; the skill and the art of humour.

*[நகையாட்டு + கலை.]*

**நகையாடு-தல்** *nagai-y-āḍu-,* 5. செ. குன்றாவி. (v.t.) 1. சிரித்தல்; to smile, laugh. 2. எள்ளல், நக்கல்; to jeer, rail at; to joke. "*நகையாடிக் கூறிக் கைப்பற்றியவழி*" (ஐங்குறு.79,உரை.).

*[நகு → நகை + ஆடு-.]*

**நகையால்** *nagai-y-āl,* பெ. (n.) 1. பகன்றைச் செடி; rattle nail dye-Crotolaria verrucosa. 2. நீர்முள்ளி; water thistle. 3. கல்லால்; stone fig tree. 4. கிலுகிலுப்பை; rattle wort-Corotolaria laburnifolia.

**நகைவகையராக்குவார்** *nagai-vagaiyar-ākkuvār,* பெ. (n.) அறிவுரை கூறாது சிரித்துப்பேசிப், பொருள் கவர்தலைக் குறிக்கோளாகக் கொண்ட கூடா நட்பினர்; false good friends.

மறுவ. கரிமுகர்; நகைவேழம்பர்.

*[நகைவகையர் + ஆக்குவார்.]*

நகைவகையர் = எஞ்ஞான்றும், சிரிக்கப்பேசி பொருள் பறிப்பவர். நல்லுரை நவின்று அறிவூட்டாது, வீண் சிரிப்பையும், பகட்டாரவாரத்தையும், தொழிலாகக் கொண்டு, பொருள் பெறும் குறும்பர். உண்மை நண்பர் என்பவர், குணத்தை மட்டும் கூறுபவராக இராது, நண்பர்தம் குற்றத்தையும், இடித்துரைத்துத் திருத்துபவராகச் செயல்பட வேண்டும். "நகைவகைய ராகிய நட்பின் பகைவரால் பத்தடுத்த கோடி உறும்" (குறள்,817.).

**நகைவர்** *nagaivar,* பெ. (n.) நட்பினர்; friends. "*நகைவர்க் கரணமாகிப் பகைவர்க்குச் சூர்நிகழ்ந் தற்றுநின் றானை*" (பதிற்று.31,34.).

*[நகைவர் + பகைவர்.]*

எதுகையொத்த சொல்லாட்சி.

**நகைவேழம்பர்** *nagai-vēlambar,* பெ. (n.) கோமாளி; professional buffoons, clowns. "*நகைவேழம்பரொடு வகைதெரி யிருக்கையும்*" (சிலப்.5:53.).

மறுவ. நகையாட்டாளர்.

*[நகை + வேழம் + அம்பர்.]*

மூங்கில் கம்பில், வயிற்றை வைத்துச் சுழன்று காட்டும், கோமாளித்தனத்தவர்.

**நங்கணவாய்** *nangana-vāy,* பெ. (n.) *நாகணவாய்ப்புள்* பார்க்க; see *nāgana vāy-p-pul.*

*[நாகணம் → நங்கணம் + வாய்.]*

**நங்கணவாய்ச்சி** *nangana-vāycci,* பெ. (n.) பறவை வகை (வின்.); a kind of bird.

*[நாகண → நங்கண + வாய்ச்சி.]*

*இது நாகண வாய்ப்புள் என்றும், பூவை என்றும் மக்களிடையே வழங்குகிறது.*

**நங்கள்** *nangal,* பெ. (n.) நாங்கள் என்பது வேற்றுமையுருபை ஏற்கும்போது அடையும் எழுத்துருத் திரிபு; the basic form which nāngal assumes before case-suffixes "*நங்கள் வரிவளை யாயங்களோ*" (திவ்.திருவாய்.8:2:1.). "*நங்கள் இருவினை மாமரம் வேர்பறித்து*" (திருவாச,3.86.).

*[நாம் → நம் + கள்.]*

**நங்கனை** *nanganai,* பெ. (n.) அரைப் பட்டிகையின் உறுப்பு; part of a girdle. "*திருப்பட்டிகைக் கதலிக்கை நங்கனை ஒன்று*". (S.I.I.vol. II:144.).

*[ஒருகா. நங்கன் → நங்கனை.]*

**நங்காமணத்தி** *nangāmanatti,* பெ. (n.) செம்மணத்தி; red wood, decanny deodar.

*[நன்கு → நங்கை + ஆமணத்தி.]*

**நங்கினம்** *nanginam,* பெ. (n.) நாகண வாய்ப்புள்; mynah (bird).

*[நன்கு → நங்கு + இனம்.]*



**நங்கிலி¹** *nańgili,* பெ. (n.) பயிரி. (யாழ்.அக.), கோழிக்கீரை வகை; purslane.

*[நன்கு + இலி.]*

**நங்கிலி²** *nańgili,* பெ. (n.) கோலார் மாவட்டத்திலுள்ள செல்வ வளமுள்ள நாடு; a rich and wealthly place in kōlār (Dt.).

மலைப்பாங்கான சூழ்நிலையுடன், துங்க பத்திரை ஆற்றை, வடக்கு எல்லையாகக் கொண்டது. இதை முதற் குலோத்துங்கன் கைப்பற்றியுள்ளான்.

*"கல்லதர், நங்கிலி, துடங்கி மணலூர் நாடுவென்று துங்கபத்திரையளவும்" (முதற் குலோத்துங்கன்* – மெய்கீர்த்தி).

**நங்கு¹–தல்** *nańgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. நக்கல் செய்தல்; to deride. நங்குதல் செய்வதையே அவன் வேலையாகக் கொண்டுள்ளான் (உ.வ.). 2. நையாண்டி செய்தல்; to mock at. "*நங்கவொழியினும்*" (பழமலை.50.), (இலக்.அக.).

**தெ.** நங்கு.

*[நகு → நங்கு –. = நையாண்டி செய்தல். ஒருவரை எள்ளி நகையாடி, ஏளனஞ் செய்தல்.]*

**நங்கு²** *nańgu,* பெ. (n.) நக்கல்; derision, mockery. "*நங்கு தெறுப்பதற்கு நாடெங்கும் போதாது*" (ஆதியூரவதானி).

*[நகு → நங்கு.]*

**நங்கு³** *nańgu,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

ம., நங்கு. துளு., நங்கு.

**நங்குகாட்டு–தல்** *nańgu-kāṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) நக்கல் செய்தல்; to mimic, deride.

*[நக்கு→நங்கு + காட்டு–.]*

பிறர் போல் நடித்து நையாண்டி செய்தல். பிறர் பேசுவது போலவும், சிரிப்பது போலவும் பேசித், திறமையாக நடித்துக்காட்டுதல். விலங்குகள் போலவும், பறவைகள் போலவும் ஒலியெழுப்பி, ஏளனஞ்செய்தல்.

**நங்குடிவேளாளர்** *nańguḍi-vēḷāḷar,* பெ. (n.) திருநெல்வேலி வேளாளரில் ஒரு வகையினர் (E.T.V.246.); a division of vēḷāḷar caste in Tirunelveli district.

*[நம் + குடி + வேளாளர்.]*

**நங்குரம்** *nańguram,* பெ. (n.) *நங்கூரம்* பார்க்க; see *nańgūram.* "*நங்குரத்திற்கட்டிய கயிறு காற்றாலற்று*" (சீவக.2231,உரை.).

பார. லங்கர்.

*[நாங்குலம் → நாங்கூரம் → நங்கூரம் → நங்குரம்.]*

கப்பலை நிறுத்தும் கலப்பை வடிவான இருப்புக்கருவி.

**நங்குவலி—த்தல்** *naṅgu-vali-,* 5 செ.கு.வி. (v.i.) *நங்குகாட்டு—,* (இ.வ.) பார்க்க; see *naṅgu-kāṭṭu-.*

*[நங்கு + வலி—.]*

**நங்குவழி—த்தல்** *naṅgu-vaḻi-,* 5 செ.கு.வி. (v.i.) *நங்குகாட்டு—,* (இ.வ.) பார்க்க; see *naṅgu-kāṭṭu-.*

*[நங்கு + வழி—.]*

**நங்கூரக்கல்** *naṅgūra-k-kal,* பெ. (n.) இரும்பால் செய்யப்படாத கல்கட்டிய நங்கூரம்; killick.

*[நங்கூரம் + கல்.]*

**நங்கூரங்கொத்திவிடு—தல்** *naṅgūraṅ-kotti-viḍu-,* 5 செ.கு.வி. (v.i.) கப்பலைக் கட்டியிருக்கும் நங்கூரக் கயிற்றை அறுத்து விடுதல் (வின்.); to cut or slip the cable

*[நங்கூரம் + கொத்தி + விடு—.]*

**நங்கூரத்தண்டு** *naṅgūra-t-taṇḍu,* பெ. (n.) நங்கூரத்தைத் தாங்கியுள்ள இரும்புச்சங்கிலி; shank

*[நங்கூரம் + தண்டு.]*

**நங்கூரந்தூக்கு—தல்** *naṅgūran-dūkku-,* 5 செ.கு.வி (v.i.) 1. நங்கூரத்தைக் கடலிலிருந்து மேலேயெடுத்தல்; to weigh anchor. 2. கப்பல் புறப்படுதல் (பே.வ.). (இ.வ.); to set sail.

*[நங்கூரம் + தூக்கு—.]*

**நங்கூரப்பல்** *naṅgūra-p-pal,* பெ. (n) நங்கூரத்தின் கொளுவி (வின்.); fluke of an anchor.

*[நங்கூரம் + பல்.]*

**நங்கூரம்** *naṅgūram,* பெ. (n.) மரக்கலம் வேற்றிடஞ்செல்லாது நிறுத்தற்கு, நீருள் இடும் இருப்புக்கருவி; anchor. "மரக்கலத்துக்கு நங்கூரம் விழவிட்டாற்போலே" (திவ். திருமாலை,38,வ்யா.பக்.128.).

தெ. நாகலே.

த. நங்கூரம். → Skt lāṅgala.

E. anchor, OE. ancor, L. ancora GK ankura OHG anchar. LG., MHG., anker On akkeri, Sw ankare Da. anker. OF ancre. It. ancora L anchora

பார. லங்கர். (Langar )

*[நாங்கூலம் → நாங்கூரம் → நங்கூரம்.]*



நாங்கூழ் மண்ணைத் துளைப்பது போல், நிலத்தைத் துளைத்து உழும் கலப்பை.

கப்பலை நிறுத்தும் கலப்பை வடிவான, இருப்புக்கருவி.

வளைவைக் குறிக்கும் 'omk' என்னும் வினை முதனிலையினின்று, 'anchor' என்னும் சொல் திரிந்துள்ளதாக, ஆங்கில அகரமுதலிகள் கூறும். அஃதுண்மையாயின், அதுவுந் தமிழ் வழியே.

(ஒ.நோ.) வணங்கு → வாங்கு → வங்கு → அங்கு.

அங்குதல் = வளைதல், சாய்தல். அங்கணம் = வாட்டஞ்சாய்வான சாய்கடை (தமி.இலக்.வர.பக்.55.). வளைதற் கருத்துச் சொல்லான நங்கூரம், நிலத்தைத் துளைத்து, கப்பலை நிலைநிறுத்தும், பொருண்மையில் வந்துள்ளது.

**நங்கூரம்பாய்ச்சு—தல்** *nańgūram-pāyccu-*, 5 செ. குன்றாவி. (v.t.). கப்பல் நகராமல் ஓர் இடத்தில் நிற்பதற்காக நீருக்குள், நங்கூரத்தை இறக்குதல்; to cast anchor.

*[நங்கூரம் + பாய்ச்சு—.]*

**நங்கூரம்வலி—த்தல்** *nańgūram-vali-*, 4. செ. குன்றாவி. (v.t.). *நங்கூரந்தூக்கு—.* பார்க்க; see *nańgūran-tūkku-.*

*[நங்கூரம் + வலி—.]*

**நங்கூரமரையாணி** *nańgūramarai-y-āṇi*, பெ. (n.) கூர்மையான பல்வெட்டும், கூம்பான வாலும் உடைய மரையாணி; lewis bolt.

*[நங்கூரம் + மரை + ஆணி.]*

இது கட்டுமானப் பணிகளில் பயன்படு கின்றது.

**நங்கூரமிதப்பு** *nańgūra-midappu*, பெ. (n.) கப்பலின் நங்கூரத் தொடரியில் பிணைக்கப் பட்டுள்ள மிதப்பு; moorings.

*[நங்கூரம் + மிதப்பு.]*

கப்பலின் நங்கூரச்சங்கிலியும் மிதவையும் பிகைக்குமிடம்.

**நங்கூரவடம்** *nańgūra-vaḍam*, பெ. (n.) நங்கூரத்தையும், கலத்தையும் இணைக்கும் வடம்; bridle.

*[நங்கூரம் + வடம்.]*

**நங்கூரவாடகை** *nańgūra-vāḍagai*, பெ. (n.) நங்கூரக்கூலி; fees for anchoring.

*[நங்கூரம் + வாடகை.]*

*[வாழ் + தகை = வாடகை.]*

**நங்கூரவாடை** *nańgūra - vāḍai*, பெ. (n.) நங்கூரம் இடத்தக்க இடம் (வின்.); anchorage.

**நங்கெந்தம்** *nańgendam*, பெ. (n.) அரிதாரம்; orpiment.

மறுவ. தாளகம்.

**நங்கெந்தாகம்** *nańgendāgam*, பெ. (n.) (சங்.அக.) *நங்கெந்தம்* பார்க்க; see *nańgendam.*

**நங்கை[1]** *nańgai*, பெ. (n.) **1.** பெண்ணிற் சிறந்தாள் (சூடா.); lady, woman of quality or distinction. "*நங்கா யெழுந்திராய்*" (திவ்.திருப்பா.14). **2.** மகன் மனைவி; son's wife. "*என்னுட னங்கையீங் கிருக்கெனத் தொழுது*" (சிலப்.16;14.). **3.** அண்ணன் மனைவி; elder brother's wife. **4.** பெண் பாலைக்குறிக்க அஃறிணைப் பெயரோடு சேர்க்கப்படுஞ் சொல்; a word added to akiṇai nouns to denote feminine gender '*பசு நங்கை வந்தது*' (நன்.392,மயிலை.).

ம. நங்ங.

*[நம் + கை.]*

ஒ.நோ. தம் + கை = தங்கை.

பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை, அரிவை, தெரிவை, பேரிளம் பெண் என்னும் ஏழுபருவமகளிர் வரிசையில் வாராவிடினும், திருமணப் பருவப் பெண்ணைக்குறிக்கும் சொல்லாட்சியாக, இது வழங்கி வருகிறது.

**நங்கை[2]** *nańgai*, பெ. (n.) பெண்களுக்குப் பால்சுரக்கச் செய்வதாகக் கருதப்படும் செடிவகை; species of milk-wort.

ம. நங்ங.

நங்கை நான்கு வகைப்படும் என்று, சா.அக. கூறும்.

1. பெரியாணங்கை = பெரியாள் + நங்கை.
2. சிறியாணங்கை = சிறியாள் + நங்கை.
3. வனநங்கை = வனம் + நங்கை.
4. வேப்பிலை நங்கை = வேம்பு → வேப்பு + இலை + நங்கை.

**நங்கைநாச்சி** *nańgai-nācci,* பெ. (n.) தலைவி (வின்.); lady of distinction.

*[நங்கை + நாய்ச்சி → நாச்சி.]*

**நங்கைநீர்** *nańgai-nīr,* பெ. (n.) **1.** மாதவிடாய் நீர்; menstrual blood. **2.** பெண்கழிவுநீர்; female urine. **3.** சுரப்பு நீர்; ovarian secretion in woman.

*[நங்கை + நீர்.]*

**நங்கைமரம்** *nańgai-maram,* பெ. (n) புங்கமரம்; poonga oil tree, Indian beech tree.

*[நங்கை + மரம்.]*

**நங்கையர்** *nańgaiyar,* பெ. (n.) நடை, உடை, தோற்றம் போன்றவற்றில், நேர்த்தியாகத் திகழும் மங்கையர்; அழகு நிலையங்களுக்குச் செல்லும் நகர நங்கையர் (இ.வ.); charming young lady.

*[நங்கை + அர்.]*

**நங்கையார்**[1] *nańgaiyār,* பெ. (n.) அம்மையார்; madam

மறுவ. அம்மணி.

*[நங்கை + அர் → ஆர். பெண்ணிற் சிறந்தாளைக் குறிக்கும் சொல். "ஆர்" மதிப்புரவு விளி.]*

**நங்கையார்**[2] *nańgaiyār,* பெ. (n.) அண்ணியார்; elder brother's wife.

*[நங்கை + ஆர் .]*

**நச்சம்பச்சை** *naccam-paccai,* பெ. (n.) பச்சை நாவி;; aconite root.

*[நச்சம் + பச்சை .]*

**நச்சம்பு** *naccambu,* பெ. (n.) நுனியில் நஞ்சு தோய்க்கப்பட்ட அம்பு (சங். அக.); poisoned arrow.

*[நஞ்சு + அம்பு → நச்சம்பு.]*

**நச்சர்** *naccar,* பெ. (n.) திருக்குறள் உரையாசிரியருள் ஒருவர்; a commentator on Tirukkuṟaḷ. *"தருமர், மணக்குடவர் தாமத்தர் நச்சர்"* (தொண்டை.சத.40,மேற்.).

[நசை → நச்சு + அர்.]

நச்சினார்க்கினியரின் குறுக்கம் என்று, சிலர் கூறுவர். ஆனால், இவர் நச்சினார்க்கினியர் என்பதற்குப் போதிய சான்றுகள் இல்லை. நச்சினார்க்கினியர் சிறப்புப் பாயிரத்தில், திருக்குறளுக்கு உரை இயற்றியதாய்க் குறிப்பேதும் இல்லை. ஆதலின் இந் நச்சர், நச்சினார்க்கினியரின் வேறானவர்.

**நச்சரவு** *naccaravu,* பெ. (n.). நஞ்சுள்ள பாம்பு; Poisonous Snake.

*[நஞ்சு → நச்சு + அரவு.]*

**நச்சரி** *naccari,* பெ. (n.) நச்சுப்பொருள் சார்ந்த கரணியங்களினால், உடம்பிலுண்டாகும் ஒரு நமைச்சல்; itching through poisionous effects.

*[நச்சு + அரி.]*

நாம் உண்ணும் உணவிலும், பருகும் நீரிலும், சுற்றுப்புறச்சூழலில் கலந்துள்ள நச்சுயிரி (நோய் நுண்மங்கள்) களால் உண்டாகும் நமைச்சல்.

**நச்சரி—த்தல்** *naccari-,* 4. செ.கு.வி. (v.i.) ஒருவரிடம் ஒன்றை வேண்டி, எரிச்சலைத் தரும் வகையில் தொடர்ந்து கேட்டல் அல்லது வற்புறுத்துதல்; pester. பணம் கேட்டு நச்சரிக்கின்றான் (உ.வ.).

*[நச்சு → நச்சரி–.]*

நச்சுதல்=விரும்புதல்.

**நச்சரிப்பு** *naccarippu,* பெ. (n.) வெறுப்புண்டாகும் வண்ணம் அலப்பி அல்லது பிதற்றிப் பேசுகை; chattering babbling.

**மறுவ.** தொணதொணப்பு.

**நச்சவரை** *naccavarai,* பெ. (n.) நகரவியக்கி (சா.அக.); a thorny sensitive plant

**மறுவ.** புலித்தொடக், இரண்டு.

*[நச்சு + அவரை.]*

**நச்சறுப்பாய்ஞ்சான்** *naccaṟu-p-pāyñjāṉ,* பெ. (n.) *நஞ்சறுப்பான்* (வின்.)பார்க்க; see *nañjaṟuppāṉ.*

*[நச்சு+ அறுப்பு + அன். நஞ்சு + அறு + பாய்ந்தான் → நச்சறுப்பாய்ஞ்சான்.]*

*[நச்சு + அறுப்பு + ஆய்ந்தான் → ஆய்ஞ்சான்]* என்றும், பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

**நச்சறுப்பான்** *naccaṟuppāṉ,* பெ. (n) கழுதைப்பாலை (சா.அக.); common Indian ipecacuanha

*[நஞ்சுக்கொடி → நச்சு + அறுப்பான்.]*

**ஒருகா.** *[நஞ்சறுப்பான் → நச்சறுப்பான்.]*

*கழுதைப்பாலைக் கொடி என்றழைக்கப்படும் நஞ்சறுப்பான் சாறு, அனைத்து வகையான தோல்நோய்கட்கும், கைகண்ட மருந்து என்று, சா.அக. கூறும்.*

**நச்சறை** *naccaṟai,* பெ. (n) நஞ்சுக்கிருப்பிடம்; a store house of poison. "*காமநாளினு நஞ்சுதுய்த்தே னச்சறையாக*" (சீவக.2882.).

*[நஞ்சு + அறை = நஞ்சறை → நச்சறை.]*

**நச்சாம்பல்** *naccāmbal,* பெ. (n.) நச்சுத்தன்மையுடைய ஒருவகை ஆம்பல்; a poisonous species of Indian water lily

*[நச்சு + ஆம்பல். நஞ்சு → நச்சு +ஆம்பல்.]*

**நச்சி** *nacci,* பெ. (n.) வீணாகப் பேசித் துன்புறுத்துபவள் (வின்.) gossiping woman. நச்சியாய் இருந்து நாசமாய்ப் போகாதே(இ.வ.).

*[நசு → நச்சு + இ.]*

'இ' சொல்லாக்க ஈறு.

**நச்சிருமல்** *naccirumal,* பெ. (n) 1. சிணுக்கிருமல்; slight cough. 2. அடிக்கடி ஏற்படும் மெல்லிய இருமல்; a short feeble and frequent cough-Hacking cough

*[நச்சு + இருமல்; நச்சு = சிறிய.]*

**நச்சிலக்கியம்** *naccilakkiyam,* பெ. (n.) பணம் பெறுவதையே குறிக்கோளாகக் கொண்டு, மக்களின் உணர்வுகளைக் கீழ்த்தரமாகத் தூண்டும் வகையில், எழுதப்படும் நூல்; pulp literature.

*[நச்சு + இலக்கியம்.]*

**நச்சிலை** *naccilai,* பெ. (n.) **1.** நாய்ப்பாலை; dog paulay. **2.** ***நச்சறுப்பான்*** பார்க்க; see *naccaṟuppāṉ.* **3.** நஞ்சுத்தன்மையுடைய இலை; poisonous leaf.

*[நச்சு + இலை.]*

**நச்சிலைக்கூமா** *naccilai-k-kūmā,* பெ. (n.) பச்சிலை மருந்து வகையு ளொன்று; a kind of herbal medicine.

**நச்சிலைக்கூரிகம்** *naccilai-k-kūrigam,* பெ. (n.) எருக்கிலை; madar leaf -calotropis gigantia.



**நச்சிலைவேல்** *nacilai-vēl,* பெ. (n.) நஞ்சூட்டியவேல்; poisonous spear. "*நச்சிலைவேற் கோக்கோதை நாடு*" (முத்தொள்.110.).

*[நஞ்சு →நச்சு + இலை + வேல்.]*

**நச்சிளி** *naciḷi,* பெ. (n.) ***நச்சினி.1*** (சங்.அக.) பார்க்க; see *nacciṉi.1*

*[நச்சினி→ நச்சிளி.]*

**நச்சினார்க்கினியம்** *nacciṉārkkiṉiyam,* பெ. (n.) தொல்காப்பியத்திற்கு நச்சினார்க்கினியர் இயற்றியவுரை; a commentary on Tolkāppiyam by Nacciṉārkkiṉiyar. "*விருத்தி நச்சினார்க்கினியமே*" (தனிப்பாடல். பத்துப் பாட்டு பக். 30.).

*[நச்சினார்க்கினியர் → நச்சினார்க்கினியம் நச்சினார்க்கு + இனியம் = விரும் பினோர்க்கு இனியது என்பது பொருள்.]*

**நச்சினார்க்கினியர்** *nacciṉārkkiṉiyar,* பெ. (n.) தொல்காப்பியம், பத்துப்பாட்டு, கலித்தொகை, சீவகசிந்தமாணி போன்ற நூல்களுக்கு உரையெழுதியவர்; author of commentaries on Tolkāppiyam, kalittogai, pattu-pāṭṭu, Šīvaga šintāmaṇi and other ancient classics.

*[நச்சினார்க்கு + இனியர் = விரும்பி னோர்க்கு இனியர்.]*

உச்சிமேற்புலவர்கொள் நச்சினார்க்கினியர் என்று, உரையாசிரியர்களால் சிறப்பிக்கப்பட்ட இவர்தம் உரைப்பாங்கு, பற்பலவிடங்களில் சிவனியக்கோட்பாடு மிளிரும் தன்மையில் அமைந்துள்ளது. இவர். குறுந்தொகையில் 20 பாடல்களுக்கும், பத்துப்பாட்டில் அமைந்துள்ள பத்துநூல்களுக்கும், கலித் தொகைக்கும், சீவகசிந்தாமணிக்கும், தொல் காப்பியத்தில் எழுத்து, சொல் ஆகிய இருஅதிகாரங்களுக்கும், கொண்டு கூட்டுப் பொருள்கோள் உத்தியினைக் கையாண்டு, உரை வரைந்துள்ளார். இவ் வுரை, பற்பலவிடத்தில் சிறப்புரையாகத் திகழ்ந்தாலும், சிற்சிலவிடத்தில் வடமொழி மரபில் அமைந்துள்ளது.

அந்தத்தை அணவுவோரே, அந்தணர் என்று உரை வரைந்துள்ளமை, பொருட் பொருத்தப்பாடாகத் தோன்றவில்லை. அந்தணர் என்போர் அறவோர்; அனைவர்மாட்டும் செந்தண்மை பூண்டொழுகும், செம்மாந்த பண்பினரே அந்தணர். எந்தவொரு இனத்தாருக்கும், அந்தணர் பட்டம் உரியதன்று. "குமுகாயத்தில் செந்தண்மை பூண்டொழுகும் சீரிய பண்பினர் அனைவரும் அந்தணரே" எனும் வள்ளுவர் வாக்கினுக்கு, முரண்பட்டபாங்கினில் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

நச்சினார்க்கினியர், ஆடவல்லான் திரு நடம்பயிலும் திருச்சிற்றம்பலம் (சிதம்பரம்) என்றழைக்கப்படும், 'பெரும்பற்றப்புலியூர்' என்பவற்றை முறையே, "ஆறெழுத்தொரு மொழிக்கும்" "ஏழெழுத்தொரு மொழிக்கும்" எடுத்துக்காட்டாகத், தொல்காப்பியம் எழுத்திகாரத்துமொழிமரபில், "ஓரெழுத்தொருமொழி" என்னும் நூற்பாவின் சிறப்புரையில் எடுத்துக் காட்டி, விளக்கியுள்ள பான்மை, யாவரும் வியக்கத்தக்க வண்ணம் அமைந்துள்ளது. வன்னெஞ்சைத் துளிர்ப்பிக்கும் மணிவாசகனாரின் திருவாசகம், திருச்சிற்றம் பலக்கோவை என்பவற்றினின்று, தமது உரைகளில், பலவிடங்களில் இலக்கிய, இலக்கணப் பொருள்களுக்கன்றித் தத்துவப்பொருளுக்கும், மேற்கோள்களாக எடுத்துக் காட்டியுள்ள பாங்கு குறிப்பிடத்தக்கது.

திருத்தக்கத் தேவரின் சீவகசிந்தாமணியில், பற்பலபாடல்களுக்குச் சிறப்புரை செய்துள்ளார். "மேகம்மீன்ற" என்று தொடங்கும் 333-ஆம் பாடலில் பயின்று வரும், "போகமீன்ற புண்ணியன்" என்னும் சொற்களுக்குக் கூறியுள்ள சிறப்புரை, சீர்த்திமிக்கது.

தொல்காப்பியவுரை முதலியவற்றில், வேதம், வேதாங்கம் முதலிய பலநூல்களிலிருந்தும், பல உரைகளிலிருந்தும், பற்பல அரிய கருத்துக்களை, தமக்கேயுரித்தான கொண்டு கூட்டுப் பொருள்கோள் அமைப்பில், உரைவரைந்துள்ளார்.

உரையாசிரியர், சேனாவரையர், பேராசிரியர் ஆளவந்தபிள்ளையாசிரியர் முதலானோர் பற்றிய குறிப்பு, இவர்தம் உரையில் காணப்படுவதால், ஏனைய உரையாசிரியர்களைவிட காலத்தால் பிற்பட்டவர் என்பது வெள்ளிடைமலை.

பரிமேலழகரும், இவரும் சமகாலத்தவர் என்பர். (எ.டு.) "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே உடம்பொடு உயிரிடை நட்பு" என்னுங்குறளில், குடம்பை என்பதற்கு ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'கூண்டு' எனவும், ஆசிரியர் பரிமேலழகர் முட்டையெனவும் கூறியதாகவும், பரிமேலழகரது உரைகேட்ட நச்சினார்க்கினியர், பரிமேலழகர் உரையைப் பலவாறு பாராட்டிப் புகழ்ந்ததாகவும் கூறுவர்.

**நச்சினி** *naccini*, பெ. (n.) *கேழ்வரகு* (மலை.) பார்க்க; see *kēḻvaragu*. **2.** நான்காம் திங்கள் எனப் பொருள் கொண்ட மருத்துவக் குழூஉக்குறி (சங்.அக.); fourth month, a slang of physicians.

**நச்சினியட்டிக்கை** *nacciniyaṭṭikkai*, பெ. (n.) **1.** புல்வகை; a kind of grass, as synodon gracilicus, Synodon virgalus; (A); a species of millet, Cynosurus retroflex.

*[நச்சினி + அட்டிகை.]*

**நச்சு¹-தல்** *naccu-*, 5 செ.குன்றா.வி. (v.t) விரும்புதல்; to desire, long for, like, love *"ஒருவரா னச்சப்படாஅ தவன்"* (குறள், 1004.). "ஞாலமே கரியாக நானுனை நச்சி நச்சிட வந்திடும்" (திருவாச.30:19.).

**தெ., க.,** நச்சு, நர்சு. **கோத.** நச்.

[ (நுல்) → நல் → நள் → நய் → நய → நச.

*நச → நசு → நச்சு- .]*

'நுல்' எனும் பொருந்துதற்கருத்து வேரினின்று கிளைத்த சொல். நச்சுதல் என்பது யாதெனின், ஒத்த கருத்துடையோர் நட்புச் செலுத்துதல், விரும்புதல் எனும் பொருண்மையில் பொருந்திவரும். பொருந்துதற் கருத்தினின்று, விருப்பக்கருத்து தோன்றும். ஒருவரையொருவர், உள்ளநிலையிலும், உணர்வு நிலையிலும், நெடுங்காலம் பொருந்தி, நட்புச் செய்து, ஆராஅன்பில் திளைத்து மாறாக் காதலராக மாறுவர்.

**நச்சு²-தல்** *naccu-*, 5 செ.கு.வி. (v.i) அலப்புதல்; to babble, prate எப்போதும் நச்சிக் கொண்டிருக்கிறான்(உ.வ.).

**தெ.** நசுகு. **க.** நக்த.

[நசு → நச்சு.]

வீணாகப் பிதற்றுதல். பயனற்ற சொற்களையே, பலகாலும் பேசுதல்; பொருத்தமற்ற சொற்களை, பொருத்தமற்ற இடத்திற் பேசி, உளறுதல். முன்னுக்குப்பின் தொடர்பற்ற முறையில் பேசுதலும், நச்சுதலே. இந் நிலையில் பிறரைப் புண்படுத்தும் நோதற்கருத்துச் சொற்களுள் ஒன்றாகத் தேநேயர் வகைப்படுத்துகிறார்.

**நச்சு³—தல்** *naccu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. துன்பம் செய்தல்; தொல்லைப் படுத்துதல்; to tease. 2. எரிச்சலூட்டுதல்; to vex 3. கவலையூட்டுதல்; to trouble. எப்போதும் என்னை நச்சாதே (உ.வ.).

**தெ,** நட்ச்சு.

*[நசு + நச்சு—.]*

இஃதும், நோதற்கருத்துச்சொல்லாகும்.

பிறர்தம் உள்ளத்தை அலைக்கழித்தல்; மாற்றார்தம் மனத்தைக் கலக்கிக் கவலைப் படுத்துதல், எனும் கருத்தில், இச்சொல் வழக்கூன்றியுள்ளது.

(எ.டு) "என்னை நச்சித் துன்பம் தராவிட்டால் அவனுக்குத் தூக்கம் வராது". (உ.வ.).

**நச்சு⁴** *naccu,* பெ. (n.) 1. ஆசை (சூடா.); desire, hankering, liking. 2. விரும்பப்படும் பொருள்; desired object. *"பொருளுரையாளர் நச்சுக் கொன்றேற்கு"* (சிலப். 16: 66.).

**தெ.,** க, நச்சு.

*[நசை → நச்சு.]*

நீண்டநாள் விருப்பத்தின் விளைவாக ஏற்படும் ஆசை. ஆராக்காதலால் ஏற்படும் நசையும், நயப்பும், பொருந்துதற் கருத்தின் வெளிப்பாடே என்றறிக.

**நச்சு⁵** *naccu,* பெ. (n.) 1. துன்பம், தொல்லை (இ.வ.); trouble, worry. 2. அலப்பல்; babble. *"நச்சுப்பிடித்தவன்"* (வின்.). 3. காலக்கழிவு; delay, procrastination. வேலையில் நச்சாயிருக்கக் கூடாது (உ.வ.).

**மறுவ.** நெடுநீர்மை.

*[நசு → நச்சு.]*

**நச்சு⁶** *naccu,* பெ.எ. (adj.) சிறிய (வின்.); little, small.

**தெ.** நட்ச்சு. நசுகு.

*[நசி → நச்சு.]*

**நச்சுக்கண்** *naccu-k-kaṇ,* பெ.(n) கொடும்பார்வை (வின்.); the evil eye.

**மறுவ.** தீக்கண்.

**தெ.** நட்ச்சு.

*[நஞ்சு → நச்சு + கண்.]*

**நச்சுக்கத்தி** *naccu-k-katti,* பெ. (n.) நஞ்சூட்டிய கத்தி (வின்.); poisoned knife. 2. மிகக் கெட்டவன்—ள்; wicked person

*[நஞ்சு → நச்சு + கத்தி.]*

**நச்சுக்காய்ச்சல்** *naccu-k-kāyccal,* பெ. (n) நஞ்சுச் சுரம்; severe fever *'முறைக்காய்ச்சல் என்பது நச்சுகாய்ச்சல் வகையினது'* (உ.வ.).

*[நஞ்சு → நச்சு + காய்ச்சல்.]*

**நச்சுக்காளான்** *naccu-k-kāḷāṉ,* பெ. (n.) *நஞ்சுக்காளான்* பார்க்க; see *nañju-k-kāḷāṉ.*

[நஞ்சு → நச்சு + காளான்.]

இக் காளானை உண்டவர் உயிரிழப்பர் என்பதைப் பெயரினாலேயே அறியலாம்.



**நச்சுக்காற்று** *naccu-k-kāṟṟu,* பெ. (n.) 1. நச்சுக்காற்று; unhealthy wind. 2. மாசுள்ள காற்று; noxious air.

*[ நச்சு + காற்று. ]*

நச்சுத்தன்மையுள்ள காற்று. புகை நமக்குப்பகை என்னும் தொடர்ப்பொருளை, இச் சொல் உணர்த்தும்.

**நச்சுக்குருவி** *naccu-k-kuruvi,* பெ. (n.) தீயோன் (இ.வ.); bad fellow.

*[நச்சு + குருவி.]*

*உவமையாகுபெயர்.*

**நச்சுக்குழல்**[1] *naccu-k-kuḻal,* பெ. (n.) பெரியகுழல்; long - tube.

*[நச்சு + குழல்.]*

**நச்சுக்குழல்**[2] *naccu-k-kuḻal,* பெ. (n.) 1. *சுங்குத்தான் குழல்* பார்க்க; see *śuṅguttāṉ kuḻal.* 2. *தொலைநோக்கிக் கண்ணாடி* பார்க்க; see *tolai-nōkki-k-kaṇṇāḍi.*

*[நஞ்சு → நச்சு + குழல்.]*

**நச்சுக்கொட்டை** *naccu-k-koṭṭai,* பெ. (n.) 1. இலச்சை கெட்டமரம்; lettuce tree. 2. எட்டிக்கொட்டை; nuxvomica nut.

*[நஞ்சு → நச்சு + கொட்டை.]*

**நச்சுக்கொட்டையிலை** *naccu-k-koṭṭai-y-ılai,* பெ. (n.) உடம்பிலுண்டாகும் வளித் தொல்லையைப் போக்கும் கீரை; a kind of edible leaf eaten for curing the morbid wind, in the system.

*[நச்சுக்கொட்டை + இலை.]*

**நச்சுக்கொடி** *naccu-k-koḍi,* பெ. (n ) *நஞ்சுக் கொடி.* (வின்.) பார்க்க; see *nañju-k-koḍi.*

*[நஞ்சு → நச்சு + கொடி.]*

**நச்சுக்கொடிச்சுண்ணம்** *naccu-k-koḍi-c-cuṇṇam,* பெ. (n.) நஞ்சுக் கொடியால் செய்யப்பட்டதும், நச்சு வயிற்றுப் போக்கு நீங்கக் கொடுப்பதுமாகிய சூரணம் (வின்.); a medicinal powder prepared from the after-birth, used in cholera.

*[நஞ்சுக் கொடி + சுண்ணம்; நஞ்சுக் கொடிச் சுண்ணம் → நச்சுக் கொடிச் சுண்ணம்.]*

**நச்சுக்கொடுக்கு** *naccu-k-koḍukku,* பெ. (n.) தேளின் கொட்டும் உறுப்பு முனை; sting of scorpion.

*[நஞ்சு → நச்சு + கொடுக்கு.]*



**நச்சுக்கௌளி** *naccu-k-kauḷi,* பெ. (n.) *நஞ்சுப் பல்லி.* 2. (நாஞ்.) பார்க்க; see *nañju-p-palli.*

*[நஞ்சு + கௌளி → நச்சுக்கௌளி. கௌளி = கவ்வு + உளி.]*

**நச்சுகை** *naccugai,* பெ. (பெ.) எப்பொழுதும் மடந்தையர்பால், இணைவிழைச்சில், நாட்டங்கொள்ளுகை; growing lust

*[நச்சு → நச்சுகை.]*

**நச்சுச்சொல்** *naccu-c-col,* பெ. (n.) 1. செய்யுளில் வழங்கக்கூடாத தீச்சொல்; inauspicious words to be avoided in a poetic composition. 2. கொடுஞ்சொல்; malicious language.

*[நஞ்சு + சொல் = நஞ்சுச்சொல் → நச்சுச்சொல்]*

**நச்சுத்தடைமலக்குழி** *naccu-t-taḍai mala-k-kuḻi,* பெ. (n) திடக்கழிவுப் பொருட்களை மட்கும்படி செய்வதற்கான ஓர் அமைப்பு; septic tank.

மறுவ : அழுகுதொட்டி.

*[நஞ்சு + தடை + மலம் + குழி.]*

**நச்சுத்தலை** *naccu-t-talai.* பெ. (n.) 1. பாம்பின் தலை; head of a serpent containing poison 2. *நச்சுத்தலைவலி* பார்க்க: see *naccu-t-talai vali.*

*[நஞ்சு → நச்சு + தலை.]*



**நச்சுத்தலைவலி** *naccu-t-talaivali,* பெ. (n) 1. அடிக்கடி உண்டாகும் மெல்லிய தலைவலி; slight head-ache, coming frequently. 2. நச்சுத்தன்மையினால் உண்டாகும் தலைவலி; head-ache due to systemic poisoning, Toxic head - ache

*[நஞ்சு → நச்சு + தலைவலி.]*

**நச்சுத்தானம்**[1] *naccu-t-tāṉam,* பெ. (n) சிற்சில காலங்களில் ஆடவர் தொட, மகளிர்க்கு வெறுப்புண்டாக்கும் உடலுறுப்பு (கொக்கோ.) (சங்.அக.); parts of a women's body which, if touched by men on certain days are supposed to excite a feeling of disgust

*[நஞ்சு + தானம்.]*

**நச்சுத்தானம்**[2] *naccu-t-tāṉam,* பெ. (n.) கொக்கோக நூலின்படி பெண்களுடம்பில் அமைந்திருக்கும் அமுத நிலைக் கேழாமிடம்; certain parts of the female body, which if touched by men as per rules laid down in the erotic science of kokkugha muṉi are supposed to produce disgust.

**நச்சுத்திரல்** *naccuttiral*, பெ. (n.) நச்சுத்தன்மை உண்டாக்கல்; a general intoxication due to the presence of poison is the system.

*[நச்சு + திரல்.]*

**நச்சுநச்செனல்** *naccu-naccenal*, பெ. (n.) **1.** தொந்தரவு செய்தற் குறிப்பு; importuning, teasing, troubling. **2.** ஓசையிடுதற் குறிப்பு; smacking, as the lips, tapping, as with the fingers. **3.** அடுத்தடுத்துப் பல்லி சொல்லுதற் குறிப்பு (பே.வ.); chirping of the lizard.

*[நச்சு + நச்சு + எனல்.]*

**நச்சுநா** *naccu-nā*, பெ. (n.) கொடிய சொற்களைப் பேசும் நாக்கு; dangerous tongue.

*[நஞ்சு → நச்சு + நா.]*

**நச்சுநீர்** *naccu-nīr*, பெ. (n.) **1.** நஞ்சுத் தன்மையுள்ள நீர்; poisonous liquid. **2.** கெட்ட நீர்; unpure or morbid liquid

**மறுவ.** தீயநீர்.

*[நச்சு + நீர்.]*

**நச்சுப்படைக்கலம்** *naccu-p-paḍai-k-kalam*, பெ. (n.) நஞ்சு தோய்க்கப்பட்ட படைக்கலம் (வின்.); poisoned weapon.

*[நஞ்சு → நச்சு + படைக்கலம்.]*

**நச்சுப்பண்டம்** *naccu-p-paṇḍam*, பெ. (n.) கேடு விளைவிக்கக் கூடிய நுண்ணுயிரியால் (பாக்டீரியாவால்) கெட்டுப்போன உணவுப் பொருள்கள்; poisonous eatable items. 'நச்சுப்பண்டம் உடல் நலத்தைக் கெடுக்கும். (உ.வ.).

*[நஞ்சு → நச்சு + பண்டம்.]*

**நச்சுப்பதார்த்தம்** *naccu-p-padārttam*. பெ. (n) ஈயம், சாறு, நஞ்சு போன்ற தீய தன்மையுடைய பொருள்கள்; poisonous substances such as lead, mercury arsenic etc.

*[நச்சு + Skt பதார்த்தம்.]*

**நச்சுப்பல்** *naccu-p-pal*. பெ. (n.) **1.** காளி, காளாத்திரி, யமன், யமதூதி என்னும் பாம்பின் நச்சுப்பற்கள் (சீவக. **1288**, உரை.); poisonous fangs of a serpent, four in number, viz., kāḷi, kāḷāttiri, yamaṉ, yamatūdi **2.** தீப்பயன் விளைக்கும் பல் (உ.வ.); venomous tooth, as of one whose imprecations are believed to take effect.

*[நஞ்சு → நச்சு + பல்.]*

**நச்சுப்பல்லன்** *naccu-p-pallaṉ*, பெ. (n.) கொடிய சொல்லுடையோன்; one whose words are illomened or venomous. அவன் நச்சுப்பல்லில் விழாதே (உ.வ.); நாத்தப் பல்லனை நாடினாலும் நச்சுப்பல்லனை நாடாதே (பழ.).

**மறுவ.** கொடும்பல்லன், தீவாயன்.

*[நச்சு + பல்லன்.]*

பிறரைப் புண்படுத்தும் தீயசொற்களைப் பலுக்கும் இயல்பினன். கொடுஞ் சொற்களாலேயே, இன்னல்தரும் தன்மையன். "அவன் நச்சுப்பல்லில் விழுந்து வீணாகக் கெட்டழியதே". நச்சுப்பல்லன் வீட்டிற்கு நல்லவன் போக மாட்டான் (உ.வ.). போன்ற உலகவழக்குகள், இன்றும் நாட்டுப்புறத்தே வழங்குகின்றன. நஞ்சு உடலுக்குத் தீங்கு பயத்தல் போல், கொடுமையாளர்தம் நச்சுப்பற்களினின்று வெளிப்படுஞ் சொற்கள், மனவுணர்வை மாசுபடுத்துவன.

**நச்சுப்பல்லி[1]** *naccu-p-palli,* பெ. (n) செய்வினையில் (பில்லி சூனியத்தில்) பயன்படுத்துதற்குரிய எச்சத்தை யிடுவதும், புள்ளி கொண்டதுமான பல்லி வகை (வின்.); a spotted wall-lizard whose excrement is used in witchcraft 2. தீப்பயனைக் குறிப்பதாகக் கருதப்படும் பல்லிச்சத்தம்; the chrip of a lizard which is supposed to prognosticate evil 3. தீப்பயனை விளைப்பதாகக் கருதப்படும் சொல்லுள்ளவள்; a woman's having an evil tongue

*[நச்சு + பல்லி. புல்லி→ பல்லி.]*

**நச்சுப்பல்லி[2]** *naccu-p-palli,* பெ. (n.) *நச்செலி[2]* பார்க்க; see *nacceli[2].*

*[நஞ்சு + பல் + இ.]*

*பல்லில் நஞ்சுத் தன்மையுள்ள எலி.*

*"இ" சொல்லாக்க ஈறு.*

**நச்சுப்பாம்பு** *naccu-p-pāmbu,* பெ. (n.) நஞ்சு மிகுதியாகக் கொண்ட பாம்பு; poisonous snakes.

*[நஞ்சு → நச்சு + பாம்பு.]*

நஞ்சினை மிகுதியாகக் கொண்டதும், தீண்டியவுடன் உயிரைப் போக்குவதுமான, நல்லபாம்பு, கட்டுவிரியன், கண்ணாடிவிரியன் போன்ற நச்சுப்பாம்புகள்.

சாம்பசிவ மருத்துவ அகரமுதலியில், 64–வகை நச்சுப்பாம்புகள் குறிக்கப்பட்டுள்ளன. அவை வருமாறு.

1. ஆடுபாம்பு = 8 வகை.
2. நச்சுப்பல்பாம்பு = 6 வகை.
3. கண்ணாடிவிரியன் = 4 வகை.
4. புடையன்பாம்பு = 6 வகை.
5. சாரைப்பாம்பு = 3 வகை.
6. சுருட்டைப்பாம்பு = 4 வகை.
7. கூழைப்பாம்பு = 2 வகை.
8. கொம்பேறிமூக்கன் = 2 வகை.
9. சாணாகமூக்கன் = 2 வகை.
10. வழலைப்பாம்பு = 6 வகை.
11. தண்ணீர்ப்பாம்பு = 6 வகை.
12. பச்சைப்பாம்பு (அல்லது) கண்குத்திப்பாம்பு = 2 வகை.
13. இருதலைமணியன் = 1.
14. மலைப்பாம்பு = 5 வகை.
15. பூநாகம் = 1.
16. மண்ணுளிப்பாம்பு = 6 வகை.

**நச்சுப்பார்வை** *naccu-p-pārvai,* பெ. (n.) 1. காமப் பார்வை (யாழ்ப்.); amorous looks. 2. கண்ணூறு (வின்.); evil - look 3. சினப்பார்வை (வின்.); angry -look. 4. கொடிய பார்வை; harsh look.

*[நச்சு + பார்வை.]*

**நச்சுப்பால்** *naccu-p-pāl,* பெ. (n) 1. சீழ்ப்பால் (சா.அசக); the first milk drawn from a cow after calving 2. கள்ளிப்பால்; the milky juice of Indian spurge 3. நஞ்சு கலந்தபால்; milk mixed with poison 4. குழந்தைகட்கு இணங்காத பால்; milk not suited to children 5. சீம்பால்; beestings (செ.அக.).

*[நஞ்சு → நச்சு + பால்.]*

நஞ்சுத் தன்மை கலந்த, சீழ்ப்பால், கள்ளிப்பால் முதலானவை, குழந்தைகட்கு ஒவ்வாத பால்வகைகள்.

**நச்சுப்பாலை** *naccu-p-pālai,* பெ. (n.) நஞ்சுத்தன்மையுள்ள மருந்திலை; a kind of poisonous medicinal plant.

*[நச்சு + பாலை.]*

**நச்சுப்பிச்சு** *naccu-p-piccu,* பெ. (n.) 1. ஓயாத் தொல்லை (இ.வ.); ceaseless trouble. 2. அலப்புகை; incessant chattering.

*[நச்சு + பிச்சு.]*

**நச்சுப்புகை** *naccu-p-pugai,* பெ. (n.) சில பொருள்களை எரிப்பதாலுண்டாகும் நச்சுப்புகை; poisonous smoke.

*[நஞ்சு → நச்சு + புகை.]*

**நச்சுப்புல்** *naccu-p-pul,* பெ. (n.) உண்டவர்க்கு நோய் விளைவிக்கும் புல்; a kind of poisonous grass, causing sickness when eaten *"பிறர்க்குப் பிணியை வருவிக்கும் நச்சுப்புல்லோடு ஒப்பர்"* (நான்மணி. 13, உரை). 2. சிவப்புநிறமுள்ள நச்சுப்புல்; a red variety of poisonous grass.

*[நஞ்சு → நச்சு + புல்.]*

**நச்சுப்பூடு** *naccu-p-pūḍu,* பெ. (n.) நஞ்சுத்தன்மையுள்ள மூலிகை; a poisonous variety of plant.

*[நஞ்சு → நச்சு + பூண்டு → பூடு = கொடும் நச்சுத் தன்மையுள்ள செடி.]*

**நச்சுப்பெண்** *naccu-p-peṇ,* பெ. (n) 1. ஆண்களைக் கட்டித் தழுவி, தன் உடம்பில் ஏறியுள்ள நஞ்சு, அவனுக்கும் பரவும்படி செய்யும் பெண்; a woman who is trained by feeding her with poisonous food, until her embrace is rendered sufficient to poison the system of any ordinary man 2. கொடுஞ் சொல்லுடையோள்; a woman with harsh words.

*[நஞ்சு → நச்சு + பெண்→ நச்சுப்பெண். = கொடிய நஞ்சினையுமிழும் தீநாக்குடைய பாம்பு போல், நச்சுத் தன்மையை நெஞ்சில் கொண்டவள்.]*

**நச்சுப்பொடி**[1] *naccu-p-poḍi,* பெ. (n.) 1. நஞ்சு கலந்த தூள்; a powder containing the essence of poison 2. சொக்குப்பொடி; a narcotic powder inducing giddiness of sleep

*[நஞ்சு → நச்சு + பொடி.]*

மயக்கத்தையும், உறக்கத்தையும் உருவாக்கும், நஞ்சுப்பொடி.

**நச்சுப்பொடி**[2] *naccu-p-poḍi,* பெ. (n.) சிறுமீன் (வின்.) small fish

*[நஞ்சு → நச்சு + பொடி. பொடி = மிகச்சிறிய.]*

**நச்சுப்பொய்கை** *naccu-p-poygai,* பெ. (n.) நஞ்சுநீர் நிறைந்த நீர்நிலை; a tank of poisonous water "நச்சுப்பொய்கைச் சருக்கம்" (பாரத.).

*[நஞ்சு → நச்சு + பொய்கை.]*

*[பெய்கை → பொய்கை.]*

**நச்சும்பிச்சும்** *naccum-piccum,* பெ. (n.) அற்பச்செயல் (வின்.); insignificant things, trifles.

**மறுவ.** அற்ப சொற்பம்.

*[நச்சுப்பிச்சு → நச்சும்பிச்சும்= மரபிணை மொழி.]*

## நச்சுப் பாம்பு வகைகள்



கண்ணாடி விரியன்



சுருட்டைப் பாம்பு



கட்டுவிரியன்



நல்ல பாம்பு

**நச்சுமண்** *naccu-maṇ,* பெ. (n.) வேதிமப் பொருள்களால் நஞ்சேறியமண்; soil spoiled with excess chemicals.

*[நஞ்சு → நச்சு + மண்.]*

**நச்சுமரம்** *naccu-maram,* பெ. (n.) எட்டி முதலிய நச்சு மரங்கள்; poisonous tree. *"நடுவூரு ணச்சு மரம் பழுத்தற்று"* (குறள், 1008.).

*[நஞ்சு → நச்சு + மரம்.]*

**நச்சுமருந்து** *naccu-marundu,* பெ. (n.) நஞ்சு கலந்த மருந்து; medicine prepared with poisonous drugs.

*[நஞ்சு → நச்சு + மருந்து.]*

**நச்சுமழை** *naccu-maḻai,* பெ. (n.) 1. காலந்தப்பிப் பெய்து கேடு விளைக்கும் மழை; unhealthy or injurious rain, being untimely. 2. தொடர்ந்து பெய்யும் சிறுதூறல்; continuous drizzle.

*[நஞ்சு → நச்சு + மழை.]*

**நச்சுமனார்** *naccumaṉār,* பெ. (n.) கடைச்சங்கப் புலவருள் ஒருவர் (வள்ளுவமா, 45.); a poet of the last Šaṅgam.

இவர் மிகச்சிறந்த இலக்கணப்புலவர் திருக்குறளில் அமைந்துள்ள இலக்கணக் கூறுகளான எழுத்து, சொல், பொருள், யாப்பு அணி முதலான ஐவகைப் பொருண்மையும் நிறைவாகத் திகழும் வண்ணம் திருவள்ளுவமாலையுள் பாடியுள்ள பாடல் வருமாறு:–

"எழுத்(து) அசை சீர்அடி சொற்பொருள் யாப்பு வழுக்கில் வனப்(பு) அணிவண்ணம்–இழுக்(கு) இன்றி என்(று) எவர் செய்தன எல்லாம் இயம்பின இன்(று) இவர் இன் குறள்வெண்பா."

**நச்சுமிழ்நீர்** *naccumiḻ-nīr,* பெ. (n.) நஞ்சுத்தன்மையுடைய வாய் நீர்; saliva containing certain toxius, poisonous saliva-Venomos saliva.

*[நஞ்சு → நச்சு + உமிழ்நீர்.]*

**நச்சுமீன்** *naccu-mīṉ,* பெ. (n.) கேடு விளைவிக்கும் மீன்; poisonous and dangerous fish.

*[நஞ்சு → நச்சு + மீன்.]*



**நச்சுமுள்** *naccu-muḷ,* பெ. (n.) கேடு விளைவிக்கும் முள்; poisonous thorn *சீமைக் கருவேலமரம் நச்சுமுள்ளைக் கொண்டது (உ.வ.).*

*[நஞ்சு → நச்சு + முள்.]*

**நச்சுமுறிவு** *naccu-muṟivu,* பெ. (n.) உடலிலும், உணவிலுமுள்ள நஞ்சுத்தன்மையைப் போக்கும் மருந்து; anti-oxidants.

*[நச்சு + முறிவு.]*

உடம்பிலுள்ள உயிரணுக்கள் சிதைவுறாமலும், நோய் உயிரிகள் நுழையாமலும், காக்கும் மருந்து.

**நச்சுமுறிவுமருந்து** *naccu-murivu-marundu,* பெ. (n.) **1.** இஞ்சி; ginger. **2.** வெங்காயம்; onion. **3.** வெள்ளைப்பூண்டு; garlic. **4.** மஞ்சள்; turmeric. **5.** மிளகு; pepper. **6.** மிளகாய்; chilli. **7.** ஏலக்காய்; cardamom

*[நச்சுமுறிவு + மருந்து.]*

**நச்சுயிரி** *naccuyiri,* பெ. (n.) கேடு விளைவிக்கும் நஞ்சினைக் கொண்ட உயிரி; poisonous beings *நல்லபாம்பு கொடிய நச்சுயிரி* (உ.வ.).

*[நஞ்சு → நச்சு + உயிரி.]*

**நச்சுவலி** *naccu-vali,* பெ. (n) மெல்லுவது போல், உடம்பிற்காணும் குத்தல்; gnawing pain in the body.

*[நச்சு + வலி.]*

*உடம்பில் அடிக்கடி அல்லது விட்டுவிட்டு உண்டாகும் வலி.*

**நச்சுவலை** *naccu-valai,* n. ஒருவகை மீன்வலை (பரதவர்.); a fishing net.

*[நஞ்சு + வலை → நச்சுவலை.]*

*நஞ்சானும் குஞ்சானுமாகவுள்ள மிகச்சிறிய மீன்களைப் பிடிக்க உதவும், சிறுகண் வலை.*

*[நஞ்சு → நச்சு → நசு.]*

*நசுக்கு = சிறியது [நச்சு + வலை.]*

**நச்சுவாக்கு** *naccu-vākku,* பெ. (n.) **1.** தீ வாக்கு (வின்.); evil words. அவன் நச்சுவாக்கில் விழாதே (உ.வ.). **2.** கேடு விளைவிக்கும் சொல்; malignant words.

மறுவ. தீச்சொல்.

*[நஞ்சு + வாக்கு.]*

நஞ்சு உடலுக்கு ஊறு விளைவிப்பது போல், பிறருக்குக் கேடு அல்லது பொல்லாங்கு தரும், தீச்சொல்.

**நச்சுவாய்**[1] *naccu-vāy,* பெ. (n.) கேடு விளைக்கும் வாய் (வின்.); mouth of one whose imprecations are believed to take effect.

*[நஞ்சு → நச்சு + வாய்.]*

தீய சொற்களைக் கூறிப் பிறருக்குக் கேடு பயக்கும் நஞ்சுத்தன்மையுள்ள வாய். பிறர்தம் உள்ளத்தில் எஞ்ஞான்றும் நிலைத்திருக்கும் வண்ணம், நீங்காத வடுப்போல், பிறரைச்சவிக்குந் தன்மையுள்ள வாய். பிறரை நாவினால் சுடுந்தன்மையுள்ள வாய்.

**நச்சுவாய்**[2] *naccu-vāy,* பெ. (n.) *நச்சுவாயன்* பார்க்க; see *naccu-vāyan.*

*[நச்சு + வாய்.]*

*எப்போதும், எந் நிலையிலும் தீச் சொற்களையே பேசும் வாய்.*

**நச்சுவாயன்** *naccu-vāyan,* பெ. (n.). ஓயாமற் பிதற்றுபவன்; babbler, talkative man. 'நச்சுவாயன் வீட்டிலே நாறுவாயன் பெண் கொண்டது போல' (பழ).

மறுவ. அலப்புவாயன்.

*[நசு → நச்சு + வாய் + அன் → நச்சுவாயன் இடைவிடாது பெய்யும் சிறுதூறல்போல், ஓயாது பேசும் இயல்பினன்.]*

ஒளிவுமறைவான செய்திகளை வெளிப்படையாகப் பேசிப் பிதற்றுபவன்; என்று, சா.அக. கூறும்.

**நச்சுவாயு** *naccu-vāyu,* பெ. (n.). உப்புக்காற்று; nitrogen gas.

மறுவ. சவட்டுவெடியம்.

*[நச்சு →*Skt. வாயு.*]*

வளிமண்டலத்தில் ஐந்தில் நான்கு கூறான வளித்தனிமம்.

**நச்சுவார்த்தை** *naccu-vārttai,* பெ. (n.) கடுஞ்சொல்; harsh words.

*[நச்சு +* skt. *வார்த்தை.]*

*உயிரைக் கொல்லும் நஞ்சுபோல் மனத்தைப் புண்படுத்தும் பழிச்சொல்.*

பிறர்தம் உள்ளத்தில் அழியாது நிலைத்த வடுவினை யேற்படுத்தும், சொல். பிறரைச்சவித்து, இறப்பினை ஏற்படுத்தும் இழிவுச்சொல். இக் கருத்தினையே, வள்ளுவப் பெருந்தகையும்,

"தீயினாற்சுட்டபுண் உள்ளாறும் ஆறாதே நாவினால் சுட்டவடு" (குறள்,129.) என்று, குறித்துள்ளார்.

**நச்சுவால்** *naccu-vāl,* பெ. (n.) சாரைப்பாம்பின் நஞ்சுள்ள வால்; a tail of rat-snake.

*[நஞ்சு → நச்சு + வால்.]*

**நச்சுவாள்** *naccu-vāḷ,* பெ. (n.) நஞ்சு பூசப்பட்ட வாள்; poisonous sword.

*[நஞ்சு → நச்சு + வாள்.]*

பகைவரைக் கொல்லுதற்பொருட்டு, வாளின் நுனியில், நஞ்சு பூசிய நச்சுவாள்.

**நச்சுவி** *naccuvi,* பெ. (n.) பேய்க்கரும்பு; devil sugarcane

மறுவ. நச்சுக்கரும்பு.

*[நச்சு + இ.]*

தோற்றத்தில் கரும்பினைப் போன்றிருந்தாலும், கடித்துச் சுவைக்கும் போது உவர்ப்புச் சுவைத் தருந்தன்மைத்து.

**நச்சுவிறகு** *naccu-viṟagu,* பெ. (n.) கெட்ட செயல்களுக்குப் பயன்படும் நச்சுவிறகு (யாழ்.அக.); poisonous fuel, used in witchcraft.

[நச்சு + விறகு]

நச்சுத்தன்மையுள்ள விறகு; பிறருக்குத் தீச் செயல் செய்தற்பொருட்டும், செய்வினை வைத்தல் போன்ற தீயநிகழ்வுகளின் பொருட்டும் பயன்படுத்தும் விறகு.

நஞ்சுத்தன்மையுள்ள எட்டி, கள்ளி, நாபி போன்றவற்றின் விறகு.

**நச்சுவேர்** *naccu-vēr,* பெ. (n.). நச்சுத் தன்மையுள்ள வேர்; poisonous root.

*[நஞ்சு → நச்சு + வேர்].*

**நச்சுவேல்** *naccu-vēl,* பெ. (n.) நஞ்சு பூசப்பட்ட வேல்; poisonous spear

*[நஞ்சு → நச்சு + வேல்]*

எதிரிகளையும், கொடிய விலங்குகளையும், எறியுந்தூரத்தினின்று கொல்லப் பயன்படுத்தும் வேல்.

**நச்சுவேலை** *naccu-vēlai,* பெ. (n.) தொல்லை உண்டாக்கும் வேலை (இ.வ.); work causing worry, troublesome piece of work.

[நச்சு + வேலை.]

பிறர்க்குப் பொருட்சிதைவை உண்டாக்கும் வேலை, தீயவேலை என்றும், உடற்சிதைவை உருவாக்கும்வேலை, நச்சுவேலை என்றும் கருதப்படும்.

**நச்சுளி** *nacculi,* பெ. (n.) சிறு கடல்மீன் வகை; a small sea -fish, Opisthognathus rosenbergi.

**நச்சுறுப்பான்** *naccuru-p-pān,* பெ. (n.) *நஞ்சறுப்பான்* பார்க்க; see *nanjaruppān*

[நச்சு + உறுப்பான்.]

**நச்சுறுத்தல்** *naccuruttal,* தொ.பெ. (vbl n.) ஆசை உண்டாக்கல்; to make wish

பேராசை கொள்ளல், துன்பத்திற்குக் கரணியமானது. நச்சுப்போன்றது.

**நச்செண்ணெய்** *naccenney,* பெ. (n) புண்ணுக்கிடும் நச்சு நெய்மம்; a poisonous oil for curing sores and itches

[நச்சு + எண்ணெய்.]

இயல்பான உடலுக்கு நஞ்சு போல் தீமையைத் தந்தாலும், புண்ணுக்கு மருந்தாகப் பூசப்படும் நெய்மம்.

**நச்செலி**[1] *nacceli,* பெ. (n.) 1. சுண்டெலி (யாழ்.அக.); mouse 2. மூஞ்சூறு; shrew-mouse.

[நசு.→ நச்சு + எலி.]

(ஒ.நோ.) நச்சுமழை = சிறுதூறல்.

நஞ்சில்லாத சிறிய எலியைக் குறிக்கும் போது, சிறுமைப் பொருள் குறித்து வழங்கிய சொல்லாகும்.

**நச்செலி**[2] *nacceli,* பெ. (n.) பல்லில் நஞ்சுள்ளதும், சிலசமயங்களில் சாவு விளைவிக்கக்கூடியதுமான எலிவகை. (வின்.); a kind of rat whose bite is poisonous and sometimes fatal.

மறுவ. மொரசன் எலி.

[நச்சு + எலி.]

நஞ்சுத்தன்மையைக் கொண்ட எலிவகை.

**நச்செழுத்து** *nacceluttu.* பெ. (n.) சிற்றிலக்கியத்தில், முதற்சொல் மங்கல மொழியல்லாதவிடத்து, ஆதிமொழிக்கண் வருதற்கு ஆகாதனவென்று விலக்கப்படும், ய், ர், ல், ள், யா, ரா, லா, ளா, யோ, ரோ, லோ, ளோ, ஃ, மகரக் குறுக்கம், அளபெடை ஆகிய எழுத்துக்கள் (இலக். வி. 780); inauspicious letters like y, r l, ḷ, yā, rā, lā, ḷā, yō, rō, lō, ḷō, k, magara-k-kurukkam and aḷapeḍai which should not be found in the initial word other than mangalamoḻi of a poem

[நச்சு + எழுத்து.]

இக் காலத்தே, சில எண் சிறப்பற்றவை எனச் சொல்வது போல், அக் காலத்தே இருந்த மூடநம்பிக்கை.

**நச்செள்ளை** *na-c-ceḷḷai,* பெ. (n.) *நச்செள்ளையார்* பார்க்க; see *na-c-ceḷḷaiyār.*

[நல் + செள்ளை.]

நச்செள்ளை = கழகக்காலத்தில் வழங்கிய இயற்பெயர்.

"செள்ளை" என்பது, பெண்பாலர்க்கு இயற்பெயராகப் பண்டைக்காலத்தில் வழக்கூன்றி இருந்தமைக்கு, இவர்பெயர் நற்சான்றுப் படைக்கின்றதெனலாம்.

**நச்செள்ளையார்** *na-c-cellaiyār,* பெ. (n.) பதிற்றுப்பத்தினுள், ஆறாம்பத்துப் பாடிய பெண்பாற் புலவர்; இவரது முழுப்பெயர் காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்; an ancient Tamil poetess, author of the 6th decad of Patirru-p-pattu.

*[நற்செள்ளை→நச்செள்ளை + ஆர்]* (ஆர் = பெருமைப்பொருட்பின்னொட்டு).

ஆடுகோட்பாட்டுச் சேரலாதன் என்னும் ஆறாம் பத்தைப் பாடியுள்ள இவர், பிற கழக இலக்கியச் செய்யுட்களையும் இயற்றியுள்ளார். குறுந்தொகை 210 – ஆம் பாட்டில், காக்கை கரைந்தமையைச் சிறப்பாகப் பாடியதால், காக்கைப்பாடினியார் என்ற சிறப்புப்பெயரைப் பெற்றார். சிறப்புப்பெயர் பெறுதற்குக் கரணியமாய் அமைந்த குறுந்தொகைப் பாடல் வருமாறு:—

"திண்தேர் நள்ள கானத் தண்டர்
பல்லா பயந்த நெய்யிற் றொண்டி
முழுதுடன் விளைந்த வெண்ணெல் வெண்சோறு
எழுகலத் தேந்தினுஞ் சிறிதென்தோழி
பெருந்தோள் நெகிழ்ந்த செல்லற்கு
விருந்துவரக் கரைந்த காக்கையது பலியே."

நச்செள்ளையார் பதிற்றுப்பத்தில் 51—முதல் 60—வரை—10—பாடல்களைப் பாடியுள்ளார். இப் பாடல்கள், ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின், வரையாது வழங்கும் வள்ளன்மை, செல்வம், புகழ், வென்றிச்சிறப்பு, பாடினியர் நிலை போன்றவற்றைப் புகலும் பான்மையில் அமைந்துள்ளன. சேரனின் வென்றியை வியந்து கூறுங்கால்,

"பாடல்சான்ற பயங்கெழுவைப்பின்
நாடுகவி னழிய நாமந் தோற்றிக்
கூற்றடூஉ நின்ற யாக்கை போல
நீசிவந் திறுத்த நீரழி பாக்கம்"

கூற்றுவனால் அடப்பட்டு நின்ற உடலைப் (பிணத்தைப்) போல, பகைவர் நாடு அழிந்த பான்மையைப் பாடிய பாங்கு போற்றத்தக்கது.

நச்செள்ளையார் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனிடம் பாடிப்பெற்ற பரிசில்:— ஒன்பது காப்பொன்னும், நூறாயிரங்காணமும் (பொற்காசும்) கொடுத்துக் கலன் அணிக என்றுகூறித் தன் பக்கத்துக் கொண்டான், அக்கோ. குடநாட்டுத்தலைவனான இவன் 38 ஆண்டுகள் ஆட்சிசெய்த வரலாற்றுண்மையை, ஆறாம்பத்தில் உள்ள பத்தாவது பதிகப்பாட்டு பகர்கின்றது.

இவர் புறநானூற்றில் 278—ஆம் பாடலையும் பாடியுள்ளார். இப் பாடலின் வாயிலாக, மறக்குடி மங்கையின் மாண்பினை அறியலாம். எட்டுத்தொகையில் 12—செய்யுட்களையும் இயற்றி, மிகச்சிறந்த பெண்பாற்புலவராக திகழ்ந்தபாங்குப் போற்றத்தக்கது.

**நச்சேத்திரதிச்சி** *naccēttira-ticci,* பெ. (n.) நாணல்; reed.

*[நச்சேத்திரம் + இச்சி.]*

**நச்சோலம்** *naccōlam,* பெ. (n.) நஞ்சுத் தன்மையுள்ள செடி (சா.அக.); aconite.

விடாச்சுரம், ஆறாப்புண், தீராத ஊதைநோய், கொடியபல்வலி, தலைநோய், வயிற்றுநோய்கள், பாம்புகடி, தேள்கடி முதலான அனைத்துவகை நச்சுயிரிகளின் நச்சுத் தன்மையைப் போக்கும் அரியமூலியாகும். மூளைநோய் அனைத்திற்கும், நச்சோலவேர் நனிசிறந்தது.

**நசணை** *naśaṇai,* பெ. (n) தொல்லை பிடித்தவன் (இ.வ.); a troublesome person.

*[நச்சல் → நசல் → நசண் + ஐ.]*

நச்சன் = தொல்லை: தொல்லை தந்து அலைக்கழிப்புச் செய்பவன்.

**நசநச—த்தல்** *naśa-naśa-,* 4 செ.கு.வி. (v. i.) *நசுநசு—* பார்க்க; see *naśu-naśu.*

*[நொசி → நசி → நச + நச → நசநச—.]*

உறுதிப்பாடு அல்லது கட்டு நெகிழ்ந்து போகுந் தன்மையைக் குறிக்கும், நெகிழ்ச்சிக் கருத்தினின்று தோன்றிய சொல்.

**நசநசவெனல்** *naša-naša-v-eṉal,* பெ. (n.). *நசுபிசெனல்* பார்க்க; see *našu-pišeṉal*

*[நச + நச + எனல்.]*

**நசபிச—த்தல்** *naša-piša-,* 4 செ.கு.வி. (v.i.) *நசுபிசு* — (வின்.) பார்க்க; see *našu.pisu-.*

*[நச + பிச—.]*

**நசபிசெனல்** *naša-pišeṉal;* பெ. (n.) *நசுபிசெனல்* பார்க்க; see *našupišeṉal*

*[நச + பிச + எனல்.]*

**நசர்** *našar,* பெ. (n.) உயர் அலுவலர்க்குச் செலுத்துங் காணிக்கை; present to an official, customary gift to a superior.

*[நையல் → நயல் → நசல் → நசர்.]*

*(ஒ.நோ.) தையில் → தயல் → தசல் → தசர்.*

*மையல் → மயல் → மசல் → மசர்.*

**நசல்** *našal,* பெ. (n.) **1.** நோய்; illness. **2.** தீராநோய்; a chronic disease.

*[நை → நையல் → நைசல் → நசல்]*

**நசலாளி** *našalāḷi,* பெ. (n.) நோயாளி (வின்); sick person, patient

*[நசல் + ஆள் + இ.]*

"இ" சொல்லாக்க ஈறு.

**நசற்காரன்** *našaṟ-kāraṉ,* பெ. (n.) நோயாளி (வின்); patient, person in ill - health.

*[நசல் + காரன்.]*

'காரன்' உடைமைப் பெயரீறு.

**நசறாண்டி** *nasaṟāṇḍi,* பெ. (n.) *நசிறாண்டி* பார்க்க; see *našiṟāṇḍi.*

*[நசல் + ஆண்டி.]*

*நசலாண்டி → நசறாண்டி = தொல்லை கொடுப்பவன்.*

**நசனை** *našaṉai,* பெ. (n.) மாணிக்கக் குற்றத்தொன்று (வின்); white speck, a flaw in a ruby

**நசாரி** *nasāri,* பெ. (n.) எட்டி (மூ.அ.); indian poison nut.

**மறுவ.** காஞ்சிரை.

*[நச + அரி.]*

**நசி[1]—தல்** *naši-,* 2 செ.கு.வி. (v.i.) **1.** அழிதல்; to be destroyed. **2.** நசுங்குதல்; to be crushed, bruised, mashed, crumpled **3.** திரைதல்; to be frayed, as a worn cloth. 'நசிந்த புடைவை' (வின்). **4.** குறைவு காணுதல் (வின்); to be palliated, extenuated. **5.** அடக்கிப் பேசப்படுதல் (வின்.); to be kept back, spoken indistinctly or with hesitation. **6.** நிலைமை சுருங்குதல்; to be reduced in circumstances.

த. நசி → வ. நச் (nas).

[நை → நயி → நசி —.] (வேக.3–31)

(ஒ.நோ.) மொய் → மொயி → மொசி.

நெகிழ்ச்சிக் கருத்தினின்று கிளைத்த வேர். நெகிழ்ந்த பொருள் நைந்து நசுங்குவது இயல்பு. நைந்த பொருள் தளரும். தளர்ந்த பொருள் சுருங்குந்தன்மைத்து. நெகிழ்வின் இறுதிநிலை, நிலைமைக் கெட்டு அழிதலாகும். நசிதல் என்னுமிச்சொல், ஈங்கு நசுங்குதல், சுருங்குதல், கெடுதல், அழிதல் என்னும் பொருண்மையில் வந்துள்ளது.

**நசி²—தல்** *naši-,* 2 செ.கு.வி. (v.i.) ஓர் இனம் அல்லது குடும்பம், கலை முதலியவை எண்ணிக்கையில் குறைந்து, வளர்ச்சியில் பின்தங்கி, செல்வாக்கு அல்லது மதிப்பை இழந்து நலிவடைதல்; to become extinct, to decline "திமிங்கல இனம் எண்ணெய்க்காகப் பெருமளவில் கொல்லப்படுவதால், நசிந்து வருகிறது" (உ.வ.); "கண்ணெதிரில் நண்பரின் குடும்பம் நசிந்து போவதைப் பார்க்க மிகவும் துன்பமாக இருக்கிறது." நசிந்து வரும் ஒயிலாட்டம், கரகாட்டம் முதலான நாட்டுப்புறக் கலைகளை அரசும், மக்களும் ஊக்குவிக்க வேண்டும் (உ.வ.).

த. நசி→. வ. நச். (nas)

[நை → நயி → நசி. ]

**நசி³—த்தல்** *naši-,* 4 செ.கு.வி. (v.i ) 1. அழித்தல்; to be destroyed, annihilated, consumed. *"நசியாஉலகிற் பாவமு நசிக்கும்".* (காஞ்சிப்பு மணிக. 61). 2. குறைதல்; to become reduced, diwindle, decline, as a family. 'அந்தக் குடும்பம் நசித்துக்கொண்டு வருகிறது.' அரிதாகக் காணப்படும் இந்தப் பறவையினம் நசித்து வருகிறது (இக்.வ.). சில கலைஞர்களேனும் இல்லாவிட்டால், பொம்மலாட்டக்கலை என்றோ நசித்திருக்கும் (உ.வ.); 3. சாதல்; to become extinct, die *"நசித்தவரை எழும்பியருள்"* (அருட்பா, vi, அருள்விளக்க. 4).

[நயி → நசி + த் + தல். த் = சந்தி. 'தல்' தொ.பெயர்.ஈறு.]

**நசி⁴—த்தல்** *naši-,* 4 செ.குன்றா.வி. (v.t.) 1. அரைத்தல்; to crush, bruise, mash, crumple. 2. அழித்தல்; to demolish, destroy, consume. 3. கசக்குதல் (யாழ்ப்.); to squeeze, press. 4. அடக்கிப்பேசுதல்; to suppress, conceal, keep back, speak with hesitation. 5. எளிதாக்குதல் (யாழ்ப்.); to make light of treat as of small account.

ம. நசிக்க.

[நயி → நசி — த் + தல். 'தல்' தொ. பெ. விகுதி.]

**நசிகோதி** *naši-kōdi,* பெ. (n ) சமையல் பாகக் குற்றம்; defect in cooking.

**நசிதவாரகம்** *našida-vāragam,* பெ. (n.) பெருஞ்செருப்படை; large forceful army

[நசிதம் + வார் + அகம்].

**நசிதோடணம்** *našidōḍaṇam,* பெ. (n.) மிகவுஞ்சூடு, மிகவும் குளிர்ச்சியில்லாமை; neither too warm, nor too cold

**நசிந்துகொடு—த்தல்** *našindu-koḍu-,* 4 செ. கு.வி. (v.i.) 1. பழுத்து மெதுவாயிருத்தல்; to yield, as a boil or fruit to the touch. 2. இணங்குதல்; to yield to one, concede.

[நசிந்து + கொடு—.]

**நசிந்துபோ—தல்** *naśindu-pō-,* 4 செ.கு.வி (v.i.) *நசி¹-தல்* பார்க்க; see *naśi-,*

*[நை → நயி → நசி → நசிந்து + போ—.]*

**நசியஞ்செய்தல்** *naśiyañ-jeydal,* பெ. (n.) மூக்கின் வழி மருந்தை உட்செலுத்துதல் அல்லது உள்ளுக்கிழுத்தல்; inhaling medicinal fumes or powders through the nose.

*[நசியம் + செய்தல்.]*

**நசியம்** *naśiyam,* பெ. (n.) **1.** மூக்குப்பொடி (வின்.); sternutatory, snuff. **2.** மூக்கிலிடும் மருந்து (தைலவ. தைல.2); a medicine applied to the nose.

**நசியம்செய்—தல்** *naśiyam - śey-,* **1.** செ. குன்றாவி. (v.t.) மூக்கினால் இழுத்தல்; to make the patient lie down, and pass the medicine into his nostril through a tube and funnel.

*[நசியம் + செய்—.].*

**நசியம்பிழிதல்** *naśiyam - pilidal,* பெ. (n.) மூலிகை மருந்தை நீர் வடிவில் உட்செலுத்துதல்; to pass the juice of herbs in to the nostril.

*[நசியம் + பிழிதல்.].*

**நசியமிடல்** *naśiyam-idal,* பெ. (n.) மருந்தைப் புகை வடிவில் உட்செலுத்தல்; administering medicine internally in the form of fumes or vapour, exposing to smoke or vapour as of sulphur to purify from infection inhaling disinfectant fumes. - Fumigation.

*[நசியம் + இடல்.].*

**நசியரி** *naśiyari,* பெ. (n.) **1.** குப்பை மேனி; indian acalypha. **2.** செடிக்குப்பை; rubbish plant.

*[நசி + அரி.]*

நசி = சிறிய.

**நசியல்** *naśiyal,* பெ. (n.) **1.** நெரிந்தது (வின்.); anything crushed or mashed, as overripe or decayed fruit. **2.** தட்டையானது; anything pressed or bent, as a jewel. **3.** வளைந்து கொடுப்பது; anything tough and yielding.

*[நசி → நசியல்.].*

**நசியலன்** *naśiyalan,* பெ. (n) கழப்புணி, சாக்குப் போக்குக் காட்டி ஏய்த்து மழுப்புவன்; (வின்.); a person who practises evasion, who does not answer directly.

*[நசி → நசியல் + அன்.]*

'அன்' – ஆ. பா. ஈறு.

கடமையைத் தட்டிக்கழித்துச் சூழ்ச்சி செய்து, பிடிகொடாது தப்புந்தன்மையன். ஆற்ற வேண்டிய பணியை நசித்து அழிக்குந் தன்மையன்.

**நசிவாந்தம்** *naśivāndam,* பெ. (n) பறங்கி வைப்பு நஞ்சு; a kind of mineral poison, sublimate of mercury

*[நசிவு + அந்தம்.]*

**நசிவானவெழுத்து** *naśivāna-v-eluttu,* பெ. (n.) **1.** திருத்தமில்லாததும், அரைகுறையானதுமான எழுத்து (வின்.); indistinct or ill-formed writing. **2.** கவர்பொருள் கொண்ட தொடர்மொழி; a writing in equivocal terms.

*[நசிவு + ஆன + எழுத்து.]*

**நசிவு** *naśivu,* பெ. (n.) **1.** நலிவு, அழிவு, கேடு; destruction, decadence, loss, injury. **2.** நெரிவு; bruise, contusion. **3.** வசைபாடுகை, பழிகூறுகை, இடித்துரைக்கை; reproach. **4.** இகழ்கை; disparagement.

*[நயி → நசி → நசிவு.]*

நைந்து அழிகை; நைந்து சேதப்படுகை போன்ற பொருண்மையில், இச் சொல் இக் காலத்தே வழக்கூன்றியுள்ளது. (எ.டு) தரந்தாழ்ந்த தாளிகைகளினால் மொழிக்கும், பண்பாட்டிற்கும் ஏற்படும் பயனைவிட, நசிவுதான் மிகுதி (இக்.வ). அறிவியல் வளர வளர மூடநம்பிக்கைக் கோட்பாடுகள் நாளாக நாளாக நசிவுற்று வருகின்றன" போன்ற வழக்குகளில் நசிவு என்னுஞ்சொல் அழிவு, கேடு என்னும் பொருண்மையில், பயின்று வருகிறது.

**நசிவுகாண்(ணு)—தல்** *naśivu kāṇṇu-,* 12 செ. கு.வி. (v.i.) 1. நைந்து சேதப்படுதல்; to become injured or bruised, as ripe fruit. 2. மனம் வேறுபடுதல்; to turn shy or discordant, as friends. **3.** நிலையற்றிருத்தல்; to be insecure, as in one's office.

*[நசிவு → காண்(ணு)—.]*

**நசிவுகாயம்** *naśivu-kāyam,* பெ. (n.) ஊமைக்காயம் (இ.வ.); contusion.

*[நசிவு + காயம்.]*

**நசிறாண்டி** *naśiṟāṇḍi,* பெ. (n.) *நசிறாணி* (யாழ்ப்.) பார்க்க; see *naśiṟāṇi.*

*[நசல் → நசில் → நசிறு + ஆண்டி.]*

**நசிறாணி**[1] *naśiṟāṇi,* பெ. (n.) **1.** தொல்லைச் செய்வோன்; vexatious, teasing person. **2.** இவறன்; stingy person

**மறுவ.** பிசிறாணி.

*[நசிறு + ஆண்டி → ஆணி.]*

**நசிறாணி**[2] *naśiṟāṇi,* பெ. (n.) கிறித்தவர்; a class of christians.

கிறித்துவ மதத்திலுள்ள பிரிவுகளுள் ஒன்று.

**நசினை** *naśiṉai,* பெ. (n) *நசனை* (வின்.) பார்க்க; see *naśaṉai.*

**நசுக்கல்** *naśukkal,* பெ. (n.), **1.** நெருக்குதல், நசுக்குதல்; crushing. **2.** நொறுங்குதல்; pounding, mashing, beating into a confused mass.

*[நை→நசி → நசுங்கு → நசுக்கு + அல்.]*

**நசுக்கான்** *naśukkāṉ,* பெ. (n.) சிறியது; that which is small. நசுக்கான் பையன் (வின்.).

**தெ.** நலுசுணி.

*[நசுக்கு = சிறியது; நசுக்கு → நசுக்கான்.* **ஒருகா.** *நசுங்கான் → நசுக்கான்.]*

**நசுக்கிப்பிழி—தல்** *naśukki-p-piḻi-,* 2.செ. கு. வி. (v.i.), பசுமையான மூலிகைகளை இடித்துச் சாறுபிழிதல்; to squeeze out juice by bruise the green herbaceous leaves. *"நாயுருவி இலையை நசுக்கிப் பிழிந்து கருக்கு நீரிட்டுக்(கசாயம்) குடித்தால் மலக்கட்டு அகலும்".*

*[நசுங்கு → நசுக்கு → நசுக்கி + பிழி—.]*

சித்தமருத்துவத்தில் தமிழகத்தில் கிடைக்கும் பசுமையான மூலிகையும், மூலிகைக் கருக்குநீருமே, (கசாயம்) தீராத நோய்களைத் தீர்த்து, உலகமருத்துவ அரங்கில், தமிழகத்திற்கு உயர்ந்த இடத்தை, உருவாக்கித் தந்துள்ளன.

**நசுக்கு¹–தல்** *naśukku-,* 5.செ. கு. வி. (v.i.), 1. அழுத்தித் தேய்த்தல், நசுங்கச் செய்தல் (இ. வ.); to squeeze; press with the hand, crush, squash, crumple, as paper. '*கதவைச் சாத்தும் போது என்விரலை நசுக்கிவிட்டான்*'. '*சுருட்டுத் துண்டைக் கீழே போட்டுக் காலால் நசுக்கினான்*' (இக்.வ.). "*ஏன் இப்படி என்னை நசுக்கிறீர்கள்? சிறிது தள்ளி நிற்கக்கூடாதா?*" (உ.வ.). 2. கழப்பிப் பேசுதல். to keep back, as a matter, to tell indistinctly, to evade. '*அவன் நசுக்கிச் சொல்கிறான்*'. 3. தடுத்தல் (வின்.); to object, rebut, try to defeat 4. வலிமையால் கீழேதள்ளுதல்; to knock down. '*சண்டையில் அவனை நசுக்கி விட்டான்*' (இ. வ.); 5. அடித்தல் (இ. வ.); to beat, thrash. "*எனக்குச் சினம் வந்தால் உன்னை நசுக்கிவிடுவேன்*" (இக். வ.); 6. கீழ்ப்படுத்துதல்; to reduce, as haughtiness of a person, to subdue, to ruin, as a family. 7. போராட்டம் உரிமை போன்றவற்றை ஒடுக்குதல்; to squash revolt, freedom etc., '*தொழிலாளர்களின் வேலைநிறுத்தத்தை நசுக்க, மேலாளர் வன்முறையைக் கையாண்டார்*' (இ.வ.). '*கொடுங்கோலரசு மக்களின் விடுதலை வேட்கையை நசுக்குகிறது*' (இக்.வ.).

க. நசிகு.

*[நசி → நசுங்கு → நசுக்கு–.]*

நெகிழ்ச்சிக் கருத்தினை விளக்கும் வினையடி. நசுங்கச் செய்தல் என்னும் பொருண்மையுடையது. சிரங்குக் கொப்புளத்தைத் தேய்த்துப் பிதுக்குதலும், மூட்டைப்பூச்சி, பேன் முதலியவற்றை, அழுத்தி அல்லது குத்திக் கொல்லுதலும், யானை உயிரிகளை மிதித்துக் கொல்லுதலும், எதிரிகளை அடக்கி யொடுக்குதலும், பெருங்குடற் காற்றை அடக்கி வெளிவிடுதலும், 'நசுக்குதல்' எனும் பொருண்மைப் பற்றியதே.

வாழ்வியலில் நிகழும், பலதிறப்பட்ட, நெகிழ்வுப் பொருண்மைகளை உள்ளடக்கிய "நசி" (நசி → நசு) என்னும் வேரினின்று கிளைத்த சொல்லாகும். இன்றைய சூழலில் நசுக்கும் போக்கு, (பாங்கு) மன்பதையில் அங்கிங் கெனாதபடி எங்கும் மலிந்து காணப்படுகிறது. உயர்ந்தோர், தம்மைவிடத் தாழ்ந்தோரை நசுக்குவது, இன்று இயல்பாகிவிட்டது. ஐந்தறிவுள்ள யானை மரம், மட்டைகளை நசுக்கி உண்ணுவது போன்று, ஆறறிவு படைத்த மாந்தனும் தம்மினும் வலிமைகுன்றியவரை, நசுக்கி உண்பது கண்கூடு. பணக்காரன் ஏழையை நசுக்குகின்றான். முதலாளி, தொழிலாளியை நசுக்குகின்றான்.

இவ்வாறு, நசுக்குதல் என்னும் நெகிழ்ச்சிக் கருத்து, குமுகாய வாழ்வியலில் மாந்தனுடன் பல்வகையானும், பின்னிப்பிணைந்து காணப்படுகிறது.

**நசுக்கு²** *naśukku,* பெ. (n.), 1. நெரிவு; bruise. 2. சிறியது (வின்.); that which is small, little.

தெ. நலுசு.

*[நசி → நசு → நசுக்கு.]*

**நசுக்குண்டல்** *naśukkuṇḍal,* பெ. (n.), நெரிவுறல்; being jammed, being beaten in to a pulp or flat mass, squashing. "*நிலநடுக்கத்தினால் பலவீடுகள் நசுக்குண்டன*" (உ.வ.).

*[நசுங்கு → நசுக்கு + உண்டல்.]*

**நசுக்குணி** *naśukkuṇi,* பெ. (n), 1. சிறியது (யாழ்ப்.); that which is small 2. கூழையன் (யாழ். அக.); stunted person. 3. சுணங்கி; delaying person. 4. பின்னிடுவோன்; loitering person. 5. தொல்லை செய்வோன்; trouble-some person.

*[நசுக்கு → நசுக்குணி.]*

**நசுக்குத்திரிசமன்** *našukku-t-tirisaman,* பெ. (n.), மறைந்து செய்யும் தீச்செயல் (சென்னை); secret mischief. underhand injury.

சமனிலைக் கருத்தினைத் திரித்துச் சொல்லுதல் பற்றியும், மறைத்துச் செய்யும் பொருண்மை குறித்தும், இச்சொல் வழங்கிற்று எனவாம்.

**நசுக்குத்துர்ச்சனம் பண்ணு—தல்** *našukku-t-turccanam-paṇṇu-,* 5.செ.கு.வி. (v.i.), 1. மறைவாய்க் குறும்பு செய்தல்; to do secret mischief. 2. தொல்லை செய்தல் (வின்.); to be meddlesome.

*[நசுக்கு + skt. துர்ச்சனம் + பண்ணு-.]*

**நசுக்குநசுக்கெனல்** *našukku-našu-k-kenal,* பெ. (n.), 1. ஒட்டுதற்குறிப்பு; stickiness. 2. தொல்லை செய்தற்குறிப்பு; constant worry

*[நசுக்கு + நசுக்கு + எனல்.]*

**நசுகுணி** *našuguṇi,* பெ. (n.), *நசுக்குணி 1, 2.* பார்க்க; see *našukkuṇi, 1, 2.*

**நசுங்கச்சப்பி** *našuṅga-c-cappi,* பெ. (n.), இவறன்; stingy person, niggard.

*[நசுங்கல் + சப்பி.]*

**நசுங்கல்** *našuṅgal,* பெ. (n.), 1. மெலிந்தது; that which is lean. 2. இவறன்; stingy person. 3. நைந்தகாயம் (இ. வ.); contusion. 4. *நசுங்கலான்* பார்க்க; see *našuṅgalāṉ.*

*[நசுங்கு → நசுங்கல்]*

அல்லீற்றுத் தொழிற்பெயர் ஈறு.

**நசுங்கலன்** *našuṅgalaṉ,* பெ. (n.), *நசுங்கலான்* பார்க்க; see *našuṅgalāṉ.*

*[நசுங்கல் → நசுங்கலான்]*

'அன்'சாரியை ஈண்டு உடன்பாட்டுப் பொருளில் வந்துள்ளது.

**நசுங்கலாண்டி** *našuṅgalāṇḍi,* பெ. (n.), *நசுங்கலான் (யாழ். அக.)* பார்க்க; see *našuṅgalāṉ.*

*[நசுங்கலன் → நசுங்கலான்.]*

**நசுங்கலான்** *našuṅgalāṉ,* பெ. (n.), 1. உறுதி யற்றவன்; one who speaks or acts with indecision, misgiving or hesitation. 2. *நசுக்குணி* பார்க்க; see *našukkuṇi.*

*[நசுங்கல் + ஆன்.]*

**நசுங்கு—தல்** *našuṅgu-,* 5.செ. கு. வி. (v.i.), 1. நசுக்கப்படுதல், உருக்குலைதல்; to be mashed, to get crushed, bruised. ஓடும் பேருந்திலிருந்து விழுந்தவர், சக்கரத்தில் சிக்கி, நசுங்கிச் செத்தார் (இ. வ.). *'கீழே விழுந்த அரத்திப்பழம் ஒரு பக்கத்தில் நசுங்கிவிட்டது'.* விரல் நசுங்கிவிடப் போகிறது, கதவைப் பார்த்துச் சார்த்து (இக்.வ.). 2. கசங்குதல்; to be crumpled, folded, bent, as a cloth. 3. பிதுங்குதல்; to be squeezed, pressed, crowded 4. கருமம் கெடுதல்; to be suppressed, dropped, as an affair. 5. நழுவி விடுதல். To fall through, become hushed, die away, as a rumour. 6. நிலைகுலைதல்; to be reduced as in circumstances.

*[நை → நயி → நசி → நசுங்கு—.]*

(ஒ.நோ.) மொய் → மொயி → மொசி.

நெகிழ்ச்சிக் கருத்தினை அடிப்படையாகக் கொண்டது. அழிந்து போதல், நசுங்கி உருக்குலைதல், நைந்துநிலைகெடுதல் என்னும் பொருண்மையில், இச் சொல் மக்களிடத்தே வழக்கூன்றியுள்ளது.

நசுக்கப்பட்ட பொருள் உருக்குலையும். உருக்குலைந்து, உருவமழிந்த மாந்தன் சின்னாபின்னமாகிச் சிதைந்து மடிவான். முடிவில், நிலைகுலைவு ஏற்பட்டு வினை அல்லது தொழில் அழிந்துபடும். நை → நயி → நசி → நசு, என்னும் வேரடி, இது போன்ற நெகிழ்ச்சிப் பொருண்மைகளை, உள்ளடக்கியதாகும்.

**நசுநசு—த்தல்** *našu-našu-*, 4.செ. கு. வி. (v.i.), 1. *தடுமாறுதல்*; to waver. to be undecided in speech or action. 2. விடாது தூறிக்கொண்டிருத்தல்; to be continually drizzling. "*நசுநசுத்த மழை*" (வின்.). 3. ஈரமாயிருத்தல்; to be damp, as a floor. 4. தொடக்குழைதல். to be yielding to the touch. 5. கையிறுக்கமாயிருத்தல்; to be illiberal. "*நசுநசுத்தகுணம்*" (வின்.). 6. தொல்லை (தொந்தரவு) செய்தல் (இ.வ.); to tease, trouble.

**க.** நசெநசெ.

*[ நொய் → நொசு → நசு → நசுநசு—. ]*

**நசுநசுப்பு** *našu-našuppu*, பெ. (n ), ஈரம்; dampness.

*[ நசுநசு → நசுநசுப்பு.]*

**நசுநசெனல்** *našu-našenal*, பெ. (n.), 1. ஈரக்குறிப்பு; dampness. 2. வளைந்து கொடுத்தற்குறிப்பு; toughness, tenacity 3. தொல்லை செய்தற்குறிப்பு; troubling, teasing. 4. மழைதூறற்குறிப்பு; drizzling. 5. மனம் அலைபாய்தற் குறிப்பு (யாழ்ப்.); wavering. 6. காலந்தாழ்த்துதற் குறிப்பு; delay. 7. மெதுவாயிருத்தற் குறிப்பு; softness to the touch. 8. கட்டுநெகிழ்தற் குறிப்பு; looseness.

*[ நை → நசு → நசுநசு + எனல்.]*

நெகிழ்ச்சிக்கருத்தினை வேரடியாகக்கொண்டது. இடைவிடாத நசுநசுத்த மழையால் மண் அல்லது நிலம், கட்டுநெகிழ்வதும், இடையரவுபடாத தொல்லையால், உள்ளம் கட்டுக்குலைந்து நெகிழ்ச்சியுறுதலும், இயல்பே ஆகும்.

**நசுநாறி** *našu-nāṟi*, பெ. (n.), இவறன்; stingy mean person, haggler for a trifling gain in bargains.

**மறுவ.** பிசுநாறி.

**தெ.,** பிசிநாறி.

*[நசு + நாறு + இ.]*

மட்டமான மனத்தினன். மதிப்பில் குறைந்தவன். இழிதகையாளன். குறுகிய நோக்கமுள்ளவன், பெருந்தன்மையற்றவன்.

அற்பப்பொருட்களையெல்லாம், பேரம்பேசி வாங்குவதில், கைதேர்ந்தவனே இவறன். தன்னலத்தையே குறிக்கோளாகக் கொண்டு, வாழ்க்கை நடத்துபவன்.

**நசுபிசு—த்தல்** *našu-pišu-*, 4.செ. கு. வி. (v i.), *நசுநசு—(யாழ்.அக.)* பார்க்க; see *našu-našu-*.

*[நசு + பிசு—.]*

**நசுபிசெனல்** *našupisenal*, பெ. (n ), *நசுநசெனல்* பார்க்க; see *našu-naseṉal*

*[நசு + பிசு + எனல்.]*

**நசுவக்கிரந்தி** *našuva-k-kirandi,* பெ. (n.), நசுங்கிய காயத்தைப் போல் காணப்படும் ஒருவகை கிரந்திப்புண்; a syphlitic sore resembling a bruised wound.

*[நசு → நசுவம் + skt. கிரந்தி.]*

நசுவம் = சிறியது.

அடிபட்ட சிறியபுண் வடிவில் காணப்படும், சிலந்தி.

**நசுவல்**[1] *našuval,* பெ. (n.), 1. மெலிந்த—வன்—வள்—து; stunted or emaciated person or beast. 2. ஊக்கமற்றவன்—வள் (யாழ்ப்.); spiritless person. 3. குழப்பமானது (யாழ்ப்.); intricate affair, complication. 4. மலம் (இ. வ.); excrement. 5. *நசுக்குணி*[1], *(இ. வ.)* பார்க்க; see *našukkuṇi.*

*[நசு → நசுவு + அல்.]*

**நசுவல்**[2] *našuval,* பெ. (n.), 1. தொல்லை செய்வோன்; one who is always teasing. 2. இவறன்; stingy person, miser.

**நசை**[1]**—தல்** *našai-,* செ. குன்றாவி. (v.t.), 1. அன்பு செய்தல்; to love. "*நசைஇயார் நல்கா ரெனினும்*" (குறள், 1199.). 2. விரும்புதல்; to desire. "*எஞ்சா மண்ணசைஇ*" (மணிமே. 19, 119.).

*[நய → நச → நசை. ]*

**நசை**[2] *našai,* பெ. (n.), தசைநார்; a bundl of fibres by which muscle is attached to the bone.

**நசை**[3] *našai,* பெ. (n.), 1. விருப்பம் ஆசை; desire, eagerness, avarice. "*நசைதர வந்தோர் நசை பிறக் கொழிய*" (புறநா. 15). "நம்பும் மேவும் நசையா கும்மே" (தொல். சொல். 812). 2. அன்பு; love, affection. "*நசையிலார் மாட்டு நசைக்கிழமை செய்வானும்*" (திரிகடு. 94). 3. நம்பிக்கை; hope, expectation. "*அரிதவர் நல்குவ ரென்னு நசை*" (குறள், 1156.). 4. ஈரம்; dampness, moisture.

க. நசெ.

*[நய → நச → நசை.]*

**நசை**[4] *našai,* பெ. (n.), எள்ளுகை, ஏளனம்; derision.

*[நகு → நகை → நசை. ]*

**நசை**[5] *našai,* பெ. (n.), குற்றம் (யாழ். அக.); fault, defect.

*[நசி → நசை.]*

**நசைகுநர்** *našaigunar,* பெ. (n.), *நசைநர் (யாழ். அக.)* பார்க்க; see *nasainar.*

**நசைத்துடி** *našai-t-tuḍi,* பெ.(n ), குளிர் காய்ச்சலின் விளைவால் ஏற்படும் தசைமுறுக்கு; movement of the muscles and tendens in typhoid condition.

**நசைநர்** *našainar,* பெ. (n.), நண்பர் (பிங்.); friends, lovers, well-wishers.

*[நசை + நர்.]*

*[நய → நச → நசை + கு + நர்.]*

கு=எழுத்துப்பேறு.

அர் என்னும் வினைக்குரிய ஆண்பால் இறுதிநிலை, பிற்காலத்தே, பெயர்கருதிய நர் இறுதி நிலையாக அமைந்தது.

எ.கா. இயக்குநர், நடத்துநர், ஓட்டுநர்.

**நசையுநர்** *naśaiyunar,* பெ. (n.), *நசைநர்* பார்க்க; see *naśainar.* "*நசையுநர்க் கார்த்து மிசைபோஎா*" (திருமுரு. 270).

*[நசை + உ + நர்.]*

உகரச்சாரியை, தோன்றி நிற்கிறது.

**நசையுரை** *naśai-y-urai,* பெ. (n.), காதற் பேச்சு (வின்.); amorous talk.

*[நசை + உரை.]*

கருத்தொருமித்த காதலர், தம்முள், ஆராஅன்பினால், ஒருவரையொருவர் புரிந்து கொண்டு பேசிமகிழும், நயவுரை.

**நசைவினை** *naśai-viṉai,* பெ. (n.), நற்செயல் (வின்.); good act.

*[நயம் → நயை → நசை + வினை.]*

**நசைவு** *naśaivu,* பெ. (n.), தரையிலுண்டாகும் ஈரம்; (வின்.) moisture of the earth.

*[நச > நசைவு.]*

**நஞ்சணிகண்டன்** *nañjaṇi-kaṇḍaṉ,* பெ. (n.), கொடிய நஞ்சினைக் கழுத்திலணிந்த சிவன்; Šivaṉ, adorned with poisonous coloured neck. "*நஞ்சணிகண்டன் எந்தை மடவா ளதனோடும் விடையேறும் எங்கள் பரமன்*" (திருஞானசம்பந்தர் தேவாரம்.)

*[நஞ்சனி + கண்டம் → கண்டன்.]*

இம்மையில் அனைவருக்கும் நன்மையே நல்குந் தன்மையன். ஞாலத்தின் கண்ணேயுள்ள, எல்லாத்தீமையாகிய நஞ்சினையெல்லாம், தான் (அணிந்துகொண்டு) பெற்றுக்கொண்டு, மன்பதைவாழ் மாந்தர்க்கெல்லாம், வளத்தையும், நலத்தையும் வாரிவழங்கும் இயல்பினன் என்னும், வாழ்வியல் பொருண்மையினை, "*நஞ்சணிகண்டன்*" என்னும் சொல் உணர்த்துகின்றது.

**நஞ்சபாதம்** *nañja-pādam,* பெ. (n.), குதிரைக் குற்றங்களுளொன்று; a defect in horses. (திருவாத. பு. குதிரையிட்ட. 35.).

*[நைந்த → நஞ்ச + பாதம்.]*

முதன் முதலில் அரேபியாவிலிருந்து வருவித்த குதிரைகளுக்கு, (இலாடம்) இரும்புச்செருப்பு இயைக்கும் இயல்பை, வணிகச் சூழ்ச்சிக் கரணியமாகச் சொல்லாமையால், நிறைய குதிரைகள் இறந்தன என்பது, வரலாற்றுக் குறிப்பு.

**நஞ்சம்** *nañjam,* பெ. (n.), நஞ்சு; poison, venom. "*நஞ்ச மோவினி நானுயிர் வாழ்வனோ*" (கம்பரா. நகர்நீங்கு. 10).

*[நஞ்சு + அம்.]*

**நஞ்சரி** *nañjari,* பெ. (n.), *நச்சரி* பார்க்க; see *naccari.*

*[நஞ்சு + அரி.]*

**நஞ்சரிவாளி** *nañjarivāḷi,* பெ. (n.), தக்கை; pith.

*[நைந்து → நஞ்சு + அரிவாளி*
*அரிவு + ஆளி.]*

நைந்ததாய் இருப்பினும், பார்ப்பதற்கு விறைப்பான அரிவாள் போல் தோன்றலால், வந்தபெயர்.

**நஞ்சறப்பாய்ஞ்சான்** *nañjaṟa-p-pāyñjāṉ,* பெ. *நஞ்சறப்பாய்ந்தான்* பார்க்க; see *nañjaṟa-p-pāyndāṉ.*

*[நஞ்சு + அற + பாய்ந்தான்*
பாய்ந்தான் → பாய்ஞ்சான்.]*

**நஞ்சறப்பாய்ந்தான்** *nañjaṟa-p-pāyndāṉ,* பெ. (n). 1. *கழுதைப் பாலை* பார்க்க; see *kaḻudai-p-pālai.* Indian ipecacuanha. 2. கொடிப்பாலை (சங். அக.); green wax flower 3. படுவங்கீரை; (யாழ் அக.); a kind of herb

*[நஞ்சு + அற + பாய்ந்தான்.]*

**நஞ்சறுப்பான்**[1] *nañjaṟuppāṉ,* பெ. (n.), 1. *நஞ்சறப்பாய்ந்தான்* பார்க்க; see *nañjaṟa-p-pāyndāṉ.* 2. கொடிப்பாலை; green wax-flower. 3. நாய்ப்பாலைஅல்லது கழுதைப்பாலை; dog paulay a dankey paulay 4. நஞ்சு முறிச்சான்; poison-killer.

**மறுவ.** நச்சுக்கொல்லி. கொண்டைச் சாணிக்கிழங்கு.

*[நஞ்சு + அறுப்பான்.]*

எல்லாவகைத் தோல் நோய்களையும் அகற்றும்; இதன் இலைகளையும், வேரினையும், சுண்டக்காய்ச்சிக் (சுருக்கிக்) குடித்தால், நாட்பட்ட கோழை அகலும். அளவுக்கு அதிகமான வேர்வையால், நச்சு நுண்மங்கள் நைந்து நலியும். பச்சை வேரினைத் தண்ணீரில் இழைத்துக் கொடுத்தால், மலச்சிக்கல் அகலும். உடம்பிலுள்ள அனைத்து நச்சுத் தன்மைகளும் நீங்கும் (சா.அக.).

**நஞ்சறுப்பான்**[2] *nañjaṟuppāṉ,* பெ. (n.), *நஞ்சு முறிச்சான்* பார்க்க; see *nañju-muṟiccāṉ.*

**மறுவ.** நாய்ப்பாலை, பேய்ப்பாலை.

**நஞ்சறுப்பான்வேர்** *nañjaṟuppāṉ-vēr,* பெ. (n.), ஒருவகைக்கள்ளி; a kind of spurge.

*[நஞ்சு + அறுப்பான் + வேர்.]*

**நஞ்சன்** *nañjaṉ,* பெ.(n.), தீயவன் (வின்); venomous person.

*[நஞ்சு + அன்.]*

**நஞ்சாதவெலும்பு** *nañjāda-v-elumbu.* பெ. (n.), முழங்கால் எலும்பு; knee - bone.

**நஞ்சானுங்குஞ்சும்** *nañjāṉuṅ-kuñjum.* பெ. (n.), மெலிந்த குழந்தையும் குட்டியும்; a group of weak infants and babes

**மறுவ:** நஞ்சானும் குஞ்சானும்.

*[ஒருகா. நோய்ந்தான் > நோஞ்சான் → நஞ்சான்.]*

[நைந்தான் > நஞ்சான்.]

குஞ்சு = பறவைக்குழவிப்பருவம்.

கட்டுப்பாடின்றி, அளவிற்கு அதிகமாகக் குழந்தைகளைப் பெறுவதாலும், சரியான உணவு இன்மையாலும், மெலிந்து காணப்படும் குழந்தைகளை, "*நஞ்சானும் குஞ்சானும்*" என்று கூறும் வழக்கு, சிற்றூர்களில் இன்றும் காணப்படுவது கண்கூடு.

**நஞ்சி** *nañji,* பெ. (n.), 1. குன்றிமணி; crab's - eye. 2. *கொண்டைச்சாணிக்கிழங்கு;* dog paulay.

**நஞ்சிச்சி** *nañjicci,* பெ. (n), *நஞ்சி* பார்க்க; see *nañji*

*[நஞ்சி + நஞ்சிச்சி.]*

**நஞ்சிடல்** *nañjiḍal* பெ. (n.), நஞ்சு கலந்த அமுதிடல்; mixing up poison is food or drink

*[நஞ்சு + இடல்.]*

**நஞ்சிலுறுக்கிப்பாய்ஞ்சான்** *nañjiluṟukki-p-pāyñjāṉ,* பெ. (n.), 1. நல்லபாம்பின் நஞ்சினை முறிக்கும் ஓர் இலை; a leaf used in cases of cobra bites. 2. *நஞ்சறுப்பான்* பார்க்க; see *nañjaṟuppāṉ.*

**நஞ்சினி** *nañjiṉi,* பெ. (n.), கேழ்வரகு; rāgi.

**நஞ்சீடு** *nañjīḍu,* பெ. (n.), நஞ்சிடப்படுகை; the state of being poisoned. "*அவன் நஞ்சீட்டால் துன்பப் படுகிறான்*". (உ. வ.).

*[நஞ்சிடு → நஞ்சீடு.]*

**நஞ்சீயர்** *nañjīyar,* பெ. (n.), 12ஆம் நூற்றாண்டினரும், திருவாய்மொழிக்கு ஒன்பதினாயிரப்படி, அகலவுரை முதலிய இயற்றியவருமான, ஒரு திருமாலிய வாச்சாரியர் (உபதேசரத் 47.); Thirumāliya āccāryār, of 12 century, author of a commentary on tiruvāy-moḻi called oṉpadiṉ-āyirappaḍi and other works.

*[நம் + சீயர்.]*

**நஞ்சு** *nañju,* பெ. (n.), 1. உயிர்க்கொல்லி; poison, venom. "*பெயக்கண்டு நஞ்சுண்ட மைவார்*" (குறள், 580). 2. தீயது; that which is malignant, baneful, pernicious, fatal 3. நஞ்சுக் கொடி; umbilical cord. '*குழந்தை பிறந்து ஒரு நாழிகையாகியும், இன்னும் நஞ்சு விழவில்லை*' (உ. வ.) 4. பாம்பின்நஞ்சு; snake poison. 5. விலங்குகளின் நச்சுநீர்; the poisonous fluid secreted by certain animals. 6. மூன்றுவகை உப்புகள் (முப்புகள்) (மாற்று வேதியல் முறையில் மாழையைப் பொன்னாக்கு பவை); in alchemy three kind of salts. 7. மூவகை நஞ்சு; the three kinds of poisons. 8. மரவகை; spurge laurel tree.

**மறுவ.** கருப்பு. தீது.

**க.** **து.** நஞ்சு.

*[நை→ நைஞ்சு → நஞ்சு.]*

**நஞ்சுக்கல்** *nañju-k-kal,* பெ. (n.), ஈயக்கல் (சிலாவங்கம்); lead stone lead - ore

*[நஞ்சு + கல்.]*

**நஞ்சுக்காளான்** *nañju-k-kāḷāṉ,* பெ. (n.), நச்சுத்தன்மையுள்ள ஒருவகைக் காளான்; poisonous mushroom.

**மறுவ.** நாய்க்குடைக் காளான்.

*[நஞ்சு + காளான்.]*

**நஞ்சுக்குறி** *nañju-k-kuṟi,* பெ. (n.), நச்சுத்தன்மையைக்காட்டுங்குறி; poisonous symtoms. பாம்பு கடித்தால், நஞ்சுக்குறி உடலில் மெல்லிய நீலவண்ணமாகப் பரவும் (இ.வ.).

*[நஞ்சு + குறி.]*

**நஞ்சுக்கொட்டை** *nañju-k-koṭṭai,* பெ. (n.), காக்கைக் கொல்லி விதை; moon seed plant; crow killer.

*[நஞ்சு + கொட்டை.]*

**நஞ்சுக்கொடி** *nañjiu-k-koḍi,* பெ. (n.), கொப்பூழ்க்கொடி; umbilical cord plecenta.

*[ நஞ்சு + கொடி.]*

குழந்தை பிறந்ததைத் தொடர்ந்து வெளியாவதும், கருப்பைக்குள் இருப்பதும், கடல்பஞ்சு போன்றதுமான, சவ்வுப்படலம்.

**நஞ்சுகத்தல்** *nañjugattal,* பெ. (n.), நஞ்சு கலத்தல்; mixing poison

*[நஞ்சு + உகத்தல்.]*

**நஞ்சுகரையல்** *nañju-karaiyal,* பெ. (n.), கருப்பங் கரைகை; abortion; miscarriage.

*[நஞ்சு + கரையல்.]*

கருப்பம் கரையுமாறு, உருவாக்கிய நஞ்சு கலந்த உணவு.

**நஞ்சுசுரம்** *nañju-šuram,* பெ. (n.), மகப் பேற்றிலுண்டாகுங் காய்ச்சல்; puerperal fever. **மறுவ.** பேறுகாலக் காய்ச்சல்.

*[நஞ்சு + சுரம்.]*

**நஞ்சுண்டபாலை** *nañjuṇḍa-pālai,* பெ. (n.), *நச்சுப்பாலை* பார்க்க; see *naccu-p-pālai.*

**நஞ்சுண்டமரம்** *nañjuṇḍa-maram,* பெ. (n.), ஒரு முள்மரம்; a variety of montana.

*[நஞ்சு + உண்ட + மரம்]*

நஞ்சுண்ட மாந்தன் மயிர்கள் சிலிர்த்துக் கிடத்தல் போல், முள் முளைத்தமரம் காணப்படுதலின் வந்த பெயர்.

**நஞ்சுண்டம்** *nañjuṇḍam,* பெ. (n.), முள் மரவகை; small leathery-obovate,- obtuse or acute leaved spinous cape jasmine.

*[நஞ்சு + உண்ட + (மர)ம்.]*

நஞ்சு உண்டார்க்கு நலம் செய்யும் மருந்திலை தரும் மரம்.

**நஞ்சுண்டல்** *nañjuṇḍal,* பெ. (n.), நஞ்சை உட் கொள்ளுகை; taking or swallowing poison.

**மறுவ:** நஞ்சுண்ணல்.

*[நஞ்சு + உண்டல்.]*

**நஞ்சுண்டனெண்ணெய்** *nañjuṇḍaṉ-eṇṇey.* பெ. (n.), நஞ்சுண்டான் மரத்தின் விதையினின்று பிழியும் எண்ணெய்; a fixed fatty oil prepared from the seed of the tree- Balanites acgyptiaca

*[நஞ்சுஉண்டன் + எண்ணெய்.]*

**நஞ்சுண்டான்** *nañgiuṇḍāṉ,* பெ. (n.), 1. நஞ்சினையுண்ட சிவன்; šivaṉ, as having swallowed.

**க.,** நஞ்சுண்ட **து.** நஞ்சுண்டெ.

*[நஞ்சு + உண்டான்.]*

கருநாடக மாநிலத்தில் உள்ள வீரசிவனியமரபினர், இப் பெயரைப் பெரிதும் சூடிக்கொள்வர்.

**நஞ்சுண்டை** *nañjuṇḍai,* பெ. (n.), முள்மர வகை; (L.) compound corymbed yellow-flowered, resin-seed

*[நஞ்சு + உண்டை.]*

**நஞ்சுண்டோன்** *nañjuṇḍōṉ,* பெ. (n.), 1. சிவன்; Šivaṉ. "*நாதப்பறையன் பெருங்குயத்தி பங்கன்றுங்க நஞ்சுண்டோன்*" (திருவாலவா. 30:9). 2. கள்ளரில் ஒரு பிரிவினர்; (திருவாலவா. 30:3 விசேடவுரை.). a division of kaḷḷars

*[நஞ்சு + உண்டோன்.]*

**நஞ்சுண்ணி** *nañjuṇṇi,* பெ. (n.), நஞ்சுண்பவன்; one who has rendered his body immune to poison

*[நஞ்சு + உண்ணி.]*

**நஞ்சுத்தடை** *nañju-t-tadai,* பெ. (n.), 1. நஞ்சுக் கொடி வீழாதிருத்தல்; detention of placenta. 2. கருப்பை வலிவு குறைந்து, அதனால், நஞ்சைப்பிரித்து வெளியில் தள்ளப் போதுமான ஆற்றலில்லாமல், கருப்பையில் ஒட்டிக் கொண்டிருத்தல்; retention of after birth in the womb by adhering to its walls in consequence of insufficient power to separate and expel it especially when the womb is weakened.

*[நஞ்சு + தடை.]*

**நஞ்சுத்தன்மை** *nañju-t-tanmai,* பெ. (n.), நச்சுத்தன்மை; having the nature of a poison.

*[நஞ்சு + தன்மை.]*

**நஞ்சுநூல்** *nañju-nūl,* பெ. (n.), நஞ்சுத்தன்மையையும், அதை முறித்து பண்டுவம் செய்யும் முறையையும், கூறும் நூல்; a book an toxicology.

*[நஞ்சு + நூல்.]*

இந் நூல், நஞ்சுமுறிவின் வழிவகைகளைச் சித்தர்பாடலுடன் விளக்கும் தன்மைத்து. உடம்பிற்குரிய பயறு, பழம், கிழங்கு வகைகளைக் கூறும் நூல். அளவுக்கு மீறிய உணவினால், உடம்பில் உருவாகும் நச்சுத்தன்மைகளையும், அவற்றை அகற்றும்வழி வகைகளையும் விளக்கும் நூல்.

**நஞ்சுப்பாலை** *nañju-p-pālai,* பெ. (n.), 1. கழுதைப்பாலை அல்லது நாய்ப்பாலை; an antidote for poison. 2. *நச்சறுப்பான்* பார்க்க; see *naccaruppān.*

*[நஞ்சு + பாலை.]*

**நஞ்சுபாய்ச்சு—தல்** *nañju-pāyccu-,* 5.செ. குன்றாவி. (v.t.), 1. *நஞ்சூட்டு (யாழ். அக.)* பார்க்க; see *nañjūṭṭu.* 2. இரண்டகம் செய்தல் ஏமாற்றுதல்; to defraud.

*[நஞ்சு + பாய்ச்சு—.]*

**நஞ்சுபிடித்தம்** *nañju-piḍittam,* பெ. (n.), நஞ்சுக்கொடி தங்குதலால் உண்டாகும் நோய் (இங் . வை. 418.); retention of the placenta.

*[நஞ்சு + பிடித்தம்]*

**நஞ்சுமாற்றுமருந்து** *nañju-māṟṟu-marundu,* பெ. (n.), நச்சுத்தன்மையை முறிக்கும் மருந்து; an antidote especially as a cure of poison

*[நஞ்சு + மாற்று + மருந்து.]*

**நஞ்சுமுறி** *nañju-muṟi,* பெ. (n.), மணிக்குடல்; the fold of peritonium which attaches the intestines to the posterior wall of abdomen.

*[நஞ்சு + முறி.]*

**நஞ்சுமுறிச்சான்**[1] *nañju-muṟiccāṉ,* பெ. (n.), 1. நஞ்சறுப்பான் செடி; country ipecacuanha 2. அவுரி; dog bite shurb dyer's indigo.

*[நஞ்சு + முறித்தான்→முறிச்சான்.]*

**நஞ்சுமுறிச்சான்**[2] *nañju-muṟiccāṉ,* பெ. (n.), *நஞ்சறப்பாய்ந்தான்* பார்க்க; see *nañjaṟa-p-pāyndāṉ.*

**நஞ்சுவிழாமை** *nañju-viḻāmai,* பெ. (n.), நஞ்சுக்கொடி விழாதிருக்கை; retention of placenta.

*[நஞ்சு + விழாமை.]*

**நஞ்சுவிழியரவு** *nañju-viḻi-y-aravu,* பெ. (n.), பார்வையாலேயே நஞ்சு செலுத்திக் கொல்வதாகக் கருதப்படும் பாம்பு வகை; திட்டிவிடம்; a kind of poisonous serpent. "*நஞ்சுவிழி யரவி னல்லுயிர் வாங்கி*" (மணிமே. 23. 84).

*[நஞ்சு + விழி + அரவு.]*

**நஞ்சுவெளிப்படு–த்தல்** *nañju-veḷippaḍu-,* 5.செ. குன்றாவி. (v.t.), கருப்பையிலிருந்து நஞ்சை வெளிவாங்கல்; to expel the placenta (afterbirth) with the aid of medicine or manipulation.

*[நஞ்சு + வெளிப்படு–.]*

**நஞ்சுறு–தல்** *nañjuṟu-,* 20 செ. கு. வி. (v.i.), மனமுருகுதல்; to melt; as heart through love. "*நஞ்சுற்ற காம நன்நாகரிகந் துய்த்தவாறும்*" (சீவக. 11).

**மறுவ.** நெஞ்சுருகல்.

*[நைந்து → நைஞ்சு → நஞ்சு + உறு–.]*

மனம், அன்பு மிகுதியால் நைந்து, உருகுந் தன்மைய்க் குறிக்கும்.

**நஞ்சுறை** *nañjuṟai,* பெ. (n.), **1.** நஞ்சு கலந்த மருந்து; a medicine prepared with poison, as one of the ingredients. **2.** நஞ்சையே மருந்தாகப் பயன்படுத்தல்; using a poison as a remedy. **3.** நச்சுக்கனிமம்; mineral poison.

*[நஞ்சு + உறை.]*

நீர்மநஞ்சு உறைந்த நிலையைக் குறிக்கும்.

**நஞ்சூட்டு–தல்** *nañjūṭṭu-,* 5 செ.குன்றாவி. (V.t.), **1.** படைக்கருவி முதலியவற்றுக்கு நச்சுத்தன்மை ஏற்றுதல்; to imbue with poison, as a weapon. **2.** நஞ்சு கலந்து கொடுத்தல்; to administer poison. "*நஞ்சூட்டு மெனவுரைப்ப*" (பெரியபு. திருநாவுக். 103).

*[நஞ்சு + ஊட்டு–.]*

**நஞ்செடு–த்தல்** *nañjeḍu-,* 5.செ. கு. வி. (v.i.), நஞ்சுமுறித்தல்; to neutralize the effects of poison.

*[நஞ்சு + எடு–.]*

திண்மம் ஆக இருந்த நஞ்சை எடுத்து நலப்படுத்தல் அல்லது பக்குவமாக்குதல்.

**நஞ்சை** *nañjai,* பெ. (n.), *நன்செய்* பார்க்க; see *nanšey.*

*[நன்செய் → நஞ்சை]*

ஒ.நோ புன்செய் → புஞ்சை

**நஞ்சையன்வெட்டு** *nañjaiyan-veṭṭu,* பெ. (n), நாணயவகை (பணவிடு.144); an ancient coin

**நஞ்சொட்டி** *nañjoṭṭi,* பெ. (n), மூலிகைச் செடிவகையுளொன்று(குருகூர்ப்.45); a kind of shrub.

*[நஞ்சு + ஒட்டி.]*

**நஞ்சொழி–த்தல்** *nañjōḻi-,* 4.செ. கு. வி. (v.i.), நஞ்சை நீக்குதல்; removing poison from the body.

*[நஞ்சு + ஒழி–.]*

**நஞ்சொளி–த்தல்** *nañjoḷi-,* 4.செ. குன்றாவி. (v.t.), நஞ்சுக்கொடி வெளிப்படாதிருத்தல்; the non appearance of the after birth subsequent to child birth concealment of after birth in the womb

*[நஞ்சு + ஒளி–.]*

**நட்சை** *natšai,* பெ. (n) தணக்கு மரம்; Catamaran tree.

**நட்டக்குத்தாக** *natta-k-kuttāga,* வி. எ. (adv.), செங்குத்தாக(நெல்லை); perpen dicular steply.

**மறுவ.** நெட்டுக்குத்தாக.

**நட்டகண்** *natta-kaṇ,* பெ. (n.), கண் இமைக்காதும், கருவிழி அசையாதும் இருக்கும் *நிலை;* eye that remains still without winking that has no reflex action.

**நட்டச்சாரி மூலி** *natta-c-cāri-mūli,* பெ. (n.), நாய்வேளை; dog-cleome.

**நட்டச்சாருதம்** *natta-c-cārudam,* பெ. (n.), கட்டுக்காடை; indian-roller.

**நட்டணம்** *nattaṇam,* பெ. (n.), *நட்டணை* பார்க்க; see *nattaṇai.*

*[நடு + அணம்.]*

'அணம்'=சொல்லாக்கஈறு.

**ஒ.நோ.** பட்டணம்.

**நட்டணை**[1] *nattaṇai,* பெ. (n.), 1. கூத்து (திவா.); dancing. 2. கோமாளிக் கூத்து; mimic gestures in a dance buffoonery. 3. கணவன், மனைவி இருவருள் ஒற்றுமையின்மை (வின்.); difference of opinion between husband and wife. 4. நடிப்பு; imitative action.'*நட்டணையதாக் கற்றகல்வியும்*' (தாயு. கருணாகர.4). 5. கொடுமை (யாழ். அக.); cruelty.

**க.** *நடணா.*

*[நடி→நடம்→நட்டம்→நட்டணை.]*

ஒ.நோ. தண்டம்→தண்டனை.

**நட்டணை**[2] *nattaṇai,* பெ. (n.), 1. சிந்தனையின்மை; recklessness, rashness. 2. பொறுக்குந் தன்மையின்மை; fastidiousness, squeamishness

*[நட்டு + அணை.]*

அறியாமையை நட்டுவைத்துப் பிறரை அணைபோல் தடுத்து எண்ணுதல்.

**நட்டணைக்காரன்** *nattaṇai-k-kāraṉ,* பெ. (n.), ஆணவமிக்கவன்; insolent, overbearing man.

*[நட்டு + அணை + காரன்.]*

தன்னைமுன் நட்டு (முன்னிறுத்தி), பிறரை அணைபோல் தடுத்துநிறுத்தி முனைப்போடு இயங்குபவன். பிறர் வளர்ச்சிக்கு தடையாயிருப்பவன்.

**நட்டணைக்கால்** *nattaṇai-k-kāl,* பெ. (n.), ஒற்றைக்காலை நிலத்தில் ஊன்றி, மற்றைக்காலைக் குறுக்காக, அக்காலின்மேல் ஊன்றுகை; keeping one leg crossed on the other-cross legged.

**மறுவ.** *அட்டணைக்கால்.*

*[நட்டணை + கால்.]*

**நட்டநடு** *natta-nadu,* பெ. (n.), சரியான நடுவம்; the very centre, middle. "*நட்ட நடுவேயிருந்த நாமென்பாச*" (தாயு. பரி.பூரண. 6).

**தெ.** நட்டநடுவு.

**மறுவ.** நடுவான நடு.

*[நட்டு → நட்ட + நடு.]*

இது மீமிசைச்சொல்.

**நட்டநடுநாள்** *natta-nadu-nāl,* பெ. (n.), உரியகாலம்; the due, appointed time "*அவளுக்குத் தூரத்துக்கு நட்ட நடுநாள்*" (இ. வ.).

**மறுவ.** ஏற்றபொழுது.

*[நட்ட + நடு + நாள்.]*

**நட்டநடுப்பெற** *nattanadu-p-pera,* வி. எ. (adv.). **1.** சரியான நடுவில்; in the exact middle. **2.** ஒழுங்கற்ற, மதிப்பின்றி; improperly **3.** பொதுமக்களின் எண்ணத்தைக் கருதாது; in open disregard of public opinion

*[நட்ட + நடு + பெற.]*

இதனை இலக்கண வழக்கில் ஒருபொருட்பன்மொழி என்பர்.

**நட்டபாடை** *natta-pādai,* பெ. (n.), குறிஞ்சிப் பண்வகை (பிங்.); a melody-type of the kuriñji class

*[நடம் → நட்டம் + skt பாஷை → பாடை.]*

**நட்டபீசம்** *natta-pišam,* பெ. (n.), ஒளிநீர் (விந்து) ஊறாத நிலை; destitute of seminal secretion-Impotent.

**நட்டம்**[1] *nattam,* பெ. (n.), **1.** நேர்நிலை; erectness, uprightness, perpendicularity "*தூணை நட்டமாய் நிறுத்து*" (வின்.). **2.** (கோவண) நீர்ச்சீலை மட்டும்கட்டிக் கொண்டு, ஆடையின்றி இருக்கை; semi-nakedness **3.** அம்மணம்; nakedness **4.** வெந்நீர்; hot-water.

*[நடு → நட்டு + அம்.]*

**நட்டம்**[2] *nattam,* பெ. (n.), நடனம்; dance, dancing. "*நள்ளிருளில் நட்டம்பயின் றாடுநாதனே*" (திருவாச. 1;89).

**த.** நட்டம் → **வ.** ந்ருத்., Pkt. நட்ட.

ஒ.நோ. படம் → பட்டம் = துணி.

அகத்தெழும் உணர்வுகளை மெய்ப் பாடுகள் மூலம்வெளிப்படுத்துவதே, நட்டம்.

*[நடி → நடம் → நட்டம்.]*

**நட்டமாடி** *nattam-ādi.* பெ. (n.), *நடவரசன்* பார்க்க; see *nadavarašan*

**மறுவ.** ஆடவல்லான்.

*[நட்டம் + ஆடி.]*

**நட்டமாய்நில்–தல்** *nattamāy-nil-,* 14. செ.கு.வி. (v.i.), **1.** செங்குத்தாக நிற்றல்; stand perpendicularly. 2. அடங்கா திருத்தல் (இ.வ.); to be haughty, headstrong

*[நட்டம் + ஆய் + நிற்றல்.]*

**நட்டமின்** *natta-min,* பெ. (n.), கள்ளி; indian spurge.

**நட்டமுட்டிசிந்தனை** *nattamutti-šindanai,* பெ. (n.). ஒளித்து வைத்த பொருளையும் நினைத்த பொருளையும் பற்றிக் கணியர் கணித்துக் கூறுகை; divination by a soothsayer about things lost, hidden or thought of. "*பாரினில் நட்ட முட்டிசிந்தனை பகரவேண்டில்*" (சூடா. உள். 302.).

**நட்டராகம்** *natta-rāgam,* பெ. (n.). குறிஞ்சிப்பண்; melody-type of the kuriñji class.

*[நட்டம் + skt. ராகம்.]*

**நட்டரிசியன்னம்** *nattarisi-y-annam,* பெ. (n.), பாதிவெந்த சோறு; haff-cooked rice.

மறுவ. நலுக்கரிசிச் சோறு.

**நட்டவக்காணி** *nattava-k-kāni,* பெ. (n), நாட்டியம் பயிற்றுவிக்கும் நட்டுவனார்க்கு அரசு அளிக்கும் இறையிலி நிலம்; (S.I.I.v,232); grand of tax free land sanctioned by king to dance faculty

*[நட்டுவம் → நட்டவம் + காணி.]*

**நட்டவம்** *nattavam,* பெ. (n.), *நட்டுவம்* பார்க்க; see *nattuvam.* "*நட்டவஞ் செய்ய நட்டவம் ஒன்றுக்கு......... பங்கு*" (S.I.I ii. 274).

மறுவ. நடனம்.

*[நட்டு + அம் = நட்டுவம் > நட்டவம்.]*

"*அம்*"–பெருமைப்பொருட்பின்னொட்டு.

**நட்டவர்** *nattavar,* பெ. (n.), நண்பர்; friendship "*நட்டவரி கலின்றித் தம்மின் மல்லு வெஞ்சமரிழைப்பவும்*" (திருவிளை.எல்லாம்11).

*[நள் → நள் + து–நட்டு → நட்டவர்.]*

**நட்டழிவு** *nattalivu,* பெ. (n.), நாற்று நட்டபிறகு, பயிரிலுண்டாகும் சிதைவு; damage to the crop after transplantation.

*[நடு → நட்டு + அழிவு.]*

நட்டபின் அழிவுற்ற நாற்றுப் பயிரைக் குறித்ததால் தொகுத்தல் திரிபாகும்.

**நட்டாத்திசூத்திரம்** *nattātti - šūttiram,* பெ. (n), கொள்ளைப் பொருள்; (யாழ்.அக.) booty

*[நட்டு + ஆற்றி + சூத்திரம்.]*

நிலையாக நட்டுவைத்திருக்கும் பொருளைப் போகிற போக்கில், கொள்ளையடித்துக் கட்டிச் செல்லுதல்.

**நட்டாமட்டி** *nattāmatti,* பெ. (n.), *நட்டா முட்டி*[1] (யாழ்.அக.) பார்க்க; see *nattā-mutti*[1]

*[நட்டாமுட்டி → நட்டாமட்டி.]*

**நட்டாமுட்டி**[1] *nattā-mūtti,* பெ. (n) 1. நடுத்தரமானது (யாழ். அக.): anything ordinary, middling. 2. கீழ்மை (வின்.): vulgarity.

ம. நட்டாமுட்டி.

*[நட்டு + ஆம் + முட்டி.]*

நட்ட நடுவில் முட்டிநிற்கும் தன்மையைக் குறித்த சொல்லாக இருக்கலாம்.

**நட்டாமுட்டி**[2] *nattā-mutti,* பெ. (n.), 1. ஏய்ப்பு; இரண்டகம்; fraud பொருள்களை நட்டா முட்டியாய்க் கொண்டுபோய் விட்டான். (உ. வ.). 2. ஒரு நூல் (யாழ். அக.); a treatise

*[நட்டாம் + முட்டி.]*

**நட்டாமுட்டிகள்** *nattā - muttigal,* பெ. (n.), அறியாப் பொதுமக்கள்; common, vulgar people.

*[நட்டாம் + முட்டி + கள்.]*

'*கள்*' = பலர் பாலீறு. நடுவுநிலையின்றி ஒருகொள்கையில் குருட்டுப் பற்றோடு முட்டி மோதிக் கொள்ளும், பொதுநிலை மாந்தர்.

**நட்டாமுட்டிமருந்து** *nattā mutti-marundu,* பெ. (n.), மருத்துவர் துணையின்றி பட்டறிவின் விளைவாகச் செய்யப்படும், கைமருந்து; (இ.வ). medicine prepared not by physicians but by experienced old people.

*[நட்டாமுட்டி + மருந்து.]*

நடுதல் இன்றி, முட்டிப்படுமாறு இயங்கும் நிலைத்தன்மை இன்மையைக் குறிக்க முன்னொட்டாக வருமிச்சொல், ஈண்டு மருந்துக்கு ஆகி வந்தமை அறிக.

**நட்டாமுட்டியாக** *naṭṭāmuṭṭi-y-āga,* வி. எ. (adv.), அந்த நேரத்திற்குரிய; for the time being. இஃது இப்பொழுது நட்டாமுட்டியாக இருக்கட்டும். (இ. வ.).

*[நட்டாமுட்டி + ஆக.]*

**நட்டாமுட்டிவேலை** *naṭṭāmuṭṭi-vēlai,* பெ. (n.), சில்லரை வேலை (நாஞ்.); minor-work.

*[நட்டாமுட்டி + வேலை.]*

**நட்டார்** *naṭṭār,* பெ. (n.), 1. உற்றார்; relations. 2. நண்பர்; friends. "*நட்டாருடையான்*" (இனி. நாற். 39).

*[நள்→நடு → நட்டார்.]*

**நட்டாற்றில்விடு-தல்** *naṭṭāṟṟil-viḍu-,* 18.செ. குன்றாவி. (v.t.), 1. இடர்வரும்போது கைவிட்டுப் போதல்; to desert a person at a critical moment. 2. ஆற்றின் நடுவில் விட்டு விடுதல்; to leave in the middle of a river.

*[நடு + ஆற்றில் + விடு-.]*

**நட்டு**[1] *naṭṭu,* பெ. (n.), உப்புக் கொட்டி வைக்கும் மேடை; (c.g.) platform for the storage of salt.

தெ. நட்டு.

*[நள் → நட்டு = செங்குத்து.]*

**நட்டு**[2] *naṭṭu,* பெ. (n.), 1. நாட்டியம் (யாழ். அக.); dance. 2. நாட்டியக்காரன் (வின்.); dancer. 3. *நட்டுவன்* பார்க்க; see *naṭṭuvaṉ.* 4. கீழ்மை (யாழ்ப்.); lowness, baseness, inferiority.

*[நள் → நடு → நாட்டு → நட்டு.]*

**நட்டு**[3] *naṭṭu,* பெ. (n.), சரியான நடுவம்; exact middle.

**மறுவ.** நட்டநடு.

*[நடு → நட்டு.]*

**நட்டுக்கதை** *naṭṭu-k-kadai,* பெ. (n.), 1. கட்டுக்கதை (யாழ். அக.); fable. 2. நிந்தை மொழி (வின்.); scoffing, sarcasm, scornful, remark.

*[நாட்டு → நட்டு + கதை.]*

**நட்டுக்குநடுவே** *naṭṭukku-naḍuvē,* வி. எ. (adv.), மிக நடுவில் (யாழ். அக.); exactly in the middle.

*[நடு → நட்டு.]*

**நட்டுக்கொள்ளல்** *naṭṭu-k-koḷḷal,* பெ. (n.), கயிற்றில் கழுத்தை கட்டித் தொங்கித் தற்கொலை செய்து கொள்ளுதல்; to commit suicide by hanging.

**மறுவ.** நான்று கொள்ளல்.

*[நட்டு + கொள்ளல்.]*

நாணிட்டுக்கொள்ளுதல், ஞான்று கொள்ளுதல் என்று, மக்களிடையே தற்கொலை குறித்து வழக்கூன்றிய சொல்.

**நட்டுச்சி** *naṭṭucci,* பெ. (n.), உச்சிப்பொழுது (இ. வ.); the time of the day when the sun is exactly at the zenith.

**மறுவ.** நண்பகல்.

*[நடு + உச்சி.]*

**நட்டுச்சினை** *naṭṭu-c-cinai,* பெ. (n.), நண்டு முட்டை (யாழ். அக.); crab's egg.

*[நண்டு → நட்டு.]*

**நட்டுச்சினைக்கல்** *naṭṭu-c-cinai-k-kal,* பெ. (n.), நீரூற்றின் மிகுதியைக் குறிப்பதும், நண்டு முட்டையின் நிறமுடையதுமான கிணற்றுக் கல்வகை (யாழ். அக.); a kind of stone, at the bottom of wells, of the colour of crab's spawn, supposed to indicate a good supply of water.

*[நண்டுச்சினை + கல் → நட்டுச்சினைக்கல்.]*

நண்டு → நட்டு = வலித்தல் திரிபு.

**நட்டுச்சினைமண்** *naṭṭu-c-cinai-man,* பெ. (n.), நண்டுமுட்டை நிறமுள்ள மண் (வின்.); a kind of earth of the colour of crab's spawn.

*[நண்டு + சினை + மண்.]*

**நட்டுத்துரவு** *naṭṭu-t-turavu,* பெ. (n.), நடனம் பயிலுமிடம்; the practicing place of dance.

**மறுவ.** நட்டத்துரவு.

*[நட்டு + துரவு.]*

துரவு = பரந்த இடம்.

ஒ.நோ. தோட்டந் துரவு.

நாட்டியம் பயிலும் பொருட்டு, அப்பயிற்சி நிகழுவதற்காக அமைக்கப்பட்ட தனியிடம்.

**நட்டுநடு** *naṭṭu-naḍu,* பெ. (n.), *நட்டுக்கு நடுவே (இ.வ)* பார்க்க; see *naṭṭukku naḍuvē.*

*[நட்டநடு → நட்டுநடு.]*

**நட்டுப்பாழ்** *naṭṭu-p-pāḻ,* பெ. (n.), நாற்று நட்டு விளையாமற் போன பயிர் (S.I.I. vii, 279); crop which become withered after transplantation.

*[நடு → நட்டு + பாழ்.]*

நாற்று நட்டபின்பு, நீர் இன்றியோ, மழைபொய்த்தோ, அல்லது பருவந்தவறிப் பெய்தோ, நோய்வாய்ப்பட்டோ, பாழான, நடவுப்பயிர்.

**நட்டுமுட்டு** *naṭṭu-muṭṭu,* பெ. (n.), 1. ஆடல் பாடல் (வின்.); music and dancing. 2. மத்தளக்காரனும், தாளக்காரனும் (இ. வ.); hand-drummer and cymbalist. 3. நடனத்துக்குரிய தளவாடப் பொருள்கள் (யாழ். அக.); accessories necessary to the art of dancing.

*[நடு + முட்டு.]*

நட்டு = நாட்டியம் பற்றிய சொல்.

முட்டு= தாளம், தாளக்கருவி பற்றியது.

**நட்டுமுட்டுக்காரர்** *naṭṭu-muṭṭu-k-kārar,* பெ. (n.), நட்டுவ மேளக்காரர்; dancing masters and drummers.

*[நட்டு + முட்டு + காரர்.]*

முட்டு=இங்கு மேளம் என்ற பொருளில் வந்தது காண்க. கையால் முட்டி ஒலி எழுப்புதல் பற்றியது.

"காரர்" உடைமைப் பெயரீறு.

**நட்டுவக்கலைக்கூடம்** *nattuva-k-kalai-k-kūḍam,* பெ. (n.), நடனம்பயிலும் மாணவர்க்குரிய பயிற்சிக்கூடம்; practising hall of learners of dance.

*[நட்டுவம் + கலைக்கூடம்.]*

**நட்டுவக்காலி** *nattva-k-kāli,* பெ. (n.), *நட்டுவாய்க்காலி* பார்க்க; see *nattu-vāy-k-kāli.*

*[நட்டுவம் + கால் + இ.]*

"இ"=சொல்லாக்க ஈறு.

ஒ.நோ. நாற்காலி.
நாட்டியம் ஆடுவது போலக் கால்களை நட்டு நடக்கும், இயல்புடைய உயிரி.

**நட்டுவத்துரவு**[1] *nattuva-t-turavu,* பெ. (n.), *நட்டுவக் கலைக்கூடம்* பார்க்க; see *nattuva-k-kalai-k-kūḍam.*

*[நட்டுவம் + துரவு.]*

*துரவு = பயிலுமிடம்.*

*ஒ.நோ. தோட்டந்துரவு.*

**நட்டுவத்துரவு**[2] *nattuva-t-turavu,* பெ. (n), நட்டுவத்தொழில் (M.E.R 390 of 1916); the profession of training girls in dancing.

*[நட்டுவன் + துரவு]*

துரவு என்று, நாட்டியம் பயிலிடத்தைக் குறித்த இச்சொல், நாட்டியத் தொழிலுக்கும் ஆகிவந்தது.

**நட்டுவம்** *nattuvam,* பெ. (n.), நாட்டியம் கற்பிக்கும் தொழில்; the profession of training dancing girls and directing their dancing.

**மறுவ.** நட்டவம், நடனம்.

**த.** நட்டுவம் → skt naṭa-tva.

**தெ.** நட்டுவ.

*[நடு → நட்டு + அம்.]*

'அம்' = சொல்லாக்க ஈறு.

நாட்டியம் பயிலும் மாணவர்கட்கு, அக் கலையினைப் பயிற்றுவிக்கும் கலைத்தொழில்.

**நட்டுவழியாள்** *nattu-valiyāl,* பெ. (n.), நன்னாரி; Indian-sarasaparilla.

**நட்டுவன்** *nattuvan,* பெ. (n.), நாட்டிய ஆசிரியன்; one who instructs dancing "*உயிரையெல்லா, மாட்டுமொரு நட்டுவனெம் மண்ணல்*" (திருவாத. பு. புத்தரை. 75).

**க.,** நட்டுவ., **தெ.,** நட்டுவுடு., **ம.** நட்டுவன்.

*[நாள் → நடு → நாட்டு →நட்டு + அன்.]*

**நட்டுவாக்காலி** *nattuvākkāli,* பெ. (n.), *நாட்டுவாய்க்காலி* பார்க்க; see *nattuvāy-k-kālai.*

**நட்டுவாக்கிளி** *nattuvākkili,* பெ. (n.), *நட்டுவாய்க்காலி* பார்க்க; see *nattuvā-k-kali*

**நட்டுவாங்கம்** *nattu-vāṅgam,* பெ. (n), *நட்டுவம்* பார்க்க; see *nattuvam.*

**நட்டுவாய்க்காலி** *nattuvāy-k-kāli,* பெ. (n.), கல்விக் கொட்டுந் தன்மையுள்ள நச்சுயிரி; scorpion of a larger kind.

**ம.** நட்யகாலி.
நண்டு போன்ற வாயையும், காலையும் கொண்டது.



**நட்டுவாற்காலி** *naṭṭuvāṟ-kāli,* பெ. (n.), *நட்டுவாய்க்காலி* பார்க்க; see *naṭṭuvāy-k-kāli.*

**நட்டுவிழல்** *naṭṭu-viḻal,* பெ. (n.), 1. மெய்க்குற்றமைந்தனுள் தலைச் சாய்கை (பிங்); slanting position of the head, one of five mey-k-kuṟṟam. 2. தலை கீழேயூன்றி விழுகை (யாழ். அக.); standing on the head and tumbling, performing somersault.

*[நட்டு + விழல்.]*

பெருமிதமும், செம்மாப்பும் ஒருசேர இணைந்து நேர்மையின் சின்னமாய் நட்டுத் திகழ்ந்த தலை, மானக்கேட்டின் மிகுதியால், சாய்ந்து விழுகை.

**நட்டுவிழு—தல்** *naṭṭu-viḻu-,* 2.செ. கு. வி. (v.i.), செருக்குறுதல்; to be haughty *'ஏன் வீணாக நட்டு விழுகிறாய்'* (உ. வ.).

*[நட்டு + விழு—.]*

**நட்டுவை—த்தல்** *naṭṭu-vai-,* 4.செ. குன்றாவி. (v.t.), 1. மரக்கன்று முதலியவற்றை நடுதல்; to plant, as saplings. 2. குடும்பம் முதலிய வற்றை நிலைநிறுத்துதல்(வின்); to establish, as a family.

*[நட்டு + வை—.]*

**நட்டுவைத்தவன்** *naṭṭu-vāittavaṉ,* பெ. (n.), 1. மரக்கன்று முதலியவற்றை நட்டு வைத்தவர்; one who planted as saphings. 2. காப்பாளன்; protector, guardian.

*[நட்டு + வைத்தவன்.]*

**நட்டுவைத்தெலும்பு** *naṭṭuvaittelumbu,* பெ. (n), தொடைப்பக்கத்து எலும்பு; thigh bone, femur.

*[நட்டு + வைத்த + எலும்பு.]*

**நட்டெலும்பு** *naṭṭelumbu,* பெ. (n). முதுகெலும்பு (நெல்லை); back-bone

க. நட்டெலும்பு.

*[நடு → நட்டு + எலும்பு.]*

**நட்டோட்டுக்கிட்டம்** *naṭṭōṭṭu-k-kiṭṭam,* பெ. (n.), சேற்றின்மேல் உலர்ந்திருக்கும் மண்பொறுக்கு (வின்); crust or coat of dry mud formed over a brackish of moist soil.

*[நட்டோடு + கிட்டம்.]*

**நட்டோட்டுப்பார்** *naṭṭōṭṭu-p-pār,* பெ. (n.), எளிதில் பெயர்ந்துவரும் பாறைத் தகடு; thin coat or lamina of rock that easily splits off

*[நட்டோடு + பார்.]*

**நட்டோடு** *naṭṭōḍu,* பெ. (n.), நண்டின் மேலோடு (வின்.); lobster shell.

*[நண்டு + ஓடு.]*

**நட்டோர்** *nattōr,* பெ. (n.), **1.** நண்பர்; friends. "*நட்டோர்க்கல்லது கண்ணஞ்சலையே*" (பதிற்றுப். 63.3). "*முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சு முண்பர் நனிநாகரிகர்*" (நற்றிணை). **2.** உறவினர்; (திவா.) relation.

*[நள்→நட்டு + ஓர்.]*

**நட்பத்திரிகை** *natpattirigai,* பெ. (n.), சேம்பு; Indian-kales.

**நட்பாட்டம்** *natpāttam,* பெ. (n.), அன்பு வளர்க்கும் பான்மையிலாடும் ஆட்டம்; friendly match

*[நண்பு → நட்பு + ஆட்டம்.]*

**நட்பாடல்** *natpādal,* பெ. (n.), நட்பு பாராட்டுதல்; befriending; "*நட்பாட றேற்றாதவர்*" (குறள், 187.).

*[நட்பு + ஆளல் → ஆடல்.]*

**நட்பாராய்தல்** *natpārāydal,* பெ. (n.), நட்புக்குரியரைத் தெரிவுசெய்யும் திறம்; scrutiny in the choice of friends. (குறள், அதி.80.).

*[நட்பு + ஆராய்தல்.]*

நட்பாராய்தல் என்பது யாதெனின், நட்பிற்குத் தகுந்தவரை ஆராய்ந்தறி தலாகும். "*மணவுறவு போன்று, நட்புறவும் வாழ்நாள் முழுதும் நீடிப்பதாகையாலும், மெய்ந்நட்பால் ஆக்கமும், தீ நட்பால் அழிவும், நேர்வதாலும், மலர்ந்த முகத்தையும், இனிய சொல்லையுமே சான்றாகக் கொண்டு, எவரையும் நம்பிவிடாமல், எல்லா வகையாலும் ஆராய்ந்து பார்த்து, உண்மையான அன்பரையே, நண்பராகக் கொள்ள வேண்டுமென்று கூறியவாறாம்*" என்று, மொழிஞாயிறு, நட்பாராய்தல் பற்றி நவிலுகிறார். (திருக்.தமி.மர.பக்.92).

**நட்பாளர்** *natpālar,* பெ. (n.), **1.** உற்ற நண்பினர்; trustful friends. **2.** அரசர்க்குறுதிச் சுற்றமைந்தனுள் நம்பிக்கைக்குரிய நட்பினராய் உள்ளவர் (திவா.); confidant of a king, one of five arašarkkuruti-c-curram.

*[நண்பு → நட்பு + ஆள் + அர்.]*

**நட்பிலூட்டல்** *natpil-ūttal,* தொ.பெ. (vbl n.), நோய்தீர்க்கும் மருந்தை உடலுக்குஏற்றவாறு தக்க பக்குவத்தில் தருதல்; taking a medicine with its appropriate way

*[நட்பில் + ஊட்டல்.]*

**நட்பு[1]** *natpu,* பெ. (n.), **1.** தோழமை; friends, amity. "*நட்பிடைக் குய்யம் வைத்தான்*" (சீவக. 253). **2.** உயர்ந்த அரசருக்குரிய இன்றியமையாத ஆறு கூறுகளுள் ஒன்று; allies, one of six important aspects to king or Government "*படைகுடி கூழமைச்சு நட்பரணாறும்*" (குறள், 381.). **3.** நண்பன்; friend. '*எனக்கவன் நட்பு*' (உ. வ.). **4.** ஐவகைக் கோள் நிலையுள், நட்பைக்குறிக்குந் தன்மை; friendly aspect of a planet, one of five kōl-nilai. **5.** உறவு (பிங்.); relationship, kinship **6.** சுற்றம் (சூடா); relation, kindred **7.** யாழின் நான்காம் நரம்பு; the fourth string of a lute. "*இணைகிளை பகை நட்பென்றிந் நான்கின்*" (சிலப். 8: 33). **8.** கைக்கூலி (பரிதானம்) (வின்.); bribe. **9.** மாற்றரசரோடு நட்புச்செய்கை (பு. வெ. 9.37, உரை). reconciliation with enemy kings. **10.** காதல்; love. "*நின்னொடு மேய மடந்தை நட்பே*" (ஐங்குறு. 297).

மறுவ. கேண்மை.

க. நண்பு.

[நள் → நண் → நண்பு → நட்பு.]

நட்பின் இலக்கணத்தை வள்ளுவப் பெருந்தகையார் நான்கு அதிகாரங்களில் விளக்கிப் போந்துள்ளார். ஏனெனில் அறிவுநிலையும், பண்பாட்டு அமைவுநிலையும். பெரும்பகுதி, சேர்க்கையாலேயே செம்மைப்பட்டு அமைகின்றது. சேர்ந்த இடமே ஒருவனைச் சீரியவனாக்கும் என்பது மாறா உண்மையாகும். நட்பு என்பது முகத்தான் நகுவது மட்டுமன்று; அகஉணர்ச்சி ஒன்றுசேர அமைவதேயாகும். வெறும் விளையாட்டும், நகைகூடப் பேசுவதும், நட்பின் சின்னங்கள் ஆகா. நண்பன் துன்பத்தில் இருக்கும்போதும், உதவிகள் தேவையுற்றவனாக இருக்கும்போதும், உடுக்கை இழந்தவன் கைபோலச் சென்று, துன்பத்தைக் களைந்து உதவுபவனே, சிறந்த நண்பன் ஆவான். நட்பின் உயர்நிலை யாதென்றால், என்றும் மாறாது சென்று, நண்பனுக்கு உதவுதலே யாகும். '*A friend in need is a friend indeed*, என்ற ஆங்கில முதுமொழியும், இதை வலியுறுத்தல் காண்க.

நண்பன் தீயவழிகளில் செல்லுங்கால் அவ்வழி நீக்கி, நல்லாற்றில் போக்கி, அவனின் இன்ப துன்பங்களில் பங்கு கொண்டு செல்லுதல் வேண்டும். நட்புக் கைக்கோடல் முகநக நகுதற்கன்று. மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற்கேயாம். இக் கருத்துக்களை விளக்கும் குறட்பாக்கள்:

"*முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்*
*தகநக நட்பது நட்பு.*" – (குறள், 786.)

"*உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே*
*யிடுக்கண் களைவதாம் நட்பு.*"–(குறள், 788.).

"*நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி*
*யொல்லும்வா யூன்று நிலை.*" –(குறள், 789.).

"*அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க*
*ணல்ல லுழப்பதாம் நட்பு.*'–(குறள், 787.).

"*நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்*
*மேற்சென் றிடித்தற் பொருட்டு.*" –(குறள், 784.).

"*புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதான்*
*நட்பாங் கிழமை தரும்.*" –(குறள், 785.).

எனவே நட்பின் உண்மை இலக்கணம் புணர்ந்து பழகுதல் அன்று; உணர்வு ஒன்றிய நிலையே என்பது போதரும். மேற்கூறிய அனைத்தையும் நோக்குங்கால், '*உள்ளச்செறிவே*' நட்பின் இலக்கணம் என்பது வெள்ளிடைமலை என இலங்கும்.

நட்பின் இலக்கணத்தை வரையப்புகுந்த உலகப்புகழ் நாடகமேதை, ஆங்கிலப் பெரும்புலவர் செகப்பியரும் (Shakespeare), தாம் எழுதிய '*Friendship*' என்ற பாடலில், மேற்கூறிய கருத்தை உள்ளடக்கியே வரைந்துள்ளார். அவரும் உள்ளச்செறிவே நட்பின் இலக்கணம் என்பதை உய்த்துணர வைத்துள்ளார். அவர்,

Everyone that flatters thee
Is no friend in missary

.......................

He that is thy friend indeed,
He will help thee in thy need
If thou sorow he will weep
If thou wake he cannot sleep
Thus of every grief in heart
He with thee doth bear a part

எனக் கூறுகின்றார். இவ்விரு பெரும்புலவர்களின் கூற்றுகளால், நட்பின் இலக்கணம் உள்ளச் செறிவே என்பது பெறப்படும். '*The union of two hearts is friendship*' என்று ஆங்கிலவாணர்கள் மொழிதலையும் நோக்குக.

எனவே நட்பின் உண்மை இலக்கணமாகிய (உள்ளச்) செறிவு என்பதை, நட்பு என்ற சொல்லின் அடிச்சொல் எவ்வாறு உணர்த்துகின்றது என்பதை நோக்குவோம்.

நள்–நண்–நண்பு–நட்பு.

இவ்வாறே நட்டல், நட்டார், நண்ணல், நணுகல், நணுகுதல், நண்ணுநர், நண்பன்,

நண்ணலர், நண்ணார், நணுகலர், நணுகார் என்ற இத்தனை சொற்களுக்கும், '*நள்*' என்பதே அடிச்சொல்லாகும். இவை யாவும் '*செறிவு*' என்ற பொருளை உணர்த்தி நிற்கும் வேர்ச்சொல்லாம். '*நள்*' என்பதின் திரிபுற்றப் பொருளை உணர்த்துவனவாகும்.

'*நள்*' என்பதற்குச் '*செறிவு*' என்பது பொருளாகும். அதுவே '*நளி*' என உரிச்சொல்லாய், இகரம் பெற்று நின்றது. நளி என்ற உரிச்சொல்லும், '*செறிவு*' என்ற பொருளை உணர்த்தும்.

"*நளிஎன் கிளவி செறிவுமாகும்.*"–(தொல். சொல். 323.).

இலக்கியங்களிலும், பல இடங்களில் செறிவு என்ற பொருளிலேயே, '*நள்*' என்பதும், '*நளி*' என்பதும், பயன்படுத்தப்பட்டுள்ளன.

"*நள்ளென் றன்றே யாமஞ் சொல்லவிந் தினிதடங் கினரே மாக்கள்........*" –(குறுந்.9.).

"*........உலகம்*

*கயங்கள் அற்ற பைதறுகாலைப் பீளொடு திரங்கிய நெல்லிற்கு நள்ளென் யாமத்து மழைபொழிந் தாங்கே.*" –(நற்.22.)

"*கொன்றையஞ் சடைமுடி மன்றப் பொதியில் வெள்ளியம் பலத்து நள்ளிருட் கிடந்தன.*"–(சிலம்பு-பதிகம், 30–35.).

"*நரன்றுயிர்த்த நித்தில நள்ளிருள்கால் சீக்கும் வர்ன் றுயிர்த்த பாக்கத்து வந்து.*" –(திணைமா. நூ 39.).

"*நளியிரு முந்நீர் நாவாயோட்டி வளிதொழி லாண்ட உரவோன் மருக.*" –(புறநா. 99.).

"*நளியிருஞ் சோலை நரந்தந் தாஅய்.*" –(பரிபாட, 7–11.).

"*நளியிரு முந்நீர்நலம்பல தரூஉம்.*"–(மணிமே.1:92.).

"*சிலைப்புவல் ஏேற்றின் றலைக்கை தந்துநீ நளிந்தனை வருத லுற்றனளாகி.*" –(பதிற்று.52.).

**பிறமொழிச்சொற்கள்:** இவ்வாறே பிறமொழிச் சொற்களைப் பிரித்து நோக்குவோம்.

English - Friendship,

Anglo - Saxon - (fri-freo) - freon - to love (freond - friendship)

Gothic - (frieis) - frijou - to love (frijouds)

Dutch - (vry) - vrien - to love (vriend)

Icelandic - (fri) - frsen - to love (freendi)

German - (frei) - befreunden - to love (freund - friundschaft)

Latin - (amor-love) - aimere to love (Amitie - friendship)

Sanskrit - (pri) - priam - priam

ஈங்குக் காட்டப்பட்ட மொழிகளின் நட்பு என்ற பொருளை உணர்த்தும் சொற்களைக் காணுங்கால் அவை, '*Free*' என்ற பொருளைத் தரும் அடிச்சொல்லிலிருந்து தோன்றி வளர்ந்து '*அன்பு செய்*' '*to love*' என்ற பொருளில், செம்மையுற்றன என்பதும், விளக்கமுறும். எனவே இவை நட்பின் இலக்கணத்தை வரைந்துணர்ந்தும் அடிச்சொல்லிலிருந்து தோற்றமெடுத்தனவல்ல.

மேற்கூறியவைகளால் பிறமொழிச் சொற்களை நோக்கத் தமிழ்ச் சொல்லான '*நட்பு*' என்பது, உண்மை நட்பின் இலக்கணத்தை வரைந்துணர்த்தும், '*நள்*' என்பதை வேர்ச்சொல்லாகக் கொண்டுள்ளது என்பது, உள்ளங்கை நெல்லிக்கனி எனத் தெளிவுற்று விளங்கும். இத்தகு உயர்நிலையை நோக்குங்கால், கல்தோன்றி மண்தோன்றாக்

காலத்தே, முன்தோன்றி மூத்த குடியினராகிய தமிழ்மக்கள், நட்பின் ஆழம், இலக்கணம் ஆகிய இவைகளை அறிந்து, *'நட்பு'* என்று பெயரிட்டனர் என்பது விளக்கமுறுதலின், உள்ளத்தில் மகிழ்வுத்தேன் ஊற்றெடுக்கின்றது; தமிழ்த் தாயின் உயர்தனிச் செம்மைப்பாடு வீறுபெறச் செய்கின்றது. இவ்வாறு சொல்லின், உண்மைப் பொருளைச் செவ்வனே உணர்த்தவல்ல அடிச்சொற்களை உடைய சொற்கள் மிகப்பலவாம். இவற்றை எல்லாம் மற்ற மொழிகளோடு ஒப்பிட்டு ஆய்ந்து வெளிப்படுத்திடின், தமிழின் இனிமை, தனிமை, மேன்மை, செம்மை, தாய்மை ஆகிய இன்னோரன்ன பண்புகள் மிளிரும் என்பதில் ஐயப்பாடு சிறிதேனும் இன்றென்றறிக.

**நட்பு**[2] *natpu,* பெ. (n.), புணர்ச்சி; sexual union. *"நாமமருடலு நட்புந் தணப்பும்"* (பரிபா.20,108.).

*[நள் → நண்பு → நட்பு.]*

ஒரு பாலார் கொள்ளும் நட்பு, புறநட்பு என்றும், மறுபாலார் கொள்வது அகநட்பென்றும் உள்ளத்தால் செறிந்தவர், உடலால் பொருந்துவர்.

**நட்புக்காட்டு-தல்** *natpu-k-kāttu-,* 5.செ. கு. வி. (v.i.), 1. தோழமை காட்டுதல்; to show friendliness 2. குழந்தைகட்குத் தின்பண்டம் உதவுதல்; to give bon-bons to children 3. கையூட்டுக் கொடுத்தல்; to be bribe

*[நட்பு + காட்டு-.]*

**நட்புக்கொள்(ளு)-தல்** *natpu-k-ko-lu-,* 10 செ.குன்றாவி. (v.i.), தோழமை கொள்ளுதல்; to have a friendship.

*[நட்பு + கொள்-.]*

**நட்புக்கோள்** *natpu-k-kōl,* பெ. (n.), இயைபான கோள் (யாழ். அக.); friendly - planet. *'உலகிற்கு மதிநட்புக்கோள் நாம் அறிந்த ஒன்றேயாம்'* (உ.வ.)

*[நட்பு + கோள்.]*

**நட்புச்சரக்கு** *natpu-c-carakku,* பெ. (n.), நலம் நல்கும் சிறந்த மருந்து; friendly drugs

*[நட்பு + சரக்கு.]*

**நட்புத்தானம்** *natpu-t-tāṉam,* பெ. (n.), கோள்நிலைச் சிகரத்தில், (இராசியின்) ஓரையின் நட்பைக் குறிக்கும் வீடு (யாழ். அக.); the friendly house of a planet or Irāši, in a horoscopic diagram

*[நட்பு + தானம்.]*

**நட்புத்திட்பு** *natpu-t-titpu,* பெ. (n.), நிலத்தின் திணிந்தத் தன்மை (இ.வ.); nature of soil, as good or bad

[நள் + பு → நட்பு; திள் = திண்மை. திள் + பு → திட்பு. நட்பு + திட்பு→நட்புத்திட்பு]
நிலத்தின் திண்மைத்தன்மை. மண் செறிந்த அல்லது அடர்ந்த திண்மையான நிலம். "மண்திணிந்த நிலன்" என்று, புறநானூறு 2-ஆம் பாடல் புகல்வது காண்க.

**நட்புபாராட்டல்** *natpu-pārāttal,* பெ. (n.), *நட்புக்கொள்(ளு)-தல்* பார்க்க; see *natpu-k-koll(u)-.*

*[நட்பு + பாராட்டல்.]*

**நட்புமருந்து** *natpu-marundu,* பெ. (n.), நோயினை முழுமையாகப் போக்கும் மருந்து; principle medicine

*[நட்பு + பாராட்டல்.]*

**நட்புவை-த்தல்** *natpu-vai-*, 4செ.கு.வி. (vi), தோழமை கொள்ளுதல்; to cultivate friendship.

*[நட்பு + வை-.]*

**நட்புரு** *natpurū*, பெ. (n.), தோழமை உணர்வு மிக்கவன்; senstitive of friendship person

*[நட்பு + உரு.]*

**நட்புறவு** *natpuravu*, பெ. (n.), இருவர் அல்லது இரு நாடுகளுக்கு இடையில் மலரும் நல்லுறவு; amity or friendship between persons or countries. நாம் அண்டை நாட்டோடு நட்புறவுடனிருந்தால், எல்லைப்பகுதியில் மக்கள் தொல்லையின்றி வாழ்வர். (இக்.வ.).

**மறுவ.** நல்லுறவு.

*[நட்பு + உறவு.]*

நட்புறவு என்பது, வாழ்வியல் உறவு உண்மையானதாகவும், வலிமையுள்ளதாகவும், மாந்தர்தமை மாற்றும் உறவு. மன்பதையிலுள்ள எல்லா உறவுகளிலும் உயர்ந்தது. ஈடு இணையற்றது. இத்தகைய நட்புறவு பற்றி மொழிஞாயிறு நவிலுவது:-

"நாகரிக நிலையிலேனும், அநாகரிக நிலையிலேனும், ஒருவன் பிறர்உதவியின்றி வாழ்தல் அரிது. அவ்வுறவு இயற்கை, செயற்கை என இருதிறப்படும். இயற்கையுறவு அரத்தக் கலப்பாலான இனவுறவு; செயற்கையுறவு மணவுறவு, தொழிலுறவு, தத்துறவு (மகட் கொடையால் வந்த உறவு); உதவிப்பேற்றுறவு, பழக்கவுறவு, நட்புறவு எனப்பலவகைப்படும்" இந் நட்புறவு பற்றி வள்ளுவர் வாய்மொழி வருமாறு:-

"*செயற்கரிய யாவுள நட்பினதுபோல் வினைக்கரிய யாவுள காப்பு*" (குறள்,781.).

இந் நட்புறவு, உண்மையாக உலக மாந்தர்க்கு வாய்த்துவிட்டால், அதுவே. உயர்ந்த உறவாகும். இதுவே வலிமைசான்ற உறவு. இந் நட்புறவு உறுதிமிக்க உறவாக வாய்க்கப்பெற்றவரே. உலகில் கொடுத்து வைத்தவர். இனவுறவு உறுதியற்று வீழ்ந்தாலும், உண்மையான நட்புறவு திண்மையாக அமைந்துவிட்டால், ஒருவர் செய்யவேண்டியது யாதுமில்லை என்று வள்ளுவர் மொழிகின்றார், இவ் வுண்மையான நட்புறவு, இனவுறவினும் மிகச்சிறந்தது. இத்தகைய மாபெரும் உறவைத் தேடிக்கண்டு பிடிப்பதும், பெறுவதும், பேணிக்கொள்வதும் அரிதாதலால், "செயற்கரிய யாவுள நட்பின்" என்றார் வள்ளுவப்பேராசான். உண்மையான நண்பர், துன்பக்காலத்தில் உயிரையும் உதவிக்காப்பாராதலின். அதுபோல் "*வினைக்கரிய யாவுள காப்பு*" என்றார்.

"A father is a treasure, a brother comfort but a friend is both. என்னும் ஆங்கிலப் பழமொழி' இங்கு நினைவுகூரத் தக்கது. இருவகையுறவும், தனிப்பட்ட மாந்தர்க்குப் போன்றே, அரசுகட்கும் இன்றியமையாதனவாம்" (திரு.தமி.மர.பக்.87.பகுதி-3.).

**நட்புருவாக்கு-தல்** *natpuru-v-ākku-*, 5செ.குன்றாவி. (v t.), தோழமையை உருவாக்குதல்; to create friendship

*[நட்பு + உருவாக்கு-.]*

ஆழுங்கால்பட்ட நட்புணர்வை வளர்த்தல்.

**நட்புறவுக்கொள்கை** *natpuravu-k-kolgai*, பெ. (n.), இருநாடுகளுக்கு இடையிலான நல்லிணக்க ஒப்பந்தக் கொள்கை; foreign amity policy. "*அண்டை நாடுகளுக்கிடையே அமைந்த, நிலையான நட்புறவுக் கொள்கையே, மக்களின் வளர்ச்சிக்கு வழிவகுக்கும்*" (இக்.வ.).

*[நட்புறவு + கொள்கை.]*

**நட்புறுகை** *natpurugai,* பெ. (n.), *நட்புக்கொள்(ளு)-தல்* பார்க்க; see *natpu-k-kollu-,*

*[நட்பு + உறுகை.]*

**நட-த்தல்** *nada-,* 3. செ. கு. வி. (v.i.), 1. நிற்கும் இடத்தைவிட்டு நீளுதல் போற் காலடிவைத்துச் செல்லுதல்; to walk, go, pass, proceed "*காளையன்னாளை நடக்கவும் வல்லையோ*" (நாலடி. 398.). தவழ்ந்து விளையாடிய குழந்தை இப்போதுதான் நடக்கத் தொடங்கயிருக்கிறது (உ.வ.) 2. ஒழுகுதல்; to behave. '*பையன் ஆசிரியரிடம் எப்படி நடக்கிறான்*' (உ. வ.). '*வேலைக்காரன் வீட்டுத்தலைவனிடம் பணிவாய் நடந்து கொள்ள வேண்டும்*'. 3. பரவுதல்; to spread. '*'குரையழனடப்ப*' (பு. வெ. 1:8). 4. காலத்தில் நிகழ்தல்; ஏற்படுதல்; to happen, occur, ensue, take place as performance, occurrence or event. நடந்து நடந்துவிட்டது வருந்திப் பயன்இல்லை (உ.வ.) 5. நிகழ்ந்து வருதல்; to rage, as war, to be rife, as disease, to prevail as influence, to be in progress, as a performance. '*தாளிகை எழுத்தாளர் அதிகாரம்தான் இன்று மிகுதியாக நடக்கிறது*'. (உ.வ.). 6. நிறைவேறுதல்; to be fulfilled, to be effective. '*உன் சூளுரை (சபதம்) நடக்க வில்லை*' (உ.வ.). போன காரியம் நடந்ததா? (உ.வ.) 7. நிகராதல்; (உ. வ.) to be reckoned as equal, to go along with. "*மனை வாழ்க்கை போற்றுடைத்தே ஸைலறத்தாரோடு நடக்கலாம்*" (சிறுபஞ். 100). 8. குடும்பம், ஆட்சி, அலுவலகம் முதலியவை இயங்குதல்; to function, run. மூத்தமகனின் சம்பளத்தில் தான் குடும்பம் நடக்கிறது (உ.வ.). வணிகம் நன்றாக நடக்கிறது. (உ.வ.). 9. நாடகம் நிகழ்த்தப் படுதல்; திரைப்படம் காட்டப்படுதல்; to run of film. இந்தத் திரைஅரங்கில் என்னபடம் நடக்கிறது (உ.வ.). 10. குறிப்பிட்ட வயது உடையதாக இருத்தல்; to run of age. என் பேரனுக்கு ஒன்று முடிந்து இரண்டு நடக்கிறது (உ.வ.).

**க.** நாட. **தெ.** நடுச்சு. **ம.** நடக்கு **து.** நட்புணி

*[நெடு → நெட → நட. நடு > நட..... (வே.க. 3:49) நீட்சிக்கருத்து வேரினின்று கிளைத்த சொல்.]*

நடத்தல்= நிற்கும் இடத்தைவிட்டு நீளுதல் போற் காலடி வைத்துச் செல்லுதல்.

**நடக்கீதம்** *nadkkidam,* பெ. (n.), கௌரி வைப்பு நஞ்சு (மூ.அ); prepared arsenic.

*[நடம் + கீதம்.]*

**நடக்குமிடம்** *nadakkumidam,* பெ. (n.) செல்வாக்குள்ள இடம்; (சீவக. 1637, உரை). the sphere of one's influence.

*[நடக்கும் + இடம்.]*

**நடக்கை**[1] *nadakkai,* பெ. (n.), 1. செல்கை; walking, proceeding 2. வழக்கு; custom, usage "*ஞாலத்து வரூஉ நடக்கையது குறிப்பின்*" (தொல். பொருள். 91). 3. ஒழுக்கம்; conduct behaviour, character "*அவன் நல்ல நடத்தையுள்ளவன்*" (உ. வ.). '*நன்னடத்தைச் சான்றிதழ் வாங்கிக் கொண்டு வா*' (உ. வ.). 4. அளவியல் கூறுகளில் ஒன்று; traverse survey

**ம.** நட.

*[நட → நடக்கை. (வே.க. 3.49).]*

**நடக்கை**[2] *nadakkai.* பெ. (n.), நிகழ்கை; occurrence, incident, event.

**ம.** நட.

*[நட + கை.]*

**நடக்கை**[3] *nadakkai*, பெ. (n.), நினைவு, சொல், செயல், ஆகிய முக்கரணவொழுக்கம்; to behave oneself. அவன் நடக்கையில் உயர்ந்தவன். (உ.வ.).

மறுவ. நடத்தை.

L. con, together; duct to lead

*[நட → நடக்கை.]*

வாழ்க்கையில் ஒருவன் நினைவு, சொல், செயல், ஆகிய முக்கரணத் தொழிலால் நடக்கிறான். இதனால் முக்கரண வொழுக்கத்திற்கு, நடத்தை அல்லது நடக்கை என்று பெயர். ஒழுக்கம் என்ற சொல்லும் இக் கரணியம் பற்றியதே. ஒழுகுதல் = நடத்தல் இன்று இப்பொருள் வழக்கற்ற தென்றறிக. (சொ.ஆ.க.பக்.70).

**நடக்கையறிவாள்** *nadakkai-y-arival*, பெ. (n), கொடி வேலி; lead-wort plumbago zeylanica

**நடகாயஇளகியம்** *nada-kāya-iḷagiyam*, பெ. (n.), மகவீன்ற பெண்களுக்குத் தரும் மருந்து; electuary given to woman after delivery.

மறுவ. நடைகாயம், நாட்கண்டி.

*[நடகாயம் + இளகியம்.]*

மகவீன்ற பெண்கள், இவ் விளகியத்தை உண்பதால், பேறுகாலத்தே இழந்த வலிமையினை, மீண்டும் பெறுவர். உடம்பிலுள்ள கசடுகள் நீங்குவதற்கும், இவ் விளகியம் கைகண்ட மருந்து. தாய்மார்தம் அயற்சி அகன்று, நல்ல முறையில் உடல் உரம்பெறுவதற்கு, இவ் விளகியம் உறுதுணை புரியும்.

**நடகாயம்** *nada-kāyam*, பெ. (n.), 1. மகப்பேறு மருந்து; an electuary given to woman after delivery 2. *நடகாய இளகியம்* பார்க்க; see *nada-kāya-iḷagiyam*

*[நட + காயம். காயம் = இளக்கிய மருந்து.]*

**நடச்சி** *nadacci*, பெ. (n), வைப்பரிதாரம்; a prepared yellow orpiment

**நடத்தல்** *nadattal*, தொ.பெ. (vbl n), 1. குறிப்பிட்ட செயல் முழுமை பெறுதல்; completing a task செய்த பணி இனிதே நடந்தது. (உ.வ.). 2. பிறர் சொல்லும்முறையில் செயல்படுதல்; act according to direction. நான் சொல்வதைக் கேட்டு நடப்பதாக இருந்தால் இங்கு இரு (உ.வ.).

*[நட → நடத்தல்.]*

**நடத்து—தல்** *nadattu-*, 5.செ. குன்றாவி. (vt), 1. நடக்கச் செய்தல்; to cause to go or walk, as a child இறைவன் நம்மை மகிழ்ச்சியான பாதையில் நடத்துவார் (உ.வ.). 2. அழைத்துப் போதல்; to take a person in one's company, to lead 3. கடமை யாற்றுதல்; to carry on, transact, manage, perform execute, administer, treat 4. செலுத்துதல்; to drive, as an animal, a vehicle 5. கற்பித்தல்; to teach, as a lesson "*ஆசிரியர் பாடம் நடத்துகிறார்*" (உ. வ.); 6. அரைத்தல்; to grind '*அம்மியில் நடத்திப் பொடியாக்கு*' (உ.வ.). 7. தாக்குதல்; to make a baton charge காவலர் தடியடி நடத்திக் கூட்டத்தைக் கலைத்தனர். (உ.வ.) 8. விழாநடத்துதல்; to organise a function. இலக்கியமன்ற விழாவினைக்கல்லூரியில் மாணவர் முன்னின்று நடத்திமுடித்தனர் (இக்.வ.). 9. ஒருவரை உரியமுறையில்

நடத்துதல் (கவனித்தல்.); to treat well. நீ அவரை நடத்தியமுறை சரியில்லை (உ.வ.)

க. நடகு. ம. நடத்துக.

*[நட → நடத்து– (வே.க. 3. 49).]*

**நடத்துநர்** *nadattunar,* பெ. (n.), பேருந்தில் பயணச்சீட்டு வழங்கி வண்டியை உரியவிடத்தில் நிறுத்தி, பயணிகளுக்கு உறுதுணை புரியும் பணியினைச் செய்யும் ஊழியர்; conductor. நடத்துநர் நன்றாகப் பேருந்தில் பணிசெய்தால்தான், பொதுமக்கள் காலந்தவறாது கடமை செய்ய முடியும். (இ.வ.).

மறுவ. ஊர்திவழித்துணைவர்.

*[நடத்து → நடத்துநர்.]*

ஒ.நோ. ஓட்டு → ஓட்டுநர்; இயக்கு → இயக்குநர்.

**நடத்தை**[1] *nadattai,* பெ. (n.), 1. *நடக்கை (வின்.)* பார்க்க; see *nadakkai.* 2. செல்வாக்கு; prosperity, influence. 3. ஒழுகலாறு; deportment.

க. நடத்தை ம. நடத்த தெ. நடத்த.

*[நட + அத்து + ஐ.]*

**நடத்தை**[2] *nadattai,* பெ. (n.), 1. இயல்பு; nature அவன் நடத்தை சரியில்லை. (உ.வ.). 2. நற்குணம்; goodness 3. ஒழுக்கம்; behaviour

*[நட → நடத்தை.]*

**நடத்தைக்காரன்** *nadattai-k-kāraṉ,* பெ. (n.), செல்வாக்குள்ளவன் (வின்.); a man of influence; one in prosperous circumstances.

*[நடத்தை + காரன்.]*

**நடத்தைக்காரி** *nadattai-k-kāri,* பெ. (n.), *நடத்தைக்கெட்டவள்* பார்க்க; see *nadattai-k-keṭṭavaḷ*

*[நடத்தை + காரி.]*

நடத்தை = ஒழுக்கம், பண்பு.

**நடத்தைக்கெட்டவள்** *nadattai-k-keṭṭavaḷ,* பெ. (n.), விலைமகள்; immoral woman நடத்தை கெட்டவளிடம் நன்றியை எதிர்பார்க்கலாமா? (உ.வ.).

*[நடத்தை + கெட்டவள்.]*

நடத்தை = ஒழுக்கம்.

**நடத்தைக்கொள்கை** *nadattai-k-koḷgai,* பெ. (n.), மாந்தனின் உளவியற்கூறுகளையும், அவற்றினடிப்படையில் அமைந்த செயற்பாடுகளையும் ஆராயும் கொள்கை; behaviourism

மறுவ. ஒழுக்கக்கொள்கை.

*[நடத்தை + கொள்கை.]*

அகப்பண்புகளுக்குப் புறவாழ்வுக் கூறுகளே கரணியமென்னும் கோட்பாடு. புறக்கூறுபாடுகளைக் கொண்டும் ஒழுக்கத்தை (நடத்தையை) அடிப்படையாகக் கொண்டும், ஒருவரைப் பற்றி ஆராயும் முறை.

**நடத்தைக்கோட்பாடு** *nadattai-k-kōṭpāḍu,* பெ. (n.), மாந்தர்தம் உளப்பாங்கினை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்படும் கோட்பாடு; behaviour theory.

*[நடத்தை + கோட்பாடு.]*

**நடத்தைத் தப்பிதம்** *nadattai-t-tappidam,* பெ. (n.), *நடத்தைப்பிழை* பார்க்க; see *nadattai-p-piḻai.*

*[நடத்தை + தப்பு + இதம்.]*

**நடத்தைப்பிசகு** *nadattai-p-pišagu,* பெ. (n.), *நடத்தைப்பிழை* பார்க்க; see *nadattai-p-pilai.*

*[நடத்தை + பிசகு.]*

**நடத்தைப்பிழை** *nadattai-p-pilai,* பெ. (n.), ஒழுக்கத்தவறு (யாழ்.அக.); immoral conduct

*[நடத்தை + பிழை.]*

'*நன்னடத்தை*'யின் எதிர்மறை.

**நடத்தைமாற்றம்** *nadattai-mārram,* பெ. (n), செயல் மாறுபடுகை; behaviour change '*உனது நடத்தைமாற்றம் எனக்கு பிடிக்கவில்லை*' (இக்.வ.).

*[நடத்தை + மாற்றம்.]*

**நடத்தைமுறை** *nadattai-murai,* பெ. (n.), ஒழுக்கவிதி; by law

*[நடத்தை + முறை.]*

**நடத்தைவிதி** *nadattai-vidi,* பெ. (n.), *நடத்தை முறை* பார்க்க; see *nadattai-murai.*

*[நடத்தை +* skt *விதி.]*

**நடந்தசெய்தி** *nadanda-šeydi,* பெ. (n.), நிகழ்ந்த செய்தி; event that was happened

**மறுவ.** உண்மைச்செய்தி.

*[நடந்த + செய்தி.]*

**நடந்தாரைத்தொடர்ந்தான்** *nadantārai-t-tudarndān,* பெ. (n.), தெட்டங்காகச் செடி; an unknown kind of plant.

**மறுவ.** ஒட்டுப்புல்.

*[நடந்தாரை + தொடர்ந்தான்.]*

தொ–து=திரிபு.

(ஒ.நோ.) தொடை → துடை.

ஒட்டுப்பில்லாக இருக்கலாம் என்று சா.அக. கூறும்.

**நடந்துகொள்(ளு)—தல்** *nadandu-kol-(lu)-,* 16. செ. கு. வி. (v.i.), மேலோரிடத்து ஒழுகுதல்; to behave, as towards a superior

*[நடந்து + கொள்–.]*

**நடந்துவரு—தல்** *nadandu- varu-,* 2 செ.கு.வி. (v.i.), 1. நிகழ்தல்; to be in vogue. 2. காலால் இடம் பெயர்தல்; to move by walk.

*[நடந்து + வரு–.]*

**நடந்துவிடு—தல்** *nadandu-vidu-,* 20 செ. கு. வி. (v.i.), 1. செயல் முடிந்துபோதல்; to be accomplished or completed 2. ஓடிப்போதல்; to run a way "*அன்னநடை மின்னுமறியாமல் முன்னே நடந்துவிட்டான்*" (தெய்வக். விறலிவிடு.102).

*[நட → நடந்து + விடு–.]*

**நடந்தேறு—தல்** *nadandēru-,* 5.செ. கு. வி. (v.i.), நிறைவேறுதல்; to be completed, perfected successful

*[நடந்து + ஏறு–.]*

**நடநாடகசாலை** *nada-nādaga-šālai,* பெ. (n.), நாட்டியப்பெண் (வின்); dancing woman

*[நடம் + நாடகசாலை.]*

நாடகம், கதையோடு சாராமல், நாட்டியக்கலையாக மட்டும் இருந்த காலத்தில், பெண்கள் ஆடுதல் பார்வையாளரான ஆண்கள் பலருக்கும் ஆர்வத்தைக் கூட்டி இருத்தலால், சாலை என்பது, அன்மொழித்தொகையாய்ப் பெண்ணைக் குறித்ததாக இருக்கலாம்.

**நடநாயகன்**[1] *naḍa-nāyagaṉ,* பெ. (n.), கருடப்பச்சைக்கல் (மூ. அ.); a kind of emerald.

*[நட + நாயகன்.]*

**நடநாயகன்**[2] *naḍa-nāyagaṉ,* பெ. (n.), சிவபெருமான்; šivaṉ, as the lord of dancers

*[நடம் + நாயகன்.]*

**நடநாராயணம்** *naḍa-nārāyaṇam,* பெ. (n.), பண்வகை; a specific melody-type

*[நடம் + நரன் → நாரன் + அயணம்.]*

**நடப்பன** *naḍappaṉa,* பெ. (n.), காலால் நடந்து செல்லும் உயிரிகள்; creatures that walk. "*தெரிவாக, ஊர்வன நடப்பன பறப்பன*" (தாயு. பரிபூரண.2).

*[நட → நடப்பன.]*

**நடப்பித்தல்** *naḍappittal,* பி.வி. (caus.v.) ஒரு செயலை அல்லது நிகழ்வைப் பிறரைக் கொண்டு செய்வித்தல்; giving instructions for the work to be done. முதல்வர் அதிகாரிகளுக்கு ஆணையிட்டு நலப்பணித் திட்டங்களை நடப்பித்தார் (இ.வ.).

*[நட → நடப்பி → நடப்பித்தல் (பி.வி.).]*

**நடப்பிப்பு** *naḍappippu,* பெ. (n.), 1. சிக்கனம்; economy. 2. மேற்பார்வை. superintendence, direction, management.

நடப்புக்கு ஏற்பப் பொருளும், செயலும் அளவாகச் செய்வித்தற் பண்பைக் குறிக்கும் சொல்லாகும். இச் சொல், இக் கால வாழ்வியலுக்கும் பொருந்தும் வண்ணம் அமைந்துள்ளது.

**நடப்பினம்** *naḍappiṉam,* பெ. (n.), நடக்கும் விலங்கு; moving animal-kingdom

*[நடப்பு + இனம்.]*

ஒ.நோ. கால்நடை=விலங்குகள்.

**நடப்பு**[1] *naḍappu,* பெ. (n.), 1. போக்குவரவு; going and coming 2. நடத்தை; behaviour, conduct, demeanour 3. தீயகாமத் தொடர்பு; criminal intimacy as between a man and woman. 4. தற்காலம்; present time, current time. "*நடப்புக்காலம் உங்களுக்கு நல்லதாக இருக்கிறது*" (உ. வ.). 5. செல்வாக்கு (யாழ்ப்.); influence, prosperity

ம. நடப்பு., து. நடபு.

*[நட → நடப்பு.]*

போதல் வருதல் பற்றிய நடை, ஈண்டுக் குறிக்கப்படுகிறது.

**நடப்பு**[2] *naḍappu,* பெ. (n.), 1. குறிக்கோள், மனவொருமை (திவா.); single-minded devotion, concentration. 2. உயர்ந்த இலக்கு (வின்.); ideal. 3. எண்ணத்தின் செயல்வடிவம்; action நினைப்பிற்கும் நடப்பிற்கும் தொடர்பே இல்லை (இ.வ.).

*[நட → நடப்பு.]*

நடந்து சென்று அடையும் இலக்கினைக் குறித்தல் உணர்க.

**நடப்பு**[3] *naḍappu,* பெ. (n), 1. அவ்வப்போது நிகழ்வது; நடப்புக்கணக்கு. current account

2. அடுத்தஆண்டு; next year. *'நடப்பிற் பார்த்துக் கொள்ளலாம்'*. (உ. வ.). 3. அடுத்து வரும் சுறவ (தை) மாதம்; next (tai). šuṟauam month நடப்பிற்குக் கலியாணம், கழுத்தே சும்மாவிரு (உ.வ.) நடப்பில் உள்ள நிகழ்வுகள் இங்கு பதியப்பட்டுள்ளன. (இ.வ.) 4. குறிப்பிடும் இடத்தில் நிகழ்வது; நிகழ்வது பற்றிய விளக்கம்; state of affairs. நாட்டு நடப்பைப் பற்றிய அக்கறை இல்லாமல் இருக்கிறாயே (இ.வ.).

ம., து. நடப்பு.

*[நட → நடப்பு.]*

**நடப்பு[4]** *nadappu*, பெ. (n.),1. ஈமக்கடனுக்கு முதல் நாளில் நடத்தும் சடங்கு; funeral rite of planting a stone an the day previous to īma-k-k-kaḍan 2. தாலி வாங்குகை (யாழ்ப்.); removing the marriage-badge from a widowed woman. 3. செல்லுதற்குரிய விடம்; objective, destination *'ஊதியமாகிய நடப்பின் மேல்'* (சீவக. 770. உரை).

ம., து. நடப்பு.

*[நட → நடப்பு.]*

இறப்புக்குப்பின் நடக்கும் கரணங்கள்.

**நடப்பு[5]** *naḍappu*, பெ.எ. (adj.), நிகழ்ந்து கொண்டிருக்கிற; current (year,etc.). நடப்பு ஆண்டில் பணவீக்கம் குறைந்துள்ளது. (இக்.வ.) நடப்பு ஆண்டிற்கான வரவு செலவுத் திட்டம் (இக்.வ.).

*[நட → நடப்பு.]*

**நடப்புஆண்டு** *naḍappu-āṇḍu*, பெ. (n ), 1. நிகழ் ஆண்டு; current - year. 2. நிகழ்காலம்; present - time. நடப்புஆண்டிற்கான வரவு செலவுத்திட்டத்தில் நலத்திட்டங்கள் மிகுதியாக உள்ளன. (இக்.வ.).

*[நடப்பு + ஆண்டு.]*

**நடப்புக்கணக்கு** *naḍappu-k-kaṇakku*, பெ. (n.), *நடப்புச் செலவுகளுக்காக வைப்பகத்தில் வைத்துள்ள இருப்புக்கணக்கு*; current account.

*[நடப்பு + கணக்கு.]*

**நடப்புக்காரன்** *naḍappu-k-kāraṉ*, பெ. (n.), 1. செல்வாக்குள்ளவன்; a man of influence. 2. வாடிக்கைக்காரன்; customer. 3. கள்ளத் தொடர்பாளர்; (சோர நாயகன்); paramour. (இ. வ.).

ம. நடப்புகாரன்.

*[நடப்பு + காரன்.]*

**நடப்புச்செய்தி** *naḍappu-c-ceydi*, பெ. (n.), இன்றைய நிகழ்ச்சி; current permanence. நடப்புச் செய்தி என்ன? (உ. வ.).

*[நடப்பு + செய்தி.]*

**நடப்புச்செலவு** *naḍappu-c-celavu*, பெ. (n.), நடைமுறைச்செலவு (அன்றாடச் செலவு); current expense.

*[நடப்பு + செலவு.]*

**நடப்புநாணயம்** *naḍappu-nāṇayam*, பெ. (n ), நடைமுறையில், புழக்கத்தில் உள்ள நாணயம்; current currency.

*[நடப்பு + நாணயம்.]*

தற்பொழுது மக்களிடையே, புழக்கத் திலிருக்கும் பணம்.

**நடப்புநிதியாண்டு** *naḍappu-nidi-y-āṇḍu*, பெ. (n.), நடந்து கொண்டிருக்கிற வரவு

செலவுக் கணக்கு ஆண்டு; current financial year.

*[நடப்பு + skt. நிதி + ஆண்டு.]*

**நடப்புநிலவரம்** *nadappu-nilavaram,* பெ. (n.), நிகழ்ந்து கொண்டிருக்கிற நிலை ; current condition.

*[நடப்பு + நிலவரம்.]*

**நடப்புமதிப்பு** *nadappu-madippu,* பெ. (n.), ஒரு பொருளுக்கு நடைமுறையில் உள்ள இப்போதைய மதிப்பு; relative value, present value. *'தங்கத்தின் நடப்பு மதிப்பு நாள்தோறும் உயர்ந்து கொண்டிருக்கிறது' (இக்.வ.).*

*[நடப்பு + மதிப்பு.]*

**நடப்புவட்டி** *nadappu-vatti,* பெ. (n.), இற்றை வட்டி; current or prevailing rate of interest.

*[நடப்பு + வட்டி.]*

**நடப்புவருடம்** *nadappu-varudam,* பெ. (n.), *நடப்பு ஆண்டு* பார்க்க; see *nadappu-āndu*

**மறுவ.** நிகழ்காலம்.

*[நடப்பு + Skt. வருஷம் → வருடம்.]*

**நடப்புவியாதி** *nadappu-viyādi,* பெ. (n.), ஓரிடத்தில் அல்லது ஓரினமக்களை, ஒரு நேரத்தில் பொதுவாகத்தாக்கும் நோய் (இ. வ.); epidemic disease

*[நடப்பு + Skt. வியாதி.]*

**நடப்புவிலை** *nadappu-vilai,* பெ. (n.), இற்றை விலை; current price.

**மறுவ.** இன்றைய விலை.

**ம.** நடப்புவில.

*[நடப்பு + விலை.]*

**நடபடி** *nada-padi,* பெ. (n.), **1.** நடவடிக்கை; action. **2.** நிகழ்ச்சி; occurrence. **3.** வழக்கம்; custom, practice.

**ம.** நடபடி.

*[நட → நடபடி.]*

**நடபத்திரகம்** *nadapattiragam,* பெ. (n.), கத்தரிச் செடி; bringal plant.

**நடபத்திரிகை** *nadapattirigai,* பெ. (n.), சேம்பு (மலை); Indian kales.

**நடபாவாடை** *nada-pāvādai.* பெ. (n.), *நடைபாவாடை* பார்க்க; see *nadai-pāvādai*

**ம.** நடைபாவாடை.

*[நட + பாவாடை.]*

நடை→நட = ஐகாரக்குறுக்கம்.

**நடபாவி** *nada-pāvi,* பெ. (n.), *நடைபாவி* பார்க்க; see *nadaipāvi.*

**தெ., க.** நடபாவி.

*[நட + பாவு → பாவி.]*

**நடபேதி** *nadapēdi,* பெ. (n.), அளவிற்கு அதிகமாக ஏற்படும் கழிச்சல்; discharge of the foeces from the anus.

**நடபைரவி** *nada-pairavi,* பெ. (n.), மூலப்பண்களுள் ஒன்றுகளுளொன்று (சங்.சந்.47); a primary pan(rāgam)

*[நடம் + பைரவி.]*

**நடம்** *nadam*, பெ. (n.), நடனம், கூத்து; dance. *"இரத முடைய நடமாட்டுடையவர்"* (திருக்கோ. .57).

நள் → நளி → நளிதல் =ஒத்தல்.

நளி → நடி.

ஒநோ. களிறு → கடிறு.

நடித்தல் = ஒத்து நடத்தல்.

நடி= ஆட்டம்.

"நடிகொணன் மயில் சேர்திரு நாரையூர்" (தேவா.216:5).

த. நடம் → skt. நட்ட.

நடம் =அகத்தேயெழும் உணர்வுகளைப் புறத்தே உடலுறுப்புகள் வாயிலாகக் கூத்தாடி வெளிப்படுத்தி, நடம் இட்டு, நடித்தல்.

த. நடி → நடம் → நட்டம் → skt. ந்ருத்த.

(ஒ.நோ.) த. வட்டம் → skt. வ்ருத்த

நடம் என்பது அழுகுற ஆடுவது. அது நூற்றெட்டு உடற்கரணங்களோடும், கைகால், கண், வாய் முதலிய உறுப்புகளின் தொழில்களோடும் கூடியது. கைவினைகள் எழிற்கை, தொழிற்கை, பொருட்கை, என முத்திறப்பட்டு, பிண்டி அல்லது இணையாவினைக்கை யெனப் படும், ஒற்றைக்கை வண்ணம் முப்பத்து மூன்றும், பிணையல் அல்லது இணைக் கையெனப்படும், இரட்டைக் கைவண்ணம் பதினைந்தும் கொண்டன வாகும்.

தமிழகத்தில் ஆடிய தமிழ் நடமே, இன்று பரதநாட்டியம் எனும் பெயரில் நிகழ்த்தப் படுகிறது. தமிழ்நடத்தின் காலம் கி.மு.3ஆம் நூற்றாண்டு.

**நடம்பயில்(லு)—தல்** *nadam payil-(lu)-*, 3.செ. கு. வி. (v.i.), 1. கூத்தாடுதல்; to dance. 2. நடனம் கற்றுக்கொள்ளுதல்; to learn dancing.

*[நடம் + பயில்–.]*

**நடமண்டனம்** *nada-mandanam*, பெ. (n.), அரிதாரம் (யாழ்.அக.); yellow orpiment.

**நடமாட்டம்[1]** *nadam-āttam*, பெ. (n.), 1. வலிமை (வின்.); activity; energy, as in old age. 2. செல்வாக்கு (வின்.); influence. 3. பழக்கம் (வின்.); acquaintance in any affair. 4. கூடுமிடம் (வின்.); resort, haunting.

தெ. நடயாட.

*[நடம் + ஆட்டம்.]*

**நடமாட்டம்[2]** *nadam-āttam*, பெ. (n.), 1. நடந்து செல்கை; walk, act of walking. *'அவன் பாயும் படுக்கையுமாயிருக்கிறான். ஆதலால் ஒருமாதமாய் நடமாட்டமில்லை'.* (உ. வ.). 2. எழுந்து நடத்தல்; ability to move around. *'அவருக்குக் கண் மங்கி நடமாட்டம் குறைந்துவிட்டது'* (உ.வ.).

தெ. நடையாட்ட.

*[நடை → நடம் + ஆட்டம்.]*

**நடமாட்டம்[3]** *nadam-āttam*, பெ. (n.), மக்கள், விலங்கு, ஊர்தி போன்றவை, ஒரிடத்தினின்று மற்றோர் இடத்திற்குச் செல்லுதல், வருதல் போன்ற செயல்பாடு அல்லது இயக்கம்; movement of people, animals, vechile etc. *'மக்கள் நடமாட்டம் அதிகம் இல்லாத பகுதியில் வீடு கட்டினால் கள்வர்களுக்குக் கொண்டாட்டந்தான்'* (உ.வ.). *'மலையடி வாரத்தில் யானைகள் நடமாட்டம் அதிகரித்துள்ளது'* (இ.வ.).

*[நடம் + ஆட்டம்.]*

**நடமாட்டம்**[4] *nadam-āttam,* பெ. (n.), நடனம்; dannceing; "*நடமாட்டங் காணப் பாவியேன் நானோர் முதலிலேன்*" (திவ். நாய்ச். 10:7).

*[நடம் + ஆட்டம்.]*

இது ஆட்டத்திற்கு மட்டும் அழுத்தம் தரும்பான்மையில், அமைந்த சொல்லாகும்.

**நடமாடல்** *nadamādal,* பெ. (n.), 1. மேல் ஓங்குதல்; prevailing. 2. உலாவுதல்; about after sickness. (சா.அக.).

**நடமாடு[1]-தல்** *nadam-ādu-,* 5.செ. கு. வி. (v.i.), 1. நோய் நீங்கி உலாவுதல்; to go about, move about; as after, sickness; '*பக்கவாத (ஊதை) நோய் வந்ததால் அவரால் நடமாடமுடியவில்லை*'. (உ.வ.) '*கொடிய விலங்குகள் நடமாடும் மலைப் பாதையில் மனிதர் நடமாட முடியாது*'. 2. மீளாத்துயர், வருத்தம், முதலியவற்றுள் அடைப்பட்டிருந்து வெளிவருதல்; to rise, come out, as from depressed circumstances. 3. தீய விலங்குகள், ஊர்வன நோய், தீயஆவி முதலானவை உலவுதல்; to haunt or frequent, as evil spirits; to infest as beasts or reptiles; "*ஆவிகள் இரவில் நடமாடுகின்றன*" (உ. வ.). 4. தீயவர் திரிதல்; to walk about thieves to walk about evil person. '*திருடர் இரவில் திரிகின்றனர்*' 5. புழங்குதல்; to circulate, as coin as a report; '*இன்று கள்ளப்பணம் நடமாடுகிறது*'. 6. நோய் முதலியன பரவியிருத்தல்; to prevail, as epidemics.

தெ. நடயாடு.

*[நடம் + ஆடு-.]*

**நடமாடு[2]-தல்** *nada-mādu-,* 5.செ. கு. வி. (v.i.), கூத்தாடுதல்; to dance; "*வலம்வந்த மடவார்கள் நடமாட முழவதிர*" (தேவா. 278:1). "*எல்லோரும் இன்புற்றிருக்க நடமாடுகின்றீர்*" (திருவருட்பா.)

**நடமாடுநோய்** *nadamādu-nōy,* பெ. (n.), தொற்று நோய்; infectious disease.

**மறுவ.** கொள்ளைநோய்.

*[நடமாடு + நோய்.]*

எளிதில் பற்றிக்கொள்ளும் நுண்மங்களை உடையநோய். இந் நோய் மழைக் காலத்தும், புயற்காலத்தும் மக்களை பெருவாரியாகத் தொற்றுந் தன்மைத்து.

**நடமாடும்** *nadamādum,* பெ.எ. (adj.), பல இடங்களுக்கும் செல்லக்கூடிய வகையில் ஊர்தியில் அமைந்த இயங்கும் அமைப்பு; mobile. '*நடமாடும் உணவகம்*' '*நடமாடும் நூலகம்*' (இக்.வ.).

*[நடம் + ஆடும்.]*

**நடமாடும்அரத்தவங்கி** *nadamādum-aratta-vangi,* பெ. (n.), *நடமாடும் அரத்த வைப்பகம்* பார்க்க; see *nadamādum-aratta-vaippagam.*

*[நடமாடும் + அரத்தம் + E. வங்கி.]*

**நடமாடும்அரத்தவைப்பகம்** *nadamādum-aratta-vaippagam,* பெ. (n.), நிலையாக ஓரிடத்தில் தங்காமல், பொதுமக்களிடம் வந்து குருதியைத் தொகை கொடுத்துப் பெற்றுக் கொண்டு, காப்பாக எடுத்துச் செல்லும் வண்டி; mobile blood - bank.

*[நடமாடும் + அரத்தம் + வைப்பு + அகம்.]*

**நடமாடும்ஆடைதேய்ப்பகம்** *nadamādum-ādai-tēyppagam,* பெ. (n) நிலையாக ஓரிடத்தில் தங்காமல், பொது மக்களை நாடிச் சென்று அவர்களின் ஆடைகளைமடித்துச் சமன்படுத்தித் தேய்த்துக் கொடுக்கும் வண்டி; mobile iron - cart.

*[நடமாடும் + ஆடை + தேய்ப்பு + அகம்.]*

**நடமாடும்உணவகம்** *nadamādum-uṇavagam,* பெ. (n.), ஓரிடத்தில் நிலையாகத் தங்காது, பல இடங்களுக்கும் சென்று சிற்றுண்டிகளை விற்பனை செய்யும் வகையில், வண்டியில் அமைந்த உணவகம்; mobile - hotel

*[நடமாடும் + உணவகம்.]*

**நடமாடும்நீதிமன்றம்** *nadamādum-nīdimaṉṟam,* பெ. (n.), நடமாடும் முறைமன்றம் பார்க்க; see *nadamādum - muṟai-maṉṟam*

*[நடமாடும் + skt நீதி + மன்றம்.]*

**நடமாடும்நூலகம்** *nadamādum-nūlagam,* பெ. (n.), நிலையாக ஓரிடத்தில் தங்காமல், நூலகம் இல்லாத சிற்றூர்களுக்குக் குறிப்பிட்ட நாள்களில் சென்று, மக்களுக்கு நூல்களைத் தந்து உதவும், நகரும் வண்டியில் அமைந்த நூலகம்; mobile - library. *'எங்கள் ஊரில் முப்பது பேர் நடமாடும் நூலகத்தில் உறுப்பினராகியுள்ளனர்'.*

*[நடமாடும் + நூலகம்.]*

**நடமாடும்படிப்பகம்** *nadamādum-padippagam,* பெ. (n.), *நடமாடும் நூலகம்* பார்க்க; see *nadam-ādum - nūlagam.* *"நேற்று நடமாடும் படிப்பகம் வந்ததா?"*

*[நடமாடும் + படிப்பகம்]*

**நடமாடும்மருத்துவமனை** *nadamādum-maruttuvamaṉai,* பெ. (n.), ஓரிடத்தில் நிலையாகத் தங்காமல், மருத்துவமனை ஏந்து இல்லாதச் சிற்றூர்களுக்கும், உடனடி உதவி தேவைப்படும் நேரங்களிலும், இயற்கைச் சீற்றங்களால் ஏற்படும் ஏதங்களுக்குப் (விபத்துகள்), பண்டுவம் (சிகிச்சை) மேற்கொள்ளும் மருத்துவமனை; mobile - hospital *"குசராத்தில் நிலநடுக்கம் ஏற்பட்டபோது நடமாடும் மருத்துவமனையின் பங்கு பெரிதாக இருந்தது."*

*[நடமாடும் + மருத்துவமனை.]*

**நடமாடும்முறைமன்றம்** *nadamādum-muṟaimaṉṟam,* பெ. (n.), நிலையாக ஓரிடத்தில் தங்காமல் குற்றம் நிகழுமிடத்திற்கே, சென்று வழக்கின் தன்மையை ஆய்வுசெய்து, தீர்ப்பு வழங்கும் மன்றம்; mobile - court *'நண்பரின் ஊர்தி உரிமத்தைப் புதுப்பிக்காததால், காவல்துறையினரின் ஆய்வில் சிக்கி, நடமாடும் முறைமன்றத்தில் தண்டத்தொகை கட்டினார்'.*

*[நடமாடும் + முறைமன்றம்.]*

**நடமாடும்வங்கி** *nadamādum-vaṅgi,* பெ. (n.), *நடமாடும் வைப்பகம்* பார்க்க; see *nadamādum - vaippagam.*

*[நடமாடும் + E வங்கி.]*

**நடமாடும்வீடு** *nadamādum-vīdu,* பெ. (n.), தலைவர்கள் தேர்தல் வேலையின் போதும், நடிகர் நடிகையர் வெளிப்புறப்படப்பிடிப்புகளின் போதும் பயன்படுத்தும் வீட்டிலுள்ள இன்றியமையாத ஏந்துகள் உள்ள அறையைப் போன்ற அமைப்பைக் கொண்ட வண்டி; mobile house *'அமைச்சர் தேர்தல்சுற்று மேற்கொண்டபோது நடமாடும் வீட்டையே அதிகமாகப் பயன்படுத்தினார்'.*

*[நடமாடும் + வீடு.]*

**நடமாடும்வைப்பகம்** *nadamādum-vaippagam,* பெ. (n.), ஓரிடத்தில் நிலையாக

இருக்காமல் இடம்மாறிச் செல்லும் பணம் (பொருள்) வைப்பிடம்; mobile - bank.

*[நடமாடும் + வைப்பகம்.]*

**நடமாதிரை** *nadamādirai,* பெ. (n.), கொத்துமல்லி; Coriander sativum.

**நடமாளிகை** *nada-māligai,* பெ. (n.), *திருநடை மாளிகை* ***(பெரியபு திருநாவு. 387.)*** பார்க்க; see *tirunadai-māligai*

*[நடை + மாளிகை → நடமாளிகை. (ஒ.நோ.) மடைப்பள்ளி → மடப்பள்ளி.]*

**நடமாளிகைமண்டபம்** *nada-māligai-mandabam,* பெ. (n.), *திருநடை மாளிகை* (I M P Rd **81**) பார்க்க; see *tirunadai-māligai.*

*[நடமாளிகை + மண்டபம்.]*

**நடமிடுமீசன்** *nadamidum-īšan,* பெ. (n.), சரக்கொன்றை; purging cassia

**நடமுருடு** *nada-murudu,* பெ. (n.), நடனத்துக்குரிய முருடென்னும் இசைக் கருவி **(சிவக்.பிரபந்.பக்.237):** a musical instrument, played on an accompaniment to dance.

*[நடம் + முருடு.]*

**நடராசதங்கம்** *nadarāsa-tangam,* பெ. (n.), மாற்றுயர்ந்த தங்கம்; gold most superior is purity

*[நடராசன் + தங்கம்.]*

நடராசன் தெய்வங்களில் உயர்வென்று சிவனியர் கருதல் போல், பொன்னில் உயர்ந்த பத்தரை மாற்றுத் தங்கம் பற்றிய பெயர் என்க.

**நடராசன்** *nadarāšan,* பெ. (n.), *நடவரசன்* பார்க்க; see *nadavarašan*

**மறுவ.** ஆட(ல்)வல்லான்.

**நடல்** *nadal,* பெ. (n). ஊன்றுகை; planting

*[நடு + அல் → நடல்.]*

அல்லீற்றுத்தொழிற்பெயர்.

**நடலம்** *nadalam,* பெ. (n). **1.** ஊகம்; assumption. **2.** ஆணவம், செருக்கு; vanity, insolence. **3.** வீண் செலவிடுகை (வின்.); abuse of property, recklessness, spuandering. **4.** இகழ்ச்சி (வின்.): irreverence, derision, scoffing. **5.** நடிப்பு (பாசாங்கு); pretence hypocrisy **6.** மித மிஞ்சிய நாகரிகங் காட்டுகை; overnicety **7.** கூர்நனிச் சுவை; fastidious ness

*[ஒருகா: நடனம் → நடலம்.]*

**நடலம் பண்ணு—தல்** *nadalam-pannu-.* **5.**செ. கு. வி. (v.i.), அளவுக்கு அதிகமாக நாகரிகம் காட்டுதல். to be fastidious

**மறுவ.** நனிநயம் பண்ணுதல்.

*[நடலம் + பண்ணு—.]*

**நடலமடி—த்தல்** *nadalam-adi-.* **4.**செ. கு. வி. (v.i.), பாசாங்கு செய்தல்(இ. வ.); to pretend.

**மறுவ:** கூத்தடித்தல்.

*[நடலம் + அடி —.]*

பண்பற்றவர் தமது பகட்டாரவாரத் தோற்றத்தின் வாயிலாகப் பண்புற்றவர்

போல், பொய்த்தோற்றங்காட்டிப் பிறரை நம்பச் செய்தல்.

**நடலை** *naḍalai,* பெ. (n.), 1. சூழ்ச்சி; இரண்டகம்; guile. "*நடலைப்பட் டெல்லா நின்பூழ்*" (கலித். 95, 33.). 2. பொய்ம்மை; deception, illusion. "*நடலை வாழ்வு கொண்டென் செய்திர்*" (தேவா. 1203:4.). 3. நடிப்பு, பாசாங்கு (உ.வ.); pretence, affectation. 4. துன்பம் (பிங்.); distress, suffering, affliction. "*நடலையு ளடிகள் வைக*" (சீவக.1914). 5. அசைவு (சூடா.); trembling; shaking. 6. நடுக்கம் (சா.அக.); trembling, shivering.

*[நடலம் → நடலை.]*

**நடவடி** *naḍavaḍi,* பெ. (n.), *நடவடிக்கை* பார்க்க; see *naḍavaḍikkai.*

**ம.தெ.** நடவடி.

*[நடைபடி → நடவடி.]*

**நடவடிக்கை** *naḍavaḍikkai,* பெ. (n.), 1. நடத்தை; செயல்பாடு, நடந்துகொள்ளும் முறை; behaviour, conduct. பொதுவாழ்வில் ஈடுபடுவோரின் நடவடிக்கை போற்றத் தகுந்ததாக இருக்கவேண்டும் (இக்.வ.). சில நாட்களாகவே அவனுடைய நடவடிக்கையில் ஒரு மாறுதல் தெரிகிறது (இக்.வ.). 2. குறிப்பிட்ட நோக்கத்திற்காக மேற்கொள்ளும் பணி அல்லது ஏற்பாடு; measures, proceedings. வறட்சியைப்போக்கும் நடவடிக்கைகள் முழுமையாக இல்லை (இக்.வ.). 3. அலுவலகம் முதலியவற்றில் மேற்கொள்ளும் பணி அல்லது அலுவல்; work activities.கலவரத்தின் காரணமாகப் பல தொழிற்சாலைகளின் அன்றாட நடவடிக்கைகள் தடைபட்டன. 4. ஒருவரின் நடத்தையின் மீது மேற்கொள்ளப்படும் செயற்பாடு; action அவர் மீது ஏன் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கக் கூடாது? (உ.வ.).

**மறுவ.** ஒழுக்கம், ஒழுகலாறு, செயல்.

**க.** நடபடிகெ. **து.** நடபாட.

*[நடைபடி → நடவடி → நடவடிக்கை.]*

**நடவரசன்** *naḍavarašaṉ,* பெ. (n.), சிவபெருமானின் பல வடிவங்களுள் ஒன்றான, நடனமாடும் திருவடிவம், Šivaṉ in dancing posture.

*[நடம் + அரசன்.]*

**நடவல்** *naḍaval,* பெ. (n.). நட்டபயிர்; transplanted crop '*நடவலிறைத்ததுக்கும் வரிசையில் மூன்றிலொன்று*' (புதுக்.கல்.423).

*[நடு → நடவு → நடவல்.]*

**நடவாமுடம்** *naḍavā-muḍam,* பெ. (n.), நடக்க முடியாத ஊனமுற்றோர். maimed or cripple person who can not walk.

*[நட + ஆ + முடம்*

*ஆ. எதிர்மறைஇடைநிலை.]*

**நடவு[1]–தல்** *naḍavu-,* 5.செ. குன்றாவி. (v.t.) 1. செலுத்துதல்; to cause to go, drive, lead on, conduct, discharge. "*கணையினை நடவி*" (விநாயகபு. 80. 704.). 2. கருமம், நடத்துதல் (வின்.); to manage, administer, direct, transact, perform.

**தெ., க.,** நடுபு. **து.** நடபாவுணி.

*[நட → நடவு–.]*

**நடவு²** *naḍavu,* பெ. (n.), 1. நாற்றைப் பிடுங்கி வயலில் நடுகை; transplantation of seedlings. "*போர்த்து நடவு செய்குநரும்*" (திருவிளை நாட்டுப். 20.). உங்கள் வயலில் என்றைக்கு நடவு?(உ.வ.). 2. நட்டபயிர்; growing crop. "*தண்ணீரில்லாமல் நடவு காய்கிறது.*" (உ. வ.). புயல்மழையில் நடவுமுழுவதும் காட்டாற்று வெள்ளத்தில்அடித்துக் கொண்டு போய் விட்டது (இக்.வ.). 3. நடவுகணக்கு (R.T.); an account containing particulars of transplanting.

து. நட்டி

*[நள் → நடு → நடவு.]*



**நடவு³** *naḍavu-,* பெ. (n.) தணக்கு; catamaran wood tree. (சா.அக.).

**நடவுகம்பு** *naḍavu-kambu,* பெ. (n.), தளிர்த்து வளர்தற் பொருட்டு நடும் கம்பு(நாஞ்.); scion, shoot of plant, cut for planting. நடவுகம்பாக ஒடித்து முருங்கைக்கம்பை நட்டால் முழுமரம் உருவாகும். (இ.வ.).

*[நடவு + கம்பு.]*

**நடவுகாரிகள்** *naḍavu-kārigaḷ,* பெ. (n.), நாற்று நடவு வேலைசெய்யும் பெண்கள்; women labourers who transplant seedlings.

*[நடவு + காரிகள்.]*

**நடவுகூலி** *naḍavu-kūli,* பெ. (n.), *நடுகூலி* பார்க்க; see *naḍu-kūli.*

*[நடவு + கூலி.]*

**நடவுகூறு** *naḍavu-kūṟu,* பெ. (n.), நிலத்திற்குரியவன் அதனில் மரங்கள் முதலியன வைத்து வளர்த்தவனுக்கு கொடுக்கும் பங்குக்கூறு (நாஞ்.); a share of the produce given by an owner of a garden land to a person for his labour and money spent in rearing new plants of taxable species.

*[நடவு + கூறு.]*

**நடவுகொத்து** *naḍavu-kottu,* பெ. (n.), 1. வயல் நடுகைக்காக கொடுக்கப்படும் கூலி; wage for transplantation of seedlings 2. வயல் நடுகைக்காக ஒதுக்கப்படும் நடவு ஆட்கள்; labourers allocated for transplantation in a field. "*நடவு கொத்துக்கு கூலியை கொடுத்து அனுப்புங்கள்*" (உ. வ.).

*[நடு → நடவு + கொத்து.]*

கொற்று → கொத்து = கூலி.

**நடவுசெய்¹–தல்** *naḍavu-šey-,* 1செ. குன்றாவி. (v.t.), அரசாளுதல் (நான்மணி. 95. உரை.); to rule, govern.

*[நட= நடத்து.*

*நட → நடவு.]*

மக்கள்தரும் வரிப்பணம்பெற்ற மன்னன், அவர்க்கு நன்மை நடக்குமாறு செய்து, ஆட்சி புரிதல்.

**நடவுசெய்²—தல்** *naḍavu-šey,* 1.செ. கு. வி. (v.i.) நாற்று நடுதல்; to transplant seedlings. நடவு செய்தலில் இடைவெளி இருந்தால்தான், நடவுப்பயிர் செழிக்கும் (இ.வ.).

மறுவ. நடவுபோடு.

*[நடவு + செய்—.]*

முதற்கண் விதைக்கப்பட்ட நாற்றங்காலில் இருந்து, நாற்றுகளைப் பிடுங்கி நடுதல்.

**நடவுதொளி** *naḍavu-toḷi,* பெ. (n.) நாற்று நடுவதற்குமுன் வயலைச் சேறாகக் கலக்குகை; to making fit by slash the field for transplantion

*[நடவு + தொளி = நன்கு சேறாக்கிப் பதப்படுத்திய வயல்.]*

**நடவுதொளியடித்—தல்** *naḍavu-toḷi-y-aḍi-,* 4.செ. குன்றாவி. (v.t.) நாற்று நடுவதற்குமுன் வயலைச் சேறாகக் கலக்குதல்; to plough a flooded field before transplantion.

*[நடவுதொளி + அடி—.]*

**நடவுப்பயிர்** *naḍavu-p-payir,* பெ. (n.), 1. நடுவதற்கு அணியமாக வைக்கப்பட்ட நாற்று; crop which is kept ready for transplantation. நடவுப்பயிரின் வேரை அறுபடாமல் பிடுங்கு (உ.வ.). 2. முதலில் நட்ட பயிர்; crop that has been transplanted once only. இயற்கை உரம் போட்டால்தான் நடவுப்பயிர் செழிக்கும் (உ.வ.).

*[நடவு + பயிர்.]*

**நடவுபோடு—தல்** *naḍavu-pōḍu-,* 20.செ. கு. வி. (v.i.) நாற்று நடுதல்; to transplant seedlings. "*அடியுரம் போட்டு நடவுபோடுதலே, நல்ல விளைச்சலுக்கு அறிகுறி*" (மது.வழ.).

*[நடவு + போ(க)டு—.]*

போகு + அடுதல் = போகடுதல். இடைக்குறையாக இச் சொல் தமிழில் வழங்கிவருகிறது. ஒ.நோ. ஆயினால் → ஆனால்.

**நடவை¹** *naḍavai,* பெ. (n), 1. வழி; path, road, way. "*கான்யாற்று நடவை*" (மலைபடு. 214.). 2. கடவைமரம் (பிங்.); turnstile. 3. வழங்குமிடம்; extent of country, as where a language prevails. "*தலைமைவளர் தமிழ் நடவை யெல்லை*" (சேதுபு. திருநாட்.1.). 4. வழிவகை; plan, scheme. "*நல்வரங்கொள்ளு நடவையொன் றியம்புவன்*" (சேதுபு. மங்கல. 69.).

க., நடவெ தெ. நடவ.

*[நள் → நடு → நடவை.]*

**நடவை²** *naḍavai,* பெ. (n.). 1. *நடவு* பார்க்க; see *naḍavu* 2. நுணா (மலை); small dyeing mulberry.

**நடன்** *naḍan,* தொ. பெ. (vdl. n.) கூத்தாடுபவர்; dancer. "*வளிநடன் மெல்லிணர்ப் பூங்கொடி மேவர நுடங்க*" (பரிபா. 22. 42.).

த. நடன் → skt naa.

[நள் → நளி → நடி. நடித்தல் = ஒத்துச்செய்தல். நடி + அம் → நடம் → நடன்.]

நடம் என்னும் தொழிற் பெயரினின்று, நடன் என்னும் ஆண்பாற்பெயர் தோன்றும். (செ.ப.அ.சீ.கே.பக்.34.).



**நடனக்கருமூலி** *nadana-k-karumūli,* பெ. (n) தலைச்சுருளி; indian birth wort.

**நடனச்சுழலான்** *nadana-c-culalān,* பெ. (n) சுழல்வண்டு; a kind of whirling beetle.

*நடனமாடுவதுபோல் சுழன்று பறக்கும் வண்டாக இருக்கலாம்.*

**நடனசாலை** *nadana-šālai,* பெ. (n.), கூத்துப் பயிலிடம்; dancing hall.

*[நடனம் + சாலை.]*

**நடனசிகாமணி** *nadana-šigāmaṇi,* பெ. (n.), நடனத்தில் சிறந்தவர்க்கு அளிக்கப்பெறும் பட்டம்; title confered for dancing ability.

*[நடனம் + skt.சிகைசிகா + மணி.]*

**நடனத்தோற்றம்** *nadana-t-tōtram,* பெ. (n.), 1. நடனமாடுபவரின் பல்வேறு நிலைகள்; dance postures 2. *நடனமுத்திரை* பார்க்க; see *nadana-muttirai.*

*[நடனம் + தோற்றம்.]*

**நடனநடை** *nadana-nadai,* பெ. (n.), அசைந்தாடி நடக்கும் நடை (பாண்டி.); a kind of ambling gait.

*[நடனம் + நடை=நடனமாடுவதுபோல், அசைந்து,அசைந்து நடக்கும் நடை.]*

**நடனப்புயல்** *nadana-p-puyal,* பெ. (n). விரைவாக நடனம் ஆடுபவர்; dancer who dance very fast

*[நடனம் + புயல்.]*

புயல்போல் சுழன்று வேகமாக ஆடுபவர்.

**நடனபுலன்** *nadanapulan,* பெ. (n.), அரிதாரம்; yellow orpiment

**நடனம்** *nadanam,* பெ. (n). 1. கூத்து; dancing, acting 2. குதிரைக்கதி; gaits of a horse. *"பதினெட்டு நடனத்தொழில் பயிற்றி"* (கொண்டல் விடு. 176.). 3. பாசாங்கு; pretence, hypocritical act. 4. மாயவித்தை; jugglery, magic. *"நன்று நன்று நீ நம்முணர்க் காட்டிய நடனம்"* (கந்தபு. அவைபுகு. 87.).

**த.** நடனம் → skt naṭana. நட்டன.

*[நடி + அனம் → நடனம்.]*

*ஒ.நோ. படி +அனம் → படனம். நள் → நளி.*

நடித்தல் = ஒத்துச்செய்தல். நாடகக் கலையின் முத்திறப்பாடுகளுள், நடனம் என்பதும் ஒன்றாகும். *'நடி'* என்னும் முதனிலை வடமொழியில் இல்லை. நிருத்த என்னும் சொல்லின் *"ந்ருத்"* என்னும் அடியையே முதனிலையாக, வடவர் ஆள்வர். இதுபற்றி மொழிஞாயிறு கூறுங்கால், *"தமிழ்நடனமே இன்று பரதநாட்டியம் என்று வழங்குகின்றது. வடமொழியில், பரதசாத்திரம் கி.மு.4–ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. ஆனால், அதற்கும் முந்தியது தமிழ்ப்பரதமேயாகும்"* (தமி.நாகரி.பண்பாடு.பக்.117.).

நடனம் என்பது அழகுற ஆடுவது. அது நூற்றெட்டு உடற்கரணங்களோடும், கை, கால், கண், வாய் முதலிய உறுப்புகளின் தொழில்களோடும் கூடியது. கைவினைகள், எழிற்கை, தொழிற்கை, பொருட்கை, என முத்திறப்பட்டு, பிண்டி அல்லது இணையா வினைக்கையெனப்படும்.

ஒற்றைக்கைவண்ணம் முப்பத்து மூன்றும், பிணையல் அல்லது இணைக்கை யெனப்படும் பொருள்பொதிந்த இரட்டைக் கைவண்ணம் பதினைந்தும், கொண்டனவாகும்.

நடம், நடனம் என்னும் தென்சொற்கள், வடமொழியில் நட்ட, நட்டன என்று வலிக்கும்.

உள்ளத்தெழும் உணர்வுகளையும், வாழ்வியல் அசைவுகளையும், 108 மெய்ப்பாடுகள் வாயிலாக வெளிப்படுத்துவதே, நடனம். இதுவே தமிழ்ப்பரதம் என்றழைக்கப்படும். பரதநாட்டியம் என்னும் பெயரில், அகமலர, முகமலர அனைவராலும் கண்டுகளிக்கப்பெரும் நடனமும், இஃதே. வடமொழியில் இயற்றப்பட்ட பரதநூலிற்கு முந்தியது. இத் தமிழ் நடனம், கி.மு. 3. ஆம் நூற்றாண்டிற்கும், அப்பாற்பட்டது. அடியார்க்கு நல்லார் இயற்றிய, சிலப்பதிகார உரைப்பாயிரத்தில் காணப்படும், தமிழ்ப்பரதம் பற்றிய குறிப்பு வருமாறு:

"*நாடகத்தமிழ் நூலாகிய பரதம், அகத்தியம், முதலாகவுள்ள தொன்னூல்களுமிறந்தன*" மேற்குறித்த ஏதுக்களால், நடி என்னும் முதனிலைத் தொழிற்பெயரினின்று தோன்றிய சொல்லே, நடனம் என்று அறியலாம். இந் நடனமே தமிழ்ப்பரதம். அடியார்க்கு நல்லார் உரைப்பதும், இத் தமிழ் நடனத்தையே என்றறிக.

**நடனமுத்திரை** *naḍaṉa-muttirai,* பெ. (n.). *நடன மெய்ப்பாடு* பார்க்க; see *naḍaṉa-mey-p-pāḍu*

*[நடனம் + முத்திரை.]*

**நடனமெய்ப்பாடு** *naḍaṉa-mey-p-pāḍu,* பெ. (n.), அகவுணர்வுகளை அனைவரும் அறியும் வண்ணம், முகத்தின் மூலமும், கைகால் முதலான, உடலுறுப்புகள் வழியாகவும் நின்றும், இருந்தும், கிடந்தும், விறல்பட வெளிப்படுத்தும் திறன் அல்லது பாங்கு; the various kinds of dance postures.

**மறுவ.** நடனக்கை.

நளிநயம்.

நடனமுத்திரை.

*[நடனம் + மெய்ப்பாடு.]*

நடனமெய்ப்பாடுகளை, நம்நாட்டுச்சிற்பியர், கவின்கலைகளின் அருங்காட்சியகங்களாகத் திகழும், திருக்கோவில்களில், திறம்படச் செதுக்கி யுள்ளனர்.

நடனக்கலையின் இலக்கணத்தைத் தெள்ளிதிற் றெரிவிக்கும் கருவூலங்களாகச் நடனச்சிற்பங்கள் மிளிர்கின்றன.

தில்லைத் திருக்கோயிற் கோபுரத்தில் செதுக்கப்பட்டுள்ள சிற்பங்கள், நடனமெய்ப் பாட்டு மரபிலக்கணத்தினின்று, சிறிதும் வழுவா வண்ணம் வடிக்கப்பட்டுள்ளன. இச் சிற்பங்கள், நடனமுத்திரை நளினங்களை நன்கு வெளிப்படுத்துகின்றன. இந் நடன முத்திரைகள் அனைத்தும், ஆடற்கலை இலக்கணத்தை நன்குணர்ந்து நடன மெய்ப்பாட்டினையும், அழகுணர்ச்சியையும், வேண்டிய அளவிற்கு இழைத்தும், குழைத்தும் எழுதப்பட்ட இலக்கியமாக, இலங்குகின்றன எனின் மிகையன்று.

இந் நடனமெய்ப்பாட்டுச் சிற்பங்கள், எப் பொருளில் எவ் விடத்தில், எதற்காக அமைக்கப்பட்டுள்ளனவோ, அவ்வவற்றிற்கு ஏற்றவாறு, ஒடித்தும், வளைத்தும், நெளித்தும், கைகளையும், கால்களையும் பலஅமைதிகளில், காட்டியுள்ள பாங்கு, கண்ணுறுவோர்தம் உள்ளத்துணர்வுகளை, உரைக்கும் பான்மையிற் செதுக்கப்பட்டுள்ளன.

இக் கவினுறு நடனமுத்திரைச் சிற்பங்களைச் சிற்பி கல்லில் வடிக்குங்கால், கண்டு களிப்போருக்கு, அவர்தம் கலையழகை மட்டுமன்றிச் சிற்பத்தின் உட்கிடையை, வாழ்வியலுடன் இணைத்துக் காணும் பெரும்பேற்றினை நல்குகின்றான் எனின், மிகையன்று

இத்தகைய கலைவேள்வியில் தன்னை மறந்துசிற்பி ஈடுபடுங்கால், நடன மெய்ப்பாட்டுச் சிற்பங்களை, இயல்புக்கு மீறிச் சற்று மிகையாக அமைக்கவேண்டிய சூழலுக்குத் தள்ளப் படுகின்றான். இதனால் நடனக் கை காட்டும் நளினமுத்திரைகள், விளக்கமுறுகின்றன. இருக்கைகள் (ஆசனங்கள்), இயல்புடன் மிளிர்கின்றன. உடல்வளைவுகள், ஈடு இணையில்லா அழகினை வாரியிறைக்கின்றன. மொத்தத்தில் ஏற்றமுறும் இத்தகைய நடனஇலக்கியச்சிற்பங்களே, சிற்பக்கலை இலக்கணநூல்கட்கு நாற்றங்காலாய்த் திகழ்கின்றன.

நடனமுத்திரைச் சிற்பங்களில், காணப்படும் நடனமெய்ப்பாடு முத்திரைகள், 32 வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன. இத்தகைய முத்திரைகளை நம்நாட்டுச்சிற்பிகள் '*கைஅமைதி*' என்றும், '*எழிற்கை*' என்றும், '*சிற்பக்கை*' என்றும், '*முத்திரை*' என்றும், தொழிற்கை என்றும் வகைப்படுத்தியுள்ளனர்.

32 வகை நடனமெய்ப்பாட்டினை நவிலும், ஆடல்முத்திரைகள் வருமாறு:–

1. காக்கும் (அபயக்)கை.

2. வழங்கும்கை (வரத)முத்திரை.

3. அரிமாக்காது (சிம்கர்ண)முத்திரை.

4. வணங்கும் (அஞ்சலிக்)கை.

5. விளக்கும் அல்லது கற்பிக்கும் (வியாக்யானக்) கை.

6. நிலத்தைத் தொடும் கை (பூ ஸ்பரிச முத்திரை).

7. மலர்ந்த ............................தாமரைக் கை.

8. தும்பிக் (கெஜக்)கை.

9. தொங்கும் கை (டோல அஸ்தம்).

10. துடிக் (டமருகக்)கை.

11. அணைக்கும் (ஆலிங்கனக்)கை.

12. தொடைக் (ஊரு)கை.

13. சுழற்கை (விவர்த்தித அஸ்தம்).

14. நண்டுப்பிடி (கடக)முத்திரை.

15. அச்சுறுத்தும் (தர்ஜனி)கை.

16. கத்தரிக்கோல் (கர்த்தரீ)முத்திரை.

17. வியப்பு (விஸ்மய)முத்திரை.

18. மெய்யறிவு (ஞான)முத்திரை.

19. சிந்தனைக் (தியான)கை.

20. பிறைக் (அர்த்தச்சந்திரக்)கை.

21. சுட்டும் (சூசி)முத்திரை.

22. அரைக்கொடி (அர்த்தபதாக)முத்திரை.

23. அழைத்து வழங்கும் கை (ஆகூய வரத(ம்))முத்திரை.

24. முட்டி (முஷ்டி)முத்திரை.

25. ஊன்றிய (நித்ரா)முத்திரை.

26. தளிர்க் (பல்லவக்)கை.

27. விற்பிடி (தனுர்)முத்திரை.

28. அடிக்கும் (தாடன)முத்திரை.

29. எழிற்கை (சுந்தரஹஸ்த).

30. நீட்டிய (தண்டஅஸ்தம்)கை.

31. இடைக்கை (கடி அஸ்தம்).

32. அறவாழிக்கை =(தர்மசக்கர அஸ்தம்.)

# நடனமெய்ப்பாடு



கத்தரிக்கோல் முத்திரை



வியப்பு முத்திரை



மெய்யறிவு முத்திரை



சிந்தனைக் கை



பிறைக் கை



சுட்டும் முத்திரை



அரைக்கொடி முத்திரை



அழைத்து வழங்கும் கை



முட்டி முத்திரை



ஊன்றிய முத்திரை



தளிர்க் கை



விற்பிடி முத்திரை



அடிக்கும் முத்திரை



எழிற்கை



நீட்டிய கை



இடைக்கை



அறவாழிக்கை

# நடனமெய்ப்பாடு


காக்கும் கை


வழங்கும் கை முத்திரை


அரிமாக்காது முத்திரை


வணங்கும் கை


விளக்கும் கை


நிலத்தைத் தொடும் கை


மலர்ந்த தாமரைக் கை


தும்பிக் கை


தொங்கும் கை


துடிக் கை


அணைக்கும் கை


தொடைக் கை


சுழற்கை


நண்டுப்பிடி முத்திரை


அச்சுறுத்தும் கை



**நடனன்** *nadaṉaṉ,* பெ. (n.), 1. நடனமாடுபவன்; dancer. *2. நடிகன்* பார்க்க. see *nadigaṉ.* "*நடனன் பாங்குற நடிப்பது*" (இரகு. குசனயோத்தி.98.).

*[நடனம் → நடனன்.]*

**நடனியர்** *nadaṉiyar,* பெ. (n.), கூத்தியர்; dancing girls. "*நடித்தெதிர் நடந்த தன்றே நடனியர் தம்மின் மன்னோர்*" (இரகு. ஆற்று. 20.).

**நடாத்து—தல்** *nadāttu-,* 5.செ. குன்றாவி. (v.t.), நடத்துதல்; to cause to walk.

*[நட → நடத்து → நடாத்து—.]*

ஒ.நோ: கடவுதல் → கடாவுதல்.

**நடாதூரம்மான்** *nadātūr-ammāṉ,* பெ. (n.), இராமானுசாச்சாரியரின் சீடருள் ஒருவராகிய, ஒரு மாலிய ஆசிரியர்; a māliya āccāryar the disciple of Rāmāṉujar.

*[நடாதூர் + அம்மான்.]*

**நடாந்திகை** *nadāndigai,* பெ. (n.), நாணம் (இலச்சை); sense of shame.

**நடாவு—தல்** *nadāvu-,* 5. செ. குன்றாவி. (v.t.), *நடவு* பார்க்க; see *nadavu.* "*இருளால் வினைகெடச் செங்கோல் நடாவுதிர்*" (திவ். இயற்.திருவிருத். 33.).

*[நடவு> நடாவு—.]*

**நடி[1]—த்தல்** *nadi-,* 4.செ. கு. வி. (v.i.), 1. கூத்தாடுதல்; to dance, to act, on the stage. "*நடிக்குமயி லென்னவரு நவ்விவிழியாரும்*" (கம்பரா. வரைக்காட்சி. 15.). 2. கோலங் கொள்ளுதல்; to assume manifestations or forms, as a deity. "*நடித்தெதிர் நடந்ததன்றே*" (இரகு. ஆற்று. 20.). 3. பாசாங்கு செய்தல்; to make pretence, affect importance. "*நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பலசெய்து*" (திருவாச. 41:3.).

**த.** நடி → skt. naṭa.

*[நள் → நடி —.]*

**நடி[2]** *nadi,* பெ. (n.), நடனப் பெண்; dancing girl.

**த.** நடி> Skt நடீ (naṭī.)

*[நள் → நளி → நடி. ]*

**நடி[3]** *nadi,* முதனிலைத்தொ.பெ. (vbl.n.), ஆட்டம்; dancing "*நடிகொள் நன்மயில்சேர் திருநாரையூர்*" (தேவா.216:5.).

**த.** நடி → Skt. நட (நட்ட) pkt. ந்ருத்.

*[நள் → நளி → நடி.]*

*ஒ.நோ. களிறு → கடிறு.]* விருந்தாளி → விருந்தாடி

'*நள்*' எனும் பொருந்துதற்கருத்தினின்று கிளைத்த முதனிலையாகும்.

அடி, கடி, பிடி என்னுஞ்சொற்களைப் போன்றே, நடி என்பதும், தமிழில் ஆட்டம் என்னும் பொருளில் முதனிலைத் தொழிற்பெயராய் வழங்கும்.

(எ.டு) *"நடிகொள் நன்மயில்சேர் திருநாரையூர்"* (தேவா.216:5).

பொதுவாக, முதனிலையினின்றே தொழிற்பெயர் திரிக்கப்படும். ஆயின், செ.ப. கழகத் தமிழகராமுதலி, தொழிற்பெயரினின்று முதனிலையைத் திரிக்கின்றது.

(எ.டு) நடம் → நடி.

நள்ளுதல் = பொருந்துதல்.

நள் → நளிதல் = ஒத்தல். நள் → நடி. நடித்தல் = ஒத்துச்செய்தல்.

வடவர் *'நட்ட'* என்னும் பிராகிருத வடிவினின்று. நாட்டியம் என்னும் சொல் தோன்றியதென்பர். இதற்கு *'ந்ருத்'* என்னும் வேரினை மூலமாகக் காட்டுவர். *"ந்ருத்"* என்னும் முதனிலைக்கு வேர்ப்பொருளே இல்லை.

மா.வி. அகரமுதலியிலும், *'ந்ருத்'* என்னும் முதனிலைக்கு சரியான வேர்ப்பொருளில்லை. *'நடி'* என்னும் பகுதியினின்று தோன்றியுள்ள எல்லாச்சொற்களுக்கும் மூலமாக, *'ந்ருத்'* என்பதையே வேரடியாகக் காட்டுகிறது.

ந்ருத் → ந்ருத்த(வ) → நட்டணம்(த).
நட்டணம் → நட்டம் → நடம் →நடி.

நடம் என்னும் தொழிற்பெயரினின்று, நடன் என்னும் ஆண்பாற் பெயரும், நடி(பிங்.) என்னும் பெண்பாற்பெயரும் தோன்றும்.

நடிகன், நடிகை என்னும் இருபாற்பெயரும், முறையே, naṭika, naṭikā என்னும் வடசொல்லின் திரிபாகச், சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலியிற் குறிக்கப்பட்டுள்ளது.

ஒருவன் தன்னிடம் இல்லாததை, இருப்பதாகக் காட்டிப் பாசாங்கு செய்யுங்கால், *"கூத்தாடுகின்றான்"* என்று கூறாமல், *"நடிக்கின்றான்"* என்றே, நாட்டுப்புறமக்கள் இன்றும் நவில்கின்றனர். கல்லாதார் நாவிலும் இன்றைய மக்கள்தம் வாழ்வியலிலும் வழக்கூன்றியுள்ள தொடர்கள் வருமாறு:—

1. 'நடித்து மயக்குவதில் கைதேர்ந்தவன். 2. 'நடித்துப் பணம் பறிப்பதில் அவள் கெட்டிக்காரி. 3. 'நடிக்கிற வேலை நம்(ம)கிட்ட வேண்டாம் 4. 'இந்த நடிப்பெல்லாம் இங்கு எடுபடாது.

இயன்மொழியாம் தமிழில் 'நடி' எவ்வாறு மக்களிடையே வழக்கூன்றி யுள்ளதற்கான சான்றுகள் வருமாறு.

(எ.டு.) நள் → நளி → நடி + அம் → நடம்.

(ஒ.நோ.) குறி + அம் → குறம்.

நடி → நடம் → நட்டம் → நட்ட(பி) → ந்ருத்த(வ)→ ந்ருத்.

த. → படி → வ. பிரதி.

(ஒ.நோ.) வள் → வட்டு → வட்டம் → வட்ட(பி) → வ்ருத்த(வ) (நடு) நடி + அனம் → நடனம். படம் → பட்டம் = துணி. படி + அனம் → படனம் → நடனம் → நடலம்(கொச்சை).

(நடு) நடி + அகம் → நாடகம் ஒ.நோ. படி + அகம் → பாடகம் (செ.பல்.அக.சீ.கே.பக்.33.).

மேற்குறித்த சொற்பிறப்பு எடுத்துக் காட்டுகளும் ஒப்புநோக்கும், *"நடி"* எனும் தமிழ் மொழியின் முதனிலையினின்றே, *"ந்ருத்"* என்னும் வடமொழி வேரினை அமைத்துக் கொண்டதைக் காட்டும்.

1. தமிழகத்தில் நடிப்பு, நடி என்னும் சொற்கள் வழக்கூன்றி இருந்தமைக்குக் கீழ்க்கண்ட வழக்குகள் நற்சான்று படைக்கின்றன. 1. உனக்கு ஒன்றுமே தெரியாதது போல் நடிக்கிறாயே 2. வருமானவரி அதிகாரிபோல் நடித்துக் கையூட்டு வாங்கியவர் பிடிபட்டார். 3. அந்த நடிகரின் நடிப்பு இந்தப்படத்தில் தரக்குறைவாக இருந்தது. 4. ஒன்றுந் தெரியாததுபோல் நடிக்காதே. 5. கவர்ச்சி நடிகையின் நடிப்பு எடுபடவில்லை. 6. அவளுடைய நடிப்பில் மயங்கிவிடாதே மேற்குறித்த வழக்குகள் *'நடி'* என்னும்

முதனிலை, மாந்தர்தம் வாழ்வியலில் முதன்மை பெற்று விளங்கியதைத் தெரிவிக்கின்றன.

நடி என்னும் முதனிலைத் தொழிற்பெயரினின்றே நடம், நடிப்பு, நடித்தல், நடிகன், நடிகை, நாடகம், நடனம், நடனன் போன்ற சொற்கள் தோன்றியுள்ளன.

'ந்ருத்' என்ற சொல்லிற்கு அடிப்படைப் பொருள், வடமொழியில் ஏதுமில்லை.

தமிழ்மொழியில் தேவாரம், திருவாசகம், திருவருட்பா, கந்தரலங்காரம் போன்ற பத்திப் பனுவல்களில், இச் சொல் வழக்கூன்றியுள்ளது. (எ.டு.) 1. நடிகொள் நன்மயில் சேர் திருநாரையூர் (தேவா.216:5.). 2. நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து (திருவாச.2:11.). 3. நடித்து மண்ணிடைப் பொய்யினைப் பல செய்து (திருவாச.41:3:1.). 4. பொன்தரத்தை என் உரைக்கேன் பொற்பொதுவில் நடிக்கின்றோய்(திருவருட்பா). 5. நடிக்கின்றிலை நெஞ்சே தஞ்சமது நமக்கினியே. (கந்தரலங்காரம்.)

மக்கள் வழக்கிலும், பத்திப்பனுவலியற்றிய அருளாளர்தம் பாக்களிலும், இச் சொல் வழக்கூன்றியுள்ளதாலும், வடமொழியாளர் நடி என்னும் முதனிலைக்குக் காட்டும் '*ந்ருத்*' என்னும் வேரடிக்கு வடமொழியில் அடிப்படைப் பொருள் ஏதுமில்லை என்பதாலும், இச்சொல் தமிழ்ச்சொல்லென்று தெளிக.

**நடிகன்** *nadigan*, பெ. (n.), நாடகமேடையிலும் திரைப்படத்திலும் நடிப்பவன்; actor.

*[நடி → நடிகன்.]*

**நடிகை** *nadigai*, பெ. (n.), நாடகமேடையிலும் திரைப்படத்திலும் நடிப்பவள்; actress.

*[நடி + கை → நடிகை.*

*(ஒ.நோ. கணி → கணிகை.]*

**நடு[1]–தல்** *nadu-*, 18 செ. குன்றாவி. (v.t.) 1. ஊன்றுதல்; to set up, as a pillar. "*நடவந்த வுழவரிது நடவொணாவகை பரலாய்த் தென்று*" (தேவா. 133:8.). 2. வைத்தல்; to place. "*திருவடி யென்றலைமே னட்டமையால்*" (திருவாச. 40,8.). 3. நிலைநிறுத்துதல்; to establish as fame. "*மண்ணின்மேல்வான்புகழ் நட்டானும்*" (திரிகடு.16.).

**க.,** நடு. **தெ.,** நாடு. **ம.,** நடுக. **து.** நடபினி.

*[ நெடு → நடு. ]*

மேனோக்கிய நீளவாட்டில் ஊன்றுதல்

**நடு[2]–த்தல்** *nadu-*, 4 செ.கு.வி. (v.i.), நடுங்குதல்; to tremble "*நடுத்திருக்கும்*" (சங்கர. அந்தாதி.20.).

**நடு[3]** *nadu*, பெ. (n.), 1. இடை; middle "*நடுவூரு ணச்சுமரம் பழுத்தற்று*" (குறள், 1008.). 2. நடுவம் (அரு. நி.); centre 3. இடைப்பட்டது; that which is intermediate, as in place or time, that which intervenes. 4. வானத்தின் உச்சி; zenith, topmost part of the heavens "*காலைக் கதிரோனடுவுற்றதொர் வெம்மை காட்டி*" (கம்பரா. நகர்நீங்கு. 123.). 5. உள்ளுறை கடவுள்; indwelling God "*கெடுவில் கேள்வியு ணடுவாகுதலும்*" (பரிபா.2.25.). 6. இடுப்பு; waist "*நடுங்க நுடங்கு நடுவுடைய விடங்கா லயிற்கண்ணி*" (திருக்கோ. 31.). 7. நடுநிலை; impartiality, uprightness. "*நடுவாக நன்றிக்கட் டங்கியான் றாழ்வு*" (குறள் 117.). 8. அறம் (வின்.); equity justice. 9. மீதம், medium, moderation. 10. வழக்கு.(வின்.); lawsuit. 11. நிலம்; earth, as the middle world. 12. புருவநடு; space between the eye brows.

க., து., நடு. தெ., நடுமு. ம. நடு.

*[நள் → நட்டு → நடு.]*

*(ஒ.நோ.) வள் → வட்டு → வடு.*

**நடு⁴** *nadu,* பெ. (n.), **1.** கல்லுப்பு; stone-salt. **2.** பாறையுப்பு; rock-salt.

**நடுஅண்டம்** *nadu-andam,* பெ. (n.), *நடுவண்டம்* பார்க்க; see *nadu-v-andam.*

*[நடு + அண்டம்.]*

**நடுக்கட்டு¹-தல்** *nadu-k-kattu-,* 5. செ. குன்றாவி. (v.t.) உடைமையைப் பொதுக் கட்டுதல் (யாழ்ப்.); to sequestrate property

*[நடு + கட்டு-.]*

**நடுக்கட்டு²** *nadu-k-kattu,* பெ. (n.), **1.** மகப்பேற்றுக்குப்பின் பெண்களுக்குக்கட்டும் இடுப்புக்கட்டு; a bandage tide round the waist of a woman in labour. **2.** இடுப்பிற்கு வலிவும் ஆண்மையுமுண்டாக்கும் அரைக் கச்சை; waist belt which not only gives strength to the hip. but also promotes manly power.

*[நடு=இடுப்பு. நடு + கட்டு.]*

**நடுக்கட்டு³** *nadu-k-kattu,* பெ. (n.), **1.** அரைக்கச்சை; girdle. **2.** பெரிய வீட்டின் நடுவிலுள்ள பகுதி; middle portion of a large house

*[நடு + கட்டு.]*

க., நடுக்கட்டு. ம. நடுக்கெட்டு.

அரண்மனை போன்ற பெரியமாளிகை அல்லது, நாட்டுக்கோட்டைச் செட்டிமார் இல்லங்களில் அமைந்த இடைப்பகுதியே, நடுக்கட்டு. உடம்பின் நடுவிடமான இடையில் கட்டும் கச்சும் நடுக்கட்டே யாகும்.

**நடுக்கண்** *nadukkan.* பெ. (n.), கண்ணின் நடுப்பகுதி; middle of the eye.

*[நடு + கண்.]*



**நடுக்கண்டம்¹** *nadu-k-kandam,* பெ. (n.), **1.** நடுத்துண்டு; middle piece. **2.** இடை மண்டலம்; central portion of a continent

*[நடு + கண்டம்.]*

**நடுக்கண்டம்²** *nadu-k-kandam,* பெ. (n.), தலைக்கும் இடுப்பிற்கும் இடையிலுள்ள பகுதி; that part of the body between the head and buttocks

*[நடு + கண்டம். நடு = இடை.]*

**நடுக்கம்** *nadukkam,* பெ. (n.), **1.** நடுங்குகை; trembling, sharing, quaking, shivering. "*மின்னையுற்ற நடுக்கத்து மேனியாள்*" (கம்பரா. நகர்நீங்கு. 220.). **2.** மிக்க அச்சம்; agitation, trepidation, great fear "*நள்ளிர விடையுறும் நடுக்க நீங்கலார்*" (கம்பரா. மாரீச. 120). **3.** துன்பம்; distress. "*நாட்பட்டலைந்த நடுக்க*

*மெலாந் தீர"* (தாயு. பராபர. 260.). 4. கிறுகிறுப்பு (யாழ்.அக.); dizziness. 5. மயக்கம் (யாழ்.அக.); giddiness.

க. நடுக. ம. நடுக்கம்.

*[நடுக்கு → நடுக்கம்.]*

**நடுக்கல்** *naḍukkal,* பெ. (n.) 1. *நடுக்கம்* பார்க்க; see *naḍukkam.* 2. *நடுக்குவாதம்* [2] பார்க்க; see *naḍukku-vādam* [2].

*[நடுக்கு + நடுக்கல்.]*

**நடுக்கல்முடக்குநோய்,** *naḍukkal-muḍakku-nōy,* பெ. (n), உடல் வெதும்பி, பிடரியிலும், தலையிலும் நடுக்கத்தை ஏற்படுத்திக் கை கால்களில் உதறலை உருவாக்கி, சொல் தடுமாறி, முகமும் விழியும் கருத்து, கண் சுழித்து, நிலைகொட்டித் துன்புறுத்தும் நோய்; a persistant tremor resenbling that of paralysis.

**நடுக்கல்வாதம்** *naḍukkal-vādam,* பெ. (n.). *நடுக்கல் முடக்கு நோய்* பார்க்க; see *naḍukkal-muḍakku-nōy.*

மறுவ. உதறுவாதம்.

*[நடுக்கல் + skt. வாதம்.]*

**நடுக்கல்வாந்தி** *naḍukkal-vāndi,* பெ. (n.) நோய்வகை (பாலவா.167.); a disease.

*[நடுக்கல் + வாந்தி.]*

**நடுக்கற்காய்ச்சல்** *naḍukkaṟ-kāyccal,* பெ.(n.) குளிர் சுரம்; fever marked by a child followed by high fever and sweating.

*[நடுக்கல் + காய்ச்சல்.]*

**நடுக்கற்சுரம்** *naḍukkaṟ-šuram,* பெ. (n) *நடுக்கற் காய்ச்சல்* பார்க்க; see *naḍukkaṟ-kāyccal.*

*[நடுக்கல் + சுரம்.]*

சுரம் பாலையின் பண்பாக அகப்பொருள் கூறுதல் காண்க. சுர் → (சுரீர் → சுரம். இக்காலத்தே இதனை ஜுரம் என்று தமிழர் மாற்றி வழங்குகின்றனர். ஒ.நோ. சவளி → ஜவுளி.

**நடுக்காது** *naḍu-k-kādu,* பெ. (n.) காதின் நடு; middle ear.

*[நடு + காது.]*



**நடுக்காரன்** *naḍu-k-kāraṉ,* பெ. (n.), நடுவன்(யாழ்ப்.); umpire, arbitrator.

மறுவ. நொதுமலாளன், காரணிகர்.

*[நடு + காரன்.]*

விளையாட்டில் அல்லது முறை மன்றத்தில், இரு அணிகளின் ஆட்டத்தைக் கூர்ந்து நோக்கித் தீர்ப்புத் தருபவன்.

**நடுக்கால்** *naḍukkāl,* பெ. (n.), சமக்காற்று; one of the ten vital airs of the body.

*[நடு + கால்.]*

கால் = காற்று.

உடலுள் பத்துவகைக் காற்று உள்ளதாகப் பழைய பகுப்புண்டு. அவற்றுள் ஒன்றாகும்.

**நடுக்கிளி** *nadu-k-kiḷi,* பெ. (n.), **1.** கிளித்தட்டில் கோட்டில் நின்று கிளியைத் தடுப்பவன்; player standing on the border lines of the square to defend it in the game of kiḷi-t-taṭṭu **2.** கிளியாட்டத் தலைவன்; (வின்.). the captain in kiḷi-t-taṭṭu.

*[நடு + கிளி.]*

**நடுக்கு¹-தல்** *nadukku-,* 5.செ. கு. வி. (v.i.), **1.** நடுங்குதல்; to shiver, tremble. '*வயது முதிர்ச்சியினால் தாத்தாவின் உடல் நடுங்குகிறது*' (உ. வ.).

*[நடு → நடுக்கு-.]*

**நடுக்கு²-தல்** *nadukku-,* 5. செ. கு. வி. (v.t.), **1.** நடுங்கச் செய்தல்; to shake, cause to quiver. குளிர் உடலை நடுக்குகின்றது (உ. வ.). **2.** மயக்கங் கொடுத்தல் (வின்.); to cause dizziness or sickness, as betel, tobacco.

*[நடுங்கு (த.வி.) → நடுக்கு (பி.வி.).]*

**நடுக்கு³** *nadukku,* பெ. (n.), **1.** *நடுக்கம்* பார்க்க; see *nadukkam.* "*முழுதுசேண் விளங்கி நடுக்கின்றி நிலியரோ*" (புறநா. 2.). **2.** மனச் சோர்வு; mental agitation. "*நடுக்கற்ற காட்சியார்*" (ஆசாரக். 100).

க. நடுகு.

*[நடுக்கம் → நடுக்கு.]*

**நடுக்குக்காய்ச்சல்** *nadukku-k-kāyccal,* பெ. (n.), *நடுக்கற்காய்ச்சல்* பார்க்க; see *nadukkaṟ-kāyccal*

*[நடுங்கு → நடுக்கு + காய்ச்சல்.]*

**நடுக்குசன்னி** *nadukku-šanni,* பெ. (n.), அடிக்கடி தூக்கிப் போடும் இசிவுநோய் வகை; a disease of the spinal cord. Locomotor ataxia.

மறுவ. நடுக்கு இசிவு.

*[நடுங்கு → நடுக்கு + skt. சன்னி.]*

**நடுக்குடி** *nadu-k-kudi,* பெ. (n.), **1.** நடு நிலைமையிலுள்ள குடும்பம்; a family of middling circumstances or rank. **2.** ஒரு வகுப்பின் தலைமைக்குடி. (யாழ்ப்.); the leading family of a tribe or class. **3.** நடுவூர்க்குடி, (யாழ். அக.); house is the centre of a village

*[நடு + குடி.]*

**நடுக்குண்ணல்** *nadukkuṇṇal,* பெ. (n.), நடுக்கமுண்டாதல்; being attended with shivering.

*[நடுக்கு + உண்ணல்.]*

உண்ணல் ஈண்டு, உள்ளதன் அல்லது இருப்பும் பொருளில் வருகிறது.

ஒ.நோ. நெருக்குண்டேன்; அடியுண்டேன்; சோறுண்டேன்.

**நடுக்குத்துக்கால்** *nadu-k-kuttu-k-kāl,* பெ. (n.), மோட்டுவளையைத் தாங்க உத்தரத்தின் மேல்பதிக்கப்பட்ட நடுக்கால் (இ.வ.); king-post, vertical post set on a

horizontal beam, connecting the two walls to support ridge pieces.

*[நடு + குத்து + கால்.]*



**நடுக்குப்பக்கவாதம்** *naḍukku-p-pakka-vādam,* பெ. (n.), *நடுக்குசன்னி* பார்க்க; see *naḍukku-šaṉṉi.*

*[நடுக்கு + பக்க + Skt. வாதம்.]*

skt. *வாதம் = த.முடக்கு நோய். வலிப்பு நோய்.*

**நடுக்குப்பித்தம்** *naḍukku-p-pittam,* பெ. (n.), பித்தக்கோளாறினால், உடம்பில் பலவுறுப்புக் களுக்குக் காணும் நடுக்கம்; a disease causing tremor in several organs of the body, due to derangement of bile.

*[நடுக்கு + பித்தம்.]*

**நடுக்குவாதம்**[1] *naḍukku-vādam,* பெ. (n.), உதறு வலிப்பு (வாதம்) (யாழ். அக.); shaking palsy

*[நடுக்கு + Skt வாதம்.]*

**நடுக்குவாதம்**[2] *naḍukku-vādam,* பெ. (n.), *நடுக்கல் முடக்கு நோய்* பார்க்க; see *naḍukkal-muḍakku-nōy*

*[நடுக்கு + Skt. வாதம்.]*

**நடுக்குறு-த்தல்** *naḍukkuṟu-,* 4.செ. குன்றாவி. (v.t.), நடுங்கச் செய்தல்; to cause to tremble. "*நெஞ்சு நடுக்குறூஉ நெய்த லோசையும்*". (மணிமே. 6:71.).

**க.** நடுகிசு.

*[நடுங்கு → நடுக்கு + உறு-.]*

**நடுக்கெடு-த்தல்** *naḍukkeḍu-,* 4.செ. குன்றாவி. (v.t.), நடுக்கம் காணல்; to be attacked with shivering or trembling as from cold.

*[நடுக்கு + எடு-.]*

**நடுக்கேடு** *naḍu-k-kēḍu,* பெ. (n.). ஒருபுடைச்சார்பு; particlity "*நச்சுவாய்ப் பல்லர் நடுக்கேடு செய்தவர்கள்*" (சித்.நாய.5.).

*[நடு + கேடு.]*

**நடுக்கேள்-தல்** *naḍu-k-kēḷ-,* 11. செ. குன்றாவி. (v.t.), **1.** வழக்கு உசாவுதல்; to hear arguments of litigants in a suit. **2.** நேர்மையான முடிவு சொல்ல வேண்டுதல் to refer a case; for decision.

*[நடு + கேள்-.]*

**நடுக்கொண்டவீடு** *naḍu-k-koṇḍa-vīḍu,* பெ. (n.), நடுவத்திலுள்ள வீடு; middle - house.

**நடுகல்** *naḍu-kal,* பெ. (n.), போரில் இறந்த வீரரின், உருவமும் பெயரும், பீடும் எழுதிப் பெரும்பாலும், அவ் வீரரைப் புதைத்த

விடத்தில், நடுஞ்சிலை அல்லது கல்; memorial tablet set up over the grave of a deceased warrior and inscribed with his figure and achievements. *"காட்சி, கால்கோ ணீர்ப்படை நடுகல்"* (தொல். பொருள். 60.).

**மறுவ.** வீரக்கல்.

*[நடு + கல்.]*

போரில் விழுப்புண் எய்தி, வீரச்சாவு அடைந்த வீரனுக்கு, இறந்தவிடத்தில் நடப்படும் கல். நடுகல் பற்றி மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் கூறுவது:-

பழங்காலத்துத் தமிழர் வீரத்தைப் போற்றினார்கள். போர்க்களத்தில் புறங்காட்டி ஓடாமல், திறலோடு போர் செய்த வீரர்களைத் தமிழர் புகழ்ந்து போற்றிப் பாராட்டினார்கள். திறலோடு போர்செய்து, களத்தில் விழுந்து உயிர்விட்ட வீரர்களுக்கு நடுகல் நட்டு, நினைவுச்சின்னம் அமைத்தார்கள். விறல் வீரர்களின் நினைவுக்காக நடப்பட்ட நடுகற்களைப் பற்றிக் கழக நூல்களில் காணலாம்.

வெட்சிப் போர், கரந்தைப் போர், வஞ்சிப் போர், உழிஞைப் போர், நொச்சிப் போர், தும்பைப் போர், வாகைப் போர் என்று போரைத் தமிழர் ஏழு வகையாகப் பிரித்திருந்தார்கள். சங்க காலத்தில், அரசர்கள் போர் செய்வதைத் தங்கள் கடமைகளில் முகாமையானதாகக் கருதினார்கள். ஏழு வகையான போர்களிலே, எந்தப் போரிலானாலும், ஒரு வீரன் திறலாகப் போர் செய்து உயிர் விட்டால், அந்த வீரனுக்கு நடுகல் நட்டு, அவன் வீரத்தைப் பாராட்டினார்கள். வீரர்களின் நினைவுக்காகக் கல் நடுவதைத் திருக்குறளும் கூறுகிறது. "என் ஐமுன் நில்லன்மின் தெவ்விர், பலர்என்ஐ முன்நின்று கல்நின்றவர்" (குறள்,771).

வீரத்தைப் பாராட்டி நடப்படுவதனால், நடுகல்லுக்கு வீரக்கல் என்றும் பெயர் உண்டு. வீரக்கல் நடுவதற்கு ஐந்துதுறைகளைக் கூறுகிறார் தொல்காப்பியர். அவை, காட்சி, கால்கோள், நீர்ப்படை, நடுகல், வாழ்த்து என்று ஐந்து துறைகளாம். காட்சி என்பது நடவேண்டிய கல்லை மலையில் கண்டு தேர்ந்தெடுப்பது. கால்கோள் என்பது, கொண்டு வருவது. நீர்ப்படை என்பது கொண்டுவந்த கல்லில் இறந்த வீரனுடைய பெயரையும், அவனுடைய சிறப்பையும் பொறித்து நீராட்டுவது. நடுகல் என்பது, அந்த வீரக்கல்லை நடவேண்டிய இடத்தில் நட்டு, அதற்கு மயிற்பீலிகளையும், மாலைகளையும் சூட்டிச் சிறப்புச் செய்வது. வாழ்த்து என்பது, யாருக்காகக் கல் நடப்பட்டதோ அந்த வீரனுடைய திறனையும் புகழையும் வாழ்த்திப் பாடுவது. கல்நாட்டு விழாவுக்கு ஊரார் மட்டும் அல்லாமல் சிறப்பாக வீரர்களும் வந்து சிறப்புச் செய்வார்கள்.

போரில் இறந்த வீரர்களுக்கு, நடுகல் நடுகிறவழக்கம், பழந்தமிழகத்தில் மட்டுமல்லாமல், வேறு நாடுகளில் பழங்காலத்தில் இருந்து வந்தது. ஐரோப்பாக் கண்டத்திலும், சில நாடுகளில் நடுகல் நடுகிற வழக்கம் பழங்காலத்தில் இருந்தது. அந்த நடுகற்களுக்கு அவர்கள் மென்கிர் என்று பெயர் கூறினார்கள். மென்கிர் என்றால் நெடுங்கல் அல்லது உயரமான கல் என்பது பொருள். மென்கிர் (Menhir) என்பது பிரெடன் (Breton) மொழிச்சொல். ('Men'-Stone; 'Hir'-High.) இந்தோனேசியத் தீவுகள் எனப்படும், சாவா, சுமத்திரா போன்ற கிழக்கிந்தியத் தீவுகளிலும், நடுகல் நடுகிற வழக்கம், பழங்காலத்தில் இருந்தது. இதனால், பழந்தமிழரைப் போலவே, வேறு நாட்டாரும், நடுகல் நடுகிற வழக்கத்தைக் கொண்டிருந்தார்கள் என்பது தெரிகின்றது.

வீரர்களுக்கு நடுகல் நட்டதைச் கழகச் செய்யுளில் காண்கிறோம். கரந்தைப் போரில் இறந்துபோன ஒரு வீரனுக்கு, நடுகல் நட்டதை ஆலூர் மூலங்கிழார் தம்முடைய செய்யுளில் கூறுகிறார் (புறம். 261: 13–15.). இன்னொரு கரந்தைப் போரில் வீரச்சாவு அடைந்த ஒரு வீரனுக்கு, வீரக்கல் நட்டபோது, அவன் மீது கையறுநிலை பாடினார் புலவர் உறையூர் இளம்பொன்வாணிகனார். அந்த நடுகல்லின் மேல் அவனுடைய பெயரைப் பொறித்து, மாலைகளாலும், மயிற்பீலிகளாலும் அழகு படுத்தியிருந்ததை, அச் செய்யுளில் அவர் கூறுகிறார் (புறம். 264.).

சேலம் மாவட்டத்திலிருந்த, தகடூர் கோட்டையின் தலைவன் அதிகமான் நெடுமான் அஞ்சி, பெருஞ்சேரல் இரும்பொறை என்னும் சேர அரசன் தகடூரின் மேல் படையெடுத்து வந்து, அக் கோட்டையை முற்றுகையிட்டான். அதன் காரணமாகப் பல நாட்கள் போர் நிகழ்ந்தது. அப்போரில் அதிகமான் நெடுமான் அஞ்சி, புண்பட்டு இறந்து போனான். அவனுக்கு வீரக்கல் நட்டு, அவன் வீரத்தைப் போற்றினார்கள். அப்போது அவனுடைய புலவராக இருந்த ஔவையார் கையறு நிலை பாடினார் (புறம். 232.).

கோவலர் (ஆயர்) வளர்த்து வந்த, ஆநிரை மந்தைகளைப் பகையரசனுடைய வீரர்கள் வந்து ஓட்டிக்கொண்டு போய் விட்டார்கள். இதனையறிந்த அவ்வூர் வீரன், அவர்களைத் தொடர்ந்து சென்று, வில்லை வளைத்து, அம்புமாரி பொழிந்து, பகைவரை ஓட்டித் தன்னூர் ஆக்களை மீட்டுக் கொண்டான். ஆனால், வெற்றிபெற்ற அவன், பகைவீரர்கள் எய்த அம்புகளினால் புண்பட்டு மாண்டு போனான். திறலுடன் போர்செய்து மாண்டு போனான். திறலுடன் போர்செய்து மாண்டுபோன அவ் வீரனுக்கு, அவ்வூர்க் கோவலர்கள் நடுகல் நட்டார்கள். அந்த நடுகல்லுக்கு, வேங்கைமரத்துப் பூக்களினாலும், பனங்குருத்துகளாலும், மாலைகள் கட்டிச் சூட்டிச் சிறப்புச் செய்தார்கள். இந்தச் செய்தியைச் சோணாட்டு முகையலூர் சிறுகருத்தும்பியார் தம்முடைய செய்யுளில் கூறியுள்ளார் (புறம். 265.).

இன்னொரு ஊரில், பகைவர்கள் வந்து அவ்வூர் மாட்டுமந்தைகளைக் கவர்ந்து கொண்டு போனார்கள். அப்போது அவ்வூர் வீரன், அவர்களைத் தொடர்ந்து சென்று போராடி, மந்தைகளை மீட்டுக்கொண்டான். ஆனால், பகைவர் எய்த அம்புகள் உடம்பில் பாய்ந்தபடியால், அவன் இறந்து போனான். அவனுக்காக நட்ட வீரக்கல்லில், அவனுடைய பெயரைப் பொறித்து மயிற்பீலிகளினால் அக் கல்லை அழகுசெய்து போற்றினார்கள் என்று மருதனிளநாகனார் என்னும் புலவர், பாடுகிறார் (அகம். 131:6–11.).

தன் ஊர்ப் ஆக்களைப் பகைவர் கவர்ந்து கொண்டு போனபோது அவ்வூர் வீரன் அப்பகைவரிடமிருந்து ஆக்களை மீட்டான். ஆனால், பகைவரின் அம்புகளினால் புண்பட்ட அவன் இறந்து போனான். அவ்வூரார் அவ் வீரனின் நினைவுக்காக, வீரக்கல் நட்டுப் போற்றினார்கள். அந்தக் கல்லின் மேல் அவ் வீரனுடைய பெயரை எழுதினார்கள். மாலைகளையும் பீலிகளையுஞ் சூட்டினார்கள். நடுகல்லின் மேலே சித்திரப் படத்தினால் (சித்திரம் எழுதப்பட்ட துணி), பந்தல் அமைத்துச் சிறப்புச் செய்தார்கள். இந் நிகழ்ச்சியை வடமோதங்கிழார் கூறியுள்ளார் (புறம். 260.).

ஒரு ஊரிலிருந்த ஆநிரைமந்தைகளைச் சில வீரர்கள் வந்து பிடித்துக்கொண்டு போய்விட்டார்கள். அதையறிந்த அவ்வூர் வீரர் சிலர், அவர்களைத் தொடர்ந்துசென்று ஆக்களை மீட்பதற்காகப் போர் செய்தார்கள். பகைவரும் எதிர்நின்று அம்பு எய்தனர். பகைவரின் அம்புக்கு அஞ்சிச் சில வீரர்கள் ஓடிப்போனார்கள். ஒரு வீரன் மட்டும் புறங்கொடாமல் நின்று போர்செய்தான். பகைவீரர்களின், அம்புகள் அவனுடைய உடம்பில் தைத்து, அவன் அக் களத்திலே இறந்து போனான். அவ்விறல் வீரனுக்கு நடுகல் நட்டுப் போற்றினார்கள் அவ்வூரார் (புறம். 263.).

ஆண்டுதோறும் வீரக்கல்லுக்கு அவ் வீரனுடைய உறவினர் பூசை செய்தார்கள். அந் நாளில், அந்நடுகல்லை, நீராட்டி எண்ணெய் பூசி மலர் மாலைகளைச் சூட்டி நறுமணப் புகையைப் உருவாக்கினார்கள். அந்தப்புகையின் மணம் ஊரெங்கும் கமழ்ந்தது. இந்தச் செய்தியை, மதுரை அறுவை வாணிகன் இளவேட்டனார் தம்முடைய செய்யுளில் கூறுகிறார் (புறம். 329.).

கழகக் காலத்துத் தமிழகத்திலே, அடிக்கடி போர்கள் நிகழ்ந்தன. போரில் இறந்த வீரர்களுக்கு நடுகற்கள் நடப்பட்டன. ஆகையினால், நாடெங்கும் நடுகற்கள் காணப்பட்டன.

> "நல்லமர்க் கடந்த நலனுடை மறவர் பெயரும்
> பீடும் எழுதி யதர்தொறும்
> பீலி சூட்டிய புறங்குநிலை நடுகல்."
>
> (அகம். 67:8–10.)

என்று புலவர் நோய்பாடியார் கூறியது போன்று ஊர்களிலும் வழிகளிலும் நடுகற்கள் இருந்தன.

நடுகற்கள், பலகை போன்று அமைந்த கருங்கற்களினால் ஆனவை. அவை நீண்டதாக இருந்தன. 'நெடுநிலை நடுகல்' என்று ஒரு புலவர் கூறுகிறார். பன்னிரண்டடி உயரமுள்ள நடுகற்களும் இருந்தன. பழமையான நடுகற்களின் மேலே செடிகொடிகளும் படர்ந்திருந்தன. நடுகல்லின் இறந்த வீரனுடைய பெயரும் பீடும் எழுதப்பட்டிருந்த படியால் 'எழுத்துடை நடுகல்' என்று கூறப்பட்டது. வழிப்போக்கர், வழியில் உள்ள நடுகற்களண்டை நின்று, அக்கற்களில் எழுதப்பட்ட எழுத்துக்களைப் படிப்பது வழக்கம். சில சமயங்களிலே அக் கற்களில் எழுதப்பட்ட எழுத்துகளில் சில எழுத்து மழுங்கி மறைந்துபோய் சில எழுத்துக்களே எஞ்சியிருக்கும். அவ்வெழுத்துகளைப் படிப்போருக்கு அதன் பொருள் விளங்காமலிருக்கும்.

சில வீரர்கள் தங்களுடைய அம்புகளை நடுகற்களின் மேல் தேய்த்துக் கூராக்குவர். எஃகினால் ஆன அம்பு முனையைத் தேய்க்கும்போது, நடுகல்லில் எழுதப்பட்டுள்ள எழுத்துக்களைப் படிப்போர்க்கு அவ்வெழுத்தின் பொருள் விளங்காமற் போயிற்று. இச் செய்தியை மருதன் இளநாகனார் கூறுகிறார்.

"இருங்கவின் இல்லாப் பெரும்புல் தாடிக்
கடுங்கண் மறவர் பகழி மாயத்தென
மருங்கல் நுணுகிய பேஎமுதிர் நடுகல்
பெயர்பயம் படரத் தோன்று குயிலெழுத்து
இயைபுடன் நோக்கல்செ ல் ல ா து
அசைவுடன் ஆறுசெல் வம்பலர் விட்டனர்
கழியும் சுர்முதல் இருந்த ஓமையம் புறவு."

(அகம். 297:5–11.).

உப்பு வணிகராகிய உமணர், உப்பு மூட்டைகளை வண்டிகளில் ஏற்றிக் கொண்டு, ஊர்ஊராகச் சென்று விற்பார்கள். செல்லும்போது, வழியில் உள்ள நடுகற்களின்மேல் வண்டிச்சக்கரம் உராய்ந்து நடுகல்லில் எழுதப்பட்டுள்ள எழுத்துகளில் ஒன்றிரண்டு எழுத்துகளைத் தேய்த்து விடுவதும் உண்டு. அவ்வாறு மறைந்துபோன எழுத்து இல்லாமல் மற்ற எழுத்துக்களைப் படிக்கிறவர்களுக்கு அதன் வாசகம் வேறு பொருளைத் தந்தது என்று மருதன் இளநாகனாரே மீண்டுங்கூறுகிறார்.

"மரங்கோள் உமண்மகன் பேரும் பருதிப்
புன்றலை சிதைத்த வன்றலை நடுகல்
கண்ணி வாடிய மண்ணா மருங்குல்
கூருளி குயின்ற கோடுமாய் எழுத்தால்
ஆறுசெல் வம்பலர் வேறுபயம் படுக்குங்
கண்பொரி கவலைய கானகம்."

(அகம். 343:4–9.).

நடுகற்கள் பலவித உயரங்களில் அமைக்கப்பட்டன. மூன்று அடி உயரமுள்ள நடுகற்களும், பன்னிரண்டடி உயரமுள்ள நடுகற்களும் உண்டு.

கழகக்காலத்துக்குப் பிறகு, கி.பி. 14ஆம் நூற்றாண்டு வரையிலும், தமிழ்நாட்டிலும், கன்னடநாட்டிலும், வீரர்களுக்கு நடுகல் நடுகிற வழக்கம் இருந்துவந்தது. பிற்காலத்து வீரக்கற்களில் பல நமக்குக் கிடைத் திருக்கின்றன. இந்தப் பிற்காலத்து நடுகற்களில் பிற்காலத்து வட்டெழுத்துகள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால் சங்ககாலத்து வீரக்கற்கள் ஒன்றேனும் இதுகாறும் கிடைக்கவில்லை.



**நடுகல்தெய்வம்** *nadu-kal-deyvam,* பெ. (n.), வீரச்செயல்புரிந்து ஊரைக்காக்கும் காவல் தெய்வம்; the minor deity guarding the village.

*[நடுகல் + தெய்வம்.]*

**நடுகல்வழிபாடு** *nadukal-valipādu,* பெ. (n.), நடுகல்லை வணங்குகை; worshipping hero-stone. நடுகல் வழிபாடுதான் காலப்போக்கில் ஊர்க்காவல் எல்லைத் தெய்வவழிபாடாக மாறியது (உ.வ.).

*[நடுகல் + வழிபாடு.]*

பண்டைக்காலத்தே, கொடிய விலங்குகளிடமிருந்தும், பகைவரிடமிருந்தும், ஊரையோ அல்லது நாட்டையோ, பாதுகாத்தவர்தம் திருவுருவைக் கல்லில் புடைப்புச் சிற்பமாக வடித்துப், பீடும், பெயரும் பொறித்து நடுகல்லாக நட்டனர். காலப்போக்கில், ஊரகத்தேயும், நாட்டகத்தேயும், இவ்வாறு நாட்டப்பெற்ற நடுகற்களே, காலப்போக்கில் காவல் தெய்வமாக வழிபடப்பட்டன.

**நடுகலுழலை** *nadugal-ulalai,* பெ. (n.), நட்டகற்களின் துளைகளில் மூங்கிற் கழிகளையிட்டு ஆவினத்தை அடைத்து வைக்கும் இடம்; a pound provided with a stile.

*[நடு + கல் + உழலை.]*

**நடுகூலி** *nadu-kūli,* பெ. (n.), நாற்று நடுவதற்குத் தரும் கூலி; wages for transplanting.

*[நடு + கூலி.]*

கூலம் → கூலி.

இஃது உடைமைப்பொருள் குறித்த ஈறு. பழங்காலத்தில் பழனப் பணி செய்தவர்களுக்குக் கூலமே, ஊதியமாகத் தரப்பட்டதால், கூலி என்ற பெயர் வந்தது. வயற்பணியாளர்க்குச் சம்பாநெல்லும், கடற்பணியாளர்க்கு உப்பளப்பொருளும் ஊதியமாகத் தரப்பட்டதால், சம்பளம் அமைந்தது.

**நடுகை** *nadugai,* பெ. (n.), நாற்று நடவு; transplanting of seedlings.

*[நடு → நடுகை.]*

கை சொல்லாக்க ஈறு.

(ஒ. நோ.) விடுகை, பெறுகை, தருகை.

**நடுங்க** *nadunga,* இடை. (part.), ஓர் உவமவுருபு (தொல். பொருள். 286.); a particle of comparision.

*[நடு → நடுங்க.]*

**நடுங்கநாட்டம்** *nadunga-nāttam,* பெ. (n.), தலைவனுக்கு ஏதமுளதோ என்று தலைவி ஐயுற்று நடுங்குமாற்றால், தோழி அவ்விடஞ் செய்தியொன்று கூறிக் களவொழுக்கத்தை அவள் வாயிலாகவே அறிய முயல்வதைக் கூறுந்துறை (திருக்கோ. 70, உரை.); theme in which the maid, narrating a fictitious accident to make the heroine tremble for her lover's safety, seeks an open avowal of her clandestine marriage

*[நடுங்க + நாட்டம்.]*

**நடுங்கல்** *nadungal,* பெ. (n.), அச்சம்; dread, fear. "*அவனைக் கண்டால் இவனுக்கு நடுங்கல்தான்*" (உ.வ.).

**நடுங்கலன்** *nadungalan,* பெ. (n.), நடுக்கல் வலிப்புக்காரன் (யாழ்ப்.); one suffering from shaking palsy.

*[நடுங்கல் + அன்.]*

**நடுங்கு—தல்** *naḍuṅgu-,* 5செ.கு.வி. (v.i.), 1. அசைதல்; to shake, shiver, quiver. "*வாயிற் கடைமணி நடுநா நடுங்க*" (சிலப். 20:53.). 2. அஞ்சுதல்; to tremble through fear, to be agitated. "*ஒன்னாத் தெவ்வர் நடுங்க வோச்சி*" (பெரும்பாண். 118.). 3. நாத்தடுமாறுதல்; to stutter, falter waver. "*நடுங்கா நாவி னுறைமூ தாளன்*" (மணிமே. 12:3.). 4. மனங்குலைதல்; to lose heart. "*நகையமராயம் நடுங்க நடுங்கான்*" (பு. வெ. 4, 15.). 5. அதிர்தல்; to quake, as the earth. 6. பதறுதல்; to be anxious, apprehensive. 7. கொண்டாடுதற்குறியாகத் தலையசைத்தல்; to nod one's head as a sign of appreciation "*சீறியாழ் நயம்புரிந் துறையுநர் நடுங்கப் பண்ணி*" (புறநா. 145.). 8. ஒப்பாதல்; to be similar. "*படங்கெழு நாக நடுங்குமல்குல்*" (தொல். பொருள். 286. உரை.).

க., நடுகு; தெ. நடுகு.

ம. நடுங்நுக. து. நடுகுணி.

*[நடு → நடுங்கு—.]*

**நடுச்சாமசுரம்** *naḍu-c-cāma-šuram,* பெ. (n.), நள்ளிரவிற் காணும் சுரம்; fever that comes at midnight

*[நடு + சாமம் + சுரம்.]*

**நடுச்சாமம்** *naḍu-c-cāmam,* பெ. (n.), 1. மூன்றாம் சாமம்; middle or third watch from midnight to 3.am. 2. நள்ளிரவு; midnight.

*[நடு + சாமம்.]*

யாமம் → சாமம்.

**நடுச்சாலை** *naḍu-c-cālai,* பெ. (n.), ஒருவகை மாம்பழம்; a kind of mango fruit.

*[நடு + சாலை.]*

இடவாகுபெயர்.

**நடுச்சுவர்** *naḍu-c-cuvar,* பெ. (n.), இடைச்சுவர்; middle-wall

ம. நடுச்சுவர்

*[நடு + சுவர்.]*

**நடுச்செய்—தல்** *naḍu-c-cey-,* 1.செ.கு.வி. (v.i.), 1. நயன்மை வழங்குதல்; to render justice, to decide justify "*திரமதா நடுச்செய்யுஞ் செங்கோலினான்*" (குற்றா.தல.மந்தமா.96.). 2. அமைதிப்படுத்தல் to compromise

*[நடு + செய் —.]*

**நடுச்செவி** *naḍu-c-cevi,* பெ. (n.), செவிஇடை; middle of the ear

மறுவ. நடுக்காது.

*[நடு + செவி.]*

**நடுச்செவிநோய்** *naḍu-c-cevi-nōy,* பெ. (n.), நடுக்காதிலிருந்து சீழ் வடிதல்; pus oozing from the mid ear

*[நடு + செவி + நோய்.]*

**நடுச்சொல்(லு)—தல்** *naḍu-c-col-(lu),* 8. செ. குன்றாவி. (v.t.), 1. முடிவு செய்தல் (இ. வ.); to decide a case. 2. சந்து செய்தல் (இ. வ.); to mediate. 3. நயன்மை வழங்குதல் (யாழ். அக.); to render justice 4. சான்று கூறுதல் (பழ.148, உரை.); to bear witness

*[நடு + சொல்—(லு)—.]*

**நடுச்சொல்வார்** *naḍu-c-colvār,* பெ. (n.), சான்று கூறுவோர் (பழ. 48. உரை.) (பிங்.); those who bear witness or testify

மறுவ. சான்றாளர்.

*[நடு + சொல்வார்.]*

**நடுத்தண்டெலும்பு** *naḍuttaṇḍelumbu,* பெ. (n.), மார்பின் நடுவெலும்பு; sternum in the centre of the chest middle breast bone.

*[நடு + தண்டு + எலும்பு.]*



**நடுத்தரம்** *naḍu-t-taram,* பெ. (n.), 1. இடைப்பட்ட நிலை; intermediate stage middle grade. *'அவன் நடுத்தர வயதுடையவன்'* (உ. வ.). 2. நடுவண் நிலை; middle - stage.

ம., நடுத்தரம் து. நடுத்தர

*[நடு + தரம்.]*

**நடுத்தரயவம்** *naḍuttarayavam,* பெ. (n.), வெண்கடுகு ஆறுகொண்டதொரு நிறையளவை (சங். அக.); a measure of weight equivalent to the weight of 6 seeds of white mustard

**நடுத்தரவுடம்பு** *naḍuttara-v-uḍambu,* பெ. (n.), வாகானவுடம்பு; medium structure.

*[நடுத்தரம் + உடம்பு.]*

மிகப் பருமனுமின்றி, மிகமெலிவுமின்றி நடுவாட்டமாக அமைந்த உடல்.

**நடுத்தலை** *naḍu-t-talai,* பெ. (n.), 1. உச்சந்தலை; crown of the head 2. நடுவிடம் (இ. வ.); central place.

க., நடுதலெ. ம. நடுத்தல.

*[நடு + தலை.]*

**நடுத்திட்டம்** *naḍu-t-tiṭṭam,* பெ. (n ), 1. நடுநிலைவழுவாத்தன்மை; justness. impartiality. "*உண்மை நடுத்திட்டமே யுரைக்கு நாவான்*" (பணவிடு. 13.).

*[நடு + திட்டம்.]*

**நடுத்தீர்ப்பு** *naḍu-t-tīrppu,* பெ. (n ), 1. நடுநிலை மாறா முடிவு; just decision. 2. தெய்வத்தீர்ப்பு (வின்.); devine judgement as pestilence etc , 3. இறைவனின் இறுதித் தீர்ப்புநாள், கடைசித் தீர்ப்பு; final judgement as at the judgement day.

*[நடு + தீர்ப்பு.]*

**நடுத்தீர்ப்புநாள்** *naḍu-t-tīrppu-nāḷ,* பெ. (n ), இறைவனுடைய கடைசித் தீர்ப்பு நாள்; judgement day.

*[நடு + தீர்ப்பு + நாள்.]*

நடுத்தீர்ப்பு நாளில் இறைவனாக வரும் ஏசுவும், இறைத்தூதராக வரும் நபியும், முறையே கிறித்துவமத உறுப்பினர்க்கும், இசுலாம் மதஉறுப்பினர்க்கும், துறக்கம், நல்குவர் என்பது, இருமதக் கருத்துக்கள் ஆகும்.

**நடுத்தீர்வை** *naḍu-t-tīrvai,* பெ. (n ), *நடுத்தீர்ப்பு* பார்க்க; see *naḍu-t-tīrppu.*

*[நடு + தீர்வை.]*

**நடுத்துஞ்சல்** *nadu-t-tuñjal,* பெ. (n.), காலமல்லாத காலத்தில் ஏற்படும் இறப்பு; untimely death. "*துணர் மேலெழுவெங் கனறங்கி நடுத்துஞ்சுந் தொழிறஞ்சென*" (கோயிற்பு. வியாக். 25.).

மறுவ. எதிர்பாராத இறப்பு.

*[நடு + துஞ்சல்.]*

**நடுத்தெரு** *nadu-t-teru,* பெ. (n.), 1. ஊர் இடையில் உள்ள வீதி; middle street, as of a village. 2. தெருவின் நடுப்பகுதி; middle of a street.

*[நடு + தெரு.]*

**நடுத்தெருவில்விடு-தல்** *nadu-t-teruvil-vidu-,* 18.செ. குன்றாவி. (v.t.), ஆதரவின்றிக் கைவிட்டுப் போதல்; to forsake. leave helpless, desert.

**நடுதறி** *nadutari,* பெ. (n.), 1. நட்டகம்பம்; post planted in the ground, as for lethering a calf. 2. கன்றாப்பூரில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்; Šivaṉ worshipped in Kaṉṟāppūr. "*அடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே*" (தேவா. 811: 1.).

*[நடு + தறி.]*

**நடுநடுங்கியோடு-தல்** *nadu-nadungi-y-ōdu-,* 5செ.கு.வி. (v.i.), அளவிற்கு அதிகமான அச்சத்தால் நடுக்கமடைந்து ஓடுதல்; to run away tremble with fear காவலரைக் கண்ட திருடன் நடுநடுங்கி ஓடினான் (இ.வ.). 2. உடம்பின் வலிவுகண்டு, நோய் உடம்பைத் தாக்க முடியாது ஓடுதல்; to get rid off the disease, disease leave the body out of fear said figuratively.

*[நள் → நடு → நடுநடுங்கி + ஓடு-.]*

நடுநடுங்கி இரட்டைக்கிளவி என்று இலக்கண நூல்கள் நுவலும். நடுங்கிநடுங்கி என முழுச்சொல் வரின் அடுக்குத்தொடர் என்பர்.

**நடுநடுங்கு-தல்** *nadu-nadungu-,* 5.செ. கு.வி. (v.i.), 1. பயத்தால் உடல் மிகப்பதறுதல்; to tremble greatly through fear, quake with fear. "*நடமுயலும் பொழுதஞ்சி நடுநடுங்கி நாணயர*" (கோயிற்பு. பதஞ் 38.). 2. குரல் இசைக்கேடாக அதிர்தல்; to quiver as the voice in vocal music. "*மிடறு நடுநடுங்கி*" (சீவக. 735.).

*[நடு + நடுங்கு-.]*

**நடுநடு-த்தல்** *nadu-nadu-,* 4. செ.கு.வி. (v.i.), நடுங்குதல்; to tremble. "*நாமவற் கண்ணாணடு நடுப்ப வாராளோ*" (திணைமாலை. 25).

*[நடு + நடு-.]*

**நடுநாட்டம்** *nadu-nāttam,* பெ. (n.), சுழிமுனைப்பார்வை; gazing look between the eye - brows.

*[நடு + நாட்டம்.]*

**நடுநாடி**[1] *nadu-nādi,* பெ. (n.), 1. சுழுமுனை; a principal tubular vessel of the human body. "*பக்கவளி தனையடக்கி நடுநாடி யுறப்பயிற்றி*" (காஞ்சிப்பு. தழுவக். 57.). 2. உடம்பினுள்ளே ஊடுருவிச்செல்லும் புருவங்களின் நடுவிலமைந்துள்ள, சுழிமுனை நாடி (சா.அக.); the nerve that passes through the six psychic regions in the centre of the body and finally terminates between the eye brows. (சா.அக.).

**நடுநாடி**[2] *nadu-nāḍi,* பெ. (n.), இடகலை, பிங்கலை, சுழிமுனை முதலான நாடி நரம்புகள்; the three chief nerve-currents of the human body that is known as idagalai, piṅgalai šuḻi-munai 2. *சுழுமுனை* பார்க்க; see *šuḻu-munai.*

**மறுவ.** மய்யப்புருவ நாடி.

*[நடு + நாடி.]*

உடம்பிலுள்ள ஆறாதாரத்தையும் ஊடுருவிச் சென்று, புருவமத்தியில் ஒடுங்கி நிற்பது, இந் நடுநாடி.

**நடுநாயகம்** *nadu-nāyagam,* பெ. (n.), 1. அணிகலன்களின் இடையில் பதிக்கும் மணி; central gem of an ornament. 2. சிறந்தவன்; exalted, eminent person. "*அந்த அவையில் நடுநாயகம் அவன்*". 3. இறைவன்; God.

*[நடு + நாயகம்.]*

அணிகலன்களின் இடையில் பதிக்கும் மணி, அணிக்குச்சிறப்புச்சேர்த்து, தலைமைப்பண்புடன் மிளிர்வது போல், கற்றுத்துறைபோகிய சான்றோர் அவையில், நுண்மாண்நுழைபுலத்துடன் சிறந்த கல்வியாளனாக, தலைமைப் பொறுப்பேற்று, நடுநாயகமாக வீற்றிருத்தல், ஈங்கு குறிக்கத்தக்கது. நல்லார், பொல்லார் அனைவருக்கும் நடுநாயகமாக இருக்கும் இறைவன்.

**நடுநாள்** *nadu-nāḷ,* பெ. (n.), 1. நண்பகல்; mid-day. 2. இடையாமம்; mid-night. "*பழவிறன் மூதூர் பாயல்கொ ணடுநாள்*" (மணிமே. 7.63). 3. சித்திரை விண்மீன்; 14th nakšatra.

**மறுவ.** பானாள்.

*[நடு + நாள்.]*

**நடுநிசி** *nadu-niši,* பெ. (n.), நள்ளிரவு; mid-night.

**மறுவ.** சாமப்பொழுது.

*[நடு + skt.நிசி.]*

**நடுநியாயம்** *nadu-niyāyam,* பெ. (n.), 1. ஒருபாற் கோடாமை; fairness, uprightness, impartiality. 2. நயன்மை; equity, evenhanded justice. 3. வழக்கு; lawsuit

*[நடு + skt.நியாயம்.]*

**நடுநில்—தல் (நடுநிற்றல்)** *nadu-nil-,* 14.செ.கு.வி. (v.i.), (விளையாட்டுக்கள) நடுவராயிருத்தல் (அகநா. 25, உரை); to act as umpire.

*[நடு + நில்—.]*

**நடுநிலை**[1] *nadu-nilai,* பெ. (n.), 1. இடைநிலைமை; intermediate state or degree, mid-dling position 2. நயன்மை; strict justice, equity. 3. பிணக்குத்தீர்த்தல்; mediation ar-bitration 4. சிவஞியத்திற்குரிய ஒகபூசை நிலைகளுளொன்று (வின்.); one of the posi-tion in the mystic worship of the Šaivam system. 5. நடுவுரைத்தல்; arbitration

*[நடு + நிலை.]*

**நடுநிலை**[2] *nadu-nilai,* பெ. (n.), 1. விருப்பு வெறுப்பு இல்லாத சமநிலைப் பண்பு; impartiality. 2. நடுத்தரப்போக்கு; neutrality. உண்மையான திறனாய்வு என்பது நடுநிலை தவறாது மதிப்பீடு செய்தலாகும் (உ.வ.).

நடுநிலையில் நின்று அந்த வழக்கை ஆராயும்போது, புதிய உண்மைகள் புலப்படும் (இ.வ). இது ஒரு நடுநிலை நாளேடு (இக்.வ.).

*[நடு + நிலை.]*

**நடுநிலைக்கொள்கை** *nadu-nilai-k-kolgai,* பெ. (n.), விருப்பு வெறுப்பற்ற சமனிலைக் கொள்கை; the principles of neutrality. நாவலந்தேயம் (இந்தியா) நடுநிலைக் கொள்கையைக் கடைப்பிடிக்குந் திறன் கண்டு, உலகத்தார் பாராட்டுகின்றனர் (இ.வ.).

*[நடுநிலை + கொள்கை.]*

உலகத்தைப் போர்மேகங்கள் சூழ்ந்துள்ள இக் காலத்தில், நடுநிலைக்கொள்கை உயிர்பெற்று விளங்குவதற்கு எடுத்துக் காட்டாக, பன்னாட்டுஉறவுகள் திகழ்கின்றன.

**நடுநிலைஞாயம்** *nadu-nilai-ñāyam,* பெ. (n.), *நடுநிலை* பார்க்க; see *nadu-nilai.*

*[நடுநிலை + ஞாயம்.]*

**நடுநிலைநாடு** *nadu-nilai-nādu,* பெ. (n), விருப்பு வெறுப்பற்ற சமனிலைக் கொள்கையை மேற்கொண்டு, ஒழுகும் நாடு; neutral states

*[நடுநிலை + நாடு.]*

ஒருநாட்டிற்கும் மற்றொரு நாட்டிற்கும் போர் நிகழும்பொழுது, அந்தப்போரில் ஈடுபடாமல், போரில் எத் தரப்பினருடனும் சேராமல், போர்த்தரப்பினர்க்கிடையே பாகுபாடு காட்டாமல், போரில் தன்னாட்டு மக்கள் ஈடுபடுவதைத் தவிர்த்தும், போர்க்காலத்தில் அமைதியைக் கையாண்டும், போர்த்தரப்பைச் சார்ந்தவர்கள், தன்னாட்டிலிருந்து போர் நடவடிக்கைகளில் ஈடுபடாமல் பார்த்துக் கொள்ளும் நாடே நடுநிலைநாடு.

**நடுநிலைப்பள்ளி** *nadu-nilai-p-palli.* பெ. (n.), ஒன்று முதல் 8-ஆம் வகுப்பு வரையுள்ள மாணவர்கள் சேர்ந்து கல்வி பயிலும் பள்ளி; middle school.

*[நடுநிலை + பள்ளி.]*

11 வயது முதல் 13 வயதுடைய மாணவர்கள் கற்கும் பள்ளி. இந்திய அரசியல் அமைப்பின் 45-ஆவது பிரிவு, 1500 மக்கள்தொகைக்கு ஒரு நடுநிலைப்பள்ளி தேவை என்று கூறுவது அறிக.

**நடுநிலைப்பற்று-தல்** *nadunilai-p-parru-,* 5.செ. கு. வி. (v.i.), உலகியலுக்கும் ஆன்மவியலுக்கும் இடைப்பட்ட நிலை; to holding a middle position between material and spritual.

**நடுநிலைமந்திரம்** *nadunilai-mandiram,* பெ. (n), ஒரு சிவனிய மந்திரம் (வின்.); mandiram recited in nadu-nilai worship Šaivam.

*[நடுநிலை + மந்திரம்.]*

**நடுநிலைமை** *nadu-nilaimai,* பெ. (n), *நடுநிலை* பார்க்க; see *nadu-nilai.* 1, 2.

*[நடு + நிலைமை.]*

**நடுநிலைமையோன்** *nadu-nilaimaiyōn,* பெ. (n.), நடுநிலைமை வாய்ந்தோன்; mediator.

*[நடு + நிலைமையோன்.]*

**நடுநிற்றல்**[1] *nadu-nirral,* பெ. (n), பிணைபடுகை (வின்.); standing bail

*[நடு + நிற்றல்.]*

**நடுநிற்றல்[2]** *nadu-nirral,* பெ. (n.), செம்மையில் நிற்றல்; middle path, "*நடுநின்ற நடுவே*" (அருட்பா.).

*[நடு + நிற்றல்.]*

உயிரையும் உடலையும் இணைக்கும் பேரன்புப் பிழம்பான இறையுடன் ஒன்றி நிற்றல்.

**நடுநீதி** *nadu-nidi,* பெ. (n.), *நடுநிலை* பார்க்க; see *nadu-nilai.*

*[நடு + skt. நீதி.]*

**நடுநெஞ்சு** *nadu-nenju,* பெ. (n.), **1.** நெஞ்சாங்குலையின் நடுப்பகுதி; centre of the heart. **2.** சரியான மையம்; exact centre. '*மந்தரத்தைப் பிடுங்கிக் கடலின் நடுநெஞ்சிலே நட்டு*' (ஈடு. 1, 3, 1.). **3.** நெஞ்சுக்குழி(சா.அக.); pit of the stomach.

*[நடு + நெஞ்சு.]*

**நடுநெஞ்செலும்பு** *nadu-nenjelumbu,* பெ. (n.), *நடுத்தண்டெலும்பு* பார்க்க; see *nadu-t-tandelumbu.* (சா.அக.).

*[நடு + நெஞ்சு + எலும்பு.]*

**நடுநோக்கம்** *nadu-nokkam,* பெ. (n.), *நடுநாட்டம்* பார்க்க see *nadu-nattum.*

**மறுவ.** நடுப்பார்வை.

*[நடு + நோக்கம்.]*

**நடுப்பகல்** *nadu-p-pagal,* பெ. (n.), காலையுமல்லாது மாலையுமல்லாது சூரியன் உச்சியை அடைந்த பகல் வேளை; mid-day, noon

**மறுவ.** நண்பகல், உச்சிப்பொழுது.

*[நடு + பகல்.]*

**நடுப்பச்சை** *nadu-p-paccai,* பெ. (n.), பச்சைக்கல் (மரகதம்); a precious green gem

**மறுவ.** அடர்பச்சை.

*[நடு + பச்சை.]*

**நடுப்படுத்து—தல்** *nadu-p-paduttu-,* 5.செ. குன்றாவி. (v.t.), *நடுக்கட்டு (யாழ்ப்.)* பார்க்க; see *nadu-k-kattu-.*

*[நடு + படுத்து—.]*

**நடுப்பாட்டம்** *naduppattam,* பெ. (n.), அடிமாண்டுபோன இனத்திற்குரிய நிலத்திற்கு, அரசு தற்காலிகமாகக் கொடுக்கும் குத்தகை (நாஞ்); temporary lease of properties in escheat enquiries.

*[நடு + பாட்டம்.]*

**நடுப்பாதை** *nadu-p-padai.* பெ. (n.), நடைவழியின் நடுவிலுள்ள பகுதி; centre of a path way.

**றுவ.** நடுவழி.

*[நடு + பாதை.]*

**நடுப்பார்[1]—த்தல்** *nadu-p-par-,* 4.செ. கு. வி. (v.i.), அறமன்ற ஆணைப்படி ஒரு வழக்கின் நடுவராகச் செயல்படுதல்; to act as a commissioner or arbitrator by order of a court.

*[நடு + பார் —.]*

**நடுப்பார்[2]** *nadu-p-par,* பெ. (n.), இடைமை (யாழ். அக.); centre

*[நடு + பார்.]*

பரப்பு → பார் = திரிபு.

**நடுப்பார்வை** *nadu-p-pārvai,* பெ. (n.), 1. சுழிமுனைப் பார்வை; looking or gazing between the eye brow. 2. மையப்பார்வை; look with just.

*[நடு + பார்வை.]*

**நடுப்பிலே** *naduppilē,* வி.எ. (adv.), *நடுப்பெற (இ. வ.)* பார்க்க; see *nadu-p-pera.*

*[நடுவில் → நடுவிலே → நடுப்பிலே.]*

**நடுப்புரை** *naduppurai,* பெ. (n), கருப்பை; womb.

*[நடு + புரை.]*

**நடுப்புரைவிரணம்** *naduppurai-v-iranam,* பெ. (n), கருப்பை நடுவிலேற்படும் அழற்சி; inflamanation of the middle layer of the womb.

**நடுப்புற** *nadüppura,* வி. எ. (adv.), *நடுப்பெற* பார்க்க; see *nadu-p-pera.*

**நடுப்பெற** *nadu-p-pera,* வி.எ. (adv.), நடுவில்; in the middle, in the centre

*[நடுப்புற → நடுப்பெற.]*

**நடுப்பேசு–தல்** *nadu-p-pēšu-,* 5.செ. கு. வி. (v.i.), ஒருவருடைய வழக்கை எடுத்துப் பேசுதல்; to plead for, to advocate a cause.

*[நடு + பேசு –.]*

**நடுப்போக்கு–தல்** *nadu-p-pōkku-,* 5.செ. கு. வி. (v.i.), நயன்மைவழங்குதல் (யாழ். அக.); to make a just decision.

*[நடு + போக்கு –.]*

நடுவாகத் தீர்ப்புச் சொல்லி, இருவரையும் அனுப்பிவைத்தல் என்னும் பொருளில் வருதல் காண்க.

**நடுப்போர்** *nadu-p-pōr,* பெ. (n.), பணியிடை, செயலினிடை (யாழ்ப்.); middle of a work. of an operation, of an affair.

*[நடு + போர் → நடுப்போர்.]*

போர் என்பது செருவைக் குறிக்கும் போது பொரு(து)தல் பொருளில் வருதல் போல் ஈண்டு வைக்கோல் குவியல் பொருளில் வருங்கால், சேர்த்துக் கட்டியமாடுகளால் அடித்தது என்றும் பொருளாகும். ஈண்டு இரு பொருளிலும் வழங்கலாயிற்று.

**நடுமத்தி** *nadu-matti,* பெ. (n.), இடையே; centre 'பூசை அறையில் விளக்கை நடுமத்தியில் வை' (பே.வ.).

*[நடு + skt.மத்தி. மீமிசைச் சொல்.]*

**நடுமதியம்** *nadu-madiyam,* பெ. (n), நண்பகல்; middle of the day.

*[நடு + skt. மதியம்.]*

**நடுமாதிரை** *nadumādirai,* பெ. (n), வாலுளுவை மரம்; spindle tree

**நடுமுதுகு** *nadu-mudugu,* பெ. (n), முதுகெலும்பு வரிசை; spinal column.

*[நடு + முதுகு.]*

**நடுமூக்கு** *naḍu-mūkku,* பெ. (n.), புருவ நடு; space between the eyebrows. "நாட்ட மிரண்டும் நடுமூக்கில் வைத்திடில் வாட்ட மில்லை மனைக்கு மழிவில்லை" (திருமந்.584).

*[நடு + மூக்கு.]*

**நடுமூலம்** *naḍu-mūlam,* பெ. (n.), சிறுநீர்; urine.

*[நடு + மூலம்.]*

**நடுமூளை** *naḍu-mūlai,* பெ. (n.), மூளையின் இடை; the middle cerebral, vesicle of the embryonic brain, midbrain.

*[நடு + மூளை.]*

**நடுமையம்** *naḍu-maiyam,* பெ. (n.), 1. இடையே; centre, middle. 2. உச்சி; zenith, meridian. 3. புருவமய்யம்; middle of two eye brows.

மறுவ. நடுமத்தி மீமிசைச்சொல்.

*[நடு + skt.மையம்.]*

**நடுயாமம்** *naḍu-yāmam,* பெ. (n.), நள்ளிரவு; mid-night.

*[நள் → நடு → யாமம்.]*

யாம் + அம் → யாமம்.

யாமம் = இருள் விளங்கித்தோன்றும் நள்ளிரவு நேரம். "நள்" என்னும் வேரடி இருட்செறிவினைக் குறித்தது.

**நடுராசி** *naḍu-rāśi,* பெ. (n.), நடுத்தரம் (வின்); middling sort, that which is middling or moderate as in quality or size

*[நடு + skt.ராசி.]*

**நடுவகிரெடுத்தல்** *naḍu-vagir-eḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.), நெற்றியின் நடுப்பகுதியிலிருந்து மயிரை ஒழுங்குபடப் பிரித்து வாருதல்; to middle part of the hair from the crown to the forehead.

*[நடுவகிர் + எடு-.]*

**நடுவண்** *naḍuvaṇ,* வி. எ. (adv.), இடையில்; in the centre. "*நடுவ ணைந்திணை நடுவண தொழிய*" (தொல். பொருள். 2).

க. நடுவண.

*[நடுவம் → நடுவண்.]*

**நடுவண்ஐந்திணை** *naḍuvaṇ-aindiṇai,* பெ. (n.), பாலைத்திணை; arid, desert land. "*நடுவண் ஐந்திணை நடுவண தொழிய*" (தொல். பொருள். 948).

க. நடுவண.

*[நடுவண் + ஐந்திணை.]*

நடுவண்ஐந்திணை என்பது, தமிழ் இலக்கியப்பரப்பில் பாலைத்திணையைக் குறிக்கும். பாலைநிலமென்பது, தமிழகத்தில், எப்போதும் மிகுவறட்சியே, நிலைத்திருக்கும். தனிநிலமன்று. அஃதாவது மிகுவறட்சிக் காலத்தே குறிஞ்சியின் (மலையின்) ஒரு பகுதியும், முல்லையின் (காட்டின்) ஒரு பகுதியும், வேனிற்கடுமையால், சிறிது காலம் பாலைத்தன்மை அடையும். இதுவே நடுவண் ஐந்திணை என்று பெயர் பெற்றது.

**நடுவண்டம்** *naḍuvaṇḍam,* பெ. (n.), வழலையின் பெயர்; name of quint essence salt.

*[நடு + வண்டம்.]*

**நடுவண்பல்கலைக்கழகம்** *nadvan-palgalai-k-kalagam,* பெ. (n.), நடுவணரசின் நேரடியாளுகைக்குட்பட்ட பல்கலைக்கழகம்; university under the control of central government.

**மறுவ.** மய்யப்பல்கலைக்கழகம்.

*[நடுவண் + பல்கலைக்கழகம்.]*

**நடுவணரசு** *naduvanarašu,* பெ. (n.), மய்யஒன்றியவரசு; central government.

**மறுவ.** மய்யவரசு.

*[நடுவண் + அரசு.]*

உள்ளாட்சி அமைப்பில், தனிஅதிகாரம் படைத்ததும், பலமாநிலங்கள் ஒன்று சேர்ந்ததுமான ஒன்றியவரசு.

**நடுவணைப்பதி** *naduvanaippadi,* பெ. (n.), நமசிவாய 'சி' காரம் ; the middle of the five mystic letter.

*[நடுவணை + பதி.]*

**நடுவத்தசாமம்** *nadu-v-atta-šāmam,* பெ. (n.), நள்ளிரவு (யாழ்ப்.); mid-night.

*[நடு + அத்து + சாமம்.]*

**நடுவத்தொருசாமம்** *naduattoru-šāmam,* பெ. (n.), ***நடுவத்த சாமம்*** பார்க்க; see *naduv-atta-šāmam.*

[நடு + அத்து + ஒருசாமம் ]

**நடுவதுபாதியில்** *naduvadu-pādiyil,* வி. எ. (adv.), பாதிமுடிந்த பிறகு (வின்.); after half the function is over. நடுவது பாதியிலே வந்தான்.

**மறுவ.** நடுப்பாதி.

*[நடுவது + பாதியில்.]*

**நடுவயது** *nadu-vayadu,* பெ. (n.), இளமைக்கும் மூப்பிற்கும் இடையிலுள்ள பருவம்; middle - age

மறுவ. நடுஅகவை.

*[நடு + வயது (அகவை).]*

**நடுவயிறு** *nadu-vayiru,* பெ. (n.), வயிற்றின் நடுப்பாகம்; mid-gut.

*[நடு + வயிறு.]*

**நடுவர்** *naduvar,* பெ. (n.), **1.** பேச்சுப்போட்டி போன்றவற்றில், வெற்றி பெற்றவரைத் தெரிவு செய்பவர்; judge in a competition பேச்சுப்போட்டி நடுவராக வருபவர், நல்ல கல்வியாளராக இருக்க வேண்டும் (உ.வ.). **2.** விளையாட்டுப்போட்டிகளில், இரு அணிக்கும் பொதுவாக இருந்து போட்டியை நடத்துபவர்; umpire, referee. நடுவர் தன் நாட்டு அணிக்குச் சார்பாக நடந்துகொண்டார் என்று குற்றம் சாட்டப்பட்டது. (இ.வ.). நடுவராக வருபவர் பணத்திற்கு ஆசைப்படாதவராக இருக்க வேண்டும் (உ.வ.).

*[நடு → நடுவர்.]*

**நடுவர்தீர்ப்புஉடன்பாடு** *naduvar-tirppu-udanpādu,* பெ. (n.), நிகழ்காலம் அல்லது எதிர்காலத்தில் ஏற்படும் சிக்கல்கள் பற்றித் தரப்படும், எழுத்துவகையிலான உடன்பாடு; arbitration agreement.

*[நடுவர் + தீர்ப்பு + உடன்பாடு.]*

**நடுவர்தீர்ப்பு** *naḍuvar-tīrppu,* பெ. (n.), நடுவர்குழு வழங்கும் தீர்ப்பு; arbitration tribunal judgement. காவிரி நீர்ப்பங்கீட்டிற்குரிய நடுவர்தீர்ப்பினை கருநாடகம் ஏற்றுச்செயல் படவேண்டும் (இக்.வ.). நடுவர்தீர்ப்பை மதிக்கும் மனவொருமைப்பாடு, அனைவர்க்கும் வேண்டும் (உ.வ.). மட்டைப்பந்து (கிரிக்கெட்) விளையாட்டில் நடுவர்தீர்ப்பே, இறுதியானது. (இக்.வ.).

*[நடுவர் + தீர்ப்பு.]*

**நடுவர்தீர்ப்புமுறை** *naḍuvar-tīrppu-muṟai,* பெ. (n.), இருவர்க்கிடையே ஏற்படும் பணம் சொத்து, ஒப்பந்தமுறிவு முதலான வாழ்வியல் சிக்கல்களை, ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நடுவர்குழுவின் தீர்ப்புப்படி, முறைமன்றம் (court) செல்லாமலேயே தீர்த்துக் கொள்ளும் பாங்கு; arbitration.

*[நடுவர்தீர்ப்பு + முறை.]*

**நடுவர்மன்றம்** *naḍuvar-maṉṟam,* பெ. (n.), இருதரப்பினரும் பேசி முடிவு காண இயலாத சிக்கல்களுக்குத் தீர்வுகாண, இருதரப்பினரும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் ஏற்படுத்தப்படும் குழு; tribunal. நடுவர்மன்ற உறுப்பினர் மனச்சான்றுடன் செயல்பட்டால்தான், முறையான தீர்ப்புக் கிடைக்கும் (இக்.வ.).

*[நடுவர் + மன்றம்.]*

**நடுவலம்** *naḍuvalam,* பெ. (n.), நரிமுருக்கு; a kind of coral tree.

*[நடு + வலம்.]*

**நடுவழி** *naḍu-vaḻi,* பெ. (n.), 1. பயணத்தின் இடை; middle of a journey. 2. வழியின் நடு; middle of the path-way.

*[நடு + வழி.]*

**நடுவழியில்** *naḍu-vaḻiyil,* வி.எ. (adj.), இருஇடங்களுக்கு இடைப்பட்ட பகுதியில்; midway. நடுவழியில் வண்டி பழுதாகி விட்டதால், மிகவும் தொல்லை ஏற்பட்டது. (உ.வ.). நடுவழியில் மழை பிடித்துக் கொண்டதால், நனைந்து கொண்டே சென்றேன். (இ.வ.).

*[நடு + வழியில்.]*

**நடுவறு–த்தல்** *naḍu-v-aṟu-,* 4.செ. குன்றாவி. (v.t.), 1. வழக்குத்தீர்த்தல் (வின்.); to judge as an umpire, to decide. 2. வழக்கின் இருசாரார்களையும் கேட்டுத் தேர்தல்; to hear the contentions of both parties to a suit.

**நடுவளையம்** *naḍu-vaḷaiyam,* பெ. (n.), எரு (ஆசன)வாயிலுள்ள வளையத்தின் மூன்று பாகங்களில் நடுவேயுள்ள வளையம்; the central ring of the three splincter muscles round the anus.

*[நடு + வளையம்.]*

**நடுவறுத்தான்** *naḍu-v-aṟuttāṉ,* பெ. (n.), மூக்கிரட்டை (யாழ். அக.); spreading hogweed.

**மறுவ.** மூக்கறுத்தான்கொடி.

*[நடு + அறுத்தான்.]*

**நடுவன்** *naḍuvaṉ,* பெ. (n.), 1. கூற்றுவன் (இயமன்); yamaṉ, as the just awarder of rewards and punishments. *"நடுவன் மேல்வர"* (பெருங். உஞ்சைக் 53, 70). *"நாடுநகர் வீடுமாடு நற்பொரு ளெல்லாம் நடுவன் வரும்பொழுது நாடி வருமோ"* 2. முறை மன்றத்தில் தீர்ப்பெழுதும் அறமுதல்வன்

(நீதிபதி) (யாழ்ப்.); judge, arbiter. நடுவன் தீர்ப்பெழுதுவதற்கு பல ஆண்டுகள் வழக்காளிகள் காத்துக் கிடக்கின்றனர் (இக்.வ.). 3. *நடுவர்* பார்க்க; see *naḍuvar.*

*[நடு + வு → நடுவு + அன் → நடுவன்.]*

செங்கோற் கடவுளாகிய யமன் நடுவுநிலைமையை உடையவன். உற்றார் அற்றார் எனும் வேறுபாடின்றி, உரியகாலத்தே தமது செங்கோலை நடுவுநிலைமையோடு பயன்படுத்து பவனாகிய நமன்.

**நடுவனாள்** *naḍuvaṉāḷ,* பெ. (n.), உரு (பரணி); the second star. "*நடுவனாட் சித்திரைத்திங்க ணகையம்புலியின் வளர்பக்கம்*" (வேதாரணி. விசுவா. மேனகை. 68).

*[நடுவன் + நாள்.]*

**நடுவாந்தரம்[1]** *naḍuvāṇḍaram,* வி. எ. (adv.), ஒரு செயலின் நடுவே; incidentally. நடுவாந்தரத்திலே கிடைத்தது.

தெ. நடுமந்தரமு.

*[நடு + skt.அந்தரம்.]*

**நடுவாந்தரம்[2]** *naḍuvāṇḍaram,* பெ. (n.), எதிர்பாராதபடி; by chance, unexpectedly.

**நடுவாந்தரம்[3]** *naḍuvāṇḍaram,* பெ. (n.), 1. மையதேசம்; mid-region. 2. உதவியற்ற நிலைமை; helpless condition. "*என்னை நடுவாந்தரத்தில் விட்டுவிட்டான்*" (உ. வ.).

*[நடு + skt.அந்தரம்.]*

**நடுவார்த்தை** *naḍu-vārttai,* பெ. (n.), நேர்மையான சொல்; honesty-word.

**மறுவ.** உண்மைச்சொல்.

*[நடு + skt.வார்த்தை.]*

நன்மை, தீமை இரண்டிற்கும் நடுநின்று, நண்பர்–பகைவர் அல்லது உற்றார், அற்றார் இரண்டிற்கும் அப்பாற்பட்டு, ஒருபாற்கோடாது உரைக்கும் சான்றாண்மைச் சொல்லே, நடுச்சொல்.

**நடுவான்** *naḍu-vāṉ,* பெ. (n.), *நடுவிலான் (இ. வ.)* பார்க்க; see *naḍuvilāṉ.*

*[நடு + ஆன்.]*

**நடுவிரல்** *naḍu-viral.* பெ. (n.), ஐவிரல்களுள் இடையிலுள்ள விரல்; middle - finger

**மறுவ.** பாம்புவிரல்.

ம., நடுவிரல்.

*[நடு + விரல்.]*

கைவிரலைந்தனுள் நடுநின்றதும், சற்றே நீளமானதுமான விரல்.



**நடுவில்** *naḍuvil,* இடை. (int.), இடையில், காலத்தில், இடத்தில்; in the middle, in between. பேச்சின் நடுவில் கையிலிருந்த குறிப்பைப் பார்த்துக்கொண்டார் (உ.வ.)

*[நடுவு + இல்.]*

**நடுவிலவன்** *naduvilavan*, பெ. (n.), *நடுவிலான்* பார்க்க; see *naduvilān*.

ம. நடுவிலவன்.

*[நடுவில் + அவன்.]*

**நடுவிலான்** *naduvilān*, பெ. (n.), மகன்களுள் நடுப்பிறந்தான், நடுவுள்ளவன்; middle son.

*[நடுவில் → நடுவிலன் → நடுவிலான்.]*

இடப்பொருள் பற்றியது.

**நடுவீட்டுத்தாலி** *nadu-vittu-t-tāli*, பெ. (n.), அறுதாலிமறுமணத்துக்கு வன்னியர் வழங்கும் பெயர். மறுமணத்திற்கு வழங்கும் ஒரு பெயர்; the name given to the remarriage of a widow among vanniyar, as taking place inside a house without much publicity.

*[நடு + வீட்டு + தாலி.]*

முதல் மணம் முற்றத்தில் செய்து கணவன் இறந்தால், மறுமணத்தை இருகுடும்பத்தார் மட்டும் காண, ஒரு வீட்டில் செய்யும் கரணம், என்றும் கருதலாம்.

**நடுவீடு** *nadu-vidu*, பெ. (n.), **1.** இறைவழி பாட்டிற்குரிய உள்வீடு(வின்); middle or interior of a house, where an idol is kept for worship. **2.** சாப்பாட்டறை (இ.வ.); dining room. **3.** ஒரூரில் மதிப்புடையார் வாழிடத்திலுள்ள வீடு (இ.வ.); a house in a respectable quarter in the heart of a village.

*[நடு + வீடு.]*

**நடுவீதி** *nadu-vidi*, பெ. (n.), **1.** தெருவின் நடுப்பகுதி; middle of the street. **2.** வாய், செவி, மூக்கு, மத்தி, மய்யம் (சா.அக.); a mid way communicating with esophagus. below and above larynx. mouth, nasal. passages and eustachian tubes.

**நடுவீதியில்விடு—தல்** *naduvidiyil-vidu-*, 18 செ. குன்றாவி. (v.t.), நடுத்தெருவில் விடுதல் (இ.வ.); to leave some one in the middle of the street.

*[நடுவீதியில் + விடு—.]*

**நடுவு[1]** *naduvu*, பெ. (n.), **1.** இடை; middle, that which is intermediate. **2.** நடுவு நிலைமை; impartiality, uprightness. *"நன்பல்லூழி நடுவுநின்றொழுக"* (பதிற்றுப். 89:8.). **3.** நயன், முறை (நீதி) (வின்.); justice.

க., நடுவு. தெ. நடுமு.

*[நடு → நடுவு.]*

**நடுவு[2]** *naduvu*, பெ. (n.) **1.** பெண்கள் இடுப்பு; (சா.அக.); hip of a woman. *"நடுவு துய்யன"* (கம்பரா.நகரப்.31.). **2.** *நடுவுநிலை* பார்க்க; see *naduvu-nilai*.

*[நடு → நடுவு.]*



**நடுவு³** *naḍuvu,* வி.(v.) நாற்று நடுதல்; transplanting. '*இன்று நடுவுக்கு யாரும் வரவில்லையா?*' (பே.வ.).

*[நடவு → நடுவு.]*

**நடுவுக்கூலி** *naḍuvu-k-kūli,* பெ. (n.) நாற்று நடுதலுக்குக் கொடுக்கப்படும் கூலி/சம்பளம்; pay of transplanting.

*[நடுவு + கூலி.]*

**நடுவுச்சிப்பொழுது** *naḍu-v-ucci-p-poḻudu,* பெ. (n.) *நண்பகல்* பார்க்க; see *naṇpagal.*

*[நடுவுச்சி + பொழுது.]*

**நடுவுச்சிவாதம்** *naḍu-v-uccivādam,* பெ. (n.) உடல் நொந்து, உச்சித்தலை வலித்து, கண்சிவந்து, குளிரை உண்டாக்கும் வலிப்பு நோய் வகை; a kind of nervous disease, affecting chiefly the crown of the head and marked by pain in the affected part, inflamed eyes and chillness.

*[நடு + உச்சி + skt. வாதம்.]*

**நடுவுநிலை** *naḍuvu-nilai,* பெ. (n.) **1.** ஒரு தலைச் சாராமை (குறள். அதி. 12); equity, justice, strict neutrality, impartiality. **2.** அமைதியைக் காட்டும் சுவை (சாந்தம்); the sentiment of tranquillity. "*இன்புற னடுவுநிலை*" (தொல். பொருள். 260.).

**மறுவ.** ஒருபாற்கோடாமை.

*[நடுவு + நிலை.]*

ஒரு நாடு அல்லது அரசு, வேறு இரு அரசுகளுக்கிடையே நிகழும் போரில், கலந்து கொள்ளாத நிலை, நடுவுநிலை ஆகும்.

**நடுவுநிலைத்திணை** *naḍuvu-nilai-t-tiṇai,* பெ. (n.) பாலைத்திணை பார்க்க; see pālaittiṇai. "*நடுவு நிலைத்திணையே நண்பகல் வேனிலொடு*" (தொல். பொருள். 9.).

*[நடுவு + நிலை + திணை.]*

**நடுவுநிலைமை** *naḍuvu-nilaimai,* பெ. (n.) **1.** நடுநிலை பார்க்க; see naḍu-nilai. "*நல்லம்யா மென்னு நடுவுநிலைமையால்*" (நாலடி. 131.). **2.** உள்ளச்சமநிலை (வின்.); steadfastness, equanimity. **3.** செம்மை (யாழ்ப்.); fairness, uprightness.

*[நடுவு + நிலைமை.]*

**நடுவுநிலைமை நாடு** *naḍuvu-nilaimai-nāḍu,* பெ. (n.) இருநாடுகளுக்கிடையே போர் நிகழுங்கால், எந்தவொரு நாட்டுடனும் போரில் கலந்து கொள்ளாது, தனித்திருக்கும் நாடு; neutrality nation.

*[நடுவுநிலைமை + நாடு.]*

**நடுவுப்பு** *naḍu-v-uppu,* பெ. (n.) **1.** கல்லுப்பு; stone salt. **2.** பாறையுப்பு; rock-salt

*[நடுவு + உப்பு.]*

**நடுவுபாடு** *naḍuvu-pāḍu,* பெ. (n.) இடைப்பகுதி; middle region, central place. "*பொன்னி நடுவுபாட்டுத் திருவரங்கத் தரவணையிற் பள்ளிகொள்ளும்*" (திவ். பெருமாள். 1:11.).

*[நடுவு + பாடு.]*

**நடுவுரை** *naḍu-v-urai,* பெ. (n.) நன்மை–தீமை, நட்பு–பகைமை எனும் இரண்டிற்கும் பொதுவான, நல்லுரை; neutral advice. "*நாவில் நடுவுரையாய் நின்றாய் நீயே*" (தேவாரம்).

*[நள் → நடு → உரை.]*

**நடுவுள்ளவன்** *naḍu-v-uḷḷavaṉ,* பெ. (n.) *நடுவிலான்* பார்க்க; see *naḍuvilāṉ.*

*[நடு + உள்ளவன்.]*

**நடுவூர்** *naḍu-v-ūr,* பெ. (n.) ஊரின் நடுவிடம்; heart of a town, centre of a town. "*நடுவூரு ணச்சுமரம் பழுத்தற்று*" (குறள், 1008).

**நடுவெலும்பு** *naḍu-v-elumbu,* பெ. (n.) முதுகெலும்பு (யாழ்.அக.); back-bone.

**மறுவ.** முதுகந்தண்டு, வீணைத்தண்டு.

*[நடு + எலும்பு.]*

**நடுவெழுத்தலங்காரம்** *naḍu-v-eluttalaṅgāram,* பெ. (n.) சித்திரப்பாடல்; a variety of nāṟ-p-pāḍal.

*[நடு + எழுத்து + skt.அலங்காரம்.]*

**நடுவெழுத்து** *naḍu-v-eḻuttu,* பெ. (n.) 1. ஆவணமெழுதுபவன்; document-writer. 2. ஆவணங்களைப் பதிவு செய்யும் அதிகாரி; an official whose duty was to attest documents of sales and mortgages.

*[நடு + எழுத்து.]*

**நடுவெழுது—தல்** *naḍu-v-eḻudu-,* 5 செ.கு.வி. (v.i.) ஆவணமெழுதுதல்; to engross a document.

*[நடு + எழுது—.]*

*தல்லீற்றுத் தொழிற்பெயர்.*

**நடுவெளி** *naḍu-veḷi,* பெ. (n.) 1. இடைவெளி (யாழ்.அக.); centre of an open plain, interspace. 2. பரவெளி (வின்.); the immense space, as filled by the Supreme Being.

*[நடு + வெளி.]*

**நடுவே** *naḍu-v-ē,* இடை, (part), இடையில்; in the middle of, in the midst.of. "*உன்னடியவர் தொகை நடுவே*" (திருவாச.44:1.). "*நல்லவன் ஒருவன் நடுவே நின்றால் அறாத வழக்கும் அறும்*"(பழ.). பெரியோர் பேச்சின் நடுவே இளையோர் குறுக்கிடக்கூடாது (உ.வ.). கடலின் நடுவே கப்பல் போவது தெரிகிறது. (இ.வ.).

*[நடு → நடு + ஏ.]*

**நடுவைத்தல்** *naḍu-vaittal,* பெ. (n.) நாற்று நடுதல் (சா.அக.); transplanting.

*[நடு + வைத்தல்.]*

**நடுவோடி** *naḍu-v-ōḍi,* பெ. (n.) வீணைத்தண்டின் நடுவேயோடும் சுழிமுனை நாடி; the subtle passage supposed to run in the middle of the spinal coloumn through which sushumuna runs.

**மறுவ:** சுழுமுனை, நடுநாடி.

*[நடு + ஓடு → நடுவோடு → நடுவோடி]*

**நடேசன்** *naḍēšaṉ,* பெ. (n.) *ஆட(ல்)வல்லான்* பார்க்க; see *āḍa(l)vallāṉ.*

**நடை** *naḍai,* பெ. (n.) 1. காலால் நடக்கை; walk, act of walking. "*கோலூன்றிச் சோர்ந்த நடையினராய்*" (நாலடி.13.). 2. கோள்களினியக்கம்; motion, course, as of a planet.

3. செலவு (பயணம்) (வின்.); journey. 4. அடிவைக்கும் நிலை; gait, mode of walking or going, pace. "*விடைபொரு நடையினான்*" (கம்பரா. எழுச்சி.10). 5. வழி (பிங்.); route,road 6. வாசல்; gate. '*இனி நீ என் நடையில் வந்து மிதிக்காதே*' (உ.வ.). 7. இடைகழி; corridor, vestibule. "*அரக்கர் கிடைகளு நடைகளும்*" (இராமநா.சுந்.3.). 8. கப்பலேறும் வழி; gangway. 9. ஒழுக்கம்; conduct, behaviour, career. "*நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே*" (புறநா.312.). 10. வழக்கம்; custom, usage, fashion. 11. மொழியின் போக்கு; style in language. '*ஒன்றல்லவை பல தமிழ் நடை*' (காரிகை.செய்.4.உரை). 12. வாசிப்பினோட்டம் (வின்.); fluency reading. 13. இயல்பு; nature. "*என்றுங் கங்குலா. நடையதோரிடம்*" (சேதுபு. கந்தமா.69). 14. அடி; foot. "*பசுூட்டாலீன்ற கொடுநடைக்குழவி*" (பெரும்பாண்.243). 15. கூத்து (சூடா.); dance, dancing. 16. தொழில்; occupation. "*மாயோனிகளாய் நடைகற்ற வானோர் பலரும் முனிவரும்*" (திவ்.திருவாய்.1,5,3). 17. செல்வம் (சூடா.); wealth. 18. ஒழுக்கநூல்; religious or moral treatise. "*நன்றாக நடைபலவு நவின்றார் போலும்*" (தேவா. 722.11.). 19. நாள் வழிபாடு (நித்திய பூசை); daily worship in a temple. "*நடையும் விழவொடு நாடொறு மல்குங் கழுமலத்துள்*" (தேவா152,8.). 20. கோயில் (T.A.S.iv,8.); temple 21. தடவை; turn, time. ஒரு நடை போய் வா (உ.வ.). 22. நீண்டநாள்; long-time. '*நடைப்பிணியா யிருக்கின்றான்*'. 23. செயல்; deed. "*உலக நடையறிந்து ஒழுகுவதே அறம்*" (உ.வ.). 24. ஒழுக்கம்; "நடையின் நின்றுயர் நாயகன்" (கம்பரா.).

க., நடெ., தெ., நட. ம., நட.

**நடைஉத்திகள்** *naḍai-uttigaḷ,* பெ. (n.) ஒலிநிலை, இலக்கணநிலை, சொல்நிலை எனப்பல்வேறு நிலைகளில் உருவாகும் மாற்றங்களே, நடைஉத்திகள் ஆகும்; the techniques style in change of style in which phonetics, grammatical and word etc.,

*[நடை + உத்திகள்.]*

**நடைக்காவணம்** *naḍai-k-kāvaṇam,* பெ. (n.) நடைப்பந்தல் பார்க்க; see *naḍai-p-pandal.* "*அவ்வளவு நடைக்காவணம் பாவாடையுடன்*" (பெரியபு.ஏயர்கோன்.57).

*[நடை + காவணம்.]*

**நடைக்காற்று** *naḍai-k-kāṟṟu,* பெ. (n.) பரவியடிக்குங் காற்று; free current of air.

*[நடை + காற்று.]*

**நடைக்குநடை** *naḍaikku-naḍai,* வி.எ. (adv.) ஒவ்வொருதடவையும்; everytime, at each turn.

*[நடைக்கு + நடை.]*

**நடைக்கூடம்** *naḍai-k-kūḍam,* பெ. (n.) 1. வாயிலிடம் (இ.வ.); entrance to a building. 2. மாளிகையின் முகப்புக்கூடம்; vestibule of a palace. 3. உடம்பு; the body, as a moving mansion. *வீறிலி நடைக்கூடம்.* (திருவாச. 25;4).

*[நடை + கூடம்.]*

**நடைகாயம்** *naḍai-kāyam,* பெ. (n.) மகப் பேறு அடைந்த பெண் உட்கொள்ளும் மருந்துவகை; a medicinal compound taken in by women after child - birth "*குறத்தி பிள்ளை பெற்றால், குறவன் நடைகாயம் தின்பான்*" (பழ.).

*[நடை + காயம்.]*

**நடைகாயவிளகியம்** *nadai-kāya-v-iḷagiyam,* பெ. (n.) *நடகாய இளகியம்* பார்க்க; see *nada-kāya-iḷagiyam.*

*[நடைகாயம் + இளகியம்.]*

**நடைகாவல்** *nadai-kāval,* பெ. (n.) *நடைகாவற்காரன்* பார்க்க; see *nadai-kāvaṟ-kāraṉ.*

*[நடை + காவல்.]*

**நடைகாவற்காரன்** *nadai-kāvaṟ-kāraṉ,* பெ. (n.) கோயில் முதலியவற்றின் வாயில்களிற் காவலாய் நிற்பவன்; guard at the entrance as of a temple, gate keeper.

*[நடை + காவல் + காரன்.]*

**நடைகிணறு** *nadai-kiṇaṟu,* பெ. (n.) இறங்க ஏற உதவும் படிகள் கொண்ட கிணறு (வின்.); well with steps down to the water at its base.

*[நடை + கிணறு.]*



**நடைகூடம்** *nadai-kūdam,* பெ. (n.) *நடைக்கூடம்* பார்க்க; see *nadai-k-kūdam.*

*[நடை + கூடம்.]*

**நடைகூலி** *nadai-kūli,* பெ. (n.) செய்திபரப்புதற்கு, நடந்து சென்று செல்வதற்குரிய கூலி; wage for going on foot, as in carring message.

*[நடை + கூலி.]*

**நடைச்சலங்கு** *nadai-c-calangu,* பெ. (n.) சிறுபடகு (யாழ். அக.); small boat

*[நடை + சலங்கு.]*

**நடைச்சாவடி** *nadai-c-cāvadi,* பெ. (n.) *நடைக்கூடம்* பார்க்க; see *nadai-k-kūdam.*

*[நடை + மரா. சாவடி.]*

**நடைச்சீக்கு** *nadai-c-cīkku,* பெ. (n.) *நடைநோய்* பார்க்க; see *nadai-nōy.*

*[நடை + Eng. சீக்கு.]*

**நடைசாரி** *nadai-šāri,* பெ. (n.) **1.** குதிரையின் மந்தகதி (வின்.); the gentle pace of a horse. **2.** உலாவுகை (யாழ். அக.); walk, Constitutional. **3.** இடையறாத நடை (வின்.); ceaseless walking.

*[நடை + சாரி.]*

**நடைசாரிமேளம்** *nadai-šāri-mēḷam,* பெ. (n.) **1.** ஊர்வலமாகச் செல்லும் மேளம்; piper's music accompanying a procession. **2.** சாப்பறை (யாழ். அக.); funeral drum

*[நடை + சாரி + மேளம்.]*



**நடைத்திண்ணை** *naḍai-t-tiṇṇai,* பெ. (n.) இடைகழித்திண்ணை; pial.

*[நடை + திண்ணை (நடை = இடைகழி).]*

**நடைத்தேர்** *naḍai-t-tēr,* பெ. (n.) சிறுதேர்; child's toy-car. "*புதல்வர் நடைத்தே ரொலிகறங்கு நாடு*" (பு.வெ.3,8.).

*[நடை + தேர்.]*

**நடைநீர்** *naḍai-nīr,* பெ. (n.) ஓட்டமுள்ள நீர்; running or current water, as in a channal.

*[நடை + நீர் = நிலையாகத் தேக்கமின்றி ஓடும் ஓடைநீர்.]*

**நடைநோய்** *naḍai-nōy,* பெ. (n) 1. கிடைபாடில்லாத நோய்; disease not so severe as to cause one to take to bad. 2. துயில் நடை; somnambulism.

மறுவ: துயில் இயக்கம்.

*[நடை + நோய்.]*

இரவில் தன்னையறியாது நடக்கும் நோய். இந் நோய் கண்டவர்தம் தன்னினைவு இன்றி, செயற்பாடுகள் அனைத்தும் உறங்கிய நிலையிலேயே நிகழும்.

**நடைப்படம்** *naḍai-p-paḍam,* பெ. (n.) *நடைப்படாம்* பார்க்க; see *naḍai-p-paḍām.* "*நடைப்பட நாட்டி*" (பெருங். இலாவாண. 3,68.).

*[நடை + படம்.]*

**நடைப்படாம்** *naḍai-p-paḍām,* பெ. (n.) *நடைப்பாவாடை* பார்க்க; see *naḍai-p-pāvāḍai.* "*பையர வரியி னன்ன நடைப்படாம் பரப்பி*" (திருவிளை. திருமண. 147.).

*[நடை + படாம்.]*

ஒ.நோ. *முகபடாம்*

**நடைப்பந்தல்** *naḍai-p-pandal,* பெ. (n.) 1. திருவிழாக் காலத்தில் நடந்து செல்வதற்கு அமைக்கும் பந்தல்; pandal erected throughout the entire route of a procession 2. திருவிழாக்காலத்தில் புறப்பாட்டில், இறைத்திருவுருவுடன் செல்லுமாறு அமையும், பூப்பந்தல் (இ.வ.); a kind of movable pandal carried to shade an idol during procession.

*[நடை + பந்தல்.]*



**நடைப்பயணம்** *naḍai-p-payaṇam,* பெ. (n.) நெடுந்தூரம் நடந்துசெல்லும் பயணம்; travel on foot. நடைபயணம் மேற்கொண்டு,

பாடல்பெற்ற திருக்கோயில்களைக்காணப் போகிறோம்.

*[நடை + skt பிரயாண → பயணம்.]*

**நடைப்பயில்—தல்** *naḍai-payil-*, 7செ.குன்றாவி. (v.t.) மெதுவாக அல்லது நளினமாக நடத்தல்; to walk gracefully or daintily. *அன்னம் போல் அவள் நடைபயின்றாள்* (உ.வ.). *நடனமகளிர், அழகு மயில் போல அசைந்தாடி நடைபயில்வர்* (இ.வ.).

*[நடை + பயில்—.]*

**நடைப்பயிற்சி** *naḍai-p-payirci*, பெ. (n.) உடல் நலத்தின் பொருட்டு, வேறுநோக்கமின்றி மேற்கொள்ளப்படும் நடை; walking.

*[நடை + பயிற்சி.]*

மருத்துவர் அறிவுரையின் படி மேற்கொள்ளும் பயிற்சி. அரத்தக் கொதிப்பு, நீரிழிவு போன்ற நோய்களுக்கு, நடைப்பயிற்சி சாலச்சிறந்தது.

**நடைப்பரிகரம்** *naḍai-p-parigaram*, பெ. (n.) *நடைப்பரிகாரம்* பார்க்க; see *naḍai-p-parigāram.*

*[நடை + பரிகரம்.]*

**நடைப்பரிகாரம்**[1] *naḍai-p-parigāram*, பெ. (n.) வாழ்விற்குரிய பொருள்கள்; means of livelihood. "*நட்டோ ருவப்ப நடைப் பரிகார முட்டாது கொடுத்த... நள்ளியும்*" (சிறுபாண். 104.). 2. பயணத்திற்கு வேண்டிய பொருள் (யாழ். அக.); things or provisions necessary for a journey.

*[நடை + பரிகாரம்.]*

**நடைப்பரிகாரம்**[2] *naḍai-p-parigāram*, பெ. (n.) விலக்குணவு இல்லாத மருந்து (யாழ். அக.); medicine for which no special diet is required.

*[நடை + பரிகாரம்.]*

**நடைப்பாவாடை** *naḍai-p-pāvāḍai*, பெ. (n.) நடைபாவாடை பார்க்க; see naḍai-pāvāḍai. "*விரிப்புறு நடைப்பாவாடை மேனகை விரிப்ப*" (குற்றா.தல. திருமண. 131.). "*தகப்பனுக்குக் கட்டக் கோவணத்துக்கு வழி இல்லை. மகன் தஞ்சாவூர் மட்டும் நடைப்பாவடை போடச் சொன்னானாம்*" (பழ.).

*[நடை + பாவாடை.]*

**நடைப்பிணம்** *naḍai-p-piṇam*, பெ. (n.) 1. மக்கட்பதடி; worthless person or a useless fellow. "*பிணத்தினையொத்து வாழ்வோர், பின்னடைப் பிணங்கள் போலவுணக்கியே யுழல்வீர்*" (சி.சி. 2,96.). 2. நடக்கும் உயிர்ப் பிணம்; a walking corpse.

*[நடை + பிணம்.]*

**நடைப்பெருவாயில்** *naḍai-p-peru-vāyil*, பெ. (n.) கோயிலின் சிறப்பு வாசல்; main entrance to a palace or a temple. "*நடைப்பெருவாயிலும்*" (பெருங். மகத. 14,20.).

*[நடை + பெருவாயில்.]*

*[நடை = வாயில்.]*

**நடைப்பொன்** *naḍai-p-poṉ*, பெ. (n.) நடப்புச் செலவுக்குத் தேவையான பணம்; an amount of money required for current expenses. "*ஆக நடைப்பொன் பதினெட்டு லட்சமும்*" (கோயிலொ. 16.).

*[நடை + பொன்.]*

**நடைப்போடு–தல்** *naḍai-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) வெற்றியுடன் சிறப்பாக முன்னேறுதல்; to take good strides to progress tirumphantly. நாடு நல்வாழ்வை நோக்கி நடைப் போடுகிறது. (உ.வ.).

*[நடை + போடு–.]*

**நடைபடம்** *naḍai-paḍam,* பெ. (n.) *நடைபாவாடை* பார்க்க; see *naḍai-pāvāḍai.* "*மாதர் நடைபடம் விரிப்ப.*" (குற்றா. தல. திருமண. 82.).

*[நடை + படம்.]*

**நடைபடி** *naḍai-paḍi,* பெ. (n) 1. நடத்தை (வின்.); action, behaviour, life, history. 2. வழக்கம்; manner, custom, practice. 3. அறமன்ற நடவடிக்கை; procedure, as in a court.

*[நடை + படி.]*

**நடைபயம்** *naḍai-payam,* பெ. (n.) நடப்பதற்கு அஞ்சுகை; morbid fear of walking.

*[நடை + skt.பயம்.]*

*உருமநேரத்தில் காட்டிடையும், இரவில் தனிமையிலும் ஏற்படும் நடையச்சம்.*

**நடைபரி–தல்** *naḍai-pari-,* 2 செ.கு.வி. (v.i.) வேகமாக நடத்தல் (யாழ். அக.); to walk fast.

*[நடை + பரி–.]*

**நடைபழகு–தல்** *naḍai-paḻagu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. நடக்கக்கற்றல்; to learn to walk as a child. குழந்தைகள் நடைபழகுதற்கு, நடைவண்டி ஏற்புடைத்தென்பது, எல்லாரும் அறிந்தது. (உ.வ.) 2. மிகமெதுவாக நடத்தல்; to walk too slowly, as just learning to walk used ironically.

*[நடை + பழகு–.]*

**நடைபாதை** *naḍai-pādai,* பெ. (n.) நடக்கும் பாதை (நெல்லை); path, footway, frequented path.

**மறுவ.** நடைவழி.

*[நடை + பாதை.]*

**நடைபாவாடை** *naḍai-pāvāḍai,* பெ. (n.) நடத்தற் பொருட்டு வழியில் விரிக்கும் ஆடை; cloth spread on the floor for walking upon, as in a procession.

*[நடை + பாவு + ஆடை.]*

மிதியடி அணியாத காலத்தில், தக்காரை வரவேற்க, கல்லும் முள்ளும் குத்தாமல் இருப்பதற்குத் துணி விரிக்கப்பட்டது.

**நடைபாவி** *naḍai-pāvi,* பெ. (n.) 1. *நடைவாவி* **(இ.வ.)** பார்க்க; see *naḍai-vāvi,* 2. படிக்கட்டு (யாழ். அக.); steps, flight of steps

**நடைபேசி** *naḍai-pēsi,* பெ. (n.) நடக்கும்போதே பேசும் தொலைபேசி; walky talky.

*[நடை + பேசி.]*

**நடைமச்சம்** *naḍai-maccam,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish

**நடைமருந்து** *nadai-marundu,* பெ. (n.) *நடைப் பரிகாரம்²* பார்க்க; see *nadai-p-parigāram²*.

*[நடை + மருந்து.]*

**நடைமலை** *nadai-malai,* பெ. (n.) யானை; elephant. "***நடைமலையெயிற்றினிடை தலைவைத்தும்***" (கல்லா. 12.).

*[நடை + மலை.]*

**நடைமனை** *nadai-maṉai,* பெ. (n.) உடம்பு; body, as a walking house. "***சாலேகமொன்பது குலாவு நடைமனையை***" (தாயு.சச்சிதா.2).

*[நடை + மனை.]*

**நடைமாடு** *nadai-mādu,* பெ. (n.) கால்நடை (ஆடுமாடுகள்) (நாஞ்.); cattle, live-stock.

*[நடை + மாடு. = கால்நடைச்செல்வம்.]*



**நடைமாளிகை** *nadai-māḷigai,* பெ. (n.) கருவறையைச் சூழ்ந்ததாகத் திருச்சுற்றில் அமைக்கப்படும், தொடர்நிலை மண்டபம் (கல்.அக.); outer halls adjoining. the sanctum of a temple.

*[நடை + மாளிகை. (நடை = கோயில்).]*

**நடைமாற்று** *nadai-māṟṟu,* பெ. (n.) *நடைபாவாடை (நெல்லை)* பார்க்க; see *nadai-pāvādai.*

*[நடை + மாற்று.]*

**நடைமுதல்** *nadai-mudal,* பெ. (n.) நடப்பிலுள்ள ஆண்டு (இ.வ.); current year.

*[நடை + முதல்.]*

**நடைமுறை** *nadai-muṟai,* பெ. (n.) 1. ஒரு திட்டம் கொள்கை முதலியவற்றைச் செயல்படுத்தும் முறை; practice. நாட்டில் நடைமுறைக்கு ஒத்துவரும் திட்டங்களை வகுக்கவேண்டும் (உ.வ.). 2. பழக்கம்; that which is in practice. ஏற்கனவே நடைமுறையில் உள்ளது (உ.வ.). 3. வழிமுறை; method. நாடகநடிகர்களுக்கு, மேடை நடைமுறை பற்றிய பயிற்சி தரப்படுகிறது. (இ.வ.).

**நடைமுறைப்படுத்து—தல்** *nadai-muṟai-p-paduttu-,* 5 செ.கு.வி. (v.t.) ஆட்சி, திட்டம், சட்டம் போன்றவற்றை நடைமுறைக்குக் கொண்டு வருதல் அல்லது செயல்படுத்துதல்; to put into practice, to bring into force, to implement. பல வளர்ச்சித்திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்படாமல் இருக்கின்றன. (உ.வ.).

*[நடைமுறை + படுத்து—.]*

**நடைமுறைமூலதனம்** *nadai-muṟai-mūla-taṉam,* பெ. (n.) ஒவ்வொரு தொழில் நிறுவனமும், அன்றாடச் செலவினங்களுக்காக ஒதுக்கப்பட்ட முதல்; working capital.

*[நடைமுறை + மூல. + Skt தனம்.]*

நடைமுறை மூலதனத்தின் வகைகள்:— 1. வழக்கமாக அல்லது நிலையாக ஒதுக்கப்படும் நடைமுறைமூலதனம்.

2. பருவகால நடைமுறைமூலதனம்.
3. சிறப்பு நடைமுறைமூலதனம்

**நடைமேடை** *nadai-mēdai,* பெ. (n.) நடந்துசெல்லும் பொருட்டு, சாலையோரங்களில் அமைக்கப்பட்ட பகுதி; platform.

*[நடை + மேடை.]*

*போக்குவரத்து நெரிசலைத் தவிர்க்கும் பொருட்டு, மக்கள் நடந்து செல்லுவதற்கென்று அமைக்கப்பட்ட, மேடைபோன்ற பகுதி.*

**நடைமொழி** *nadai-moli,* பெ. (n.) கிளைமொழி; dialect language. 'இலக்கிய நடைமொழி புலவர்க்கு உகந்தது' (இக்.வ.).

*[நடை + மொழி.]*

**நடையறி—தல்** *nadai-y-ari-,* 2செ.கு.வி. (v.i.) ஊர்வழக்கங்களையறிதல் (வின்); to understand the customs, as of a locality.

*[நடை(உலகியல்) + அறி —.]*

**நடையன்** *nadaiyan,* பெ. (n.) 1. நடக்கிறவன் (வின்.); walker, pedestrian. 2. உழவுமாடு, குதிரை முதலியவை; ploughing ox, riding horse, etc., 3. செருப்பு; shoes, slippers.

ம. நடயன்.

*[நடை → நடையன்.]*

**நடையாட்டம்** *nadai-y-āttam,* பெ. (n.) வழக்கிற் பயின்று வருகை; usage. "*முடுகாவழி அத்துணை நடையாட்டம் இல.*" (தொல்.பொருள்.377,உரை.).

தெ. நடயாடு.

*[நடை + ஆட்டம்.]*

**நடையாடு—தல்** *nadai-y-ādu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. திரிதல்; to roam, to travel, to traverse. "*நடையாடாத தேசமாகையாலே*" (திவ். திருமாலை. 19,வ்யா.). 2. பரவுதல்; to spread, as fame. '*ராமகுணங்கள் நடையாடு மிடத்திலே*' (ஈடு.7,5,2).

மறுவ. நடமாடு.

*[நடை + ஆடு—.]*

**நடையாடுநோய்** *nadai-y-ādu-nōy,* பெ. (n.) 1. மூச்சுத்திணறும் ஈளை நோய்; a disease in which the respiration is obstructed as asthma. 2. நடமாட்டத்தைத் தடுக்காத முடக்குநோய்கள்; certain classes of rheumatism, which allow persons to move about freely without any difficulty

மறுவ. ஈளைநோய்.

*[நடையாடு + நோய்.]*

**நடையியல்** *nadai-y-iyal,* பெ. (n) பேச்சு, மொழி, எழுத்து, மொழி ஆகியவற்றின் நடையைப்பற்றி ஆராயும், ஒரு மொழியியல் பிரிவு; style in language.

*[நடை + இயல்.]*

**நடையில்விடு—தல்** *nadaiyil-vidu-,* 18 செ.குன்றாவி. (v.t.) மாடு முதலியவற்றைப் பெருநடையிற் செலுத்துதல்; to lead or drive at a brisk pace, as a bull-cart. மாட்டைத்துரத்தாதே நடையில் விடு (இ.வ.).

*[நடையில் + விடு—.]*

*நடை =நடக்கும் அகன்ற வாயில்*

**நடையுடைபாவனை** *naḍai-y-uḍai-pāvaṉai,* பெ. (n.) மக்களின் உடுப்பு வழக்கவொழுக்க முதலியன; manners and customs, as of a nation.

*[நடை + உடை + Skt. பாவனை.]*

மாந்தர்தம் புறநாகரிகத்தைப் புலப் படுத்துவதே, நடையும், உடையும்.

**நடையுடையோன்** *naḍai-y-uḍaiyōṉ,* பெ. (n.) காற்று; air, wind, as hair motion. "***காலங்களு நடையுடை யோனும்***" (திருப்பு.994.).

*[நடை + உடையோன்.]*

விரைந்து வீசும் நடையுடைமை பற்றிக் காற்றுக்குரித்தான பெயரெனலாம்.

**நடையைக்கட்டு—தல்** *naḍaiyai-k-kaṭṭu-,* 15 செ.கு.வி. (v.i.) இருக்கும் இடத்தைவிட்டு நீங்குதல், அல்லது புறப்படுதல்; to buzz off, clear off. 'வந்த வேலை முடிந்துவிட்டால், நடையைக் கட்டு' (பழ.).

*[நடை + ஐ + கட்டு-.]*

**நடையொத்து** *naḍai-y-ottu,* பெ. (n.) ஒருவகைத்தாளம் (திவ்.திருவாய். பதிகத் தலைப்பு.); a mode of marking time.

*[நடை + ஒத்து.]*

**நடைவகைகள்** *naḍai-vagaigaḷ,* பெ. (n.) ஓர் ஆசிரியரே தேவைக்கும், சூழலுக்கும், ஏற்றவாறு, பல்வேறு பாங்கினில் எழுதும் முறை; various kinds of writing.

*[நடை + வகைகள்.]*

பல்வேறு நடைவகைகள்.

1. கட்டுரை நடை.
2. வண்ணனை நடை.
3. பாட்டு நடை.
4. விளக்க நடை.

**நடைவண்டி** *naḍai-vaṇḍi,* பெ. (n.) சிறுபிள்ளைகள் நடைபழகுதற்குதவும் வண்டி; a go-cart.

*[நடை + வண்டி.]*



**நடைவரம்பு** *naḍai-varambu,* பெ. (n.) நடந்து செல்லுதற்குத் தக்கபடி அமைந்த வயல்வரப்பு; ridge of fields, used as a path-way.

*[நடை + வரப்பு → நடைவரம்பு.]*

**நடைவழக்கு** *naḍai-vaḻakku,* பெ. (n.) *நடைமொழி* பார்க்க; see *naḍai-moḻi*

*[நடை + வழக்கு.]*

**நடைவழி** *naḍai-vaḻi,* பெ. (n.) **1.** மூன்று முழ அகலமுள்ள பாதை (சுக்கிரநீதி,37.); road, three cubits wide. **2.** நடக்கும் வழி; way, path.

**மறுவ.** நடைபாதை.

*[நடை + வழி.]*

**நடைவழு** *nadai-valu,* பெ. (n.) செய்யுட் குற்றங்களுள் ஒன்று (யாப்.வி.525); deviation from rule in style.

**நடைவாதம்** *nadai-vādam,* பெ. (n) வளிக்கோளாறினால் நொண்டி நடத்தல்; limping due of spasmodic attacks.

*[நடை + Skt. வாதம்.]*

**நடைவாவி** *nadai-vāvi,* பெ. (n.) படிகளமைந்த கிணறு (வின்.); well with steps down to the water as its base.

மறுவ. நடைக்கிணறு.

*[நடை + வாவி.]*

பெருங்கிணற்றில் ஏறி இறங்க ஏதுவாகச் சுவரில் படிகள் அமைக்கப் படுதல் வழக்கம்.

**நடைவானம்** *nadai-vānam,* பெ. (n.) *நடைப்பந்தல்* பார்க்க; see *nadai-p-pandal.*

*[நடை + வானம்.]*

**நடைவியாதி** *nadai-viyādi,* பெ. (n.) நெடுநாட்பட்டநோய்; longersistis sickness, chronic illness.

*[நடை + Skt. வியாதி.]*

**நடைவிளக்கெரி–த்தல்** *nadai-vilakkeri-,* 4 செ.குன்றா.வி. (v.t.) குற்றஞ்செய்தோரைத் தண்டிப்பதற்கு, அவர் தலையில் விளக்கை வைத்து, ஊரை வலம்வரச் செய்தல்; to punish a condemned culprit by compelling him to go around a town, with a burning lamp on his head. *'இத் தன்மைத்தொன்று கூறின், நம்மை நடைவிளக்கெரிக்கும்'* (சீவக.1162.உரை.).

*[நடை + விளக்கெரி–.]*

**நடைவெள்ளம்** *nadai-vellam,* பெ. (n.) இறைக்கவேண்டாதபடி, தோட்டம் முதலிய வற்றிற்குத் தானாகவே பாயும்நீர்; water flowing into a field or garden, from natural sources, dist. fr.iraippu-vellam.

*[நடை + வெள்ளம்.]*

**நண்டபிண்டல்** *nanda-pindal,* பெ. (n.) 1. கூழுங் கட்டியுமாய் உண்ணுதற்காகாதபடி ஆக்கப்பட்ட சோறு; rice over-boiled and made happy. *நண்டல்பிண்டலாய் ஆக்கிய சோறை நாய்கூடத் தின்னாது* (உ.வ.); 2. நொறுங்கல்; that which is crushed. சோற்றை நண்டல்பிண்டலாக்கி விட்டாள் (உ.வ.).

மறுவ : கூழ்பதம்.

நொண்டு → நண்டு + அல் → நண்டல் = நெடுநாள் நோய்வாய்ப்பட்டோர், நுகர்தற் பொருட்டுக் கிண்டிக் குழைத்த உணவு. பொங்கல் ஆக்குங்கால் கிண்டியும் நன்கு குழைத்தும் சமைப்பது மரபாகும்.

நண்டல் + பிண்டல் = உண்ணற்காகாவாறு கூழுங் கட்டியுமாகச் சமைத்தசோறு. (வே.க.3.17.).

**நண்டல்** *nandal,* பெ. (n.) குழைவுபட்டது; macerated mass, rice boiled to a pap நண்டல் கிண்டிப்படைக்கிறது (வின்.).

*[நொள் → நொண்டு → நண்டு → நண்டல்.]*

மாந்தர் நுகர்தற்பொருட்டுக் கிண்டிக் குழைத்த உண்டி. நண்டல் கிண்டிப் படைத்தல் என்பது உலகவழக்கு. (வே.க.3.17.).

**நண்டற்சோறு** *nanḍar-šōṟu,* பெ. (n.) தைப் பொங்கலில் சமைத்த சோறு (இ.வ.); food cooked on the pongal day.

/நண்டல் + சோறு = நன்கு கிண்டிச் சமைத்த பொங்கற் சோறு.(வே.க.3.17.)./

நொண்டு + நண்டு. நண்டுதல் = கிண்டுதல், கிளறுதல். நண்டல் = கிண்டிக் குழைத்த உண்டி.

**நண்டிறைச்சி** *nanḍiṟaicci,* பெ. (n.) சமைத்த நண்டின் தசை; cooked or boiled crab flesh.

*[நண்டு + இறைச்சி.]*

இறால் இறைச்சி போல, நண்டின் இறைச்சி சுவையுடையது.

**நண்டு** *nanḍu,* பெ. (n.) **1.** நீரோரத்தில் வாழும் உயிர்வகை; crab, lobster **2.** நண்டு வடிவான ஓரை (சூடா.); cancer in the zodiac. **3.** குளிர்மை; cold. **4.** கள்ளி; milk, spurge.

தெ., (எண்டிரி) ம. நண்டு.

/நொண்டு → நண்டு./

நண்டுதல் = கிண்டுதல், கிளறுதல். நண்டு = வண்டலிலும், மணலிலும் கிண்டினாற். போல், கீறிச்செல்லும் நீருயிரி.) (வே.க.3.17.).

இடுக்கியின் முன்பகுதி போன்ற இரு முன்னங்கால்களையும், ஓடு மூடிய உடலையும் கொண்டது. நீரிலும் நிலத்திலும் வாழும் உயிரினம். மருந்துக் குணமுள்ள இவ்வுயிரி ஏரி, குளம், நன்செய் வரப்பு, ஆற்று நீர்ப்படுகை போன்ற இடங்களில் காணப்படும். கடலில் இவ்வினம் மிகுதியாகக் காணப்படும்.

கடலில் காணப்படும் இந் நண்டு ஏழைமக்களுக்கும், மீனவர்கட்கும், ஊட்டச் சத்தினையும் நோய் எதிர்ப்பு ஆற்றலையும் வளர்க்கும்.

நண்டுச் சாறு, எல்லா நோய்கட்கும் கைகண்ட மருந்து. குளுமையைப் போக்கும். இசிவுநோய், மிகு குளுமை, உடம்புவலி முதலான நோய்களைத் தீர்க்கும்

இதன் வகைகளாகச் சாம்பசிவ மருத்துவ அகரமுதலி கூறுவது வருமாறு:—

1. குளநண்டு— small tank crab.
2. ஆற்று நண்டு— river crab
3. கடல் நண்டு— sea crab.
4. கடுக்காய் நண்டு— small crab of the size of gall nut
5. நீலக்காலி நண்டு; blue legged crab
6. ஒருகால் நண்டு;crab with one claw only.
7. செம்பாறை நண்டு; large and red crab.
8. தில்லை நண்டு: black crab
9. வயல் நண்டு; field crab
10. வெள்ளை நண்டு; white crab.
11. கருப்பு நண்டு; black crab
12. வானம்பாடி நண்டு; another variety.
13. பால் நண்டு; milk crab.
14. பீ நண்டு;
15. சீமை நண்டு; english black clawed crab.
16. சூக்காய் நண்டு;
17. பெரு நண்டு; big crab.

**நண்டுக்கண்ணுக்கினி** *nanḍu-k-kaṇṇuk-kiṉi,* பெ. (n.) எலுமிச்சம்பழம்; lime fruit.

**நண்டுக்கண்ணுப்பூடு** *naṇḍu-k-kaṇṇu-p-pūḍu,* பெ. (n.) கடலுராய்ஞ்சி மரம்; climbing partridge.

*[நண்டு + கண்ணு + பூடு.]*

**நண்டுக்கரம்** *naṇḍu-k-karam,* பெ. (n.) கற்கடகம் பார்க்க; see kaṟ-kaḍagam. *"சமநிலையிலே நின்று நண்டுக்கரத்தைக் கோத்து"* (சிலப்.17; பக்.455.).

*[நண்டு + கரம்.]*

நடனமுத்திரைவகையுளொன்று.

**நண்டுக்கல்**[1] *naṇḍu-k-kal,* பெ. (n.) இணைவிழைச்சு நோயினைத் தீர்க்கும் கல்; a kind of stone useful in venereal diseases. abdominal dropsy, etc. (சா.அக.).

*[நண்டு + கல்.]*

**நண்டுக்கல்**[2] *naṇḍu-k-kal,* பெ. (n.) நச்சுத்தன்மையை நீக்குவதும், நண்டு இறுகி மாறியதாகக் கருதப்படுவதுமான கல்வகை (வின்.); a kind of petrified lobster, used as a charm.

*[நண்டு + கல்.]*

**நண்டுக்கழை** *naṇḍu-k-kaḻai,* பெ. (n.) ஒரு வாழையினம்; a variety of plantain tree.

*[நண்டு + கழை.]*

**நண்டுக்கறி** *naṇḍu-k-kaṟi,* பெ. (n.) சமைத்த நண்டுக்கறி; dish, prepared out of crabsh.

*[நண்டு + கறி.]*

நண்டின் கால்கள், வயிறு போன்ற பகுதிகள், ஓடாக அமைந்திருக்கும். அதை உடைத்து உள்ளே கட்டைவிரலால் தோண்டி எடுக்கும் கறிப்பகுதி.

இக்கறியினை உரிய பதத்தில் சமைத்து உண்பதால், இசிவுநோய், நாட்பட்ட கோழை, போன்றவை குணமாகும்.

**நண்டுக்காற்கீரை** *naṇḍu-k-kāṟ-kīrai,* பெ. (n.) கீரைவகை (மூ.அக.); a kind of eat-able greens.

*[நண்டு + கால் + கீரை.]*

நண்டுக்கால் போன்ற வடிவமைப்புக் கொண்ட கீரைக்கொத்து.

**நண்டுக்காற்புல்** *naṇḍu-k-kāṟ-pul,* பெ. (n) புல்வகை (யாழ்.அக.); a kind of grass. ischaemum aristatum (சா.அக.).

*[நண்டு + கால் + புல்.].*

நண்டுக்கால் போல், வண்ணமுடைய புல்வகை; ஈளை நோய்கண்டவர்க்கு இக் கீரைச்சாறு கைகண்ட மருந்து.

**நண்டுக்கிண்ணி** *naṇḍu-k-kiṇṇi,* பெ. (n.) நண்டின் சிறுகால்; small leg of a crab

*[நண்டு + கிண்ணி ; கிண்ணம் → கிண்ணி.]*

*ஒ.நோ. கிண்ணிக்கோழி.*

**நண்டுக்குழி** *naṇḍu-k-kuḻi,* பெ. (n.) நண்டின் வளை; the hole where the crab is living; crab's hole.

*[நண்டு + குழி.]*

**நண்டுக்குழிநீர்** *nandu-k-kuli-nir,* பெ. (n.) நண்டுவளைத் தண்ணீர்; the water lying stagnant is the crab's hole near the ridges of the field.

*[நண்டு + குழி + நீர்.]*

நோயாளியின் நாவறட்சியினைப் போக்கும் கைகண்ட மருந்து. மேலும் நீங்கா விக்கல், உடம்பெரிச்சல் போன்ற நோய்களுக்கும் நண்டுக்குழி நீர் உகந்தது (சா.அக.).

**நண்டுக்குழிமண்** *nandu-k-kuli-man,* பெ. (n.) நண்டுக் குழியிலுள்ள மண்; the earth of crab's hole.

*[நண்டு + குழி + மண்.]*

மந்திரச் செயல்களுக்கு நண்டுக்குழியிலிருந்து எடுக்கப்பட்ட மண் சாலச்சிறந்தது. (சா.அக.).

சுமை இழுக்கும் எருதுகளுக்கும், நுகத்தடி ஏர்க்காலில் பிணைத்து உழுசால் ஓட்டும் காளைகட்கும், கழுத்தில் காய்ப்பு ஏற்படும். இக் கழுத்துக் காய்ப்பு, நாளா வட்டத்தில் புண்ணாக மாறும். இப் புண்களுக்கு நண்டுக்குழி மண், நனி சிறந்தது.

**நண்டுக்கொடுக்கு** *nandu-k-kodukku,* பெ. (n.) நண்டின் முன்புறத்துள்ள உறுப்பு; forceps of a lobster.

*[நண்டு + கொடுக்கு.]*



**நண்டுக்கொழுப்பு** *nandu-k-koluppu,* பெ. (n.) நண்டின் கொழுப்பு; crabs fat

*[நண்டு + கொழுப்பு.]*

தோல்நோய், இசிவுநோய், ஈளைநோய் முதலான நோய்கட்கும், உடம்பிலேற்படும் எரிச்சல் தன்மையைப் போக்குவதற்கும் நண்டுக்கொழுப்பு மிகவும் பயன்படும். (சா.அக.).

**நண்டுக்கோது** *nandu-k-kōdu,* பெ. (n.) நண்டின் ஓடு முதலியன (வின்.); remains of lobsters as the shell.

*[நண்டு + கோது.]*

**நண்டுகண்ணுக்கினி** *nandu-kannukkini,* பெ. (n.) எலுமிச்சை (சங்.அக.) பார்க்க; see elumiccai, sour lime

**நண்டுச்சாறு** *nandu-c-cāru,* பெ. (n.) நண்டுச்சதையில் சமைத்த குழம்பு நீர்; crab's soup.

*[நண்டு + சாறு.]*

**நண்டுச்சிறுகால்** *nandu-c-ciru-kāl,* பெ. (n.) நண்டின் பின்னங்கால்கள்; the two back legs of the crab.

*[நண்டு + சிறுகால்.]*

**நண்டுச்சினை** *nandu-c-cinai,* பெ. (n.) நண்டின் முட்டை; crab's egg.

*[நண்டு + சினை.]*

**நண்டுச்செலவு** *nandu-c-celavu,* பெ. (n.) நண்டு இருக்கும் வளை; crab's hole.

மறுவ. நண்டுப் பொந்து நண்டுவலை.

*[நண்டு + செலவு.]*

நண்டு சென்று அடையும் வளை.

**நண்டுசிண்டுகள்** *nandu-šindugal,* பெ. (n.) நண்டுஞ்சுண்டும் பார்க்க; see nanduñ-šundum. வீட்டுக்கு வெளியே ஐந்து ஆறு நண்டு சிண்டுகள் விளையாடிக் கொண் டிருந்தனர். (உ.வ.)

மறுவ : சின்னஞ்சிறுசுகள்.

**நண்டுஞ்சிண்டும்** *nanduñ-šindum,* பெ. (n.) நண்டுஞ்சுண்டும் (இ.வ.) பார்க்க; see nanduñ-šundum.

*[நண்டும் + சிண்டும்.]*

**நண்டுஞ்சுண்டும்** *nanduñ-šundum,* பெ. (n.) சிறியவும் பெரியவுமான இளங்குழந்தைகள்; small children of different ages. *நண்டுஞ் சுண்டுமாக விட்டுவிட்டுப் போய் விட்டார்.* (இ.வ.).

*[நண்டும் + சுண்டும்.]*

கைகால் வளைந்தும், வயிறு பெருத்தும் காணும் குழந்தைகளைக் கூறும் வழக்கு. தஞ்சைமாவட்டத்தில் வீசம்படியைச் சுண்டு என்பது வழக்கம்.

**நண்டுத்தெறுக்கால்** *nandu-t-terukkāl-,* பெ. (n.) நண்டுவாய்க்காலி பார்க்க; see nanduvāy-k-kāli.

**நண்டுதின்னிக்குரங்கு** *nandu-tinni-k-kurangu,* பெ. (n) நண்டைத்தின்று வாழும் குரங்கு; crab eating monkey.

*[நண்டும் + தின்னி + குரங்கு.]*

**நண்டுதின்னிநாகம்** *nandu-tinni-nāgam,* பெ. (n.) நண்டுகளைத் தின்றுவாழும் நாகப் பாம்பு வகை; a kind of cobra, living on crab's hole.

*[நண்டு + தின்னி + நாகம்.]*

நண்டு வலையில் புகுந்து, நண்டைத் தின்று வாழும் நாகம் (சா.அக.).

**நண்டுதெருக்கால்** *nandu-terukkāl,* பெ. (n.) நண்டுவாய்க்காலி பார்க்க; see nandu-vāy-k-kāli.

**நண்டுநசுக்கு** *nandu-našukku,* பெ. (n) சிறு குழந்தைகள்; little children

*[நண்டு + நசுக்கு.]*

கால்கை வளைந்தும், வயிறு ஒடுங்கியும் காணப்படும் குழந்தைகள்.

**நண்டுப்பிடி** *nandu-p-pidi,* பெ. (n) மற்போரில் அழுத்திப் பிடிக்கும்பிடி; to hold, tightly as of a crab மற்போர் வீரரின் வெற்றிக்கு நண்டுப்பிடி இன்றியமையாதது (உ.வ.).

மறுவ : கிடுக்கிப்பிடி.

*[நண்டு + பிடி.]*

மற்போர் விளையாட்டில், நண்டுபோல் பிடிதளராவண்ணம் இறுக்கிப் பிடிக்கும் கிடுக்கிப்பிடியே, நண்டுப்பிடியாகும்.

**நண்டுபெருங்கால்** *nandu-perungāl,* பெ. (n.) நண்டின் முன்னங்கால்; the two forelegs of the crab

*[நண்டு + பெருங்கால்.]*

**நண்டுவளைத்தண்ணீர்** *nandu-valai-t-tannir,* பெ. (n.) நண்டின் வளைக்குள் நிற்கும் நீர்; stagnant water in the crabs hole.

*[நண்டு + வளை + தண்ணீர்.]*

**நண்டுவாய்க்காலி** *nandu-vāy-k-kāli,* பெ. (n.) *நட்டுவாய்க்காலி.* (யாழ்.அக.) பார்க்க; see *nattuvāy-k-kāli.*

*[நண்டு + வாய் + காலி.]*



**நண்டூருகால்** *nandūru-kāl,* பெ. (n.) நண்டின் சிற்றடி (வின்.); small legs of a crab.

*[நண்டு + ஊரு + கால்.]*

**நண்டெடுத்தல்** *nandeduttal,* பெ. (n.) நீரின் கீழ் மூழ்கியிருக்கும் இளம்பயிர்; நண்டு வெட்டுதலால், அழிந்த நிற்கும் நிலை (நாஞ்.); spolit condition of tender crops under water, due to the scratches of crabs.

*[நண்டு + எடுத்தல்.]*

**நண்டோடு** *nandōdu,* பெ. (n.) நண்டின் ஓடு; crabs shell

*[நண்டு + ஓடு.]*

**நண்ணம்** *nannam,* பெ. (n.) சிறிது; small thing. "நாடு பெற்ற நன்மை நண்ண மில்லையேனும்" (திவ்.திருச்சந்.46.).

**நண்ணலர்** *nannalar,* பெ. (n.) நண்ணார் (பிங்.) பார்க்க; see nannār.

*[நண் + அல் + அர்.*

*அல் = எதிர்மறை இடைநிலை.]*

**நண்ணார்** *nannār,* பெ. (n.) பகைவர்; foes. *"ஞாட்பினு ணண்ணாரு முட்குமென் பீடு"* (குறள், 1088.).

ம. நண்ணார்.

*[நள் → நண் + நண்ணார்.]*

ஒருகா. நண்ணுநர் x நண்ணார் (வே.க. 3: 53.)

**நண்ணி** *nanni,* பெ. (n.) நன்றி; goodness.

*[ஒருகா.நன்றி → நன்னி → நண்ணி.]*

**நண்ணிடல்** *nannidal,* பெ. (n.) சேர்தல், இணைதல்; copulate,

*[நள் → நண் + நண்ணிடு → நண்ணிடல்.]*

**நண்ணிலக்கடல்** *nannila-k-kadal,* பெ. (n.) நிலநடுக்கடல்; the mediterranean sea

*[நண்ணிலம் + கடல்.]*

**நண்ணிலக்கோடு** *nannila-k-kōdu,* பெ. (n.) நிலநடுக்கோடு; equator.

*[நண்ணிலம் + கோடு.]*

**நண்ணிலம்** *nannilam,* பெ. (n.) நடுநிலம்; equator region.

*[நள் → நண் + நிலம் → நண்ணிலம் = நிலநடுப்பகுதி.]*

**நண்ணு[1]-தல்** *nannu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கிட்டுதல்; to draw near, approach, reach. *"நம்பனையுந் தேவனென்று நண்ணுமது"* (திருவாச. 12:17.). 2. பொருந்துதல்; to be attached to, united with, to adhere. 3. செய்தல்; to do, make. "நண்ணுமின்க ணைல்லறமே" (சிலப். 16, ஈற்று வெண்பா.).

*[நள் → நண் → நண்ணு-.]*

'நள்' எனும் பொருந்துதற் கருத்தினின்று கிளைத்த சொல். அன்பின் செறிவால் சேருதல், கிட்டுதல் போன்ற கிளைக் கருத்துகள், இச் சொல்லினின்று தோன்றியுள்ளன.

**நண்ணு[2]-தல்** *nannu-,* 5 செ.கு.வி. (v.t.) இருத்தல் (யாழ்.அக.); to reside, live.

*[நள் → நண் → நண்ணு-.]*

**நண்ணுநர்** *nannunar,* பெ. (n.) நட்பினர் (பிங்.); friends, adherents.

*[நள் → நண் → நண்ணு → நண்ணுநர்.]*

**நண்ணுவழி** *nannu-vali,* பெ. (n.) அருகிலுள்ள இடம்; place near by. *"கண்ணிற்கான நண்ணுவழி யிரீஇ"* (பொருந. 76.).

*[நண் → நண்ணு + வழி.]*

**நண்ணைப்பாரை** *nannai-p-pārai,* பெ. (n.) ஓரடி வளரும் வெண்ணெய்ப்பாரை மீன்; horse makerel, grey, attaining 1 ft. in length, caranxire.

*[நண்ணை + பாரை.]*

மறுவ: நண்ணிப்பாரை.



**நண்பகல்** *nan-pagal,* பெ. (n.) 1. நடுப்பகல்; midday. *"நண்பகல் வேனிலொடு"* (தொல். பொருள். 9.). 2. ஆறுபொழுதுகளிலொன்று; one of the six division of the day. (சா.அக.). 3. பத்து நாழிகை முதல் இருபது நாழிகை வரை; a period of four hours from 10 a.m to 2 p.m

*[நள் + பகல் → நண்பகல்.]*

**நண்பல்** *nan-pal,* பெ. (n.) இரண்டு பற்களினிடை; space between teeth *"தின்ற நண்ப லூஉன்றோண்டவும்"* (புறநா. 384.).

*[நள் → நண் + பல் → நண்பல்.]*

**நண்பன்[1]** *nanpan,* பெ. (n.) 1. தோழன் (பிங்.); friend, campanion, associate. 2. காதலன்; lover. *"நின்றாடனி நண்பனை நினையா"* (சீவக. 1324.). 3. குறிஞ்சிநிலத் தலைவன் (திவா.); chief of a hilly tract..

*[நள் → நண் → நண்பு + நண்பன்.]*

**நண்பன்**[2] *nanpan,* பெ. (n.) 1. சணல்; indian hemp crotalaria. 2. சணற்பயிர்; hemp crops.

**நண்பாலம்** *nanpālam,* பெ. (n.) நண்பாலை பார்க்க; see nanpālai.

**நண்பாலை** *nanpālai,* பெ. (n.) வெட்பாலை; blue dying rosebay.

**நண்பு** *nanbu,* பெ. (n.) 1. அன்பு; love, attachment, affection; "எம்மானே நண்பே யருளாய்" (திருவாச. 44: 3.). 2. நட்பு, நல்லுறவு; amity, friendship *"நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்"* (குறள், 998.). 3. உறவு (பிங்.); relationship.

க., ம., நண்பு தெ. நணுபு.

*[நள் → நண் → நண்பு.]*

**நண்மை** *nanmai,* பெ. (n.) அண்மை; proximity. *"நட்பெதிர்ந் தோர்க்கே யங்கே நண்மையன்"* (புறநா. 380,11.).

*[நள் → நண் → நண்மை.]*

**நணந்தம்** *nanandam,* பெ. (n.) 1. சணல் (மலை.); sunn hemp. 2. காட்டுப் பச்சிலை பார்க்க; see kāttu-p-paccilai. 3. புங்கு (மலை.). பார்க்க; see pungu.

*[நண் + அந்தம்.]*

**நணா** *nanā,* பெ. (n.) ஈரோடு மாவட்டத்தில் உள்ள ஊர். இன்று பவானி என்ற பெயருடன் உள்ளது; a village in Erodu dt.

"குன்றோங்கி வன்றிரைக் கண் மோத மயிலாலும் சாரற் செவ்வி

சென்றோங்கி வானவர்களேந்தி அடிபணியும் திரு நணாவே" (ஞானசம்பந்தர். 208-1.).

பவானி என்பது பூவானி என்றதன் திரிபு (சேரர்.வர.).

**நணி** *nani,* பெ. (n.) அணிமையான இடம்; nearness, proximity. "திரைபொரு முந்நீர்க் கரைநணிச் செலினும்". (புறநா. 154.).

*[நண் → நணி.]*

**நணியான்** *naniyān,* பெ. (n.) அண்மையி லிருப்பவன்; one who is near. "*சேயாய் நணியானே*" (திருவாச. 1: 44.).

*[நண் → நணி + ஆன்.]*

**நணுகலர்** *nanugalar,* பெ. (n.) நண்ணார் பார்க்க; see nannār.

*[நண் → நணு → நணுகு + அல் + அர்.]*
அல் = எதிர்மறை இடைநிலை

**நணுகார்** *nanugār,* பெ. (n.) *நண்ணார்* பார்க்க; see *nannār.*

*[நணுகு + ஆ+ஆர்.]*

"ஆ" எதிர்மறை இடைநிலை.

**நணுகு-தல்** *nanugu-,* 5. செ.குன்றாவி. (v.t) 1. அண்மித்தல்; to approach, draw nigh, arrive at. *"நானணுகு மம்பொன்குலாத் தில்லை"* (திருவாச. 40: 6.). 2. ஒன்றிக்கலத்தல்; to become attached to or united with. *"நம்புமென் சிந்தை நணுகும் வண்ணம்"* (திருவாச. 40: 6.).

*[நள் → நண் → நணுகு-.]*

*'நள்' எனும் பொருந்துதற்கருத்து வேரினின்று கிளைத்த சொல். கிட்டுதல் பொருந்திக்கலத்தல் என்னும் பொருண்மையில், இலக்கியங்களில் வழக்கூன்றியுள்ளது.*

**நணுங்கு—தல்** *naṇuṅgu-,* 5. செ.குன்றாவி. (v.t.); 5. செ.கு.வி. (v.i.). *நணுகு* பார்க்க; see *naṇugu-.* *"சுரும்பினங்கள்.....நரம்பென வெங்கு நணுங்க"* (ஏகாம். உலா. 276.).

*[நணுகு → நணுங்கு—. ஒ.நோ. ஊசல் → ஊஞ்சல். சிணுகுதல் → சிணுங்குதல்.]*

**நத்தகம்** *nattagam,* பெ. (n.) கந்தை (யாழ்.அக.) tatters

*[நொள் → நொய் → நய் → நை. → நைந்து → நொய்ந்து → நொந்து. நொந்து → நந்து → நந்தகம். நந்தகம் → நத்தகம்.]*

*நந்துதல் = அழிதல். நத்தகம் = நைந்து அழிந்துபோன கந்தைத்துணி.*

**நத்தகா** *nattagā,* பெ. (n.) புன்கு; indian beech.

*[நந்து → நத்தகா = வளர்தல்.]*

*ஆக்கப்பொருளின் ஈங்டு, நன்மணம் பரவும் பொருளைக் குறித்தது.*

**நத்தகாலம்** *natta-kālam,* பெ. (n.) 1. இரவு நேரம்; night-time 2. ஒருவன் நிழல் கிழக்கே 16 அடி நீண்டிருக்கும் மாலைப்பொழுது (சைவச. பொது. 21, உரை.); the evening time when one's shadow extends eastward to 16 ft.

*நீட்சிப்பொருளில் ஈங்டு வந்துள்ளது.*

**நத்தங்கோயில்** *nattaṅ-kōyil,* பெ. (n.) சிற்றூரிலுள்ள கோயில்; village temple. *"பரமபதம் கலவிருக்கை நத்தங்கோயில்"* (திவ். திருமாலை, 15, வ்யா. 61.).

*[நத்தம் + கோயில். நத்தம் = ஊர்.]*

**நத்தச்சூரி** *natta-c-cūri,* பெ. (n.) *நத்தைச்சூரி* பார்க்க; see *nattai-c-cūri.*

**நத்தத்தனார்**[1] *nattattaṉār,* பெ. (n) திருவள்ளுவமாலையில் ஒரு பாடலைப் பாடியவர்; a song was sung by Nattattaṉār, in Thiruvaḷḷuvamālai.

*[ந + தத்தன் + ஆர்.]*

திருக்குறளின் புகழ்பாடும் நத்தத்தனார் பாடிய, திருவள்ளுவமாலைப் பாடல் வருமாறு:—

*"ஆயிரத்து முந்நூற்று முப்பது அருங்குறளும் பாயிரத்தினோடு பகர்ந்த தன்பின் – போய் ஒருத்தர் வாய்க்கேட்க நூல் உளவோ? மன்னு தமிழ்ப்புலவராய்க்கேட்க வீற்றிருக் கலாம்".* இவர் சிறுபாணாற்றுப்படை பாடியவரினின்று வேறானவர்.

**நத்தத்தனார்**[2] *nattattaṉār,* பெ. (n.) நத்தத்தம் என்ற இலக்கண நூலாசிரியர்; the author of the grammar work called Nattattam. was found in yāpparuṅgala-virutti-y-urai

*[ந + தத்தன் + ஆர்.]*

இந் நூலாசிரியர் நத்தத்தம் என்னும் இலக்கண நூலை இயற்றியதாக நச்சினார்க்கினியர் நவிலுகிறார். யாப்பருங்கல விருத்தியுரையில் நத்தத்தனார் இயற்றிய நூற்பா காணப்படுகிறது.

**நத்தத்தனார்**[3] *nattattaṉār,* பெ. (n.) புறநானூற்றில் 218—ஆம் பாடலைப் பாடியவர்; a Šaṅgam poet only a song was sung by Nattattaṉār in Puṟanāṉūṟu

*[ந + தத்தன் + ஆர்.]*

நத்தத்தனாரைப் பற்றிய குறிப்பு:– உ.வே.சா. அவர்கள் புறநானூற்றில் உள்ள, 218–ஆம் பாடலை நத்தத்தனார் பாடியதாகக் குறிப்பிட்டுள்ளார். இப் பாடலைக் கண்ணகனார் பாடினார் என்றும், கூறுவர். "*பொன்னுந் துகிரு முத்து மன்னிய மாமலை பயந்த காமரு மணியும்*" என்று தொடங்கும் இப் பாடல், பிசிராந்தையார் கோப்பெருஞ் சோழனோடு வடக்கிருந்த போது பாடப்பட்டது.

**நத்தத்தனார்**[4] *nattattanār,* பெ. (n.) சிறுபாணாற்றுப்படை என்ற சங்க நூலை எழுதிய புலவர்; a Šaṅgam poet, author of ciṟu-pāṇāṟṟu-p-paḍai, one of pattu-p-pāṭṭu.

*[ந + தத்தன் + ஆர்.]*

இவர் இடைக்கழி நாட்டிலுள்ள நல்லூரைச் சேர்ந்தவர். இவர் உவமையை உவமேயமாகவும் உவமேயத்தை உவமையாகவும் காட்டியுள்ளார். "*... இரும்பிடித் தடக்கையிற் சேர்ந்துடன் செறிந்த குறங்கிற் குறங்கென மால்வரை ஒழுகிய வாழை வாழைப் பூவெனப் பொலிந்த ஓதி....*" பாடினியின் கொங்கையைப் போன்றிருந்த தாமரை மொக்குகள், அவளின் முகத்தைப் போன்று மலர்ந்து திகழ்ந்த தன்மையை; "*வருமுலையன்ன வண்முகை யவிழ்ந்து திருமுகம் அவிழ்ந்த தெய்வத்தாமரை*" என்று நத்தத்தனார் நவிலும்பான்மை நயமிக்கது. "*முல்லை சான்ற கற்பின் மெல்லியல் மடமா நோக்கின் வாணுதல் விறலியர்*" "*மணிமயிற் கலாப மஞ்சிடைப் பரப்பித் துணி மழை தவழுந் துயல்கழை நெடுங்கோட் டெறிந்துர மிறந்த வேற்றருஞ் சென்னிக் குறிஞ்சிக் கோமான் கொய்தளிர்க் கண்ணிச் செல்லிசை நிலைஇய பண்பின் நல்லியக் கோடனை நயந்தனிர் செலினே!*"

தத்தன் என்ற பெயர் வழக்கு. கி.பி. 12–ஆம் நூற்றாண்டு வரை வழக்கிலிருந்ததைப் பிற்கால இலக்கியங்கள் வாயிலாக அறியலாம்.

"ந" சிறப்பினை உணர்த்தும் இடைச்சொல்.

(ஒ.நோ.) ந + பசலையார் → நப்பசலையார்.

ந + பூதனார் → நப்பூதனார்.

"ஆர்" = மதிப்புறவு விகுதி.

நத்தத்தனார் என்ற பெயரில், தமிழிலக்கியப் பரப்பில் நால்வர் காணப்படுகின்றனர்.

இந் நால்வருள் சிறுபாணாற்றுப்படை எழுதியவரே, நுண்மாண் நுழைபுலமிக்க புலவராவார். இவர் இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் என்று சிறப்பிக்கப்படுவார்.

இவர் திண்டிவனத்தை அடுத்துள்ள நல்லூரைச் சார்ந்தவர். இவ்வூருக்கு 8 கல்தொலைவில் தெற்கே நல்லியக்கோடன் ஆண்ட ஒய்மாநாடு உள்ளது.

இப் பகுதி இப்பொழுது, "இடைக்க நாடு" என்று அழைக்கப்படுகிறது. திருவள்ளுவ மாலையைப் பாடிய நத்தத்தனாரினின்று, இவர், தம் சிறுபாணாற்றுப்படைப் பாடல் அமைப்பால், முற்றிலும் வேறுபட்டவர், ஆகிறார்.

திருவள்ளுவமாலையில், நத்தத்தனாரின் பாடல் அமைப்பும், நடையும் மிகவும் நெகிழ்ச்சியாயுள்ளது. சிறுபாணாற்றுப் படையில் திருவள்ளுவமாலை நத்தத்தனாரின் சாயல் சிறிதும் இல்லை. ஆகையால் இருவரும் வேறுவேறு என்று துணியலாம்.

நத்தத்தம் என்ற இலக்கண நூலாசிரியர் பற்றிய குறிப்பு, நச்சினார்க்கினியர் உரையில் மட்டும் காணப்படுகிறது. யாப்பருங்கல விருத்தியுரையில், ஒரேயொரு எடுத்துக்காட்டு நூற்பா மட்டும் காணப்படுகிறது. எனவே இருவரும் நல்லூர் நத்தத்தனாரினின்று, வேறுபட்டவர், எனலாம்.

புறநானூற்றில் காணப்படும், 218–ஆம் பாடலைப் பாடிய புலவர் பெயர், பாட வேறுபாடாகவே, நத்தத்தனார் என்று வந்துள்ளது. இப் பெயருக்கு முன்பு ஆற்றுப்படை பாடிய நத்தத்தனார் போல எவ்வித அடைமொழியும் இல்லை. எனவே நத்தத்தனார் எனும் பெயரில் நால்வர் இருந்தனர் என்பதில், யாதொரு ஐயமுமில்லை.

இந்நால்வருள் இலக்கியச் செழுமை செறிந்தவராகவும், பன்முகநோக்கில் நற்சிறப்புகள் பல பெற்றவராகவும், நத்தத்தனார் விளங்குகிறார். இவர் தம் ஊருக்கு அருகில் இருந்த ஓய்மா நாட்டுத் தலைவன் நல்லியக்கோடனையும், அந்நாட்டில் சிறப்புற்றுத் திகழ்ந்த எயிற்பட்டினம், வேலூர், ஆமூர், கிடங்கில், மாவிலங்கை ஆகிய ஊர்களைப் பற்றியும், தெளிவான செய்திகளையும் தெரிவித்தூள்ளார்.

மேலும், இவர், தம் சிறுபாணாற்றுப் படையுள், சேரநாட்டு வஞ்சிமா நகரையும், பாண்டி நாட்டுக்கொற்கைத் துறைமுகத்தையும், மதுரையையும், சோழர்தம் உறையூரையும் குறிப்பிட்டுப்பாடி, மூவேந்தர் வரலாற்றிலும் இடம்பெற்றுள்ளார்.

**நத்தப்பலா** *natta-p-palā,* பெ. (n.) *எருக்கு* பார்க்க (மூ.அ.); see erukku.

**நத்தப்பாலை** *natta-p-pālai,* பெ. (n.) எருக்கு; indian madar.



**நத்தப்பாழ்** *natta-p-pāḻ,* பெ. (n.) 1. அழிந்துபோன ஊர்; deserted village. (R.T.). 2. பகைவரால் அழிந்த ஊர்; devasted village die to invation

மறுவ. பாழூர், நத்தத்துமேடு.

*[நத்தம் + பாழ். – நத்தம் = ஊரின் மனை அல்லாத குடியிருப்பு நிலம்.]*

பகைவரால் அழிக்கப்பட்டுப் பாழடைந்த ஊர் இருந்த இடம். நத்தப்பாழ் என்று அழைக்கப்படுகின்றது.

**நத்தப்பிலா** *natta-p-pilā,* பெ. (n.) *எருக்கு* பார்க்க (மூ.அ.); see *erukku.* reflexed-petalled giant swallow-wort.

*[நத்தம் + பலா = நத்தப்பலா → நத்தப்பிலா.]*

**நத்தப்பூரிதம்** *natta-p-pūridam,* பெ. (n) சிற்றரத்தை; smaller galangal

*[நத்தம் + பூரிதம்.]*

**நத்தபத்திரி** *natta-pattiri,* பெ. (n.) நந்தியாவட்டை (மலை); common wax-flowered dog-bane.

*[நத்திபத்திரி → நத்தபத்திரி.]*

**நத்தபிரகி** *nattapiragi,* பெ. (n.) *நத்தப்பாலை* பார்க்க; see *natta-p-pālai.*

*[நத்தம் + பிரகி.]*

**நத்தபிலா** *nattapilā,* பெ. (n.) *நத்தப்பாலை* பார்க்க; see *natta-p-pālai.*

**நத்தபோசனம்** *natta-pōšaṉam,* பெ. (n) இரவு உணவு; night meals.

*[நந்த → நத்த + skt. போசனம்.]*

**நத்தம்**[1] *nattam,* பெ. (n.) 1. ஆக்கம்; growth. *"நத்தம்போற் கேடும்"* (குறள், 235). 2. ஊர் (பிங்.); town, village, *"வடபுலத்தார் நத்தம்வளர"* (குமர. பிர. மீனாட். பிள்ளைத். 45). 3. ஊரின் குடியிருப்பிடம்; residential portion of a village. 4. ஊரில் ஆரிய ரல்லாதார்தம் வாழ்விடம் (C.G); portion of a village inhabited by the

non-Brahmins, (opp. to akkirakāram) 5. ஊரின் மனையடி. (கல்வெ.); land reserved as house-sites. 6. இடம் (பிங்.); place, site. 7. வாழை (பிங்.) (மலை.); plantain. 8. *எருக்கு (மலை.)* பார்க்க; see *erukku.* 9. கடிகார முள் (வின்.); gnomon of a dial.

*[நந்து + நத்து + அம்.]*

நந்துதல் = வளர்தல், பெருகுதல், தழைத்தல். இங்கு நந்து என்னும் வேரடி, வளர்தல், பெருகுதல், செழித்துத் தழைத்தல் என்னும் பொருளில் வந்துள்ளது.

நத்தம் = வளர்ச்சி. முதனிலை வலித்து ஈறு பெற்ற தொழிற்பெயர். அம்: முதனிலைப் பொருளீறு. (திருக்.தமி.மர. பக். 151).

**நத்தம்**[2] *nattam,* பெ. (n.) 1. அழிந்துபோன ஊர்; devasted village. 2. பாலைநிலத்தூர்; village of arid tract.

*[நொள் → நொது → நொந்து → நந்து → நந்தம் → நத்தம்.]*

நெகிழ்ச்சிப் பொருளை மூலமாகக் கொண்ட அழிதல் கருத்துச் சொல். பகைவரால் அழிக்கப்பட்டுப் பாழடைந்த ஊரிருந்த இடங்கள் இன்றும், நத்தப்பாழ் என்றும், நத்தத்துமேடு என்றும் சொல்லப்படும் (வே.க.3–34.).

**நத்தம்**[3] *nattam,* பெ. (n.) 1. சங்கு (சூடா.) (சீவக. 547, உரை); conch. 2. நத்தை (அக.நி.); snail.

*[நத்தை + அம்.]*

**நத்தம்**[4] *nattam,* பெ. (n.) 1. இரவு (பிங்.); night. *"அமளிமேவி நத்தநடுவெழுந்து"* (திருவாலவா. 38, 3). 2. இருள் (திவா.) darkness.

க. நத்தம் →skt nakta

*[நந்து → நத்து + அம்.]*

**நத்தம்**[5] *nattam,* பெ. (n.) புன்கு (உரி.நி.); indian beech pongamia glabra.

**நத்தம்பாடி** *nattam-pādi,* பெ. (n.) உடையார் சாதிவகை (E.T.vii, 212); a sub-sect of the uḍaiyār caste

[நத்தம் + பாடு = நத்தம்பாடு → நத்தம்பாடி]

முதற்கண் வளர்நிலை உடையார்களின் ஊர் குறித்து, ஆகுபெயராய்ப் பேர்குறித்து வந்த பெயர்.

**நத்தம்புறம்போக்கு** *nattam-puṟam pōkku,* ஊர்சார்ந்த, ஆவணப்பதிவிலாத் தரிசுநிலம்; unregistred land.

மறுவ. புறம்போக்குநிலம், ஊர்ப் பொதுநிலம்.

*[நத்தம் + புறம் + போக்கு.]*

அரசிற்கு இறைசெலுத்தும் வகைமை அற்றதும், ஊரார்க்குப் பயன்படுவதுமான மேட்டுநிலம்.

**நத்தமக்கள்** *natta-makkaḷ,* பெ. (n.) ஒருசார் வேளாளர் (யாழ்ப்.); a sub-division of the vēḷāḷar caste;

[நத்தம் + மக்கள்.]

நத்தம் = பார்ப்பனரல்லாதார்.

**நத்தமாடி** *nattam-āḍi,* பெ. (n.) 1. நத்தமக்கள் வகுப்பினைச் சார்ந்தவன் (யாழ்.அக.); person belonging to nattamakkaḷ caste. 2. உடையார் பிரிவு (E.T.vii, 212); a sub-division of uḍaiyār caste.

*[நத்தபாடி → நத்தமாடி = திரிபு.]*

**நத்தமாதிதம்** *nattamātidam,* பெ. (n.) சிறிய சிவப்பம்மன் பச்சரிசி; red false raw rice plant.

**மறுவ.** சின்னம்மான் பச்சரிசி

**நத்தமார்** *nattamār,* பெ. (n.) *நத்தமக்கள்* (R.T.) பார்க்க; see *natta - makkaḷ*

**நத்தமாலகம்** *nattamālagam,* பெ. (n.) *நத்தகா* பார்க்க; see *nattagā*

**நத்தமாலம்** *nattamālam,* பெ. (n.) புன்குமரம்; indian beech tree-Pongamia glabra.

**நத்தமான்** *nattamāṉ,* பெ. (n.) *நத்தம்பாடி* (E.T.vii, 212) பார்க்க; see nattam-pāḍi.

**நத்தமுகை** *nattamugai,* பெ. (n.) இரவு; night

**நத்தயிலி** *nattayili,* பெ. (n.) எரிப்பு; pungency, acidity; store acid smell.

**நத்தராகி** *natta-rāgi,* பெ. (n.) பூவாடங் கேழ்வரகென்று சொல்லப்பெறும் ஒருவகைத் தவசம் (G.Sm D.I i, 218); a kind of rāgi called pūvāḍam kēḻvaragu.

**நத்தலை** *nattalai,* பெ. (n.) பாவட்டை; pavattai indica.

**நத்தலைச்சூரி** *nattalai-c-cūri,* பெ. (n.) *நத்தைச்சூரி* பார்க்க; see *nattai-c-cūri.*

**நத்தவரி** *natta-vari,* பெ. (n) பழைய வரி வகை (S.I.I.vol iv.122); an ancient tax.

*[நத்தம் + வரி.]*

**நத்தவீரம்** *natta-vīram,* பெ. (n.) அரத்தவீரரிசி; (சா.அக.); a kind of medicinal rice

**நத்தாங்கூடு** *nattāṅgūḍu,* பெ. (n.) நத்தைக்கூடு; snail shell.

*[நத்தை + கூடு.]*

**நத்தாசை** *nattāšai,* பெ. (n) **1.** விருப்பம். (யாழ்ப்.); wish, desire. **2.** பற்று (இ.வ.); attachment. **3.** பேராசை (யாழ்.அக.); avarice.

*[நத்து + ஆசை.]*

**நத்தாந்தநோய்** *nattānda-nōy,* பெ. (n.) இராக்குருடு; மாலைக்கண்; night blindness, failure or imperfect vision at night.

**நத்தாமணி** *nattāmaṇi,* பெ. (n) *வேலிப்பருத்தி (மலை.)* பார்க்க; see *vēli-p-parutti*

*[உத்தாமணி → நத்தாமணி.]*



**நத்தார்வை–த்தல்** *nattārvai-,* 4. செ.குன்றாவி. (v.t.) கப்பலைக் கயிறுகட்டி யிழுத்தல் (யாழ்ப்.); to warp a vessel

*[நத்தார் + வை-.]*

**நத்தி**[1] *natti,* பெ. (n.) மீனின் மிதவைப்பை (இ.வ.); swimming bladder of a fish.

**நத்தி**[2] *natti,* பெ. (n.) இன்மை; negation. *"நத்தியு முடைத்தன் றாகில்"* (மேருமந். 706.).

**நத்திசின்னன்** *nattišiṉṉaṉ,* பெ. (n.) பரங்கிவைப்பு நஞ்சு அல்லது வீரம்; corrosive sublimate.

**நத்திதம்** *nattidam,* பெ. (n.) நாணயமிடப் பெற்றது (யாழ்.அக.); that on which a person stakes his credit.

**நத்திநினை** *natti-niṉai,* பெ. (n.) புன்கங்கொட்டை; nut of Indian beech tree.

**நத்திபத்திரி** *natti-pattiri,* பெ. (n.) நந்தியாவட்டம்; common wax flowered dog-bane.

**நத்திரி** *nattiri,* பெ. (n.) கோழிமுட்டை; fow's egg.

**நத்திவேர்சத்தெலும்பு** *nattivēr-šatteḷumbu,* பெ. (n.) முழங்காலெலும்பு; knee cap-Patella.

**நத்து**[1]**-தல்** *nattu-,* 5. செ.குன்றாவி. (v.t.) விரும்புதல்; to desire, long for, hanker after, love. *"நாரியார் தாமறிவர் நாமவரை நத்தாமை"* (தமிழ்நா. 74.).

தெ., ம., நத்த, நத்து.

*[நச்சு → நத்து-.]*

**நத்து**[2] *nattu,* பெ. (n.) 1. *நத்தம்*[2] பார்க்க; see *nattam*[2] "நத்தொடு நள்ளி" (பரிபா. 10, 85). 2. மூக்கணிவகை; a nose ornament. *"நத்தையணி நாசிவள்ளி"* (தனிப்பா. ii,234, 557). 3. மூக்கு; nose.

தெ., ம., நத்த.

**நத்து**[3] *nattu,* பெ. (n.) கூகை வகை (வின்.) a kind of owl,

**நத்து**[4] *nattu-,* பெ. (n.) 1. நத்தை; snail. *"நத்தொடு நள்ளி நடையிறவு"* (பரிபா.10:85.). 2. சங்கு; conch. 3. உப்பு; salt

*[நந்து → நத்து.]*

**நத்து**[5] *nattu,* பெ. (n.) விருப்பம்; desire. *"நன் நத்தாக"* (திருப்புகழ்.84.).

**நத்துருவண்ண நாதம்** *natturu-vaa-nādam,* பெ. (n.) ஈயமணல் (யாழ். 20.); sand containing lead.

**நத்துளி** *naṭṭuḷi,* பெ. (n.) அத்திப்பால்; milk from fig tree.

**நத்தை**[1] *nattai,* பெ. (n.) 1. கருநந்து. (திவா.); snail, Buccinum; 2. வழலையுப்பு; a kind of salt 3. கூன்; hunch back

தெ., ம., நத்த. துளு., நர்தெ.

*[நந்து = மெல்லிய சதையுள்ள நீருயிரி நந்து → நத்து → நத்தை. (வே.க. 28).]*

**நத்தை**[2] *nattai,* பெ. (n.) 1. கொற்றான் (L.); parasitic leafless plant; 2. கடுகு (மலை.);

mustard. **3.** நாரத்தை; bitter organge. **4.** பூச்சிக் கூடு; whelk buceinum.

**நத்தைக்கட்டை** *nattai-k-kaṭṭai,* பெ. (n.) சாரணை; one slyed-Trianthema monogyna.

*[நத்தை + கட்டை.]*

**நத்தைக்கறி** *nattai-k-kaṟi,* பெ. (n.) நத்தையின் ஓட்டிலிருந்து எடுக்கப்படும் சதைப்பகுதி; the dish of snail flesh.

*[நத்தை + கறி.]*



**நத்தைக்கிளிஞ்சல்** *nattai-k-kiḷiñjal,* பெ. (n.) நத்தாங்கூடு; snail shell, cockle shell.

*[நத்தை + கிளிஞ்சல்.]*

**நத்தைகுத்தி** *nattai-kutti,* பெ. (n.) பெருநாரை (யாழ்.அக.); adjutant or gigantic crane.

*[நத்தை + குத்தி.]*

மீன்குத்தி போல, நத்தையைக்குத்தி உண்ணும் நாரையாக இருக்கலாம்.

**நத்தைகுத்திநாரை** *nattai-kutti-nārai,* பெ. (n.) **1.** நாரை வகை (வின்.); anastomus ascitans, as living on molluscs; **2.** நாரைவகை; hair-crested stork, Leptoptilos javanica.

*[நத்தைகுத்தி + நாரை.]*



**நத்தைக்கூடு** *nattai-k-kūḍu,* பெ. (n.) நத்தையோடு பார்க்க; see *nattai-y-ōḍu*

*[நத்தை + கூடு.]*

**நத்தைகொத்தி** *nattai-kotti,* பெ. (n.) நத்தைகுத்தி (யாழ்.அக.) பார்க்க; see *nattai-kutti.*

*[நத்தை + கொத்தி.]*

**நத்தைச்சதை** *nattai-c-cadai,* பெ. (n.) நத்தைக்கறி; snail flesh.

*[நத்தை + சதை.]*

நீண்ட வாணாளுக்குப் பயன்படும்.

**நத்தைச்சாதி** *nattai-c-cādi,* பெ. (n.) நத்தைவகை; lanthina.

**நத்தைச்சுண்டி** *nattai-c-cuṇḍi,* பெ. (n.) நத்தைச்சூரி பார்க்க; see *nattai-c-cūri.*

*[நத்தை + சுண்டி.]*

**நத்தைச்சுண்ணாம்பு** *nattai-c-cuṇṇāmbu,* பெ. (n) நத்தையோட்டை நீற்றிச் செய்த சுண்ணாம்பு; shell-lime.

மறுவ: கிளிஞ்சில் சுண்ணாம்பு.

*[நத்தை + சுண்ணாம்பு.]*

**நத்தைச்சூரி** *nattai-c-cūri,* பெ. (n.) செடிவகை (மலை.); bristly button weed, Spermacoce hispida;

**மறுவ.** நத்தைச்சுண்டி, குழிமீட்டான்.

இதன் வேரை நத்தைக் கூட்டில் காண்பிக்க, ஓடு சூரியனைப் போல் இரண்டாக வாய் பிளந்துகாட்டும். 'நத்தைச் சூரி நாயுருவி எதைச் சொன்னாலும் கேட்கும்' (பழ.).

மாபெரும் ஆற்றல் பொருந்திய இச்செடி பற்றி சா.அக. கூறுவது வருமாறு:-

சிறிய தோற்றமுள்ள இச்செடியின், பூங்கொத்துகள் ஒவ்வொன்றிலும் 5 அல்லது 6 பூக்கள் மலரும். இம் மலர்கள் வெண்மை அல்லது நீல நிறத்தன. இச் செடியின் காய்கள் முசுமுசுப்பானவை. சதுரமான தோற்றத்தை யுடைய நத்தைச்சூரியின் விதைகள் ஆண்மைப்பெருக்கத்திற்கு உகந்தவை. அரத்தப்போக்கை அகற்றி, அரத்தமூலத்தைக் குணமாக்கும் அரியமூலி. இளைத்த உடம்பை வளர்ப்பதில், நத்தைசூரி விதைகள் ஈடு இணையில்லாதவை. இவ் விதைகள் நன்னாரியைப் போல், அரத்தத்தைத் தூய்மைப்படுத்தும் திறன்மிக்கவை.

உடம்பிலுள்ள அனைத்து நோய்களுக்கும் நத்தைச்சூரியின் கருக்குநீர் (கியாழம்) கைகண்ட மருந்து. அக் கருக்குநீர் உடம்பிற்கு உகந்தது. தீராத பழைய நோயின் தாக்கத்தைப் படிப்படியாகக் குறைக்கும். புதிய நோய்களை அறவே போக்குந் தன்மைத்து.

நத்தைச்சூரி வேரினைப் பச்சையாக அரைத்து, ஆவின் பாலில் கலந்து உட்கொண்டால், உடம்பின் திறன் பெருகும். எலும்புகள் ஆற்றலுடன் வளரும். நாட்பட்ட வயிற்றுப்போக்கு குணமாகும்.

நத்தைச்சூரி இலையை வாயில் போட்டு மென்றால், கல்லையுங் கடித்து நொறுக்கும் ஆற்றல் வளரும். பற்கள் வலிமைபெறும் பாறாங்கல் போன்ற வீக்கமெல்லாம் கதிரவனைக் கண்ட பனிபோல் மறையும்.

**நத்தைத்திராளி** *nattai-t-tirāḷi,* பெ. (n.) கம்பங் கொல்லையில் வளரும், ஒரு வகைக் கீரை; a kind of garden; or vegetable greens found grown in millet fields

**நத்தைப்படுவன்** *nattai-p-paḍuvaṉ,* பெ. (n.) கண்ணிலுண்டாம் கட்டி (யாழ்ப்.); boil in the eye, a kind of sty.

*[நத்தை + படுவன்.]*

கண்ணிமையில் தோன்றிய கட்டி. அசைவில் நத்தைபோல் கண்ணில் படுவதால், வந்த பெயரென்று கொள்ளலாம்.

இந்நோய் பற்றி சா.அக. கூறுவது : நத்தைக்கூடு போல் கண்விழியில் உண்டாகும் புண்கட்டி. இக்கட்டியின் வலி மிகுதியால், தலைக்குத்து வலி, புருவத்தில் முளை எழும்பல், கண் பார்வை குறைகல் முதலான நோய்கள் ஏற்படும்.

**நத்தைப்பால்** *nattai-p-pāl,* பெ. (n.) நத்தையின் உடலிலுள்ள நீர்; water contents in snail's body.

*[நத்தை + பால்.]*

**நத்தையுப்பு** *nattai-y-uppu,* பெ. (n) உப்புவகையு ளொன்று; a kind of salt.

**நத்தையோட்டுக்கம்பு** *nattai-y-ōṭṭu-k-kambu,* பெ. (n.) உட்காதினுள்ளிருக்கும் நத்தை யோட்டைப் போன்றதோர் எலும்பு; a bone of the internal ear having a conic cavity and resembling the snail shell.

*[நத்தை + ஓடு + கம்பு.]*

**நத்தையோட்டெலும்பு** *nattai-y-ōṭṭelumbu,* பெ. (n) நத்தையோட்டுக்கம்பு பார்க்க; see nattai-y-ōṭṭu-k-kambu.

*[நத்தையோடு + எலும்பு.]*

**நத்தையோடு** *nattai-y-ōḍu,* பெ. (n.) நத்தை தன்முதுகில் சுமந்து சென்று குடிவாழும் ஓடு; snail - house.

*[நத்தை + ஓடு.]*

**நத்தைவரி** *nattai-vari,* பெ. (n.) நத்தை தனது எச்சிலால் ஏற்படுத்தும் கோடு; mark drawn by snail with its saliva.

*[நத்தை + வரி.]*

**நத்தைவேகம்** *nattai-vēgam,* பெ. (n.) மந்தம்; dead slow. *'கந்தன் நத்தைவேகத்தில் படித்ததால் தேர்வில் தோல்வியடைந்தான்'* (உ.வ.).

*[நத்தை + வேகம்.]*

மிகவும் மெதுவாகப் பணியாற்றுகை.

**நது—த்தல்[1]** *nadu-,* 4 செ.குன்றா.வி. (v.t.) 1. அவித்தல் (திவா.); to extinguish, quench. *"நாற்கடலு மேவினு நதுப்பறிய வூழிக்காற் கனலி னோதை"* (கந்தபு. சதமுகன்வ.4). 2. மறைத்தல் (வின்.); to eclipse, as rays; 3. கெடுத்தல் (யாழ்.அக.); to destroy.

*[நொள் → நொது → நது-.]*

**நது—த்தல்[2]** *nadu-,* 4 செ.கு.வி. (v.i.) திகைத்தல் (யாழ்.அக.); to be in a perplexed state

*[நுது → நது -.]*

**நந்த** *nanda,* (இடை) part. ஓர் உவம உருபு (தொல். பொருள். 291.); a particle of comparision.

**நந்தகம்** *nandagam,* பெ. (n) 1. வாள் (யாழ்.அக.); sword 2. திருமாலின் வாள்; sword of Tirumāl.

**நந்தகன்** *nandagaṉ,* பெ. (n.) நந்தகோபன். (யாழ்.அக.) பார்க்க; see nanda-gōbaṉ

*[நந்தகோபன் → நந்தகோன் → நந்தகன்.]*

**நந்தகாரி** *nandagāri,* பெ. (n.) சிறுதேக்கு (மூ.அ.) பார்க்க; see śiṟu-tēkku.

**நந்தகி** *nandagi,* பெ. (n) திப்பிலி (யாழ்.அக.); long pepper;

*[நந்து → நந்தகி.]*

உடல் நோய் தீர்ந்து மிகு நலம் நல்கும் தன்மையுள்ள திப்பிலி.

**நந்தபாலம்** *nanda-pālam,* பெ. (n) பண் (இராக)வகை (பரத. ராக. பக் 103); a specific melody-type.

**நந்தம்[1]** *nandam,* பெ. (n.) 1. சங்கு; conch 2. மான்மணத்தி (மூ.அ.); musk, 3. காக்கை (வின்.); crow. 4. பெருமுயற்சி (இலக்.அக.);

strenuous effort. **5.** தொண்(ஒன்பது) மணிகளிலொன்று; one of the nine precious stones.

*[நந்து → நந்தம்.]*

*நந்து = மெல்லிய சதையுள்ள நீருயிரி. அது இருக்கும் சங்கு.*

**நந்தம்²** *nandam,* பெ. (n.) **1.** குபேரனது கருவூலத்துள் ஒன்று; a treasure of kubēraṉ, one of nava-nidi **2.** புன்கு; indian beech tree. **3.** எருக்கு; madar plant.

*[நந்து → நந்தம்.]*

**நந்தம்³** *nandam,* பெ. (n.) **1.** நாரத்தை (வின்.); bitter orange. **2.** கடாரநாரத்தை; bigarade orange. **3.** வாழை; plantain tree.

*[நந்து → நந்தம்.]*

**நந்தமாமதி** *nanda-māmadi,* பெ. (n.) விரலின் நகம்; nail of the finger or toe.

வளரும் பெருநிலவு போன்ற வடிவமைப்பு, உவமைப்பொருளில் வந்துள்ளது. வளர்ந்து வரும் நகப்பகுதி, நிலவை யொத்து வளர்ந்து திகழ்ந்த தன்மையைக் குறித்து வழங்கியதெனலாம்.

**நந்தமாலம்** *nanda-mālam,* பெ. (n.) நத்தமாலம் (சங்.அக.) பார்க்க; see natta-mālam.

**நந்தல்¹** *nandal,* பெ. (n.) **1.** அழிவு, கேடு (சூடா.); decay, decline. *"நாடற்கரிய நலத்தை நந்தாத்தேனை"* (திருவாச. **9:15**). **2.** இகழ்ச்சி, ஏளனம் (யாழ்.அக.); scorn, disdain.

*[நொய் → நொய்ந்தல் → நொந்தல் → நந்தல்.]*

*நொய்ந்தல் = கெடுதல், அழிதல்.*
*நொந்தல் = கெடுதல், பதனழிதல்.*

**நந்தல்²** *nandal,* பெ. (n.) ஆக்கம்; increase, prosperity. *"முன்னாயம் பத்துருவம் பெற்றவன் மனம்போல நந்தியாள்"* (கலித். **136.**).

*உந்து → துந்து → நுந்து → நொந்து → நந்து.*

*நொந்துதல் = தூண்டுதல், ஊக்குதல், வளர்தல்.*

*துந்து → துந்தி → தொந்தி.*

தொந்தி = பருத்து வளர்ந்த வயிறு. தூண்டுதற் கருத்தினின்று பெருகுதல், வளர்தல், விளங்கித் தோன்றுதல் முதலான, பொருண்மை பொதிந்த கருத்துகள் முகிழ்த்தன. (தமிழ் வரலாறு **1–பக் 66**).

**நந்தவனம்** *nanda-vaṉam,* பெ. (n.) பூந்தோட்டம்; flower garden, especially attached to a temple *"நந்த நந்த வனங்களி னாண்மலர்"* (கம்பரா. கிளைகண்டு. **14**).

*[நந்தல் + skt வனம்.]*

நந்துதல் = பெருகுதல், தழைத்தல், வளர்தல், விளங்கித்தோன்றுதல் என்னும் பொருண்மை களிற் பயிலும். பூந்தோட்டத்தில், பலவண்ண மலர்கள் பூத்து, அழகுடன் வளர்ந்து, விளங்கித்தோன்றுதலால், நந்தவனம் எனப்பெயர் பெற்றது.

**நந்தளம்** *nandaḷam,* பெ. (n.) **1.** நத்தை; snail **2.** நாரத்தை; bitter orange **3.** நச்சுப்பூடு வகை; a kind of poisonous plant

**நந்தன்¹** *nandaṉ,* பெ. (n.) **1.** நந்தகோபாலன் பார்க்க; see nandagōpālaṉ. *"கடைக் கண்ணினுங் காட்ட நந்தன் பெற்றனன்"* (திவ். பெருமாள். 7: 3). 2. இடையன்; cowherd. *"ஈட்டினன் பைந்தொடை நந்தர்கோன் பண்ணிகாரமே"* (பாகவத. 10, கோவர்த்).

3. திருமால்; Tirumāl. *"நந்தனும்... ஏத்தும் வெங்கை விமலர்"* (வெங்கைக்கோ. 324). 4. பாடலிபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட ஓர் அரசகுலத்தன்; a kind of the nandan dynasty, ruler of pāḍalipuram. *"நந்தன் வெறுக்கை யெய்தினும்"* (அகநா. 25.) 5. தோற்காசு வழங்கியவனாகக் கருதப்படும் ஒரு அரசன்; a king believed to have issued leather coin 6. நந்தனார், நாயன்மாரகளுள் ஒருவர்; Nandaṉār, šaiva šaint; 7. மகன் (இலக். அக.); son.

*[நந்து + அன்.]*

அனைவராலும் விரும்பப்படுபவன், எஞ்ஞான்றும் மக்கள் மனதில் விளங்கித் தோன்றுபவன்.

**நந்தன்**[2] *nandaṉ,* பெ. (n.) வைப்புநஞ்சு வகையுளொன்று; a kind of arsenic.

**நந்தனம்**[1] *nandaṉam,* பெ. (n.) 1. நத்தை; (சங்.அக.); snail. 2. தவளை (யாழ்.அக.); frog. 3. நாரத்தை; bitter orange.

**நந்தனம்**[2] *nandaṉam,* பெ. (n.) 1. நந்தவனம் பார்க்க; see nandavaṉam *"சுரகுலாதிபன் றூய்மலர் நந்தனம்"* (பிரபுலிங். கணபதி காப்பு). 2. பூந்தோட்டம்; flower-garden. *"சந்தமிகு கல்யாணமா நந்தனந் தன்னில்"* (பிரபுலிங். வசவ. 3). 3. நந்தன் (வின்.) பார்க்க; see nandaṉ.

த. நந்தனம் → skt.nandana

*[நந்தல் + வனம் → நந்தவனம் → நந்தனம்.]*

**நந்தனவனம்** *nandaṉa-vaṉam,* பெ. (n.) பூந்தோட்டம்; flower -garden; *"நந்தனவனத்திலீச னல்லுமை விநாயகன்"* (புட்பபலன், 1).

*[நந்தனம் + skt.வனம்.]*

**நந்தனார்** *nandaṉār,* பெ. (n.) 63 நாயன் மார்களுள் ஒருவர்; one of a Šaiva saint among 63 Nāyaṉmārgaḷ.

த. நந்தனார் → skt.nanda.

இவரைத் திருநாளைப் போவார் என்று, சேக்கிழார் குறிக்கிறார்.

*[நந்தன் + ஆர்.]*

ஆர் = மதிப்பொருமை விகுதி.

**நந்தனார்சரித்திரகீர்த்தனை** *nandaṉār šarittira-kīrttaṉai,* பெ. (n.) அறுபத்து மூன்று நாயன்மார்களுள் ஒருவரான நந்தனாரின் வரலாற்றை, (கீர்த்தனை) இசைப்பாடல் வடிவில் கூறும் நூல்; rythematic a trestise which narates the history of Nandaṇ, one of 63 Nāyaṉmargaḷ

இந் நூலைக் கோபால கிருட்டிண பாரதியார் இயற்றினார். சேக்கிழார் இயற்றிய திருத்தொண்டர் வரலாற்றில், நிலவுடைமையாளர் எனப் பொதுவானவராகக் நந்தனார் குறிக்கப்பட்டுள்ளார்.

**நந்தனை** *nandaṉai,* பெ. (n) மகள் (யாழ்.அக.); daughter.

*[நந்து → நந்தனை.]*

*வளர்ந்து விளங்கித் திகழும் அழகுடையாள் என்னும், வளர்ச்சிப் பொருளில் வாய்த்த சொல்லாகும்.*

**நந்தாமணி** *nandā-maṇi,* பெ. (n.) 1. வேலிப் பருத்தி (மலை); stinking swallow wort. 2. உத்தாமணி; hedge cotton.

மறுவ. நத்தாவணி.



**நந்தாவனம்** *nandā-vanam,* பெ. (n.) நந்தவனம் பார்க்க; see nandavanam. "*நறுமலர்ப் பொய்கையு நந்தாவனமும்*" (பெருங். நரவாண. 1,186).

*[ நந்தவனம் → நந்தாவனம். ]*

**நந்தாவிளக்கு** *nandā-viḷakku,* பெ.(n.) கோயிற் கருவறை முதலியவற்றிலுள்ள அணையா விளக்கு; perpetual or ever-burning lamp kept in the inner sanctum of a temple or in a palace. "*நந்தா விளக்குச் சுடர் நன்மணி நாட்டப்பெற்றே*" (சீவக. 3144).

*[ நுந்தா விளக்கு → நந்தா விளக்கு. ]*

*உந்து → நுந்து = தூண்டுதல்.*

*நுந்தா = ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பெரும்பாலும், கோயில் கருவறை அல்லது அரண்மனையினுள், எப்போதும் எரிந்து கொண்டிருக்கும் விளக்கு.*



**நந்தி[1]** *nandi,* பெ. (n.) 1. எருது (பிங்.); bull. 2. சிவகணத்தலைவராகிய நந்திதேவர் (சூடா.); Nandi, chief attendant of Šivan, having a bull's face. "*நங்கணாதனா நந்தி தவஞ்செய்து*" (பெரியபு. மலை. 35). 3. விடையோரை; (யாழ்.அக.). taurus in the zodiac. 4. சிவன் (பிங்.); Šivan "*நந்தி மகன்றனை ஞானக் கொழுந்தினை*" (திருமந். 1). 5. பல்லவ அரசர் சிலர்தம் பெயர்; some pallava kings. 6. மைசூர்ச் சீமையில், பாலாற்றின் பிறப்பிடமாகிய நந்திதுர்க்கம் என்னும் மலை; nandidroog a mountain in mysore in which the pālār takes its rise. "*நனைமுடி நந்திக்குன்ற நளிபடப்பொழியுந் தெண்ணீர்*" (காஞ்சிப்பு. நாட்.13). 7. சமணர் பட்டப் பெயர்; jaina title; "*கனகநந்தியும் புட்பநந்தியும் பவண நந்தியும்*" (தேவா. 859:6). 8. நந்தி நாகரம் பார்க்க; see nandi-nāgaram. "*பழுதறு நாகரநந்தி முதலிபியைப் பயின்றுவலான்*" (சிவதரு. சிவஞானதா.32). 9. பதினெண் தொன்மத்து ளொன்று; a secondary purāṇa, one of 18 upa purāṇam, (q.v.). 10. நந்தி கிராமம் பார்க்க; see nandi-kirāmam. "*நந்தியம் பதியிடை நாதன்*" (கம்பரா. கிளைகண்டு.110). 11. நந்தியாவட்டம் பார்க்க; see nandiyā-vaṭṭam "*நந்தி நறவ நறும்புன்னாகம்*" (குறிஞ்சிப். 91).

*[ உந்து → துந்து → நுந்து → நந்து → நந்தி → துந்து → துந்தி → தொந்தி = பெருத்த வயிறு நந்தி = பெருத்த காளை விலங்கு. (தமிழ் வரலாறு–1 பக்.66. ]*

நந்துதல் = வளர்தல்.

நந்துதல் = தோன்றுதல், விளங்கித் தோன்றுதல், விளங்குதல்; பெருகுதல்; வளர்தல், தழைத்தல், தழைத்து ஓங்குதல், ஆக்கம் தருதல்.. தழைத்துச்செழித்தல், தூண்டுதல் என்னும் பொருண்மைகளை உள்ளடக்கிய, "*நந்து*" என்னும் வினையடியினின்று கிளைத்த சொல்லே நந்தி.

நந்து → நந்தி = விளங்கித்தோன்றும் அறிவினன்.

அறிவு, வளமை, அழகு, செழுமை, வெற்றி, நற்பேறு முதலானவற்றை அனைவர்க்கும் நல்கும் இறைவன் நந்தி. இவன் பிறங்கொளி நல்கும் பேராளன் ஆவான். வாழ்வியல் வளங்களை வாரிவழங்குபவன். புகழின் இருப்பிடம். ஆக்கத்தின் உறைவிடமாகத் திருமூலரால், நந்திதேவர் சிறப்பிக்கப்படுகிறார். அறிவுக் கொழுந்தாக, அச்சத்தை அகற்றுபவனாக நந்தியம்பெருமான் திகழ்கிறார். வளங்களை வாரி வழங்கும் வள்ளல் நந்தியம்பெருமான். இது பற்றித் திருமூலர்,

"*அப்பனை நந்தியை ஆரா அமுதினை*
*ஒப்பிலி வள்ளலை ஊழிமுதல்வனை*
*எப்பரிசாயினும் ஏத்துமின் ஏத்தினால்*
*அப்பரிசீசன் அருள்பெற வாமே*" என்று வியந்து போற்றுகிறார்.

நந்தியே அனைத்தையும் அருளினான். அவன் அருள் வாய்த்திடின் நானிலத்தில், அனைத்தும் நல்லவண்ணம் நிகழும். அவனே, ஆகமங்களை அறிவித்தான். ......."*நந்தி உரனாகி ஆகமம் ஓங்க நின்றானே*" அனைத்தையும் அறியும் அறிவு தந்தவன் நந்தியே, "*தமிழ்ச்சொல் வடசொல் எனும் இவ்விரண்டும் உணர்த்தும் அவனை உணரலுமாமே*". நந்தியின் திருவருட் சிறப்புக்களைப் பலவாறு போற்றிப்பரவுகின்றார், திருமூலர்.

*நந்தி அருளாலே நாதனாம்பேர்பெற்றோம்*
*நந்தி அருளாலே மூலனை நாடினோம்*
*நந்தி வழிகாட்ட யானிருந்தேனே.*

"*நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்*
*நந்தி அருளாலே சதாசிவ னாயினேன்*
*நந்தி அருளால் மெய்ஞ்ஞானத்துள் நண்ணினேன்*
*நந்தி அருளாலே நான் இருந்தேனே*"

தமது வாழ்வியல் நிகழ்வுகள் அனைத்தையும் நடத்துபவன் நந்தியே. நந்தியின் திருவருளாலே, மூவாயிரம் திருமந்திரப் பாடல்களை, திருமூலர் பாடியதாகத் தெரிவிப்பது, ஈங்கு குறிக்கத்தக்கது. முடிவில், நந்தியை நாள்தோறும் நெஞ்சகத்தில் நிறுத்தியே, இறைவனைக் கண்டேன் என்று நவின்றுள்ள பாங்கு, நானிலத்தார்க்கு, நன்னெறி காட்டும் தன்மையில் அமைந்துள்ளது.

"*மூலன் உரைசெய்த மூவாயிரந்தமிழ்*
*ஞாலம் அறியவே நந்தி அருளது*
*காலை எழுந்து கருத்தறிந்து ஓதிடின்*
*ஞாலத்தலைவனை நண்ணுவரன்றே*"

"*பிதற்றுகின்றேன் என்றும் பேர்நந்தி தன்னை*
*இயற்றுவன் நெஞ்சத்து இரவும் பகலும்*
*முயற்றுபவன் ஓங்கொளி வண்ணன் எம்மானை*
*இயற்றிகழ் சோதி இறைவனுமாமே*"

இத்தகைய நலந்தரும் வாழ்வியல் வளங்களை வாரி வழங்கும் இறைவனைக் குறிக்கும் நந்தி எனுமிச்சொல், நந்தமிழ்மொழிக்குரிய நற்றமிழ்ச்சொல். நந்து என்னும் முதனிலைகள் தோன்றுதல், விளங்குதல், பெருகுதல், விளங்கித்தோன்றுதல் என்னும் பொருண்மைகளில் தொல்காப்பியம், பதிற்றுப்பத்து, முல்லைப்பாட்டு, நாலடியார், பெருங்கதை முதலான இலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகிறது. "நந்த" எனும் உவமஉருபு தொல்காப்பியத்துள் இடம்பெற்றுள்ளது.

1. "*நேர வியர்ப்ப நளியநந்த என்று*
*ஒத்துவரு கிளவி உருவின் உவமம்*"
(தொல்.பொருள்.1237.).

2. விளங்குதல் பொருண்மையில்:–

"*நந்திய செந்நிலப் பெருவழி*" (முல்லைப்.97.)

3. பெருகுதல் பொருண்மையில்:– "*நூல்வேறு நனந்தலை யோராங்கு நந்த*"
(பதிற்றுப்.69,16.).

4. "*நலனந்த நாடணி நந்தப்புலனந்த*" (பரிபா–9)

5. "*நிலநலத்தால் நந்திய நெல்லே போல்*" (நாலடி,179.).

விளங்கித்தோன்றுதல் பொருண்மையில்:– "*பெரியவர் கேண்மை பிறைபோல நாளும் வரிசை வரிசையா நந்தும்*" – (நாலடி,125.).

*"நந்தாவிளக்கே நாமிசைப் பாவாய்"*

பெருங்கதை இலக்கியத்தில் 'நந்தி' எனும் சொல்லாட்சி இடம் பெற்றுள்ளது:-

> *"நாளினு நாளினு நந்தி வனப்பெய்தித்"* (பெருங். நரவாண. 5,169.).
>
> *"நரவாண தத்தனாடொறு நந்தி"* (பெருங். நரவாண. 8,31.)

இங்கு குறிக்கப்பெற்ற எடுத்துக்காட்டுகள் கழககால இலக்கியங்களான பதிற்றுப்பத்து முல்லைப்பாட்டு, பரிபாடலில் நந்த, நந்து என்னும் பொருண்மையில் இடம் பெற்றுள்ளதைக் குறிப்பனவாகும். அறநூலான நாலடியாரில், பெருகுதல் என்ற பொருளில் இடம்பெற்றுள்ளது.

மொழிபெயர்ப்பு இலக்கியமான பெருங் கதையில் நந்தி என்னும் பெயர் காணப்படுகிறது. தமிழ் மொழியில் உள்ளதுபோல், வடமொழியில் வேர்ப்பொருள் வினைவடிவிலும் இல்லை; வளர்தல் விளங்கித்தோன்றுதல் எனும் பொருண்மையிலும், இலக்கியத்தில் இடம் பெறவில்லை, என்பது குறிக்கத்தக்கது.

தொல்காப்பியம் முதல், பெருங்கதை ஈறாகத் தமிழிலக்கியப்பரப்பில் நந்த, நந்து எனும் முதனிலை பல்வேறுபட்ட பொருண்மைகளில், இலக்கியப்பரப்பில், இடம் பெற்று விளங்கித் தோன்றுவதால், நந்தி என்னும் சொல், நந்தமிழ்ச் சொல்லேயாகும்.

வடமொழியில் இச் சொல்லிற்கு இன்பம், மகிழ்ச்சி என்னும் பொருண்மைகளே சுட்டப்பெற்றுள்ளன. வடமொழியிலக்கியப் பரப்பிலும், விளங்கித்தோன்றுதல், பிறங்கொளி நல்குதல், பெருகுதல், வளர்தல் போன்ற பொருண்மையில் பயின்றுள்ளதாகத் தெரியவில்லை. வேர்ப்பொருளும் உரிய பொருண்மையில் இடம்பெறவில்லை யென்பது குறிப்பிடத்தக்கது. தொன்மக்கதைகளே வடமொழியில் குறிக்கப்பட்டுள்ளன.

ஒருமொழியில் வினைவடிவம் அல்லது முதனிலை மிகுதியாக இலக்கியத்துள் பயின்றிடின், அச் சொல் அம் மொழிக்கே உரியது என்று மொழியியலார் கூறுவர். தமிழ்மொழியில் நந்துதல் எனும் வினை, கழக இலக்கியங்களிலும், பிற இலக்கியங்களிலும் பரவலாக வழக் கூன்றியுள்ளது. வடமொழியில் வினைவடிவம் இல்லை; மகிழ்ச்சிப் பொருண்மையும் தொன்மப் பொருளுமே, "நந்தி" என்னும் சொல்லிற்குச் சுட்டப்பட்டுள்ளது.

தொல்காப்பியத்துள்ளும், கழககால இலக்கியங்களிலும், நாலடியார் முதலான அறநூல்களிலும், காப்பிய இலக்கியங்களிலும், சமயஇலக்கியங்களிலும் இடம்பெற்றுள்ள "நந்த" எனும் முதனிலையே "நந்து" எனத்திரிந்து, பின்பு நந்தி என்றாயிற்று. [நந்து → நந்து → நந்தி] நந்தி என்பது நந்தமிழ்ச் சொல்லாகும்.



**நந்தி**[2] *nandi,* பெ. (n) நன்றாக விளையாத சிறுபூசணிக் காய். (நாஞ்.); small, immature pumpkin.

*[நந்து → நந்தி.]*

நந்துதல் = தோன்றுதல், வளர்தல், தோன்றி வளர்ந்து நன்கு விளையாத பூசணி. இங்கு இச் சொல் வளர்தல் பொருளின் தொடக்க நிலையைக் குறித்தது.

**நந்தி**[3] *nandi,* பெ. (n) **1.** செக்கான் (பிங்.); oil-monger **2.** பேரிகை (சூடா.); a kind of drum. **3.** மதகரிவேம்பு; common bastard cedar. **4.** சின்னி; indian shrubby copper leaf

*[நந்து → நந்தி. ]*

**நந்தி**[4] *nandi,* பெ. (n.) **1.** தூணுமரம்; toon tree. **2.** உப்புக்கீரை; indian glass wort. **3.** வாலை; goddess energy. **4.** நந்திதேவர்; one of the members of the original school of Siddhars. **5.** வெண்தேக்கு; white teak wood. **6.** வசிவி; a prostitute. **7.** கோனந்தி; yellow orpiment. copper leaf. **8.** சிறுபூசணி; small pumpkin indian shrubby. **9.** வலம்புரி; Indian screw tree.

**நந்திக்கலம்பகம்** *nandi-k-kalambagam,* பெ. (n.) **9**–ஆம் நூற்றாண்டினனும், பல்லவ அரசனுமாகிய மூன்றாம் நந்தியைப் பற்றிப் பாடப்பட்ட கலம்பக நூல்; a poem on the pallava king nandi III, **9**–th century.

தெள்ளாறு எறிந்த மூன்றாம் நந்திவன்மனைப் பாராட்டிப் போற்றுவதே, நந்திக்கலம்பகமாகும். பதினெண் கலம்பக உறுப்புகளால் பாடப்பெற்ற, இந் நூலின் ஆசிரியர் யாரெனத் தெரியவில்லை.

காலம் கி.பி.9ஆம் நூற்றாண்டு. அதில் **144** பாடல்கள் உள்ளன.

சிறந்தபாடல்:

வானுறு மதியை அடைந்ததுன் வதனம்
மறிகடல் புகுந்ததுன் கீர்த்தி

கானுறு புலியை அடைந்ததுன் வீரம்
கற்பகம் அடைந்ததுன் கரங்கள்

தேனுறு மலராய் அரியிடம் புகுந்தாள்
செந்தழல் அடைந்ததுன் தேகம்

நானும் என் கலியும் எவ்விடம் புகுவோம்
நந்தியே நந்தியா பரனே!

*[நந்தி + கலம்பகம்.]*

நந்தி = மூன்றாம் நந்திவன்மன்.

குல் → கல → கலவை. கல → கலம் → கலம்பம் → கலம்பு → கலம்பகம் = பலவுறுப்புகள் கலந்து வருஞ் செய்யுள்நூல். (மு.தா. **176.**).

**நந்திக்கோல்** *nandi-k-kōl,* பெ. (n.) மரபுவழிப் பணியாற்றும் ஊர் நிருவாக அலுவலர்; hereditary village official (E.T.VII. 310.).

*[நந்தி + கோல்.]*

தொன்றுதொட்டு, மூதாதையர் வழியில், சிற்றூர் நிருவாகத்தை மேற்கொள்ளும் அதிகாரி.

**நந்திகம்** *nandigam,* பெ. (n.) **1.** உப்புக்கீரை; salt-greens. **2.** நந்தி பார்க்க; see nandi.

**நந்திகேச்சுரம்** *nandi-gē-c-curam,* பெ. (n.) நந்தி[1], (பிங்.) பார்க்க; see nandi.[1].

*[நந்திகை + ஈச்சுரம்.]*

**நந்திகேச்சுரன்** *nandi-gē-c-curaṉ,* பெ. (n.) நந்தி[1], 2, 4; பார்க்க; see nandi[1], 2, 4.

*[நந்திகை + ஈச்சுரன்.]*

**நந்திகேசரன்** *nandi-kēšaraṉ,* பெ. (n.) நந்தியாவட்டம் பார்க்க; see nandiyā-vaṭṭam.

*[நந்திகை + ஈசரன்.]*

**நந்திகேசன்** *nandi-gēšaṉ,* பெ. (n.) நந்திகேச்சுரன் பார்க்க; see nandi-gēccuraṉ.

*[நந்திகை + ஈசன்.]*

**நந்திகை** *nandigai,* பெ. (n.) மட்பாண்டம்; earthern pot.

*[நந்து + இகை.]*

**நந்திதேவன்** *nandi-dēvaṉ*, பெ. (n.) *நந்தி*[1], 2., பார்க்க; see *nandi*[1], 2.

*[நந்தி + தேவன்.]*

**நந்திநாகரம்** *nandi-nāgaram*, பெ. (n.) ஒருவகை நாகரவெழுத்து (சிவமரு. சிவஞானதா, 32,உரை); a kind of nāgari script.

*[நந்தி + நாகரம்.]*

**நந்திப்பூசணி** *nandi-p-pūšaṇi*, பெ. (n.) நீற்றுப் பூசணி (மலை.); common pumkin.

*[நந்தி + பூசணி.]*

**நந்திபண்ணை** *nandi-paṇṇai*, பெ. (n) வெடியுப்பு; potassium nitrate

*[நந்தி + பண்ணை.]*

**நந்திபத்திரி** *nandi-pattiri*, பெ. (n) நந்தியாவட்டம் (மூ.அ.) பார்க்க; see nandiyā-vaṭṭam.

*[நந்தி + பத்திரி.]*

**நந்திபராகமூலி** *nandi-parāga-mūli*, பெ. (n.) ஈசுரமூலி; indian birth-wort.

**நந்திபீசம்** *nandi-pīšam*, பெ. (n.) சோரங்கொட்டை; marking nut.

*[நந்தி + பீஜம் → பீசம்.]*

**நந்திபுர விண்ணகரம்** *nandipura-viṇṇagaram*, பெ. (n.) திருமங்கையாழ்வார் பாடலில் இடம் பெறும் வைணவக் கோயில் அமைந்துள்ள ஊர். a canonised place Tirumangai-āḻvār hymns "*நாதன் உறைகின்ற நகர்நந்திபுர விண்ணகரம் நண்ணுமனமே*" (திருமங்கையாழ்வார். 143.)

நகர் நந்திபுரம் என்று பாடலில் குறிப்பிட்டுச் சொல்லுவதால், 'நந்திபுரம்' ஊர்ப்பெயர் என்பது தெளிவாகிறது.

*[நந்தி + புரம் + விண் + நகரம்.]*

**நந்திபூசினி** *nandi-pūšiṉi*, பெ. (n) சாம்பற்பூசனி; ash pumpkin.

*[நந்தி + பூசு + இனி.]*

**நந்திமுகி** *nandi-mugi*, பெ. (n.) நீண்டும், மென்மையாகவுமிருக்கும் ஒருவகைக் கோதுமை; an elongated soft wheat

*[நந்தி + முக + இ.]*

*"இ"= சொல்லாக்க ஈறு.*

**நந்தியம்பாக்கம்** *nandiyam-bākkam*, பெ. (n) திருவள்ளூர் மாவட்ட ஊர் a village, in Thiruvaḷḷūr dt.

*[நந்தி + அம் + பாக்கம்.]*

*பகு → பக்கம் → பாக்கம்.*

**நந்தியாவட்டம்** *nandiyā-vaṭṭam*, பெ. (n.) செடிவகை; east indian rosebay the flower or the plant, the flower used in prayers "*அலர்ந்த காலை நந்தியாவட்ட நாறு நகைமுடி யரசனாயின்*" (சீவக,1287.).

**மறுவ.** நந்திகேசரப்பூ.

*[நந்தி + ஆவட்டம்.]*

6 முதல் 8 அடிவரை வளரும்; காம்புகளில் 3 முதல் 6 வரை, எண்ணிக்கையில்

வெண்மையான பூக்களைத்தரும். ஆண்டு முழுவதும் பூக்கும். இப் பூக்கள், நள்ளிரவில் மலர்ந்து நன்மணந் தருந்தன்மையன. சிவபூசைக்கு உகந்த இப் பூக்கள், தோட்டங்களிலும், கோயில்களிலும், காடுகளிலும், சிறப்பாக விளையும். இதன் இலைச்சாறு, கண்ணோய்கட்குக் கைகண்ட மருந்து.

ஒற்றை நந்தியாவட்டப் பூச்சாறு, கண்புரைக்கட்டியைக் கரைக்கும். மண்டைக் கரப்பான் முதலான தலைநோய்கட்கு, இலைச்சாறும், பூச்சாறும் நற்பயன் தருந் தன்மைத்து. ஒற்றை நந்தியாவட்டம், இரட்டை நந்தியாவட்டம், அடுக்கு நந்தியாவட்டம், என மூவகைப் பிரிவுகள் இதனுள் உண்டு.



**நந்தியாவட்டை** *nandiyā-vaṭṭai,* பெ. (n.) நந்தியாவட்டம் (இ.வ.) பார்க்க; see nandiyā-vaṭṭam.

*[நந்தி + ஆவட்டை.]*

**நந்தியாவர்த்தம்** *nandiyā-varttam,* பெ. (n.) **1.** நந்தியாவட்டம் பார்க்க; see nandiyāvaṭṭam. **2.** அரசமரம்; holy fig tree. **3.** ஒருவகைச் சிப்பி; a kind of shell or molluse **4.** கட்டடவகை; a kind of building.

**நந்தியுப்பு** *nandi-y-uppu,* பெ. (n.) நஞ்சுக்கொடி; navel card.

*[நந்தி + உப்பு.]*

*சத்தியுப்பு, சிவனுப்பு, கம்பியுப்பு, பூரம் இவைகளைச் சமனெடையாகச் சேர்த்துக், கலுவத்தில் அரைத்துக் கதிரவனொளியில், நண்பகலில் நன்கு உலர்த்திப் பின்பு அனைத்தையும் ஒன்றாகச், சேர்த்து உருவாக்கிய உப்பு.*

**நந்திரகம்** *nandiragam,* பெ. (n.) சிவனார் வேம்பு; šivā's neem.

**நந்திரசின்னி** *nandira-šiṉṉi,* பெ. (n.) **1.** நந்தி. 4 பார்க்க; see nandi4. **2.** நந்தியாவட்டம் பார்க்க; see nandiyāvaṭṭam. **3.** ஒடுகுமரம்; wodisha tree **4.** மருத்துவக் குணமிக்க சின்னிமரம்; a medicinal tree - Acalypha fruiticosa.

**நந்திவட்டம்** *nandi-vaṭṭam,* பெ. (n.) நந்தியாவட்டம் பார்க்க; see nandiyāvaṭṭam *"நந்திவட்டத்தொடு கொன்றை வளாவிய நம்பனையே"* (தேவா.1200:5.).

*[நந்தி + வட்டம்.]*

**நந்திவருத்தனன்** *nandi-varuttaṉaṉ,* பெ. (n.) **1.** நண்பன் (யாழ்.அக.); friend. **2.** மகன்; son. **3.** சிவன்; Šivaṉ.

*[நந்தி +* skt. *வருத்தனன்.]*

**நந்திவாகனம்** *nandi-vāgaṉam,* பெ. (n.) பருவுடல்; gross body or fleshy body as opposed to, subtle body.

*[நந்தி +* skt.*வாகனம்.]*

**நந்திவிருட்சம்** *nandi-virutcam,* பெ. (n.) 1. தூணிமரம்; bastard cedar cedrela toora. 2. சின்னி மரம்; indian shrubby copper leaf.

[*நந்தி* + skt. *விருட்சம்.*]

**நந்தினி** *nandini,* பெ. (n.) 1. காமதேனுவின் கன்று; the calf of the celestial cow. "*நந்தினிப்பேர் மேன்மை தொக்கவச் செய்ய சோதிச் சுந்தரத் தோற்றத் தேனு*" (இரகு.குறை.64). 2. மகள்; daughter; "*நந்தி நந்தினி*" (தணிகைப்பு.நகர.133).

[*நந்து* → *நந்தினி.*]

**நந்து¹–தல்** *nandu-,* 5செ.கு.வி. (v.i.) 1. கெடுதல் (சூடா.); to become spoiled, to perish, decay, waste. "*நாடற்கரிய நலத்தை நந்தாத் தேனை*" (திருவாச.9;15.). 2. சாதல்; to die. "*திருமைந்த னந்தறீர்ந்தது மாயுளைப் பெற்றதும்*" (பிரமோத். 21,61). 3. அவிதல்; to be extinguished, put out, as a lamp. "*நந்தாவிளக்குச்சுடர் நன்மணி*" (சீவக.3144) 4. மறைதல்; to set, disappear. "*இடையுறு திருவென விந்துநந்தினான்*" (கம்பரா.உண்டாட்.67.). 5. வசைபாடுதல், பழிதூற்றுதல் (யாழ்ப்.); to be insulted, abused.

க. நந்து.

[நொய் → நொய்ந்து →

நொந்து → நந்து–.]

நொய்ந்து போதல் = நசிந்து போதல்; அழிந்து போதல். நைந்துபோதலால் ஏற்படும் பேரழிவும், நந்துதல் எனப்படும்.

நந்துதல் என்னும் வினைச்சொல், நொந்து அல்லது நைந்து போதல் என்ற நெகிழ்ச்சிப்பொருண்மையினை, அடிப்படையாகக் கொண்டது. "*நொந்து நூலாய்ப்போனான்*" "*நைந்து நாசமாய்ப் போய்விட்டான்*" என்னும் மக்கள் வழக்குகள், ஈங்கு நினைவு கூரத்தக்கன. அவிதல் பொருளிலும், இச் சொல் பயிலும். பதனழிந்த சோற்றைச் "*சோறு நைந்து விட்டது*" என்று நாட்டுப்புறத்தார், இன்றும் கூறுவது நோக்குக. நொய் → நொய்ந்து → நைந்து → நந்து என்று ஏரணமுறையில் வளர்ந்து மக்களிடையே, இச் சொல் வழக்கூன்றியுள்ளது.

**நந்து²–தல்** *nandu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. வளர்தல்; to increase, grow, wax. "*பெரியவர் கேண்மை பிறைபோல...நந்தும்*" (நாலடி.125.). 2. தழைத்தல்; to be luxuriant, tertile. "*கான நந்திய செந்நிலப் பெருவழி*" (முல்லை.97). 3. விளங்குதல்; to prosper, flourish. "*நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த*" (பதிற்றுப்.69,16). 4. செருக்குதல்; to be proud, glow with pride or splendour. '*யான் செலினந்திச் செறிற்சாம்புமிவள்*" (கலித்.78).

[*நும்* → *நம்* → *நந்து*–.]

உந்து →துந்து →நுந்து→ நொந்து →நந்து.

நொந்துதுல் = தூண்டுதல், ஊக்குதல், வளர்தல்.

துந்து → துந்தி → தொந்தி.

தொந்தி= பருத்து வளர்ந்த வயிறு. தூண்டுதற் கருத்தினின்று பெருகுதல், வளர்தல் முதலான பொருண்மை தரும் கருத்துகள் தோன்றின.

நந்துதல் என்னும் வினைச்சொல், தோன்றி வளர்தல், தழைத்து ஓங்குதல் விளங்கித்தோன்றுதல் என்னும் பொருண்மையில், கழகக்கால இலக்கியங்களில் பயின்றுள்ளதை நோக்குக.

**நந்து³–தல்** *nandu-,* 5 செ.குன்றாவி. (v.t.) தூண்டுதல் (இ.வ.); to stir.trim. விளக்கை நந்து (உ.வ.).

[ உந்து → நுந்து → நந்து-.]

**நந்து**[4] *nandu,* பெ. (n.) 1. ஆக்கம்; increase, prosperity. "*நந்தெறும்பு*" (ஆசாரக்.97). 2. பறவை (பிங்.); bird.

[நும் → நம் → நந்து-.]

**நந்து**[5] *nandu,* பெ. (n.) 1. சங்கு (திவா.); conch 2. நத்தை (பிங்.) மெல்லியசதையுள்ள நீருயிரி; snail. "*கதிர்க்கோட்டு நந்தின் சுரிமுக வேற்றை*" (புறம்.266:4.). "*நந்தும்முரலும் ஈர்அறிவினவே*" 9(தொல்.பொருள்.9.). "நீர்வாழ் சாதியுள் நந்தும் நகே" (தொல்.பொருள்.1563).

[நொது → நுது → நுந்து →நந்து-.]

**நந்து** : பிற உயிரிகளால் கேடுறுங்கால் முகப்புப் பகுதியில் உள்ள, கதிர் போன்ற உணர்வறிகோட்டின், சுரிமுகப்பகுதி முழுவதையும், உள்ளிழுத்துக்கொள்ளும் இயல்பினது.

**நந்துருணி** *nanduruṇi,* பெ. (n.) 1. புறங் கூறுவோன் (வின்.); talebearer, backbiter. 2. அறிவிலி (வின்.); fool,silly person. 3. கீழ்மகன் (இ.வ.); insignificant person.

[நந்துரு → நக்துருணி.]

பிறரைக் குறைத்துப் பேசும் தாழ்வுப்பொருளில் வந்தது.

**நந்துருணிப்பேச்சு** *nanduruṇi-pēccu,* பெ. (n.) 1. பழிப்புரை; slander. 2. குறளை (வின்.) backbiting. 3. நம்பிக்கையற்ற பேச்சு (இ.வ.); unreliable talk.

[நந்துருணி + பேச்சு.]

மற்றவர் குறைகளை, நீட்டிப் பேசும் உரை. உயர்த்தல் பொருளில் அமைந்தது.

**நந்தை**[1] *nandai,* பெ. (n.) 1. கொற்றான் (மலை.) பார்க்க; see koṟṟāṉ 2. தேற்றாங்கொட்டை (வின்.); clearing nut. 3. கலப்பை நுகந் தொடுக்குங் கயிறு (வின்.); rope for fastening a yoke to the beam of a plough

[நந்து → நந்தா → நந்தை.]

**நந்தை**[2] *nandai,* பெ. (n.) 1. சில சிறப்பு நாள்கள் (பிங்.); some important days. "*நவமியுவா நந்தை யொடு*" (காசிக. இல்லொழு.26). 2. கபிலைப் பசு; brown cow. "*காபில நந்தை கரியசுபத்திரை*" (தணிகைப்பு.அகத்திய.486). 3. அருகக் கடவுளது சமவசரணத்தின் கீழ்த்திசையிலுள்ள தடாகம். (மேருமந்.1086); (jaina ) a tank to the east of Arhat's heaven

**நந்நான்கு** *nannāṉgu,* வி.எ. (adv.) நான்கு நான்காக; by fours, at the rate of four to each.

மறுவ. நானான்கு

**நப்பசலையார்** *nappaśalaiyār,* பெ. (n ) கழகக் காலப் புலவருள் ஒருவர்; an eminent Śaṅgam poet.

[நல் + பசலையார்.]

இவர் நற்றிணையில் 243-வது பாடலைப் பாடியுள்ளார். பிரிவிடை மெலிந்த தலைமகள் கூற்றாக வரும் பாடல் வருமாறு:-

"தேம்படு சிலம்பிற் றெள்ளறல் தழீஇய
துறுக லயல தூமண லடைகரை
அலங்குசினை பொதுளிய நறுவடி மாஅத்துப்
பொதும்புதோ றல்கும் பூங்கண் இருங்குயில்
கவறுபெயர்த் தன்ன நில்லா வாழ்க்கையிட்டு
அகற லோம்புமின் அறிவுடை யீரெனக்
கையறத் துறப்போர்க் கழறுவ போல

மெய்யுற விருந்து மேவர நுவல
இன்னா தாகிய காலைப் பொருள்வயிற்
பிரித லாடவர்க் கியல்பெனின்
அரிதுமன் றம்ம அறத்தினும் பொருளே".

(நற். 243)

**நப்பண்ணனார்** *nappaṇṇaṉār,* பெ. (n.) கழகப்புலவர்; a poet of Śaṅgam period.

இவர் பரிபாடலில் உள்ள பத்தொன்பதாம் பாடலை இயற்றியவராவார்.

*[நல் + பண்ணனார்.]*

*ஒ.நோ. ந + பின்னை = நப்பின்னை.*

*ந + பூதனார் = நப்பூதனார்.*

"நிலவரை யழுவத்தான் வானுறை புகல்தந்து
புலவரை யறியாத புகழ்பூத்த கடம்பமர்ந்து
அருமுனி மரபி னான்றவர் நுகர்ச்சிமன்
இருநிலத் தோரு மியைகென ஈத்தநின்
தண்பரங் குன்றத் தியலணி நின்மருங்கு
சாறுகொள் துறக்கத் தவளொடு
மாறுகொள் வதுபோலும் மயிற்கொடி வதுவை
புலத்தினும் போரினும் போர்தோலாக் கூடற்
கலப்போ டியைந்த விரவுத்தீ ரெல்லை
அறம்பெரி தாற்றி யதன்பயன் கொண்மார்
சிறந்தோ ருலகம் படருநர் போல
உரிமாண் புனைகல மொண்துகில் தாங்கிப்
புரிமாண் புரவியர் போக்கமை தேரர்"

"தெரிமலர்த் தாரர் தெருவிருள் சீப்பநின்
குன்றொடு கூட லிடையெல்லா மொன்றுபு
நேர்பூ நிறைபெய் திருநிலம் பூட்டிய
தார்போலு மாலைத் தலைநிறையால் தண்மணல்
ஆர்வேலை யாத்திரை செல் யாறு;"

"சுடரொடு சூழ்வரு தாரகை மேருப்
புடைவரு சூழல் புலமாண் வழுதி
மடமயி லோரு மனையவ ரோடும்
கடனறி காரியக் கண்ணவ ரோடும்நின்
சூருறை குன்றிற் றடவரை யேறிமேற்
பாடு வலந்திரி பண்பிஹ் பழமதிச்
சூடி யசையுஞ் சுவல்மிசைத் தானையிற்
பாடிய நாவிற் பரந்த வுவகையின்
நாடு நகரு மடைய அடைந்தனைத்தே
படுமணி யானை நெடியாய்நீ மேய
கடிநகர் சூழ்நுவலுங்கால்;"

"தும்பி தொடர்கதுப்ப தும்பி தொடராட்டி
வம்பணி பூங்கயிற்று வாங்கி மரனசைப்பார்
வண்டார்ப் புரவி வழி நீங்க வாங்குவார்
திண்டேர் வழியிற் செலநிறுப்பார் கண்டக்
கரும்பு கவழ மடுப்பார் நிரந்து
பரிநிமிர் தானையான் பாசறை நீர்த்தே
குருகெறி வேலோய்நின் குன்றக்கீழ் நின்ற
இடைநிலம் யாமேத்து மாறு;"

"குரங்கருத்து பண்ணியங் கொடுப்போரும்
கரும்பு கருமுகக் கணக்களிப் போரும்
தெய்வப் பிரமஞ் செய்கு வோரும்
கைவைத் திமிர்புகுழல் காண்கு வோரும்
யாழி னிளிகுரல் சமங்கொள் வோரும்
வேள்வியி னழகியல் விளம்பு வோரும்
கூர நாண்குரல் கொம்மென வொலிப்ப முரசி
னாலிசெய் வோரும்." (பரிபா.19.)

பரிபாடலில் இவர் செவ்வேளின் சிறப்பினையும், திருப்பரங்குன்றத்தின் சிறப்பினையும் திறம்படப் பாடியுள்ளார்.

முருகனின் ஆடை, மாலை, வேற்படை, முகம் அனைத்தும் செந்நிறமுடையயவை. முருகன், செவ்வேள் என்பதை மெய்ப்பிக்கும் வண்ணம் எழிலுற அமைந்துள்ளதை எடுத்துரைக்குந் திறன் நயமிக்கது;

அனைவர்தம் மனமும், முருகனது அழகில் ஒன்றியிருந்து நினைக்கும் வண்ணம் அமைத்துள்ளார்.

திருப்பரங்குன்றம் பாண்டியர் பாசறை போலவும், ஒலிமலி நகராகவும், அங்குள்ள வண்ண ஓவியங்கள் காண்பவர்தம் கண்ணையும் கருத்தையும் கவரும் பாங்கில் அமைந்துள்ள சிறப்பையும், பழம்பண்பாட்டின் உறைவிடமாகவும், திகழ்ந்ததைப் பரிபாடலில் நன்கு விளக்கியுள்ளார்

**நப்பாசை** *nappāšai,* பெ. (n.) ஒன்று எப்படியாவது நிகழாதா என்ற எதிர்பார்ப்பு; fond hope. இந்த வேலையாவது எனக்குக் கிடைக்காதா என்கிற நப்பாசை அடிமனத்தில் துளிர்விட்டது (இ.வ.). மீண்டும் வேலைக்கு எடுக்கப்படலாம் என்ற நப்பாசைக்கு முடிவுகட்டுவது போலிருந்தது அந்த அறிக்கை (இக். வ.).

*[நயப்பு → நப்பு + ஆசை.]*

*நயப்பு = விருப்பம்.*

*எண்ணியது நிறைவேறாது அல்லது அரிது என்று தெரிந்ததும், எப்படியும் நடக்கும் என்னும் விருப்பமுடன் கூடிய எதிர்பார்ப்பு.*

**நப்பாலத்தனார்[1]** *nappālattaṉār,* பெ. (n) கழகக்காலப் புலவர்; a poet of šaṅgam period.

*[நல் + பாலத்தன் + ஆர்.]*

*'ஆர்' மதிப்பொருமை விகுதி. (ஒ.நோ.) ந + செள்ளை + ஆர். 'ந' சிறப்புப் பொருளுணர்த்தும், இடைச்சொல்.*

நச்சினார்க்கினியரின், சீவகசிந்தாமணி 482–ஆம் பாடலுரையால், இப் புலவரின் இயற்பெயர் நப்பாலத்தன் என்று அறிய முடிகிறது. இவர், நற்றிணையில் (52,240), இரண்டு பாடல்களைப் பாடியுள்ளார். சில ஆய்வாளர், நச்சினார்க்கினியர் உரைக் குறிப்பில் காணப்படும் நப்பாலத்தன், நற்றிணை பாடிய நப்பாலத்தனாருக்கு வேறானவர் என்பர். இவ்விரு பாடல்களிலும் சொல்லாட்சி, பொருளமைதி ஒத்துக்காணப்படுவதால், இருவரும் ஒருவரே என்றும் துணியலாம். (எ–டு) 1. தலைமகன் செலவழுங்கியது:– "ஐதே கம்ம வியைந்து செய்பொருளே" (நற்.52.). 2. பிரிவிடைமெலிந்த தலைமகள் கூற்று:– "ஐதே கம்ம இவ்வுலகு படைத்தோனே" மேலும் மேலே குறித்துள்ள நற்றிணை–52–ஆம் பாடலில், மாவள் ஓரியின் கொடைச் சிறப்பினை, பாடிய பாங்கு எஞ்ஞான்றும் நெஞ்சை விட்டு நீங்கா வண்ணம் அமைந்துள்ளது.

"மாக்கொடி யதிரற் பூவொடு பாதிரித்
தூத்தகட் டெதிர்மலர் வேய்ந்த கூந்தல்
மணங்கமழ் நாற்ற மரீஇ யாமிவள்
சுணங்கணி யாகம் அடைய முயங்கி
வீங்குவர்க் கவவின் நீங்கல் செல்லேம்
நீயே, ஆள்வினை சிறப்ப எண்ணி நாளும்
பிரிந்துறை வாழ்க்கை புரிந்தமை யலையே
அன்பிலை வாழியெந் நெஞ்சே வெம்போர்
மழவர் பெருமகன் மாவள் ஓரி
கைவள மியைவ தாயினும்
ஐதே கம்ம, இயைந்துசெய் பொருளே"
(நற். 52).

**நப்பாலத்தனார்[2]** *nappālattaṉār,* பெ. (n.) திருவள்ளுவமாலையில், திருக்குறளைச் சிறப்பித்துப் பாடியவர்; an eminent poet

*[நல் + பாலத்தன் + ஆர்.]*

திருவள்ளுவமாலையில் பின்வரும் பாடலைப் பாடியுள்ளார்.

"அறம்தகளி; ஆன்ற பொருள்திரி: இன்பு சிறந்தநெய்; செஞ்சொல் தீ; தண்டு–குறும்பாவா

வள்ளுவனார் ஏற்றினார் வையத்து வாழ்வார்கள் உள்இருள் நீக்கும் விளக்கு"

கழகக்கால நப்பாலத்தனாரிலிருந்து, இவர் முற்றிலும் வேறானவர். இப் பாடலின் சொல்லாட்சியும், நற்றிணை (52,240.) ஆம் பாடல்களில், காணப்படும் சொல்லாட்சியும், முற்றிலும் வேறு பட்டிருப்பதால், இருவரும் வெவ்வேறானவர் என்று துணியலாம். "அறம் தகழியாகவும், பொருள் திரியாகவும், இன்பம் நெய்யாகவும், செவ்வியசொல் தண்டாகவும்" அமைந்த திருக்குறள் என்னும் விளக்கினை, மன்பதை மாந்தர்தம், அகவிருள் அகலும் வண்ணம், திருவள்ளுவர் ஏற்றியதாகக் குறித்துள்ள சிறப்பு, ஆதனுக்கு (ஆன்மா) நல்வழிகாட்டும் பான்மையில், அமைந்துள்ளது.

**நப்பிரி—தல்** *nappiri-,* 4 செ.கு.வி. (v.i.) நம்மைப் பிரிதல்; to leave us, in separate from us; "*நப்பிரிந்துறைந்தோர்*" (ஐங்குறு.227.).

*[நம் + பிரிதல்.]*

*இரண்டாம் வேற்றுமைத்தொகைச் சொல்.*

**நப்பின்னை** *na-p-pinnai,* பெ. (n.) கண்ணனுக்கு உவந்த தேவியருள் ஒருத்தி; Krishna's favourite wife. "*கொத்தலர் பூங்குழல் நப்பின்னை*" (திவ்.திருப்பா.19).

*[நல் + பின்னை.]*

ஒ.நோ. நல் + கீரன் = நக்கீரன்.

**நப்பு** பெ. (n.) சிறுகல்வகை (இ.வ.); a kind of stone

**நப்புச்சப்பு** *nappu-c-cappu,* பெ. (n.) 1. சுவை; (உருசி); taste கறியில் நப்புச்சப்பு இல்லை. 2. சொத்து; property.

*[நப்பு + சப்பு.]*

ஒ.நோ. உப்புச்சப்பு இல்லாத உணவு.

**நப்புணர்—தல்** *na-p-punar-,* 4 செ.கு.வி. (v.i.) நம்மைச் சேர்தல்; to join us, unite with us. "*தேற்றஞ்செய்து நப்புணர்ந்து*" (ஐங்குறு. 23).

*[நம் + புணர்-.]*

இரண்டாம் வேற்றுமைத் தொகையமைப்பில் இச் சொல் வந்துள்ளது.

**நப்பூதனார்** *nappūdanār,* பெ. (n.) முல்லைப்பாட்டு என்ற நூலை இயற்றிய புலவர்; a poet who wrote mullai-p-pāṭṭu.

*[ந + பூதனார்.]*

(ஒ.நோ.) ந + பண்ணனார்.

"செறியிலை காயா அஞ்சனம் மலர
முறியிணர்க் கொன்றை நன்பொன் காலக்
கோடற் குவிமுகை அங்கை அவிழத்
தோடார் தோன்றி குருதி பூப்பக்
கான நந்திய செந்நிலப் பெருவழி
வானம் வாய்த்த வாங்குகதிர் வரகிற்
திரிமருப் பிரலையொடு மடமா னுகள
எதிர்செல் வெண்மழை பொழியும் திங்களின்"
முதிர்காய் வள்ளியங் காடுபிறக் கொழியத்
துனைபரி துரக்குஞ் செலவினர்
வினைவிளங்கு நெடுந்தேர் பூண்ட மாவே!"
(முல்லைப்.93–103).

**நம்[1]** *nam,* இடை (part.) தன்மைப் பன்மை (உளப்பாட்டு) பகரப்பெயர், 'நாம்' என்பதன் உருப்பேற்கும் வடிவம்; oblique form of first person plural pronoun (inclusive) 'nām'.

*[நாம் → நம்]*

எ–டு: நாம் + உடைய = நம்முடைய.

நாம் + ஐ → நம்மை.

ஒ.நோ: தாம் → தம்.

பகரப்பெயர் என்பது மாற்று வடிவத்தைப் பகரமாகப் பயன்படுத்தும் பெயர். பகரப்பெயர் உருபேற்கும்போது, முதனிலை குறுகுதல் பெரும்பான்மையாகும். இருப்பினும், தமிழ்க் குடும்ப மொழிகள் சிலவற்றுள், பகரப்பெயர் உருபேற்கும்போது, மாறுதலடையாமல் இருப்பதும் உண்டு.

சான்று வருமாறு:–

க., நா (தன்மை ஒருமை) – நாக (எனக்கு)

தெ., நா (தன்மை ஒருமை) – நாகு (எனக்கு)

**நம்[2]** *nam,* இடை. (part.) எல்லாம் என்னும் சொல் உயர்திணையாயின், அஃது உருபேற்கும்போது கொள்ளும் சாரியை; an infix added to the word ellām before case suffixes, when it is uyar-tiṇai "*உயர்திணையாயி னம்மிடை வருமே*" (தொல்.எழுத்.190.).

*[நாம் → நம்.]*

எ.டு. எல்லேம் + நம்மையும் = எல்லே நம்மையும் என்று, இலக்கியத்தில் மட்டும் வழக்குண்மையால், மக்களிடையே வழக்கூன்றவில்லை என்பது தெளிவு.

**நம்பகம்** *nambagam,* பெ. (n.) நம்பிக்கைக்கு உரியதாகுகை; trust, worthiness.

**தெ.** நம்பகமு.

*[நம்பு + அகம்.]*

**நம்பகமாக** *nambagam-āga,* கு.வி.எ. (adv.) ஐயமற, நம்பத்தகுந்த; trust, worthy. அவருக்குப் புதிய பொறுப்புத்தரப்படலாம் என்று நம்பகமாகத் தெரிகிறது.

*[நம்பகம் + ஆக.]*

**நம்பகமான** *nambagam-āṉa,* கு.பெ.எ. (adj.) கட்டாயமான, உறுதியான; certainly. அவர் ஒரு நம்பகமான ஆள் (உ.வ.).

*[நம்பகம் + ஆன.]*

**நம்பல்[1]** *nambal,* பெ. (n.) **1.** விருப்பம் (சூடா.); desire. **2.** நம்புகை; trusting, believing. "*நம்பலென்பதுவே யன்பினிலைமை*" (மனோன்.).

*[நம்பு → நம்பல்.]*

அல்லீற்றுத் தொழிற்பெயர் "*நம்பும் மேவும் நசையா கும்மே*" என்ற தொல்காப்பிய நூற்பாவின்படி, நம்பு விருப்பக்கருத்தில் வந்தது. (தொல். சொல். 812.).

**நம்பல்[2]** *nambal,* பெ. (n.) **1.** ஆசைப்பெருக்கம்; intense desire. **2.** பொருட்பேரவா; cupidity. **3.** மாளாக்காதல், அளவுக்கதிகமான அன்பு; amorousness.

*[நம்பு → நம்பல்.]*

அல்லீற்றுத் தொழிற்பெயர்.

**நம்பலங்கம்** *nambalaṅgam,* பெ. (n.) முப்பத்து இரண்டு வகைச் சாலாங்கவைப்பு நஞ்சுகளி லொன்று; one of the thirty two kinds of native arsenics.

**நம்பளவன்** *nambaḷavaṉ,* பெ. (n.) நம்முடையவன்; our person.

*[நம்மளவன் → நம்பளவன்]*

ஒ.நோ. இம் + மட்டு = இம்மட்டு → இம்புட்டு.

**நம்பன்** *nambaṉ,* பெ. (n.) **1.** அனைவராலும் விரும்பப் படுபவன்; a favouriate person. "*நம்பன் செல்லு நாளினும்*" (சீவக.363.). **2.** கடவுள்; god "*நம்பனே யெங்கள் கோவே*" (தேவா.954;1.). **3.** சிவன் (சூடா.); šivaṉ "*நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்*" (கம்பரா.ஆற்றுப்.3).

*[நம் → நம்பன்.]*

அனைவராலும் நம்பப்படுபவன். அனைவராலும் நம்பிப் போற்றப் படுபவன். பேரருளை அனைத்து மாந்தருக்கும் (ஆதனுக்கும்) வாரி வழங்கும் வள்ளன்மையுடையவனான கடவுள்.

**நம்பாசு** *nambāšu,* பெ. (n.) நம்பிக்கையின்மை (யாழ்.அக.); distrust.

**நம்பாடுவான்** *nam-bāḍuvāṉ,* பெ. (n.) இசைப்பாணர் குலத்துதித்த திருமாலன்பன் (குருபரம்); Vaiṣṇava devotee born in (išai-p-pāṇar) Tamiḻ bards.

இவர், திருக்குறுங்குடிக்கருகிலுள்ள (முனிக்கிராமம்), முனிச்சிற்றூரில் பிறந்தவர். திருக்குறுங்குடிப்பெருமாள் மீது ஆராக்காதலுடையவர். வீணை இசைத்து பாடல் பாடுவதில் வல்லவர்.

**நம்பாமதம்** *nambā-madam,* பெ. (n.) இறையின்மையை மறுத்துக் கூறும் மதம்; இறைவன் இல்லையென்று கூறும்மதம்; atheism.

**மறுவ.** இல்மதம்.

*[நம்பு + ஆ → நம்பா + மதி → மதம்.]*

"ஆ" ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். கடவுளும், மறுமையும், இல்லையெனும் கொள்கையைக் கூறும் மதம்.

கடவுள் இல்லை யென்பதற்குக் காட்டப்படும் சான்றுகள்:–

1. உடல்நலம், மனநலம், மதிநலம் முதலிய நலங்கள் உள்ளாரும், இல்லாரும் படைக்கப்பட்டிருத்தல்.

2. பஞ்சம், கொள்ளை நோய், பெருவெள்ளம், நிலநடுக்கம் முதலிய, இயற்கை அழிவுநிகழ்ச்சிகள் நேர்தல்.

3. கடவுள் புறக்கண்ணிற்கும் புலனாவதில்லை.

4. ஒன்றோடொன்று முரண்பட்ட பல்வேறு மதங்கள் உலகில் வழங்கி வருகின்றன.

5. நல்லோர் பலர், வறுமை, நோய், பிறரால் துன்பம் முதலியவற்றால் வருந்திக் குறுவாழ்க்கையராய்ச் சாக, தீயோர் பலர் எல்லாவகையிலும் இன்புற்று, நீடு வாழ்கின்றனர்.

6. பல அஃறிணை உயிரினங்கள், பிறவற்றைக் கொன்று திண்பனவாகவே படைக்கப் பட்டுள்ளன.

7. சிலர் எத்துணை உருக்கமாய் இறைவனை வேண்டினும், தாம் விரும்பியதைப் பெறுவதில்லை.

நம்பா மதத்தினர் கடவுளில்லையென்று சொல்லச் சொல்ல, அது ஆரியமேம்பாட்டிற்கும், ஏமாற்றிற்கும் அரண் செய்ததேயாகின்றது.

நம்பு மதத்தவரின் இறையியல் கொள்கை, தமிழர்தம் வாழ்வியற் கொள்கையாகும். நம்பாமதத்தினர் இறைமறுப்புக்கொள்கையானது, ஆரியப் பார்ப்பனரின் வளர்ச்சிக்கு அடிகோலுந் தன்மைத்து. கடவுள் மறுப்புக் கொள்கையானது தமிழனுக்குத் தாழ்வையும், ஆரியனுக்கு உயர்வையும் உருவாக்கும் கொள்கையாக வளர்ந்து வருகிறது.

மக்களாட்சியும், குடியரசும் நடைபெறும் இக் காலத்தில், ஒவ்வொருவர்க்கும் தத்தம் மதத்தைப் பரப்ப முழுஉரிமையுண்டு. ஆதலால், தஞ்சையில் பெரியார் படிமையடித் தளத்தில், நம்பா மதத்தினர், "*கடவுளில்லை, கடவுளில்லை கடவுளென்பதில்லையே*" என்று பொறித்துள்ளனர். (தமிழர் மதம், பக். 158 – 59).

நம்பா மதத்தவரின் அடிப்படைக் கொள்கை, மூடநம்பிக்கைகளை யொழிப்பதே. கண்மூடித்தனமான பழக்கவழக்கங்களை மண்மூடிப்புதைப்பதே யாகும்.

தமிழர்தம் வாழ்வியற்கொள்கைக்கு ஒவ்வாத தொன்மச் செய்திகளை, தமிழர்தம் மனத்தினின்று அழிப்பதாகும்.

**நம்பான்** *nambāṉ,* பெ. (n.) நம்பன் பார்க்க; see nambaṉ. "*நம்பான் மேய நன்னகர் போலுந் நமரங்காள்*" (தேவா.908:1.).

*[நம்பு + ஆன்.]*

**நம்பி** *nambi,* பெ. (n.) 1. அனைவராலும் விரும்பப் படுபவன், ஆணிற்சிறந்தோன் (பிங்.); the elite among men, used as a term of respect. "*குணமாலை நலனுண்ட நம்பி*" (சீவக.1796.). 2. நிறைஞன் அல்லது நிறைவன் (பூரணன்); a perfect soul. "*நறையூர் நின்ற*

*நம்பி"* (திவ்.பெரியதி 7:1:1.). **3.** கடவுள்; the Supreme Being. **4.** நம்பியான் பார்க்க; see nambiyāṉ. **5.** ஒரு செல்வப்பெயர்; a term of endearment. "*நம்பி பிறந்தான் பொலிக நங்கிளை*" (மணிமே.13:21.). **6.** நம்பியாண்டார் நம்பி பார்க்க; see nambi-y-āṇḍār nambi. "*எம்மான் நம்பி பொறுவெனத் தடுத்து*" (பெரியபு. திருமுறை கண்ட.4). **7.** "*அகப்பொருள் விளக்கம்*" என்னும் நூலை இயற்றிய நாற்கவிராச நம்பி; the author a treatise on agapporuḷ viḷakkam. **8.** தம்பூரச்சிகை (சா.அக.); a medical plant used in alchemy.

ம. நம்பி.

*[நம்பு → நம்பி.]*

நம்பு = விருப்பம்.

"நம்பும்மேவும் நசையா கும்மே" (தொல். சொல். 812).

அனைவராலும் போற்றப்படும் நற்குணத்தன். நம்பகத்தன்மையன்.

**நம்பிக்கை** *nambikkai,* பெ. (n.) **1.** உறுதியான தன்னார்வம், முனைப்பு; hope, trusty confidence, faith, assurance. "***இதுவே நம்பிக்கை தேறிக்கொள்***" (இராமநா.உயுத்.28) **2.** ஆணை (வின்.); பூட்கை; oath, vow. **3.** நம்பியொப்பு விக்கப்பட்டது (வின்.); that which is confidential that which is entrusted. **4.** உண்மை (யாழ்.அக.); truth.

க., நம்பிகெ., ம., நம்பிக்க.

*[நம்புகை → நம்புக்கை + நம்பிக்கை.]*

**நம்பிக்கைஓட்டு** *nambikkai-ōṭṭu,* பெ. (n.) நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்படும்போது நடத்தப்படும் வாக்கெடுப்பு; vote of confidence. "***1999–இல் தேசிய மக்களாட்சிக் கூட்டணி, நம்பிக்கை ஓட்டெடுப்பில் தோல்வியுற்றது***" (உ.வ). நம்பிக்கை வாக்கெடுப்பு பார்க்க; see nambikkai vākkeḍuppu.

*[நம்பிக்கை + ஓட்டு.]*

*நம்புகை → நம்புக்கை → நம்பிக்கை*

*ஒ.நோ: தும்புக்கை → தும்பிக்கை.*

பாவாணர் 'ஓட்டு' என்பதை, 'நேரி' என்று, குறிப்பிட்டுள்ளார்.

**நம்பிக்கைக்கேடு** *nambikkai-k-kēḍu,* பெ. (n.) நம்பிக்கையின்மை (பாண்டி.); untrust worthiness.

*[நம்பிக்கை + கேடு.]*

**நம்பிக்கைசெலுத்து–தல்** *nambikkai-šeluttu-,* 5செ.கு.வி. (v.i ) நம்பிக்கைக்குக் குறைவு வாராது நடந்துகொள்ளுதல் (வின்.); to acquit oneself as a trustworthy person

*[நம்பிக்கை + செலுத்து–.]*

**நம்பிக்கைத்துரோகம்** *nambikkai-t-turōgam,* பெ. (n.) **1.** நம்பும்படி நடித்திருந்து, சமையம் வரும் போது, குழிபறித்து வீழ்த்துகை, நன்றிகொல்லுகை; breach of trust, violation of confidence **2.** இரண்டகம் (யாழ்.அக.); ஏமாற்றுகை; deceit, perfidy. **3.** கீழறுப்பு; treachery.

*[நம்பிக்கை + skt.துரோகம்.]*

**நம்பிக்கைநட்சத்திரம்** *nambikkai-natcattiram,* பெ. (n.) குறிப்பிட்ட ஒரு துறையில், அருஞ்செயல் நிகழ்த்தும் விதத்தில், சிறப்பாகச் செயல்படுவார் என்று நம்பப்படும் ஆள்; person showing great promise, ris-

ing star. *சச்சின் தெண்டுல்கர்* இந்திய முக்கோல் (கிரிக்கெட்) அணியின் நம்பிக்கை நட்சத்திரமாக உள்ளார்.

*[நம்பிக்கை +* skt. *நட்சத்திரம்.]*

**நம்பிக்கைப்பட்டயம்** *nambikkai-p-paṭṭayam,* பெ. (n.) உறுதிப்பத்திரம் (M.E.R.310/1916- B); deed assuring the performance of an act.

*[நம்பிக்கை + பட்டயம்.]*

**நம்பிக்கைப்பண்டுவம்** *nambikkai-p-paṇḍuvam,* பெ. (n.) முழுப்பொந்திகையுடன் மனமொன்றித் திருவருள் துணையுடன் செய்யும் மருத்துவம்; faith cure

*[நம்பிக்கை + பண்டுவம்.]*

**நம்பிக்கைப்பத்திரம்** *nambikkai-p-pattiram,* பெ. (n.) உண்மையான தூதுவனென, ஒருவனை உறுதிப்படுத்தும் சீட்டு (இ.வ.); credentials, as of an ambassador.

*[நம்பிக்கை +* skt. *பத்திரம்.]*

**நம்பிக்கைப்பிசகு** *nambikkai-p-piśagu,* பெ. (n) நம்பிக்கைக்கேடு பார்க்க; see nambikkai-k-kēḍu.

*[நம்பிக்கை + பிசகு.]*

**நம்பிக்கைபண்ணு-தல்** *nambikkai-paṇṇu-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** உறுதிசெய்தல் (வின்.); to assure, give confidential assurance. **2.** ஆணையிடுதல் (வின்.); to swear. **3.** நம்பிக்கை செலுத்து-தல் பார்க்க; see nambikkai šeluttu-.

*[நம்பிக்கை + பண்ணு-.]*

**நம்பிக்கைமோசம்** *nambikkai-mōšam,* இரண்டகம் செய்கை; breach of trust. *'நம்பிக்கை மோசம் செய்பவர் நன்றாக வாழ்வதில்லை'* (இக்.வ).

*[நம்பிக்கை + skt. மோசம்]*

**நம்பிக்கையில்லாத்தீர்மானம்** *nambikkai-y-illā-t-tirmāṉam,* பெ. (n.) மக்கள் மன்றத்தின் செயற்பாடுகளைச்சீரமைத்து, செம்மைப்படுத்திச் செயலாற்றுதற் பொருட்டும், செயலாட்சிக் குழுவினைக் கட்டுப்படுத்துவதற்காகவும், அமைச்சரவையின் மேல் நம்பிக்கை இல்லை என்று கூறி, அவையில் எதிர்க்கட்சியினரால் கொண்டுவரப்படும் தீர்மானம்; by no-confidence motion, the parliament controls the executives, moved by the opposition.

*[நம்பிக்கை + இல்லா + தீர்மானம்.]*

நாடாளுமன்றம் அல்லது சட்டப் பேரவையின் சிறப்புமிகு செயற்பாடுகளுள் இஃதும் ஒன்று; அஃது யாதெனின், மக்களவை உறுப்பினர்கள், கேள்விகள், துணைக்கேள்விகள் கேட்டு, நாட்டு மக்களுக்கு நல்லாட்சி கொடுத்திட விழைவர்; அது போழ்து அவர்களால் கொண்டு வரப்படும் தீர்மானங்கள் (நடுவுநிலைமைகுன்றாது கலந்துரையாடிச்) சீர்தூக்கி ஆய்வு செய்யப்படும். பின்பு வாக்கெடுப்பின் வாயிலாக நிறைவேற்றப் படும். சிறப்பாகச் செயலாட்சிக் குழுவினைக் கட்டுப்படுத்தும் தீர்மானம் எனினும், ஒக்கும்.

**நம்பிக்கையுள்ளவன்** *nambikkai-y-uḷḷavaṉ,* பெ. (n.) **1.** நம்பத்தக்கவன்; trustworthyman **2.** பிறர்மேல் நன்னம்பிக்கையுள்ளவன். (வின்.); a trusting, confiding person. **3.** தெய்வ நம்பிக்கையுள்ளவன் (இ.வ.); deist.

**நம்பிக்கையோலை** *nambikkai-y-ōlai,* பெ. (n.) அனுமதிச்சீட்டு (வின்.); passport

மறுவ. இசைவுச்சீட்டு, கடவுச்சீட்டு.

*[நம்பிக்கை + ஓலை.]*

**நம்பிக்கைவாக்கு** *nambikkai-vākku,* பெ. (n) அமைச்சரவையின் மேல் நம்பிக்கையுண்மையை உறுதிப்படுத்த, தலைமையமைச்சர் அல்லது முதலமைச்சர் கொண்டுவந்த தீர்மானத்தின் மீது அவை உறுப்பினர் அளிக்கும் வாக்கு; the costing of vote in a vote of confidence.

*[நம்பிக்கை + வாக்கு.]*

**நம்பிக்கைவாக்கெடுப்பு** *nambikkai-vākkeḍuppu,* பெ. (n.) நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரப்படும்போது, நடத்தப்படும் வாக்கெடுப்பு; vote of confidence.

*[நம்பிக்கை + வாக்கெடுப்பு.]*

**நம்பிகாளியார்** *nambi-kāḷiyār,* பெ. (n.) குலோத்துங்கசோழன் காலத்தவரான, ஒரு தமிழ்ப்புலவர் (தக்கயாகப்.457,பக்.320); a poet, contemporary of Kulōttuṅga-cōḻaṉ.

*[நம்பி + காளியார்.]*

**நம்பிகுட்டுவனார்** *nambi-kuṭṭuvaṉār,* பெ. (n.) சேரர்குடியைச் சேர்ந்த புலவர்; a poet of Cērar kuḍi.

இவரது பாடல்கள் நற்றிணையில் மூன்றும், குறுந்தொகையில் இரண்டும் உள்ளன.

*"முட்கா லிறவின் முடங்குபுறப் பெருங்கிளை*
*புணரி யிகுதிரை தரூஉந் துறைவன்*
*புணரிய இருந்த ஞான்றும்*
*இன்னது மன்னோ நன்னுதற் கவினே"*
(குறுந்.109).

தலைவன், தலைவியை விரைந்து மணம் புரிதற்பொருட்டு, தலைவன் காதில் விழுமாறு தோழி பாடும் பாங்கு, படித்து இன்புறத்தக்கது.

**நம்பிமூத்தபிரான்** *nambi-mūtta-pirāṉ,* பெ. (n.) (கண்ணபிரானுக்குத் தமையன்) பலராமன்; as the elder brother of krShṇa. *"நம்பி மூத்தபிரான் முற்படவந்து கிட்டினவிடத்து"* (ஈடு,4:3:1).

*[நம்பி + மூத்தபிரான்.]*

**நம்பியகப்பொருள்** *nambi-y-aga-p-poruḷ,* பெ. (n.) நாற்கவிராச நம்பி இயற்றிய அகப்பொருளிலக்கணம்; a grammar of Agapporuḷ by Nāṟkavirāša nambi.

*[நம்பி + அகம் + பொருள்.]*

புளியங்குடி நாற்கவிராசநம்பி எனும் புலவரால் எழுதப்பட்ட, அகப்பொருள் இலக்கணநூல்

தொல்காப்பியர், அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்று நான்கு இயல்களில் விளக்கியவற்றை, வரம்பறுத்து, இடையே, வரைவு என்னும் வாழ்வியல் துறையை, இலக்கணவுலகிற்கு எடுத்துக் காட்டியவர் நாற்கவிராசநம்பி.

இஃது, பவணந்தி, பதவியல் எனும் இயலைப் புதியதாகத் தோற்றுவித்தற்கு, இணையானது எனலாம்.

எடுத்துக்காட்டாக, *"நாடக வழக்கினும், உலகியல் வழக்கினும், பாடல்சான்ற புலனெறி வழக்கம்"* என்னும், தொல்காப்பியர் கூற்றினுக்கு, *"புணைந்துரை உலகியல் எனுந்திறம் இரண்டினும், தொல்லியல் வழாமல் சொல்லப்படுமே"* என்று, நானிலத்தார்க்கு, இலக்கணத்தை, வாழ்வியலுடன் இணைத்துக் காட்டிய பாங்கு, நாற்கவியாரின் நற்றிறத்தினைத் தெள்ளிதில் தெரிவிக்கும் பான்மையில் அமைந்துள்ளது, எனலாம்.

**நம்பியகப்பொருள்விளக்கம்** *nambi-y-aga-p-poruḷ-viḷakkam,* பெ. (n.) நம்பியகப் பொருள் பார்க்க; see nambi-y-aga-p-poruḷ.

*[நம்பி + அகப்பொருள் + விளக்கம்.]*

நம்பி அகப்பொருளுக்கு எழுதிய உரைக்குறிப்பு.

**நம்பியாண்டார்நம்பி** *nambi-y-āṇḍār-nambi,* பெ. (n.) சிவனியப்புலவர்; a šaivam poet.

காஞ்சிபுரத்தில் உள்ள திருநாரையூரில் பிறந்த இவர், சிவனியப் (சைவ) படைப்பாளர்களின் செய்யுட்களை வரிசைப்படுத்தி, முதற்கண் ஏழு திருமுறைகளாக வகுத்தார்.

சோழமன்னன் இராசராசனோடு, தில்லைத் திருக்கோயிலுக்குச் சென்று, ஆங்கு ஓர் அறையில் இருந்த மூவர், தேவாரச் சுவடிகளைக் கேட்டபோது, கோயிலுக்கு உரிமை உள்ள பூசகர், "*அம்மூவரே வரின் தருவோம் அன்றி, வேறு யாவர் வரினும் தாரோம்*" என மறுத்தனராம். நம்பி அறுபத்து மூன்று நாயன்மார் சிலைகளுள், மூவர் சிலைகளைக் கொண்டு போய்க்காட்ட, ஆடவல்லானே சிலை வடிவில் இருத்தலான், மறுக்கவொண்ணாது தந்தனர் என்பது, வரலாறு.

நம்பியாண்டார் நம்பிகளால் ஆக்கப்பெற்ற திருத்தொண்டர் திருவந்தாதி, அறுபத்து மூவரின் வரலாற்றுண்மைகளை, விளக்குவது. நம்பியாரூரரின் வாழ்வியல் நிகழ்வினைக் குறிக்கும் பாடல் வருமாறு:-

"*நந்திக்கு நம்பெருமாற்கு நல்*
*லாரூரில் நாயகற்குப்*
*பந்திப்பரியன செந்தமிழ்*
*பாடிப் படர்புனலின்*
*சிந்திப்பரியன சேவடி*
*பெற்றவன் சேவடியே*
*வந்திப்பவன் பெயர் வன்தொண்டன்*
*என்பரிவ் வையகத்தே*"

சுந்தரர் எழுதிய நூலே தொகையாக, இவர் பாடல் வகையாக, விரியாக, சேக்கிழார் திருத்தொண்டர், திருத்தொன்மம் (புராணம்) எழுத உதவியது.

**நம்பியாரூரர்** *nambi-y-ārūrar,* பெ. (n.) தோழமைநெறியில் நின்று ஒழுகி, கடவுள், ஆதன்(ஆன்ம) உறவுமுறையை உலகிற்குத் தமது வாழ்வின் வாயிலாக, வாழ்ந்து காட்டியவர். a Šaivamšaint Nambiyārūrar, called Šundarar, established the friendly relationship with God and soul to the world. "*தேனொழுகு மலரினற்றா ரெம்பிரான் நம்பியாரூரனே*" (பதினொ.திருத். திருவந்.8.).

**மறுவ.** ஆரூரர், இசைஞானி காதலன், சடையன், சுந்தரர், தம்பிரான் தோழர், தமிழ்நாதன், நாவலர்கோன், நாவலூரர், நாவலூராளி.

*[நம்பி + ஆரூரர் → நம்பியாரூரர்.]*

நம்பி = ஆடவருள் சிறந்தவன்.

ஆர் + ஊர் → ஆரூர் → ஆரூரர்.

ஆர்தல் = அமைதல், பற்றப்பெறும் பொருள்களையெல்லாம், தன்னுள் அடக்கிக் கடந்து நிற்றல்.

**ஊர்தல்** = ஒரு பொருளை ஒற்றி, அப் பொருள் உயரஉயரத் தானும் உயர்ந்து, நிற்கும்நிலை. பற்றிஅமர்தல், ஒற்றி ஊர்தல் என்ற இருநிலைகளைக் கொண்ட காரணத்தால், ஆரூர் திருவாரூர் எனப்பெயர் பெற்றது.

இறைவனுடன் பூண்ட தோழமை நெறியை, தமது வாழ்விலும் இணைத்து ஒழுகிய கரணியத்தால், வன்தொண்டர், நம்பியாரூரர் என்று, நானிலத்தவர்களால் போற்றப்பெறுகிறார்.

நம்பியாரூரர்தம் வாழ்வியல் வரலாற்றிற்கு அகச்சான்றுகளாகத் திகழ்பவை வருமாறு:-

1. ஏழாந்திருமுறைப் பதிகம் நூறும்:- பாடல்கள்-1026.

2. நம்பியாண்டார்நம்பிகள் அருளிய

திருத்தொண்டர் திருவந்தாதியில்– சுந்தரரைப்பற்றிய 11–பாடல்களும், சுந்தரரின் பெற்றோரான, சடையனார், இசைஞானியார் பற்றிய இரண்டு பாடல்களும்.

3. திருத்தொண்டத்தொகைப்பதிகம், திருத்தொண்டர் திருவந்தாதி எனும் இரண்டு தொகையும், வகையுமாக அமைய, அவைகளின் விரியாக அமைந்த திருத்தொண்டர் (புராணம்) மாக்கதை. (சேக்கிழார்–அருளியது).

4. கி.பி. 17ஆம் நூற்றாண்டில் இயற்றப்பட்ட நால்வர் நான்மணிமாலை; இந் நூலுள், சிவப்பிரகாசர் நம்பியாரூரரைப் பற்றிப் 10 பாடல்களைப் பாடியுள்ளார். 5. வள்ளலார் அருளியது ஆளுடை நம்பிகள் அருள்மாலை. இந்நூலுள் 10 பாடல்களை, இராமலிங்க அடிகள் பாடியுள்ளார். நம்பியாரூரர், இறைவனைத் தோழனாக எண்ணினார்; மதித்தார்; செயற் படுத்தினார், என்பதற்குரிய எடுத்துக் காட்டுகள் வருமாறு:–

1. *"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி."* (தேவா.7:5:10.).

2. *"தன்னைத் தோழமையருளித் தொண்டனேன் செய்த துரிசுகள் பொறுக்கும் நாதனை"* (தேவா.7:68:8.).

3. *"என்னுடைய தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி"* (தேவா.7:51:1.).

4. *"என்றனை ஆள்தோழனை"* (தேவா. 7:84:9.).

5. *"தூதனைத் தன்னைத் தோழமையருளித்"* (தேவா.7:68:8.).

இறைவன்–நம்பியாரூரர், இருவருக்கு மிடையில், வேற்றுமையற்ற, விழுமிய, தோழமையன்பினை ஏழாந்திருமுறையில் உள்ள திருப்பதிகத் திருப்பாக்கள், தெளிவு றுத்துகின்றன.

**நம்பியாரூரனார்** *nambi-y-ārūraṉār,* பெ. (n.) நம்பியாரூரர் பார்க்க; (S.I.I Vol.II 169); see nambi-y-ārūrar.

*[நம்பி + ஆரூரன் + ஆர்.]*

*ஆர்= பெருமைப்பொருட்பின்னொட்டு*

**நம்பியான்** *nambiyāṉ,* பெ. (n.) கோயிற் பூசகரின் பட்டப்பெயர்; the title of officiating temple priests. *"வைகானச நம்பியாரை"* (கோயிலொ.43).

ம. நம்பியான்.

*[நம்பி → நம்பியான்]*

**நம்பியிடையர்** *nambi-y-iḍaiyar,* பெ (n.) இடையருள் ஒரு பிரிவினர் (நாஞ்.); a sub caste among cowherds.

*[நம்பி + இடையர்.]*

**நம்பிராட்டி** *nambirāṭṭi,* பெ. (n.) நம்பிராட்டியார் பார்க்க; see nambirāṭṭiyār.

*[நம் + skt. பிராட்டி.]*

பெருமாட்டி → பிராட்டி:

ஒ.நோ. பெருமான் → பிரான்.

**நம்பிராட்டியார்** *nam-pirāṭṭiyār,* பெ. (n.) 1. அரசி; queen, consort. *"உடையார் ராசராசதேவர் நம்பிராட்டியார்"* (S I I Vol I,91). 2. கடவுள் தேவி; Goddess. *"நம்பிராட்டியார் உமாபரமேசுவரியார்"* (S.I.I.Vol.III,16.).

*[நம் + பிராட்டியார்.]*

**நம்பிரான்** *nam-birāṉ,* பெ. (n.) **1.** தலைவன்; lord. **2.** கடவுள்; God. **3.** கடவுளர் திருவுருவைத் தாங்கிச் செல்லும் குதிரை யூர்தி; horse, as vehicle of deities. ***"குதிரையில்லாத வூரிற் கழுதை நம்பிரான்"*** (இ.வ.)

*[நம் + பிரான்.]*

பெருமான் → பிரான்.

**நம்பிரான்விளையாட்டு** *nambirāṉ-viḷaiyāṭṭu,* பெ. (n.) பங்குனியுத்தரத்தன்று, சாத்தை யரைக் குதிரையூர்தியில் எழுந்தருளுவித்து, வையாளி விடுந்திருவிழா (நாஞ்.); a festival in which the šāstā is made to promenade on his horse-vehicle, during paṅguṉi-y-uttiram.

*[நம்பிரான் + விளையாட்டு.]*

**நம்பிள்ளை** *nam-piḷḷai,* பெ. (n.) ஈடு என்று வழங்கும் திருவாய்மொழியின் உரைகாரர்; a celebrated Vaishṇava ācārya whose exposition of Tiruvāy-moḻi was the basis of the commentary known as īḍu.

*[நம் + பிள்ளை.]*

**நம்பு[1]–தல்** *nambu-,* 5செ.குன்றாவி. (v.t.) **1.** விரும்புதல்; to long for, desire intensely. ***"நின்னிசை நம்பி"*** (புறநா: **136). 2.** நம்பிக்கை வைத்தல்; to trust, confide in, relay on, believe, have faith in. ***"நாதனே யருளிச்செய்த வார்த்தையை நம்பிவந்தேன்"*** (திருவாலவா: **28: 17.). 3.** எதிர்பார்த்தல்; to hope, expect. அவர் வேலை கிடைக்குமென்று நம்பியிருக்கிறான் (உ.வ.) **4.** ஒப்புதலளித்தல்; to accept. ***"வினைக ணலியாமை நம்பு நம்பீ"*** (திவ். பெரியதி, **6: 3: 9).**

க., து., நம்பு. தெ., நம்மு ம. நம்புக.

*நயத்தல் = விரும்புதல்.]*

*நயம் = விருப்பம்.*

*[நுல் → நல் → நள்.]*

*[நள் → நய் → நய → நயம்*

*நயம்பு → நம்பு.]*

**நம்பு[2]** *nambu,* பெ. (n.) 1. விருப்பம், ஆர்வவேட்கை; desire. ***"நம்பு மேவு நசையா கும்மே"*** (தொல். சொல். **329) 2.** நம்பிக்கை; hope.

**மறுவ.** நசை.

*[நயம்பு → நம்பு.]*

**நம்பு[3]** *nambu,* பெ. (n.) கோயிற் பூசகரின் அலுவலகம்; office of temple priest. ***"இவ்வூர்ப் பிள்ளையார் கோயிலும் நம்பும்" "நம்பு செந்தாமரைக் கண்ணாற்கு"*** (T.A.S I **263.).**

விருப்புக்குரிய, பூசைப் பணியைச் செய்வார் அலுவலகம்.

**நம்பு[4]** *nambu,* பெ. (n.) நாவல் (மலை.); jamoon plum.

விரும்பத்தக்க நாவற்பழமரம்.

**நம்பு[5]** *nambu,* பெ (n.) கோயிலிற்பூசை செய்யும் உரிமை; right of conducting pūšai in a temple. ***"அசற்பங்கில் நம்பும்"*** (S I I.**327).**

**நம்புசெய்வார்** *nambu-šeyvār,* பெ. (n.) கோயில் பூசாரி (கல்); temple priest

*[நம்பு + செய்வார்.]*

**நம்புண்டல்** *nambuṇḍal,* பெ. (n.) நம்பும்படிச் செய்கை. making one to believe; "*அன்னான்சொ னம்புண்டல்*" (கலித். 47: 10.)

*[நம்பு + உண்டல்.]*

**நம்புமதம்** *nambu-madam,* பெ (n.) கடவுள் உண்டென்று நம்பிக்கை கொண்டமதம்; theism.

*[நம்பு + மதம்.]*

**மறுவ.** உள்மதம்.

மாந்தன் மனத்தை இறுகப்பிணிக்கக் கூடிய பற்றுகளுள், மிகுந்த வலிமையுடையது நம்புமதப்பற்று. தமிழருள் பெரும்பாலர் இறைப்பற்றுமிக்கவர். நம்புமதக் கொள்கை, தமிழர்தம் அகநாகரிகத்தின் வெளிப்பாடு. பண்பாட்டறிவியலின் திறவுகோல்.

நம்புமதத்தைச் சார்ந்த மெய்ப்பொருட்டுறை, இன்றளவும் மேலைநாட்டில் காலூன்றியுள்ளது. பெரும்பாலான மேலை நாட்டுமாந்தர்தம் வாழ்வியலில், இணைந்துள்ளது.

நம்பு மதத்திலுள்ள சிவக்கொண்முடிபினர், அன்புவடிவான மெய்ப்பொருளை, மேலையரும், கீழைநாட்டவரும், மனங்கொளத்தக்க வகையில் உரைத்தவர் ஆவர். அனைத்து மதத்தினரும் மனங்கொளத்தக்கவாறு,

"*அன்பிலா ரெல்லாம் தமக்குரியர் அன்புடையார்*
*என்பும் உரியர் பிறர்க்கு*" (குறள்,4.).

என்று, உலகப்பொதுமறை பேசும். இக் கருத்தினையே, நம்புமதத்தைச் சார்ந்த திருமூலரும்,

"*அன்புஞ்சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே*"
(திருமந்.257)

என்று, திருமந்திரமறையில், திருவாய்மலர்ந் தருளுகின்றார்.

தேவிக அறத்தை வலியுறுத்துவதே, நம்புமதத்தாரின் அடிப்படைக் கொள்கை. கடவுளும் மறுமையும் உண்டென்பதே இவர்தம் கோட்பாடு. நம்பு மதத்தினர், கடவுள் உண்டென்பதற்கு உரைக்கும் சான்றுகளைப் பாவாணர் பின்வருமாறு வரிசைப்படுத்து கின்றார்:—

1. கதிரவக்குடும்பத்தைச் சேர்ந்த கோள்கள் எல்லாம், இடையறாது ஓர் ஒழுங்காக இயங்கி வருகின்றன.

ஓர் ஊரில் ஊர்க்காவலோ, அரசியல் ஆட்சியோ, சிறிதுநேரம் இல்லாவிடினும், கலகமும் கொள்ளையும், கொலையும் நேர்கின்றன. உயிரற்ற நாளும் கோளும் பாவையாட்டுப் போல் ஒழுங்காக ஆடிவரின், அவற்றை ஆட்டும் ஓர் ஆற்றல் இருத்தல் வேண்டும். அவ் வாற்றல் முழுமையானது, நிறைவானது, எஞ் ஞான்றும், எப்போதும், எவ்விடத்தும், நிறைந்து திகழும் பேராற்றல். இப் பேராற்றல் அறிவற்றதாயிருக்க முடியாது. அவ் வாற்றலறிவே இறைவன்.

2. இவ்வுலகம் முழுமைக்கும், கதிரவன் பகல்விளக்காகவும், திங்கள் இராவிளக்காகவும், எண்ணிற்கும் எட்டாத காலத்திலிருந்து, விளங்கி வருகின்றன.

ஒரு வீட்டில் விளக்கேற்றி வைப்பது, அதிற்குடியிருக்கும் மக்கட்கே. மக்களில்லா வீட்டில் விளக்குத் தானாகத் தோன்றி எரியாது. பல வுலகங்கட்கும், இரு சுடரையும் விளக்காக ஏற்படுத்தியவன், ஒருவன் இருத்தல் வேண்டும். வேலை செய்யாத தூக்க வேளையாகிய இராக்காலத்திற்கு, வெப்பமான நெருப்பொளி விளக்காகாது. குளிர்ந்த நிழலொளி விளக்காக விருப்பதும், கவனிக்கத் தக்கது.

3. பிற கோள்களைப்போற் சுற்றாது ஒரேயிடத்திலிருக்கும் கதிரவன், பத்துத் திசையும் ஒளி சமமாகப் பரவுமாறு உருண்டையாயிருப்பதும், அளவிடப்படாத நீள்பெருங்காலம் எரிந்து வரினும், அதன் எரியாவி, குன்றி யணையா திருப்பதும், இயற்கைக்கு மாறான இறும்பூதுச் செய்தி

யாதலால், அதையியக்கி யாளும் ஒரு பரம்பொருள் இருத்தல் வேண்டும்.

**4.** கோள்கள் ஒன்றோடொன்று முட்டாது, தன் பாதை வட்டத்தில் இயங்குமாறும், இவை சுழலுங்கால், அவற்றின் மேலுள்ள பொருள்கள் நீங்காவாறும், ஒவ்வொன்றையுஞ் சூழ ஒரு கவர்ச்சி மண்டலம் அமைந்திருப்பதும் இயற்கைக்கு ஏற்றதேயாகும்.

**5.** காலமும், இடமும், தொடக்கமும், ஈறும் இல்லாதவையாதலால், இற்றை மக்களுலகந் தோன்றுமுன், எண்ணிக்கையற்ற உயிருலகங்கள் தோன்றியழிந்திருத்தல் வேண்டும். இதைத்தான்,

*"படைத்து விளையாடும் பண்பி னோனும்*
*துடைத்துத் துயர்தீர் தோற்றத் தோனும் தன்னில்*
*வேறு தானென் றிலோனும்*
*அன்னோன் இறைவ னாகும்என் றுரைத்தனன்"*

மணிமேகலைக்கு அறிவுறுத்திய சிவனியத் தருக்கி (சைவவாதி).

**6.** மாந்தன் தோன்றி ஐம்பதினாயிரம் ஆண்டாயிற்றென வைத்துக்கொள்ளினும், நூற்றுக்கணக்கான தலைமுறைகள் கழித்திருத்தல் வேண்டும். பத்துக் கணக்காகத் தொடங்கிய மக்கட்டொகை, இன்று, நூறு கோடிக்கணக்காகப் பெருகியுள்ளது. ஒவ்வொரு தலைமுறையிலும், எத்தனையராயினும், அத்தனையரும், அடையாளங் காணுமாறு வெவ்வேறு முகவடிவிலுள்ளனர். கைவரையும் வேறுபட்டுள்ளது. இது அறிவு நிரம்பிய ஒரு பேராற்றலின் செயலேயாகும்.

**7.** *"கடவுளை நம்பினோர் கைவிடப் படார்"* என்பது, இன்றும் சிலர் வாழ்க்கையில் மெய்ப்பிக்கப்படுகின்றது.

நம்புமதத்தை எஞ்ஞான்றும் எவராலும் ஒருபோதும், அழிக்கவியலாது:—

கடவுள் நம்பிக்கையற்ற தற்பெருமை வேந்தரும், நெறிதப்பிய அறிவியலாராய்ச்சியாளரும், பொதுவுடமைக் கொள்கையினரும், நம்புமதத்தை (கடவுட்கொள்கையை) ஒழிக்கத் தம்மால் இயன்றவரை முயன்று வந்துள்ளமை கண்கூடு. கடவுட்கொள்கை (நம்புமதம்) என்பது, முற்றும் உள்ளந் தொடர்பானது. நம்பாமதத்தினரும் இயற்கையாற்றலை இறையென்று உரைத்து வருவது, அனைவரும் அறிந்ததே.

கனவு காணாது உறங்கும் நேரம் தவிர, மற்றெல்லாநேரத்திலும்—இருப்பினும், நடப்பினும், வேலை செய்யினும், உரையாடினும், உண்ணினும்—இறைவனை நினைக்கவும், வழுத்தவும், வேண்டவும் இயலுமாதலின், மனம் உள்ளவரை மதத்தை, நம்புமத மாந்தரை ஒருவராலும் அழிக்கமுடியாதென அறிக. நம்புமதக் கடவுள் இயலும் கொள்கையும்:—

ஊர், பேர், காலம், இடம், வண்ணம், வடிவம், பால், பருவம், முதலிய வரையறையின்றி, எங்கும் நிறைந்து, எல்லார்க்கும், எல்லாவற்றிற்கும் பொதுவாய், எல்லாவல்லதாய், என்றும் மாறாதிருக்கும் பரம்பொருளை, உள்ளத்தில் அகக்கண்ணால் கண்டு, தொழுது, உணர்ந்து உணர்ந்து, அன்பே நிறைந்து நிறைந்து, ஊற்றெழுங்கண்ணீர் அதனால் உடம்பு நனைந்து, அருளமுதே நல்நதியே என்று வனைந்து வனைந்து இறைவனை ஏத்தி, முக்கரணத்தூய்மையுடன் ஒழுகுவதே, நம்புமதத்தின் கடவுட்கொள்கையாகும்.

எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் கடவுள்; இக் கடவுளே அனைத்துலகத்தையும் ஆள்வதால், ஆண்டவன் என்றழைக்கப் படுகிறான். நம்புமதத்தில், கடவுள், தெய்வம் என்பவை, எங்குந்தங்கியிருக்கும் அனைத்து மதத்தவர்தம் மனத்தினின்று, அனைவரையுங் காத்து, எல்லாவுலகங்களை ஆள்வதால், ஆண்டவன் என்றழைக்கப்படுகின்றான். அங்கிங்கெனாதபடி எங்கும் ஆட்சி நடாத்தும் கடவுள், எல்லாமதத்தார்க்கும், அனைத்து உயிர்கட்கும், உணவைப் பகுத்தளிப்பதால் பகவன் ஆகிறான்.

கடவுள் என்னுஞ்சொல்லை, அனைத்து மதத்தாரும் பயன்படுத்தியஞான்றும், சிறப்பாகப் பயன்படுத்துபவர் நம்புமதத்தினரே ஆவர்.

கடவுள், தெய்வம், எனுஞ்சொற்கள் நம்புமதத்தில் எல்லாம் வல்ல இறைவணக்கத்தை மேற்கொண்ட, சிவனியம், மாலியம், யூதம்,

கிறித்தவம், இசலாம் முதலான அனைத்து மதத்தார்க்கும் பொதுவான சொற்கள். (எ.டு) '*தெய்வம் உணாவே*' (தொல்.964). "*வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படும்*'' (குறள்,50). "*தெய்வம் நின்று கொல்லும்*" (பழமொழி.).

நம்புமதத்தவரான குமரிநாட்டுத்தமிழர், இசுமவேல இசுரவேலரின் முன்னோனான ஆபிரகாமிற்கு முற்பட்டவர். நோவா காலத்துப் பெருவெள்ளத்திற்கும் முன்னரே, குமரி நாட்டில் வதிந்த நம்புமதத்தினர், கடவுளை முதன்முதலாகக் கண்டவர் என்பது, பாவாணர்தம் கூற்று. தமிழர் மதம் பக். 156. கடவுள் என்னுஞ்சொல் தொல்காப்பியத்தில் ஆளப்பட்டிருப்பதே அதற்கு சான்றாம். எ.டு '*காமப்பகுதி கடவுளும் வரையார்*' (தொல்.புறத்.28). "*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே*" (தொல்.புறத்33).

நம்புமதத்தவர் பயன்படுத்தும் கடவுள் என்னுஞ்சொல், எல்லாவற்றையும் கடந்து, எண்ணிற்கும் எட்டாத பரம்பொருளையே குறிக்கும்.

கடவுட்கு உருவமின்மையால், உருவ வணக்கமும் இல்லை. எவரும், எங்கும், என்றும், தமித்தும், பிறரொடும்கூடியும், நம்புமதத்தினர் இறைவனைத் தொழும் பான்மையினை இன்றும் காணலாம்.

மாந்த இனம் இம் மன்பதையில் உள்ள வரை நம்புமதம் இருக்கும்.

**நம்புரி** *namburi,* பெ. (n.) நம்பூதிரி பார்க்க; see nambūdiri. "*கண்ணகியும்....நம்புரிமார் வீதியிலே நலமா யெழுந்திருந்தாள்*'' (கோவ.க.112).

*[நம்பு → நம்புரி.]*

**நம்பூதிரி** *nambūdiri,* பெ. (n.) மலையாளப் பிராமணர் வகையினன் (E.T.V. 152); a class of brahmins in malabar.

ம. நம்பூதிரி.

**நம்பூரி** *nambūri,* பெ. (n.) நம்பூதிரி (இ.வ.) காண்க: see nambūdiri.

க. நம்பூரி.

இடைக்குறைப் பட்ட சொல்.

**நம்பெருமாள்** *nam-perumāḷ,* பெ. (n.) திருவரங்கத்துத் திருமால்; Tirumāḷ, worshipped at Tiruvarangam. "*நம்பெருமாள் நம்மாழ்வார்". உபதேசரத்.50.*

*[நம் + பெருமாள்.]*

**நம்மளவன்** *nammaḷavaṉ,* பெ. (n.) நம்மையொத்தவன்; those like ourselves

*[நம் + அளவு + அன்.]*

**நம்மனோர்** *nammaṉōr,* பெ. (n) 1. நம்மையொத்தவர்; *those like ourselves, our party.* "*ஆங்கனமற்றே நம்மனோர்க்கே*" (மலை படு. 402). 2. எம்மனோர். பார்க்க; *see emmaṉōr,* 2.

*[நம் + அன்ன + ஓர்.]*

**நம்மாழ்வார்** *nammāḻvār,* பெ. (n.) ஆழ்வார்கள் பதின்மருள் தலைமையானவரும், திருவாய் மொழி முதலிய தெய்வப்பனுவலின் ஆசிரியரு மான திருமாலடியார் (உபதேசரத். 50); a Tirumāl Šaint, author of Tiruvāymoḻi and other works, foremost of Aḻvār

[நம் + ஆழ்வார்.]

நாலாயிரத் தெய்வப்பனுவலுள் திருவாய் மொழியும், பன்னிருதிருமுறையுள் திரு வாசகமும், மிக்குயர்ந்த நடையின. '*அற்றது பற்றெனின் உற்றது வீடு*' (திருவாய்மொழி. நம்மாழ்வார்).



**நம்முள்ளவன்** *nammullavan*, பெ. (n.) நம்முடையவன்; *one of our men.* (இ.வ.).

[நம் + உள்ளவன் → நம்முள்ளவன்.]

**நம -த்தல்** *nama-*, 4செ.கு.வி. (v.i) நமு²-த்தல் பார்க்க; *see namu²-.* "*அப்பளம் நமத்துப் போயிற்று*".

தெ. நெம்மு.

**நமக்காரி** *namakkāri*, பெ. (n.) தொட்டாற் சுருங்கி; worm killer, sensitive plant.

**நமச்சாரம்** *namaccāram*, பெ. (n.) *நவச்சாரம்* பார்க்க; see *navaccāram.*

**நமசம்** *namāšam*, பெ. (n.) இணக்கம்; (யாழ். அக.) pliability.

**நமட்டு-தல்** *namattu-*, 5 செ.கு.வி. (v.i.). **1.** மறைத்தல்; to whisper. **2.** ஏமாற்றுதல்; to cheat.

*[நிமிண்டு → நிமிட்டு →நமி ட்டு → நமட்டு-.]*

**நமட்டுக்கடி-த்தல்** *namattu-k-kadi-*, 4 செ.கு.வி. (v.i.) *நமடுகடி* - (இ.வ.) பார்க்க; see *namadu-kadi-.*

*[நமடு → நமட்டு + கடி.]*

**நமட்டுச்சிரங்கு** *namattu-c-cirangu*, பெ. (n.) *நமட்டுச்சொறி* பார்க்க; see *namattu-c-cori.*

*[நமிட்டு → நமட்டு.]*

**நமட்டுச்சிரிப்பு** *namattu-c-cirippu*, பெ. (n.) பகடி, ஏளனப் புன்சிரிப்பு; suppressed smiles in redicule

[நமட்டு + சிரிப்பு ]

**நமட்டுச்சொறி** *namattu-c-cori*, பெ. (n.) **1.** சிரங்கு; itch, scabies. **2.** சொறிபுண்; papular eruption of the skin, of which violent and chronic itching is the chief symptom, prurigo. **3.** சிரங்குவகை; cutaneous disease with glistening imbricated scales affecting only the superficial layers of the skin, psoriasis.

[நமட்டு + சொறி.]

**நமட்டுமண்** *namattu-man*, பெ. (n) ஈரக் கொல்லை. (நமட்டு மண்); wet garden.

[நமட்டு + மண்.]

**நமட்டுவிஷமம்** *namattu-višamam*, பெ. (n.) மறைவாகச் செய்யும் குறும்பு; (இ.வ) secret mischief.

[நமட்டு + Skt. விஷமம்.]

**நமடு** *namadu,* பெ. (n.) சிறுபேன் (அபி.சிந்.); louse.

*[நமுடு → நமடு.]*

**நமடுகடி-த்தல்** *namaḍu-kaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) குழந்தைகள் உதட்டைக்கடித்தல்; to bite the lips, as children.

*[நமடு + கடி-.]*

**நமத்தம்** *namattam,* பெ. (n.) சடாமாஞ்சி; (சங்.அக.) spikenard herb.

**நமத்துப்போ-தல்** *namattu-p-pō-,* 6 செ.குன்றா.வி. (v.t.) ஈரமேறுதல்; to become damp, moist. அப்பளம் நமத்துப் போயிற்று. (உ.வ).

*[நமத்து + போ-.]*

**நமதன்** *namadaṉ,* பெ. (n.) ஆண்டவன்; lord, God.

*[நமது + அன்.]*

**நமபுரம்** *nama-puram,* பெ. (n.) எமனது நகரம்; yama's city."எதிர்பொருசேனை நமபுரம் நணுக" (திவ்.பெரியாழ்.4.7:4.).

*[நமன் + புரம்.]*

**நமர்[1]-த்தல்** *namar-,* 4 செ.கு.வி. (v.i.) நமு[2]-த்தல் பார்க்க; see namu[2]-

**தெ.** நெம்மு.

*[நமு → நமர்.]*

**நமர்[2]** *namar,* பெ. (n.) 1. நம்முடைய சுற்றத்தார்; our relations. "*நமர் விட்ட வேறு*" (பு.வெ.ஒழிபு. 5.). 2. நம் சார்பானவர்; persons of our party.

*[நம் + அர்.]*

ஏட்டுச்சுவடி தொகுத்து வந்த மெய்ப்பொருள் நாயனார் வரலாற்றில், சுவடியில் சிறுவாள் வைத்துக் கொன்ற முத்தநாதனை நோக்கி மெய்க்காப்பாளன் பாய்ந்தபோது, தத்தா நமரெனத்தடுத்து வீழ்ந்தது பொருட்செறிவு மிக்க இலக்கியச் சான்று.

**நமரி** *namari,* பெ. (n.) நீண்ட எக்காளவகை (குஞ்சை); a kind of long trumpet.

**நமரைவாழை** *namarai-vāḻai,* பெ. (n.) வாழைவகை; green banana.

**நமலு-தல்** *namalu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வணங்குதல்; to reverence, worship, bow, prostrate; "*வானவர் வானவர் கோனொடு நமன்றெழுந் திருவேங்கடம்*" (திவ்.திருவாய். 3:3:7).

*[நமல் → நமலு-.]*

**நமன்** *namaṉ,* பெ. (n.) எமன் பார்க்க; see emaṉ. "*நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்*" (தேவா. 1236:1).

**மறுவ.** யமன், யாமன், கூற்றுவன், காலன்.

*[யமன் → ஞமன் → நமன்.]*

யாமத்தில் வந்து மாந்தர்தம் உயிரை வவ்வுவதாகக்கருதப்படும் கற்பனையுருவன்.

**நமனமண்டபம்** *namaṉa-maṇḍabam,* பெ. (n.) நபன மண்டபம் (S.I.I.V. 236) பார்க்க; see nabaṉa-maṇḍabam.

**நமனிகை** *namaṉigai,* பெ. (n.) திருமஞ்சனம்; inner santuary.

**நமிட்டு–தல்** *namiṭṭu-,* 5செ.குன்றாவி. (v.t) கிள்ளுதல்; to pinch.

*[நமட்டு → நமிட்டு–.]*

**நமிடு** *namiḍu,* பெ. (n.) 1. நாரைவகை; a kind of crane. "*நமிடு கரப்பான் வாதம் நாட் சோபை மாற்றும்*" (பதார்த்த. 898). 2. நமுடு². (யாழ். அக.) பார்க்க; see namuḍu ².

*[நமடு + நமிடு.]*

**நமிநந்தியடிகணாயனார்** *nami-nandi-y-aḍigaṇāyaṉār,* பெ. (n.) நாயன்மார் அறுபத்துமூவருள் ஒருவர் (பெரியபு); a canonized šaiva šaint one of 63.

*[நமி + நந்தி + அடிகள் + நாயனார்.]*

நமிநந்தியடிகள், திருவாரூர் திருவள்நெறியில் ஒன்றியவர். பெரியபுராணத்துள், நான்காம் சருக்கமாகிய திருநின்ற சருக்கத்துள், இவர்தம் வரலாறு, காணப்படுகிறது. சிவலிங்கத்தால், முத்திபெற்ற 30–அடியார்களுள் ஒருவராவார். இவரை, நம்பியாரூரர், "*அருநம்பி நமிநந்தி அடியார்க்குமடியேன்*", என்று போற்றியுள்ளார். திருநாவுக்கரசர், தமது திருவாரூர்த் தேவாரத்தில், "*தொண்டர்களுக்கெல்லாம் ஆணிப்பொன்*" என்று குறித்துள்ளது, இவர்தம் சிறப்பிற்கு, எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது. இவர், திருவாரூர் குளத்துநீரில் விளக்கெரித்தவர் என்று, போற்றப்படுகிறார்.

**நமு¹–த்தல்** *namu-,* 4 செ.குன்றாவி. (v.t.) தொல்லை தருதல்; to trouble, tease, vex. "*என்னை நமுக்கிறான்*". (இ.வ.).

*[நச்சி → நசி → நச → நம → நமு–.]*

நச்சரவு அல்லது தொல்லைத் தருபவனை நச்சுப்பேர்வழி என்பர். தொந்தரவு அல்லது தொல்லைத்தரும் கைக்குழந்தைகளை, நைநை என்று நச்சரிக்கிறது என்றும், "*நமுண்டி எடுக்கிறது என்றும்*" நமுண்டல் பொறுக்க முடியவில்லை என்றும், நாட்டுப்புறத்தே வழங்குவது அறிக.

**நமு²–த்தல்** *namu-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஈரமேறுதல்; to become damp, moist.

தெ. நெம்மு.

நசத்தல் = ஈரமுறுதல்.

*[நச → நம → நமு–.]*

நமத்தல் = ஈரமேறுதல் நமத்தல் → நமுத்தல் = ஈரமேறிப்பதனழிதல், நொந்து அல்லது நைந்துபோதலையும், நமுத்துப் போயிற்று என்பர்.

**நமுகு–தல்** *namugu-,* 5 செ.குன்றாவி. (v.t.) குழைதல்; to yield under pressure. "*இணைமுலை நமுக நுண்ணிடை நுடங்கத் துனியிருங்கலவி செய்து*" (திவ். திருவாய். 9:9:3.).

*[நை → நய் → நசி → நசிகு → நமுகு–.]*

நைந்துபோதல், குழைந்துபோதல் என்னும் பொருண்மையினின்று தோன்றும், நசி என்னும் வினையடியினின்று முகிழ்த்த சொல்.

ஒருகா. *[நம → நமத்து → நமுத்து → நமுத்து → நமுகு–.]*

குழைந்துபோன சோற்றையும், தண்ணீரில் ஊறிப்பதனழிந்துப் போன பொருட்களையும், நமத்துப்போயிற்று என்று நவிலும் பாங்கு, நாட்டுப்புறத்தே இன்றும் காணப்படுகிறது. காலப்போக்கில், தலைவனும் தலைவியும் முயங்குங்கால் ஏற்படும் இன்பக் குழைவையும் குறிக்கலாயிற்று.

**நமுட்டு[1]–தல்** *namuṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தினவுண்டாதல்; to itch.

*[நமட்டு → நமுட்டு–.]*

**நமுட்டு[2]–தல்** *namuṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நெருடுதல்; நிமிண்டுதல்; to pinch.

**மறுவ.** கிள்ளுதல்.

*[நமட்டு + நமுட்டு–.]*

**நமுட்டுச்சிரங்கு** *namuṭṭu-c-ciraṅgu,* பெ. (n.) நமட்டுச்சொறி பார்க்க; see namaṭṭu-c-coṟi.

[ நமுட்டு + சிரங்கு. ]

**நமுட்டுச்சிரிப்பு** *namuṭṭu-c-cirippu,* பெ. (n.) தனக்குத் தெரிந்தது பிறருக்குத் தெரியாது என்ற முறையில், வெளிப்படுத்தும் அமர்த்தலான சிரிப்பு; shy smile (generally accompanying teasing). நண்பரின் பையிலிருந்து கீழே விழுந்த தூவலைத் (பேனாவை) தன் கையில் மறைத்துக் கொண்டு நமுட்டுச் சிரிப்புடன், *'கையெழுத்துப் போட உன் தூவலைக் கொடு'* என்றார். (இக்.வ.).

*[நமட்டு → நமுட்டு + சிரிப்பு.]*

**நமுட்டுச்சொறி** *namuṭṭu-c-coṟi-,* பெ. (n.) நமட்டுச்சொறி பார்க்க; see namaṭṭu-c-coṟi.

[நமுட்டு + சொறி.]

**நமுடு[1]** *namuḍu,* பெ. (n.) 1. கீழுதடு; lower lip, 2. ஈர்; nits, larvae of insects; 3. கொக்கு; crane

[நம் + உடு → நமுடு.]

**நமுடு[2]** *namuḍu,* பெ. (n.) 1. தரையிலேயே கூடுகட்டி வாழும் பறவை; bird builds nest on ground. 2. பட்டு நூலில் விழும் முடிச்சு; knot is silk-fibre.

*[ஒருகா. நமட்டு → நமடு → நமுடு.]*

**நமேரு** *namēru,* பெ. (n.) 1. புன்னை; common poon, 2. *சுரபுன்னை* பார்க்க; see *śurapunnai.*

**நமை[1]–தல்** *namai-,* 4. செ.கு.வி. (v.t) தினவெடுத்தல்; to itch. கம்பளிப்பூச்சி மேலே பட்டதால் உடம்பு நமைக்கிறது (இக்.வ). *"நமைந்தெமரிடத்து நண்ணார்"* (உத்தரரா. அசுவமே.23).

**தெ.** நவ.

[ நம → நமு → நமை–. ]

**நமை[2]–த்தல்** *namai-,* 4. செ. குன்றாவி. (v.t) 1. வருத்துதல்; to vex, trouble *"நமைப்புறு பிறவிநோய்"* (சூளா. முத். 1, 32). 2. சூட்டுதல்; to put on wear. *"குஞ்சி நமைத்த பூந்தாமம்"* (சீவக. 2839). 3. தினவெடுத்தல்; to itch

*[நமு → நமை–.]*

**நமை[3]–த்தல்** *namai,* 4. செ. குன்றாவி. (v.t) கட்டளையிடுதல்; to command. *"பொறிபுலன் களைந்தும் நமையால்"* (திவ்.இயற்.1:32).

**நமை[4]** *namai,* பெ. (n.) வெக்காலி; button tree, *"ஞெமையு நமையும்"* (தொல்.–எழுத். 282).

**க.** நவெ.

**நமைக்காய்** *namai-k-kāy,* பெ. (n.) கத்தரிக்காய்; (தைலவ. தைல.). brinjal.

*[நமை + காய்.]*

அரிப்புத் தருதல் பற்றிக் கத்தரிக்காய்க்கு, இப் பெயர் வந்தது.

**நமைச்சல்** *namaiccal,* பெ. (n.) உடலில் ஏற்படும் சொறியத்தூண்டும் உணர்வு; itch. வேர்க்குரு வந்த இடங்களில் சாந்து தடவினால், நமைச்சல் இருக்காது (உ.வ). நமைச்சல், அரத்தக்கசிவு முதலியன மூல நோயின் அறிகுறிகள் (மருத்.வழ.).

**மறுவ:** அரிப்பு, தினவு.

*[நமை → நமைச்சல்.]*

**நமைச்சிரங்கு** *namai-c-cirangu,* பெ. (n) நமட்டுச்சொறி பார்க்க; see namattu-c-cori.

*[நமை + சிரங்கு.]*

**நமைப்பு** *namaippu;* பெ. (n.) 1. அரிப்பு; itching, 2. சிரங்கு; skin diseases, 3. வருத்தம், துயர்; trouble, vexation, "*நும்மானமைப் புண்ணேன் கமைத்துநீர் நடமின்களே*" (தேவா. 717:3.).

*[நமப்பு → நமைப்பு.]*

**நய்யத்தட்டல்** *nayya-tattal,* தொ பெ. (vbl.n.) நையத்தட்டல் பார்க்க; see naiya-t-tattal.

*[நைய்ய → நய்ய + தட்டல்.]*

**நய¹—த்தல்** *naya-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. விரும்புதல்; to desire greatly, long for. "*பிறன் வரையாள் பெண்மை நயவாமை நன்று*" (குறள், 150). 2. இன்புகழ்ச்சி கூறுதல், பாராட்டுதல்; to compliment, appreciate. "*நல்லறிவுடையோர் நயப்பது வேண்டியும்*" (பத்துப்பாட்டு. நச். உரைச்சிறப்.). 3. மதித்தல்; உயர்வாகக் கருதுதல்; to respect, esteem. 4. மகிழ்ச்சியூட்டுதல்; திருவுள்ளங் கொள்ளுதல்; to please, 5. தட்டிக் கொடுத்தல்; to coax, 6. கெஞ்சுதல்; to beseech implore. "*அவன். எவ்வளவோ நயந்து கேட்டான்*" (உ.வ.). 7. அன்பு செய்தல் (சூடா.); to love, show. affection for; 8. பின் செல்லுதல் (யாழ். அக.); to act upon, to follow.

*நள் = சேர்தல்.*

நைப்பு = விருப்பம்.

நைப்பு → நயப்பு = விரும்பப்படுகை.

*[நள் → நய் → நய–. ]*

**நய²—த்தல்** *naya-,* 4. செ.குன்றா.வி. (v.t.) 1. மகிழ்தல்; to be glad, to rejoice. "*வல்லைமன்ற நீ நயந்தளித்த*" (புறநா. 59); 2. இனிமையுறுதல்; to be sweet, pleasing. "*நஞ்சினுங் கொடிய நாட்ட மமுதினு நயந்து நோக்கி*" (கம்பரா. பூக்கொய் 7); 3. இணங்கிப் போதல்; to be congenial, to be agreeable. "*யாரிடத்தும் அவன் நயந்து போவான்*"; 4. பயன்படுதல் (யாழ். அக.); to be advantageous, profitable, useful. 5. மலிதல்; to be cheap; இந்த ஆண்டு (கூலம்) நயத்தது (இ.வ.); 6. மேம்படுதல்; to excel, surpass, improve '*அதற்கிது நயத்திருக்கிறது*' (உ.வ.).

*[நள் → நய் → நய–.]*

**நய³—த்தல்** *naya-,* 4.செ. கு. வி. (v.i.) நமு²–பார்க்க; see namu²–. '*முறுக்கு நயத்துவிட்டது*' (நெல்லை).

*[நசி → நமு → நய–.]*

**நயக்கன்** *nayakkaṉ*, பெ. (n.) நாய் (வின்.); dog.

*[நயப்பன் → நயக்கன்.]*

உணவு கொடுப்பாரிடம் உறவோடு பழகும் பண்புள்ள நாய், தன் நயப்பைக் கால் தூக்கியும், வால் ஆட்டியும் காட்டலால் ஏற்பட்ட பெயர்.

**நயக்கிளவி** *naya-k-kiḷavi*, பெ. (n.) அசதியாடல் (பிங்.); banter, humorous ridicule, or jest.

*[நயம் + கிளவி.]*

*"நவில்தொறும் நூல்நயம் போலும் பயில்தொறும் பண்புடையாளர் தொடர்பு"* என்ற திருக்குறளில், நயம் என்னும் வடிவம் இனிமை பற்றி வருவது போன்றது.

**நயகுணம்** *naya-kuṇam*, பெ. (n.) நற்குணம் (வின்.); a amiable disposition.

*[நயம் + குணம்.]*

அனைவராலும் விரும்பப்படும் நற்குணம். எஞ்ஞான்றும் தீமையொழித்து, நன்மையே செய்யும் உயர்குணமே, நற்குணம்.

**நயங்காட்டு-தல்** *nayaṅ-kāṭṭu-*, 12, செ.குன்றாவி. (v.t.) இனிய சொற்கள் முதலியவற்றால் வயப்படுத்துதல், (வின்.), கவர்ச்சி யூட்டும்படிப் பேசுதல்; to coax, allure.

*[நயம் + காட்டு-.]*

**நயச்சொல்** *naya-c-col*, பெ. (n.) **1.** இனியசொல்; sweet, pleasing words **2.** நயக்கிளவி பார்க்க; see naya-k-kiḷavi. **3.** முகமன்; courteous, civil words, winning speech. **4.** கவர்ச்சிப் பேச்சு; wheedling talk.

*[நயம் + சொல்.]*

பிறர் விரும்பிக்கேட்குமாறு நவிலும் இன்சொல். அகனமர்ந்து பேசும் அன்புச்சொல்.

**நயஞ்சரக்கு** *nayañ-carakku*, பெ. (n.). உயர்தரப்பண்டம் (இ. வ.); superior articles.

மறுவ. முதல்தரப்பொருள்.

*[நயம் + சரக்கு.]*

**நயத்தக்கநாகரிகம்** *nayattakka-nāgarigam*, பெ. (n.). பண்பாட்டுக் கண்ணோட்டத்துடன் கூடிய நாகரிகம்; cultural heritage.

*[நயம் + தகு + நாகரிகம்.]*

நயம் தக்க நாகரிகம் = உள்ளச் செம்மையே அகநாகரிகம்: பண்டைக் காலத்தில், "நாகரிகம்" என்னும் சொல்லையே, "பண்பாடு" என்னும் பொருளிலும், ஆண்டனர்.
இக் கூட்டுச்சொல், உள்ளத்தின் பண்பட்ட நிலையினையே காட்டும். மனமது செம்மையானால் மந்திரம் சொல்ல வேண்டாம் என்னும் உலகவழக்கும், மாசற்ற மனத்தையே குறிக்குமென்றறிக. அதனால்தான் வள்ளுவரும்,
*"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர் நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்"* என்றார். திருந்தியநிலை என்னும் பொதுக்கருத்தில், நாகரிகமும், பண்பாடும் ஒன்றாதல், காண்க.

**நயத்தகு-தல்** *naya-t-tagu-*, 2.செ. கு. வி. (v.i.). **1.** விரும்பத்தகுதல்; to be pleasing, lovable. *"நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்"* (குறள், 580.). **2.** நன்மையாதல்; to be good in quality. *"நயத்தக மண்ணி"* (பு. வெ. 10:10.).

*[நயம் + தகு-.]*

**நயத்தபொன்** *nayatta-poṉ,* பெ. (n.) பக்குவப் படுத்தப்பட்ட பொன்; malleable gold. வெட்டையாய்ப் போகாது வேலைக் குதவும் பொன் (இ. வ.);

**நயத்தல்** *nayattal,* பெ. (n.). தலைவனைக் கண்ட தலைவி தனது ஆசைப்பாடு கூறும் புறத்துறை (பு. வெ. 11, பெண்பாற். 2); theme in which the heroine expresses her deep love at the sight of the hero.

நயப்பு = விருப்பு

[நை → நநயத்தல்.]

**நயத்தவிலை** *nayatta-vilai,* பெ. (n) மலிந்த விலை; cheap price.

**மறுவ.** குறைந்தவிலை.

[நயத்த + விலை.]

**நயதி** *nayadi,* பெ. (n.) முறைமை; justice. சரிதையினயதியின் (இரகு. தசரத. சா.3).

*[ஒருகா. நியதி → நயதி.]*

**நயந்தட்டு—தல்** *nayan-taṭṭu-,* 5.செ. கு. வி. (v.i.) இனிமைதரத் தொடங்குதல்; to begin to interest. புத்தகம் இப்போது தான் நயந்தட்டுகிறது. (இ. வ.).

*[நயம் + தட்டு—.]*

**நயந்துசொல்(லு)—தல்** *nayandu-šollu-,* 8, செ. குன்றா. வி. (v.t.) 1. பயன்படச் சொல்லுதல்; to speak effectively. 2. பாராட்டுதல்; to praise. 3. வேண்டிக்கொள்ளுதல்; to persuade politely. நயந்து சொன்னால் நாடெல்லாம் கேட்கும். (உ.வ.).

*[நயந்து + சொல்(லு)—.]*

**நயந்தோர்** *nayandōr,* பெ. (n.). 1. நண்பர் (பிங்.); friends, companions. 2. கணவர்; husband, as one who loves.

*[நயம் → நயந்தோர்.]*

**நயநட்டம்**[1] *naya-naṭṭam,* பெ. (n.). 1. வருவாய்; profit. 2. இழப்பு; loss.

[நயம் + skt. நட்டம்.]

**நயநட்டம்**[2] *naya-naṭṭam,* பெ. (n.) பயன் மற்றும் இழப்பு; advantage and disadvantage, profit and loss.

**நயநய—த்தல்** *naya-naya-,* 4 செ.கு.வி. (v.i.) நசநச—(இ. வ.) பார்க்க; see naša-naša-.

*[நசி → நச → நய—.]*

**நயநயப்பு** *naya-nayappu,* பெ. (n). மென்மைத் தன்மை; softness and smoothness.

*[நயம் + நயப்பு.]*

**நயநயவார்த்தை** *naya-naya-vārttai,* பெ. (n.) உறுதியில்லா வார்த்தை (யாழ். அக.); unsteady, unreliable word.

[நயநய + வார்த்தை]

**நயநிலைப்படலம்** *naya-nilai-p-paḍalam,* பெ. (n.) நாடகம் (யாழ்.அக.); drama.

[நயநய + வார்த்தை]

**நயநௌடதம்** *naya-naudadam,* பெ. (n.) கண்மருந்து; collyrium for the eyes, lotion for the eyes.

நயன் + Skt. நௌடதம்.

**நயப்பாடு** *naya-p-pādu,* பெ. (n.) 1. பயன் (வின்.) ஊதியம்; advantage, profit. 2. நலன், ஆதரவு; benefit. 3. சிறப்பு; சால்பு; நயநேர்த்தி; excellence. 4. மேம்பாடு; superiority.

[நயம் + பாடு]

**நயப்பி-த்தல்** *nayappi-,* 4.செ. குன்றாவி. (v.t.) 1. விரும்பும்படி செய்தல்; to induce to love or desire. '*தலைமகனை நயப்பித்துக் கொள்கையில்*' (ஐங்குறு. 88. உரை). 2. அறிவுறுத்தி இணங்கவைத்தல்(வின்.); to persuade, win another's consent, secure compliance or approval. 3. ஏற்கச் செய்தல்; to approve. 4. மலிவாக்குதல் (வின்.); to render cheap, cheapen. 5. பயன்படுத்துதல் (வின்.); toimprove, benefit.

[நயப்பு → நயப்பி-.]

**நயப்பு** *nayappu,* பெ. (n.) 1. அன்பு; love. "*நல்லாளோடு நயப்புற வெய்தியும்*" (திருவாச. 2:12). 2. பற்றாசை, நேசம்; affection. 3. ஆர்வவேட்கை, ஆசை (சூடா.); desire. 4. இன்பம்; delight, pleasure. "*நயப்புறு சித்தரை நலிந்து வவ்வின*" (கம்பரா. கரன்வதை. 47). 4. தலைவியெழிலைப் புகழ்கை; (சீவக. 1332, உரை); praising the beauty of a heroine (akap). 6. மலிவு; cheapness. 7. முன்னேற்றம்; improvement 8. நன்மை; goodness. 9. மேம்பாடு; superiority.

[*நைப்பு → நயப்பு.*]

**நயப்புணர்வு** *nayappunarvu,* பெ. (n) 1. கண்ணோட்டம் (சூடா); kindness, tenderness. 2. இன்கனிவு, இரக்கம்

[*நயப்பு + உணர்வு.*]

**நயப்பெத்தன்** *nayappettan,* பெ. (n) மோசக்காரன்; cheating person.

[*நயப்பு + எற்றன் > எத்தன்.*]

நம்பவைத்து ஏமாற்றுபவன்.

**நயபயம்** *naya-payam,* பெ. (n.) கனிவும், கண்டிப்பும்; kindness blended with reproof. '*அவன் நயபயமெல்லாம் காட்டினான்*'. (உ. வ.).

[*நயம் + skt. பயம்.*]

**நயம்**[1] *nayam,* பெ. (n) 1. நல்லெண்ணம்; good intention. 2. அருள்; grace. "*நன்னயம் பெற்றுழி*" (தொல். பொ. 114) 3. விருப்பம்; desire. 4. மகிழ்ச்சி; happiness. joy, gladness 5. நன்மை (திவா); goodness. "*நயமுணராக் கையறியாமாக்கள்*" (நாலடி, 163). 6. நயநாகரிகம், பண்புநயம்; civility attention, courtesy. "*சான்றோரை நயத்திற் பிணித்து விடல்*" (நான்மணி. 12). 7. அன்பு; love, affection. tenderness. "*நயந்தலை மாறுவார் மாறுக*" (கலித். 80). 8. பக்தி; piety, devotion, "*பஃறளிய நயங்கொண்டு பணிந்தேத்தி*" (தணிகைப்பு. பிரமன். 54). 9. நற்பயன்; beneifit, profit, advantage, interest, gain "*நல்வினையுந் நயந்தந்தின்று*" (திருக்கோ. 26). 10. மேம்பாடு; superiority, excellence. '*இதற்கு அது நயம்*' (உ. வ.); 11. மலிவு; cheapness. விலை நயமாயிருக்கிறது. (இ. வ.); 12. மிகுதி; (வின்.); abundance 13. பயன் (திவா.); result, effect. "*நன்றோ பழுதுளதோ நடுவரைநீ நயமென்ன*" (கம்பரா. பரசு. 6). 14. நுண்மை;

fineness. 'தங்கக்கம்பி நயமாயிருக்கிறது" (உ. வ.); 15. இனிமை; sweetness. "நாரத முனிவர்க் கேற்ப நயம்படவுரைத்தநாவும்" (கம்பரா. கும்பகரு. 1.);

க., து., நய, ம. நயம்.

தெ. நயமு.

[நய → நயம்.]

**நயம்²** *nayam,* பெ. (n.) 1. அடிப்படை மெய்ம்மை; principle. 2. அறம், முறமை (நீதி); policy. "நன்றி ஈதென்று கொண்ட நயத்தினை நயந்து" (கம்பரா. கும்பகருண. 35). 3. மறைநூல் (யாழ்.அக.); (வேதசாத்திரம்); vēdam. 4. ஒற்றுமை நயம்; வேற்றுமை நயம், புரிவின்மைநயம், இயல்புநயம் என காரணகாரியத் தொடர்பிற் கொள்ளும், நால்வகை முறை (மணிமே. 30. 218); the four kinds of causal relation viz., orrumai-nayam, vērrumai-nayam, purivinmai-nayam, iyalbu-nayam

[நய → நயம்.]

**நயம்³** *nayam,* பெ. (n.) கனமும், தேசிகமும், கலந்துபாடும் வகை (கனம் கிருட்டிணய்யர்,1); a mode of singing in which both gānam and tēšigam.

**நயம்பண்ணு-தல்** *nayam-pannu-,* 5.செ. கு. வி.(v.i.) உதவிசெய்தல் (அனுகூலம் செய்தல்) (வின்.); to do a favour.

[நயம் + பண்ணு-.]

**நயம்பாடு¹-தல்** *nayam-pāḍu-,* 5.செ. கு. வி. (v.i.) 1. இனிமையாய்ப் பாடுதல் (வின்.); to sing sweetly. 2. முகமன் கூறுதல் (இ. வ.); to flatter.

[நயம் + பாடு-.]

**நயம்பாடு²** *nayam-pāḍu,* பெ. (n.) 1. நயப்பாடு பார்க்க; see nayap-p-āḍu 2. அழகுபடுகை; being beautiful. "பண்பில் வாய்மொழி நயம்பா டில்லை" (மணிமே. 2:36).

[நயம் + படு → பாடு.]

**நயம்பேசு-தல்** *nayam-pēšu,* 5.செ. கு. வி. (v.i.). 1. மகிழப்பேசுதல் (வின்.); to speak pleasantly, courteously. 2. இனிமையாய் ஒலித்தல்; to sound sweetly, as a lute string.

[நயம் + பேசு-.]

**நயமாலி** *nayamāli,* பெ. (n.). சிவப்பரிதாரம் (மனோசிலை) (வின்.); red orpiment.

**நயமொழி** *naya-moli,* பெ. (n) 1. இன்மொழி; sweet, pleasant words. "நயமொழியினாற் சயமுண்டு" (பழ.) 2. நலம் பயக்கும் மொழி; words of good counsel. "நானுனை யிரந்துகூறு நயமொழி யொன்றுங் கேளாய்" (கம்பரா. நிகும்பலை. 68).

[நயம் + மொழி.]

**நயர்** *nayar,* பெ. (n.) அறிவுடையவர்; wise persons. "மேனயரிவரென" (சிவதரு. சுவர்க்க நரக. 24).

[நயம் → நயர்.]

**நயவசனம்** *naya-vašanam,* பெ. (n.) நயவசனிப்பு பார்க்க; see naya-vašanippu.

[நய + Skt. வசனம்.]

**நயவசனிப்பு** *naya-vašanippu,* பெ. (n) இனிய சொல்; captivating or enticing words.

[நய + Skt. வசனிப்பு.]

**நயவஞ்சகம்** *naya-vañjagam,* பெ. (n.) இனிமைகாட்டி ஏமாற்றுகை; smiling villainy, hypocrisy.

*[நயம் + வஞ்சம் + அகம்.]*

**நயவர்**[1] *nayavar,* பெ. (n.) முறைமையுடையோர்; just persons. "*நல்லார் நயவ—ரிருப்பி*" (நாலடி, 265).

*[நயம் + அர்.]*

**நயவர்**[2] *nayavar,* பெ. (n.) 1. காதலர் (பிங்.); lovers. 2. நண்பர் (யாழ். அக.); friends.

*[நய + அர்.]*

**நயவரு**[1]**—தல்** *naya-varu-,* 5.செ. குன்றாவி. (v.t.) விரும்புதல்; to like, appreciate, desire, ardently. "*தன்மலைபாட நயவந்து கேட்டருளி*" (கலித். 40.31).

*[நயம் + வரு—.]*

**நயவரு**[2]**—தல்** *naya-varu-,* 18.செ. கு. வி. (v.i.) நன்மையுண்டாதல்; to be beneficial. "*நயம்வரும் பள்ளிமே னல்கி*" (பு. வெ. 11. பெண்பாற். 9.).

[நயம் + வரு—.]

**நயவன்** *nayavaṉ,* பெ. (n.) கலை, இலக்கியம், போன்றவற்றைப் பேணி வளர்ப்பவன்; a man of cultivated taste in art and literature.

[நயம் + அன்.]

**நயவார்** *nayavār,* பெ. (n.) பகைவர்; enemies. நயவார் தலைபனிப்ப (பு.வெ.7,2).

[நய + ஆ + அர்.]

**நயவான்** *nayavāṉ,* பெ. (n.) 1. நயக்காரன்; one who seeks or is entitled to profit. 2. விரும்பத்தக்கவன்; lovable person. 3. புரவலர், கொடையாளர்; benefactor.

*[நயவன் → நயவான்.]*

**நயன்**[1] *nayaṉ,* பெ. (n.) 1 நயம் பார்க்க; see nayam. "*நயனில சொல்லினுஞ் சொல்லுக*" (குறள், 193). 2. பசை; substance. "*நறுந்தா துண்டு நயனில் காலை வறும்பூத் துறக்கும் வண்டு*" (மணிமே.18,19). 3. உறவு; (கலித். 125, 6, உரை). relation ship.

*[நயம் → நயன்.]*

**நயன்**[2] *nayaṉ,* பெ. (n.) 1. *நயவான்* பார்க்க; see *nayavāṉ.* "*நயனடன் கழலேத்தி*" (தேவா.115:11). 2. கொடையாளி, (யாழ். அக.); புரவலர்; donor, benefactor.

*[நயம் → நயன்.]*

**நயன்**[3] *nayaṉ,* பெ. (n.) 1. *நயம்*[1] பார்க்க; see *nayam,*1. 2. வழி; device. 3. திட்டமிட்டுச் செயற்படுத்துகை; contrivance. "*மன்னரை நயனாடி நட்பாக்கும் வினைவர் போல்*" (கலித். 46).

*[நயம் → நயன்.]*

**நயன்மை** *nayaṉmai,* பெ. (n.) முறைமை; justice.

**மறுவ.** அறம்.

*[நயன் → நயன்மை.]*

**நயனவல்லி** *nayaṉa-valli,* பெ. (n.) வல்லாரை; indian pennywort.



**நயனி** *nayaṉi,* பெ. (n.) காந்தள்; nouember flower.

**நயனோற்சவம்** *nayaṉōṟcavam,* பெ. (n.) விளக்கு (யாழ்.அக.); light.

**நயாசலன்** *nayāšalaṉ,* பெ. (n.) முறைமை வழுவாதவன்; person of unwavering integrity. *"நளிர்ந்த சீல னயாசலன்"* (திவ். பெரியாழ். 4: 4: 8).

*[நயம் + அசலன்.]*

நயம் = நெறி, முறை, அறம். Skt. அசல் + அன்.

**நயிச்சியஞ்செய்-தல்** *nayicciyañ-šey-,* 1. செ. குன்றா.வி. (v.t.) தன்வயப்படுத்துதல் (இ.வ.); to win over to one's side.

*[நயச்சியம் → நயிச்சியம் + செய்-.]*

**நயிச்சியம்** *nayicciyam,* பெ. (n.) 1. தன்வசப் படுத்துகை; winning over to one's side. 2. தாழ்மை; humility. 3. நீசத்தன்மை; lowness, meanness, boseness.

*[நயச்சியம் → நயிச்சியம்.]*

**நயிச்சியம்பண்ணு-தல்** *nayicciyam-paṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.t) *நயிச்சியம் செய்-தல்* பார்க்க; see *nayicciyam-šey-.*

*[நயச்சி + அம் + பண்ணு-.]*

**நயிந்தை** *nayindai,* பெ. (n) 1. மேம்பட்ட தகுதியாளர்; மேல் நிலையர்; superior. 2. தலைவர் (யாழ்.அக.); liege, lord. 3. அடிமை வைத்து ஆளும் இனத் தலைவன் (இ.வ.); (வின்.) the master of a slave among same castes. 4. சில இனத்தவர்க்கு வழங்கும் ஒரு பட்டப்பெயர் (வின்.); a term of respect among some castes.

*[நயந்தை → நயிந்தை.]*

நயத்தக்க மேம்பாடுடையவர்.

**நயினார்** *nayiṉār,* பெ. (n.) 1. தலைவன், இறைவன் (சுவாமி.); lord. *"நயினார் திருவேங்கட நாதன்"* (T.A.S.I. 93). 2. மேலோன், தலைவன் (வின்.); master, lord 3. சைனர்க்குச் சிறப்பாக வழங்கும் பட்டப்பெயர்; title, especially of jains. 4. *ஐயனார்* (இ.வ.) பார்க்க; see *iyaṉār.* 5. *சித்திரகுத்தன்* பார்க்க; see *šittirakuttaṉ* நயினார் நோன்பு.

*[நாயகனார் → நாயனார் → நயினார்.]*

**நயேந்திரப்பாலை** *nayēndra-p-pālai,* பெ. (n.) நெல் வகை; a kind of paddy.

**நரகக்குழி** *naraga-k-kuḻi,* நரகம் (வின்.); hell
*[நரகல் → நரகம். நரகம் + குழி.]*

*மாந்தக் கழிவு போன்ற, துன்பப் பகுதி.*

**நரககதி** *naraga-gadi,* பெ. (n.) 1. நாற்கதியுள் நரகத்துள் தள்ளப்படுவோர், the state of hell-

being, one of ñar-kadi, (q.v.). "*நரககதித் துன்பம்*". (சீவக. 2762, தலைப்பு). 2. நரகம் பெறுகை (யாழ்.அக.); fate of being consigned to hell.

*[நரகம் + கதி.]*

**நரகர்** *naragar,* பெ. (n.) நரகன் பார்க்க; see naragaṉ. "நரகர் துயர்கெட" (மணிமே.11.69.).

**நரகல்** *naragal,* பெ. (n.) 1. மலம் (இ.வ.); ordure. 2. தூய்மையின்மை (அசுத்தம்); filth, anything disgusting or offensive to the sight.

த. நரகல் → skt.naraga.

*[நரகு + அல்.]*

**நரகல்வாய்** *naragal-vāy,* பெ. (n.) எருவாய் (குதம்.); anus.

*[நரகல் + வாய்.]*

**நரகலி–த்தல்** *naragali-,* 4 செ.கு.வி. (v.i.) அழுக்குடைத்தாதல் (யாழ்.அக.); to lie defiled with excrement, as a puking child or sick person. அருவருத்தல்; to loathe, abhor.

*[நரகல் + நரகலி–.]*

**நரகவேதனை** *naraga-vēdaṉai,* பெ. (n.) நரகத்தி லனுபவிக்குந் துன்பம். (சிலப். 26, 37, உரை); hellish torment.

*[நரகம் + Skt. வேதனை]*

**நரகன்** *naragaṉ,* பெ. (n.) 1. நரகவுலகத்தி லுள்ளவன் (நன், 261); an inhabitant of the infernal region. 2. மாபாவி; great sinner, as deserving of hell. 'நரகன் வெல்வதே' (கம்பரா. சடாயுவுயி. 133). 3. நரகாசுரன் பார்க்க (திவ். பெரியாழ் 4. 3.3); see naragāśuraṉ

த. நரகன் → skt.naraga-vāsiṉ.

*[நரகம் → நரகன்.]*

நரகல் எனும் மாந்தக்கழிவு போன்று, வெறுக்கத் தக்க இயல்பினன்; கீழ்மைக் குணத்தன். தீய பண்புகளின் இருப்பிடமே கெட்ட மனம்: வெறுக்கத் தக்க பண்புகளின் விளை நிலமாகச் செயலாற்றுபவனே நரகன்.

**நரகனாதி** *naragaṉādi,* பெ. (n.) தேட்கொடுக்கி (சங்.அக.) (மூ.அ.); indian turnsole.

*[நரகன் + ஆதி.]*

**நரகாசுரன்** *naragāśuraṉ,* பெ. (n.) கண்ணனாற் கொல்லப்பட்ட ஓர் அசுரன்; a demon slain by kaṇṇaṉ.

*[நரக + அசுரன்.]*

**நரகாந்தகன்** *naragāndagaṉ,* பெ. (n.) நரகாசுரனைக் கொன்ற திருமால்; Tirumāl, as destroyer of naragaṉ.

*[நரக(ன்) + அந்தகன். தீயபண்புகளைக் கொன்று, நற்பண்புகளின் இருப்பிடமாகத் திகழும் திருமால்.]*

**நரகாமயம்** *naragāmayam,* பெ. (n.) ஆதன்; soul.

*[நரக → நரகா + மயம்.]*

**நரகாரி** *naragāri,* பெ. (n.) நரகாந்தகன் பார்க்க; see nāragāndagaṉ.

த. நரகாரி →skt. naragāri.

நரலுதல் = ஒலித்தல், கத்துதல்; பேசுதல். நரல் → நரன் = மனிதன்.

நாவினால் பலுக்கியும், நன்முறையில் நவிற்றியும் பேசும் மாந்தன்.

*[நரகன் + அரி → நரகரி → நரகாரி.]*

**நரகாலி** *naragāli,* பெ. (n.) கால்நடைகளுக்கு வரும் நோய்வகை (வின்.); a disease in cattle, a kind of tumour in the intestines

*[நரகல் → நரகாலி.]*

கன்றுகாலிகள் இடம், பொழுது பாராது, நரகல் கழிவதால் வந்த பெயர்.

**நரகாலிகம்**[1] *naragāligam,* பெ. (n.) *நரகாலி* பார்க்க; see *naragāli.*

*[நரகால் + இகம்.]*

இகம் = சொல்லாக்க ஈறு.

**நரகாலிகம்**[2] *naragāligam,* பெ. (n.) **1.** சம்பைப் புல்; a kind of sedge grass. **2.** கோரைப்புற் படுகை; sedge, bed.

*[நரகால் → நரகாலிகம்.]*

சம்பங்கோரை முதலான மெல்லிய கோரைப்புல் வகைகள், கால்நடைகளின் தீவனத்தின் பொருட்டு வளர்க்கும் இடம்.

**நரகி** *naragi,* பெ. (n.) நிரையவுலகத்தில் உள்ளவள் (தொல். சொல். 4, இளம்பூ.); woman of the infernal region.

**த.** நரகி → skt.naragāri.

*[நரன் + நரகி.]*

நரன் = மனிதன். நரகி = நிரையவுலகில் துன்பமுறும் பெண்.

**நரகீலகன்** *nara-gilagaṉ,* பெ. (n.) குருவைக் கொல்வோன்; one who murdered his guru.

*[நரகி → நரகீலகன்.]*

**நரகு** *naragu,* பெ. (n) நரகம்; hell. *"நரகுஞ் சுவர்க்கமுமாய்"* (திவ். திருவாய் 6, 3, 1)

**த.** நரகு → skt.naraka.

*[நிரை → நர + கு.]*

கு = சொல்லாக்க ஈறு.

ஒ.நோ.வரகு.தரகு.

**நரகேசரி** *nara-kēšari,* பெ. (n.) **1.** நரசிங்க மூர்த்தி பார்க்க; see Narašinga mūrtti **2.** மக்களுட் சிறந்தவன்; a distinguished man. as lion among men. *"பசும் பொற்றேர் மாநர கேசரி"* (தக்கயாகப். 807, பாடாந்.).

*[நர + Skt.* **கேசரி.]**

**நரகோன்மத்தம்** *naragōṉ-mattam,* பெ. (n.) கொலைப்பைத்தியம்; homicidal monomania.

*[நரகோன் + மத்தம்.]*

**நரங்கடி—த்தல்** *naraṅgaḍi-,* **4.** செ.குன்றாவி. (v.t.) அழித்தல் (யாழ்.அக.); to destroy.

*[நருங்கு → நரங்கு + அடி—.]*

**நரங்கு¹–தல்** *narangu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. மெலிதல்; to emaciate. 2. வளர்ச்சிக் குறைதல்; to diminish.

*[நருங்கு → நரங்கு –.]*

**நரங்கு²–தல்** *narangu-*, 5. செ.கு.வி. (v.i.) *நருங்கு* பார்க்க; see *narungu-*

*[நர → நரங்கு –.]*

**நரசண்டன்** *nara-šandaṉ*, பெ. (n.) ஆணலி; male herma phrodite.

**மறுவ.** பேடி.

*[நரசண் → நரசண்டன்.]*

பெண்தன்மை மிகுந்த ஆண், ஆணலி என்று அழைக்கப்பட்டான். ஆண்மை திரிந்து, பெண்தன்மை மிகுந்தவன் நரசண்டன் என்றழைக்கப்பட்டான். இத்தகைய, தன்மை பெற்ற பெயரை "*ஆண்மைதிரிந்த பெயர்நிலைக் கிளவி*" (தொல்.சொல்.495.) என்பார் தொல்காப்பியர். தொல்காப்பியர் கூற்றுப்படி 'நரசண்டன்' என்று ஆண்பால் விகுதியுடன் அழைப்பது, பொருத்தமன்று. பேடி என்றழைப்பதே பொருந்தும்.

**நரசம்பேட்டை** *narašam-pēṭṭai*, பெ. (n.) காஞ்சிபுர மாவட்ட ஊர்; a village in kāñjipuram dt.

*[நரசம் + பேட்டை.]*

**நரசாடி** *narašāḍi*, பெ. (n.) வீட்டில் இறந்தவர்களைத் தெய்வமாகத் தொழுகை; (பிர. மகள்); ancestral worship.

*[நரசன் + நரசாடி.]*

**நரசிங்கபருமன்** *narašinga-parumaṉ*, பெ. (n.) நரசிங்கவருமன்; Narašingavarumaṉ, a king of pallava dynasty.

"*கோவிசைய நரசிங்க பருமற்கு இரண்டாவது வாணகோஓ அரைசர், சேவகர்*" (தா. வேளூர்–நடுகல்).

*[நர + skt சிங்க + பருமன்.]*

*[வர்மன் → வருமன் → பருமன்.]*

**நரசிங்கபுரம்** *narašingapuram*, பெ. (n.) திருவள்ளூர் மாவட்ட ஊர் **நரசிங்கபுரம்.** காஞ்சிபுரமாவட்டத்திலும், திருவண்ணாமலை மாவட்டத்திலும் உள்ளது; a village in Tiruvaḷḷur & kāñjipūram Tiruvaṇṇāmalai

*[நர + சிங்க + புரம்.]*

**நரசிங்கம்** *nara-šingam*, பெ. (n.) *நரசிங்க மூர்த்தி* பார்க்க; see *narasinga-mūrtti* "*நாடி நாடி நரசிங்காவென்று*" (திவ். திருவாய். 2: 4: 1).

*[நர + Skt சிங்கம்.]*

**நரசிங்கமுனையரையநாயனார்** *narašinga munaiyaraiya-nāyaṉār*, பெ. (n) சிவனடியார்; a canonized šaiva šaint இவர், திருமுனைப் பாடி நாட்டின் அரசர். சுந்தரமூர்த்தி நாயனாரை வளர்த்தவர்.

*[நர + Skt.சிங்க + முனை + அரையர்.]*

*[அரசர் → அரையர்.]*

**நரசிங்கமூர்த்தி** *narašinga-mūrtti*, பெ. (n) நரனும் (சிங்கமு) அரியும் கூடிய உருவுடன், தோற்றரவு செய்த திருமால்; Tirumāl in his man lion incarnation

*[நர + Skt சிங்க + மூர்த்தி.]*

**நரசிங்கராச்சியம்** *naraśinga-rācciyam,* பெ. (n.) நரசிம்மராயர் பெயர் கொண்டு வழங்கிய விசயநகரவரசு'; the kingdom of Vijayanagar Named after nara-šimma-rāyar.

*[நர + Skt சிங்க + ராச்சியம்.]*

**நரசிங்கவங்கம்** *naraśinga-vangam,* பெ. (n.) வெள்வங்கம்; white lead tin.

**நரசிங்கவாசனம்** *naraśinga-v-āśanam,* பெ. (n.) ஒகவிருக்கையுளொன்று; (yōga) a kind of yōgic posture.

*[நரசிங்க + ஆசனம்.]*

*Skt. ஆசனம் = த.அமர்வு, இருக்கை.*

**நரசிங்கிதம்** *naraśingidam,* பெ. (n.) கருந்துளசி; black basil.

**நரசிம்மக்கனி** *narasimma-k-kani,* பெ. (n.) கறிப்புடலை; snake gourd

*[நரம் + Skt. சிம்ம + கனி.]*

**நரசிம்மசயந்தி** *naraśimma-śayandi,* பெ. (n.) நரசிம்மமூர்த்தி தோன்றிய வைகாசி மாதத்தின் பதினான்காம் நாள் (சதுர்த்தசி); the 14th day of the waxing moon in vaikāśi, considered as the anniversary of Narasimma's incarnation.

*[நரன் + Skt சிம்மம் + Skt சயந்தி.]*

**நரசிம்மன்** *nara-śimman,* பெ. (n) *நரசிங்க மூர்த்தி* பார்க்க; see *Naraśinga-mūrtti*

*[நர + சிம்மன்.]*

**நரசீவதயாபரர்** *nara-śīva-tayābarar,* பெ. (n.) (மன்னுயிர்மீது கருணையுடையவர்) (வின்) கடவுள்; God, as showing grace to humanity.

*[நர + சீவ + தயா + பரர்.]*

சீவதயாபரர் = மனிதன் மீது அளப்பெரும் அருளை வாரிவழங்கும் இறைவன்.

பரர் = மேலான அன்பாம் அருளை, அனைவருக்கும் தருபவர்.

**நரசீவன்** *nara-śīvan,* பெ. (n.) மனிதன் (யாழ்.அக.); human being.

*[நரன் + சீவன்.]*

**நரசெந்திரகம்** *nara-śendiragam,* பெ. (n) விலங்கிடம், இணை விழைச்சு செய்கை; sexual connection with an animal

**நரண்டை** *narandai,* பெ. (n.) மூலிகை வகையுளொன்று; a kind of herbal medicine.

**நரத்துவம்** *narattuvam,* பெ. (n.) மக்கட் தன்மை; human nature "*ஒழிப்பதனுக்கிறைவர் நரத்துவம்*" (வேதா.சூ. 178,).

*[நரன் + தத்துவம்.]*

மறுவ. மனிதத்துவம்.

நரன் = மனிதன். நரவத்துவம் = மனிதனுக்கு இயல்பாகவுள்ள தன்மை.

**நரத்தை** *narattai,* பெ. (n) உடுப்பைமரம்; smooth lance leaved-indian Inden

*[நர → நரத்தை.]*

**நரதுங்கன்** *nara-tungaṉ,* பெ. (n.) *மக்களிற் சிறந்தோன்;* the illustrious among men. *'கொடை நரதுங்கனொ டணைவுறாது'* (கலிங். 24.).

*[நரன் + துங்கன்.]*

**நரதேவன்** *nara-dēvaṉ,* பெ. (n.) (மக்கள் தலைவன்) அரசன்; king, sovereign, as lord of men *"புகுந்து நரதேவ னருளினெய்தி"* (சீவக. 1867.).

*[நரன் + தேவன்.]*

**நரந்தம்**[1] *narandam,* பெ. (n.) 1. கத்தூரிமான் (பிங்.); musk deer 2. மான்மணத்தி (கத்தூரி); musk. *"நரந்த மரைப்ப நறுஞ்சாந்து மறுக"* (மதுரைக். 553). 3. நறுமணம் (அக.நி.); fragrance, pleasant odour. 4. நறுமணப்புல் வகை; a fragrant grass. *"நறையு நரந்தமு மகிலு மாரமும்"* (பொருந. 238). 5. காகம் (அக.நி.); crow.

**நரந்தம்**[2] *narandam,* பெ. (n.) நாரத்தை பார்க்க; see nārrattai. *"நரந்தமு நாகமும் பரந்தலர் புன்னையும்"* (மணிமே. 162.).

*[நார் → நர →நரந்தம்.]*

நரந்தையைக் கிரேக்க வணிகர்கள் Norange என்று கூறுவர். Orange என்று வழங்கு வதாகப் பாவாணர் கூறுகிறார்.

**நரந்தை** *narandai,* பெ. (n.) 1. கொற்றான் (திவா.); parasitic leafless plant. 2. கிச்சிலி; orange

ம., நரந்த.

**நரநர** *naranara,* பெ. (n.) ஒலிக்குறிப்புச் சொல்; onom. expr of words.

*[நர + நர.]*

**நரநாரணர்** *nara-nāraṇar,* பெ. (n) நர-நாராயணர் பார்க்க; see *nara-nārāyaṇar* *'நரநாரணரா யுலகத் தறநூல் சிங்காமை விரித்தவன்'* (திவ். திரியதி. 10: 6: 1.).

*[நரன் + நாரணர்.]*

**நரநாராயணர்** *nara-nārāyaṇar,* பெ. (n.) திருமால் பிறப்பியமான இருமுனிவர்; the two sages naraṉ and Nārāyaṇaṉ, considered as incarnations of Visṇu

*[நரன் + நாராயணர்.]*

*[நரன் + அயணன் → நாராயணன். நாராயணன் → நாராயணர்.]*

**நரப்பாக்கம்** *nara-p-pākkam,* பெ. (n) திருவள்ளூர் மாவட்ட ஊர்; a village in Tiruvaḷḷūr dt.

*[நரம் + பாக்கம்.]*

**நரப்பிரதிட்டை** *nara-p-piradiṭṭai,* பெ. (n) மக்களால் நிறுவப்பட்டது; that which is established by human agency.

*[நரம் + skt. பிரதிட்டை.]*

**நரப்பு** *narappu,* பெ. (n) *நரம்பு* பார்க்க; see *narambu.*

*[நரம்பு → நரப்பு.]*

**நரப்புக்கருவி** *narappu-k-karuvi,* பெ. (n.) நரம்புக்கருவி பார்க்க; see narambu-k-karuvi. *"துளைக் கருவியானும் நரப்புக் கருவி யானும்"* (சிலப். 5: 35: உரை);

*[நரம்பு → நரப்பு + கருவி.]*

**நரப்புச்சிலந்தி** *narappu-c-cilandi,* பெ. (n.) *நரம்புச் சிலந்தி* பார்க்க; see *narambu-c-cilandi.*

*[நரம்பு + சிலந்தி.]*

**நரபதி** *nara-padi,* பெ. (n.) (மக்கட்குத் தலைவன்) அரசன்; king, as lord of men. "ஒளிறுவே ணரபதி நகரம்" (சீவக.1617.) 2. சோழவரசர், விசய நகர வேந்தரின் பட்டப்பெயர் (தக்கயாகப். 9 விசேடக் பக்.); title of cōḻa and vijayanagara king

*[நரர் + பதி.]*

நரன் = மனிதன். பதி : தலைவன்.

**நரபலி** *nara-bali,* பெ. (n.) மக்கட்பலி; human sacrifice *"இச்சையி னரபலியிட்ட தலையை"* (அரிச். 4. விவாக. 121.).

*[நரன் + பலி.]*

**நரபாலன்** *nara-bālaṉ,* பெ. (n.) *நரபதி* பார்க்க; see *narabadi. "கடல்புடை சூழ்படி நரபாலரை"* (கம்பரா. பரசு. 21.).

*[நர + பாலன்.]*

**நரபுடம்** *nara-puḍam,* பெ. (n.) ஐம்பது வரட்டிகளால் இடப்படும் ஒருவகை எரிப்புத் திட்டம் (சங்.அக.); unit of heat produced by burning 50 cowdung cakes, used in calcining medicines.

**நரம்** *naram,* பெ. (n.) மனிதப்பிறவி; human being *"நரத்திலும் பிறத்தி நாத"* (திவ். திருச்சந். 29.).

த.நரம்+Skt nara.

*[நரன் : மாந்தன். நரன் → நரம் நரம்= மாந்தப்பிறவி (த.வ. 99.). ]*

ஆறாம் அறிவில் சிறந்த மாந்தப்பிறப்பு, நரம்பு மண்டிலத் தலைமையான மூளை, நரம்பியலால் உயர்வதால் தரப்பட்ட தகுபெயர்.

**நரம்படுத்த** *narambaḍutta,* பெ. (n.) நரம்புக்குரிய; nervous neural.

*[நரம்பு + அடுத்த.]*

**நரம்படைப்பு** *narambaḍaippu,* பெ. (n.) நரம்புத்தடை; obstruction of nervous

*[நரம்பு + அடைப்பு.]*

**நரம்பமைப்பியல்** *narambamaippiyal,* பெ. (n.) நரம்பு மண்டிலம் பற்றிய அறிவியல்; neuro-physiology.

*[நரம்பு + அமைப்பியல்.]*

**நரம்பழற்சி** *narambaḻarci,* பெ. (n.) நரம்பின் விறைப்பால் உடம்பினுள் ஏற்படும் உள்ளழற்சி; inflammation of body due to nerves irritablity.

*[நரம்பு + அழற்சி.]*

**நரம்பற்ற** *narambaṟṟa.* கு.பெ.எ. (adj.) வலிமையற்ற; having no strength sinewless.

*[நரம்பு + அற்ற.]*

**நரம்பன்** *narambaṉ,* பெ. (n.) 1. புகையிலை வகையு ளொன்று; a kind of tobacco. 2. மெலிந்து நரம் பெழும்பிய உடலுள்ளவன்; a thin or meagre

and emaciated person. 3. நரம்புவலிமை யுடையவன்; a man of nervous strength.

*[நரம்பு + அன்.]*

**நரம்பாண்மை** *narambāṇmai,* பெ. (n) நரம்பாற்றல்; nerve power. (சா.அக.)

*[நரம்பு + ஆண்மை.]*

வலிமை சான்ற நரம்பினன்.

**நரம்பாணி** *narambāṇi,* பெ. (n.) தலைமீதுள்ள தோலோடு இணைந்த, முடிஇறைச்சி; skin on the top of the head. (சா.அக.)

*[நரம்பு + ஆணி]*

**நரம்பாய்வுநூல்** *narambāyvu-nūl,* பெ. (n.) நரம்புமண்டல அமைப்பாய்வு நூல்; neurology.

*[நரம்பு + ஆய்வு + நூல்.]*

**நரம்பாற்றல்** *narambāṟṟal,* பெ. (n.) நரம்பினது வலிமை; nerve power

*[நரம்பு + ஆற்றல்.]*

**நரம்பி** *narambi,* பெ. (n.) 1. ஒல்லியான உடலுள்ளவள்; a slender woman having raised veins 2. நரம்பு வலிமையுடையவள்; a woman with nerve energy.

*[நரம்பு + இ.]*

"இ" – பெண்பால் குறித்த சொல்லாக்க ஈறு.

**நரம்பிசிப்பு** *narambiśippu,* பெ. (n.) *நரம்பிழுப்பு* பார்க்க; see *narambiḻuppu*

*[நரம்பு + இழுப்பு → இசுப்பு.]*

இசுப்பு → இசிப்பு.

**நரம்பிசிவு** *narambiśivu.* பெ. (n.) நரம்பின் அளவு குன்றுதலால், உடம்பிலுண்டாகும் இசிவு அல்லது வலிப்பு; fits, apoplexy

*[நரம்பு + இசிவு.]*

பிறவினை தசைநார் சுருண்டு இழுக்கை. இசிப்பு என்பதற்கு, இசிவு தன்வினையாதல் காண்க.

**நரம்பியல்** *narambiyal.* பெ. (n.) நரம்புக் கூறுகளைப் பற்றியவை; neurology.

*[நரம்பு + இயல்.]*

நரம்புகளின் அமைப்பையும், செயல் பாடுகளையும் நோய்களையும் பற்றிய மருத்துவத்துறை.

சாம்பசிவம் மருத்துவ அகரமுதலியிற் கூறியவாறு, உடம்பிலுள்ள 72,000 நரம்புகளின் அமைப்புகளையும், நரம்புகளிலுண்டாகும் நோயின் தன்மைகளையும், அந் நோய்களைக் களைவதற்குரிய மருந்துகள் பற்றிய ஆய்வுகளையும், இயம்பும்இயல், நரம்பியல் எனப்படும்.

**நரம்பியல்துறை** *narambiyal-tuṟai,* பெ. (n.) நரம்புத்தொடர்பானநோய், அதைப் போக்கும் மருந்துகள் பற்றிய ஆய்வுத்துறை; the department of neurology

*[நரம்பியல் + துறை.]*

**நரம்பியல்நிபுணர்** *narambiyal-nibuṇar,* பெ. (n.) நரம்பியல் வல்லுநர் பார்க்க; see narambiyal-vallunar

மறுவ. நரம்பியல் திருவோன்.

*[நரம்பியல் + Skt நிபுணர்.]*

**நரம்பியல்பண்டுவம்** *narambiyal-paṇḍuvam,* பெ. (n.) நரம்புத்தொடர்பான நோய்களுக்கு செய்யப்படும் மருத்துவம்; neurological treatment.

*[நரம்பியல் + பண்டுவம்.]*

**நரம்பியல்மருத்துவர்** *narambiyal-maruttuvar,* பெ. (n) நரம்பியல் பண்டுவம் செய்யும் மருத்துவர்; neruological doctor.

*[நரம்பியல் + மருத்துவர்.]*

**நரம்பியல்வல்லுநர்** *narambiyal-vallunar,* பெ. (n.) நரம்புத்தொடர்பான நோய்களையும், அதைத் தீர்க்கும் மருந்துகளையும், அறியும் வல்லமையுள்ளவன்; neurological expert

*[நரம்பியல் + வல்லுநர்.]*

**நரம்பிலி** *narambili,* பெ. (n) கருந்தும்பி; south india pine

*[நரம்பு + இலி.]*

**நரம்பிழு-த்தல்** *narambiḻu-,* 4செ.கு.வி (v.i.) வீணைக்கு நரம்பிட்டுச் கிட்டுதல்; to tie string to viṇai.

*[நரம்பு + இழு-.]*

**நரம்பிழுப்பு** *narambiḻuppu,* பெ. (n) 1. உடம்பின் நரம்பு, மேலே இழுத்துக் கொள்ளுகை; sterching of the nerves of the body cantraction of the nerves of the body 2. வலிப்பு; convulsion. 3. தசைநார் சுருட்டிக் கொள்ளுகை; contraction of muscular fibres. (சா.அக.).

*[நரம்பு + இழுப்பு.]*

**நரம்பிழைமம்** *narambiḻaimam,* பெ. (n.) நரம்பு வலிவிழந்து, சுருண்டு கொள்ளல்; contraction of the nerves-neurine.

*[நரம்பு + இழைமம்.]*

**நரம்பிளை-த்தல்** *narambiḷai-,* 4செ.கு.வி. (v.i.) நரம்பு ஆற்றல் இழத்தல்; to prostrate the nerves.

*[நரம்பு + இளை-.].*

நரம்பு முற்றிலும், தன் வலிவிழந்து களைப்புறுதல்.

**நரம்பிளைப்பு** *narambiḷaippu,* பெ. (n.) நரம்பு வலிமை குன்றுகை; nerves debility.

*[நரம்பு + இளைப்பு.]*

ஊட்டச்சத்து குறைவினாலும், எதிர்பாராத நோய்களின் தாக்கத்தாலும், உடல் நரம்புகளிலேற்படும் சோர்வு.

**நரம்பின்நார்** *narambiṉ-nār,* பெ. (n) நரம்பிலுள்ள நார் போன்ற பொருள்; nerve fibre.

**நரம்பின்மறை** *narambiṉ-maṟai,* பெ. (n) யாழ்நூல்; treatise on stringed instruments. *"இசையொடு சிவணிய நரம்பின் மறைய"* (தொல்.எழுத்.33.).

*[நரம்பின் + மறை.]*

**நரம்பு[1]** *narambu,* பெ. (n) 1. மூளையிலிருந்து உடலின் பல பாகங்களுக்கும் உணர்வுகளைக் கொண்டு செல்லும் மெல்லிய இழை; nerve, tendon *"நரம்பெழுந்து நல்கூர்ந்தாராயினும்"* (நாலடி,153.). 2. அரத்தக்குழாய்; vein, blood-vessel இறுக்கிப்பிடித்து ஊசி போடுவதற்கு ஒரு நரம்பும் கிடைக்கவில்லை (இக்.வ).

3. யாழ்நரம்பு; catgut, chord, string of a lute. *"வடிநரம் பிசைப்பபோல்"* (கலித்.36.) 4. இலைநரம்பு; இலையின் அடிப்பரப்பில் காணப்படும் நீரைக் கொண்டுசெல்லும் மெல்லிய இழை போன்ற பகுதி; fibre, as of leaves, tendril of a vine. 5. வில்லின்நாண் முதலியன (பிங்.); string, as of a bow. 6. பலா முதலிய பழங்களில், உள்ளிருக்குந் தண்டு. (வின்.); continuation of the stem through the jackfruit, custared apple and other fruits. 7. நார்; fibre, sinew. 8. நாடி(வின்.) பார்க்க; see nāḍi.

**மறுவ.** தசைநார்.

**தெ.,** நரமு,துளு **க.,** நர.நரவு **ம.,** நரம்பு **கொலாமி.,** நரம். **பார்சி.,** நர்ப். **கொண்டி.,** நரல்., நரலுக., **கொண்டா.,** நரம். குவி நரோமி., **கூர்க்.,** நரி **மால்டோ.,** நரு.

**த.** நரம்பு → L nervus., Greek. neuron., Eng. nerve.

தமிழிலுள்ள நரம்பு என்ற சொல், இலத்தீனம், கிரேக்கம், ஆங்கிலம் போன்ற மொழிகளில், முதனிலை மாறாது பயின்று வழங்கும் பாங்கினை, மேற்குறித்த எடுத்துக்காட்டுகள், தெளிவுறுத்து கின்றன.

*[நள் + நாளம் → நாரம் → நரம்பு.]*

(முதல் தாய்மொழி பக்.2–78)

ஒருகா. *[நார் + அம்பு → நாரம்பு → நரம்பு.]*

தோன்றற்கருத்தினின்று தோன்றிய துளைத்தற் கருத்துப்பொருளே, நரம்பு என்னுஞ் சொல்லின் வேரடியாகும். ('யா'–ப.அருளி–பக்.223.).

நரம்பின் அமைப்பு, செயற்பாடு, வகைமை பற்றிச் சா.அக. கூறுவது,

மூளையிலும், முதுகுத்தண்டுக்கொடியிலு மிருந்து கிளைத்துச்செல்லுவதும், சிறிய கயிறு போன்ற தோற்றமுடையதுமான கொடியே, நரம்பு எனப்படும். இக் கொடிகள், மாந்தவுடம்பின், அனைத்துப் பகுதிகட்கும், கொப்புக்கொப்பாக, கூந்தல் விட்டுக் கிளைத்துச் செல்லுந் தன்மைத்து. இவை, நுண்ணிய நார்களால் ஆகியவை. உணர்ச்சியை ஒரு பகுதியிலிருந்து, மற்றொரு பகுதிக்குக் கொண்டு செல்லும் இயல்பின.

மாந்தனின் உடலில் 72000 நரம்புகள் அமைந்துள்ளன என்று, உடற்கூற்று வல்லுநர் உரைப்பர். வகைமை வருமாறு:–

1. கேள்வி நரம்பு 8 & இணை (சோடி).
2. தொடுவுணர் (பரிச) நரம்பு.
3. வடிவ (ரூப) நரம்பு.
4. நாற்ற (கந்த) நரம்பு.
5. பார்வைநரம்பு.
6. வெப்ப (உரும) நரம்பு.
7. (விசர்க்க) இரட்டை நரம்பு.
8. ஒற்றுணர்வு நரம்பு.
9. அழற்சி நரம்பு.
10. இயக்க (சலன) நரம்பு.
11. பெரு நரம்பு.
12. வளி நரம்பு.
13. துரித (செயல்) நரம்பு.
14. கசேரு நரம்பு.
15. எழுச்சி நரம்பு.

உடலுறுப்புகளின் அடிப்படையில் அமைந்த நரம்பு வகை:–

1. மூளைநரம்பு.
2. தலைநரம்பு.
3. முகநரம்பு.
4. நெற்றிநரம்பு.
5. கண்ணிறப்பை நரம்பு.
6. நாசிநரம்பு.
7. கன்னப்பொறி நரம்பு.
8. உண்ணாக்கு நரம்பு.
9. கன்னநரம்பு.
10. வெளிக்காது நரம்பு.
11. உட்காது நரம்பு.
12. கழுத்துநரம்பு.
13. தோள் நரம்பு.
14. கைநரம்பு.
15. முதுகு நரம்பு.

16. முள்ளந்தண்டு நரம்பு.
17. நுரையீரல் நரம்பு.
18. ஈரல்நரம்பு.
19. நெஞ்சாங்குலை நரம்பு.
20. வயிற்றுநரம்பு
21. விலாநரம்பு.
22. இடுப்பு நரம்பு.
23. தண்டுநரம்பு
24. கடிதடநரம்பு.
25. தொடை நரம்பு.
26. உள்ளங்கால் நரம்பு.
27. அரத்தநரம்பு.

**நரம்பு²** *narambu,* பெ. (n.) தோற்கருவி, துளைக்கருவி, நரப்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்னும் ஐவகை, இசைக் கருவிகளுள் ஒன்று; the five kinds of musical instruments, viz., tōṟkaruvi, tuḷai-k-karuvi, narappu-k-karuvi, kañja-k-karuvi, miḍaṟṟu-k-karuvi.

*[நார் → நர → நரம்பு.]*

*மெல்லிய இழைகளைக் கொண்டு செய்யப்படும், இசைக்கருவிகள்.*

**நரம்புஉணர்வுக்கலம்** *narambu-uṇarvu-k-kalam,* பெ. (n.) *தொடுவுணர் நரம்பு* neuro sensory cell.

*[நரம்பு + உணர்வு + கலம்.]*

**நரம்புக்கட்டி** *narambu-k-kaṭṭi,* பெ. (n.) நரம்பில் எற்படும் தசைவளர்ச்சி; neuroma.

*[நரம்பு + கட்டி.]*

**நரம்புக்கட்டு** *narambu-k-kaṭṭu,* பெ. (n.) திவவு. (திவா.); bands of catgut in a yāḻ

*[நரம்பு + கட்டு.]*

**நரம்புக்கட்டை** *narambu-k-kaṭṭai,* பெ. (n.) *நரம்புக்கடை* பார்க்க; see *narambu-k-kaḍai.*

*[நரம்பு + கட்டை.]*

**நரம்புக்கடுப்பு** *narambu-k-kaḍuppu,* பெ. (n.) நரம்பு நோய்வகை; a kind of neuralgia. (M.L.)

*[நரம்பு + கடுப்பு.]*

**நரம்புக்கடை** *narambu-k-kaḍai,* பெ. (n.) நரம்பின் இறுதி அல்லது முடிவு; terminus of nerve. நரம்போட்டத்தின் கடைக்கோடி. நரம்பு முடிச்சின் இறுதியெல்லை. (சா.அக.)

*[நரம்பு + கடை.]*

**நரம்புக்கயிறு** *narambu-k-kayiṟu,* பெ. (n.) **1.** கப்பற்பாய் தைக்குங் கருவி; cords sewed into the seams of a sail-cloth. **2.** வீணை முதலியவற்றின் இழை; catgut, lute-string.

*[நரம்பு + கயிறு.]*

**நரம்புக்கருவி** *narambu-k-karuvi,* பெ. (n.) இசைக்கருவியைந்தினுள் நரம்பால் யாக்கப்பட்டது; stringed instrument, one of five karuvi.

*[நரம்பு + கருவி.]*

நரம்பினை அடிப்படையாகக் கொண்டு அமைக்கப்பட்ட இசைக்கருவி; ஐவகை இசைக்கருவி வகையுளொன்று.



**நரம்புக்கழலை** *narambu-k-kalalai.* பெ. (n.) தசைநீர் நரம்பின் வீக்கம்; inflammation of the lymphatic vessels

*[நரம்பு + கழலை.]*

**நரம்புக்காய்** *narambu-k-kāy,* பெ. (n.) **1.** நீண்டு மெலிந்த காய் (வின்.); a long thin fruit 2. முருங்கைக்காய் (சங்.அக.); the legume or pod of horse-radish

*[நரம்பு + காய்.]*



**நரம்புக்காயம்** *narambu-k-kāyam,* பெ. (n.) நரம்பில் ஏற்படும் புண்; neurotrauma

*[நரம்பு + காயம்.]*

**நரம்புக்கிரந்தி** *narambu-k-kirandi,* பெ. (n.) *நரம்புச்சிலந்தி* பார்க்க; see *narambu-c-cilandi.*

*[நரம்பு* + skt *கிரந்தி.]*

**நரம்புக்குடைச்சல்** *narambu-k-kuḍaiccal,* பெ. (n.) நரம்பு நோய்வகை; a form of neuralgia (m.l.)

*[நரம்பு + குடைச்சல்.]*

**நரம்புக்குத்து[1]–தல்** *narambu-k-kuttu-* 5செ.குன்றாவி. (v.t.) நரம்பிலுண்டாகும் வலி; to nerves pain.

*[நரம்பு + குத்து–.]*

**நரம்புக்குத்து[2]** *narambu-k-kuttu-,* பெ. (n.) நரம்பிலுண்டாகும் வலி; nervous pain

**நரம்புக்கூட்டம்** *narambu-k-kūṭṭam,* பெ. (n.) நரம்பு வலை; a net work of nerves (சா.அக.)

*[நரம்பு + கூட்டம்.]*

**நரம்புக்கூடு** *narambu-k-kūḍu,* பெ. (n.) உடல்முழுவதும் பரவியுள்ள நரம்புத்தொகுதி; set or series of nerves parring through the whole body.

*[நரம்பு + கூடு.]*

**நரம்புக்கூறு** *narambu-k-kūṟu,* பெ. (n.) நரம்பின் பாகுபாடு; nervous system

*[நரம்பு + கூறு.]*

**நரம்புக்கேடு** *narambu-k-kēḍu,* பெ. (n.) **1.** நரம்புத்தளர்ச்சி; nervous break down, prostration **2.** நரம்பு அழற்சிகண்டு மெலிதல்;

degeneration or deterioration of the proper nerve substance. 3. நரம்பிற்குண்டாகும் அழிவு; destruction or dissolution of nerve tissue. (சா.அக.).

*[நரம்பு + கேடு.]*

**நரம்புக்கோளம்** *narambu-k-kōḷam,* பெ. (n.) நரம்பில் உருவாகும் வீக்கம்; neurula.

*[நரம்பு + கோளம்.]*

**நரம்புக்கோளாறு** *narambu-k-kōḷāṟu,* பெ. (n) நரம்புக்கேற்படும் பல்வகைக் நோய்கள்; nerves affections or disorder or derangement (சா.அக.).

*[நரம்பு + கோளாறு.]*

**நரம்புச்சக்தி** *narambu-c-cakti,* பெ. (n) *நரம்பாற்றல்* பார்க்க; see *narambāṟṟal.* (சா.அக.).

*[நரம்பு + skt.சக்தி.]*

**நரம்புச்சலனம்** *narambu-c-calaṉam,* பெ. (n) *நரம்பழற்சி* பார்க்க; see *narambaḻarci.*

*[நரம்பு + skt.சலனம்.]*

**நரம்புச்சன்னி** *narambu-c-caṉṉi,* பெ. (n.)
1. *நரம்பிசிவு பார்க்க; see narambiśivu.*
2. நரம்பிழுப்பு; nerve apoplexy.

**ஒருகா.** நரம்பு + skt. ஜன்னி.

மூளையில் ஏற்படும் குருதிப் பெருக்கினால் உண்டாகும், உணர்ச்சி, செயல் ஆகியவற்றின் இழப்பினால் வரும் இசிவு நோய்.

**நரம்புச்சாலம்** *narambu-c-cālam.* பெ. (n.) நரம்பின் கண்ணறை; nerve cell

*[நரம்பு + skt.சாலம்.]*

நரம்பின் கண்ணறையில் உண்டாகும் மாற்றம், அல்லது செயல் இழப்பு.

**நரம்புச்சிலந்தி** *narambu-c-cilandi,* பெ. (n) 1. தோலின் அடியில் நரம்பு போன்ற புழுவை உண்டாக்கும் ஒருவகைக் கட்டி; guinea-worm 2. நரம்பின் மேலேற்படும் புண்கட்டி (வின்.); boil on a tendon

**மறுவ.** நரவலி. நாரப்புண்.

*[நரம்பு + சிலந்தி.]*

இந் நோயின் தன்மை பற்றிச் சா.அக. கூறுவது:–

உடம்பில் முதற்கண் அரிப்பு ஏற்படும். நமைச்சல் ஏற்பட்ட இடத்தில் கொப்புளம் எழும்பி, உடைந்து, அதனுள்ளிருந்து, புழுக்கள் நூலிழை போல் நீண்டும், வெளுத்தும், நெளிந்தும் வெளிவரும் தன்மையுள்ள, ஒரு வகைச் சிலந்திப் புண். இதில், உருவான புழுக்கள் அறுபடாது விழுவது நலம். அறுபட்டு விழுந்தால், சிலந்தியில் மிகு வீக்கம் ஏற்படும். வலி மிகுதியாகும்.

இப் புழுக்கள் சருகு ஊறிய குளம், குட்டை, கிணறு முதலிய நீர்நிலைகளில் மிகுதியாகக் காணப்படும். மாசுபடிந்த குளம், குட்டைகளில், உள்ள தண்ணீரைக் குடிக்கும்போதும், குளிக்கும் போதும், மாந்தர்தம் வாய் வழியாகவும், மயிர்க்காலின் வழியாகவும் உட்சென்று, கால் அல்லது பாதங்களைத் தாக்கும், தாக்கிய பகுதியில் தீக்கொப்புளம் போல், நீர்க்கட்டிகள் எழும்பும்.

இக் கொப்புளங்கள் உடையுங்கால், 20 முதல் 30 (அங்குலம்) விரற்கிடை நீளமுள்ள புழுக்கள் வெளிப்படும். பெண்களைக் காட்டிலும், ஆண்களுக்கு இக் கொப்புளங்கள் மிகுதியாக ஏற்படும். அரிசிச்சோறு, இதளியம் (பாதரசம்),

இரண்டையும் அரைத்து, இக் கலவையுடன் வாழைப்பழம், பெருங்காயம் போன்றவற்றைச் சேர்த்து, மசித்துக் கட்டினால் ஆறும்.

**நரம்புச்சிலந்திப்புழு** *narambu-c-cilandi-p-pulu,* பெ. (n.) நரம்புக்கட்டிக்குள் உருவாகும் புழு; guinea-worm.

*[நரம்புச்சிலந்தி + புழு.]*

**நரம்புச்சுருக்கம்** *narambu-c-curukkam,* பெ. (n.) நரம்புகள் முடிச்சுகளாகச் சுருங்கும் தன்மை; a morbid enlargement knotty in shape

*[நரம்பு + சுருக்கம்.]*

**நரம்புச்சுருட்டல்** *narambu-c-curuttal,* பெ. (n.) *நரம்புச்சுருட்டு* பார்க்க; see *narambu-c-curuttu.*

*[நரம்பு + சுருட்டல்.]*

**நரம்புச்சுருட்டு**[1] *narambu-c-curuttu,* பெ. (n.) அரத்தத் தேக்கத்தினால் காணும் நரம்பு முடிச்சு; a varicose condition of the veins due to obstruction is the free passage of blood. (சா.அக.).

*[நரம்பு + சுருட்டு.]*

**நரம்புச்சுருட்டு**[2] *narambu-c-curattu,* பெ. (n.) 1. நரம்புச்சுற்று (இங்.வை.); varicose veins, varix 2. நரித்தலை வாதம்; stiff joint, Synovitis.

*[நரம்பு + சுருட்டு.]*

**நரம்புச்சுருட்டை** *narambu-c-curuttai,* பெ. (n) *நரம்புச்சுருட்டு (இ.வ.)* பார்க்க; see *narambu-c-curuttu.*

*[நரம்பு + சுருட்டை.]*

**நரம்புச்சுளுக்கு** *narambu-c-culukku,* பெ. (n.) நரம்புப் பிறழ்ச்சி (வின்.); sprain.

*[நரம்பு + சுளுக்கு.]*

சுள்ளென்று வலிப்பது, நரம்பில் விழுந்த அடியால் வருவதே. இடமாற்றம் இராது என்பது, புதுமுறை மருத்துவப் பார்வை.

**நரம்புச்சுற்று** *narambu-c-curru,* பெ. (n) நரம்பின் வீக்கம்; varicose veins, varix (M.L.)

*[நரம்பு + சுற்று.]*

**நரம்புச்சூலை** *narambu-c-cūlai,* பெ. (n.) நரம்புக்குத்து; nerves pain

*[நரம்பு + சூலை.]*

**நரம்புச்சோர்வு** *narambu-c-cōrvu,* பெ. (n.) 1. நரம்புத்தளர்ச்சி; nerves prostration. 2. *நரம்பிளைப்பு* பார்க்க; see *narmbilaippu.* (சா.அக.).

*[நரம்பு + சோர்வு]*

**நரம்புசன்னி** *narambu-šanni,* பெ. (n) 1. இழுப்பு நோய்; tetanus, convulsions 2. நரம்பிழுப்பு பார்க்க; see narambiluppu

மறுவ. இசிவுநோய், நரம்பிழுப்பு.

**நரம்புசார்உளவியல்** *narambu-šār-ulaviyal,* பெ. (n.) நரம்பு சார்ந்து வரும் உள்ளத்து இயல்பு; neuro psychology.

**நரம்புத்தடிப்பு** *narambu-t-tadippu,* பெ. (n.) *நரம்புக் கழலை* பார்க்க; see *narambu-k-kalalai.*

*[நரம்பு + தடிப்பு.]*

**நரம்புத்தலைவலி** *narambu-t-talaivali,* பெ. (n.) நரம்புக்கோளாறினால் ஏற்படும் ஒற்றைத் தலைவலி; a nervous affection marked by a periodic head-ache. (சா.அக.).

*[நரம்பு + தலைவலி.]*

**நரம்புத்தளர்ச்சி** *narambu-t-talarcci,* பெ. (n.) நரம்பிலுண்டாகும் உறுதிக்குலைவு; nervous debility

*[நரம்பு + தளர்ச்சி.]*

இந் நோயினை எளிதில் கண்டுபிடிக்க இயலாது. உடலில் உண்டாகும் மிகுகளைப்பும், ஆற்றல் குறைவும், இதன் அறிகுறியாகும். நரம்புத் தளர்ச்சியின் விளைவால், கட்டுப்பாடின்றி உடலுறுப்புகளில், நடுக்கம் ஏற்படும். தூக்க மின்மையும் இந் நோயின் அறிகுறியென்று, சா.அக. கூறும்.

**நரம்புத்தாபிதம்** *narambu-t-tābidam,* பெ. (n.) நரம்பிற்குண்டாகும் அழற்சி; inflammation of a nerve. (சா.அக.).

*[நரம்பு + skt.தாபிதம்.]*

**நரம்புத்திடம்** *narambu-t-tidam,* பெ. (n.) நரம்பின் உறுதி; strength the specific energy peculiar to the nervous system

*[நரம்பு + திடம்.]*

**நரம்புத்திரட்சி** *narambu-t-tiratci,* பெ. (n.) நரம்பு முடிச்சினைப்போன்று சுருண்ட உருண்டை; a knot like mass of grey nervous matter forming a centre from which fibres radiate (சா.அக.).

*[நரம்பு + திரட்சி.]*

**நரம்புத்திருகு** *narambu-t-tirugu,* பெ. (n.) நரம்புமுறுக்கம்; twisting of the veins. (சா.அக.).

*[நரம்பு + திருகு.]*

**நரம்புத்துடிப்பு** *narambu-t-tudippu,* பெ. (n.) நரம்புநோய்; neuralgia (M.L.)

*[நரம்பு + துடிப்பு.]*

**நரம்புத்தேர்ச்சி** *narambu-t-tērcci,* பெ. (n.) நரம்பு வளர்ச்சி; development of nerve tissue (சா.அக.).

*[நரம்பு + தேர்ச்சி.]*

**நரம்புத்தோற்றம்** *narambu-t-tōrram,* பெ. (n.) 1. நரம்பின் எழுச்சி; dilatated condition of the vein 2. இறப்பின் அறிகுறி; a symtom of death. (சா.அக.).

*[நரம்பு + தோற்றம்.]*

**நரம்புநடுக்கம்** *narambu-nadukkam,* பெ. (n.) நரம்பினை நடுங்கச் செய்யும் ஒரு நோய்; morbid nervousness with physical unrest. (சா.அக.).

*[நரம்பு + நடுக்கம்.]*

**நரம்புநரை** *narambu-narai,* பெ. (n.) நரம்பிலுள்ள சாம்பல் நிறமான பொருள்; the grey matter of the nerves. (சா.அக.).

*[நரம்பு + நரை.]*

**நரம்புநார்** *narambu-nār,* பெ. (n.) நரம்பிலுள்ள நார்போன்ற பொருள்; nerve-fibre. (சா.அக.).

*[நரம்பு + நார்.]*

**நரம்புநீக்கல்** *narambu-nīkkal,* பெ. (n.) உடம்பிலிருந்து நரம்பை அகற்றுதல்; excision of a part of a nerve. (சா.அக.).

*[நரம்பு + நீக்கல்.]*

**நரம்புநூல்** *narambu-nūl,* பெ. (n.) மீன்வலைபின்ன உதவும் நெகிழி நூல்; nylon thread used for fishing net. "***வலைபின்ன நரம்புநூல் வாங்கிவா***" **(உ.வ.).**

*[நரம்பு + நூல்.]*

**நரம்புநோய்** *narambu-nōy,* பெ. (n.) நரம்பைப்பற்றி வரும் நோய் வகை; disease of the nervous system (M.L.).

*[நரம்பு + நோய்.]*

**நரம்புநோய்ச்சிகிச்சை** *narambu-nōy-c-cigiccai,* பெ. (n.) நரம்பு நோய்களுக்குச் செய்யும் மருத்துவப் பண்டுவம்; treatment of nervous diseases-neuriatry.

*[நரம்பு + நோய் + skt. சிகிச்சை.]*

skt. *சிகிச்சை → த.பண்டுவம்.*

**நரம்புநோவு** *narambu-nōvu,* பெ. (n.) *நரம்புநோய்* பார்க்க; see *narambu-nōy.*

*[நரம்பு + நோவு.]*

**நரம்புப்பல்** *narambu-p-pal,* பெ. (n.) நரம்பின் வீக்கம்; varicose veins (M.L.).

*[நரம்பு + பல்.]*

**நரம்புப்பிசகு** *narambu-p-piśagu,* பெ. (n.) நரம்புச்சுளுக்கு; nerves sprain.

*[நரம்பு + பிசகு.]*

**நரம்புப்பிடிப்பு** *narambu-p-piḍippu,* 1. உடலிலுள்ள பொருத்துகள் நீட்டி முடக்க முடியாமலிருக்கை; stiffness of joins. 2. இழுப்பு; spasm.

*[நரம்பு + பிடிப்பு.]*

**நரம்புப்பிணைப்பு** *narambu-p-piṇaippu,* பெ. (n.) நரம்புகள் ஒன்றோடொன்று பின்னிக் கொண்டிருக்கை; nerves or vessels intervoven as twined together net work of nerves or vessels. (சா.அக.).

*[நரம்பு + பிணைப்பு.]*

**நரம்புப்பிறழ்ச்சி** *narambu-p-piralcci,* பெ. (n.) *நரம்புப்பிசகு* பார்க்க; see *narambu -p-piśagu*

*[நரம்பு + பிறழ்ச்சி.]*

**நரம்புப்பின்னல்** *narambu-p-pinnal,* பெ. (n) *நரம்புப்பிணைப்பு* பார்க்க; see *narambu-p-piṇaippu.*

*[நரம்பு + பின்னல்.]*

*அரத்தக் குழல்கள் அல்லது நரம்புகள், வலைபோல் பின்னிக் கொண்டிருக்கை.*

**நரம்புப்புடைப்பு** *narambu-p-puḍaippu,* பெ. (n) நரம்பு வீக்கம் (வின்.); swelling of the veins, dilatation of the veins, as from straining

*[நரம்பு + புடைப்பு.]*

**நரம்புமண்டலச்சூலை** *narambu-maṇḍala-c cūlai,* பெ. (n.) 1. நரம்பு மண்டலத்தின் செயற் பாடு; nerves whose stimulation lowers. 2. ஊக்கத்தைக் குறைக்கும் நரம்புகள்; in hibits the activity of the nerve centre, inhibitory nerves of the nervous system (சா.அக.).

*[நரம்பு + மண்டலம் + சூலை.]*

**நரம்புமண்டலம்** *narambu-maṇḍalam,* பெ. (n) உடம்பிலுள்ள நரம்புகளின் கூறுபாடு (இங்.வை.); the nervous system.

*[நரம்பு + மண்டலம்.]*

நரம்புகளின் சேர்க்கை அல்லது நரம்பின் கோட்பாடு, எனினும் ஒக்கும்.

உடம்பின் தொழிலைச் சீர் படுத்தற்பொருட்டு, பல நரம்புகள் கூடுமிடம். நரம்புமண்டலம் எனப்படும். சிந்தித்தல், உணர்வுகளைப் புரிந்துகொள்ளுதல், உறுப்புக்களை அசைத்தல், போன்றவை, நரம்புமண்டலத்தின் தலையாய பணியாகும். நரம்பு, நரம்புமுடிச்சி, மூளை, தண்டுவடம், தசைநார் ஆகியவற்றை உள்ளடக்கிய அமைப்பே, நரம்புமண்டலம் என்று, சா.அக. கூறும்.

**நரம்புமணி** *narambu-maṇi,* பெ. (n) நரம்புப்போக்கிற்கு அடிப்படையான பொருள்; any mass of nervous substances as a centre of nervous influence.

*[நரம்பு + மணி.]*

**நரம்புமத்திமம்** *narambu-mattimam,* பெ. (n.) நரம்பின் நடுவிடம்; nerve centre.

*[நரம்பு + skt மத்திமம்.]*

**நரம்புமருந்தியல்** *narambu-marundiyal,* பெ. (n.) நரம்புத் தொடர்பான நோய்களுக்கு பயன்படுத்தும், மருந்துகளைப் பற்றிய அறிவியல்; neuro-pharmacology.

*[நரம்பு + மருந்து + இயல்.]*

**நரம்புமுடக்கம்** *narambu-muḍakkam,* பெ. (n) நரம்பு முடங்கிக் கொள்ளுகை (வின்.): stiffness of tendons making it impossible to stretch one's limbs

**மறுவ.** நரம்புப்பிடிப்பு.

*[நரம்பு + முடக்கம்.]*

நோய் நீங்குவதற்காக அளவிற்கு அதிகமாகவும், தேவையற்ற நிலையிலும், உணவுக்கட்டுப்பாட்டினை மேற்கொள்வதால், இந் நோய் ஏற்படுமென்று, சா.அக. கூறும்.

இந் நோயின் விளைவால், நரம்புகள் ஒன்றையொன்று இழுத்துக்கொள்ளும்; சரிவர நடக்கவியலாது.

**நரம்புமுடிச்சு** *narambu-muḍiccu,* பெ. (n) நரம்பின் முடிச்சில் ஏற்படும் நோய் வகை; a kind of disease which forms nodes as the nerves.

**மறுவ.** நரம்புருண்டை.

*[நரம்பு + முடிச்சு.]*

**நரம்புமுறுக்கம்** *narambu-muṟukkam,* பெ. (n.) நரம்பு திருகிக் கொள்ளல்; twisting of nerves.

*[நரம்பு + முறுக்கம்.]*

**நரம்புமுறுக்கேறு—தல்** *narambu-muṟu-k-kēṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நரம்புக்கு கூடுதல் வலிவு அல்லது உறுதி ஏற்படுதல்; to development of the nervous energy. (சா.அக.).

*[நரம்பு + முறுக்கேறு-.]*

**நரம்புமூலம்** *narambu-mūlam,* பெ. (n.) நரம்பின் பிறப்பிடம்; nervous origin

*[நரம்பு + மூலம்; நரம்பு தோன்றுமிடம்]*

*மூலம் = தோற்றம்.*

**நரம்புவலி** *narambu-vali,* பெ. (n.) நரம்பு நோய்வகை; a kind of neuralgia. neuritis. (m.l.)

மறுவ. நரம்பூதை வலி.

*[நரம்பு + வலி.]*

*மிகு வளித்தொல்லையா லுண்டாகும் வலி.*

இதனை, நரம்புவாத வலி என்று, சா.அக. கூறும். இவ் வலியினால், நரம்பிலும், நரம்போடும் வழியெங்கும், குத்தல் ஏற்படும். விண்விண்ணென்று தெறித்து, நரம்பில் குத்தலையுண்டாக்கும், இவ் வலி மிகக் கடுமையானது.

இவ் வலி உடம்பின் பலபகுதிகளில், பற்பல காரணங்களால் ஏற்படும். நீரிழிவு, சூலைநோய், உணவிலுண்டாகும் நச்சுத்தன்மை போன்ற காரணங்களால், இவ் வலி ஏற்படும். முகம், மார்பு, தலைபோன்ற பகுதிகள் இந் நோயினால், செயலிழக்கும் என்று, சா.அக.கூறும்.

**நரம்புவலிப்பு** *narambu-valippu,* பெ. (n.) வலிப்பு நோய்வகை: a kind of hysteria disease.

*[நரம்பு + வலிப்பு.]*

நரம்பு மண்டலம் செயலிழப்பதால், உண்டாகும் வலிப்பு. இந் நிலையில் நரம்பின் முடிச்சுகளில், அளவிற்கு அதிகமான குத்தலேற்படும் என்று, சா.அக.கூறும்.

**நரம்புவலிமை** *narambu-valimai,* பெ. (n.) நரம்பின் உறுதி; nerve energy, nerve potential.

*[நரம்பு + வலிமை.]*

*நரம்பின் ஆற்றல்.*

**நரம்புவாங்கள்** *narambu-vāṅgaḷ,* பெ. (n.) *நரம்பு வாங்குகை* பார்க்க; see *narambu-vāṅgugai.*

*[நரம்பு + வாங்கள்.]*

**நரம்புவாங்குகை** *narambu-vāṅgugai,* பெ. (n.) 1. நரம்பு இழுத்துக் கொள்ளுகை; stretching of the nerves 2. நரம்பு சுருங்குகை; contraction of nerves 3. உடம்பிலிருந்து நரம்புப்பகுதியை நீக்குகை; excision of removal of a nerve or its part

*[நரம்பு + வாங்குகை.]*

உயிருக்கு ஊறு ஏற்படாதாவாறு, உடலில் இழுத்துக் கொண்டு, சுருங்கித் தொங்கும் நரம்பினைக் களைதல், நரம்பு வாங்குகை, எனப்படும்.

**நரம்புவாங்கு—தல்** *narambu-vāṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. இலை முதலிய வற்றின் நரம்பை நீக்குதல்; to strip the fibres. as from leaves, from fruits 2. துன்புறுத்துதல்; to put one in great straits. 3. குதிகாலின் நரம்பை வெட்டுதல், to cut the tendons of the heels

*[நரம்பு + வாங்கு-.]*

**நரம்புவாங்குதல்** *narampu-vāṅgudal,* தொ.பெ. (vbl.n.) *நரம்பு முடக்கம்* பார்க்க; see *narambu-muḍakkam.*

*[நரம்பு + வாங்குதல்.]*

மாந்தர்களுக்கு காலப்போக்கில், அகவை கூடுவதால் நரம்பு சுருங்கும். அவ்வாறு சுருங்கிய நரம்பு, கைகால்களில், சுருண்டு இழுத்துக் கொள்ளும். இந் நோய், நரம்பு வாங்குதல் என்று, சா.அக. கூறும்.

**நரம்புவாதம்** *narambu-vādam,* பெ. (n.) *நரம்புவலி* பார்க்க; see *narambu-vali.*

*[நரம்பு + வாதம்.]*

**நரம்புவாயு** *narambu-vāyu,* பெ. (n) **1.** *நரம்புத்தடிப்பு* பார்க்க; see *narambu-t-taḍippu.* **2.** *நரம்புவாதம்* பார்க்க; see *narambu-vādam*

*[நரம்பு + skt வாயு.]*

**நரம்புவிசை** *narambu-višai,* பெ. (n) **1.** நரம்பின் வேகம்; agility **2.** நரம்புவலு; strength of a nerve.

*[நரம்பு + விசை.]*

**நரம்புவிறைப்பு** *narambu-viṟaippu,* பெ. (n.) நட்டுக்கொள்ளும்படி செய்யும் நரம்பு; nerve that causes erection

*[நரம்பு + விறைப்பு.]*

**நரம்புவீக்கம்** *narambu-vīkkam,* பெ. (n.) **1.** விதைவீக்கம்; epididymitis **2.** *நரம்புவலி* பார்க்க; see *narambu-vali*

*[நரம்பு + வீக்கம்.]*

**நரம்புவீச்சு** *narambu-viccu,* பெ. (n) *நரம்புவலி (யாழ்.அக.)* பார்க்க; see *narambu-vali.*

*[நரம்பு + வீச்சு.]*

**நரம்புவீழ்ச்சி** *narambu-viḻcci,* பெ. (n) உடம்பின் நரம்புகள் செயலற்று சோர்வடைந்து அதனால் ஏற்படும் களைப்பு; extrenic exhaustion or powerlessness, a nervous disorder marked by nervous prostration

மறுவ. நரம்புளைச்சல்.

*[நரம்பு + வீழ்ச்சி.]*

**நரம்புவெட்டு** *narambu-veṭṭu,* பெ. (n) நரம்பறுவை, நரம்புத்துணிப்பு; neurotmy

*[நரம்பு + வெட்டு.]*

**நரம்புவெறி** *narambu-veṟi,* பெ. (n.) நரம்பு நோயினால் ஏற்படும் மனப்பித்து; nervous disease complicated with mental disorder.

*[நரம்பு + வெறி.]*

**நரம்புவேதனை** *narambu-vēdaṉai,* பெ. (n) நரம்பு வலி; pain in a nerve.

*[நரம்பு + வேதனை.]*

**நரம்புவேர்** *narambu-vēr.* பெ. (n.) நரம்புத்திரள்; a mass of nerve matter.

மறுவ. நரம்புத் தொகுதி.

*[நரம்பு + வேர்.]*

**நரம்புளைச்சல்** *naram-bul̤aiccal,* பெ. (n.) *நரம்பு வலி* பார்க்க; see *narambu-vali*

*[நரம்பு + உளைச்சல்.]*

**நரம்புறுதி** *naramburudi,* பெ. (n.) *நரம்பு வலிமை* பார்க்க; see *narambu-valimai.*

*[நரம்பு + உறுதி.]*

**நரம்புறைப்பு** *naramburaippu,* பெ. (n.) நரம்பின் உறுதி; nervous strength, specific energy peculiar to the nervous system

*[நரம்பு + உறைப்பு.]*

**நரம்பூக்கமருந்து** *narambūkka-marundu,* பெ. (n.) நரம்புக் கோளாறைத் தணிவிக்கும் மருந்து; nervice

*[நரம்பு + ஊக்கம் + மருந்து.]*

**நரம்பூதைநோய்** *narambūdai-nōy,* பெ. (n.) *நரம்புவலி* பார்க்க; see *narambu-vali.*

*[நரம்பூதை + நோய்.]*

நரம்பூதை(வாதம்)நோய், ஒரேயிடத்தில் நிலைத்துநின்று, உடம்பின் அனைத்துப் பகுதி நரம்புகளையும், செயல் இழக்கச் செய்யும் நோய் என்று, சா.அக. கூறும்.

**நரம்பெடு[1]-த்தல்** *narambedu-,* 4 செ.குன்றாவி. (v.t.) **1.** கடுமையாக வேலை புரியச்செய்தல்; to exact work, grind **2.** ஆற்றலைக் கெடுத்தல்; to reduce one's strength or pride அவன் உன்னை நரம்பெடுத்து விடுவான் (உ.வ.).

*[நரம்பு + எடு-.]*

**நரம்பெடு[2]-த்தல்** *narambedu-,* 4 செ. கு. வி. (v.i.) உடம்பு மிக மெலிந்து போதல்; to become emaciated or thin உடம்பு நரம்பெடுத்தது. (உ.வ.).

*[நரம்பு + எடு-.]*

**நரம்பெரிச்சல்** *narambericcal,* பெ. (n.) நரம்பு நோய்வகை; a kind of neuritis

*[நரம்பு + எரிச்சல்.]*

**நரம்பெழுச்சி** *narambel̤ucci,* பெ. (n.) நரம்பு எழும்பிக் காணல்: dilated or enlarged condition of a nerve or vein above the surface of the skin.

*[நரம்பு + எழுச்சி.]*

**நரம்போட்டம்** *narambōṭṭam,* பெ. (n.) நரம்பு உடம்பின் பலவிடங்களில் ஓடிப் பிரிந்து நிற்கும் தன்மை; spreading of nerves in different parts of the body

*[நரம்பு + ஓட்டம்.]*

**நரம்போய்ச்சல்** *narambōyccal,* பெ. (n.) நரம்புத்தளர்ச்சியால் ஏற்படும் சோர்வு; exhaution of nervous energy.

*[நரம்பு + ஓய்ச்சல்.]*

**நரமடங்கல்** *nara-madaṅgal,* பெ. (n.) நரசிங்க மூர்த்தி; Tirumāl, as man-lion. ***"தம்பத்தின் அனகமா நரமடங்கலா யவதரித்து"*** (பாகவதை.1. மாயவன, 31).

மறுவ. நரவரி.

த. நரம் → skt. nara.

*[நரன் + மடங்கல்.]*

நரம்புகளால் பின்னப்பட்ட தசை நார்களின் கட்டுக்கோப்பாகிய மாந்தனும், தலை மடங்கமுடியாத யானை போல் அன்றி, மடங்கல் இயல்புடைய அரிமாவும், கலந்தவுரு.

**நரமாமிசபட்சணி** *nara-māmiša-paṭcaṇi,* பெ. (n.) **1.** மனிதவூன் தின்போன்; anthropophagist, cannibal **2.** மக்களிறைச்சி தின்னும் விலங்கு; man eater, a man-eating animal, as tiger, shark

*[நரன் + Skt மாமிசபட்சணி]*
*நரன் = மனிதன்*

**நரமாமிசம்** *nara-māmišam,* பெ. (n.) மனிதவூன்; human flesh மனித இறைச்சி தின்னும் கழுகுகள் (உ.வ.).

*[நரல் → நரன் = மாந்தன். நரம் = மாந்தப் பிறவி.*

*நரன் → நரம் + Skt மாமிசம்.]*

**நரமேதம்** *nara-mēdam,* பெ. (n.) நரபலியிட்டுச் செய்யும் வேள்வி (யாகம்); human sacrifice *"அந்த நரமேதமக மியற்றுதற்கு"* (பாரத இராசசூ. 14).

*[நர + Skt. மேதம்.]*

**நரல்[1]–லுதல்** *naral-,* 5செ.கு.வி (v.i.) **1.** ஒலித்தல்; to sound, make noise, creak, roar *"ஆடுகழை நரலும் சேட்சிமை"* (புறநா.120). **2.** கத்துதல்; to low, as cows, to caw, as crows, to hum, as many voices, to cry. "வெண்குருகு நரலவீசும் நுண் பஃறுவலைய" (அகநா:14). **3.** பேசுதல்; to speak, to tell

**க.** நரல்.

*ஒருகா.* ஞரல் → நரல் → நரல்(லு)–.

நரல்(லு)–தல் பேசுதல். ஒலித்தல், கத்துதல் போன்ற நிலைகளில் பயிலும். விலங்குகள், ஒலி எழுப்புந் தன்மையின. நரலுதல் என்பது, அஃறிணை எழுப்பும் ஒலியைக்குறிக்கும். பேசுதல்–கிளி, பூவை (நாகணவாய்ப்புள்) பழக்கப்படுத்திச், சில சொல் பேசுதல்.

செப்பமுடன் பலுக்கிப்பேசும், செம்மாந்த அருட்கொடையினை, மாந்தனுக்கே, இறைவன் ஈந்துள்ளான். செம்மாந்து ஒலித்து, ஒரே சீராகப் (பலுக்கிப்) பேசுதலே, நரலுதல்.

**நரல்[2]** *naral* பெ. (n.) காய்ந்த குப்பை (செத்தை); dry rubbish, as dead leaves

**நரல்[3]** *naral,* பெ. (n.) மக்கள் கூட்டம்; crowd of people

*[நரல் → நரல்]*

பேச்சொலியும், சிரிப்பொலியும் எழுப்பும் மாந்தரைக் குறித்த சொல்.

**நரல்வதி** *naral-vadi,* பெ. (n.) மஞ்சள்; tu-meric

*[நரல் + வதி.]*

நரலுதல் = ஒலிஎழ அரைத்தல். அரைத்துப் பூசும்இயல்பு, வதிந்து கிடத்தலின், மஞ்சளைக் குறித்தது.

**நரல்வு** *naralvu,* பெ. (n.) **1.** ஒலிக்கை; sounding, roaring **2.** எடுத்தலோசை (பிங்.); high pitch. **3.** யாழின் உள்ளோசை (பிங்.); vibrating sound of a lute **4.** உள்ளோசை; murmur

*[ஞரல் → நரல் = ஒலி. நரல் → நரல்வு = ஒலிக்கை.]*

**நரலுகை** *naralugai,* பெ. (n.) 1. பேசுகை; speaking 2. ஒலிக்கை; sounding

நரல் = ஒலி.

*[நரல் → நரலு → நரலுகை.]*

நாட்டு மக்களின், நாகரிகப் பண்பாட்டு அளவு கோல், மொழியே. கத்திப் பேசுவதாலும், சிரிப்பதாலும், மாந்தன் 'நரன்' என்று பெயர்பெற்றான். விலங்குகள் கத்துந் தன்மையன. மாந்தனே, வாய் அங்காந்து பேசும் பேறுபெற்றவன். நரல் எனும்சொல் பேச்சு, ஒலி, கத்துகை என்னும் பொருட்பாட்டில்பயிலும். நரலுகை என்னுஞ் சொல், பேசுகை, ஒலிக்கை என்னும் பொருளில் பயின்று வருதல் காண்க.

**நரலை** *naralai.* பெ. (n.) 1. கடல் (திவா.); sea, as roaring "*நரலையுட் டனிபுக் காடார் மடந்தைய ரென்ப*" (திருவாலவா9.3). 2. மதிலுறுப்புக்களுளொன்று; (பிங்.); a particular section of a fortification 3. ஒலி; roaring. "*நரலைப்பெரு வேலையெல்லாம்*" (கம்பரா. வரைக்காட்சி,71).

*[நரல் → நரலை.*
*நரலை = ஒலியெழுப்பும் கடல்.]*

**நரலோகம்** *naralōgam,* பெ. (n.) நிலவுலகம் (திருக்கலம்.6.உரை); earth, as the world of men 2. நரவுலகு பார்க்க; see nara-v-ulagu.

*[நரன் + த. உலகம் → Skt. லோகம்.]*

மாந்தர் வாழும் உலகம்.

**நரவதி** *naravadi,* பெ. (n.) மஞ்சள்; turmeric

**நரவம்** *naravam,* பெ. (n.) அனிச்ச மரம்; a kind of flowering plant whose flowers so very sensitive that they droop when smelt

**நரவம்பூ** *nara-v-am-pū,* பெ. (n.) *அனிச்சம்* பார்க்க: see *aniccam*

*[நரவம் + பூ.]*

**நரவரி** *nara-vari,* பெ. (n.) திருமாலின் தோற்றரவான நரசிம்மம்; Tirumāl, as man lion

*[நரம் + அரி.]*

**நரவலி¹–த்தல்** *nara-vali-,* 4செ.கு.வி. (v.i.) அலுத்தல், to become weary or tired, as with waiting

*[நர + வலி–.]*

வலித்தல் தொடருங்கால் அலுத்தல் ஏற்படுவது இயல்பு.

**நரவலி²–த்தல்** *nara-vali-* 4 செ.குன்றா.வி. (v.t.) *நரகலி* பார்க்க; see *naragali-.*

*[நர + வலி–.]*

**நரவாகனம்** *nara-vāganam,* பெ. (n.) 1. மக்களால் சுமக்கப்படும் பல்லக்கு; palanquin, as carried on men's shoulders. "*மக்களாற் சுமக்கப் படும் வாகனம்*" "*பெரிய நரவாகனமும் பெற்றோம்*" (தனிப்பா. 216, 2). 2. ஊர்தி; vehicle of any kind. 3. குபேரனது ஊர்தி; kubēra's vehicle.

*[நரன் + Skt வாகனம்.]*

**நரவாகனரேகை** *nara-vāgana-rēgai,* பெ. (n.) ஒருவனுக்குப் பல்லக்கேறும் ஆகூழைக் குறிப்பதாகக் கருதப்படும் கையிலமைந்துள்ள வரைவு; (திருவாரூ. குற. Mss). a kind of distinctive mark on the palm, belived to indicate a person's future prosperity, when he would be able to ride a palanquin

*[நரம் + Skt. வாகனம் + ரேகை.]*

**நரவாகனன்** *nara-vāgaṉaṉ,* பெ. (n.) குபேரன் (பிங்.); kubēraṉ, as having a yaksaṉ named naraṉ for his vehicle.

[*நரம் + Skt. வாகனம் →வாகனன்.* ]

இயக்கனது தோளினைப் பல்லக்காகக் கொண்ட, குபேரன்.

**நரவானமண்டலம்** *naravāṉa-maṇḍalam,* பெ. (n.) மருக்காரை; common emelic nut.

[*நரவ்ான் + அ + மண்டலம்.* ]

**நரவானரம்** *naravāṉaram,* பெ. (n) 1. வாலில்லாக் குரங்கு; tailess monkey, more like a man. 2. பெரிய மனிதக் குரங்கு; one of the largest ape, resembled like man

[*நர + வால் + நரம்.*]

**நரவிலங்குவிளக்கு** *nara-vilaṅgu-viḷakku,* பெ. (n.) உடற்பகுதி விலங்குபோலவும், தலைப்பகுதி மனிதர்போலவும், அமைக்கப் பட்டுக் கோயிலில் தெய்வத் திருமேனிமுன் காட்டப்பெறும், விளக்கு வகை (பரத. ஒழிபி. 41); a kind of lamp for waring before the deity in a temple.

[*நரன் + விலங்கு + skt.விளக்கு.* ]

**நரவுலகு** *nara-v-ulagu,* பெ. (n.) மக்கள் வாழும் நிலவுலகு; earth, as the world of men.

[*நர + உலகு.*]

நரர் = மாந்தர்.

மாந்தர் வாழும் நிலமே நரவுலகு. உலகு என்னும் சொல் "லோக்" என்னும் வடசொல்லின் திரிபென்று, செ.ப.க. தமிழகரமுதலி கூறுகிறது. இஃது முற்றிலும் தவறு. இலக்கிய வழக்கு, உலகவழக்கு முதலானவற்றை அடிப்படையாக வைத்து நோக்குங்கால், 'உலகு' என்பது, தமிழ்ச் சொல்லென்று, நன்கு அறியலாம். உலகம் என்னுஞ்சொல்லின் கடைக்குறையே, உலகு என்னும் வடிவு. வள்ளுவர் பல இடங்களில், உலகு என்னுஞ் சொல்லைக் கையாண்டுள்ளார்.

(எ.டு.)

1. "பகவன் முதற்றே உலகு" (குறள்,1.).
2. "நீரின்றி அமையா துலகு" (குறள்,20.).
3. "வகைதெரிவான் கட்டேயுலகு" (குறள்,27.).
4. "பெருமை பிறங்கிற்—றுலகு" (குறள்,23.).
5. "உலகவாம் பேரறிவாளன் திரு" (குறள்,215.).
6. "என்னாற்றுங் கொல்லோ வுலகு" (குறள்,211.).

உலகவழக்கிலும், உலகு என்னுஞ் சொல் மக்களிடையே பெருவழக்காகப் பெருகிக் காணப்படுகிறது. (எ.டு.) உலகளவு; உலகியல், உலகாளி; உலகழிவு.

"லோக்" என்னும் ஆரியச்சொல், "நோக்கு" என்னும் தென்சொல்லின் திரிபாகும். உலகு + அம் → உலகம். உலகு, உலகம் என்னுஞ் சொல்லிற்கு, உருண்டையானது அல்லது, சுற்றிவருவது என்பதே பொருந்தும். உலகு, உலகம் என்னுஞ்சொற்கள் மக்கள் வழக்கில், பொதுமக்களையே பெருவாரியாகக் குறித்து வழங்கி வருகிறது.

(எ.டு.) உலகென்ன சொல்லும்? உலகம் இவ்வளவுதான்! (உ.வ.)

தமிழ். உலகு → Skt லோக. OE locian. OS locon Hindi– லோக். OHG luogen. W G lok.

லோக், என்னும் ஆரியச்சொல்லிற்குப் "பார்" என்பது பொருள். தமிழில் உள்ள உலகு அல்லது உலகம் என்னுஞ் சொல்லிருந்துதான் வடமொழியாளர் "லோக" என்று, திரித்துக் கொண்டனர். பார் என்னும் மூலப்பொருளே வட மொழிப்பொருள்.

உலகுஉருண்டையானது: சுற்றிவருந் தன்மைத்து என்பது தமிழ்ப்பொருள். மக்கள் வாழும் 'நிலவுலகு' என்பது தமிழ்மொழியில் அமைந்துள்ள, வாழ்வியல் பொருளாகும். இலத் தீனத்திலும், இச் சொல், மக்கள் என்னும் பொருளில் ஆளப்படுகிறது.

(எ.டு.).த. உலகு → Skt. லோக. L vulgus (volgus.) L. vulgus = the people, common people.

நரவுலகு என்னும் சொல், செந்தமிழ்ச் சொல்லே. ஞாலமுதன்மொழிச் சொல். உலகு என்னும் சொல்லினின்று தான், வடமொழி, இந்தி, இலத்தீன் போன்றவற்றில் லோக, லோக், vulgus, போன்ற சொற்கள் பிறந்துள்ளன.

**நரளி** *narali,* பெ. (n.) 1. கடலை (மலை.); bengal gram 2. வேர்க்கடலை: ground nut

*[நரள் → நரளி.]*

**நரளை** *naraḷai,* பெ. (n.) 1. பிரண்டை வகை (மூ.அ.); woolly heart vine vitis lanata 2. காட்டுப்பிரண்டை பார்க்க; see kāṭṭu-p-piraṇḍai, pedately seven-leaved vine.

*[நரளி → நரளை.]*

**நரளையிலை** *naraḷai-y-ilai,* பெ. (n.) புளிநற ளையிலை; a leaf of vitislanata

*[நரளை + இலை.]*

**நரற்று-தல்** *nararṟu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒலித்தல் (யாழ்.அக.); to produce sound

*[ஞரல் → நரல் → நரற்று-.]*

நரலுதல் = ஒலித்தல்→ஒலிப்பித்தல் = நரற்றுதல்.

நரலுதல் என்பது தன்வினைப்பொருள் தரும். இங்குப் பிறவினைவடிவம் தன் வினையாகி வருவதுபோல் அமைத்துள்ள. யாழ்ப்பாண அகரமுதலிக் குறிப்பு மறுபார்வை செய்யத்தக்கது.

**நரற்றுவித்தல்** *nararṟuvittal,* பி.வி. (cause v.) ஒலிக்கச் செய்தல்; to cause to sound

*[நரல் → நரற்று → நரற்றுவித்தல்.]*

*இது பிறவினை. ஒலி எழும்புவதற்கு மூலகரணியமாயிருத்தல்.*

**நரன்** *naraṉ,* பெ. (n) 1. மாந்தன்; man, human being. *"வறிதே நிலையாத விம் மண்ணுலகின் னரனாக வகுத்தனை"* (தேவா. 934: 2). 2. அருச்சுனன்: Aruccuṉaṉ *"நரனெனு நாமமும் படைத்தோன்"* (பாரத. அருச்சுனன்றவ. 75). 3. நரனெனும் துறவி. a sage *"நரனு நாரணனு மானோம்"* (பாரத. முதற்போ. 6). 4. பதினெண் கணத்து ளொருவர் (கம்பரா. தாடகை. 26.); iyakkar padiṉeṉ-kaṇam

த. நரன்→skt nara

*[நரல் → நரன் = மொழியினாலும் சிரிப்பொலியினாலும், மாந்தன் நரன் என்னும் பெயர் பெற்றிருத்தல் வேண்டும்.]*

நரன் என்னும் சொல்லுக்கு, வட மொழியில் வேரில்லை; ஒலித்துப் பேசும் இயல்பினையுடையவன் மாந்தன். மொழி யினாலேயே மாந்தன் நரன் என்று. பெயர் பெற்றிருத்தல் வேண்டும்.

ஒலித்தல் → கத்துதல் → பேசுதல் இம்மூன்று நிலைகளும், மாந்தன் வாழ்வில் மொழியைத் தோற்றுவிக்கும் கூறுகளாகும்.

**1. ஒலித்தல் நிலை.** நரல் → நரலுதல்– "ஆடுகழை நரலும் சேட்சிமை" (புறம்.120). ஒலித்தல் நிலையின் வளர்ச்சியே, கத்துதல்.

**2. கத்துதல் நிலை.** "வெண்குருகு நரல வீசும் நுண்பஃறுவலைய" (அகம்.14)

**3. பேசுதல் நிலை.** நரன் → நரம் = மாந்தப் பிறவி "நரத்திலும் பிறத்தி நாத" (திவ்.திருச்சந்.29). கத்துதலின் முடிபுநிலை, பொருண்மை தோன்றப் பேசும் நிலையாகும்.

"மாந்தன் வறிதே நிலையாத விம்மண்ணுலகின் நரனாக வகுத்தனை" (934:2).

சொன்மைநிலையிலும், பொருண்மை நிலையிலும், வடமொழியிலும், நரன் என்னும் சொல்லுக்கு, வேரில்லை என்பது கண்கூடு.

வானரம் (வால்நரம்) = வாலையுடைய மாந்தன் போன்ற விலங்கு.

"வானரமுகள" என்று சீவகசிந்தாமணிச் செய்யுள் கூறுவது காண்க.

வடமொழியாளர் "வானர" என்னுஞ் சொல்லை "நரஏவ" என்று பிரித்து, நரனைப் போன்றது என்று, பொருள் கூறுவர் (தமிழர்வரலாறு. பக்.99.)

ஒலித்தல், கத்துதல், பேசுதல் - எனும் முத்திறமொழி வளர்ச்சி நிலைகளில், முழுமை பெற்றவனே மாந்தன். நாட்டுமக்களின் நாகரிகப் பண்பாட்டு அளவுகோல் மொழியே யாதலால், மொழியை முழுமையாகப் பலுக்கிச் சொன்மை நிலையிலும், பொருண்மை நிலையிலும், நரற்றும் (ஒலிக்கும்) ஆற்றல் பெற்றவனே நரன் என்று ஓர்க.

நரன் என்னும் சொல் தூயதென்சொல் லென்று தெளிக.

**நரன்னாதி** *naraṉṉādi,* பெ. (n.) கடுகுரோகிணி; black hellibore-Helliborus niger.

*[நரன் + ஆதி.]*

**நரா** *narā.* பெ. (n.) கன்றுகை; hardness in fruit through blight or injury. *'பழம் நராப்பிடித்துப் போயிற்று'.*

*[நர + ஆ.]*

நார் அற்ற நிலைக்கு உரித்தாதல்

**நராங்கம்** *naráṅgam.* பெ. (n.) 1. நாரத்தை; bitter orange 2. ஆண்குறி; penis. 3. முகத்தில் எழும்பும் பரு; eruptions on the face pimples.

*[நர + skt. அங்கம்.]*

**நராங்கு-தல்** *naráṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வளர்ச்சி குன்றிப்போதல் (யாழ்ப்); to be stunted in growth.

*[நருங்கு → நரங்கு → நராங்கு-.]*

**நராதாரை** *naradārai.* பெ.(n.) மண்ணகமடந்தை; mother earth (சம.சொ.அக).

மறுவ. நிலமடந்தை.

**நராதிபன்** *narādibaṉ.* பெ. (n) அரசன்; king, as lord of men. *"தென்னராதி நராதி பரானவர்"* (கலிங். 313).

*[நர + Skt அதிபன்.]*

**நராந்தகம்** *narāndagam,* பெ. (n.) இறப்பு; death

*[நர + Skt. அந்தகம்.]*

நரனின் வாணாளிறுதி நிகழ்வு.

**நராந்தகன்** *narāndagaṉ,* பெ. (n.) 1. எமன் (மக்களையழிப்பவன்); yamaṉ, as destroyer of human beings 2. கொடியோன்; cruel person, murderer.

*[நர + Skt. அந்தகன்.]*

அந்தகம் = இறுதி.
வாணாளின் இறுதிக்காலத்தே,
உடம்பிலிருந்து உயிரைக் கூறுபடுத்தும் கூற்றுவன்.

**நராந்தம்** *narāndam,* பெ. (n.) 1. காக்கை (சது.); crow 2. அழகிய (கத்தூரி)மான்; musk deer

*[நர + அந்தம்.]*

அம் = அழகு அம் → அந்து → அந்தம். அந்தம் என்பதற்கு, முடிவு என்று பேராசிரியர் பொருளுரைத்திருப்பது, அத்துணைப் பொருத்தமன்று என்று, தேவநேயர் முதன்மடலம், முதல்பகுதியில் குறித்துள்ளார்.

**நராப்பற்று—தல்** *narā-p-parru-,* 5 செ.கு.வி. (v.i.) பழம் முதலியன கன்றுதலையடைதல் (வின்.); to become hard, as fruits.

*[நரா + பற்று—.]*

**நராப்பிடி—த்தல்** *narā-p-pidi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *நராப்பற்று* பார்க்க; see *narā-p-parru-*

*[நரா + பிடி—.]*

**நராபோகம்** *narā-bōgam,* பெ. (n.) 1. எதிர்பாராத பெருவாழ்வு (யாழ்.அக.); unexpected felicity befalling a person; windfall. 2. ஒருவன் போகமனுபவிக்கும் வாழ்நாளின் எல்லை; (இ.வ.) period of prosperity in a person's life.

*[நரா + skt. போகம்.]*

கடும்பசி முக்காலும், காமம் காலுமாக உள்ள வாழ்வின்பத்தை, உடல்நலம், பொருள் வளம் எல்லையுள் நின்று துய்த்தல் சிறப் பென்க.

**நராயணன்** *narāyaṇaṉ,* பெ. (n.) திருமால்; Tirumāl (vishṇu.). *"நாராயணனை நராயண னென் றேகம்பனோராமற் சொன்ன வுறுதியால்"* (தனிப்பா. 1,53, 104).

த. நரன் + skt. அயணன்.

*[நர + அயணன் → நராயணன்.]*

நராயணன் = மாந்தனாக இருந்து, தெய்வநிலைக்கு உயர்ந்தவன்.

**நராலை** *narālai,* பெ. (n.) நிரையம் (சது); hell.

*[நர + ஆலை.]*

ஒ.நோ. கச்சி + ஆலை = கச்சாலை.

**நரி¹—தல்** *nari-.* 2 செ.குன்றாவி. (v.t.) வருந்துதல்; to torture, torment. *"அரியுந்தசை தீற்றி நரியந்தொறும்"* (காஞ்சிப்பு. இருபத்தெண். 365).

*[நலி → நரி.]*

இது தன்வினை.

**நரி²—த்தல்** *nari-,* 4 செ.கு.வி. (v.i.) நரித்தன்மையடைதல்; to be foxy *"நரிகா ணரியாது நீர்.... நூங்குரல்காட்டும்"* (திருவாலவா 28, 12).

நரி என்னும் விலங்கை, குழந்தைக் கதைகளான, இந்தியாவின் பஞ்சதந்திரக் கதைகள், அரபு நாட்டின் ஈசாப் கதைகள் போன்ற நூல்களில், சூழ்ச்சி மிக்க விலங்காகக் காட்டி இருக்கிறார்கள். ஆயின், உயிரியல் வல்லுநர்கள் இதை மறுக்கிறார்கள். சூழ்ச்சியை மாந்தனுக்கு உவமையாக அமைத்துக் கொள்ளலாம்.

**நரி³—த்தல்** *nari-.* 4 செ.குன்றாவி. (v.t.) 1. எள்ளி நகையாடுதல்; to deride 2. இழிவாகக் கருதுதல், இகழ்ந்து கூறுதல், to despise.

இது பிறவினை.

**நரி⁴—த்தல்** *nari-,* 4 செ.கு.வி. (v.i.) 1. வருத்துதல்; to torment. *"திருச்சிராப்பள்ளி யென்றலுந் தீவினை நரிச்சிராது"* (தேவா. 369: 3). 2. நொறுக்குதல் (யாழ்.அக); to crush

*[ நெரி → நரி—. ]*

மேலே சொல்வது, சொல்லால் வருத்துதல். இது, செயலால் வருத்துதல் ஆகும்.

**நரி⁵—த்தல்** *nari-*, 4 செ.குன்றாவி. (v.t.) கெடுதல்; to perish. *"கருத்தீமை நரிச்சு நீங்க"* (காஞ்சிப்பு. வாணீ. 111.).

*[ நெரி → நரி—. ]*

நெரித்தல் → நரித்தல் சிலவிடத்துத் தன்வினை போல் பிறவினை வந்தியங்கும். அஃதொக்கும் இஃது. தீர்தலும் தீர்த்தலும், விடற்பொருட்டு ஆகும். (தொல்—உரி.)

**நரி⁶—த்தல்** *nari-*, 4. செ.கு.வி. (v.i.) வியத்தல்; to be perplexed

**நரி¹** *nari,* பெ. (n.) சிறுவிலங்கு வகை; jackal. *"காலாழ் களரி னரியடும்"* (குறள், 500). 2. புலி (வின்.); tiger. 3. நாற்றுப்பாவின மறுநாள், நீர் வடியும்படி கட்டியிழுக்கும். நரிவாலுருவமான வைக்கோற் புரிக்கருவி (நாஞ்.); a contrivance made of straw with a fox-like tail, for draining off water in a field after transplantation.

தெ., நரியடு க., து., நரி.

ம. நரி.

*[நரை→நரி.]*

சாம்பசிவ மருத்துவ அகரமுதலி வகைப்படுத்தும், நரிவகைகள் வருமாறு:— 1. குட்டிநரி; young jackal. 2. குள்ளநரி; cunning jackal. இந்த நரி 1 1/2 அடி உயரமுள்ளது. 3. பெருநரி; hitta jackal உடல்பருமனிலும், உயரத்திலும் நடுத் தரமானது. 4. நுழைநரி; fox. 5. குழிநரி; fox. 6. வளைநரி; fox



**நரிக்கடி** *nari-k-kaḍi,* பெ. (n.) நரியினால் உண்டான நச்சுக்கடி; poisonous bite of a fox

*[நரி + கடி.]*

**நரிக்கண்டல்** *narikkaṇḍal,* பெ. (n.) நிலைத்திணை வகையிலொன்று; goat horn, mangrove

மருந்துக்கும், தோல்பதனிடுவதற்கும் பயன்படும் பட்டையினையுடைய, வெப்பமண்டலச் சதுப்புநிலப்படர் நிலைத்திணை வகை.

**நரிக்களா** *narikkaḷā,* பெ. (n.) சிறுகளா; downy Bengal currant

*[நலி → நரி + களா]*

**நரிக்காய்ச்சி** *nari-k-kāycci,* பெ. (n.) நரியினிறங்கொண்ட, பழந்தரும் ஒருவகைப் பனை (வின்.); palmyra tree bearing fruit of a dun colour, like that of a fox

*[நரி + காய்ச்சி.]*

சிறிய பனங்காய்களைத் தருவதால், நரிக்காய்ச்சி என்ற பெயர் பெற்றது.

**நரிக்காரம்** *nari-k-kāram,* பெ. (n.) 1. பொரிகாரம், அல்லது வெங்காரம்; borax. 2. கோணாய் (ஓநாய்); jackal. 3. புலி; tiger

*[நரி + காரம்.]*

**நரிக்கிண்டி** *nari-k-kiṇḍi,* பெ. (n ) செடி வகையுள் ஒன்று; a kind of medicinal plant. நரிக்கிண்டியின் வேர்.

*[நரி + கிண்டி.]*

கண்புகைச்சலைப் போக்கும் என்பது, மருத்துவச்செய்தி.

**நரிக்குடி** *nari-k-kuḍi,* பெ. (n.) *நரித்தொம்பன்* பார்க்க; see *nari-t-tomban.*

*[நரி + குடி.]*

**நரிக்குழி** *nari-k-kuḻi,* பெ. (n.) 1. நரிவளை (வின்.); a fox hole. 2. நரிதங்கும் குழி; dwelling place of fox

*[நரி + குழி. ]*

**நரிக்குளிப்பாட்டி** *nari-k-kuḷippāṭṭi,* பெ. (n.) நயவார்த்தைகளால் ஏமாற்றுபவன் (தஞ்சை.) one who deceives by soothing words.

*[நரி + குளிப்பு + ஆட்டி.]*

**நரிக்குளிப்பாட்டு-தல்** *nari-k-kuḷippāṭṭu-.* 5 செ.கு.வி. (v.i.) நயவார்த்தைகளால் ஏமாற்றுதல்; to deceive by soothing words as a jackal ***"உரிமை போலவந்து நரி குளிப்பாட்டுகிறீர்"*** (மதுரகவி. 47).

*[நரி + குளிப்பு + ஆட்டு-.]*

**நரிக்குறத்தி** *nari-k-kuṟatti,* பெ. (n.) நரிக்குறவன் என்பதன் பெண்பால்; a feminine of nari-k-kuṟavan.

*[நரி + குறத்தி .]*



**நரிக்குறவன்** *nari-k-kuṟavaṉ.* பெ. (n.) 1. நரிபிடித்துண்ணுங் குறவர் வகையினன்; a person of the kuṟavar sub-caste, who hunts jackals for food 2. மிக்க தந்திரமுடையோன் (இ.வ.); a very cunning fellow

*[நரி + குறவன். ]*

சிறிய காட்டு விலங்குகளையும், பறவைகளையும் வேட்டையாடி விற்றுப் பிழைப்பவன்; ஊசி, பாசி, மணிமாலை போன்றவற்றை விற்று வாழும் நாடோடி இனத்தவன்.



**நரிக்கெளிறு** *nari-k-keḷiṟu,* பெ. (n.) மீன்வகை (உ.வ); a kind of fish

*[நரி + கெளிறு. ]*



**நரிக்கொம்பு** *nari-k-kombu,* பெ. (n.) 1. மந்திரக் கலை அல்லது செய்வினையிற் பயன் படுத்துவதும், சிறுபூமொட்டுப் போன்றிருப்பது மாகிய நரியின் கொம்பு. small bud-like horns on a jackal, of rare occurrence, considered very efficacious in magic 2. நரித்தலை மண்டையோட்டின் மேல் காணப்படும் இரண்டு குமிழ்; the two nodes or knotty protuberances on the top of the skill of a fox.

*[நரி + கொம்பு.]*

**நரிக்கொன்றை** *nari-k-konrai,* பெ. (n.) கொன்றை மரவகையுள் ஒன்று; a kind of tree.

மறுவ. மைக்கொன்றை.

*[நரி + கொன்றை.]*

நரிக்கொன்றை மரத்தில் இருவகையுண்டு. 1. கருங்கொன்றை அல்லது மைக்கொன்றை. 2. செங்கொன்றை.

இம்மரத்தின் இலை, பட்டை முதலானவை அனைத்தும் மருத்துவக் குணமிக்கது. உடம்பிலுள்ள அனைத்துத் தோல்நோய்களுக்கும், இம் மரப்பட்டையின் கருக்குநீர், கைகண்ட மருந்தாகும். குறிப்பாகத் தோல்தடிப்பு; தோல்பற்று. தோல்படை, யானைச்சொறி முதலான அனைத்துத் தோல்நோய் களுக்கும், இக்கருக்குநீர் சாலச்சிறந்தது.

**நரிச்சல்** *nariccal,* பெ. (n.) வெளவால் வகை (நாஞ்.); kind of bat

*[நலி> நரிச்சு + அல்.]*

**நரிச்சின்னி** *nari-c-cinni,* பெ. (n.) சிறுசின்னி செடி வகை; a species of copper leaf.

*[நரி + சின்னி.]*

**நரிச்சீரகம்** *nari-c-ciragam,* பெ. (n.) சிறுசீரகம்; common cumin seed.

*[நரி + சீரகம்.]*

**நரிஞ்சி** *narinji,* பெ. (n.) ஒருகாட்டு அவுரி; hill forest indigo

*[நரி → நரிஞ்சி.]*

**நரித்தந்திரம்** *nari-t-tandiram,* பெ. (n.) நரிபோல் சூழ்ச்சிசெய்து, பிறரை ஏமாற்றுகை; jackal-collusion cunning, consipre.

*[நரி + தந்திரம்.]*

நல்லவர் போல் நடித்து, முதுகில் குத்தும் பண்பும், நரித்தந்திரமே.

**நரித்தந்திரம்செய்-தல்** *nari-t-tandiram-šey,* 1செ.குன்றாவி. (v.t.) சூழ்ச்சிசெய்து பிறரை ஏமாற்றுதல்; talk in a prevaricate way

*[நரி + தந்திரம் + செய்-.]*

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசிச் சூழ்ச்சி செய்யும் பண்பு.

**நரித்தல்** *narittal,* பெ. (n.) நொருக்குதல்; crushing.

*[நெரித்தல் → நரித்தல்.]*

**நரித்தலை** *nari-t-talai,* பெ. (n.) முழங்கால் மூட்டு; knee joint.

*[நெரி → நரி + தலை.]*

**நரித்தலைப்பிடிப்பு** *nari-t-talai-p-piḍippu,* பெ. (n.) 1. நரம்புப்பிடிப்பு; stiff joint. 2. சந்து வீக்கம்; inflammation of a joint. arthritis

*[நரி + தலை + பிடிப்பு.]*

மாந்தர்தம் முழங்கால், மூட்டுகளில் ஏற்படும், வீக்கம், நீர்க்கோவை, முழங்கால் சவ்வில் ஏற்படும் உளைச்சல், பிடிப்பு(வாதம்)ப் தொடர்பான நோய்கள் அனைத்தும், நரித்தலைப் பிடிப்பு எனப்பெயர்பெறும் என்று, சா.அக. கூறும்.

**நரித்தலைவாதம்** *nari-t-talai-vādam,* பெ. (n.) *நரித்தலை பிடிப்பு* பார்க்க; see *nari-t-talai-p-piḍippu.*

*[நரித்தலை + Skt வாதம்.]*

**நரித்தலைவாயு** *nari-t-talai-vāyu,* பெ. (n.) *நரித்தலை வாதம்* பார்க்க; see *nari-t-talai-vādam.*

*[நரித்தலை + Skt வாயு.]*

**நரித்தொம்பன்** *nari-t-tomban,* பெ. (n.) நரிக்குறவன் (இ.வ.); a person belonging to the nari-k-kuravan

*[நரி + தொம்பன்.]*

**நரித்தோல்** *nari-t-tōl-,* பெ. (n.) நாவற்பட்டை; the bark of jaumoon tree.

*[நலி → நரி + தோல்.]*

**நரிநவ்வல்** *nari-navval,* பெ. (n.) சிறுநாவல்; small jaumoon.

*[நலி → நரி + நாவில் → நவ்வல்.]*

ஒ.நோ. வாவல் → வவ்வால்.

**நரிநறளை** *nari-naralai,* பெ. (n.) சிறுநறளை; large wooly-lobed vine.

*[நரி + நறளை.]*

மழைக்காலத்தில் நன்குபடர்ந்து, தளிர்த்துப் பூக்கும் கொடி. இதன் காய்கள் புளிப்புச்சுவையுடையன. காட்டுப் பிரண்டை என்றும் அழைக்கப் பெறும்.

**நரிநாட்டாண்மை** *nari-nāṭṭāṇmai,* பெ. (n.) வீண் அதிகாரம் செய்பவன்; vain authority person.

மறுவ. மொட்டையதிகாரம்.

*[நரி + நாடு + ஆண்மை.]*

**நரிநாட்டாண்மைசெய்-தல்** *nari-nāṭṭāṇmai-sey-,* 1 செ.குன்றாவி. (v.t.) தேவையில்லாமல் வீண்அதிகாரம் செய்தல்; to exercise vain authority

*[நரி + நாட்டாண்மை + செய்-.]*

தேவையற்ற இடத்தில், தேவையற்ற வரிடம், அதிகாரம் செல்லுபடியாகாத வரிடம், அல்லது தம்மைவிடத் தாழ்ந்தவரிடம். மொட்டையதிகாரம் செலுத்துதல்.

**நரிநாமம்** *nari-nāmam,* பெ. (n.) ஐகாரம்; the mystic mantric letter. "ai"

*[நரி + நாமம்.]*

நரியின் நெற்றிச்சுழி 'ஐ' போல் தோன்றும்.

**நரிநாவல்** *nari-nāval,* பெ. (n.) 1. மரவகை (நாஞ்.); a kind of tree. 2. *நரி நவ்வல்* பார்க்க; see *nari-navval*

*[நரி + நாவல்.]*

**நரிநிறம்** *nari-niṟam,* பெ. (n) 1. பல நிறக்கலப்பு; multi-colour. 2. பலவெண்ணம்; crowded thoughts. 3. வெறுப்பு; disgust.

*[நரி + நிறம்.]*

நரியின் நிறம் பழுப்பேறிய வெளுப்பு. திரு. வயவர். சி.வி. இராமன் ஏழுவண்ணக்கலப்பே வெண்மை என்று மெய்ப்பித்து, நோபல் பரிசு பெற்றார்.

**நரிப்பயம்** *nari-p-payam,* பெ. (n) புலிப்பயம் (வின்.); dread of a tiger. *'அந்தக் காட்டில் நரிப்பயமில்லை, மாடு கொண்டுபோய் மேய்க்கலாம்'* (இ.வ.).

*[நரி + பயம்.]*

புலி உலாவும் காட்டில் நரி வாராது. அதனால், சிறுதுயர் செய்யும் நரியும், பெருந்துன்பம் நல்கும் புலியும், அச்சந்தரும் தன்மையை உணர்த்துதற் பொருட்டு, நரிப்பயம் என்னும் இச் சொல், மக்களிடையே வழக்கூன்றியுள்ளது. (ஒ.நோ.) தவளை உள்ள குளத்தில் பாம்பின்மை அறிக.

**நரிப்பயற்றங்கீரை** *nari-p-payaṟṟa-ṅ-kīrai,* பெ. (n.) நரிப்பயற்றுச்செடியின் கீரை; the green leaves of fox gram.

*[நரிப்பயறு + அம் + கீரை.]*

உணவோடு சேர்த்து உண்பதற்கு உகந்தது என்று, சா.அக. கூறும்.

**நரிப்பயற்றங்கொடி** *nari-p-payaṟṟa-ṅ-koḍi,* பெ. (n.) சிறுபயறு; green gram

*[நரி + பயறு + அம் + கொடி]*

இப் பயறு, வெட்டைநோய், பித்தம், புண்ணீர் போன்ற நோய்களுக்கு மருந்தாகப் பயன்படும் என்று, சா.அக. கூறும்.

**நரிப்பயறு** *nari-p-payaṟu,* பெ. (n.) வயற்பயறு (பதார்த்த. 347.); (M.M 329) field-gram. 2. நரிபச்சைப்பயறு; jackal green-gram.

மறுவ. சிறுபயறு, பனிப்பயறு, மின்னிப்பயறு.

*[நலி → நரி + பயறு.]*

**நரிப்பல்** *nari-p-pal,* பெ. (n.) நரியின் பல்; fox tooth. 2. ஒருவகைக் கழுத்தணியுரு; bead of a kind of necklace, as resembling a jackal's tooth.

*[நரி + பல்.]*

**நரிப்பல்சங்கிலி** *nari-p-pal-šaṅgili,* பெ. (n.) ஒருவகைக் கழுத்தணி; bead of a kind of necklace, as resembling a jackal's tooth

*[நரி + பல் + skt.சங்கிலி.]*

நரிப்பல்லைப் பொற்சரட்டில் கோத்து அல்லது, பொன்னில் பதித்துச் செய்யப்படும் கழுத்தணி.
skt. சங்கிலி → த.தொடரி.

**நரிப்பள்ளம்** *nari-p-paḷḷam,* பெ. (n.) 1. ஆற்றில் பள்ளமான இடம் (வின்.); unknown depths or pits in a river. 2. நீர்தேங்குங் கிடங்கு (வின்.); pits in the dry bed of a river. 3. வழியிலுள்ள குழி; pits in a road

*[நரி + பள்ளம்.]*

**நரிப்பாகல்**[1] *nari-p-pāgal,* பெ. (n.) பாகல் வகை (மலை.); carolah balsam pear

**மறுவ.** காட்டுப்பாகல்.

*[நரி + பாகல்.]*

**நரிப்பாகல்**[2] *nari-p-pāgal,* பெ. (n.) சிறுபாகல்; small spiked bitter cucumber.

**ம.** முரிகத.

*[நரி + பாகல்.]*

*சிற்றூர்களில் உணவிற்காக வேளாண்மை செய்யும் பாகல்.*

**நரிப்பாலை** *nari-p-pālai,* பெ. (n.) சிறுபாலை; obtuse leaved ape flower

*[நலி> நரி + பாலை.]*

**நரிப்பித்தம்** *nari-p-pittam,* பெ. (n.) நரியின் ஈரல் பித்தம்; the bile or gall of the fox

*[நரி + பித்தம்.]*

**நரிப்பு**[1] *narippu,* பெ. (n.) 1. நரித்தன்மை; fox-like nature 2. இகழ்வு; derision, contempt *"நரிப்பாய் நாயே னிருப்பேனோ"* (திருவாச.21:91). 3. வியப்பு (யாழ்.அக.); wonder.

*[நரி² → நரிப்பு.]*

நரி + பு = பண்புவிகுதி.

ஒ.நோ. மாண் + பு = மாண்பு.

**நரிப்பு**[2] *narippu,* பெ. (n.) நொறுங்குகை (யாழ்.அக.); being crushed

*[நெரி → நரி → நரிப்பு.]*

**நரிப்புடல்** *nari-p-pudal,* பெ. (n.) சிறுபுடல்; short snake gourd

**மறுவ.** *கொம்புப்புடல்.*

*[நலி → நரி + புடல்.]*

**நரிப்புத்தி** *nari-p-putti,* பெ. (n.) தந்திரபுத்தி (இ.வ.); craftiness.

*[நரி + புத்தி.]*

குழந்தைக்கதைகளில், சூழ்ச்சி விலங்காகக் காட்டப்படுவதில் உள்ள அறிவியற் பிழையை, நரித்தல் தலைப்பில் காண்க.

**நரிப்புத்து** *nari-p-puttu,* பெ. (n.) முட்சுண்டை; prickly shoonday

*[நரி + புத்து.]*

**நரிப்புள்ளடி** *nari-p-pulladi* பெ. (n.) சிறுபுள்ளடி; small birds foot

*[நலி> நரி + புள் + அடி]*



**நரிப்புறம்** *nari-p-puram,* பெ. (n.) ஐந்தாம் விண்மீனான மாழ்கு; the 5th star

தொலைநோக்காடி இல்லாத பழங்காலத்தில், வெறும் கண்ணால் பார்த்த மக்களுக்கு, மரிமதுகுபோல் தோற்றமளித்தது.



நன்னாரி



நரிவிலி



நரிமிரட்டி



நரிவிள

**நரிப்பூடு** *nari-p-pūḍu,* பெ. (n.) கோவை; indian caper.

*[நரி + பூண்டு → நரிப்பூடு.]*

**நரிப்பூலா** *nari-p-pūlā,* பெ. (n.) சிறுபூலாப் பூடு; a kind of medicinal shrub.

*[நலி→நரி + பூலா.]*

**நரிப்பொடுதலை** *nari-p-poḍudalai,* பெ. (n.) சிறுபொடுதலை; a small variety of creeping vervain.

*[நரி + பொடுதலை.]*

**நரிமகம்** *narimagam,* பெ. (n.) சிறுகோவை; small leaved indian cape. coccinea. indica

*[நரி + மகம்.]*

**நரிமகாகுரும்பை** *narimagā-kurumbai,* பெ. (n.) சிறுகுரும்பை; young immature cocoanut

*[நரி + குரும்பை.]*

**நரிமருட்டி** *narimaruṭṭi.* பெ. (n.) கிலுகிலுப்பை (மலை.); rattle-wort

*[நரி + மருட்டி.]*

**நரிமாமிசம்** *nari-māmišam,* பெ. (n.) சிறுதும்பை; small leucas.

*[நரி + Skt. மாமிசம்.]*

**நரிமிரட்டல்** *nari-miraṭṭal.* பெ. (n.) தூக்கத்தில் குழந்தைக்கு உண்டாகும் சிரிப்பும், அழுகையும்; infants smiling or weeping in their sleep.

*[நரி + மருட்டல்→மிரட்டல்.]*

**நரிமிரட்டி** *nari-miraṭṭi,* பெ. (n.) **1.** பேய்மருட்டி; devil frightener. **2.** கருந்தும்பை; black tumbay.

*[நரி + மருட்டி →மிரட்டி.]*

**நரிமுகத்தில்விழி-த்தல்** *nari-mugattil-viḻi-,* 4 செ.கு.வி. (v.i.) நற்பேறடைதல் (மதி.க.ii,127); to be lucky

*[நரி + முகத்தில் + விழி-.]*

இது மூடநம்பிக்கை.

**நரிமுடுக்கி** *nari-muḍukki,* பெ. (n.) மூலிகைவகை; a kind of herbal medicine

**நரிமுருக்கு** *nari-murukku,* பெ. (n) **1.** முருக்கு வகை (வின்.); an inferior. species of coral-tree. **2.** நெல்வகை; a kind of paddy. (A).

*[நரி + முருக்கு.]*

**நரிமுருங்கை** *nari-murungai,* பெ. (n.) தவசு முருங்கை; tranquebar gendarussa

**மறுவ.** நறுமுருங்கை.

*[நரி + முருங்கை.]*

**நரியக்காளான்** *nariya-k-kāḷāṉ,* பெ. (n.) சிறுகாளான்; small fungus growth.

**நரியண்டம்** *nari-y-aṇḍam,* பெ. (n.) நரி மண்டையோடு; the skull of a fox

**நரியரிசி** *nari-y-ariši.* பெ. (n.) சிறிய அரிசி; small rice

**மறுவ.** நரிச்சம்பா, நரிக்குறுணி

*[நரி + அரிசி ]*

**நரியன்** *nariyaṉ,* பெ. (n.) 1. பெருநெல்வகை; a kind of coarse paddy. 2. குள்ளன் (யாழ்.அக.); dwarf short person 3. கவடன், சூழ்ச்சிக்காரன்: crafty person

*[நரி → நரியன்.]*

**நரியன்கடம்பு** *nariyaṉ-kaḍambu.* பெ. (n) சிறுகடம்பு; a kind of cadamba.

*[நரி + அன் + கடம்பு]*

**நரியாணங்கை** *nariyāṇaṅgai,* பெ. (n) சிறியாணங்கை; a species of small milk-wort

*[நரியாள் + நங்கை.]*

ஒ.நோ: சிறியாள் + நங்கு + ஐ.

**நரியிலந்தை** *nari-y-ilandai,* பெ. (n) இலந்தை வகை; a kind of jujube

**மறுவ.**சிற்றிலந்தை

*[நரி + இலந்தை.]*

**நரியிலவு** *nari-y-ilavu,* பெ. (n.) இலவமரம்; silk cotton tree

*[நரி + இலவு.]*

**நரியீஞ்சு** *nari-y-īñju,* பெ. (n.) சிற்றீஞ்சு; dwarf date.

*[நரி + ஈஞ்சு.]*

**நரியீராகி** *nariyīrāgi.* பெ. (n) சிறுபூனைக்காலி; whitish passion flower

*[நரி + ஈர் + ஆகி.]*

**நரியுடை** *nari-y-uḍai.* பெ. (n.) முசுமுசுக்கை; bryony

*[நரி + உடை.]*

**நரியுண்ணி** *nari-y-uṇṇi,* பெ. (n) நரியால் விரும்பி உண்ணப்படும் நண்டு; crab, as eaten by fox

**நரியுணி** *nari-y-uṇi* பெ. (n) *நரியுண்ணி* பார்க்க; see *nari-y-uṇṇi*

*[நரி + உண்ணி→உணி.]*

**நரியுப்பு** *nari-y-uppu,* பெ. (n) கறியுப்பு (சங்.அக.); common salt

*[நரி + உப்பு.]*

**நரியுமரி** *nari-y-umari,* பெ. (n) உப்புக்கீரை; common indian saltwort (L).

*[நரி + உமர் + இ.]*

**நரியுமரிக்கீரை** *nariyumari-k-kīrai,* பெ. (n.) உப்புக்கீரை; common indian salt wort

*[நரி + உமரி + கீரை.]*

**நரியூளை** *nari-y-ūḷai;* பெ. (n.) நரி இடும் கூக்குரல்; long doleful, cry of fox.

*[நரி + ஊளை.]*

நாய் குரைத்தல் போல், நரிஊளை இடுதல் மரபுச் சொல்லாட்சி.

**நரிவரி** *narivari,* பெ. (n.) **1.** நரிவிரியன் பார்க்க; see nari-viriyaṉ **2.** நாய் நறுவிலி; scabrid leaved sebesten (L)

*[நரி + வரி.]*

**நரிவழுக்கை** *nari-vaḻukkai,* பெ. (n ) பிரமிப்பூடு; brany, diabetes plant.

*[நரி + வழுக்கை.]*

**நரிவாதம்** *nari-vādam,* பெ. (n ) நரித்தலைவாதம் பார்க்க; see nari-t-talai-vādam

*[நரி + skt வாதம்.]*

**நரிவாலலரி** *nari-vālalari,* பெ. (n ) ஆற்றலரி; common tamarisk.

*[நரிவால் + அலரி.]*

**நரிவாழை** *nari-vāḻai,* பெ. (n.) நீண்ட கொடிவகை; tubeflower.

*[நரி + வாழை.]*

**நரிவாற்புல்** *narivāṟ-pul,* பெ. (n ) ஒருவகைப்புல் (யாழ்.அக.); a kind of grass. Dactylis spicata.

*[நரி + வால் + புல்.]*

**நரிவிட்டையிலை** *narivittai-y-ilai,* பெ. (n.) நரிவிட்டைப் பூண்டின் இலை. an unknown plant said to possess the virtue of consolidating mercury. இதளியத்தைக் கட்டியாக்கும் மூலி

**நரிவிரி** *nariviri-,* பெ. (n.) **1.** *நரிவிரியன்* பார்க்க; see *nariviriyaṉ.* **2.** நாய் நறுவிலி; a kind of sebesten.

*[நரி + விரி.]*

**நரிவிரியன்** *nari-viriyaṉ,* பெ. (n.) நறுவிலி வகை; oblong feather nerved sebesten (L.).

*[நரி + விரியன்.]*

**நரிவிருசு** *nari-viruśu,* பெ. (n.) மரவகை (இ.வ.); a kind of tree

*[நரி + விருசு.]*

**நரிவிருத்தம்** *nari-viruttam,* பெ. (n.) திருத்தக்க தேவரால், நரியின் கதையொன்றைப் பற்றி, இயற்றப்பட்ட ஒரு நூல்; a poem founded on the story of a fox, by Tiruttakka-tēvar.

*[நரி + விருத்தம்.]*

கம்பன்பெயரில் நான்கு சிறுநூல் இருப்பவற்றுள், கம்பராமாயண நடைபோல் அழகில்லாததால், பிற்காலத்தில் யாரோ எழுதிவழங்கிய பெயர் என்பதுபோல், இந் நூலிலும் சீவகசிந்தாமணி மொழி நடையும், கலையுணர்வும் இன்மையறிக.

*[நரி + விருத்தம்.]*

**நரிவிளா** *nariviḷā,* பெ. (n ) *நில விளா (மலை);* a species of wood - apple.

*[நரி + விளா.]*

**நரிவிளி** *narivili,* பெ. (n.) விழிச்செடி; a kind of medicinal plant.

**நரிவிளிகா** *nari-viliga,* பெ. (n.) *சிறுதும்பை; small leucas flower.*

*சிறுதும்பைச் செடியின் பூக்களிலிருந்து எடுக்கப்படும் தேன். உடல் நலத்திற்கு உகந்தது. மிகு கோழையைக் கரைக்கும். குளுமையை அகற்றும்.*

*[நரி + விளிகா.]*

**நரிவிளிநாயகம்** *nari-vili-nāyagam,* பெ. (n.) சுளுக்கு நாயகம் பார்க்க; see šuļukku-nāyagam.

*[நரிவிளி+நாயகம்.]*

**நரிவிளையாட்டு** *nari-vilaiyāttu,* பெ. (n.) *நரிமிரட்டல்* பார்க்க; see *nari-mirattal*

*[நரி + விளையாட்டு.]*

**நரிவீழி** *nari-vili* பெ. (n.) உத்தாலமரவகை; a kind of uttālam tree.

*[நரி→ நரிவீழி.]*

**நரிவெங்காயம்** *nari-vengāyam,* பெ. (n.) **1.** நரி வெண்காயம் பார்க்க; see nari vengāyam. **2.** ஈருள்ளிவகை (பதார்த்த. 446.); indian squill. **3.** நச்சு மூங்கில்; poison lily, Crinum asiaticum (m.m.)

*[நரி + வெண் + காயம்→ வெங்காயம் .]*

**நரிவெண்காயம்** *nari-vengāyam,* பெ. (n) வெளிர்நிறக்காட்டுள்ளி. fox onion.

**மறுவ.** வெள்வெங்காயம்

*[நரி + வெண்காயம்]*

**நரிவெந்தயம்** *nari-vendayam,* பெ. (n) சிறு வெந்தயம்; ferugreek.

*[நரி + வெந்தயம்.]*

காட்டுவிலங்குகளில் நரி சிறிதாதலின், சிறுமை பற்றிய முன்னொட்டு உவமையாக வந்துள்ளது.

**நரிவெருட்டி** *nari-verutti,* பெ. (n) கிலுகிலுப்பை (மலை.); rattle - wort

**மறுவ.** நரிமருட்டி.

*[நரி + வெருட்டி.]*

உறங்கும் ஓராண்டுக்குழந்தை சிரிப்பது போல் முகத்தோற்றம் தெரியும்போது, நரி அதன் கனவில் சென்று வெருட்டுவதால், முகத் தோற்றம் மாறுவதாக, ஒரு நினைவு வழக்கு மக்களிடம் உண்டு. அதையொட்டிக் கிலுகிலுப்பைக்கு, இப் பெயர் வந்தது என்க.

**நரிவெரூஉத்தலையார்** *nari-verūuttalaiyār,* பெ. (n.) சங்க காலப் புலவர்; an ancient Tamil poet. இவர் பாடியுள்ள குறுந்தொகை 5, 236; புறம்–5, 195 எண்ணுள்ள பாடல்கள் எவற்றிலும், இச்சொற்றொடர் வந்திலது; நரியும் கண்டு அஞ்சும் படியான தலையும், திரிபான உருவமும் உடையவர் இப் புலவர் என்று, ஒரு கதை கூறுகிறது.

*[நரி + வெரூஉம் + தலையார்.]*

புறநானூற்றுரையாசிரியர் தம் காலத்திற்கு முன்பு வழங்கிய கதையைக் கூறுகின்றார். இப் புலவர் சேரமான் கருவூர் ஏறிய ஒள்வாள் கோப்பெருஞ் சேரல் இரும்பொறையைக் கண்ட போது, அரண்மனை மருத்துவர் திறத்தால் திரிபு நீங்கி நல்லுடம்பு பெற்றார், எனப் பேராசிரியர் ச.த. சற்குணர் கூறுவர். இவர் பாடிய குறுந்தொகை 236 ஆம் பாடல் வருமாறு:–

வரைவிடை வைத்துப் பிரிவான் "இவள் வேறுபடாமை ஆற்றுவி" என்றாற்குத் தோழி நகையாடி உரைத்தது.

அஃதாவது, வரைவிடை வைத்துத் தலைவியைப் பிரிந்துசெல்லக் கருதிய தலைவன், தோழியை நோக்கி, "யான் வருந்துணையும், இவளை மேனி நலனழியாமல் ஆற்றுவாயாக" எனத், தோழி நகைத்து, அஃதியலா தென்பதுபடக்கூறியது.

"விட்டென விடுக்கு நாள் வருக அது நீ நேர்ந்தனையாயின் தந்தனை சென்மோ குன்றத்தன்ன குவவுமணல் அடைகரை நின்ற புன்னை நிலந்தோய் படுசினை வம்ப நாரை சேக்கும் தண்கடற் சேர்ப்ப நீ உண்டவென்னலனே"

இப் பாடலின் கண்ணே தோழி. "தலைவ, என் தலைவியின் நலன் அனைத்தும் உண்டு, பொருள் மேல் மாளாக்காதல் கொண்டு, பிரிந்து செல்கின்றாய். அவ்வாறு பிரிந்தால், தலைவி உயிர்போதல் திண்ணம். நீ இவள் பாலுண்ட பெண்மை நலனை எல்லாம் தந்துபோதல் வேண்டும். இன்றேல், தலைவியை ஆற்றுவித்தல் அரிது" என்று நயம்பட உரைக்கும் பாங்கு படித்தின்புறத்தக்கது.

நரி வெரூத் தலையார், ஆழ்ந்த புலமையுள்ளம் படைத்த சான்றோர். இன்பம், துன்பம் எனும். இருபெரும் வாழ்வியல் நெறிகளையும், இயல்பாய் உரைத்துள்ள பாங்கினைப் புறநானூற்றில் 195–ஆம் பாடல் வாயிலாகப் பகர்கின்றார். "மாண்டு போகும் மாந்தப்பிறவியில் யாவருக்கும் நல்லதையே செய்யுங்கள். நல்லது செய்ய இயலாவிடின், பிறருக்குத் தொல்லைதரும் மனப்பாங்கினை விட்டொழியுங்கள். தீச்செயல் செய்வதை ஒழித்து அனைவருக்கும் நன்மையே புரியும் நல்வழியில் செல்லுங்கள்; அவ்வாறு செல்லுங்கால் எல்லோரும் அகமலர, முகமலர, வாயார வாழ்த்துவர்" எனும், வாழ்வியல் நல்லாற்று நெறியினை, உளங்கொள உரைக்கும் பொருண்மொழிக் காஞ்சித்துறைப்பாடல் வருமாறு:–

"பல்சான்றீரே பல்சான்றீரே கயன்முள்ளன்ன
நரைமுதிர் திரைகவுள்
பயனின் மூப்பிற் பல்சான்றீரே
கணிச்சி கூர்ம்படைக் கடுந்திறலொருவன்
பிணக்குங் காலை இரங்குவிர் மாதோ
நல்லது செய்தல் ஆற்றீராயினும்
அல்லது செய்தல் ஓம்புமின் அதுதான்
எல்லாரும் உவப்பது அன்றியும் நல்லாற்றுப்
படூஉ நெறியுமா ரதுவே."

**நரிவெள்ளரி** *nari-veḷḷari*, பெ. (n.) 1. கக்கரி; fox-cucumber

*[நரி + வெள்ளரி.]*

**நரிவேங்கை** *nari-vēṅgai*, பெ. (n) வேங்கை மரவகை; oojein black wood. (l.)

*[நரி + வேங்கை.]*

**நருக்கட்டியெனல்** *naru-k-kaṭṭi-y-eṉal*, பெ. (n) *நருக்கெனல் (யாழ்ப்.)* பார்க்க; see *narukkeṉal*

*[நருக்கு + அட்டி + எனல்.]*

**நருக்கரிசிச்சாதம்** *naru-k-kariši-c-cādam*, பெ. (n.) பாதிவெந்தசாதம்; half cooked rice.

*[நருக்கு + அரிசி + சாதம்.]*

*நறுக்கு→நருக்கு=திரிபு.*

**நருக்கரிசியன்னம்** *naru-k-kariši-y-aṉṉam*, பெ. (n.) அரிசிக்கஞ்சி; rice conjee

*[நருக்கரிசி + Skt அன்னம்.]*

**நருக்கல்**[1] *narukkal,* பெ. (n.) **1.** நசுக்குண்டது (வின்.); any thing crushed mashed, or broken in to pieces. **2.** வயிற்று வலிவகை (யாழ்ப்.); a severe stomach - ache **3.** குத்துவலி (இ.வ.); sharp, darting pain. **4.** வேகாத சோறு; insufficiently cooked rice. நண்டலொரு பக்கம், நருக்கலொரு பக்கம், நாய்விட்டெறியக் கல்லொரு பக்கம் (பழ.).

*[நருக்கு + நருக்கல்.]*

**நருக்கல்**[2] *narukkal,* பெ. (n.) *நருங்கல்* பார்க்க; see *narungal.*

*[நருங்கல் → நருக்கல்.]*

**நருக்கற்குத்து** *narukkar-kuttu,* பெ. (n.) **1.** *நருக்கல் 2, 3 (யாழ்ப்.)* பார்க்க; see *narukkal,* ***2.***காரியம் வாய்க்காமற் பண்ணுகை; frustation.

*[நருக்கல் + குத்து.]*

**நருக்காணி** *naru-k-kāṇi,* பெ. (n) கறளை (வின்.); being small and stunted, as a child

*[நருங்கு → நருக்கு + ஆணி = நருக்காணி.]*

*(ஒ.நோ.) சுருங்கு → சுருக்கு*

**நருக்கு**[1]**–தல்** *narukku-,* 5 செ.கு.வி. (v.i.) **1.** நொறுக்குதல்; to mash, crush or grind to pieces. *"நகத்தினாலுயர் நகங்களை நருக்குமா போல"* (பாரத. நிரை. 17.). **2.** கொல்லுதல்; to kill. *"நட்பகத்திலா வரக்கரை நருக்கி"* (கம்பரா. மீட்சி. 184.). **3.** துண்டாக்குதல்; to cut in pieces, mince, as vegetables. *"ஈயத்தை நருக்கி வெள்ளியதாக வுருக்குவோம்"* (அட்டப். திருவரங்கக். 42.).

**தெ.,** நருகு, **ம.,** நருக்குகறு.

*[நருங்கு → நருக்கு + தல். தல்லீற்றுத் தொழிற்பெயர். ]*

**நருக்கு**[2]**–தல்** *narukku-,* 5 செ.கு.வி. (v.i) குட்டுதல்; to thump, hit with the knuckle. அவன் தலையில் நருக்கினான் (உ.வ.).

*[நருங்கு → நருக்கு–, ]*

**நருக்கு**[3] *narukku,* பெ. n குட்டுகை; hitting with the knuckle *"அவள் தலையில் ஒரு நருக்கு வை". (உ.வ.)*

*[நரு → நருக்கு. ]*

**நருக்குண்டல்** *narukkuṇḍal,* பெ. (n.) துண்டு துண்டாகச் செய்தல்; to cut in to pieces

*[நறு→நறுக்கு→நருக்கு + உண்டல்.]*

**நருக்குப்பிருக்கல்** *narukku-p-pirukkal,* பெ. (n.) **1.** மசிந்ததும் மசியாததுமான அரைப்பு (வின்.); that which is partially, mashed. **2.** வெந்ததும் வேகாததுமான சோறு; rice partly cooked. **3.** செரிமானமின்றி வெளி யேறும் மலம் (இ.வ.); excrement containing partly, undigested food.

*[நருக்கு + பிருக்கல். ]*

**நருக்குப்பிருக்கு** *narukku-p-pirukku,* பெ. (n.) ***நருக்குப் பிருக்கல் (வின்.)*** பார்க்க; see *narukku-p-pirukkal.*

*[நருக்கு + பிருக்கு.]*

**நருக்குப்பிருக்கென்றிரு–த்தல்** *narukku-p-pirukkeṉṟiru-,* 5 செ.கு.வி. (v.i.) நோய் நிரம்பியிருத்தல் (வின்.); to be rife with disease, as a town.

*[நருக்கு + பிருக்கு + என்று + இருத்தல்—.]*

**நருக்குப்புடம்** *narukku-p-puḍam,* பெ. (n.) குறைந்தபுடம்; calcination with small fire.

*[நருக்கு + புடம்.]*

**நருக்கெனல்** *narukkeṉal,* பெ. (n.) **1.** விரைவுக்குறிப்பு; suddenness, abruptness, or promptness. *"காரியத்தை நருக்கென்று முடித்தான்"* (உ.வ.). **2.** குத்தல்—வலிக்குறிப்பு; sharp, darting pain. நெஞ்சு நருக்கென்று குத்துகிறது. (இ.வ.).

*[நருக்கு + எனல்.]*

**நருங்கல்** *naruṅgal,* பெ. (n.) வளர்ச்சிக் குறைவு; stunted growth. அவன் நருங்கலாயிருக்கின்றான். (உ.வ.).

*[ நெருங்கு → நருங்கு → நருங்கல். ]*

அல்லீற்றுத்தொழிற்பெயர்.

நருங்கல்=தன்வினை.

நருக்கல்=பிறவினை.

**நருங்கு—தல்** *naruṅgu-,* **5** செ.கு.வி. (v.i.) **1.** நொறுங்குதல்; to be mashed, crushed to pieces. **2.** தேய்கடையாதல்(யாழ்.அக); to be deficient in growth, to decay, to grow lean, as a child; to fail, as a business, a harvest.

*[ நொருங்கு → நருங்கு—. ]*

**நருஞ்சோந்தி** *naruñśōndi,* பெ. (n.) ஒரு வகைப் பூமரம்; an unknown plant.

**நருநரு—த்தல்** *naru-naru-,* **4** செ.கு.வி. (v.i.) **1.** நெறுநெறுத்தல் (வின்.); to feel grit, is the mouth along with food. **2.** மிகக் குறைவாதல்; to be slight or mild as fever. நருநருத்த காய்ச்சல் (யாழ்ப்.).

*[ நெருநெரு→நருநரு—. ]*

**நருநரெனல்**[1] *naru-nareṉel,* பெ. (n.) நெறநெறனல் (வின்.); expr of feeling grift in the mouth along with food. சினத்தில் பல்லை நெறு நெறுவெனக் கடித்தான் (பே.வ.)

*[நரு நரு +நருநரெனல்.]*

**நருநரெனல்**[2] *naru-nareṉel,* 4செ.கு.வி. (v i ) பல்லை நெறு நெறுத்தல்; gnashing teeth சினத்தில் பல்லை நெறு நெறுவெனக் கடித்தான் (பே.வ.)

*[நரு + நரு + எனல்.]*

**நருநாட்டியம்** *naru-nāṭṭiyam,* பெ. (n.) **1.** அளவுக்கு அதிகமாகத் தூய்மையாக இருக்கை; over-scrupulousness **2.** மிக உன்னிப் பாயிருக்கை; meticulosity

**மறுவ.** நொறுநாட்டியம்

*[நொறு → நரு + நாட்டியம்]*

**நருநாட்டியம்பேசு—தல்** *naru-nāṭṭiyam-pēśu-,* **5** செ.கு.வி. (v i.) குற்றத்தைக் கண்டுபிடிப்பதே குறியாகப் பேசுதல் (இ.வ.); to indulge in fault finding.

*[நரு + நாட்டியம் + பேசு—.]*

**நருபிரு—த்தல்** *narupiru-,* **4** செ.கு.வி. (v.i.) *நரு பிரென்றிரு—. (யாழ்ப்.)* பார்க்க; see *narupireṉṟiru-*

*[நரு + பிரு—.]*

**நருபிரென்றிரு—த்தல்** *narupirenriru-*. 3 செ.கு.வி. (v.i.) 1. இழிந்த நிலையிலிருத்தல்; to be dirty, filthy, abominable 2. மிக வெறுப்புடனிருத்தல்; to be disgusted நருபிருத்த சாப்பாடு 3. நருவல்நொருவலாயிருத்தல்; to be crushed partially.

*[நருபிரு + என்று + இரு—.]*

**நரும்பு—தல்** *narumbu-* 5 செ.குன்றாவி. (v.t.) 1. *நறுமு—*, பார்க்க; see *narumu-*. 2. துண்டாக்குதல்; to cut into pieces

*[நரு+ நரும்பு—.]*

**நருமு—தல்** *narumu-*, 5செ.குன்றாவி. (v.t.) பல்லை நறநறவென்று கடித்தல்; gnashing the teeth togehter with force.

*[நற→நா→நரு→நருமு—,]*

**நருவல்நொருவல்** *naruval-noruval*, பெ. (n.) 1. இருவல் நொருவலானது; that which is coarsely broken as grain, that which is granulated 2. மலம் கட்டி முட்டியாயிருக்கை; being clotted here and there, as stools

*[நருவல் + நொருவல்.]*

*நறுவல் + நொறுவல்=திரிபு.*

**நருவாணி** *naruvāṇi*, பெ. (n.) *நருக்காணி (யாழ்ப்.)* பார்க்க; see *narukkāṇi*.

*[நருவு + ஆணி.]*

**நருவிசு** *naruvišu*, பெ. (n.) 1. நாகரிகம்; refinement in manners 2. துப்புரவு; neatness, cleanliness அவன் நருவிசாகச் சாப்பிடுகிறான் (உ.வ.) 3. சிக்கனம்; thrift அந்தக் குடும்பம் நருவிசாய் நடக்கிறது (உ.வ.); 4. நேர்மையானது; straight dealing. அவன் செயல்களெல்லாம் நருவிசானவை (இ.வ.).

*[நருவு + நருவிசு.]*

**நருவிஞ்சி** *naruviñji*, பெ. (n.) ஆடவர் வேட்டி; mens cloth

*[நரு + விஞ்சி.]*

**நருவிப்பு** *naruvippu*. பெ. (n.) நாயுருவியுப்பு; salt obtained from the ashes got by burning the plant indian burr

*[நருவி+ உப்பு.]*

நருவி=நாயுருவி.

**நருவியுப்பு** *naruvi-y-uppu*, பெ. (n.) 1. உப்பு வகையு ளொன்று; a kind of salt. 2. நருவிப்பு பார்க்க; see naruvippu

*[நருவி + உப்பு.]*

**நருள்[1]** *naruḷ*. பெ. (n.) *புண்வகையுளொன்று*; a kind of ulcer

**நருள்[2]** *naruḷ*. பெ. (n.) *நரல்[3] (யாழ்ப்.)* பார்க்க; see *naral[3]*

*[நரல் →நருள்.]*

**நருளிகை[1]** *naruḷigai*. பெ. (n.) காந்தாரியுப்பு (சங்.அக.); an acrid salt

*[நருளி→நருளிகை.]*

**நருளிகை[2]** *naruḷigai*. பெ. (n.) சித்திச்சாரம்; a kind of salt prepared as per process laid down in siddhar's science

**நருளிச்சாரம்** *naruḷi-c-cāram,* பெ. (n.) *நருளிகை*[2] பார்க்க; see *naruḷigai*[2]

*[நருளி + சாரம்.]*

**நரேசன்** *narēšaṉ,* பெ. (n.) *நரேந்திரன் (யாழ்ப்.)* பார்க்க; see *narēndiraṉ* *"நின்குலத்து நரேசா"* (பாரத. அருச். தீா். 37.).

*[நரன் +Skt ஈசன்.]*

**நரேசுரன்** *narēšuraṉ,* பெ. (n.) *நரேந்திரன் (யாழ்ப்.)* பார்க்க; see *narēndiraṉ*

*[நரன் + Skt.ஈசுரன்.]*

**நரேந்திரபோக்கியம்** *narēndira-pōkkiyam.* பெ. (n.) சந்தன மரம்; sandal wood tree.

*[நரன் + இந்திர + போக்கியம்.]*

மாந்தர்கள் வேந்தர்போல், மார்பில் பூசிக்கொள்ளும் தன்மையுடையது.

**நரேந்திரன்** *narēndiraṉ,* பெ. (n.) அரசன்; king

*[நரன் + இந்திரன்.]*

**நரை[1]-த்தல்** *narai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. மயிர் வெளுத்தல்; to become grey haired, to grow grey, as hair *"மயிர் நரைப்ப முந்தைப் பழவினையாய்த் தின்னு மிரை மூன்றும்"* (திரிகடு. 67.); 2. பயிர் வெளிறுதல்; to fade, as standing crops from draught. 3. நிறம் வெளுத்தல் (வின்.); to be pale in colour

க., நரெ தெ., நரையு. ம., நரெக்க.

*[நல் → நர் → நர → நரை-.]*

**நரை[2]** *narai,* பெ. (n.) 1. வெளுத்த மயிர்; grey hairs. *"யாண்டு பலவாக நரையில வாகுதல்"* (புறநா. 101.). 2. வெண்மை; whiteness *"மரையாவின் கருநரை நல்லேறு"* (குறுந். 317.). 3. எருது (பிங்.); bull, chiefly a white one. *"கரு நரைமேற் சூடேபோல்"* (நாலடி, 186.). 4. காளையோரை (யாழ்.அக.); taurus is the zodiac 5. சாமரம்; (பிங்.) chowrg or fly whisk *"இன்னரையின் பந்தி யசைந்தாட"* (காளத் உலா. 550.). 6. கவரிமான் (பிங்.); yak 7. மூப்பு; old-age *"நரைவரு மென்றெண்ணி நல்லறிவாளர் குழவியிடத்தே துறந்தார்"* (நாலடி. 11.). 8. பெருமை; greatness. *"நரையுருமி னேறனையை"* (மதுரைக். 63). 9. வெள்ளைக் குதிரை (சூடா.); white horse 10. கருமை கலந்த வெண்மை; mixture of white and black. 11. பறவை வகை (பிங்.); a bird 12. நாரை (யாழ்.அக.); a crane. 13. மரத்தினது அடியின் உட்பாகத்தில் காணும் சொத்தை அல்லது கேடு; injured condition of the heart of a tree நல்ல மரத்தில் நரைவிழுந்தது போலாச்சு. (நாஞ்.).

தெ., ம., நர; க., து., நரெ. நரே.

*[நல் → நர் → நர → நரை.]*

**நரைக்கொம்பு** *narai-k-kombu,* பெ. (n.) 1. எலும்பு; (சங்.அக.); bone 2. வெள்ளைக் கழி; white stick

*[நரை + கொம்பு. நரை = வெண்மை.]*

**நரைக்கொள்ளல்** *narai-k-koḷḷal.* 4செ.குன்றா.வி. (v.t.) மயிர் வெளுத்தல்: getting grey.

*[நரை + கொள்ளல்.]*

**நரைக்கொள்ளு**[1] *narai-k-kollu* பெ. (n) கொள்ளு வகை (மலை.); a kind of gram

*[நரை + கொள்ளு.]*

**நரைக்கொள்ளு**[2] *narai-k-kollu,* பெ. (n) சீர்கோழிப்பூடு; grey-gram.

*[நரை + கொள்ளு.]*

**நரைங்கிப்போ–தல்** *narainki-p-pō-* செ. குன்றாவி. (v.t.) *நரைத்–தல்* பார்க்க; see *narai-*

*[நருங்கி → நரங்கி→நரைங்கி+ போ–.]*

**நரைச்சல்** *naraiccal,* பெ. (n) பயிர் முதலியவற்றின் வெளிறின தன்மை (வின்.); faded condition of growing crops

*[நரை → நரைச்சல்.]*

**நரைஞர்** *narainar,* பெ. (n.) அகவை (வயது) முதிர்ந்தவர்; aged persons, as grey haired *"நரைநரை யிளை ஞராக்கி"* (குற்றா. தல. திருமால். 73.).

*[நரை → நரைஞர்.]*

ஆண்டுமூப்பில், நரைமுடி கொண்டாரை இவ்வாறு அழைத்தல் வழக்கம். வழுக்கைத் தலையரையும், முகத்தோல் சுருங்கியோரையும், வேறு பெயர்களில் குறிப்பர்.

**நரைத்தல்** *naraittal,* பெ. (n.) மயிர் சாம்பல் நிறத்திலாதல். hair turning in to grey.

*[நல் → நர → நரை–த்தல்.]*

**நரைத்தலை** *narai-t-talai,* பெ. (n) வெளுத்த மயிருள்ள தலை; hoary head.

*[நரை + தலை]*

**நரைத்துப்பழு–த்தல்** *naraittu-p-palu-,* 4.செ.கு.வி. (v.i.) முதலில் மயிர் வெளுத்துப் பிறகு மஞ்சள் நிறமாக மாறல்; to become the hair yellow after getting grey

*[நரைத்து + பழு–.]*

**நரைத்தை** *naraittai,* பெ. (n) அங்கோலம்; thin sage-leaved Indian linden.

*[நரை + நரத்தை.]*

**நரைதிரை** *narai-tirai* பெ. (n.) 1. அகவை முதிர்ச்சியால் மயிர்கள் நரைத்து, உடம்பின் தோல் தளர்ந்து சுருக்கக் கொள்ளல்; hairs turning grey body become relaxed and the skin forming into wrinkles due to old or advanced age 2. கிழத்தன்மை; old age

*[நரை + திரை.]*

**நரைதிரைபோக்கி** *naraitirai-pōkki,* பெ. (n.) சிவனார் வேம்பு நெய்மம்; a medicated oil prepared from neem plant

*[நரை + திரை + போக்கி.]*

**நரைதிரை மாறப்பண்ணி** *naraitirai-māra-p-panni,* பெ. (n) கானல்மா; a wild tree

**நரைதிரைமூப்பு** *naraitirai-mūppu,* பெ. (n) கிழப்பருவ அடையாளங்கள். symptoms of or attributes to old age

*[நரை + திரை + மூப்பு.]*

**நரைநாசினி** *narai-nāšiṉi,* பெ. (n.) விழுதி; a medicinal plant.

*[நரை + skt நாசினி.]*

**நரைப்பு** *naraippu,* பெ. (n.) மயிர் வெண்மை யாகை; getting grey-haried. *"நரைப்பு மூப்பொடு நடலையுமின்றி நாதன் சேவடி நண்ணுவர்"* (தேவா. 462: 10.).

**நரைப்பூதம்** *narai-p-pūdam,* பெ. (n.) நாணற்றட்டை; reed sterm.

*[நரை + skt. பூதம்.]*

**நரைமயிர்** *narai-mayir,* பெ. (n.) வெளுத்த மயிர்; grey hair

*[நரை + மயிர்.]*

**நரைமாடு** *narai-māḍu,* பெ. (n ) மங்கின வெண்மை நிறமுள்ள மாடு; greyish or ash-coloured cattle.

*[நரை + மாடு.]*

**நரைமாறிச்சி** *narai-māṟicci,* பெ. (n.) கருநெல்லி; black goose berry.

**நரைமீறி** *naraimīṟi,* பெ. (n.) கொடுக்காய்ப் புளி; sweet tamarind.

*[நரை + மீறி.]*

**நரைமுடிநெட்டையார்** *naraimuḍi neṭṭaiyār,* பெ. (n.) சங்ககாலப் புலவர்; a poet of Šaṅgam period

*[நரை + முடி + நெட்டையார்.]*

இவர் இயற்றிய பாடல் அகநானூற்றில் 339 ஆவதாக உள்ளது. நிரைமுடிநெட்டையார் என்ற வேறுபாடுமுளது.

"வீங்குவிசைப் பிணித்த விரைபரி நெடுந்தேர்
நோன்கதிர் சுமந்த ஆழியாழ் மருங்கிற்
பாம்பென முடுகுநீர் ஓடக் கூம்பிப்
பற்றுவிடு விரலிற் பயறுகாய் ஊழ்ப்ப
அற்சிரம் நின்றன்றாற் பொழுதே முற்பட
ஆள்வினைக் கெழுந்த அசைவில் உள்ளத்து
ஆண்மை வாங்கக் காமந் தட்பக்
கவைபடு நெஞ்சங் கட்கண் அகைய
இருதலைக் கொள்ளி யிடைநின்று வருந்தி
ஒருதலைப் படாஅ உறவி போன்றனம்
நோங்கொல் அளியள் தானே யாக்கைக்கு
உயிரியைந் தன்ன நாட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவரி யோளே"

**நரைமை** *naraimai,* பெ. (n.) மூப்பு; grey haired old age *"நரைமயிற் றிரைதோற் றகையின் றாயது"* (மணிமே. 20: 44.).

*[நரை → நரைமை.]*

**நரையல்லி** *narai-y-alli,* பெ. (n.) வெள்ளாம்பல்; white indian lilly.

*[நரை + அல்லி.]*

நரை = வெண்மை.

**நரையன்** *naraiyaṉ,* பெ. (n.) 1. நரைத்தவன் (வின்.); a grey-haired person. 2. பருவமின்றி நரைத்தவன்; a person prematurely grown

grey. **3.** சாம்பல் நிறமுள்ள விலங்கு; greyish beast. **4.** வல்லூறுவகை; a kind of hawk.

*[நரை → நரையன்.]*

**நரையான்**[1] *naraiyāṉ,* பெ. (n.) **1.** நாரை (இ.வ.); pelican. **2.** மீன்–கொத்திப் பறவை; king-fisher. *"எழினரையான் வரத்தே கண்டோம்"* (தனிப்பா. i. 289:5). **3.** காகம் (யாழ்.அக.); crow. **4.** நெல்வகை; a kind of paddy.

*[நரையன் → நரையான்.]*

**நரையான்**[2] *naraiyāṉ,* பெ. (n.) **1.** சின்னது (வின்.); small insignificant thing, as a child. **2.** நருங்கின குழந்தை (இ.வ.); child of stunted growth

*[நரு → நரை + ஆன்.]*

**நரையான்**[3] *naraiyāṉ,* பெ. (n.) **1.** காகம்; crow. **2.** மீன்குத்தி நாரை; a heron preying on fish. **3.** செங்கானாரை; a species of crane with red legs. **4.** தேய்ந்த குழந்தை; emaciated child. **5.** நாரை; stork. **6.** நாகப்பாம்பு; cobra.

*[நரு + ஐ + ஆன்.]*

**நரையுகம்** *naraiyukam,* பெ. (n.) முதுக(முள்ள)ந்தண்டெலும்புகளை ஒன்றோ டொன்றாய் இணைக்கும் மூட்டு; bone join with spinal cord.

*[நரை + உகம்.]*

**நரையுந்திரையுமில்லான்** *naraiyun-diraiyumillāṉ,* பெ. (n.) **1.** காகம் (சங்.அக.); crow believed not to grow old **2.** மூப்படையாதது; belived not to grow old.

*[நரையும் + திரையும் + இல்லான்.]*

**நரையேடு** *narai-y-ēḍu,* பெ. (n.) அரத்த நீரின் மேற்புறம் படிந்த ஏடு; the pale buff coloured stratum on the surface of a blood clot which remains when coaglation is completed.

*[நரை + ஏடு.]*

**நல்**[1] *nal,* பெ.அ (adj.) நல்ல; good *"கச்சைசயங்களி நல்யானை"* (சூளா. அரசியற்.27).

**க.,** நல்.

*[நூல்→ நல்.]*

**நல்**[2] *nal,* பெ. (n.) நல்குரவு பார்க்க; see nalguravu. *"கல்குயின்றன்ன வென்னல் கூர்வளி மறை"* (புறநா. 196).

**நல்கதி** *nal-kadi,* பெ. (n.) காட்டா மணக்கு; caster seeds.

*[நல் + skt. கதி.]*

**நல்கல்** *nalgal,* பெ. (n.) **1.** கொடுக்கை; besto-wing. *"நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே"* (புறநா. 312). **2.** பெருங்கொடை (பிங்); liberal gift. **3.** அன்பு; love. *"கழிபெரு நல்கல் ஒன்றுடைத்தென"* (கலித்.4). **4.** அருள்; favour, kindness. *"கடுநவை யணங்குங் கடுப்பு நல்கலும்"* (பரிபா. 4, 49.).

*[நல்கு + அல்.]*

அல்லீற்றுத்தொழிற்பெயர்.

பொருள்படைத்தோர், மன்பதையில் நல்லவண்ணம் வாழவேண்டுமெனில், அனைத்தையும் தாமே துய்ப்போம் என்று எண்ணாது, பிறர்க்குக் கொடுத்துவாழும் கொள்கையை வளர்த்துக்கொள்ளவேண்டும், பிறர்க்கு நல்குகையால் பெறும் இன்பம் உளத்திற்கு நலம் பயக்கும், ஈத்துவக்கும் இன்பம் ஈடுஇணையில்லாதது. பொருள் கொடுக்க இயலாதவர், முகனமர்ந்து, அகமலர்ச்சியுடன், பிறருக்கு ஆற்றல் தரும் இன்சொற்களை, அன்புடன் கூறவேண்டும், அனைவரிடத்தும் நல்லெண்ணம் பூண்டு நட்பாதரவுடன் அன்பு செலுத்தவேண்டும், இன்றையப் பூசல் நிறைந்த உலகிற்கு, இன்றியமையாது வேண்டப்படுவதும், இஃதேயாகும். பொருளுள்ளோர் பொருளை நல்க வேண்டும்; அன்புள்ளங்கொண்டோர் அருளை நல்கவேண்டும். அன்பென்னும் பண்புத்தாய் நல்கிய, குழவியே அருள். அச்சாணி இன்றி தேரினைச் செலுத்த வியலாது; அதுபோல அன்பின்றி உலகில் உய்திபெற இயலாது. அதனால்தான் வையம் வாழ வழிகாட்டிய ஐயன் வள்ளுவப் பேராசானும்,

> "*அருளென்னும் அன்பீன் குழவி பொருளென்னும் செல்வச் செவிலியால் உண்டு*" (குறள்,757) என்றார் போலும்!

**நல்கு¹–தல்** *nalgu-,* 5 செ. குன்றாவி (v.t.) 1. கொடுத்தல்; to bestow, grant, give. "*இல்லோர் புன்கண் டீர நல்கும்*" (பதிற்றுப். 86, 6). 2. விரும்புதல்; to desire, like. "*நறுமலர்க் கோதாய் நல்கினை கேளாய்*" (மணிமே.12:56). 3. தலையளி செய்தல்; to show deep love. "*பரிந்தவர் நல்கார்*" (குறள், 1248.). 4. படைத்தல்; to create. "*நல்கித் தான் காத்தளிக்கும் பொழிலேழும்*" (திவ். திருவாய். 1:4:5). 5. வளர்த்தல்; to train, bring up, as a child "*நங்கைமீர் நீருமோர் பெண்பெற்று நல்கினீர்*" (திவ். திருவாய். 4:2:9).

*[நல் → நல்கு–.]*

தல்லீற்றுத்தொழிற்பெயர்.

**நல்கு²–தல்** *nalgu-,* 5 செ. கு.வி. (v.i.) காலந்தாழ்த்துதல்; to delay. "*நாணத்தாற் சிறிது போழ்து நல்கின னிருந்த*" (கம்பரா. மூலபல. 50.). 2. பயன்படுதல்; to be useful "*அயற்றேவர் நல்கார் விடினும்*" (திருநூற்.89). 3. உவத்தல்; to rejoice. "*நல்கினும் நல்கானாயினும்.... தித்தன் காண்க*" (புறநா. 80). 4. அருள் செய்தல்; to show favour, to bestow grace. "*பார்த்தனுக்கன்று நல்கிப் பாசுபதத்தை யீந்தாய்*" (தேவா. 1029:8). "*நம்பா இனித்தான் நல்காயே*" (தேவாரம்.).

**ம.,** நல்குக.

*[நல் → நல்கு–.]*

**நல்குந்தம்** *nal-gundam,* பெ. (n.) சரகண்ட வைப்பு நஞ்சு; a kind of arsenic.

*[நல்குந்து + அம்.]*

**நல்குரவு** *nalguravu,* பெ. (n.) 1. வறுமை; poverty, indigence "*நல்குரவென்னு நசை*" (குறள், 1043.). 2. துணையின்மையால் கைவிடப்படுகை; destitution.

**மறுவ.** வறுமை.

*[நல் + கூர்வு→குரவு.]*

நல் = நன்மை. கூர்தல் = மிகுதல், நன்மையின்மை மிகுதல்.

ஒருகா. நல்கு + ஊர்வு → நல்கூர்வு → நல்குரவு.

நல் + குறைவு→குரவு–நலந்துய்க்கும் நிலையினின்று, பொருள்வளங்குன்றி, கழிபெரு வறுமையடைதலே, நல்குரவு.

நுகர்வதற்கு என்று ஏதும் இல்லாநிலைமையை நல்குரவு என்பர். நன்மையின்மையை, நன்மை மிகுதி என்று, மங்கலவழக்கால் குறித்தனர் புலவர்.

வெறுமையாகிய வறுமை நிரப்பு என்றது போல், நன்மையின்மையாக நன்மை மிகுதலே நல்குரவு. நல்கு + ஊர்தல் என்று பகுத்து, பிறர் கொடுப்பதன்மேல் ஊர்ந்து செல்லுதல் என்று, மொழிஞாயிறு கூறுகின்றார்.

நல்குரவுண்டாகும் வழிகள் பற்றி மொழிஞாயிறு கூறுவது:—

1. முன்னோர்தேட்டின்மை. 2. பெற்றோரின்மை. 3. உழைப்பின்மை. 4. மதிநுட்பமின்மை. 5. பொருளாசையின்மை 6. தாயத்தாருங் கள்வரும்,கொள்ளையரும் பொருளைக் கவர்ந்து கொள்ளுதல். 7. இயற்கைப்பேரழிவு. 8. குடியுஞ்சூதும், விலைமகளிருறவுமாகிய தீயவொழுக்கம். 9. நேர்மையின்மை.

இவ்வுலகில் உள்ள துன்பங்களுள் கழிபெருந்துன்பம் தருவது வறுமையே, இதைவிளக்க வந்த வள்ளுவர், "*இன்மையின் இன்னாதது யாதெனின் இன்மையின் இன்மையே இன்னா—தது.*" (குறள்,1041.). என்று கூறுவதறிக.

**நல்கூர்[1]—தல்** *nalgūr-*, 2 செ.கு.வி. (v.i.). 1. வறுமைப்படுதல்; to be poor, indigent. "*நல்கூர்ந்த மக்கட்கு*" (நாலடி, 242). 2. கைவிடப்படுதல்; துணையின்மையால் கைவிடப்படுகை; to destitute. 3. களைப் படைதல்; to be wearied. "*நடவை வருத்த மொடு நல்கூர் மேனியள்*" (மணிமே. 13:72). 4. துன்புறுதல்; to suffer. "*மாலைநீ யாயின் மணந்தா ரவராயின் ஞாலமோ நல்கூர்ந்தது வாழிமாலை*" (சிலப். 7:50).

*[நல் + கூர்—.]*

ஒருகா:— *[நல்கு + ஊர் → நல்கூர்—.]*

**நல்கூர்[2]** *nalgūr-*, பெ. (n.) 1. ஏழைமை; poverty. "*நல்கூர்க் கட்டழ னலிந்துகை யறுப்ப*" (பெருங். வத்தவ.2.21.). 2. எளிமை; simplicity.

*[நல் + கூர் →நல்கூர்.]*

**நல்கூர்ந்தோன்** *nalgūrndōṉ*, பெ. (n.) வறியவன் (திவா.); poor, indigent man.

*[நல்கூர் →நல்கூர்ந்தோன்.]*

**நல்கை[1]** *nalgai*, பெ. (n.) 1. கொடுக்கை, கொடை; bestowing, granting. 2. *நல்கல்* பார்க்க; see *nalgal*.

*[நல்கு →நல்கை.]*

**நல்கை[2]** *nalgai*, பெ. (n) கல்வி நிறுவனங்களுக்குத் தரும் நிதி உதவி; grant (to educational institutions), sponsorship. '*பல்கலைக்கழக மானியக் குழுவின் நல்கையுடன் கருத்தரங்கு நடத்தப்படும்*'.

*[நல் + கை.]*

**நல்சித்தன்** *nal-šittaṉ*, பெ. (n) அரச வயிரக்கல்; one of the two inferior varieties of diamonds with yellow specks.

நல்சித்தன் = தரம்தாழ்ந்ததும், மஞ்சள் வண்ணப்புள்ளிகளையுடையதுமான வயிரம்.

**நல்துளசி** *nal-tuḷaši*, பெ. (n.). நல்லதுளசி; ocimum sanctum.

**நல்தேசி** *naltēši*, பெ. (n.). *நற்றேசி* பார்க்க; see *naṟṟēši*.

**நல்நாறி** *nal-nāṟi*, பெ. (n.). *நலநாறி* பார்க்க; see *nala-nāṟi*.

**மறுவ.** சிவகரந்தை

*[நல் + நாரி.]*

**நல்நெருஞ்சி** *nal-neruñji,* பெ. (n.). நல்ல நெருஞ்சி; a small prostrate herb, cow's thorn. "*நெருஞ்சிக் காடுறு கடுநெறியாக*" (பதிற்றுப்.26.).

**நல்பசு** *nal-pašu,* பெ. (n.). *நல்லா*[2] பார்க்க; see *nallā*[2]

*[நல் + பசு.]*

**நல்மதியோன்** *nal-madiyōṉ,* பெ. (n.) குரங்கு; monkey.

*[நல் + மதியோன்.]*

**நல்மருது** *nal-marudu,* பெ. (n.) மருத மரவகையுளொன்று; a kind of murdam tree.

*[நல் + மருது.]*

**நல்மலையாதி** *nal-malaiyādi,* பெ. (n.) தாமரைக்கிழங்கு; lotus root.

*[நல்மலை + ஆதி.]*

**நல்மிளகு** *nal-miḷagu,* பெ. (n.) கருமிளகு; black pepper-Pipernigrum.

*[நல் + மிளகு.]*

**நல்முகிசம்** *nal-mugišam,* பெ. (n.) *சுக்குநாறி மரம்* பார்க்க; see *sukku-nāṟi-maram.*

**நல்முருங்கை** *nal-muruṅgai,* பெ. (n.) முருங்கை; drum - stick tree.

*[நல் + முருங்கை.]*

உண்ணுவதற்குப் பயன்படும் முருங்கை; உடலுக்கு ஊறு விளைவிக்காது நலத்தையே நல்கும் முருங்கை.

**நல்ல** *nalla,* பெ. எ. (adj) 1. நன்மையான; good, fine, excellent. 2. மிக்க; abundant, copious "*இந்தத் தடவை மிளகாய் நல்ல காய்ப்பு*" (உ.வ.). 3. கடுமையான; intense, severe. 'நல்ல வெயில்' (இக்.வ.). நல்லஅடைமழை பெய்தால்தான் சென்னையிலுள்ள ஏரிகள் நிறைந்து தண்ணீர்ப் பற்றாக்குறை தீரும். (இக்.வ.);

க., ம., நல்ல.

*[நல் →நல்ல.]*

**நல்லக்குடி**[1] *nalla-k-kuḍi,* பெ. (n.) வளமாக வாழ்ந்து வரும் குடும்பம்; a wealthy family

**நல்லக்குடி**[2] *nalla-k-kuḍi,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள சிற்றூர். a village in Tañjāvūr, dt.

*[நல்ல + குடி.]*

குயிலாலுந்துறை எனப் பெயர் பெறும் இவ்விடம், மயிலாடுதுறைக்கு ஒரு கல் தொலைவில் உள்ளது என்பதால், பழைய பிரிக்கப்படாத தஞ்சை மாவட்டத்தில் உள்ளது என்பது தெரிகிறது.

**நல்லகணிசம்** *nalla-kaṇišam,* பெ. (n.) மீன் வலைப்படுதற்குரிய தகுந்த நேரம் (கட. பர.); time suit to catch fish

*[நல்ல + கணிசம்.]*

**நல்லகாரை**[4] *nalla-kārai,* பெ. (n.). செங்காரை; common honey-thorn. (ச.அக.).

*[நல்ல + காரை]*

**நல்லகாரை²** *nalla-karai,* பெ. (n.) காரை; spinous honey-thorn (l.).

*[நல்ல + காரை.]*

**நல்லகாலம்** *nalla-kālam,* பெ. (n.) நற்காலம்; auspicious time, lucky time. நல்ல காலத்தால் தப்பினான் (இக்.வ.). நல்லகாலமாக இருந்ததால் தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று (உ.வ.).

மறுவ. ஆகூழ்காலம்.

*[நல்ல + காலம்.]*

தீமை பயக்காது, நன்மையே விளையும் காலம். நற்பேறு கொடுக்கும் காலம். உள்ளத்தில் உறுதியும், நோயற்ற செல்வமும் கொடுக்கும் காலம்.

**நல்லகெந்தன்** *nalla-kendan,* பெ. (n.) மேகநோய் பதினெண் வகைகளிலொன்று; one of the eighteen mega diseases.

*[நல்ல + (ெ)கந்து + அன்.]*

**நல்லகோவை** *nalla-kōvai,* பெ. (n.) *கோவை* பார்க்க; see, *kōvai.*

*[நல்ல + கோவை.]*

**நல்லகௌளி** *nalla-kauli,* பெ. (n.) நன்னிமித்தமாக வொலிக்கும் பல்லி (நாஞ்.); lizard predicting good.

*[நல்ல +* skt *கௌளி.]*

**நல்லங்கு** *nallangu,* பெ. (n.) விலங்குவகை; a kind of animal as of armadillo.

*[நல் + அழுங்கு → அங்கு.]*

(ஒ.நோ.) மழுங்கு → மங்கு.

**நல்லங்கோலம்** *nallan-gōlam,* பெ. (n). அழிஞ்சில் மரம்; sage leaved alangium.

*[நல்லம் + கோலம்.]*

**நல்லசங்கு** *nalla-šangu,* பெ. (n.) சங்கஞ்செடி; a creeper with white flowers.

*[நல்ல + சங்கு.]*

**நல்லசந்தனம்** *nalla-šandanam,* பெ. (n) செஞ்சந்தனம்; red sandal

*[நல்ல + சந்தனம்.]*

உடம்பில் பூசுதற்கேற்ற, கெடுதி விளைவிக்காத சந்தனச்சாந்து. இறைத் திருவுருவங்களை, திருமுழுக் காட்டுதற்குரிய செஞ்சந்தனம்.

**நல்லசமயம்** *nalla-šamayam,* பெ. (n.). ஆகூழ் வேளை; favourable good opportunity

*[நல்ல + சமையம்]*

சமயம் – நன்மை பெருகும் நேரம்: நல்வாய்ப்புகளும், நற்செல்வமும் தேடிவரும் காலம். தீமைநேராத காலம். உள்ளஉறுதியுடன் செயல்படும் காலம். அனைத்து நிலைகளிலும் வளங் கொழிக்கும் காலம்.

**நல்லசனனம்** *nalla-šananam,* பெ. (n.) 1. நற்பிறப்பு; good birth. 2. நற்குணம் வாய்ந்தவன்–ள்; a good and pious person

*[நல்ல + Skt. சனனம்.]*

நற்செயல்களாற்றுதற்கு வாய்த்த மானுடப்பிறப்பு. அதனால்தான்

மானுடப்பிறப்பை நாவுக்கரசர் தமது தேவாரத்துள், "*வாய்த்தது இப்பிறவி மதித்திடுமின்*" என்று மன்பதை மாந்தர்க்கு அறிவுறுத்துகின்றனர். அன்பும், அருளும் பூண்டு செயலாற்றும் நற்பேறு, மாந்தர்க்கே உண்டு; நற்பிறப்பாம் இம் மானுடப் பிறப்பையும், நற்குணத்துடன் செயலாற்றும் மனத்திட்பத்தையும், நமக்கீந்த இறைவனுக்கு நாம் என்றென்றும், நன்றிக்கடன் பட்டவர் களாவோம்.

**நல்லசா** *nalla-šā*. பெ. (n.) *நல்லசாவு (வின்.)* பார்க்க; see *nalla-šāvu*

*[நல் + சா.]*

**நல்லசாமம்** *nalla-šāmam*, பெ. (n.) நடுச்சாமம் (வின்.); mid-night, dead of night.

*[நல்ல + சாமம். யாமம் → சாமம்]*

**நல்லசாமிப்பிள்ளை** *nallašāmi-p-pillai*, பெ. (n.) தமிழறிஞர்; a Tamil scholar

இவர் சிவஞானபோதம், சிவஞான சித்தியார், உண்மை நெறிவிளக்கம், திருவுந்தியார், வினாவெண்பா, கொடிக்கவி, திருவருட்பயன், இருபா இருபஃது, சிவபக்த விலாசம் ஆகிய நூல்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துள்ளார்.

**நல்லசாரம்** *nalla-šāram*, பெ. (n.) அத்திப்பிசின் (சங்.அக.); fig-resin

*[நல்ல + சாரம்]*

**நல்லசாவு** *nalla-sāvu*. பெ. (n.) அகவை (வயது) முதிர்ந்த நிலையில் தானும் துன்பப்படாது, பிறருக்கும் தொல்லை இல்லாமல் ஏற்படும் இயற்கைச் ஏற்படும் சாவு; mature and painless death, euthanasia

*[நல்ல +சாவு.]*

**நல்லசீயக்காய்** *nalla-šiyakkāy*, பெ. (n.) சீயக்காய்; true soap-pad.

*[நல்ல + சீரகம்]*

**நல்லசீரகம்** *nalla-širagam*. பெ. (n.) கறிச்சீரகம்; cummin seed.

*[நல்ல + சீரகம்]*

**நல்லசெய்கை** *nalla-šeygai*, பெ. (n.) 1. நல்ல செயல்; good, virtuous, action 2. திறமையான செயல் (இ.வ.); skillful performance

*[நல்ல + செய்கை.]*

**நல்லசேவகன்** *nalla-šēvagan*, பெ. (n.) 1. சிறந்த வீரன்; good-soldier. 2. ஊரகக் காவல் தெய்வமான ஐயனார்; Aiyanār, the village deity

*[நல்ல + skt சேவகன்]*

**நல்லசோறு** *nalla-šōru*. பெ. (n.) நெல்லரிசியில் ஆக்கப்பட்ட சோறு; cooked rice நல்லசோறு சாப்பிட்டு நாளாச்சு (உ.வ.).

*[நல்ல + சோறு.]*

நெல்லரிசியில் சமைக்கப்பட்ட சோறே நல்லசோறு; சிற்றூர்ப்புறத்தே அன்றாடம் கூலிவேலை செய்து வாழ்வோர், விழாக்காலத்தும், பண்டிகை நாட்களிலும் தான் நல்லசோறு(நெல்லரிசிச்சோறு) சமைத்து உண்பர். ஏனைய நாட்களில் குறைந்த விலையில் கிடைக்கும், கம்பு, சோளம், வரகு, சாமை முதலான புன்செய்த் தவசங்களில் சமைத்த சோறினையே உண்பர். ஊரகத்தே

புன்செய்த் தவசஉணவும் சோறு என்றே இன்றும் அழைக்கப்படுகிறது. (எ.டு.) கம்பஞ்சோறு, சோளச்சோறு. நெல்லரிசியில் ஆக்கிய சோற்றையே "நல்லசோறு" என்று ஊரகமக்கள் உரைக்கின்றனர் எனலாம்.

**நல்லடிக்காலம்** *nallaḍi-k-kālam,* பெ. (n.) நன்மைக்கு மூலமான காலம் (ஈ.டு.); auspicious occasion.

**நல்லணி** *nallaṇi,* பெ. (n.) மங்கல நாண்; a marriage badge as ornament par excellence. "*நல்லணி யணிந்தென்னன் மனையாகி வாழ்குவையால்*" (பிரமோத். 4:26).

**மறுவ.** தாலி

*[நல் + அணி.]*

**நல்லத்தி** *nallatti,* பெ. (n.). *அத்தி* பார்க்க; see *atti.*

*[நல் + அத்தி.]*

**நல்லத்தை** *nallattai,* பெ. (n.) **1.** தந்தையுடன் பிறந்தாள் (வின்.); paternal aunt. **2.** தந்தையுடன் பிறந்த அத்தையருள் நடுப்பிறந்தாள் (தஞ்சை); the middle one among paternal aunts.

*[நல் + அத்தை.]*

நடுப்பிறந்தாள் என்னும் போது, நள்ளத்தை என்று குறிக்கப்பட வேண்டும்.

ஒ.நோ. நள்ளிரவு

**நல்லதக்காளி** *nalla-takkāḷi,* பெ. (n.) பெரியதக்காளி; indian winter cherry.

*[நல்ல + தக்காளி.]*

**நல்லதண்ணித்தீவு** *nalla-taṇṇi-t-tīvu,* பெ. (n.). இராமநாத புரத்திலிருந்து 40 கல் தொலைவில், ஏறக்குறைய 2 1/2 ஏக்கர் பரப்பளவு கொண்ட ஒரு தீவு; an island situated 40 k.m from Ramnāḍ, where fishermen. take rest in the midst of their hard work. Here they get pure drinking water நல்லதண்ணித்தீவு மீனவர்களின் நாவறட்சியைப் போக்குகிறது. (இ.வ.).

*[நல்ல + தண்ணீர் + தீவு.]*

இங்கே மீனவர்கள் தொழிலினூடே சென்று, ஓய்வெடுப்பார்கள். இங்கே குடிக்க நல்லதண்ணீர் கிடைக்கும்.

**நல்லதண்ணீர்** *nalla-taṇṇīr.* பெ. (n.) **1.** குடிதண்ணீர்; fresh drinkable water. **2.** சுவையுள்ள நீர்; good water. ஆழ்துளைக் கிணற்றில் நல்லதண்ணீர் கிடைப்பது மிகவும் அரிது. (இ.வ.).

**மறுவ.** நன்னீர்.

*[நல்ல + தண்ணீர்.]*

பருகுவதற்கு ஏற்றவண்ணம் அமைந்ததும், உவர்ப்புச் சுவையற்றதுமான தூயநீர்.

**நல்லதண்ணுழுவை** *nalla-taṇṇuḻuvai,* பெ. (n.) 11/2 விரலம் (அங்குலம்)வரை வளரக்கூடிய ஆற்று மீன்வகை; river gobius, a brown fresh-water fish, fawn colour, attaining 11/2 inch. in length.

**மறுவ.** ஆற்றுழுவை.

*[நல்ல + தண் + உழுவை.]*

**நல்லதம்பிரான்** *nalla-tambirāṉ,* பெ. (n.) **1.** அங்காளம்மன் (தஞ்சை.); the goddess

Angāḷamman 2. தெய்வமாகக் கருதப்படும் நல்லபாம்பு (தஞ்சை.) cobra, regarded as a deity

*[நல்ல + தம்பெருமான் → தம்பிரான்.]*

**நல்லதரட்டை** *nalla-taraṭṭai,* பெ. (n.) *நல்லதுறட்டை* பார்க்க; see *nalla-turaṭṭai*

*[நல்ல + தரட்டை.]*

**நல்லதரம்** *nalla-taram,* பெ. (n.) **1.** முதற்றரம் (வின்.); the first quality **2.** சரியான இணை (இ.வ.); proper match, good **3.** தகுதியான மணமக்கள்; good appropriate match

*[நல்ல + தரம்.]*

**நல்லதனம்** *nalla-taṉam,* பெ. (n.) **1.** நட்பு (யாழ்.அக.); friendlieness **2.** ஒத்துப் போகும் இயல்பு (இ.வ.); amicable dealing amiability

**மறுவ.** கேண்மைப்பாங்கு.

*[நல்ல + தனம்.]*

தன்(மை) + அம் = தனம்.

நட்பிணக்கத்துடன் ஒருவரையொருவர் நன்கு புரிந்து கொண்டு செயலாற்றும் பாங்கு, நல்லதனம் எனப்படும். உண்மை அன்பு கெழுமியவர்பால் மட்டுமே, நல்லதனம் என்னும் இந் நற்பண்பு, காணப்படும்.

**நல்லதனம்பண்ணு-தல்** *nalla-taṉam-paṇṇu* 5 செ.குன்றாவி. (v.t.) அமைதிப் படுத்துதல் (வின்); to pacify

*[நல்லதனம் + பண்ணு-.]*

**நல்லதனமாக** *nalla-taṉam-āga,* வி.எ. (adv.) **1.** நயமாக; suavely, politely **2.** முகப் புகழ்ச்சியாக, தணிவாக(தஞ்சை); soothingly

*[நல்ல + தனம் + ஆக.]*

**நல்லதாமரை** *nalla-tāmarai,* பெ. (n.) **1.** பொற்றாமரை; red lotus. **2.** தாமரை பார்க்க; see tāmarai

*[நல்ல + தாமரை.]*

**நல்லதாளி** *nallatāḷi,* பெ. (n.) *நறுந்தாளி* பார்க்க; see *naṟundāḷi*

**நல்லது** *nalladu,* பெ. (n.) **1.** நன்மையானது; (வின்); that which is good **2.** நல்லபாம்பு பார்க்க (இ.வ.); see nalla-pāmbu

**ம.,** நல்லது.

*[நல்ல → நல்லது.]*

**நல்லதுசொல்(லு)[1]-தல்** *nalladu-śol(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) **1.** அறிவு கூறுதல்; to give kindly advice **2.** அன்புடன் பேசுதல் (வின்.); to speak kindly

*[நல்லது + சொல்லு -.]*

**நல்லதுசொல்(லு)[2]-தல்** *nalladu-sol (lu)-,* 8 செ.குன்றாவி. (v.t.) வழியனுப்புதல் (வின்.); to bid farewell

*[நல் + அது + சொல்லு-.]*

**நல்லதுத்தி** *nalla-tutti,* பெ. (n.) பெருந்துத்தி; country mallow (l.)

*[நல்ல + துத்தி.]*

நல்ல = பெரிய.



**நல்லதுபண்ணு—தல்** *nalladu-paṇṇu-,* 5 செ.குன்றாவி. (v.t.) இணக்குதல் (வின்.); to reconcile

*[நல்லது + பண்ணு–.]*

**நல்லதுபொல்லாது** *nalladu-pollādu,* பெ. (n.) **1.** நன்மை தீமை; good and evil. **2.** நன்மை தீமையுமான நிகழ்வுகள் (இ.வ.); auspicious and inauspicious occasions.

*[நல்லது + பொல்லது → பொல்லாது.]*

**நல்லதும்பை** *nalla-tumbai,* பெ. (n) வெண் தும்பை; lucas flower.

*[நல்ல + தும்பை.]*



**நல்லதுவரம்** *nalla-tuvaram,* பெ. (n.) கடுகு; mustard.

*[நல்ல + துவரம்.]*

**நல்லதுளசி** *nalla-tuḷaśi,* பெ. (n.) துளசி; holy basil.

*[நல்ல + துளசி.]*

**நல்லதுறட்டை** *nalla-tuṟaṭṭai,* பெ. (n.) ஆறுவிரலம் நீளம் வளர்வதும், சாம்பல் நிறமுள்ளதுமான, கடல்மீன்வகை; see fish greyish green attaining 6 inch in length

*[நல்ல + துறட்டை.]*

**நல்லதேட்டம்** *nalla-tēṭṭam,* பெ. (n.) **1.** நேர்மையான வருவாய்; acquisition of property by fair means. **2.** மிக்க வருவாய்; ample income. **3.** (ஆன்மாவின்) ஆதனின் பொந்திகை (திருப்தி.); seeking the good of the soul.

*[நல்ல + தேட்டம்.]*

**நல்லந்துவனார்** *nallanduvaṉār,* பெ. (n) கழகக் காலப் புலவர்; a poet of śaṅgam period

இவர் கலித்தொகையில் கடவுள் வாழ்த்துப் பாடலையும், நெய்தற்கலிப் பாடல்களையும் இயற்றியுள்ளார். இந் நூலினைத் தொகுத் தவரும் இவரே.

பரிபாடலில் 8,9,11,20 ஆகிய நான்கு பாடல்களை இயற்றியுள்ளார்.

திருவள்ளுவமாலையில் "*சாற்றிய பல்கலையும்*" எனத் தொடங்கும் வெண்பாவினை இயற்றியவர்.

இவர் பெயருக்கு நவ்வந்துவனார் என்ற பாட வேறுபாடும் உண்டு.

*[நல் + அந்துவனார்.]*

"*யான்செய் தொல்வினைக்கு எவன்பேது உற்றனை வருந்தல் வாழி தோழி யாஞ்சென்று உரைத்தனம் வருகம் எழுமதி புணர்திரைக் கடல்விளை அமுதம் பெயர்கேற் காஅங்கு உருகி உகுதல் அஞ்சுவல் உதுக்காண் தம்மோன் கொடுமை நம்வ:பின் ஏற்றி நயம்பெரிது உடைமையின் தாங்கல் செல்லாது கண்ணீர் அருவி யாக அழுமே தோழி அவர் பழமுதிர் குன்றே*" (நற்.88).

"*உரவுத்தகை மழுங்கித்தன் இடும்பையா லொருவனை*
*இரப்பவன் நெஞ்சம்போற் புல்லென்று புறமாறிக்*
*கரப்பவன் நெஞ்சம்போல் மரமெல்லாம் இலைகூம்பத்*
*தோற்றஞ்சால் செக்கருள் பிறைநுதி யெயிறயாக*
*நாற்றிசையும் நடுக்குறூஉ மடங்கற் காலைக்*
*கூற்றுநக் கதுபோலும் உட்குவரு கடுமாலை*"
(கலித்.120.).

நல்லந்துவனார் பாடிய நெய்தற்கலியுள் என்றும் நின்று நிலவும் நெஞ்சுருக்கும் பாடல்வரி:–

"*போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை*" மணந்தவளைக் காப்பது மணவாளன் கடமை; புணர்ந்தவளைப் பிரியாதிருப்பது, அஃதாவது, இருமனம் இணைந்து, ஒருமனமாகித் திருமணஞ் செய்தவளைக்காத்து ஓம்புவது, ஆடவனின் வாழ்வியல் நெறி. "உன்னில் நான் என்னில் நீ", என்று கூறி வாழ்ந்தவளைப் பிரிதல் முறையன்று, என்று நவிலும் பாங்கு, உளங்கூறத்தக்கது.

இவருடைய பெயர் அந்துவன் என்றும், நல்லந்துவன் என்றும், மதுரையாசிரியர் நல்லந்துவன்என்றும் ஏடுகளில் எழுதப் பட்டுள்ளன. இப்பெயர்கள் ஒருவரையே குறிக்கின்றன. 'ந' என்பது கழகக் காலத்தில் தமிழ்ப் புலவருக்கு இட்டு வழங்கப்பட்ட சிறப்புச் சொல். அந்துவன் என்பது இவருடைய பெயர்.

நல்லந்துவனார் இயற்றிய இரண்டு செய்யுள்கள் அகநானூற்றில் 43–ஆம் செய்யுளாகவும், நற்றிணையில் 88ஆம் செய்யுளாகவும் தொகுக்கப்பட்டுள்ளன. கலிப்பாக்களினால் ஆகிய கலித்தொகை என்னும் நூலை இவர் தொகுத்தார். அந்தக் கலித்தொகையில், நெய்தற்கலியைப் பற்றி இவர் பாடிய 33 செய்யுள்களையும் தொகுத்திருக்கிறார். இவர் தொகுத்த கலித்தொகைக்குக் கடவுள் வாழ்த்தையும் இவரே பாடியுள்ளார். கலித்தொகையில் பெருங்கடுங்கோன் பாடிய பாலைக்கலிச் செய்யுட்களையும், கபிலர் இயற்றிய குறிஞ்சிக்கலிச் செய்யுட்களையும், மருதன் இளநாகனார் இயற்றிய மருதக்கலிச் செய்யுட்களையும், சோழன் நல்லுருத்திரனார் இயற்றிய முல்லைக்கலிச் செய்யுட்களையும் இவர் தொகுத்துள்ளார். இதனை,

"*பெருங்கடுங்கோ பாலை, கபிலன் குறிஞ்சி, மருதனிள நாகன் மருதம் – அருஞ்சோழன் நல்லுருத் திரன்முல்லை, நல்லந் துவனெய்தல் கல்விவல்லார் கண்ட கலி*"

என்னும் செய்யுளினால் அறியலாம்.

கலித்தொகையின் இறுதியில் "*தொகுத்தார் – நல்லந்துவனார்*" என்று எழுதப்பட்டிருப்பது, இதனைத் தொகுத்தவர் இவரே, என்பதை உறுதிப்படுத்துகின்றது.

மதுரையில் இருந்த இவர், மதுரைக்கும் அருகில் உள்ள திருப்பரங்குன்றத்தில் எழுந்தருளியிருந்த முருகப் பெருமான் மீது (8ஆம் பரிபாடலைப்) பாடினார். அதில் திருப்பரங்குன்றத்தை மிகப் பாராட்டியுள்ளார். "*பரங்குன்று இமயக்குன்றம் தகர்க்கும்*" என்று கூறியுள்ளார். முருகனுக்குத் திருப்பரங்குன்றம் என்றென்றும் நிலை பெறுவதாக, என்று வாழ்த்துகிறார்.

மணிமிடற் றண்ணற்கு மாசிலோள் தந்த நெறிநீர் அருவியசும்புறு செல்வ! மண்பரிய வானம் வறப்பினும் மன்னுகமா தண் பரங்குன்றம்! நினக்கு (பரிபாடல் 8:127–30).

என்று வாழ்த்துகிறார்.

வையையாற்றையும், இவர் பரிபாடலில் பாடியுள்ளார். (பரிபாடல்6, 11, 20.). இவர் இசைக்கலையில் வல்லவர் என்பது, இவர் இயற்றியுள்ள பரிபாடல்களினால் அறியலாம். ஏனென்றால் பரிபாடல் இசைப்பா வகையைச் சேர்ந்தது. இதனை இவர், *"இன்னியல்மாண் தேர்ச்சி இசைப் பரிபாடல்"* (பரிபாடல் 11:137). என்று கூறியிருப்பது காண்க.

நல்லந்துவனார் முருக(பக்தர்)னடியார் என்றும், அவர் முருகப்பெருமான் எழுந்தருளியுள்ள புகழ்பெற்ற திருப்பரங்குன்றத்தைப் பரிபாடலில் பாடியுள்ளார் என்றும் கூறினோம். இச் செய்தியை, இப் புலவர்கள் காலத்தில் இருந்த மருதன் இளநாகனார் என்னும் புலவரும், தாம் பாடிய அகப்பாட்டு ஒன்றில் பாடியுள்ளார்.

*"சூர்மருங் கறுத்த சுடரிலை நெடுவேல்*
*சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து*
*அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை"*
(அகநா.59:10–12.).

என்று அவர் கூறியுள்ளது காண்க.

நல்லந்துவனாரும், மருதன் இளநாகனாரும் சமகாலத்தில் இருந்தவர் என்பது நன்கு தெரிகின்றது. மருதன் இளநாகனார் இயற்றிய, மருதக்கலிச் செய்யுட்களை நல்லந்துவனார் தாம் தொகுத்த கலித்தொகையில் தொகுத்து இருக்கிறார். தனக்குச் சமகாலத்தில் இருந்த புலவர் செய்யுட்களை மட்டும் தொகுக்க முடியுமேயல்லாமல், தமக்குப் பிற்காலத்தில் இருந்த புலவர்களின் பாடல்களை ஒருவர் தொகுக்க முடியாதல்லவா? எனவே, நல்லந்துவனாரும், மருதன் இளநாகனாரும் சமகாலத்தவர் என்பது தெரிகின்றது. மருதன் இளநாகனார், நல்லந்துவனாருக்கு முன்பு இருந்திருக்கக் கூடாதோ என்றால், மருதன் இளநாகனார், நல்லந்துவனார் பாடிய திருப்பரங்குன்றத்தை,

*"சினமிகு முருகன் தண்பரங் குன்றத்து*
*அந்துவன் பாடிய சந்துகெழு நெடுவரை"*
(அகம் 59:11–12.).

என்னும் பாடல் கூறுகிறபடியால், மருதன் இளநாகனார், நல்லந்துவனாருக்கு முன்பு வாழ்ந்திருத்தல் முடியாது. எனவே நல்லந்துவனாரும், மருதம் பாடிய இள நாகனாரும், சமகாலத்தவர் என்பது ஐயமறத் தெரிகின்றது.

மதுரையாசிரியர் நல்லந்துவனார், திருப்பரங் குன்றத்து மலையில் இருந்த, இயற்கைக் குகையொன்றைச் செப்பனிட்டு, அதைத் திருப்பரங்குன்றத்து மலையில் தவம் செய்து கொண்டிருந்த முனிவருக்குத் தானமாக வழங்கினார் என்னும், அரிய செய்தி ஒன்றும் தெரிகின்றது. திருப்பரங்குன்றத்தையும், அதில் எழுந்தருளியுள்ள முருகப் பெருமானையும், பத்திமையுடன் (பக்தியுடன்) பாடிய ஆசிரியர் நல்லந்துவனார், அந்த மலையில் தவம் செய்துகொண்டிருந்த முனிவருக்குக் குகையைச் செப்பனிட்டுக் கொடுத்தது மிகப் பொருத்தமே யாகும். திருப்பரங்குன்றத்து மலையில் உள்ள இயற்கைக் குகைகள் சிலவற்றில், ஒரு குகையில் கீழ்க்கண்ட எழுத்துக்கள் எழுதப்பட்டிருக்கின்றன. இவ்வெழுத்து அக் காலத்தில் வழங்கி வந்த தமிழி (பிராமி) எழுத்தாகும்:

**"அந்துவான் கொடுபிதாவான்"**

என்பது இதன் கல்வெட்டு வரியாகும்.

அந்துவன் என்பதை, அந்துவான் என்றும், கொடுப்பித்தவன் என்பதைக் கொடுபிதாவன் என்றும், படிப்பில்லாத கல்தச்சன் இவ் வெழுத்துகளைப் பாறையில் செதுக்கியிருக்கிறான். இதன் சரியான வரி, அந்துவன் கொடுப்பித்தவன் என்றிருக்க வேண்டும்.

முருக பத்தரும், திருப்பரங்குன்றத்து முருகனைப் பரிபாடலில் பாடினவரும், சங்கப் புலவருமாயிருந்த அந்துவரே, இந்தத் தானத்தைச் செய்திருக்கவேண்டும் என்பதில் ஐயமுண்டோ?

**நல்லநடத்தை** *nalla-naḍattai,* பெ. (n.) நல்லொழுக்கம்; good virtuous conduct.

*[நல்ல + நடத்தை.]*

நல்லொழுக்கமும், நற்குணமும் பூண்டு, ஒழுகும் நடத்தை.

**நல்லநாள்** *nalla-nāḷ,* பெ. (n.) **1.** விருப்பமான நாள்; favourite day. **2.** திருவிழா நாள் (வின்.); நல்லநாளில் குழந்தைகளுக்குப் புதுத் துணிகள் வாங்கவேண்டும். (உ.வ.). day of festivity. **3.** மகிழ்ச்சியான நாள்; happy day. நல்லநாளில் வீணாகப் பகையை வளர்த்துக் கொள்ளாதே (இக்.வ.). **4.** நன்மைபயக்கும் நாள்; auspicious day.

*[நல்ல + நாள்.]*

**நல்லநினைப்பு** *nalla-niṉaippu,* பெ. (n.) **1.** சிறந்த நினைவு (வின்.); good memory. **2.** நல்லெண்ணம்; good thoughts "*நல்ல நினைப் பொழிய*" (தேவா.744:4.).

*[நல்ல + நினைப்பு.]*

**நல்லநீர்** *nalla-nīr,* பெ. (n.) **1.** நன்னீர்; fresh uncontaminated water. **2.** மழைநீர்; rain water. **3.** வாலையில் வடித்தநீர்; distilled water. **4.** சிறுநீர்; urine.

*[நல்ல + நீர்.]*

**நல்லநெருஞ்சில்** *nalla-neruñjil,* பெ. (n.) சிறு நெருஞ்சில்; small caltrope.

*[நல்ல + நெருஞ்சில்.]*

**நல்லப்பன்** *nallappaṉ,* பெ. (n.) தந்தையுடன் பிறந்தவன் (யாழ்ப்.); paternal uncle.

**நல்லபசி** *nalla-paśi,* பெ. (n.) உணவு வேண்டுமென்கிற மிகு உணர்ச்சி; good appetite.

**மறுவ.** கடும்பசி.

*[நல்ல + பசி.]*

**நல்லபலசு** *nalla-palaśu,* பெ. (n.) நீரல்லி; black horey thorn.

*[நல்ல + பலசு.]*

**நல்லபழக்கம்** *nalla-paḻakkam,* பெ. (n.) **1.** நற்பயிற்சி (வின்.); good habit. **2.** நெருங்கிய நட்பு (இ.வ.); intimate acquaintance, close friendship. **3.** நல்லோரிணக்கம்; friendship with the good.

*[நல்ல + பழக்கம்.]*

**நல்லபாம்பு** *nalla-pāmbu,* பெ. (n.) நாகப்பாம்பு; cobra

*[நல்ல + பாம்பு.]*

*[பம்பு → பாம்பு.]*

பம்புதல் = விரிதல்.

படம் விரித்துத் அச்சுறுத்தும் கொடிய நச்சுயிரி.

பாம்பு என்பது, நாகப்பாம்பிற்கே உரிய சிறப்புப்பெயர். பரவுதல் = விரிதல் எனப்பொருள் படும். பம்பு(பம்புதல்) என்னும் சொல் பாம்பு எனத் தலைநீண்டு, படம்விரிக்கும், நல்லபாம்பின் பெயராயிற்று. ஆயினும் பாம்பு என்னும் பெயர் இனத்தைக் குறிக்குமுகத்தான், விரியன் பாம்பு, சாரைப்பாம்பு, வழலைப்பாம்பு, மண்ணுளிப் பாம்பு என்று எல்லாவற்றுக்கும் பொதுப்பெயராயிற்று.

படம் விரித்தாடும் சிறப்புப் பண்பினை விளக்குமுகத்தான், நல்லபாம்பு என்று மக்களிடையே வழக்கூன்றியது எனலாம். நல்லபாம்பு வகைகள் பற்றிச் சா.அக. கூறுவது வருமாறு:—

1. கருநாகம்.
2. கரும்படநாகம்.
3. பாப்பாரநாகம்.
4. செட்டிநாகம்.
5. பூநாகம்.
6. தாழைநாகம்.
7. மலைநாகம்.
8. செந்நாகம்.
9. கோதுமைநாகம்.



**நல்லபாம்புச்சட்டை** *nalla-pāmbu-c-caṭṭai,* பெ. (n.) நாகப்பாம்பின் மேல்தோல்; the outer skin of the cobra.

**நல்லபாலை** *nalla-pālai,* பெ. (n.) கொடிப் பாலை; green wax flower.

*[நல்ல + பாலை.]*

**நல்லபிரண்டை** *nalla-piraṇḍai,* பெ. (n.) சதுரப் பிரண்டை; square stalked wild grape

*[நல்ல + பிரண்டை.]*



**நல்லபுத்தி** *nalla-putti,* பெ. (n.) 1. தெளிவான அறிவு; good state of mind, good sense, good understanding. 2. பகுத்துணர்வு; discretion, discrimination faculty 3. நல்லுரை வழங்குதல்; good counsel, sound advice.

*[நல்ல + புத்தி.]*

**நல்லபூசணி** *nalla-pūšaṇi.* பெ. (n.) சருக்கரைப் பூசணி (இ.வ.); common gourd red pumpkin.

*[நல்ல + பூசணி.]*



**நல்லபூலாத்தி** *nalla-pūlātti.* பெ. (n.) செடிவகை; long-sepalled feather-foil (L.).

**நல்லபெண்** *nalla-peṇ,* பெ. (n.) நல்லொழுக்கம் நிறைந்தவள்; virtuous lady. "*நல்லபெண் என்றால் உள்ளூரில் வாழ்வாள்*" (இ.வ.).

*[நல்ல + பெண்.]*

அக் காலத்தே பெண்களின் எண்ணிக்கை குறைவாக இருந்தது திருமணத்திற்கு நல்லபெண் கிடைப்பது அரிது. இக் காலத்தேதான் பெண்கள் அனைத்துத் துறைகளிலும் முன்னோடி யாக நல்ல நிலையில் உள்ளனர். நல்லபெண் என்றால், ஒழுக்கத்திலும், உழைப்பிலும் நன்னிலையிலிருப்பவள் என்பதையே குறிக்கும். வள்ளுவர் வாய்மொழியில் மனைத்தக்க மாண்புடையாளே நல்லபெண்.

**நல்லம்**[1] *nallam,* பெ. (n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒருசிற்றூர் a village in Tañjāvūr dt. "*நல்லான் நமையாள்வான் நல்ல நகரானே*" (ஞான சம்பந்தர். 85:1) இன்று கோனேரி ராசபுரம் என்று அழைக்கப்படுகிறது.

**நல்லம்**[2] *nallam,* பெ. (n.) 1. கறுப்பு (சூடா.); blackness, darkness. 2. கரி (பிங்); charcoal

தெ. நல்ல.

**நல்லம்**[3] *nallam,* பெ. (n.) இஞ்சி (பிங்.); ginger.

தெ. அல்லமு.

*[நல் → நல்லம்.]*

**நல்லம்மாள்** *nallammāḷ,* பெ. (n.) தாயுடன் பிறந்தாள் (யாழ்ப்.); maternal aunt.

*[நல் + அம்மாள்.]*

**நல்லம்மான்** *nallammāṉ,* பெ. (n.) தாயுடன் பிறந்தான்; maternal uncle.

*[நல் + அம்மான்.]*

**நல்லம்மான்பச்சரிசி** *nallammāṉ-paccariši,* பெ. (n.). *அம்மான் பச்சரிசி* பார்க்க; see *ammāṉ-paccariši.*

**நல்லமஞ்சள்** *nalla-mañjaḷ,* பெ. (n.) கத்தூரி மஞ்சள்; musk turmeric.

*[நல்ல + மஞ்சள்.]*

**நல்லமணி** *nalla-maṇi,* பெ. (n) பட்டாணி; peas.

*[நல்ல + மணி.]*

**நல்லமந்தனம்** *nalla-mandaṉam,* பெ. (n.) மரவகை; medium leathery polished. elliptic-obtuse leaved honey-thorn

**நல்லமரணம்** *nalla-maraṇam,* பெ. (n.) *நல்லசாவு* பார்க்க; see *nalla-šāvu.*

*[நல்ல + skt மரணம்.]*

வயதுஆன நிலையிலும், பிறருக்குத் தொல்லை தராத இயற்கையான சாவு.

**நல்லமழை** *nalla-maḻai,* பெ. (n.) அதிகமழை; heavy rain. '*சென்னையில் நல்லமழை பெய்து ஐந்து ஆண்டுகள் ஆகிவிட்டன*' (இ.வ.).

*[நல்ல + மழை.]*

அளவிற்கு அதிகமான மழை. கேடு விளைவிக்காத மழையும் தேவையான நேரத்தில், மிகுதியாகப் பெய்யும் மழையும், நல்ல மழை என்று, அழைக்கப்பெறும். இங்கு நல்ல என்னும் அடை, மிகுதிப்பொருள், குறித்தது.

**நல்லமனம்** *nalla-maṉam,* பெ. (n.) 1. உதவு முள்ளம்; benevolent mind. 2. தூய சிந்தை; pure heart.

*[நல்ல + மனம்.]*

பிறருக்குத் தீதுநினைக்காத மனம்.

**நல்லமாதிரி** *nalla-mādiri,* பெ. (n.) 1. நல்லொழுக்கம்; good. examplary conduct; good character 2. நல்ல வகை; good sort.

*[நல்ல +* skt *மாதிரி.]*

**நல்லமாதுளை** *nalla-māduḷai,* பெ. (n.) இனிப்புமாதுளை; sweet pomegranate. (சா.அக.).

*[நல்ல + மாதுளை.]*

குடலிலுள்ள நச்சுயிரிகளைக்கொன்று, உடலுக்கு நலம் பயக்கும் மாதுளை.

**நல்லமாரி** *nalla-māri,* பெ. (n) மாரிக்காலம் (யாழ்ப்); rainy season.

*[நல்ல + மாரி.]*

*அடைமழை பெய்யும் கார்காலம்.*

**நல்லமிளகு** *nalla-miḷagu,* பெ. (n) கருப்பான கெட்டி மிளகு; black solid pepper; piper nigram.

*[நல்ல + மிளகு.]*

**நல்லமுத்து** *nalla-muttu,* பெ. (n.) சிப்பி யிலிருந்து எடுக்கும் நல்லமுத்து; oyster pearls.

மறுவ. நன்முத்து.

*[நல்ல + முத்து.]*

முத்து என்று சிறப்பித் துரைக்கப்படுவது தொண்மணிகளுள் ஒன்றான முத்துமணியே.

சிப்பியினின்று எடுக்கப்படும் முத்தே யன்றியும், மூங்கிலிருந்து பிறக்கும் வேய்முத்தும், யானைமருப்பிற் பிறக்கும் வேழமுத்தும், நெல்மணியில் தோன்றும் சாலிமுத்தும், பிறவுமாக முத்து பல வகைப்படும். கிளிஞ்சலில் தோன்றும் முத்தே இயற்கையான நல்ல முத்து ஆகும்.

**நல்லமுருங்கை** *nalla-muruṅgai,* பெ. (n) முருங்கை; sweet drum stick tree

*[நல்ல + முருங்கை.]*

**நல்லமெழுகு** *nalla-meḻugu,* பெ. (n.) தேன் மெழுகு; pure yellow wax.

*[நல்ல + மெழுகு.]*

**நல்லரிசி** *nallariši,* பெ. (n) 1. பச்சரிசி; raw rice. 2. கருப்புப் புட்டரிசி; black singapore rice

*[நல் + அரிசி.]*

**நல்லரிவஞ்சம்** *nallari-vañjam,* பெ. (n.) விளைநிலம் ஆறுனுள் ஒன்று (திவா.); a blissful region, where the fruits of good karma are enjoyed, one of six

*[நல்லரி + வஞ்சம்.]*

**நல்லவர்** *nallavar,* பெ. (n.) 1. நல்லோர்; the good the holy 2. நண்பர்; friends. 3. அறிஞர் (திவா.); the learned 4. பெண்கள்; women *"நல்லவர் நுடக்கம் போனயம் அந்த கொம்பொடும்"* (கலித்.32). 5. நாகப்பாம்பு (இ.வ.); cobra.

**நல்லவர்ணக்காரி** *nalla-varṇakkāri,* பெ. (n.) சவுரிக்காய்; palmated gourd. (சா.அக.)

*[நல்ல + skt. வர்ணகாரி.]*

**நல்லவளம்** *nalla-vaḷam,* பெ. (n.). **1.** தக்க சமயம், உரியபொழுது (வின்.); good opportunity, favourable time. **2.** மிகுந்த செழிப்பு; extreme fertility.

*[நல்ல + வளம்.]*

**நல்லவாகை** *nalla-vāgai,* பெ. (n.) வெள்வாகை; white siris (L.)

**நல்லவாந்தம்** *nalla-vāndam,* பெ. (n) வெண் காரவள்ளி; pungent white onion.

*[நல்ல + வாந்தம்.]*

**நல்லவாய்** *nalla-vāy,* பெ. (n.) இனிய மொழிகள்; sweet or pleasant words. முதலில் அவன் நல்ல வாயைக் காட்டினான் (இ.வ.).

*[நல்ல + வாய் = நல்லதையே பேசும்வாய்.]*

**நல்லவார்த்தை** *nalla-vārttai,* பெ. (n) **1.** இன்சொல் (வின்.); sweet, kind words. **2.** உவப்புச்சொல் (வின்.); word of approbation or recommendation. **3.** வாழ்த்து மொழி; blessing, benediction. மணமக்களை நல்லவார்த்தை சொல்லி வாழ்த்துதல் மரபாகும் (உ.வ.). **4.** கொஞ்சு மொழி; word of entreaty '*அவனை நல்லவார்த்தை சொல்லிக் கேட்டுக் கொண்டேன்*' (இ.வ.). **5.** அமைதிப்பேச்சு; words of pacification. "*நல்லவார்த்தைக் கிணங்காமற் சினம் கொண்டு போய் விட்டான்.*" (இக்.வ.).

*[நல்ல + skt. வார்த்தை.]*

**நல்லவிளக்கு** *nalla-viḷakku,* பெ. (n) கடலை எண்ணெய் அல்லது நல்லெண்ணெய் ஊற்றித் திரிபோட்டு சாமிக்கு முன் ஏற்றி வைக்கும் விளக்கு; a lamp with a wick burnt with certain kind of oil, placed in front of a deity (at home). மார்கழி மாதத்தில் விடியற்காலையில் நல்லவிளக்கை ஏற்றி வைப்பார்கள். (இ.வ.)

**மறுவ.** திருவிளக்கு. மங்கலவிளக்கு.

*[நல்ல + விளக்கு.]*

இங்கு நல்ல விளக்கு என்னும் இச் சொல், வீடுகளில் ஏற்றி இறைவனை வழிபடும் நெய்விளக்கான மங்கல விளக்கையே குறித்தது எனலாம். பல்வகை விளக்குகள் மக்களிடையே புழக்கத்தில் வந்துவிட்டன. தமிழ்மக்கள் விளக்கைக் காரிருள் அகற்றும் கருவியாக மட்டும் பயன்படுத்தவில்லை. வழிபாட்டுற் குரியதும், நல்ல அருளொளியை வாரி வழங்கும் நல்விளக்காகவும், கருதி வழிபட்டனர். தெய்வத்தன்மை பொருந்தியதும்; இறையருளை வாரி வழங்குவதும். எண்ணங்களை ஒருமைப் படுத்துவதுமான திருவிளக்கே நல்ல விளக்கு.

**நல்லவுப்பு** *nalla-v-uppu,* பெ. (n.) சவுட்டுப்பு; impure carbonate of soda.

*[நல்ல + உப்பு.]*

உவர்ப்புச்சுவை மிகுதியாக உள்ள உப்பு; இங்கு நல்ல என்னும் சொல் "மிகுதி" என்னும் பொருளில், வழங்குகிறது. உப்பின் இயற்கைச் சுவையான உவர்ப்புத்தன்மையை உணர்த்துதற் பொருட்டு, "நல்லவுப்பு" என வழங்கலாயிற்று.

**நல்லவெயில்** *nalla-veyil,* பெ. (n.) கொடிய வெயில்; the scorching sun.

[நல்ல + வெயில்.]

நன்குசுட்டெரிக்கும் வெயில்; நல்லவெயில் என்று கூறுங்கால் கொடுங்கதிர்களுடன் மக்களை வாட்டும் கடுமையான வெயில் என்று பொருள். இங்கு நல்ல என்பது கடுமைப்பொருள் தந்தது.

ஒ.நோ. நல்லபாம்பு.

**நல்லவெல்லம்** *nalla-vellam,* பெ. (n.) 1. கரும்பு வெல்லம்; (பதார்த்த. 184). cane sugar. as a superior sort. நல்லவெல்லத்தில் பொங்கிய சருக்கரைப்பொங்கல் சுவையாக இருக்கும் (உ.வ.). 2. கருப்புக்கட்டி (வின்.); jaggery. நல்லவெல்லத்தில் செய்த கரும்புக்கட்டி கெடாமல் இருக்கும். (சா.அக.).

[நல்ல + வெல்லம்.]

கரும்புவெல்லம் என்னுஞ்சொல் ஈங்கு, கரும்பின் இயல்புத்தன்மை அல்லது உண்மைநிலையை உணர்த்துதற் பொருட்டு, "நல்லவெல்லம் என்று, மக்களிடையே" வழக்கூன்றியதெனலாம்– கரும்பின் ஆக்கங்களுள் ஒன்றே வெல்லம். உருண்டைவெல்லம், அச்சுவெல்லம் எதுவாயினும், கருப்பஞ் சாற்றின் கட்டியே ஆகும். பனைவளம் மிகுந்த தென்பாண்டிப்பகுதியில் பனைவெல்லத்தை வெல்லம் என்று பொதுவழக்கிலும், கருப்பு + கட்டி= கருப்பட்டி என்று, சிறப்பு வழக்கிலும், இன்றும், வழங்கி வருகின்றனர். கரும்புவெல்லம் அதன் உண்மை நிலையை உரைக்கு முகத்தான், நல்லவெல்லம் என்றழைக் கப்படுகிறது.

**நல்லவெழுத்து** *nalla-v-eluttu,* பெ. (n.) 1. அழகிய கையெழுத்து; fair, good handwriting. 2. அவரவரின் ஊழ்பற்றிய குறிப்பை. அவரவர் தலையில் எழுதி வைத்திருப்பதாக நம்மப்படும் எழுத்து; good destiny or fate இறைவன் நம்தலையில் எழுதிய நல்லவெழுத்தை அழிப்பவர் யார்? (இ.வ.).

[நல்ல + எழுத்து.]

கல்வி பயிலுஞ்சிறார் கையெழுத்து நல்லெழுத்தாக அமைதற்பொருட்டு, இருகோட்டுக்குறிப்பேட்டில் ஆங்கிலத் தையும்,நாற்கோட்டுக் குறிப்பேட்டில்தமி ழெழுத்தையும் எழுதச்செய்யும் பழக்கம், இன்றும் தொடக்கப்பள்ளிகளில் காணப் படுகிறது.

மூளையில் மடிப்புகள் மிகுதியாகக் காணப்படின், ஆய்வுத்திறன் அல்லது நினைவாற்றல் மிகுதியென்று, உளவியல் மருத்துவர் கணிக்கின்றனர். இம் மடிப்பினையே, பொதுவாக மாந்தர் நல்லெழுத்தென்று அழைத்தனர்.

**நல்லவேதைக்கனி** *nalla-vēdai-k-kani,* பெ. (n.) நாய்வேளை; dog mustard

[நல்ல + வேதைக்கனி.]

**நல்லவேல்** *nalla-vēl,* பெ. (n) 1. சீமைவேல்; jerusalem thorn 2. பச்சைவேல். (சா.அக.); green babool

[நல்ல + வேல்.]

**நல்லவேளை[1]** *nalla-vēḷai,* பெ. (n.) 1. நல்லூழிக் காலம்; fortunate hour, lucky time; 2. நெருக்கடியான நேரம்; critical moment

[நல்ல + வேளை.]

நல்லவை நடக்கும் காலம். தீயவை ஒழியும் காலம். மனம், வாக்கு, செயல் அனைத்து நிலைகளிலும், நன்மை பெருகும் வேளை நல்லவேளை எனலாம்.

**நல்லவேளை[2]** *nall-vēḷai,* பெ. (n.) தைவேளை; five leaved celome.

இம் மூலி மாந்தம், கணமாந்தம், கோழை, மிகுசுரம், வளித்தொல்லை (வாயு) போன்றவற்றிற்கு உகந்தது என்று, சா.அக. கூறும்.

**நல்லவை[1]** *nallavai,* பெ. (n.) நற்செயல்கள்; good things or deeds. *"நல்லவை செய்யினியல் பாகும்"* (நாலடி, 144.). *"அல்லவை தேய அறம் பெருகும் நல்லவை நாடி இனிய சொலின்"* (குறள்,96).

*[நல் → நல்லவை.]*

**நல்லவை[2]** *nallavai,* பெ. (n.) 1. அறிவு ஒழுக்கம் முதலியவற்றாலுயர்ந்தோர் அவை; learned assembly, society of the good and the virtuous. *"தீமொழி யெல்லா நல்லவை யுட்படக் கெட்டாங்கு"* (கலித். 144). "புல்லவையுள் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்லவையுள் நன்கு செலச் சொல்லுவார்" (குறள்,719). 2. நேர்மையாகப் பேசுவோர் அவை; (யாப்.வி.பக். 514). an assembly or panel of impartial judges.

*[நல் + அவை.]*

**நல்லழிசியார்** *nallaḻiśiyār,* பெ. (n.) சங்ககாலப் புலவர்; a poet of šaṅgam period.

*[நல் + அழிசி + ஆர் =* நல்லழிசியார்.*]*

இவர் பரிபாடலில் உள்ள 16 மற்றும் 17ஆம் பாடலை இயற்றியவராவார்.

பரிபாடல்–16 வையை

"கரையே, கைவண் தோன்றல் ஈகை
போன்மென
மைபடு சிலம்பிற் கறியொடுஞ்
சாந்தொடும்
நெய்குடை தயிரின் நுரையோடும்
பிறவொடும் எவ்வயினானு மீதுமீ
தழியும்;"

"துறையே, முத்துநேர்பு புணர்காழ்
மத்தக
நித்திலம்
5 பொலம்புனை யவிரிழை கலங்கலம்
புனல்மணி
வலஞ்சுழி யுந்திய திணைபுரி புதல்வர்
கயந்தலை முச்சிய முஞ்சமொடு தழீஇத்
தத்தந் துணையோ டொருங்குடன் ஆடுந்
தத்தரிக் கண்ணார் தலைத்தலைவருமே;"

"செறுவே, விடுமலர் சுமந்து பூநீர்
நிறைதலிற்
படுகண் இமிழ்கொளை பயின்றன
ராடுங்
களிநா ளரங்கின் அணிநலம்
புரையும்:"

"காவே, சுரும்பிமிர் தாதொடு
தலைத்தலை மிகூஉம்
நரந்த நறுமலர் நன்களிக் கும்மே
கரைபொழுகு தீம்புனற் கெதிர்விருந்
தயர்வபோல்;
கானலங் காவுங் கயமுந் துருத்தியுந்தேன்
தேனுண்டு பாடத் திசைதிசைப் பூநலம்
பூத்தன்று வையை வரவு;"

"சுருங்கையின் ஆயத்தார் சுற்று
மெறிந்து
குரும்பை முலைப்பட்ட பூநீர்
துடையாள்
பெருந்தகை மீளி வருவானைக்
கண்டே
இருந்துகிற் றானையி னொற்றிப்
பொருந்தலை
பூத்தனள் நீங்கெனப் பொய்யாற்றால்
தோழியர்
தோற்றமோ ரொத்த மலர்கமழ்
தண்சாந்தின்

நாற்றத்திற் போற்றி நகையொடும் போத்தந்து
இருங்கடற் கூங்கிவரும் யாறெனத் தங்கான்
மகிழக் களிப்பட்ட தேன்தேறல் மாற்றிக்
குருதி துடையாக் குறுகி மருவினியர்
பூத்தனள் நங்கை பொலிகென
நாணுதல் வாய்த்தன்றால் வையை வரவு;"

"மலையி னிழியருவி மல்கிணர்ச் சார்ச்சார்க்
கரைமரஞ் சேர்ந்து கவினி மடவார்
நனைசேர் கதுப்பினுள் தண்போது
மைந்தர் மலர்மார்பிற் சோர்ந்த மலரிதழ் தாஅய்
மீனாரம் பூத்த வியன்கங்கை நந்திய
வானம் பெயர்ந்த மருங்கொத்தல்
எஞ்ஞான்றும் தேனிமிர் வையைக் கியல்பு;"

"கள்ளே புனலே புலவியிம் மூன்றினும்
ஒள்ளொளி சேய்தா வொளிகிளருண் கட்கெண்டை
பல்வரி வண்டினம் வாய்சூழ் கவினொடும்
செல்நீர் வீவயின் தேன்சேரப் பன்னீர்
அடுத்தடுத் தாடுவார்ப் புல்லக் குழைந்து
வடுப்படு மான்மதச் சாந்தா ரகலத்தான்
எடுத்தவே யெக்கி நூக்குயர்பு தாக்கத்
தொடுத்ததேன் சோரும் வரைபோலுந் தோற்றம்
கொடித்தேரான் வையைக் கியல்பு;"

"வரையார்க்கும் புயல்கரை
திரையார்க்குமித் தீம்புனல்
கண்ணியர் தாரர் கமழ்நறுங் கோதையர்
பண்ணிய ஈகைப் பயன்கொள்வான் ஆடலால்
நாணா ளுறையும் நறுஞ்சாந்துங்
கோதையும் பூத்த புகையு மவியும்
புலராமை மறாஅற்க வான மலிதந்து
நீத்தம் வறாஅற்க வையை நினக்கு."

காதற்பரத்தையுடன் புனலாடிய தலைமகன் தோழியை வாயில் வேண்ட அவள் புனலாடியவாறு கூறி வாயின் மறுத்தது.

நல்லழிசியாரின் புலமைத்திறத்திற்கு, இவ் வையைப் பாடல் நற்சான்று படைக்கின்றது. வையையின் இயல்பாக நல்லழிசியார் வருணிக்கும் பாங்கு எண்ணி மகிழத்தக்கது.

**நல்லறம்** *nallaram*, பெ. (n) **1.** மேன்மையான கொடை; beneficence, charity *"பாங்கிய நல்லறம் பலவுஞ் செய்த பின்"* (மணிமே. 21:173). 2. சமயக்கொடை; religion charity *"தொன்மாண் பமைந்த புனை நல்லறம் துன்னி நின்ற."* (சீவக. 3). 3. நல்லொழுக்கம்; virtuous life, morality

**மறுவ.** அறக்கொடை.

*[நல் + அறம்.]*

சமையம் சார்ந்த நல்லெண்ணக்கொடை; நற்செயல்கள் தழைப்பதற்காக வழங்கப்பெறும், அறக்கொடை.

**நல்லறிவு** *nallarivu*, பெ. (n) **1.** மதிப்பீட்டுத் திறனுடன் கூடிய பொதுஅறிவு, நல்லபுத்தி; good sense *"நல்லறிவு நாளுந் தலைப்படுவர்"* (நாலடி, 139). 2. நல்ல அறிவுரை (வின்.); good instruction or counsel 3. ஒரு அறநூல் (யாழ்.அக.); an ethical treatise

*[நல் + அறிவு.]*

அழிவைக்காக்கும் திண்மையான செயலறிவு; பகைவரால் அழிக்கவியலாத அரண்போன்ற வலிமைமிக்க அறிவு. எஞ்ஞான்றும் தீமைபயக்காத அறிவு. இத்தகைய அறிவின் சிறப்பைப் பற்றி வள்ளுவர் *"சென்ற இடத்தில் செலவிடா தீதொரீஇ நன்றின்பால் உய்ப்ப தறிவு"* (குறள்,422.) என்று

மொழிகின்றார். மேலும், மெய்ப்பொருளை ஆராய்ந்து காணும் அறிவு பற்றிக் கூறுங்கால், *"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு"* (குறள்,423.) என்று கூறியுள்ளது, ஈங்கு நினைவு கூரத்தக்கது.

**நல்லன்காவூர்** *nallaṉ-kāvūr,* திருவள்ளூர் மாவட்ட ஊர்; a village in Thiruvaḷḷūr dt.

*[நல்லன் + காவூர்.]*

**நல்லா**[1] *nallā,* பெ. (n.) நல்லாக பார்க்க; see nallāga. நல்லாப்பேசினான். (உ.வ.).

*[நல் → நல்லா.]*

**நல்லா**[2] *nallā,* பெ. (n.) **1.** முற்காலத்திற் ஆநிரைகளின் மேல் விதிக்கப்பட்டிருந்த வரிவகை; an ancient tax on cows. *"நல்லாவும் நல்லெருதும்"* (S.I.I.ii. 521). **2.** காராம் (பசு)ஆ; a sacred cow with black and nipples.

*[நல் + ஆ.]*

ஆ= ஆநிரை.

**நல்லாக** *nallāga,* கு.வி.எ. (adv.) நன்றாக. well, excellently. "நல்லாகப் பற்றடைப்பில்" (கொண்டல். விடு. 85).

*[நல் + ஆக.]*

**நல்லாங்கு** *nallāṅgu,* பெ. (n.) நன்மை (வின்.); goodness.

*[நல் + ஆங்கு.]*

**நல்லாசனம்** *nallāšaṉam,* பெ. (n.) வயிற்றில் குடலைப் புரட்டிச் சுழற்றும் ஓக நிலையுள் ஒன்று (இ.வ.); a yogic feat in which the intestines are rolled togather and made to assume a required position

*[நல் + Skt. ஆசனம்.]*

**நல்லாட்டிக்கட்டி** *nallāṭṭi-k-kaṭṭi,* பெ. (n.) கருப்புக்காசுக்கட்டி; black catachu. (சா.அக.).

**நல்லாடு** *nallāḍu,* பெ. (n.) முற்காலத்தில் ஆடுகளின் மீது விதிக்கப்பட்ட வரி; an ancient tax on sheep

*[நல் + ஆடு.]*

நன்கு வளர்க்கப்பட்ட பொலிகடா. ஆடுகளின் இனப்பெருக்கத்திற்காக வளக்கப்படும், பொலிகடா ஆட்டின்மீது விதித்த வரி.

**நல்லாடை** *nallāḍai,* பெ. (n) சிறந்த துகில்; (திவா.); fine, superior cloth. *"கொல்புலித் தோல் நல்லாடை"* (திருவாச. 12:3).

*[நல் + ஆடை]*

**நல்லாத்தூர்** *nallā-t-tūr,* பெ. (n.) காஞ்சிபுர மாவட்டச் சிற்றூர்; a village in Kāñjipuram dt.

*[நல் + ஆற்றூர் → ஆத்தூர்.]*

**நல்லாதனார்** *nallādaṉār,* பெ. (n) கழகக்காலத்தைச் சார்ந்த அற (நீதி)நூற் புலவர்; an ancient Šaṅgam poet.

இவர் திரிகடுகம் என்ற நூலை இயற்றியவர். இது பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும்.

இவரது காலம் ஐந்தாம் நூற்றாண்டில் இறுதி என்பர்.

*"நல்விருந்து ஓம்பலின் நட்டாளாம் வைகலும்
இல்புறஞ் செய்தலின் ஈன்றதாய்–
தொல்குடியின்
மக்கள் பெறலின் மனைக்கிழத்தி இம்மூன்றும்
கற்புடையாள் பூண்ட கடன்".*

**நல்லாதிமண்** *nallādiman*, பெ. (n.) சவட்டுமண்; fuller's earth

*[நல் + ஆதி + மண்.]*

**நல்லாப்பிள்ளை** *nallā-p-pillai*, பெ. (n) மாபாரதக் கதையைத் தமிழில் செய்யுளாக இயற்றிய புலவர்; a poet who composed Tamil lyrics of magā-bāradam

இவரது நூல் நல்லாப்பிள்ளை பாரதம் என்று வழங்கப்பட்டது.

காலம் 18ஆம் நூற்றாண்டு. இந் நூல் பதினான்காயிரம் பாடல்களால் ஆனதென்பர்.

இவர் பெரும்பற்றப் புலியூரில் பிறந்தவர் என்பர்.

**நல்லாப்பு** *nallāppu*, பெ. (n) நன்மை (யாழ்ப்); good, opp of pollāppu

*[நல் → நல்லாப்பு.]*

இச்சொல், நன்மைதருஞ் செயலைக் குறித்து யாழ்ப்பாணத்தில் இன்று வழங்குகிறது. பொல்லாப்பு என்ற சொல்லிற்கு எதிர்மறையானது.

**நல்லாமூர்** *nallāmūr*, பெ. (n) காஞ்சிபுர மாவட்டச் சிற்றூர்; a village in Kañjipuram dt

*[நல் + ஆமூர்.]*

**நல்லாய்ச்சி** *nallāycci*, பெ. (n.) சிறியதாய் முறையாள் (யாழ்ப்.); maternal aunt or wife of a paternal uncle

*[நல் + ஆய்ச்சி.]*

**நல்லார்** *nallār*, பெ. (n) 1. நற்குணமுடையோர்; the good *"பொல்லா ரிணை மலர் நல்லார் புனைவரே"* (சி.போ.காப்பு). 2. பெரியார்; the great person *"நல்லார் தொடர்கை விடல்"* (குறள், 450). 3. கற்றவர்; the learned person *"நல்லார்கட் பட்ட வறுமையின்"* (குறள். 408). 4. மகளிர்; women *"மைப்படு மழைக்க ணல்லார் வாய்க்கொண்ட வமுதம்"* (சீவக. 2881).

*[நல் + ஆர்]*

இயல்பாக மேன்மையான குணங்கள் கைவரப்பெற்ற பெரியார். யாவருக்கும் தீமை செய்யாத உயர் குணம் வாய்க்கப் பெற்றவர். கற்றுத்துறை போயவர். நற்குணத்திலும், நல்லறிவிலும் சால்புடன் விளங்கும் பெரியோரே, நல்லார் ஆவர்.

**நல்லாரை** *nallārai* பெ. (n) ஆரைக்கீரை; edible auray greens (சா.அக.).

*[நல் + ஆரை.]*



**நல்லாவூர்க்கிழார்** *nallāvūr-k-kiḻār,* பெ. (n) கழகக்காலப் புலவர்; a poet of Šaṅgam period.

*[நல் + ஆவூர் + கிழார். ]*

அகநானூற்றில்86ம், நற்றிணையில் 154ம், இவரியற்றியவை.

"உழுந்துதலைப் பெய்த கொழுங்களி மிதவை
பெருஞ்சோற் றமலை நிற்ப நிரைகால்
தண்பெரும் பந்தர்த் தருமணல் ஞெமிரி
மனைவிளக் குறுத்து மாலை தொடரிக்
கனையிரு ளகன்ற கவின்பெறு காலைக்
கோள்கால் நீங்கிய கொடுவெண் திங்கட்
கேடில் விழுப்புகழ் நாள்தலை வந்தென
உச்சிக் குடத்தர் புத்தகல் மண்டையர்
பொதுசெய் கம்பலை முதுசெம் பெண்டிர்
முன்னவும் பின்னவு முறைமுறை தரத்தரப்
புதல்வற் பயந்த திதலையவ் வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடிக்
கற்பின் வழாஅ நற்பல வுதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை யாகென
நீரொடு சொரிந்த ஈரித ழலரி
பல்லிருங் கதுப்பின் நெல்லொடு தயங்க
வதுவை நன்மணங் கழிந்த பின்றைக்
கல்லென் கம்மையர் ஞெரேரெனப் புகுதந்து
பேரிற் கிழத்தி யாகெனத் தமர்தர
ஓரிற் கூடிய உடன்புணர் கங்குற்
கொடும்புறம் வளைஇக் கோடிக் கலிங்கத்து
ஒடுங்கினள் கிடந்த ஓர்புறந் தழீஇ
முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப
அஞ்சின ளுயிர்த்த காலை யாழநின்
நெஞ்சம் படர்ந்த தெஞ்சா துரையென
இன்னகை யிருக்கைப் பின்யான்
வினவலிற்
செஞ்சூட் டொண்குழை வண்காது
துயல்வர
அகமலி யுவகைய ளாகி முகன் இகுத்து
ஒய்யென இறைஞ்சி யோளே மாவின்
மடங்கொள் மதைஇய நோக்கின்
ஒடுங்கீ ரோதி மாஅ யோளே." (அகநா.86.).

"கான முங் கம்மென் றன்றே வானமும்
வரைகிழிப் பன்ன மையிருள் பரப்பிப்
பல்குரல் எழிலி பாடோ வாதே
..............................................................
..............................................................
வாரா ராயினோ நன்றே சாரல்
விலங்குமலை யாரா றுள்ளுதொறும்
நிலம்பரந் தொழுகுமென் நிறையில் நெஞ்சே".

(நற்றிணை. 154.)

**நல்லாள்**[1] *nallāḷ,* பெ. (n.) **1.** குணத்திற் சிறந்த பெண்; woman of noble character. *"நாணென்னு நல்லாள் புறங் கொடுக்கும்"* (குறள். 924). **2.** கற்புள்ள பெண்; chaste woman

*[நல் → ஆள்.]*

**நல்லாள்**[2] *nallāḷ,* பெ. (n.) தக்கவன்–ள்; good person. *"நல்லாளிலாத குடி"* (குறள், 1030).

*[நல் → நல்லாள்.]*

**நல்லாற்றூர்** *nallāṟṟūr,* பெ. (n.) திருநாவுக்கரசரின் அடைவுத்திருத்தாண்டகம் (பதி. 295–4)–இல், சுட்டப்படும் ஊர்ப் பெயராகும்; a canonized place by Tirunāukkarasar *'நரையூரும் நல்லூரும் நல்லாற்றூரும்'*

*[நல் + ஆறு +ஊர்.]*

ஆற்றூர் என்பதற்கு அடையாக, நல்ல என்பது அமைந்து, நல்லாற்றூர் என ஆயிற்று.

**நல்லாறன்மொழிவரி** *nallāṟaṉ-moḻivari.* பெ. (n.) இறந்துபட்ட ஒரு தமிழிலக்கணநூல் (யாப். வி. பக். 537); a grammatical treatise is Tamiḻ, not extant.

**நல்லாறனார்** *nallāṟaṉār,* பெ. (n.) யாப்பருங் கலக்காரிகை உரையில் கூறப்பட்ட தொல்லாசிரியர்களுள் ஒருவர்; one of the ancient author mentioned in yāpparuṅgalak kārigai.

*[நல்லாறன் + ஆர்.]*

"ஆர்" = பெருமைப் பெயரீறு.

**நல்லாறுடையான்** *nallāṟuḍaiyāṉ,* பெ. (n.) நல்வழிச் செல்வோன்; (வின்.); a man of good morals, one whose conduct is unimpeachable.

*[நல் + ஆறு + உடையான்.]*

**நல்லான்** *nallāṉ,* பெ. (n.) ஒருவகைக் குதிரை இனம் (அசுவசா. 152); a breed of horse.

*[நல் → நல்லான்.]*

**நல்லி**[1] *nalli,* பெ. (n.) பெண்; woman as fair.

*[நல் + இ.]*

'இ'கரம் பெண்பால் ஈறு.

**நல்லி**[2] *nalli,* பெ. (n.) 1. விலங்குக் காலின் எலும்பு; thigh-bone of a quadruped, femur. 2. முதுகெலும்பு; the back bone. "*என்னிடம் நீ வாலாட்டினால் உன் நல்லியெலும்பை உடைத்து விடுவேன்*" (பே.வ.).

த. நல்லி → U *nalli.*

*[நுல் → நல் → நல்லி.]*

நல்லி உள்துளையுள்ளதும், நல்லமுத்த முள்ளதுமான மூளையெலும்பு.

த. நல்லி → இந்தி. நல்லீ.

**நல்லிசம்** *nalliśam,* பெ. (n.) 1. கொள்ளுக்காய் வேளை; கொழுஞ்சி; zanzibar indigo. (சா.அக.)

*[நல் + இசம்.]*

**நல்லிசைவஞ்சி** *nalliśaivañji,* பெ. (n.) பகைவரது வேற்றுப்புலத்தை அழித்த, வீரனது வெற்றியை மிகுத்துக் கூறும் புறத்துறை (பு.வெ. 3, 24); theme celebrating the victory of a warrior who has devastated his enemy's dominios. 2. பகைப்புலம் அழி வெய்தியதற்கு இரங்கலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 3, 25); theme of commiseration over the ruin of an enemy's country.

*[நல்லிசை + வஞ்சி.]*

**நல்லிடதம்** *nalliḍadam,* பெ. (n.) மாழைக்காடி (உலோகத்திராவகம்); mineral acid.

*[நல் + இடதம்.]*

**நல்லிடாமாசி** *nalliḍāmāśi,* பெ. (n.) பத்மினி இனப்பெண்; one of the four classes of women devided according to lust.

*[நல் + இடமாசி.]*

**நல்லிடையாள்** *nalliḍaiyāḷ,* பெ. (n.) உடும்பு; guana. (சா.அக.).

*[நல் + இடையான்.]*



**நல்லிணக்கம்** *nallinakkam,* பெ. (n.) 1. இயைந்து போகுந் தன்மை; concordance. 'அண்டை நாட்டோடு நாம் மேற்கொள்ளும் நல்லிணக்கமே, நாட்டுவளர்ச்சிக்கு உகந்தது' (உ.வ.). 2. பொறுத்துக் கொள்ளுகை; tolerance. '*மதநல்லிணக்கமே இன்றைய இந்தியாவிற்கு இன்றியமையாதது.*' (இக்.வ.).

*[நல் + இணக்கம்.]*

**நல்லியக்கோடன்** *nalliya-k-kōdan,* பெ. (n.) பழங்கால மன்னர்; an ancient king of Šangam period.

இவன் எயிற்பட்டினம், வேலூர், ஆமூர் ஆகிய பகுதிகளைச் சார்ந்த ஓய்மா நாட்டை ஆண்டவன். இவனைப் பாட்டுடைத் தலைவனாக வைத்து, நல்லூர் நத்தத்தனார் சிறுபாணாற்றுப்படை இயற்றியுள்ளார்.

**நல்லிரயத்தக்குறைவு** *nalliyaratta-k-kuraivu,* பெ. (n.) தூயவரத்தம் உடலில் குறைந்து காணப்படுகை; deficiency of arterial blood in the body

*[நல்லியரத்தம் + குறைவு.]*

**நல்லிரவுநாயகி** *nalliravu-nāyagi,* பெ. (n.) சிறிய மரம்; a small tree.

இதிலிருந்து மணநெய்மம் எடுக்கப்படுகிறது. (மூலி. களஞ்.).

**நல்லிருக்கை** *nallirukkai,* பெ. (n.) நல்லிருப்பு பார்க்க; see naliruppu

**நல்லிருப்பு**[1] *nalliruppu,* பெ. (n.) 1. வேலைக ளொன்றுஞ் செய்யாமற் சும்மாவிருக்கு மிருப்பு; (நாஞ்); condition of being free from any household work. 2. நலவாழ்வு (இ.வ.); a life of case and comfort

*[நல் + இருப்பு.]*

**நல்லிருப்பு**[2] *nalliruppu,* பெ. (n.) சமமாயிருத்தல், நலமாயிருத்தல்; healthy state.

*[நல் + இருப்பு.]*

**நல்லிளம்படியார்** *nallilampadiyar,* பெ. (n.) அழகிய இளமாதர்; beautiful young women "*நாகர் நல்லிளம்படியர் போல*" (சீவக. 1098).

*[நல் + இளம்படியர்.]*

பேரழகு மிளிரும்படி கட்டுடல் வாய்க்கப் பெற்ற இளமாதர்.

**நல்லிறையனார்** *nalliraiyanār,* பெ. (n.) சங்ககாலப் புலவர்; a poet of Šangam period.

"*ஆர்.*" *மதிப்புப் பெயரீறு.*

புறநானூற்றின் 393ஆம் பாடல் இவருடையது.
"பதிமுதற் பழகாப் பழங்கண் வாழ்க்கைக்
குறுநெடுந் துணையொடு கூமை வீதலிற்
குடிமுறை பாடி யொய்யென வருந்தி
அடல்நசை மறந்தவெங் குழிசி மலர்க்குங்
கடனறி யாளர் பிறநாட் டின்மையின்

வள்ளன் மையினெம் வரைவோர் யாரென
உள்ளிய உள்ளமொ டுலை நசை
துணையா...
கவக மெல்லா மொருபாற் பட்டென
மலர்தா ரண்ணல்நின் நல்லிசை யுள்ளி
ஈர்ங்கை மறந்தவெ னிரும்பே ரொக்கல்
கூர்ந்த எவ்வம் விடக் கொழுநிணங் கிழப்பக்
கோடைப் பருத்தி வீடுநிறை பெய்த
மூடைப் பண்ட மிடைநிறைந் தன்ன
வெண்ணிண மூரி யருள நாளுற
ஈன்ற வரவி னாவுருக் கடுக்குமென்
தொன்றுபடு சிதாஅர் துவர நீக்கிப்
போதுவிரி பகன்றைப் புதுமல ரன்ன
அகன்றுமடி கலிங்க முடீஇச் செல்வமுங்
கேடின்று நல்குமதி பெரும மாசில்
மதிபுரை மாக்கிணை தெளிர்ப்ப வொற்றி
ஆடுமக எல்கு லொப்ப வாடிக்
கோடை யாயினுங் கோடி....
காவிரி புரக்கும் நன்னாட்டுப் பொருந
வாய்வாள் வளவன் வாழ்கெனப்
பீடுகெழுய் நோன்றாள் பாடுகம் பலவே."

**நல்லினம்** *nallinam,* பெ. (n.) 1. நல்லோர் கூட்டம்; good persons or society "*நல்லினஞ் சேர்தல்*" (நாலடி.). 2. ஆநிரை; herd of cows, opp to pullinam. "*குடஞ்சுட்டு நல்லினத்தாய ரெமர்*" (கலித். 113).

*[நல் + இனம் → நல்லினம்.]*

**நல்லீரல்**[1] *nallīral,* பெ. (n.) ஆட்டு ஈரல்; the liver of sheep.

*[நல் + ஈரல்.]*

**நல்லீரல்**[2] *nallīral,* பெ. (n.) 1. கல்லீரல் (வின்.); the liver 2. மண்ணீரல்; spleen.

*[நல் + ஈரல்.]*



**நல்லுப்பு** *nalluppu,* பெ. (n.) 1.கல்லுப்பு; stone salt; sea-salt. 2. நல்லூசரம் பார்க்க; see nallūšaram.

*[நல் + உப்பு.]*

**நல்லுயிர்** *nalluyir,* பெ. (n.) கணவன்; husband as wife's soul "*நல்லுயிர் நீங்களும்*" (சீவக. 332.).

*[நல் + உயிர்.]*

மனைவிக்கு உயிர் போன்ற தன்மையன்.

**நல்லுருத்திரன்** *nalluruttiran,* பெ. (n ) சங்ககாலப் புலவர்; a poet of Šangam period.

*[நல் + உருத்திரன்.]*

இவர் சோழ மன்னன் ஆவார்.

இவர் கலித்தொகையில் உள்ள முல்லைத் திணைப் பாடல்களைப் பாடியுள்ளார்.

*"இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல*
*அகலல்குல் தோள்கண் எனமூ வழிப்பெருகி*
*நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக் கவலையிற்*
*காமனும் படைவிடு வனப்பினோ டகலாங்கண்*
*அளைமாறி அலமந்து பெயருங்கால்*
*நகைவல்லேன் யானென்றென் உயிரோடு*

*படைதொட்ட இகலாட்டி நின்னை எவன் பிழைத்தேன். எல்லாயான்".* (கலித்.108).

**நல்லுவகை** *nalluvagai* பெ. (n.) *நல்ல மந்தணம்* பார்க்க; see *nalla-mandaṉam* 2. முட்டைச் செடி வகை; elliptic obtuse leaved honey thorn

**நல்லுவை** *nalluvai,* பெ. (n) *நல்லுவகை* பார்க்க; see *nalluvagai*

*[நல் + உவகை → உவை.]*

**நல்லுறவு** *nalluṟavu,* பெ. (n.) நெருங்கிய உறவு; near relation beyond the first degree

*[நல் + உறவு]*

**நல்லூசரம்** *nallūšaram,* பெ. (n) வழலையின் பெயர்; efflorescence salt on the soil of fuller's earth.

**நல்லூண்** *nallūṇ,* பெ. (n) 1. நலம் பயக்கும் உணவு; good and healthy food 2. உடலுக்கு எஞ்ஞான்றும் தீமை செய்யாத உணவு; harmless food 3. தெய்வ நலம் கெழுமியதும், இறைத்தன்மை வாய்ந்ததுமான அருளுணவு; devine and merciful food. "*வழங்கு நல்லூண் உண்ணும்போதும்*" (பாம்பனார் – சண்முகக்கவசம்).

*[நல் + உண் → ஊண் → நல்லூண். நல் = பெயரடை.]*

உடலுக்கு ஒருபோதும் தீமை செய்யாது, எஞ்ஞான்றும் அனைவருக்கும் நலம் நல்கும் ஊணே, நல்லூண் ஆகும்

"இழந்து போகாத வாழ்வை ஈயும் முத்தையனார் கைவேல் வழங்கு நல்லூண் உண்ணும்போதும், மால்விளையாட்டின் போதும்" *[பாம்பனார். சண்முகக் கவசம்.]*

முத்தையனார், அனைவருக்கும் அருளினை வாரி வழங்கும் தெய்வம்: தீதுபுரியாத கந்தசாமித் தெய்வம். நல்லார்க்கும், பொல்லார்க்கும் நலமளிக்குந் தெய்வம்; வல்லார்க்கும் மாட்டார்க்கும் வரமளிக்குந் தெய்வம். எல்லோருக்கும் இழந்து போகாத வாழ்வினை வழங்குந் தெய்வம்.

உலகத்தார் உய்வு பெறுதற்பொருட்டு, நாம் அன்றாடம் உண்ணும் ஊணை, நல்லூணாக மாற்றுந் தன்மையது முத்தையனார் கைவேல். எந் நிலையிலும், எப்போதும் நன்மையே நல்கும் ஊணே நல்லூண். இம்மையில் அனைவருக்கும் நலமளிக்கும் நல்லூணை வாரி வழங்கும் வள்ளன்மை வாய்ந்தது, முழுதற் கடவுளான முத்தையனார் கைவேல் ஆகும்.

அறிவியல் ஆற்றலை முழுமையாகப் பயன் படுத்தும், இன்றைய மருத்துவர், முழுமைச்சத்து நிறைந்த நல்லூண் பற்றிப் பின்வருமாறு பகுப்பர்.

1. சருக்கரை நோயாளிகட்கு இனிப்பு, மாவுச்சத்துக் குறைந்த ஊணே நல்லூண்.

2. கொழுப்புச்சத்து மிகுதியாயும், நெஞ்சாங்குலை நோயால் அல்லலுறுபவர்களுக்கு தீமை பயக்காத நல்லெண்ணெயுடன் கூடிய நார்ச்சத்துணவே நல்லூண்.

3. குருதியழுத்தம் மிக்கவருக்கு உப்புச்சத்துக்குறைந்த உணவே, நல்லூண்

ஆனால், பாம்பனார் பகரும் நல்லூண், யாதெனின், மன்பதை மாந்தருக்கு எஞ்ஞான்றும் நலமே நல்குவது. அருள்நலஞ் செறிந்தது; அனைவருக்கும் இழந்து போகாத வாழ்வை வாரிவழங்கும் வள்ளன்மை வாய்ந்ததென்றறிக.

**நல்லூர்**[1] *nallūr,* பெ. (n) தஞ்சை மாவட்டத்திலுள்ள ஓர் சிற்றூர்; a village in

Tanjāvūr dt., "*நாறும் மலர்ப் பொய்கை நல்லூர்*" (ஞானசம்பந்தர். 86: 2).

*[நல் + ஊர்.]*

சிறந்த ஊர் என்ற நிலையில் நல்லூர் எனப் பெயர் பெற்றது.

பொன்னியாற்றின் தென்கரையில் வளம் கொழிக்கும் செழிப்பான நன்செய் நிலப்பகுதியில் இவ்வூர் அமைந்துள்ளதால், நல்லூர் எனப்பெயர் பெற்றது. ஈங்கு "நல்" என்னும் பெயரடை வளத்தின் மிகுதியைச் சுட்டி நின்றது.

**நல்லூர்²** *nallūr,* பெ. (n.) காஞ்சிபுர மாவட்டத்திலுள்ள ஓர் சிற்றூர்; a village in kāñchipuram dt.

நல்லூர் என்கிற ஊர், பல இடங்களில் உள்ளது. திருவள்ளூர், செங்கல்பட்டு போன்ற இடங்களில் அமைந்துள்ளது.

**நல்லூர்ச்சிறுமேதாவியார்** *nallūr-c-ciṟu-mēdāviyār,* பெ. (n.) சங்கப்புலவர்; an eminent Šaṅgam poet

இவர், நன்பலூர் சிறுமேதாவியார் என்றும் குறிக்கப்படுகிறார்.

அகநானூற்றில் 94-ம் நற்றிணையில் 282-ம் திருவள்ளுவமாலையில் 20-ம் இவரியற்றியன.

"*தோடமை செறிப்பின் இலங்குவளை ஞெகிழக்*
*கோடேந் தல்கு லவ்வரி வாட*
*நன்னுதற் பாய படர்மலி யருநோய்*
*காதலன் தந்தமை யறியா துணர்த்த*
*அணங்குறு கழங்கின் முதுவாய் வேலன்*
*கிளவியற் றணியின் நன்றுமன் சாரல்*
*அகில்சுடு கானவன் உவல்சுடு கமழ்புகை*
*ஆடுமழை மங்குலின் மறைக்கும் நாடுகெழ*
*வெற்பனொ டமைந்தநந் தொடர்பே*"
(நற்.282).

இப்பாடல் இவர்தம் இலக்கியப்புலமைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

**நல்லூர்ப்பெருமணம்** *nallūr-p-perumaṇam.* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் சிற்றூர்; a village in Tañjāvūr dt

"*நல்லியலார் தொழு நல்லூர்ப் பெருமணம்*". (சம்பந்தர். 383.4).

*[நல் + ஊர் + பெரு + மணம்.]*

தற்போது ஆச்சாள்புரம் எனச் சுட்டப்படுகிறது. நல்லூர் எனச் சுட்டப்படுவதற்காகப் பெருமணம் என்ற கோயிலை இணைத்து நல்லூர்ப் பெருமணம் எனச் சுட்டினர்.

இத் திருத்தலத்தில், திருஞான சம்பந்தர் "தமது திருமண நிகழ்விற்கு வந்த அனைத்து மக்களுக்கும், முத்திப்பேறு நல்கினார்" என்று சிவனியக் கொண்முடிவாளர் கருதுகின்றனர்.

**நல்லூழ்** *nallūḻ,* பெ. (n.) புண்ணியம்; good karumam. "*அம்மைப் பிறப்பி னுகுற்று நல்லூழி னடுத்து*" (குணிகைப்பு. களவு. 185).

**மறுவ.** நல்வினை.

*[நல் + ஊழ்.]*

**நல்லெண்ணம்** *nalleṇṇam,* பெ. (n) நல்ல சிந்தை (கொ.வ.); good intention, good faith, bona fides.

*[நல் + எண்ணம்.]*

அனைவருக்கும் நலம்பயக்கும் நேர்மையான எண்ணம். தீதற்ற உயர்ந்த எண்ணம். பகைவருக்கும் நல்லதே செய்யும் எண்ணம்.

**நல்லெண்ணெய்** *nalleṇṇey,* பெ. (n.) எள்ளிலிருந்து எடுக்கும் எண்ணெய்; sesame oil.

*[நல் + எள் + நெய் → எண்ணெய்]*

"நல்" பழமை, சிறப்பு என்பதைக்குறித்தது. எள்ளிலிருந்து எடுக்குப்படுவதும், உடல் நலத்திற்கு நன்மை பயக்குந்தன்மை யுடையதுமான எண்ணெய், நல்லெண்ணெய். அதன் போலிகளையும் குறிக்கும் சிறப்புப் பெயராக மருவி விட்டமையால், அந் நெய்யின் இடத்தை நிறைக்க வந்த எண்ணெய் என்னுஞ்சிறப்புப்பெயர், பொதுப்பெயராக மருவியது. இவ்வாறு மருவியதால், கடலைநெய் கடலைஎண்ணெயாகவும், தேங்காய்நெய், தேங்காய் எண்ணெயாகவும், மக்களிடையே வழக்கூன்றிவிட்டது. இவ்வாறே, விளக்கெரிக்கும் நெய், விளக்கெண்ணெயாகவும், மருந்திற்குப் பயன்படும் வேப்பநெய், வேப்பெண்ணெயாகவும், மக்களிடையே மருவி வழங்கியது. மேற்குறித்த வண்ணம், எள் + நெய் என்ற சொல், எண்ணெய் என்று அனைத்து எண்ணெய்களுக்கும் மருவி வழங்கியதால், உண்மையாக, எள்ளினின்று எடுக்கப்பட்டதும், உடல்நலத்திற்கு நன்மை பயப்பதுமான எண்ணெய், நல்லெண்ணெய் என்றழைக்கப் பட்டது. இங்கு "நல்" என்பது, நல்லெண்ணெய் என்று வழக்கூன்றியது. மூலம் பொருளைக் குறிக்கும் பெயரடை. கிழமை தோறும் நல்லெண்ணெய் தேய்த்துக் குளித்து வந்தால், நாட்பட்ட மலர்ச்சிக்கல் அகலும். காது வயிறு, பாதம் முதலான உடலுறுப்புகளில், இவ்வெண்ணெய்யைத் தேய்த்துக் குளித்தால், உடற்சூடு தணியும், சிறுநீர்க்கட்டு அகலும் என்று சா.அக. கூறும்.

**நல்லெருது** *nallerudu,* பெ. (n.) பழைய காலத்தில் எருதுகளின் மேல் விதிக்கப் பட்டிருந்த வரிவகை; an ancient tax on bull. "*நல்லாவும் நல்லெருதும்.*" (S.i.i.ii. 521).

**மறுவ.** நல்லேறு.

*[நல் + எருது.]*

சிறந்த இனப்பெருக்கத்திற்குப் பயன்படும் காளை, நல்லெருது என்று அழைக்கப்பட்டது. இத்தகைய எருதுகளை வளர்ப்போர் "நல்லெருது" என்ற பெயரில், அரசிற்கு வரிசெலுத்தி வந்தனர். இவ் வரிவகைகள், சிறந்த காளை, ஆ, எருமை போன்றவற்றைச் சிறந்த முறையில் பாதுகாப்பதற்குச் செலவிடப்பட்டன. சிற்றூர்களில் நல்லெருதுகள் மிகுதியாக இருந்தன என்பதை, இச் சொல் இனிது விளக்குகிறது.

**நல்லெருதுகாட்சிக்காசு** *nallerudu-kāṭci-k-kāšu,* பெ. (n.) காட்சியெருதாகப் பயன்பட்ட (இன்றைய பூம்பூம்மாடு போல்) காளைகளின் மீது விதிக்கப்பட்ட பழைய வரிவகை; an ancient tax on bull

*[நல்லெருது + காட்சிக்காசு.]*

**நல்லெருமை**[1] *nallerumai,* பெ. (n.) தொட்டி நஞ்சு; red arsenic.

**நல்லெருமை**[2] *nallerumai,* பெ. (n.) இனப்பெருக்கத்திற்குப் பயன்பட்ட எருமைகளின்மீது விதிக்கப்பட்ட பழைய வரிவகை; an ancient tax on buffalo.

*[நல் + எருமை.]*

இனப்பெருக்கத்திற்கு வளர்க்கப்பட்ட பொலியெருதுக்கிடாவும், அதன்மீது விதித்த வரிப்பெயரும், நல்லெருமை எனப்பட்டது.

**நல்லெழினியார்** *nalleḻiṉiyār,* பெ. (n) சங்கப்புலவர்; a poet of Šaṅgam period

இவர் பரிபாடலில் உள்ள பதின்மூன்றாம் பாடலை இயற்றியுள்ளார்.

இவர் மெய்ம (தத்துவ) நூலில் வல்லவர். மணிவரை யூர்ந்த மங்குல் ஞாயிற்று அணிவனப் பமைந்த பூந்துகில் புனைமுடி இறுவரை யிழிதரும் பொன்மணி யருவியின் நிறனொடு மாறுந்தார்ப் புள்ளுப் பொறி புனைகொடி (பரிபா.13).

பரிபாடலில் 60 அடிகளைக் கொண்டமைந்த பாடலில் இந்நான்கடிகளும் இவரின் பாடல் திறத்திற்குச் சான்றாகும்.

திருமாலின் தோற்றம் பற்றி நல்லெழினியார் நவிலுவது, சங்கும் சக்கரமும் ஏந்திய கையனை நம்கண்முன் நிறுத்தும் பான்மையில் அமைந்துள்ளது, வருமாறு:-

*"விண்ணளி கொண்ட வியன்மதி யணிகொளத்*
*தண்ணளி கொண்ட அணங்குடை நேமிமால்*
*பருவம் வாய்த்தலி னிரும்விசும் பணிந்த*
*இருவேறு மண்டிலத் திலக்கம் போல*
*நேமியும் வளையும் ஏந்திய கையாற்*
*கருவி மின்னவி ரிலங்கும் பொன்பூண்*
*அருவி யுருவி னாரமொ டணிந்தநின்*
*திருவரை யகலந் தொழுவோர்க்கு"*
(பரிபா,5–12.)

**நல்லேகம்** *nallēgam,* பெ. (n.) சரக்கொன்றை; cassia fistula.

**நல்லேர்கட்டு–தல்** *nallēr-kaṭṭu-,* 5 செ. குன்றாவி. (vt) நல்ல நாளில் பருவத்திற்குரிய உழவைத் தொடங்குதல்; to commencement of seasonal ploughing at an anspicious hour.

*[நல் + ஏர் + கட்டு–.]*

சிற்றூர்களில் நல்லேர் கட்டுதற்காக, நல்ல நாளைத் தெரிவு செய்யும் பழக்கம் இன்றும் காணப்படுகிறது.

**நல்லேலம்** *nallēlam,* பெ. (n.) சிற்றேலம்; small cardomom; Ellcteria cardamomum.

**நல்லேறு** *nallēṟu,* பெ. (n.) 1. காளை; bull. *"இனத்திற் றீர்ந்த துளங்கிமினல்லேறு"* (மலைபடு. 30). 2. ஆண்எருமை; buffalo bull. *"நல்லேறு பொருஉங் கல்லென் கம்பலை"* (மலைபடு. 335).

*[நல் + ஏறு.]*

இனப்பெருக்கத்திற்கு உதவும் காளை, நல்லேறு என்றும், காட்சியெருது என்றும், அழைக்கப்பட்டதாகக் கல்வெட்டுகள் கூறுகின்றன. (எ.டு.) *"நல்லாவும் நல்லெருதும்"* (S.I.I ii 521.).

**நல்லொழுக்கம்** *nalloḻukkam,* பெ. (n) 1. நன்னடக்கை; moral conduct. *"நன்றிக்கு வித்தாகு நல்லொழுக்கம்"* (குறள். 138). 2. மும்மணிக்கொள்கைகளுள் மூன்றாவதாகத் திகழும் நல்லறிவையும், நற்காட்சியையும், ஒரு சேரக்கொண்டு ஒழுகும் ஒழுக்கம் (மேருமந். 107); right conduct one of irattina-t-tirayam.

*[நல் + ஒழுக்கம்.]*

**நல்லோர்** *nallōr,* பெ. (n.) 1. நல்லவர்; the good. 2. மகளிர்; women *"நல்லோர் நல்லோர் நாடி வதுவையயர்"* (ஐங்குறு. 61).

*[நல் + நல்லோர்.]*

**நல்வங்கம்** *nalvaṅgam,* பெ. (n.) தூய்மைப்படுத்தாத ஈயம் (மிருதாரசிங்கி); litharge: impure oxide of lead.

**நல்வசம்பு** *nalvašambu,* பெ. (n.) புறணி நீக்கிய வசம்பு; sweetflag purifield.

*[நல் + வசம்பு.]*

**நல்வசளை** *nal-vašaḷai,* பெ. (n.) *நற்பசளை* பார்க்க; see *naṟpasaḷai*

**நல்வசி** *nalvaši,* பெ. (n.) சூலம்; (பிங்.); trident.

*[நல் + வசி.]*

**நல்வழி**[1] *nalvaḻi,* பெ. (n.) நல்லொழுக்கம்; right path. "*ஏகு நல்வழி யல்வழி யென்மன மாகுமோ*" (கம்பரா. மிதிலைக். 147). மறுவ. நேர்வழி.

*[நல் + வழி.]*

தீமையற்ற வழி. நல்லொழுக்கமுடையார் செல்லும் உயர்ந்த வழி. பிறருக்கு நன்மைபுரிதற்பொருட்டு, அமைந்த நேர்வழி. அனைவருக்கும் நன்மை நல்கும், அன்புவழியே நல்வழி. ஞாலம் உய்வடைந்து, அனைவரும் அனைத்தும் பெற்றுவாழும், உயர்வழியே நல்வழி.

**நல்வழி**[2] *nalvaḻi,* பெ. (n) பிற்கால ஔவையார் எழுதிய நீதிநூல்; a moral book which was written by later Auvaiyār.

*[நல் + வழி.]*

"*வெட்டெனவை வெத்தெனவை வெல்லாவாம் வேழத்தில் பட்டுருவும் கோல்பஞ்சில் பாயாது – நெட்டிருப்புப் பாறைக்கு நெக்கு விடாப் பாறை பசுமரத்தின் வேருக்கு நெக்கு விடும்*"

"*ஆற்றங் கரையின் மரமும் அரசறிய வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே – ஏற்றம் உழுதுண்டு வாழ்வார்க்குஒப்பில்லை கண்டீர் பழுதுண்டு வேறோர் பணிக்கு*"

**நல்வழுதியார்** *nalvaḻudiyār,* பெ. (n.) சங்கப்புலவர்; a poet of Šaṅgam period

இவர் பரிபாடலில் உள்ள பன்னிரண்டாம் பாடலை இயற்றியுள்ளார்.

இவர் பாண்டியர் குலத்தைச் சேர்ந்தவர் என்பர்.

*[நல் + வழுதியார்.]*

"வளிபொரு மின்னொடு வானிருள் பரப்பி விளிவின்று கிளையொடு மேன்மலை முற்றித் தளிபொழி சாரற் றதர்மலர் தாஅய் ஒளிதிக ழுத்தி யுருகெழு நாகம்...(பரிபாடல்.12)."

இவரின் பாடற்சிறப்பிற்கு பரிபாடலில் 100வரிகள் கொண்டமைந்ததில் இந் நான்கடிப் பாடல் நனிசிறந்தது எனலாம்.

**நல்வாக்கு** *nalvākku,* பெ. (n.) 1. நன்னிமித்தமான சொல்; good. auspicious word. 2. வேண்டுகோட் சொல்; (இ.வ.) word of entreaty. 3. வாழ்த்து; blessing.

*[நல் + வாக்கு.]*

**நல்வாசனை** *nalvāšaṉai,* பெ. (n) *நற்பசளை* பார்க்க; see *naṟpašaḷai.*

*[நல் + வாசனை.]*

**நல்வாசி** *nalvāši,* பெ. (n.) வால்மிளகு; a fragrant drug chewed with betel; tail pepper.

*[நல் + வாசி.]*

**நல்வார்த்தை** *nalvārttai,* பெ. (n.) 1. *நல்வாக்கு* பார்க்க; see *nalvākku.* 2. சிறந்த செய்தி; good news. "*சேனையை நாசஞ் செய்திட்டு நடந்த நல்வார்த்தை யறிந்துமே*" (திவ். தருவாய். 7.5.7).

*[நல் + skt.வார்த்தை.]*

**நல்வாழ்வு** *nalvāḻvu,* பெ. (n) 1. மேன்மையும், சீருஞ் சிறப்புமாய் வாழ்கை; happy, prosperious life 2. மகிழ்வான இல்வாழ்க்கை; happy married life.

*[நல் + வாழ்வு.]*

**நல்விதி** *nalvidi,* பெ. (n.) புண்ணியப்பயன்; (வின்); good disting or fate.

*[நல் + skt. விதி.]*

**நல்விளக்கனார்** *nalviḷakkaṉār,* பெ. (n.) சங்க காலப் புலவர்; a poet of Šaṅgam period.

*[நல் + விளக்கனார்.]*

நற்றிணையில் 85 – ஆம் பாடல் இவருடையது.

**நல்விளாஞ்சு** *nalviḷāñju,* பெ. (n.) காட்டுப் பச்சிலை; bastard rose wood

*[நல் + விளாஞ்சு.]*

**நல்வினை** *nalviṉai,* பெ. (n.) அறச்செயல்; good action, virtuous deed. *"நல்வினை மேற்சென்று செய்யப்படும்"* (குறள். 335). 2. முற் பிறப்பிற் செய்த புண்ணிய செயல்; good karmam. opp to tiviṉai. *"நல்வினை தீர்விடத்து நிற்குமாந் தீது"* (நாலடி. 51).

*[நல் + வினை.]*

**நல்வெள்ளஞ்சு** *nalveḷḷañju,* பெ. (n.) காட்டுப் பச்சிலை; bastard rose wood.

**நல்வெள்ளியார்** *nalveḷḷiyār,* பெ. (n) சங்க காலப் புலவர்; a poet of Šaṅgam period

*[நல் + வெள்ளி + ஆர்.]*

'ஆர்' மதிப்புப் பெயரீறு.

மதுரை நல்வெள்ளியாரென்றும், நல்லொளியாரென்றும் கூறுவர்.

நற்றிணையில் 7 – ஆம் மற்றும் 47 – ஆம் குறுந்தொகையில் 365ஆம் அகநானூற்றில் 32—ஆம் இவரியற்றியன.

*"கோடீ ரிலங்குவளை நெகிழ நாளும்*
*பாடில கலிழ்ந்து பனியா னாவே*
*துன்னரு நெடுவரைத் ததும்பி யருவி*
*தண்ணென் முழவின் இமிழிசை காட்டும்*
*மருங்கிற் கொண்ட பலவிற்*
*பெருங்கல் நாடநீ நயந்தோள் கண்ணே"*
(குறுந்:365).

**நல்வேட்டனார்** *nalvēṭṭaṉār,* பெ. (n.) சங்க காலப் புலவர்; a poet of Šaṅgam period

*[நல்வேட்டன் + ஆர்.]*

'ஆர்' மதிப்புப் பெயரீறு.

நற்றிணையில் 53, 210, 292, 349 ஆகியவையும், குறுந்தொகையில் 341 – ஆம் பாடலும் இவரியற்றியன.

*"பல்வீ படரிய பசுநனைக் குரவம்*
*பொரிப்பூம் புன்கொடு பொழிலணிக்*
*கொளாஅச்*
*சினையினி தாகிய காலையும் காதலர்*
*பேணா ராயினும் பெரியோர்*
*நெஞ்சத்துக்*
*கண்ணிய வாண்மை கடவ தன்றென*
*வலியா நெஞ்சம் வலிப்ப*
*வாழ்வேன் தோழியென் வன்த ணானே."*
(குறுந்.341).

**நல்வேளை** *nalvēḷai,* பெ. (n) 1. தைவேளை "பசி கொடுக்கு நல்வேளை"(பதார்த்த. 284); block vailay. 2. *நல்லவேளை* பார்க்க; see *nallavēḷai.*

*[நல் + வேளை.]*

**நல—த்தல்** *nala-,* 4செ.கு.வி. (v.i.) 1. நலமாதல்; to result in good, to take a tarourable turn. "நலக்க வடியோமை யாண்டுகொண்டு" (திருவாச.9.6.): 3செ.குன்றாவி. (v.t.) 2. விரும்புதல்; to wish, desire "விலங்குசாக நலந்ததனுருவங்கொண்ட தென்கொலோ" (திருவாலவா.59.2.).

*[நய → நல—.]*

**நலக்கு—தல்** *nalakku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கசங்கச் செய்தல்; to crumple as cloth or paper. 2. அழுக்காக்குதல்; to soil slighty, sully, tarnish.

க. நலுகிசு.

*[நலுங்கு → நலங்கு → நலக்கு—.]*

(ஒ.நோ.) அழுங்கு → அழுக்கு.

**நலங்கம்** *nalaṅgam,* பெ. (n.) சாலங்கவைப்பு நஞ்சு; a kind of native arsenic.

**நலங்கனி—தல்** *nalaṅkani-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. அன்புமுற்றுதல்; to overflow with love "*நலங்கனிந்துருகி நின்றாள்*" (சீவக. 2060). 2. அழகு முற்றுதல்; to mellow with ripe beauty

*[நலம் + கனி—.]*

**நலங்கிடல்** *nalaṅgiḍal,* தெ.பெ. (vbl n ) உடம்பில் அரைத்த குழம்பு மருந்தைப் பூசுதல்; anointing the body with liquid medicine

*[நலங்கு + இடல்.]*

**நலங்கு[1]—தல்** *nalaṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t ) 1. நொந்து போதல்; to grow faint, wilt. "*உயிர் வருந்த நலங்கி வந்ததும்*" (அரிச் பு.வெட்டடுஞ். 40). 2. வருந்துதல்; to suffer, pain. "*விஞ்ச நலங்கியதும்*" (திருவாய் 4). 3. கசங்குதல் (இ.வ.); to lose stiffness, become crumpled. 4. நுடங்குதல்; to bend, as a bow. "*மலைமாவி னலங்க லுளைத்தவர்*" (மருதூரந். 100).

தெ., க., நலகு.

*[நலி→ நலிங்கு → நலுங்கு → நலங்கு—.]*

நசி → நசிவு + நலிவு = துன்பம்.

**நலங்கு[2]** *nalaṅgu.* பெ. (n ) 1. திருமணத்தில் மணமக்களை அவையிலிருத்தி, ஒருவர்க்கொருவர் சந்தனம் முதலியன கொண்டு பூசி விளையாடச் செய்கின்ற கொண்டாட்டம்; festive ceremony in a marriage in which the bride and bridegroom daub each other with sandal, saffron and other things. 2. நறுங்கூட்டு (வின்.); macerated mass of fragnant stuffs. 3. வைசூரிப் புண்ணுக்கிடும் மருந்து (வின்.); a medicine applied to pustules of small - pox.

தெ. நலுகு.

*[நலம் → நலங்கு.]*

உடலிற்கும், உள்ளத்திற்கும் நலம் நல்கும், நறுமணச்சாந்து உடம்பிற் பூசியவுடன், மூக்கு நறுமணத்தை நுகர்தலால், ஈங்கு, உள்ளத்தில் ஏற்படும் 'பொந்திகை' நலமென்று குறிக்கப்பட்டது.

**நலங்குச்சாந்து** *nalaṅgu-c-cāndu,* பெ. (n ) குழம்பாக அரைத்த மேற்பூச்சு மருந்து; a semi solid preparation of triturated medicine intended for external application. (சா.அக.)

*[நலங்கு + சாந்து.]*

**நலுங்குபூசு—தல்** *nalaṅgu-pūšu-,* 5 செ.குன்றாவி. (v t.) 1. *நலங்கிடு—.* 1. பார்க்க; see *nalaṅgiḍu-*.1. 2. வைசூரிக்கு (அம்மை நோய்க்கு) வேப்பிலையையும், மஞ்சளையும் அரைத்துப் பூசுதல்; to apply a mixture of ground marpgosa leaves and green turmeric to cure small-pox.

*[நலங்கு + பூசு—.]*

**நலங்குமா** *nalaṅgu-mā,* பெ. (n.) குளிக்கும் போது பயன்படுத்தும் நறுமணப்பொடி; fragrant powder used while taking bath.

*[நலங்கு + மா.]*

**நலங்குலை¹-த்தல்** *nalaṅgulai-,* 4 செ. குன்றாவி. (v.t.) 1. கெடுத்தல்; to defile or pollute. 2. கற்பழித்தல்; to bring to a surrender of chastity sedyce.

*[நலம் + குலை-.]*

**நலங்குலை²-தல்** *nalaṅ-gulai-,* 2 செ. கு. வி. (v.i.) கற்பழிதல்; to carnal knowledge of a woman forcibly and against her will: to seduction, to rape

*[நலம் + குலை-.]*

**நலங்குலைவு** *nalaṅgulaivu,* பெ. (n.) கற்பழிவு; rape, seduction. (சா.அக.)

*[நலம் + குலைவு.]*

**நலச்சம்** *nalaccam,* பெ. (n.) விலாமிச்சைவேர்; khuskhus root. (சா.அக.).

**நலச்சி** *nalacci,* பெ. (n.) வெட்சாரம்; salt nitrate of potash (சா.அக.).

**நலச்சூடு¹** *nala-c-cūḍu,* பெ. (n) சூட்டின் கடுப்பு; inflamation or irritation.

*[நல்ல + சூடு.]*

*[ஒருகா. நலம் → சுள் → சுடு → சூடு.]*

**நலச்சூடு²** *nala-c-cūḍu,* பெ. (n.) எருதுகளுக்கு இடுங் கடுப்புச்சூடு (வின்.); brand on a bull's testicles.

*[நலம் + சூடு.]*

**நலச்செம்பி** *nalaccembi,* பெ. (n.) செந்திராய்; red indian chick weed. (சா.அக.)

*[நலம் + செம்பி.]*

**நலஞ்சாற்று-தல்** *nalañ-śāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v t.) அரசனாணையை வெளியிடுதல்; to proclaim, as a royal command. "*பெரும்பயண மெழுக வென்று நலஞ்சாற்ற*" (பெரியபு. சேரமான் பெ. 46).

*[நலம் + சாற்று-.]*

**நலஞ்சுடு-தல்** *nalañśuḍu-,* 20 செ.கு.வி. (v i.) காளை, எருது ஆகியவற்றிற்கு கடுப்புச் சூடிடுதல் (வின்.); to geld a bull and cauterize the wound.

*[நலம் + சுடு-.]*

நலம் = எருதின் விதைக்காய்

**நலத்தம்** *nalattam,* பெ. (n.) சடாமாஞ்சில் மூலிகை (சங்.அக.): spikenard herb

**நலதம்** *naladam.* பெ. (n.) வெள் வெட்டிவேர்; white cuscus rootor grass

**நலதம்பு** *naladambu,* பெ. (n) வேம்பு; neem, margosa. (சா.அக.)



**நலதை** *naladai,* பெ. (n.) *நலத்தம் (சா.அக.)* பார்க்க; see *nalattam.*

*[நலதம் → நலதை.]*

**நலந்தட்டு–தல்** *nalan-daṭṭu-,* 5 செ.குன்றா.வி. (v.t.) விதையடித்தல் (வின்.); to castrate by crushing the testicles, geld, emasculate.

மறுவ. காயடித்தல், விதைவாங்குதல்.

*[நலம் + தட்டு–.]*

**நலந்திகழ்** *nalan-digaḻ,* பெ. (n) சாகுபடியின் ஏற்றத்தாழ்வு; the yielding capacity of soil

*[நலம் + திகழ்.]*

நலம் = நல்வாழ்விற்கு நலம் நல்கும், விளைச்சல்.

**நலந்நசுக்கு–தல்** *nalan-našukku-,* 5செ. குன்றாவி. (v t) *நலந்தட்டு–,* பார்க்க; see *nalan-daṭṭu-.*

*[நலம் + நசுக்கு–.]*

**நலநாறி** *nalanāṟi,* பெ. (n.) சிவகரந்தை (சங்.அக.); cylon toolsy. (சா.அக.)

*[நலம் + நாறி.]*

**நலநிலம்** *nala-nilam,* பெ. (n.) துருசு; blue vitriol, Subacetate of copper.

*[நலம் + நிலம்.]*

**நலப்பாடு** *nala-p-pāḍu,* பெ. (n.) 1. நன்மை; (யாழ்ப்.); goodness. 2. சிறப்பு, மேம்பாடு; excellence. 3. ஆதாயம்; advantage. 4. ஊதியம், மேன்மை, பயன், நலமேம்பாடு; profit. 5. ஆகூழ் (அதிருஷ்டம்) good fortune

*[நலம் + பாடு.]*

படு → பாடு. நன்மை விளைகை.

**நலப்பாணி** *nala-p-pāṇi,* பெ. (n.) *நல நிலம்* பார்க்க; see *nala-nilam.* (சா.அக.).

*[நலம் + பாணி.]*

**நலப்பு** *nalappu,* பெ. (n.) 1. நன்மை (சங்.அக.); goodness, benefit. 2. வெற்றி, நற்பயன்; success 3. செயல்திறன் (யாழ்.அக.); efficacy.

*[நலம் → நலப்பு.]*

**நலப்புண்** *nala-p-puṇ,* பெ. (n.) எருத்தின் விதையடித்த புண் (வின்); sore cauterizing the wound of a gelded bull

*[நலம் + புண்.]*

காயடிக்கப்பட்ட காளை, உழுதொழிலில் வலிவாகப் பணி செய்யும் பாங்கு பற்றி மக்கட்கு நலப்புண் எனக் குறிக்கப் படுகிறது. காயடித்த காளைதான் நன்ற பணிசெய்யும்.

**நலபிரதி** *nala-piradi,* பெ. (n) பொட்டிலுப்பு (சங்.அக.); nitrate of potash.

**நலம்** *nalam,* பெ. (n) 1. நன்மை, ஒழுக்கம்; goodness, virtue. *"நலந்தா னிலாத சிறியேற்கு நல்கி"* (திருவாச. 1:58.). 2. அழகு; beauty, fairness, handsomeness. *"தொன்னலந் தொலை பீங்கி யாந்துய ருழப்ப"* (கலித். 16.). 3. அன்பு; love, affection *"நன்னலம் மவற்கேவைத்த நங்கையே"* (சீவக. 1336).

**4.** ஆசை; hope, faith. *"பொது நலத்தார்"* (குறள், 915.). **5.** இன்பம்; delight, pleasure, gratification. *"சிறந்த நின்னலத்தைச் சேரே னாய் விடில்"* (சீவக. 2067.). **6.** இரக்கம், அருட்குணம்; kindness. **7.** பயன் (சங்.அக.) ஆதரவு; benefit, favour. **8.** குணம், இயல்பு, தன்மை; nature, characteristic *"பிறர்தீமை சொல்லா நலத்தது சால்பு"* (குறள், 984). **9.** பயன், மேன்மை (சங்.அக.). ஊதியம்; advantage, utilitly; profit. **10.** புகழ்; reputation, fame. *"தந்நலம் பாரிப்பார்"* (குறள், 916). **11.** உயர்வு (சங்.அக.); excellence. *"நாநனி வருந்த வென்னலம் பாராட்டலின்"* (மணிமே. 21, 140). **12.** கண்ணோட்டம் (வின்.); connivance, partiality, indulgence. **13.** வளவாழ்வு; நலவாழ்வு; prosperity, welfare, health. *"நலந் தீங்கிலு முன்னை மறந்தறியோன்"* (தேவா. 946:6.). **14.** நிறம் (வின்.); colour. *"செயலையந் தளிரேய்க்கு மெழினலம்"* (கலித். 15.). **15.** செம்மை நிறம்; red colour. *"நலம் பெறு கலிங்கத்த"* (திருமுரு. 109.). **16.** நளி(விருச்சிகம்) (பிங்.); scorpio in the zodiac. **17.** எருத்துவிதை (யாழ்ப்.); testicle of a bull. **18.** சுக்கு (வின்.); dried ginger.

*[நல் → நலம்.]*

**நலம்பலம்** *nalam-palam,* பெ. (n.) இலந்தை; common-jujube.

*[நலம் + பழம் → பலம்.]*

**நலம்பாடு** *nalam-pāḍu,* பெ. (n.) வளமை, வெற்றிப்பொலிவு, தகுதி; propriety, fitness *"நலம்பாடில்லை நாணுடைத்து"* (மணிமே. 2:36, பாடவேறுபாடு).

*[நலம் + படு → நலம்பாடு.]*

**ஒருகா.** நலப்பாடு → நலம்பாடு.

வாழ்வாங்கு வாழ்தற்குரிய, அனைத்து நலமும், வளமுடைய வெற்றிப்பொலிவே நலம்பாடு எனப்படும்.

**நலம்பாராட்டல்** *nalam-pārāṭṭal,* பெ. (n.) தலைவியின் அழகை வியந்துரைக்கும் அகத்துறை; praising the beauty of one lady love. "கலந்துழி மகிழ்தலு நலம் பாராட்டலும்" (நம்பியகப். 125.).

*[நலம் + பார் + ஆட்டல்.]*

இஃது அல்லீற்றுத்தொழிற்பெயர்.

**நலம்பாராட்டு[1]–தல்** *nalam-pārāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அழகுபடுத்துதல்; to dress, adorn. *"நறுமலர்க் கோதைநின் னலம்பாராட்டுநர்"* (சிலப். 2:62.).

*[நலம் + பாராட்டு–.]*

இது தல்லீற்றுத்தொழிற்பெயர்.

**நலம்பாராட்டு[2]** *nalam-pārāṭṭu,* பெ. (n.) *நலம்பாராட்டல்* பார்க்க; see *nalam - pārāṭṭal* *"நலம்பாராட்டாகிய பொருள்பொதிந்த உரையை"* (சிலப். 2:81, உரை).

*[நலம் + பாராட்டு.]*

**நலம்பிடி–த்தல்** *nalam-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *நலந்தட்டு–. (நாஞ்.)* பார்க்க; see *nalan-taṭṭu-.*

*[நலம் + பிடி –.]*

**நலம்புரிதம்** *nalam-puridam,* பெ. (n.) ஆண்டு; one year.

ஓராண்டின் பன்னிரண்டு திங்களை ஆறுபெரும்பொழுதாகத் தமிழின் பொருளிலக்கணம் பிரிக்கும். அதன்படி

வரும்சுழற்சி, உயிர்வளர்ச்சிக்கு நலம்புரிவதால், இப் பெயர் பெற்றது.

**நலம்புனைந்துரை–த்தல்** *nalam-puṉaindurai-*, 4.செ.குன்றாவி. (v.t.) தலைவியின் அழகைப்புனைந்துரைத்தல் (அகப்); to praise the beauty of one's lady love.

*[நலம் + புனைந்து + உரை–.]*

தலைமகன், தலைமகள் அழகைப் பாராட்டிக் கூறுதலே நலம் புனைந்துரைத்தல். தலைமகன், தலைமகளிடம் புணர்ச்சி இன்பம் துய்த்த பின்பு, அளவில்லா மகிழ்ச்சியொடும், அடக்க வொண்ணா உணர்ச்சியோடும் உரைத்தல். (எ.டு.) "*நன்னீரை வாழிஅனிச்சமே நின்னினு மென்னீரள் யாம் வீழ்பவள்*" (குறள்,1111.). தலைவன் அனிச்ச மலரை நோக்கிக் கூறும்பான்மையில், இப் பாடல் அமைந்துள்ளது. "அனிச்சப்பூவே! நீ மோப்பக்குழையும் தன்மையுடையை! ஆனால், எனது தலைவியோ உன்னைவிட மென்மையானவள் என்பதை அறிவாயாக" இஃது இயற்கைப் புணர்ச்சியின் இறுதியில், காமவின்பத்தின் மகிழ்ச்சியில், தலைவன் உரைத்ததாகும். ஈங்கு, "அனிச்சம்" ஆகுபெயர். இவ்வுலகில் தலைவியே மென்மையிற் சிறந்தோள் என்பது, குறிப்பாற் பெறப்பட்டது.

**நலம்பெறுசித்தன்** *nalamperu-šittaṉ*, பெ. (n.) காந்தம்; magnet.

*[நலம் + பெறு + சித்தன்.]*

**நலம்பொலம்** *nalam-polam*, பெ. (n.) நன்றுதீது (வின்.); good and evil.

*[நலம் + பொலம் = நன்மையும் தீமையும் கலந்த வாழ்வியல் நிலை.]*

**நலமாலை** *nalamālai*, பெ. (n.) அத்திப்பிசின் (சங்.அக.); fig resin.

*[நலம் + மாலை.]*

அத்திமரத்திலிருந்து வடியும் பிசின் மாலைபோல் தொங்குவதால், இப் பெயர் உண்டாகியிருக்கிறது.

**நலமிளப்பம்** *nalam-iḷappam*, பெ. (n.) *நலம் பொலம் (வின்.)* பார்க்க; see *nalam-polam*

*[நலம் + இளப்பம்.]*

**நலமெடு–த்தல்** *nalam-eḍu-*, 4. செ.குன்றாவி. (v.t.) *நலந்தட்டு–. (வின்)* பார்க்க; see *nalan-taṭṭu-*

*[நலம் + எடு–.]*

**நலவர்** *nalavar*, பெ. (n) நல்லோர்; good, virtuous persons. "*நலவரு ணன்மை வரம்பாய் விடல்*" (நாலடி, 188.).

*[நல் → நல → நலவர்.]*

**நலவல்** *nalaval*, பெ. (n.) *நாவல் (சங்.அக.)* பார்க்க; see *nāval*

**மறுவ.** நவ்வல்.

*[நலல் → நலவல்.]*

**நலவு** *nalavu*, பெ. (n.) 1. நன்மை (சங்.அக.); goodness. 2. மன்னிப்புக்கேட்கும் மொழி; pardon apology. '*உன் குற்றத்திற்கு என்னிடம் நலவுகேட்க வேண்டும்*' (நெல்லை). '*வாய்க்கு வந்ததைப்பேசிவிட்டு நலவு கேட்பதில் ஞாயம் இல்லை*' (இ.வ.).

**க.,** நலவு.

*[நல் → நலவு.]*

**நலிகம்** *naligam,* பெ. (n.) சுருள்பட்டை; a red bark used in colousing or scenting medicinal oils.

*[நலி → நலிகம்.]*

**நலிதம்** *nalidam,* பெ. (n.) **1.** தாமரை; lotus **2.** வெண்ணாரை; white stork. **3,** நீர்; water.

*[நலிகம் → நலிதம்.]*

**நலி[1]–தல்** *nali-,* 2 செ.கு.வி. (v.i.). **1.** மெலிதல்; to waste, pine away. தொடர்ந்து நோய் வாய்ப்பட்டதால் உடம்பு நலியத் தொடங்கியது. (இ.வ.). **2.** அழிதல்; to perish. *"நண்ணா வசுரர் நலியவே"* (திவ். திருவாய். 10:7:4.). **3.** சரிதல் (வின்.); to slide, to roll; to fall down. **4.** உச்சாரணத்தில் ஓசை நடுநிலையாதல்; to be pronounced in a middle tone. *"நலிதலுழைப்பின்"* (நன். 88.). **5.** வருந்துதல்; to suffer to be in distress. *"தேடி நலிந்தே கண்ணாற் காணாத காரணனை"* (சிவரக, நந்திகண. 1.). **6.** தோற்றல் (வின்.); to yield before a foe; to fail. **7.** நல்லநிலைமை வீழ்ச்சி அடைந்து தாழ்வடைதல்; to decline in progress, prosperity, etc. தந்தை இறந்தபிறகு அந்தக்குடும்பம் நலிந்தநிலையிலிருந்து இப்பொழுதுதான் தலையெடுத்துத் தழைக்கிறது. (உ.வ.).

*[நசி → நலி–.]*

**நலி[2]–தல்** *nali-,* 2 செ.குன்றாவி. (v.t.) நெருக்கி வருத்துதல்; to afflict, distress. *"நடுங்கஞர் நலிய"* (பு. வெ. 12. பெண்பாற். 15. கொளு.).

தெ. நலி.

*[நசி → நலி–.]*

இது தன்வினை வடிவம்.

**நலி[3]–த்தல்** *nali-,* 4 செ.குன்றாவி. (v.t.) துன்புறுத்துதல் (யாழ்.அக.); to afflict, cause distress.

இது பிறவினை வடிவம்.

நசல் = துன்பம்.

நசித்தல் = துன்புறுத்துதல்.

*[நசி → நலி.]*

**நலி[4]** *nali,* பெ. (n.) **1.** நோய் (வின்.); disease, illness. **2.** நோவு (வின்.); pain. **3.** மெலிவு (இ.வ.); thinness, leanness.

*[நசி → நலி.]*

**நலிதல்** *nalidal,* பெ. (n) **1.** மெலிகை (வின்.); becoming thine **2.** சரிகை (வின்.); sliding. **3.** நலிதலோசை (பி.வி. 40.); circumflex accent. *"எடுத்தல் படுத்தல் னலிதலோயாதுரப்பல்"* (வீரசோ. சந். 4.).

*[நசிதல் → நலிதல்]*

**நலிந்தோர்** *nalindōr,* பெ. (n.) நோயால் பீடிக்கப் பட்டோர்; one who suffering from a disease. patient

நசிவு = துன்பம்.

நசிந்தோர் = நோயால் துன்புறுவோர்.

நலிவு = நோயால் படுந்துயர்.

*[நசிந்தோர் → நலிந்தோர்.]*

**நலிநீருகம்** *nali-nirugam,* பெ. (n) தாமரைத் தண்டு; lotus stalk.

*[நலிநீர் + உகம்.]*

**நலிப்பளம்** *nali-p-paḷam,* பெ. (n.) கொசுக்களை அழிக்கும் நெய்மம்; mosquitues oil.

**நலிபு** *nalipu,* பெ. (n.) ஆய்தவெழுத்திற்குச் செய்யுளில் வழங்கு மொரு பெயர் (தொல். பொருள். 535. உரை); a poetic name for the letter āydam

*[நலி → நலிபு.]*

நைந்து ஒலிப்பதால் ஏற்பட்ட பெயர்.

**நலிபுவண்ணம்** *nalipu-vaṇṇam.* பெ. (n.) ஆய்தம் அடிக்கடி பயின்றுவரும் சந்தம் (தொல். பொருள். 535.); a rhythm effected by the frequent use of āydam.

*[நலிபு + வண்ணம்.]*

இசையை நிறைக்கப் பயின்றுவரும் வண்ணம்.

**நலிவி-த்தல்** *nalivi-* 4 செ.குன்றாவி. (v.t.) மெலியச்செய்தல்; *to make thin reduce the* obesity

*[நலி → நலிவி-.]*

**நலிவு**[1] *nalivu,* பெ. (n.) 1. துன்பம்; trouble, distress, affliction *"வையகத்து நலிவுகண்டு"* (பு. வெ. 8, 34. கொளு). 2. கேடு; ruin, destruction *"நோற்று நலிவிலா வுலகமெய்தல்"* (சீவக, 2727). 3. அழிவு; the state of being eunacuated suffering.

*[நசி → நலி → நலிவு.]*

**நலிவு**[2] *nalivu,* பெ. (n.) 1. நல்லநிலையிலிருந்து கெட்டநிலைக்குச் செல்லும் வீழ்ச்சி; decline ஆயுள்வேத மருத்துவம் நல்லநிலையில் இருந்து நலிவுற்றது. சிலதொழிற்சாலைகள் நலிவு அடைந்த நிலையில் உள்ளன. (இக்.வ.) 2. நோய் முதலியவற்றால் உடலில் ஏற்படும் நலக்குறைவு. debility of the body நீங்கள் உடல் நலிவுற்ற நேரத்தில், அதிகம் பேச வேண்டாம் (இக்.வ.).

*[நசி → நலி → நலிவு.]*

**நலினம்** *naliṉam,* பெ. (n.) 1. தாமரைநீர்; lotus water 2. வெண்ணாரை; white stork.

**நலுங்கு** *nalungu,* பெ. (n.) *நலங்கு (நெல்லை)* பார்க்க; see *nalangu*

*[நல் → நலங்கு → நலுங்கு.]*

**நலுங்கு**[1]**-தல்** *nalungu-* 5 செ.குன்றாவி. (v.t.) உடல் வருத்துதல்; to strain oneself உடல் நலுங்காது வேலை செய்ய முடியுமா? உடை நலுங்காமல் வேலை செய்பவருக்குத்தான் ஊதியம் மிகுதி (உ.வ.).

*[நலி + நலிங்கு + நலுங்கு-.]*

எதிர்மறைவடிவங்களில் இச் சொல்லாட்சி வழக்கூன்றியுள்ளது.

**நலுங்கு**[2]**-தல்** *nalungu-,* 5செ.கு.வி. (v.i.) 1. நெகிழ்தல்; to slip off. "கலைகள் அவிழ்ந்தவிழந்து நலுங்க" (கனம் கிருட்டிணையர்.107.) 2. மெலிதல்; to become lean. "உடல் நலுங்க உள்ளமும் நலுங்கும்" (இ.வ.). 3. நலிவுறுதல்; to be distressed. "வயிற்றிலிருந்த காலம் நலுங்காமல் நோக்கினவள்" (திவ்.பெரியாழ். 3:2:8, வ்யா, பக்.552.).

*[நலங்கு → நலுங்கு-.]*

**நவ்வங்கம்** *nav-v-angam,* பெ. (n.) வெள்வங்கம்; white lead

*[நவ்வு + அங்கம்.]*

**நவ்வல்** *navval,* பெ. (n.) இனிப்புநாவல்; sweet jaumoon.

*[நாவல் → நவ்வல்.]*

**நவ்வல்பிசின்** *navval-pišiṉ,* பெ. (n.) நாவல் மரத்துப் பிசின்; gum of jaumoon tree.

*[நாவல் + பிசின்.]*

**நவ்வார்** *navvār,* பெ. (n.) பகைவர் (கயாகரம்); enemies, foes.

*[நவ்வு + ஆர்.]*

**நவ்வி**[1] *navvi,* பெ. (n.) 1. பெண்மான் (தொல். பொருள். 612); female deer, hind 2. மான்குட்டி; young of a deer. "*சிறுதலை நவ்விப் பெருங்கண் மாப்பிணை*" (புறநா.2). 3. இளமை (சூடா.); youth, tender age. 4. அழகு (சூடா.); beauty, handsomeness. "*நவ்வித் தோகையா*" (கம்பரா. மாரீச.14). 5. அத்தநாள் (சூடா.); the 13th nakṣatra, part of corvus

*[நுவ்வு → நவ்வு → நவ்வி.] (வே.க.3.5.)*

**நவ்வி**[2] *navvi,* பெ. (n.) மரக்கலம்; navy, boat, vessel, ship. "*நவ்விதம் பாயொடு வேலையிற்றிரியும் பண்பின*" (கம்பரா. படைத்த. 47.).

*[நவ்வு → நவ்வி.]*

**நவ்வு**[1]**—தல்** *navvu-,* 5செ.குன்றாவி (v.t.) 1. முழுதும் நம்புதல்; to trust unreservedly. அவனை ஏன் நவ்விக் கொண்டிருக்கிறாய்? 2. ஆசையோடு எதிர்பார்த்திருத்தல்; to expect eagerly. '*உனக்கு வர வேண்டிய பணத்தை இப்பொழுது நவ்வியிருத்தலாற் பயனில்லை*'.

*[நம்பு → நவ்வு—.]*

**நவ்வு**[2] *navvu,* பெ. (n.) *நவ்வி*[2] பார்க்க; see *navvi*[2] '*அவனி பவ்வமுறு நவ்வெனத் தலை நடுங்கவே*' (பாரத. இரா. 60). 2. ஆடு; sheep.

*[நவ்வி → நவ்வு]*

**நவ்வுசவ்வு** *navvu-šavvu,* பெ. (n.) நலம்பொலம் (வின்.); good and evil, profit and loss.

*[நவ்வு → சவ்வு]*

**நவ்வூகிதம்** *navvūkidam,* பெ. (n.) வரிக் கற்றாழை; striped aloe.

**நவட்டு—தல்** *navaṭṭu-,* 5செ.குன்றாவி. (v.t.) *நகட்டு—தல்* பார்க்க; see *nagaṭṭu-*

*[நகட்டு → நவட்டு—.]*

**நவமாலிகம்** *navamāligam,* பெ. (n.). இரட்டைமல்லிகை; jasminum sambag.

**நவமை** *navamai,* பெ. (n.) குற்றம்; defect, fault "நவமைநீங்கிய நற்றவன்" (கம்பரா.அகத்.31.)

*[நவை → நவமை.]*

**நவரப்புஞ்சை** *navara-p-puñjai,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy (a.)

**நவரம்பழம்** *navaram-paḻam,* பெ. (n.) ஒருவகை வாழைப்பழம்; a kind of plantain (G.Sm.D.i i, 213).

**நவரை[1]** *navarai,* பெ. (n.) 90 நாளில் பயிராகும் நெல்; paddy maturing in 90 days. 2. கருங்குருவை; black paddy possessing medical virtues.

*[நவல் → நவர் → நவரை.]*

**நவரை[2]** *navarai,* பெ. (n.) ஐந்து விரல நீலத்திற் குறையாது வளர்வதும், செந்நிறமுடையதுமான கடல்மீன்வகை; red mullet, reddish chestnut in colour, attaining at least 5 inch in length. Uponcoides sulphurens

நவரை வகைகளாகச் சம்பசிவம் மருத்துவ அகரமுதலி கூறுவது:–

1. கல்நவரை.
2. பேய்நவரை.
3. பருநவரை.
4. செந்நவரை.

**நவரை[3]** *navarai,* பெ. (n.) சிறுகாய் வாழை வகை (பதார்த்த.729.); a kind of plantain. "நவரை வாழைப் பழத்தான் மதி" (பதார்த்த.765.).

*[நவல் → நவல் → நவர் → நவரை.]* (வே.க.3–5.)

**நவரைவாழை** *navarai-vālai,* பெ. (n.) மகரவாழ; species of plantain

**நவற்குப்பு** *navar-kuppu,* பெ. (n.) வெடியுப்பு; nitre.

*[நவல் + குப்பு.]*

**நவனாகம்** *nava-nāgam,* பெ. (n.) ஓமம்; bishop's weed.

*[நவன் + நாகம்.]*

**நவாச்சாரம்** *navāccāram,* பெ. (n.) மருந்துக்குப் பயன்படும் உப்பு; ammoni-chloridum.

**நவாட்டுச் சருக்கரை** *navāṭṭu-c-carukkarai,* பெ. (n) பூராச்சருக்கரை (இ.வ.); fine, white cane sugar

*[நகட்டு → நவட்டு → நவாட்டு + சரக்கரை.]*

**நவாடா** *navāḍā,* பெ. (n) தோணி (வின்.); boat, dhoney.

தெ. வாடா.

*[நாவு → நவா → நவாடா.]*

**நவாத்து** *navāttu,* பெ. (n ) மணற்சருக்கரை; aska sugar.

*[நவாட்டு → நவாத்து.]*

**நவாது** *navādu,* பெ. (n.) வெண்மையான சருக்கரைவகை (இ.வ.); a kind of white sugar.

**நவான்னம்** *naviāṉṉam,* பெ. (n.) சுடுசோறு; hot cooked rice.

**நவி[1]–த்தல்** *navi-,* 4செ.குன்றாவி (v.t.) *1. நவிழ் (சூடா.)* பார்க்க; see *navil.* 2. அவித்தல்; baking.

*[நசி → நலி → நவி–.]*

*நசிவு = அழிவு. நசித்தல் → நவித்தல்.*

**நவி²–த்தல்** *navi-* 4செ.குன்றாவி (v t.) அழித்தல்; to extinguish

*[நசி → நவி–.]*

**நவி³** *navi,* பெ. (n.) *நவியம்¹* பார்க்க; see *naviyam¹* *"எரிபத்தர் நூக்கு நவியம்"* (திருவாரூ. 405.).

**நவியம்** *naviyam.* பெ. (n.) கோடரி; axe *"வடிநவில் நவியம் பாய்தலின்"* (புறநா. 25).

*[நசி → நவி → நவியம்.]*

வெட்டி அழிக்கும் கோடரி.

**நவிர்¹** *navir-* 2செ.கு.வி. (v i) பீறுதல்; to be torn *"நுண்ணவிரறுவை"* (சீவக.2010.).

*[நவு → நவிர்–.]*

**நவிர்²** *navir,* பெ. (n) 1. ஆண்மயிர் (திவா.); mans hair 2. மருதயாழ்த்திறம் நான்கனுள் ஒன்றாகிய தக்கேசிப்பண் (பிங்.); a melody-type of the marudam class, one of four marudayāḻtiṟam. (q.v) 3. வாள் (பிங்.) sword. 4. *நவிரம்* பார்க்க: see *naviram* *"அனங்கன் பேரால் நவிருடைமா மயலுழந்து"* (பாரத. அருச்சுனன்றீ. 31.). 5. முண்முருக்கு (உரி.நி.); indian coral tree 6. *திரணம்;* blade of grass *'மாடு ஒரு நவிருமெடுக்கவில்லை'.* (யாழ்ப்).

க. நவிர்.

*[நவு → நவிர்.]*

**நவிரம்** *naviram,* பெ. (n) 1. ஆண்மயிர் (திவா.); man's tuft of hair 2. உச்சி (திவா.); crown of the head 3. தலை (திவா.); head 4. மயில் (பிங்.); peacock 5. மலை (திவா.); mountain. 6. மலைபடுகடாங் கொண்ட நன்னனுடைய மலை; a mountain belonging to Naṉṉaṉ the hero of malaipaḍukaḍām *"கழைவளர் நவிரத்து"* (மலைபடு. 574.). 7. *நவிர்² (அக.நி.)* பார்க்க; see *navir².* 8. வாள் (வின்.); sword. 9. புன்மை (பிங்.); inferiority, baseness

*[நவிர் → நவிரம்.]*

**நவிரல்** *naviral,* பெ. (n) மரவகை; a kind of tree *"நாரின் முருங்கை நவிரல்"* (அகநா. 1.).

*[நவிரம் → நவிரல்.]*

**நவிரெழுசங்கு** *navireḻu-saṅgu,* பெ. (n) முட்சங்கு; four spined monetia

*[நவிர் + எழு + சங்கு.]*



**நவில்¹(லு)–தல்** *navil-* 7 செ.குன்றாவி. (v t) 1. சொல்லுதல்; to say tell declare pronounce *"நாவினா னவில்பவர்"* (தேவா. 36: 11), (சூடா.). 2. கற்றல்; to learn, study, read. *"நவிறொறு நூனயம் போலும்"* (குறள், 783.). 3. பெரிதொலித்தல்; to utter, sound loudly *"நாதப் பெரும்பறை நவின்று"*

(திருவாச.2:108). 4. பாடுதல்; to sing. *"தேனவின்ற.... அருவிசெய்யாநிற்கும் மாமலைக்கே"* (திவ். இயற். திருவிருத்.50.). 5. செய்தல்; to perform, as a dance. *"நட்டமே நவில்வாய்"* (தேவா. 2:2). 6. பழகுதல்; to practice *"செல்சமந் தொலைத்த வினைநவில்யானை"* (பதிற்றுப். 82, 4.). 7. தாங்குதல்; to bear *"மைஞ்ஞவிலுங் கண்டத்து"* (தேவா. 974:7). 8. விரும்புதல்; to desire *"இகன்மிக நவின்று"* (பரிபா. 6:28). 9. குறித்தல்; to indicate, intend. *"கொலை நவில் வேட்டுவர் கொடுமர மஞ்சி"* (மணிமே. 13:31.). 10. மிகுதல் (பரிபா. அரும்.); to exceed

*[நவில் → நவிலு–,]*

'தல்' வீற்றுத்தொழிற்பெயர்.

**நவிலு²–தல்** *navilu-,* 7 செ.குன்றாவி. (v.t.) நாவினால் ஒலித்துப் பயிலுதல்; to make a sound with help of tongue in practice 'நாவில்தோறும் நூல் நலம் பயக்கும். (பே.வ.).

*[நவில் → நவிலு–.]*

இது தன்வினை வடிவம்.

*"பலகால் ஒன்றைச் சொல்லிப் பயிலுதலே, நவிலுதல்"*
(சொல்.ஆ.க.பக்.49.)

**நவிழ்–த்தல்** *naviḻ-,* 4 செகுன்றாவி (v.t.) அவித்தல் (சது.); to extinguish. *"குழிகட்பேய் சூழுநோக்கிச் சுடலை நவிழ்த்து"* (பதினொ. காரை. மூத்த. 2.).

*[நவி → நவிழ்–.]*

**நவிற்று–தல்** *naviṟṟu-,* 5செ.குன்றாவி. (v.t.) 1. சொல்லுதல் (யாழ்.அக.); to say, speak, utter 2. ஆராய்தல்; to investigate *"எண்ணவிற்றுஞ் சிறப்பினை"* (பரிபா.3:80). 3. அதிகாரத் தோடுரைத்தல் (சது.); to declare with authority

*[நவில் → நவிற்று–.]*

இது பிறவினை வடிவம்.

**நவின்றோர்க்கினிமை** *naviṉṟōr-k-kiṉimai.* பெ. (n.). பயில்வோர்க்கு இன்பந் தருவதாகிய ஒருவகை நூலழகு (நன். 13.); sweet diction one of ten nūl-aḻagu

*[நவின்றோர்க்கு + இனிமை.]*

**நவு–தல்** *navu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. நெகிழ்தல் (யாழ்ப்.); to be come soft, to be soddened by boiling; to be weary, as the limbs by labour 2. மக்கிப்போதல்; to rot, decay, as clothes, books, wood

*[நலி → நவி → நவு–.]*

**நவு** *navu,* பெ. (n.) கொத்துமல்லி; coriander

*[நவ் + நவு.]*

**நவுக்கர்** *navukkar,* பெ. (n.) வேலையாள்; servant

**நவுகா** *navugā,* பெ. (n.) *நவுகு* பார்க்க; see *navugu*

*[நவுகு → நவுகா.]*

**நவுகு** *navugu,* பெ. (n.) கருமுருகி; edipre plant

மறுவ. கையாந்த

*[நவு → நவுகு.]*

**நவுட்டு—தல்** *navuṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *நவட்டு—தல் (இ.வ.)* பார்க்க; see *navaṭṭu-,*

*[நகட்டு → நவட்டு → நவுட்டு—.]*

**நவுரி** *navuri,* பெ. (n.) நமரி பார்க்க; see namari. *"திண்டிம நவுரிகாளம்"* (குற்றா. தல. 14, 15.) a kind of trumpet.

**க.** நவுரி.

*[நவு + நவுரி.]*

**நவூரியம்** *navūriyam,* பெ. (n.) சிவப்புச் சிற்றகத்தி; red variety of sesban.

*[நவு → நவூரியம்.]*

**நவை[1]—த்தல்** *navai-,* 4 செ.குன்றாவி. (v.t.) கொல்லுதல்; to kill. *"சூர்நவை முருகன் சுற்றத்தன்ன"* (புறநா. 23.).

*[நவு → நவை.]*

**நவை[2]** *navai,* பெ. (n.) **1.** குற்றம்; fault. **2.** தீமை; evil. "அருநவையாற்றுதல்" (நாலடி,295). **3.** இழிவு; disgrace. **4.** தண்டனை; punishment. "பெரும்பெயர் மன்னனிற் பெருநவைப்பட்டீர்" (சிலப்.16: 171).

*[நவு → நவை.]*

**நழுக்கம்** *naḻukkam,* பெ. (n.). **1.** உழவு படைச்சால் முதலியவற்றில், ஆழமின்மை (யாழ்ப்.); shallowness, as of a dent, an impression, a furrow. **2.** மழுங்கல்; bluntness, as of a point.

*[நழுங்கு → நழுக்கு → நழுக்கம்.]*

**நழுக்கு[1]—தல்** *naḻukku-,* 5 செ.குன்றா.வி. (v.t.) **1.** வருத்துதல்; to torture, distress *"நழுக்கு கோர நரகி லழுத்தினார்"* (குற்றா. தல. கவுற்சன. 66.). **2.** அரிசியை ஒன்றிரண்டாகக் குத்துதல் (யாழ்ப்.); to pound coarsely, as paddy. **3.** மழுங்கச்செய்தல் (யாழ்ப்.); to blunt, level. **4.** கீறுதல் (யாழ்ப்.); to make a shallow furrow, dent or impression. **5.** தந்திரமாய் விட்டுவிலகுதல்; to evade, to slip away.

*[நழுங்கு → நழுக்கு—.]*

**நழுக்கு[2]—தல்** *naḻukku-,* 5 செ.கு.வி. (v.i.) சிறிது சிறிதாக மலம் போதல்; to pass in stools, little by little என் குழந்தைக்கு மலம் நழுக்கிப் போகுது (இ.வ.)

*[நழுங்கு → நழுக்கு—,]*

**நழுங்கு—தல்** *naḻuṅgu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** மழுங்குதல் (யாழ்ப்.); to become blunted, as a point; to be dull. **2.** கீறப்பெறுதல்; to be ploughed with shallow furrows; to be written or engraven with a faint impression. **3.** வழுவுதல்; to slip

*[நழு → நழுங்கு—.]*

**நழுநழு—த்தல்** *naḻu-naḻu-,* 4 செ.கு.வி. (v.i.) பிடிகொடாது பேசுதல்; to speak evasively; to shuffle. பேசுவதைத்தெளிவாய்ப் பேசு, நழுநழுத்தலாகப் பேசாதே. (உ.வ.).

*[நழுவு → நழு → நழுநழு—.]*

**நழுப்பு—தல்** *naḻuppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **1.** மயங்கச் செய்தல்; to fascinate. *"நன்கொடு மனமது மறுகிட நழுப்பு நஞ்சென*

*சிறுமிகள்"* (திருப்பு. 5.). 2. வேலை செய்ய மறுகுதல்; to shrink from, shirk, as one's duty

*[நழுவு → நழுப்பு-.]*

**நழுவமுது** *nalu-v-amudu,* பெ. (n.) கூழ் (யாழ்.அக.); rice-gruel.

*[நழுவல் + அமுது.]*

**நழுவல்** *naluval.* பெ. (n) 1. பிடிகொடாது பேசுகை; evading. 2. மறைந்து செல்லுகை; skulking கூட்டத்திலிருந்து நழுவப் பார்க்கிறாள்(உ.வ.). 3. தீய பண் (திருவாலவா. 57, 14, அரும்); a defective note. (mus.).

*[நழுவு + நழுவல்.]*

**நழுவன்** *naluvan.* பெ. (n) *நளவன் (யாழ்.அக.)* பார்க்க; see *nalavan.*

*[நழுவல் → நழுவன்.]*

**நழுவி** *naluvi,* பெ. (n). பிடிகொடாதவன் (யாழ்ப்.); one who shuffles or gives indirect answers, slippery person

*[நழுவு → நழுவி.]*

**நழுவு-தல்** *naluvu-* 5 செ.கு.வி. (v.i.) 1. வழுவுதல்; to slip, as a garment. 2. தந்திரமாய் நீங்குதல்; to steal or skulk away, escape *"என்னல மேகொண்டு நழுவினர்காண்"* (அருட்பா. iii. இன், 5). 3. பிடி கொடாது பேசுதல்; to evade, shift, shuffle, give an indirect answer

*[நழு + நழுவு-.]*

தல்லீற்றுத்தொழிற்பெயர்.

**நழுவுசாதம்** *naluvu-sādam,* பெ. (n.) *நழுவமுது (யாழ்.அக.)* பார்க்க; see *nalu-v-amūdu*

**நள்[1](ளு)-தல் (நட்டல்)** *nal(lu)-.* 5 செ.குன்றாவி. (v.t.) 1. சேர்தல், அடைதல்; to approach, join, associate with. *"உயர்ந்தோர் தமை நள்ளி"* (திருவானைக். கோச்செங். 25). 2. நட்புக்கொள்ளுதல்; to contract friendship, befriend *"உறினட்டறினொரூஉ மொப்பிலார் கேண்மை"* (குறள்,812.). 3. விரும்புதல்; to like accept. *"நள்ளா திந்த நானிலம்"* (கம்பரா. கைகேசி. 26.). 4. செறிதல்; to dense "நள்ளிருள் யாமத்து" (சிலப்.15:105.)

*[நல் → நள் → நள்ளு-.]*

*நள்ளுதல் = விரும்புதல். நட்புக் கொள்ளுதல் (வே.க.3-52)*

**நள்[2]** *nal,* பெ. (n) 1. நடு; middle centre; *"நள்ளிராவும் நண்பகலும்"* (திவ். திருவாய். 4:7:2.). 2. உச்சிப்பொழுது (யாழ்.அக.); a mid-day 3. இரவு (பிங்.); night *"நள்ளிற் சாகிலன் பகலிடைச் சாகிலன்"* (கம்பரா. இரணிய. 17). 4. திருவோணம் (திவா.) பார்க்க; see tiruvōnam.

க. நள்.

*[நுள் → நள்.]*

*நள் = உள், நடு. ஒ.நோ. அகடு = உள், நடு.*

**நள்[3]** *nal.* பெ.எ. (adj) செறிந்த; dense *"மழைகுழுமி நாட்டம் புதைத்தன்ன நள்ளிருள்"* (திருக்கோ. 156.).

*[(நுல் → )நல் → நள்.]*

நள் + நள்ளு = செறிவு. (வே.க.3-52.)

**நள்ளலர்** *nallalar,* பெ. (n.) *நள்ளார்* பார்க்க; see *nallār.* *"நள்ளலர்க் கடந்த துப்பி னம்பியை"* (கந்தபு. மூன்றாநா. பானுகோப. யுத். 165).

*[நள் + அல் + அர் → நள்ளலர்.]*

*நடுவில்லாதவர், நடுநீங்கியவர் ஒருபாற்கோடி, மற்றொருவர்க்கு தீமைசெய்பவர் நடுவுநிலைமை நீங்கியவர்.*

**நள்ளாதார்** *nallādār,* பெ. (n.) *நள்ளார்* பார்க்க; see *nallār.* *"தந்நள்ளாதாரி ல்லத்து"* (நாலடி, 207).

*[நள் + ஆ → நள்ளா → நள்ளார் → நள்ளாதார்.]*

நள்ளார் = பகைவர். 'ஆ'= எதிர்மறை இடைநிலை. நட்புத்தன்மை இல்லாதவர்.

**நள்ளார்** *nallār,* பெ. (n.). பகைவர் (சூடா.); enemies, foes. *"நள்ளார் பெரும்படை"* (கம்பரா. அதிகாயன். 219).

*[நள் → நள்ளார். (வே.க.3–52).]*

மனத்தால் பொருந்தாதவர்.

ஒ.நோ.நண்ணார்.

**நள்ளி**[1] *nalli,* பெ. (n.) 1. நண்டு; crab. *"நள்ளி சேரும் வயல்"* (திவ். திருவாய். 9:10:2). 2.(கர்க்கடக) அலவ ஓரை (சூடா.); cancer in the zodiac. 3. கடைவள்ளல் ஒருவன்; a liberal chief, one of seven kadai-vallal. *"பிறங்கு மலை நள்ளி"* (புறநா. 148).

க., நள்ளி

*[நள் → நள்ளி.]*

ஈங்கு, தண்ணீரில் செறிந்திருக்கும் வண்டும், இரவலர்க்கு விரும்பிப் பொருளளிக்கும் வள்ளலும், செறிதற் கருத்தில் வந்த சொல்லாகும்.

**நள்ளி**[2] *nalli.* பெ. (n.) உறவு (சூடா.); relation ship.

*[நள் → நள்ளி.]*

நெருக்கம்பற்றியது உறவு.

செறிந்த உறவு.

**நள்ளி**[3] *nalli,* பெ. (n.) கடையெழு வள்ளல்களுள் ஒருவன்; one of seven kadai-vallal

*[நள் → நள்ளி.]*

அகநானூற்றின் 238 ஆம் பாடல், இவனைப் பற்றி கூறுகின்றது.

**நள்ளிடை** *nal-l-idai,* பெ. (n.) நடுவிடம்; middle place, central position *"நள்ளிடைச் சிவபுர நணுகு மன்னதை"* (சீகாளத் பு. சிலந்தி. 13).

*[நுள் → நள் + இடை = நள்ளிடை.] நள்ளி = நடுவிடம் (வே.க. 3.13)*

**நள்ளிரவு** *nalliravu,* பெ. (n.) நடு இரவு = mid-night.

*[நள் + இரவு → நள்ளிரவு.]*

நள் → நடுப்பொருளில் வந்தது.

இருள்செறிந்த நடுஇரவு நேரம். இராக்காலத்தில் – அதனின் நடுப்பகுதி நேரமாகிய, நள்ளிரவு. 'நள்' என்னும் ஓசை இடையீடின்றி ஒலிக்கும் இரவு, நள்ளிரவு.

**நள்ளிருணாறி** *nalliruṇāṟi,* பெ. (n.) இருவாட்சி tuscan jasmine. *"நரந்த நாக நள்ளிருணாறி"* (குறிஞ்சிப். 94.).

*[நள் + இருள் + நாறி.]*

*நடுஇரவில் மணம்வீசும். மல்லிகை மலர்.*

**நள்ளிருள்** *naḷ-ḷ-iruḷ,* பெ. (n.) செறிந்தவிருள்; intense darkness. *"நள்ளிருள் யாமத்து"* (சிலப். 15:105).

*[நள் + இருள்.]*

நள் = பொருந்தற்பொருளில் வந்தது.

இருள் பொருந்திய நள்ளிரவு நேரம். நன்கு அடர்ந்து செறிந்த இருள், நள்ளிருள் ஆகும்.

**நள்ளு** *naḷḷu,* பெ. (n.). 1. *நள், 1.* பார்க்க(வின்); see *naḷ* 1. 2. மருங்கு (யாழ்.அக.); side.

*[நள் → நள்ளு.]*

**நள்ளுநர்** *naḷḷu-nar,* பெ. (n.) நண்பர் (திவா.); friends, associates, adherents.

*[நள் → நள்ளு → நள்ளுநர்.]*

*நள்ளுதல் = நட்புச்செய்தல் (வே.க.3–52).*

**நள்ளெனல்** *naḷ-ḷ-eṉal,* பெ. (n.) ஓர் இசைக் குறிப்பு; onom expr. signifying a kind of subdued noise *"நள்ளென் மாலை மருதம் பண்ணி"* (புறநா. 149.).

*[நள் + எனல்.]*

'நள்' = ஒலிக்குறிப்புச்சொல்.

பறவைகளும், விலங்குகளும், மாந்தரும், பிறபிறவும் வெளிப்படுத்தும் தொடரோசை அடங்கிய பின்பு, வெளிப்படும் இசைக்குறிப்பு. (எ.டு.) *"ஒலியவிந்து அடங்கி யாமம் நள்ளென"* (நற்.303:1.).

*"நள்ளென் யாமத்து"* (குறுந்.160:4.). நள்ளென்னும் ஒலிக்குறிப்பு கழகவிலக்கியத்தில், நெடுநல்;186, நற்.22:11; 333:12; குறுந்தொகை 6:1; 160:4; 244:1. போன்ற பலவிடங்களில் இசைக்குறிப்புச் சொல்லாக இடம் பெற்றுள்ளது.

**நள** *naḷa,* பெ. (n.). தமிழ்ஆண்டு என்பதாக வழங்கும், அறுபதனுள் ஐம்பதாமாண்டு; the 50th year of the jupiter cycle

*[நள் → நள .]*

**நளகம்** *naḷagam,* பெ. (n.) காலின் உட்புறத்திலுள்ள எலும்பு; the large bone of the lower leg. 2. முன் காலெலும்பு; the skin bone. 3. குழாயைப் போன்ற உறுப்பு; a tubular organ of the body 4. நீண்ட எலும்பு; long bone of the body.

*[நள → நளகம்.]*

**நளகி** *naḷagi,* பெ. (n.) தாமரை; lotus flower.

*[நள → நளகி.]*

**நளகுகா** *naḷagugā,* பெ. (n.) சீனிக்கொத்த வரை; a kind of custer beans.

*[நளகு → நளகுகா.]*

**நளசிசுமஞ்சரி** *naḷaśiśu-mañjari,* பெ. (n.) துளசி; holy basil.

*[நளசி + சுமஞ்சரி.]*

**நளத்தம்** *naḷattam,* பெ. (n.) *சடாமாஞ்சி (மலை.)* பார்க்க; see *śaḍa - māñji.*

*[நள + நளத்தம்.]*

**நளத்தி** *na/atti,* பெ. (n.). நளவரினப் பெண் (யாழ்.அக.); a woman of the naḷavar caste.

*[நளத்து → நளத்தி.]*

**நளப்பன்** *na/appan,* பெ. (n.) வெட்பாலை; dyer's oleander, (blue dying rose bay).

*[நளப்பு → நளப்பன்.]*

**நளபன்** *na/aban,* பெ. (n.) சணல் (சா.அக.); hemp.

**நளபாகம்** *na/a-bāgam,* பெ. (n.) **1.** நளன் சமைத்தது போன்ற மேன்மையான உணவு; excellent cooking as that of Naḷan. **2.** நன்றாய்ச் சமைத்த உணவு; food cooked excellently.

*[நளம் + பாகம்.]*

நன்கு பக்குவப்படுத்தி, உண்பதற்கு ஏற்றவண்ணம் சமைத்த உணவு.

**நளம்**[1] *na/am,* பெ. (n.). நளவ இனம் (யாழ்ப்.); a caste in jaffna.

*[நள + நளம்.]*

**நளம்**[2] *na/am,* பெ. (n.). அகலம் (சது.); width, breadth, extent.

*[நள் → நளி + நளம்.]*

நள் = நடுப்பரப்பின் அகலம்.

நளம் எனுஞ்சொல் பொருந்துதற் கருத்தினின்ற கிளைத்தசொல். (வே.க.3–52.)

**நளம்**[3] *na/am,* பெ. (n.) ***தாமரை (மலை.)*** பார்க்க; see *tāmarai.*

*[நளினம் → நளம்.]*

**நளம்**[4] *na/am,* பெ. (n.) முப்பது இரண்டு சிற்ப நூல்களிலொன்று; name of treatise on architecture, one of the 32 siṟpanūl.

*[நள → நளம்.]*

**நளம்**[5] *na/am,* பெ. (n.). **1.** தாமரை; lotus **2.** ஓர் பூடு;- a kind of herbal.

*[நளி → நளம்.]*

**நளம்பள்ளு** *na/am-pa//u,* பெ. (n.) நளவரும் பள்ளருமாகிய இனம்; the naḷavar and the paḷḷar castes.

*[நளம் + பள்ளு.]*

**நளமீன்** *na/a-mīn,* பெ. (n.). ஒருவகைமீன்; a kind of fish.

*[நள + மீன்.]*

**நளவன்** *na/avan,* பெ. (n) கள்ளிறக்கும் இனத்தவர் (யாழ்ப்.); a person of the caste of toddy-drawers.

**நளவெண்பா** *na/a-venbā-* பெ. (n.) ஒரு செய்யுள் நூல்; a poetic verse, in veṇbā metre.

இந் நூல், நளன் என்ற மன்னன் சூதாட்டத் தினால் அடைந்த நிலையை, வெண்பாச் செய்யுட்களில், விளக்கு கிறது.

மகாபாரதத்திலுள்ள, 'நளோபாக்கியானம்' என்ற பகுதியைத் தழுவி, எழுதப்பட்டது.

இதனை இயற்றியவர், புகழேந்திப் புலவர் ஆவார்.

**நளல்** *na/al,* பெ. (n ) நண்டு; crab.

*[நள்ளல் → நளல்.]*

வளைக்குள் பொருந்திக்கிடத்தலால் வந்தபெயர்.



**நளன்¹** *na/an,* பெ. (n.) 1. நிடதநாட்டரசனும் நைடதத்தின் பாட்டுடைத் தலைவனுமான மாமன்னன்; a famous emperor of Niṣadha, hero of the Niḍatam. 2. இராமனுடைய குரங்குப்படைத் தலைவன்–வீரன்; a monkey belonging to Rāmās hosts, said to have built the Adam's Bridge for Rama and his army to cross over to ceylon. *"நளன் வருகென்றனன் கவிக்கு நாயகன்"* (கம்பரா. சேதுப். 1.). 3. முதல்வள்ளல் க ளொருவன்; name of a liberal chief one of seven mudal-vaḷḷalgaḷ.

*[நளம் → நளன்.]*

**நளன்²** *na/an,* பெ. (n.) ஒருவகைக் குரங்கு; a kind of monkey

**நளி¹–தல்** *na/i-,* 2 செ.கு.வி. (v.i.) 1. செறிதல்; to be close together, crowded. *"நளிந்துபலர் வழங்காச் செப்பந் துணியின்"* (மலைபடு. 197.). 2. பரத்தல்; to be vast in extent. *"நளிந்த கடலுட் டிமிறிரை போல்"* (களவழி. 18). 3. ஒத்தல் (தொல். பொருள். 291); to resemble.

*[நுல்⁶ → நல் → நள் → நளி–, 'நுல்⁶' பொருந்துதற் கருத்தினின்று கிளைத்த சொல். ஒத்தபொருள் பொருந்தும். பொருந்திய பொருள் பரந்து சிறக்குத் தன்மைத்து. ] (வே.க.3–52).*

**நளி²** *na/i,* பெ. (n ) கடுங்குளிர் அல்லது நடுங்கு குளிர்; chillness

*[நள் + நளி.]*

இரவின் நடுப்பகுதி குளிர்மிக்கது. கடுங்குளிரால், நடுங்கச்செய்யும் நடுஇரவு.

**நளி³** *na/i,* பெ. (n ) 1. செறிவு; closeness, density. *"நளியென் கிளவி செறிவு மாகும்"* (தொல். சொல். 323). 2. பெருமை; greatness, vastness. *"நளியும் பெருமை"* (தொல். சொல். 320). 3. அகலம் (சது); width, breadth, extent. *"நளிகடற் றண்சேர்ப்ப"* (நாலடி, 166). 4. கூட்டம் (பிங்.); crowd, multitude 5. செருக்கு; conceit, vanity. *"விந்தகிரி நளி நீக்கென்றான்"* (சேதுபு. அகத். 3). 6. தண்மை; உறைகுளிர்ச்சி; coldness frigidity. *"மரம் பிறங்கிய நளிச்சிலம்பில்"* (புறநா. 136). 7. *வெள்ளைச் சாரணை (தைலவ. தைல.)* பார்க்க; see *vel/aiccāranai.* white trian thema 8. *நளினம்² 2, 3, 4* பார்க்க; see *na/inam² 2, 3, 4.* *'அவன் எப்போதும் நளிபேசிக் கொண்டிருப்பான்'* (நாஞ்.).

*[நல் → நள் → நளி (வே.க. 3: 52).]*

**நளி⁴** *na/i,* பெ. (n ) தேள் (பிங்.); scorpion

*[நள் → நளி .]*

செறிந்த நஞ்சினைக் கொடுக்கில் கொண்டது.



**நளிகை** *naḷigai,* பெ. (n.) **1.** ஒருவகைக் குழல்; a kind of syringe. **2.** மூங்கிற் குழாய்; bamboo pipe

*[நுல் → நள் → நளி → நளிகை.]*

*நள் → நூள் → நாளம் = உட்டுளை, உட்டுளைப்பொருள். அரிசி அல்லது நெல்லளக்கும் படி முதன்முதல் மூங்கிற் குழாயாலேயே அமைந்தது. "உட்டுளைப் பொருளைத் தோற்றுவிக்குஞ் சொற் களைத்தும் "நுல்²" என்னும் துளைத்தற் கருத்தில் தோன்றியவையே" (எ.டு.). இசைக்குழல், (நாதசரம்), புல்லாங்குழல், மூங்கிற்குழல், மூங்கிற்படி புறக்காழது. (வே.க. 3: 18).*

**நளிநீருகம்** *naḷinīrugam,* பெ. (n.) தாமரைத் தண்டு; lotus stalk.

*[நளி + நீருகம்.]*

**நளிப்பு** *naḷippu,* பெ. (n.) செறிவு; closeness overcrowdedness. *"பழந்தூங்கு நளிப்பில்"* (அகநா. 18:15.).

*[நுல்⁶ → நல் → நள் → நளி → நளிப்பு. (வே.க. 3: 52) ]*

**நளிய** *naḷiya,* இடை. (part.) ஓர் உவம உருபு (தொல். பொருள். 1237); a particle of comparison

*[நளி → நளிய. ]*

உவம உருபுகள் நான்குவகைப்படும். அவற்றுள், 'நளிய' எனும் உவம உருபு உருவகம் வகையைச் சார்ந்தது.

(எ.டு.) *"போல மறுப்ப ஒப்பக் காய்த்த நேர வியர்ப்ப நளிய நந்த என்று ஒத்துவரு கிளவி உருவின் உவமம்"* (தொல். பொருள். 1237.).

மேற்குறித்த உவம உருபுகள். வரலாற்று முறையால், பொருள்களை யுணர்த்தும் தன்மையைச் சுட்டுவனவாகும்.

**நளிர்¹-தல்** *naḷir-,* 4 செ.கு.வி (v.i) **1.** குளிர்தல்; to be cool *"நளிர்ந்தசீல னயாசலன்"* (திவ். பெரியாழ். 4:4:8). **2.** நடுங்குதல்; to shake, tremble.

*[நள் → நளி² → நளிர்-. ]*

**நளிர்²** *naḷir,* பெ. (n.) **1.** குளிர்; cold. **2.** நண்டு; (சூடா.); lobster

*[நள் → நளி → நளிர் .]*

குளிர்ந்த இடத்தில் வாழும் நண்டு, குளிர்மைப் பொருளைக் குறித்தது.

**நளிர்³** *naḷir,* பெ. (n.) **1.** குளிர்ச்சி (பிங்.); cold, frigidity, coldness *"நளிரிளந் திங்கள் சூடுங் கோலமார் சடையினானே"* (தேவா. 231: 4). **2.** காய்ச்சல், குளிர்சுரம்; ague, shivering fits, malaria. **3.** பகை (யாழ்.அக.); enmity

ம. நளிர்.

*[நள் → நளி² → நளிர். ]*

"நள் எனும் செறிதற் கருத்துவேர், செறிந்த குளிர்மையைக் குறித்துச் செய்யுட்களில் கடுங்குளிர், கடுங்காய்ச்சல், கடும்பகை

முதலான செறிதல் பொருண்மையில் நளிர் இடம் பெற்றுள்ளது, அறிக.

**நளிர்காய்ச்சல்** *na*ḷ*ir-kāyccal,* பெ. (n.) குளிர் காய்ச்சல்; shivering fever, ague.

*[நளி[2] → நளிர் + காய்ச்சல்.]*

நன்கு செறிந்த காய்ச்சல் என்னும் பொருளில் வந்துள்ளது.

**நளிர்குளிர்** *naḷir-kuḷir,* பெ. (n.) நடுங்கும் குளிர்; shivering cold.

*[நளி[2] → நளிர் + குளிர்.]*

**நளிர்சுரம்** *naḷir-šuram,* குளிர்காய்ச்சல்; shivering fever.

*[நள் → நளி[2] → நளிர் + சுரம். ]*

**நளிர்மண்** *naḷir-maṇ,* பெ. (n.). செம்மண்; red ochre.

*[நள் → நளி = நளி : செறிவு. நளி[1] → நளிர்[1] + மண் .]*

**நளிர்வி–த்தல்** *naḷirvi-,* 4 செ.குன்றாவி. (v.t.) நடுங்கச் செய்தல்; to cause to tremble *"நவையை நளிர்விப்பான் றன்னை"* (திவ். இயற். பெரியதிருவந். 43.).

*[நளி → நளிர் = குளிர். நளிர் → நளிர்வு– நளிர்வித்தல் = குளிர்வித்தல் .]*

**நளிவிடம்** *naḷi-viḍam,* பெ. (n.) தேளின் நஞ்சு; poison from scorpion sting.

*[நளி + விஷம் + skt.விடம்.]*

**நளிவு** *naḷivu,* பெ. (n.). செறிவு; attachment, holding fast. *"வளியா வறியாவுயிர் காவல் கொண்டு நளிவாய்"* (கலித். 103).

*[நள்[1] → நளி → நளிவு.]* (வே.க.3–52.)

**நளினக்கதை** *naḷiṉa-k-kadai,* பெ. (n ) 1. நகையாட்டும் (விகடப்) பேச்சு (யாழ்.அக.); jest, joke, fun. 2. இச்சகப் பேச்சு (யாழ்.அக.) coaxing, flattering talk.

மறுவ. சிரிப்புக்கதை.

*[நள் → நளினம் + கதை.]*

**நளினக்காரன்** *naḷiṉa-k-kāraṉ,* பெ. (n.) 1. நகையாட்டுப் (சாதுரிய) பேச்சுள்ளவன் (வின்.); wag, witty, humorous man. 2. கோமாளி; buffoon. 3. ஏளனஞ் செய்வோன்; mocker, scoffer.

மறுவ. நையாண்டிக்காரன்.

*[நளி → நளினம் + காரன் .]*

திறமையுடன் பேசி அனைவரையும் மகிழ்விப்பவன்.

**நளினகங்கை** *naḷiṉa-kaṅgai,* பெ. (n.) சித்தினி இனப்பெண்; one of the four classes of women divided accurding to lust.

*[நள் → நளி[1] → நளிம் + கங்கை. ]*

**நளினநாபி** *naḷiṉa-nābi,* பெ. (n.) தாமரை போன்ற கொப்பூழ்; lotus shaped navel.

*[நளி → நளினம் + skt. நாபி.]*

**நளினம்[1]** *naḷiṉam,* பெ. (n.) 1. *தாமரை (சூடா.)* பார்க்க; see *tāmarai* *"நாளங்கொ ணளினப்*

*பள்ளி"* (கம்பரா. சூர்ப்ப. 4.). 2. தண்ணீர் (யாழ்.அக.); water. 3. நறுமணப் பண்டம்; a fragrant substance. 4. பாசி; moss.

த. நளினம் → skt. naḷina.

*[நளி → நளினம் ]*

**நளினம்**[2] *naḷiṉam,* பெ. (n.) 1. நயச்சொல்; pleasing attractive speech. *"பயிலு மானவர் பேச னளினமே"* (சேதுபு. திருநா. 115). 2. நகையாட்டு ஏளனம் (வின்.); pleasantry, jesting. 3. முரண்நகைச் சுவை, நிந்தை (வின்.); irony, satirical language. 4. ஏளனம் (வின்.); buffoonery, mocking, scoffing, ridicule.

*[நளி → நளினம்.]*

பிறர்தம் உள்ளத்தைக் குளிர்விக்கும் பொருட்டு, செறிந்த நகையுணர்வுடன் சொல்ல ாடுதல் நனம் ஆகும்.

**நளினம்**[3] *naḷiṉam,* பெ. (n.) கொப்பூழின் கீழ், வலதுபுறம், தொங்கும் நிலையில் அமைந் துள்ள, ஐந்து விரல நீளமுள்ள பை; a worm like diverticulum.

*[நளி → நளினம்.*

**நளினமாதா** *naḷiṉa-mādā,* பெ. (n.) சடா மாஞ்சில்; a medicinal grass known as indian spikenard.

*[நளி → நளினம் + skt. மாதா .]*

**நளினவிருட்சம்** *naḷiṉa-viruṭcam,* பெ. (n) முண்டினி மரம்; (சா.அக.) an unknown tree.

*[நளினம் + skt. விருட்சம் .]*

**நளினவேதி** *naḷiṉa-vēdi,* பெ. (n.) செம்மரம்; red tree

*[நளினம் + வேதி.]*

**நளினாட்சமாலை** *naḷiṉāṭca-mālai,* பெ. (n.) தாமரை மணிமாலை (நித்தியா. 6.); necklace of lotus seeds.

*[நளி → நளினா + skt. அட்சமாலை.]*

**நளினி**[1] *naḷiṉi,* பெ. (n.) 1. பாற்சோற்றி; indian gutta percha - Dichopsis elliptica. 2. ஒரு நறுமணப் பொருள்; a fragrant substance. 3. தேங்காய்ப் பாலினின்று தயாரிக்கும் ஓர் வகைப் போதைப் பொருள்; a fermented and intoxicating substance prepared from the milk extracted from the cocoanut 4. தாமரை; lotus. 5. பத்மினி இனத்துப்பெண்; first of the four classes of women divided according to lust.

*[நளி → நளினி.]*

**நளினி**[2] *naḷiṉi,* பெ. (n.) 1. திருமகள் (உரி.நி.); Thirumagaḷ (lakṣhmi.) 2. தாமரைத்தடாகம் (பிங்.); lotus tank. 3. பண்வகை (அக.நி.); a musical mode (mus.).

*[நளி → நளினி. ]*

**நளினீசம்** *naḷiṉīšam,* பெ. (n.) தாமரைமணி; lotus-bead.

**நளினீருகம்** *naḷinīrugam,* பெ. (n.) தாமரைத் தண்டு (சங்.அக.); lotus stalk.

**நளினை** *naḷiṉai,* பெ. (n.) திருமகள் (வின்.); Tirumagaḷ (lakṣhmi.).

**நளு** *nalu,* பெ. (n.) அட்டை; centripede.

**நளுக்கல்** *nalukkal,* பெ. (n.) நெல்லின் இரண்டாங்குத்து; second perinding of paddy. அருக்கல் குத்தினாள், நளுக்கல் குத்துவாள் (உ.வ.).

**நளுக்கு[1]-தல்** *nalukku-,* 5 செ.கு.வி. (v.i.) நடுக்குதல்; to shake, tremble. *'காலைமுதல் உடம்பு நளுக்கிக் கொண்டேயிருக்கிறது'* (நாஞ்.).

*[நருக்கு → நளுக்கு-.]*

**நளுக்கு[2]-தல்** *nalukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) *நழுக்கு-, 2.* பார்க்க; see *nalukku-. 2.*

*[நழுங்கு → நளுக்கு-.]*

**நளுங்கு[1]** *nalungu,* பெ. (n.) *1. அழுங்கு,[1]* பார்க்க; see *alungu* 2. கிளிஞ்சல்; bivalve, mussel.

*[நளு → நளுங்கு.]*

**நளுங்கு[2]** *nalungu,* பெ. (n.) ஒரு பெரிய பல்லி; a large lizard. (தமி. ஆங். அக.)

*[நளு → நளுங்கு.]*

**நளுத்தை** *naluttai,* பெ. (n.) பண்வகை (வின்.); a kind of melody.

**நளுநொளு-த்தல்** *nalu-nolu-,* 4 செ.கு.வி. (v.i.) நொளநொளத்தல்; to be soft and mashy.

*[நசி → நலி → நளி → நளு.*
*நொசி → நொயி → நொளி → நொளு-.]*

*நளுநொளு = கட்டியான திடப்பொருள் நைந்து அல்லது மசிந்து கூழாகுதல்.*

**நற்கடைப்பிடி** *narkadai-p-pidi,* பெ. (n.) பழுதற்ற சிந்தனை; pure thought (சம. சொ. அக.).

*யாவருக்கும் நலமே நல்கும், தீதற்ற சிந்தனை.*

**நற்கணம்[1]** *nar-kanam,* பெ. (n.) செய்யுளின் தொடக்கத்தில் வருமாறு அமைத்தற்குரிய, நிலம், நீர், மதி, இயமானன் என்ற நான்குகணம் (பிங்.); the four kinds of metrical feet with which a poem may auspiciously begin.

*[நல்கணம் → நற்கணம்.]*

**நற்கணம்[2]** *nar-kanam,* பெ. (n.) நற்கூட்டம் வானுலகில் இருப்பதாகக் கூறப்படும் தேவர்கள் (தக்கயாகப்.183, உரை.); hindu Gods numbering thirty three crores. good gang.

*[நல்[1] + கணம்.]*

**நற்கதி** *nar-kadi,* பெ. (n.) துறக்க முதலிய நற்பதவி; bliss, salvation. *"இறுதியி னற்கதி செல்லும் பெருவழி"* (மணிமே. 12:59.).

*[நல் +* skt *கதி.]*

**நற்கந்தம்** *narkandam,* பெ. (n.) நல்லமணம்; fragrant smell.

*[நல் +* skt*கந்தம்.]*

தீமை பயக்காத நறுமணம். எந்நிலையிலும் எப்போதம் நலமே நல்கும் நறுமணம்.

**நற்கரணாதியெலும்பு** *narkaranādi-elumbu,* பெ. (n.) மாரெலும்பு; breast bone, chest bone, sternum.

*[நற்கரணாதி + எலும்பு.]*

**நற்கருணை**[1] *nar-karuṇai,* பெ. (n.) இரா வுணவு (கிறித்.): sacrament of the eucharist

*[நல் + skt கருணை.]*

கிறித்துவதேவக் கோயில்களில் (ஆலயங்களில்), இராப்பொழுது சமயமெய் (விணை) வழிபாடு முடிந்த பின்பு, தரும் அருளுணவு.

**நற்கருணை**[2] *nar-karuṇai,* பெ. (n) காறாக் கருணை; (சா.அக.); elephant foot yam having no acrid taste

தொண்டையில் காறுதல் இல்லாத, கருணைக்கிழங்கு.

**நற்கருணைகொடு—த்தல்** *nar-karuṇai-koḍu-* 4 செ.கு.வி. (v.i.) கிறித்துவ தலைமைப் பேராயர், அவைபாருக்கு நற்கருணை பண்ணி வைத்தல்; to administer the sacrament

*[நல் + skt கருணை + கொடு—.]*

நூறு ஆண்டுகளுக்குமுன், மொழி பெயர்க்கப்பட்ட பைபிளில் கருணை முதலான வடசொற்கள் மிகுதியாகப் பதிவாகி உள்ளன.

**நற்கருணைபரிமாறு—தல்** *nar-karuṇai parimāru-,* 4 செ.கு.வி. (v.i.) *நற்கருணை கொடு—.* பார்க்க: see *nar-karuṇai-koḍu-*

*[நல் + skt கருணை + பரி + மாறுதல்.]*

பிழைசெய்தவர், அத் தவற்றைக் கூறுங் கால், அருளுணர்வோடு அது மன்னிக்கப் பட்டதாகத் தெரிவித்தல்.

**நற்கல்** *narkal,* பெ. (n) ஆட்டுக்கல்; granite stone mortar and pestle for grinding wet materials.

*[நல் + கல்.]*

திருகையைவிட உறுதிமிக்க நற்கல்லில் செய்யப்பட்டிருக்கும், ஆட்டுக்கல்

**நற்கள்ளி** *narkaḷḷi,* பெ. (n) அழுகண்ணி; (சா.அக.); indian weeping plant.

*[நல் + கள்ளி.]*

அழுகண்ணிச்செடியுள் மூன்று வகைகள் உண்டு 1. பெரும் அழுகண்ணி 2. சிறு அழுகண்ணி 3. நாட்டு அழுகண்ணி (சா.அக.).

**நற்கனிச்சாறு** *narkaṇi-c-cāru,* பெ. (n) இனிப்புப் பழத்தைப் பிழிந்த சாறு; juice of sweet fruit

*[நல் + கனி + சாறு.]*

**நற்காசு** *nar-kāšu,* பெ. (n) குற்றமற்ற பொற்காசு; pure gold coin, without any adulteration குற்றமற்ற அன்றாடு நற்காசு (S.I.I.vii.613.).

*[நல் + காசு.]*

உரையும் துளையும் எடையும் குறையாத, மதிப்புமிக்க பொற்காசு. மக்களிடையே புழக்கத்திலுள்ள, மாற்றுக்குறையாத பொன்னில் செய்தகாசு.

**நற்காட்சி** *nar-kāṭci,* பெ. (n) சமண சமயத்தின் மும்மணிக் கோட்பாடுகளுள் ஒன்று; right understanding one of

mummaṇi-k-kōṭpāḍu. *"மதிமாண்ட நற்காட்சி வழிநின்று தவந்தாங்கில்"* (சூளா. துற. 228.).

*[நல் + காட்சி.]*

தூயமனம், தூயமொழி, தூயசெயல் என்று சமணம் கூறிய நற்காட்சிக் கருத்துகளை எட்டாக்கி பௌத்தம் பகுத்தது, தழுவும் முயற்சியே.

**நற்காந்தபற்பமாக்கி** *naṟ-kānda-paṟpam-ākki*, பெ. (n.) இடுகொள்; four leaved cassia (சா.அக.).

மறுவ. இடிக்கொள், காட்டுக்கொள்

*[நல் + காந்தம் +* skt. *பற்பம் + ஆக்கி.]*

**நற்காமம்** *naṟ-kāmam*, பெ. (n.) ஒத்தகாமம்; reciprocated mutual love *"கைக்கிளைக்கும் பெருந் திணைக்கும் மெய்ப்பாடாவதன்றி நற்காமத்துக் காகாவென்பது கருத்து"* (தொல். பொருள். 265, உரை.).

*[நல் + காமம்.]*

ஒத்தகாமம் ஐந்திணை என்பது தொல்காப்பிய வழக்கு.

**நற்காரம்** *naṟ-kāram*. பெ. (n.) வழலை; efflorescent salt found on the soil of fullers earth.

*[நல் + காரம்.]*

**நற்காலம்**[1] *naṟ-kālam*, பெ. (n) 1. *நல்லகாலம்* பார்க்க; see *nalla-kālam*. 2. வாணாள், நல்லூழ் நுகர்ச்சி போன்றவை பெருகுங்காலம்; period of upward course in the evolution of the world

*[நல் + காலம்.]*

**நற்காலம்**[2] *naṟ-kālam*, பெ. (n) பருவமழை பொய்க்காது பெய்து, பயிர்விளையுங் காலம்; if the monsoon rain falls timely, the crops grow rich in right time *"இரண்டு நந்தா விளக்கு எரிப்பதாகவும், நற்கால வற்கால மெல்லாம்"* (S I I viii 10.).

*[நல் + காலம்.]*

**நற்கீர்த்தி** *naṟ-kirtti*, பெ. (n) பெரும்புகழ் (வின்.); fame, good report, good name

*[நல் + Skt. கீர்த்தி.]*

ஒ.நோ. மெய்க்கீர்த்தி (கல்வெட்டு).

**நற்கீரர்** *naṟ-kirar*, பெ. (n.) *நக்கீரர் (சங்.அக.).* பார்க்க; see *nakkirar*

*[நல் + கீரர்.]*

**நற்கு**[1] *naṟku*, பெ. (n) நன்மை; good *"பண்டுநற் கறியாப் புலம்பெயர் புதுவிர்"* (மலைபடு. 392.).

*[நன் + கு → நற்கு.]*

வலித்தல் திரிபு.

வழக்கில் நன்(மை) + கொடை = நற்கொடை என வழங்காது. பிழையாகி, நன்கொடை என்று மக்களிடையே வழங்குகிறது.

**நற்கு**[2] *naṟku* வி.எ. (adv) நன்றாக; well *"அது நற்கறிந்தனை யாயின்"* (புறநா. 35.).

*[நன்கு → நற்கு]*

**நற்குடி** *naṟ-kuḍi*, பெ. (n) நற்குலம்; good family *"நற்குடி நாற்பத் தெண்ணாயிரத்து வந்த கூடல்கிழான்"* (சேக்கிழார். 4:12.).

*[நல் + குடி → நற்குடி.]*

**நற்குணம்**[1] *naṟkuṇam,* பெ. (n.) நல்ல பண்பு; good habit.

*[நல் + குணம். ]*

மெய்யுரை, நற்சொல், இனியவைகூறல் பயனுடையன சொலல், இவை வாய்மொழி நலம்.

திருக்கோயில் வலம் வரல், பூங்காசெல்லல், விளையாட்டு, இவை உடலின் நலம்.

அருள் நினைவு, அவா அறுத்தல், தவப்பற்று இவை மூன்றும் மனத்தின் நற்குணம்.

**நற்குணம்**[2] *naṟ-kuṇam,* பெ. (n) நல்லொழுக்கம் அல்லது நல்ல தன்மை (வின்.); good character amiable disposition

*[நல் + குள் → குணம்.]*

குணம் = பணிவு, வளைவு, ஒத்துவரும் இயல்பு, மேன்மை, நிறம் மேம்பட்டுத் திகழும் அறிவு போன்ற பொருண்மையில், மக்களிடையே பயின்று வழங்குகிறது. நற்குணம் நான்கு வகைப்படும்.

1. வடிவம் – (எ.டு.) குள்ளவாத்து.

2. வண்ணம் – (எ.டு.) செந்தாமரை.

3. அளவு – (எ.டு) முத்தமிழ்.

4. இயல்பு – (எ.டு.) சுடுநீர்.

**நற்குணி** *naṟkuṇi,* பெ. (n) 1. நல்ல குணமுடைய பொருள்; drug with good porperties 2. காக்கை; crow

*[நல் + குணம் → குணி.]*

உயர்திணையைக் குறிப்பதுபோல் தோன்றினும், உணவிட்டால் காக்கை பத்துக்காக்கையைக் கரைந்து அழைத்துண்பதும், ஒரு காக்கை இறந்து விடின், நூறுகாக்கைகள் கூடுவதும், இதற்கு எடுத்துக்காட்டு.

**நற்குலம்** *naṟ-kulam,* பெ. (n.) உயர்ந்தகுடி; good or respectable family. *"நீடுசூத்திர நற்குலஞ் செய் தவத்தினால்"* (பெரியபு. இளையான். 1.).

*[நல் + குலம் → நற்குலம்.]*

**நற்குலமேரு** *naṟkula-mēru,* பெ. (n.) செம்பு மலை; (சா.அக.) mountain of copper ore

**நற்குறி** *naṟ-kuṟi,* பெ. (n) நன்னிமித்தம் (வின்.); good omen favourable sign

*[நல் + குறி → நற்குறி.]*

**நற்குன்றம்** *naṟkuṉṟam,* பெ. (n) திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற இடம்; a canonized place, by Tiruñāṉa-sambandar "குறும்பலா நீடு திருநற்குன்றம்" (சம்பந்த. தேவா.175–9.)

*[நல் + குன்றம் → நற்குன்றம்.]*

பலாமரங்கள் நிறைந்த குன்றுப் பகுதியான இடம் என்பதால், நற்குன்றம் எனச் சுட்டப்படுகிறது.

**நற்கேசி** *naṟ-kēsi,* பெ. (n) *நற்கோலி* பார்க்க; see *naṟkōli*

**நற்கையான்** *naṟ-kaiyāṉ,* பெ. (n) கரிசலாங் கண்ணி; eclipse plant

மறுவ. கரிசாலை.

**நற்கொம்மட்டி** *nar-kommaṭṭi,* பெ. (n.) *கொம்மட்டி மாதுளை* பார்க்க; see *kommaṭṭi-māḍuḷai.*

*[நல் + கொம்மட்டி.]*

**நற்கோலி** *nar-kōli,* பெ. (n.) *தக்கோலம்* பார்க்க; see; *takkōlam.*

**நற்கோவை** *nar-kōvai,* பெ. (n.) 1. தித்திப்புக் கோவை; (சா.அக.); sweet caper. 2. *நல்லகோவை* பார்க்க; see *nalla-kōvai.*

*[நல் + கோவை → நற்கோவை.]*

**நற்கோள்** *nar-kōḷ,* பெ. (n.) வியாழன் (குரு), வெள்ளி (சுக்கிரன்), நிலவு முதலிய நற்கோள் கள்; benign planets, as venus, jupiter the full moon, etc., *"வியந்த நற்கோளுயர்ந்துழி நோக்கி"* (பெருங். நரவாண. 1, 124.).

*[நல் + கோள்.]*

**நற்சக்தி** *nar-cakti,* பெ. (n.) *நவாச்சாரம்* பார்க்க; see *navāccaram.*

*[நல் + skt. சக்தி.]*

உடலில் உண்டாகும் எல்லாநோய்களையும் போக்கும் உப்பு என்று சா.அக. கூறும்.

**நற்சகுனம்** *nar-cagunam,* பெ. (n.) *நற்குறி (வின்.)* பார்க்க; see *nar-kuri.*

*[நல் + Skt. சகுனம்.]*

**நற்சகெந்தி** *narca-kendi,* பெ. (n.). *நற்பாசகெந்தி* பார்க்க; see *nar-pāša-kendi.*

**நற்சங்கலிதம்** *nar-cangalidam,* பெ. ஒ. ஒன்று முதலாக முறையே, எண்களை நிறுவும் கணக்குவகை (வின்.); arithmetical series of natural numbers one of 14 canka-lidam.

*[நல் + skt.சங்கலிதம்.]*

**நற்சங்கு** *nar-cangu,* பெ. (n.) சங்கஞ்செடி; four spined monetia

*[நல்சங்கு → நற்சங்கு.]*

**நற்சந்தனம்** *nar-candanam,* பெ. (n.) உயர் சந்தனமரம்; good sandal wood.

*[நல் + சந்தனம்.]*

**நற்சரக்கு** *nar-carakku,* பெ. (n.) 1. உயர்ந்த அல்லது மேலான சரக்கு; (சா.அக.); superior material 2. கலப்பில்லாச் சரக்கு; unadultered durg. 3. நல்ல நிலையில் உள்ள நேர்த்தியான சரக்கு; commodities in good condition.

*[நல் + சரக்கு.]*

**நற்சலாபம்** *nar-calādam,* பெ. (n.) பயனுள்ள முத்துக்குளிப்பு (வின்.); lucrative pearl - fishery.

*[நல் + Skt. சலாபம்.]*

**நற்சா** *narcā,* பெ. (n) 1. மகிழ்வான சாவு; happy death. 2. பிணிப்படாச்சாவு; death without sufferings from disease

*[நல் + சா → நற்சா.]*

'சாவ' என் ஈற்றுயிர்மெய் சாதலும் விதி. (நன்னூல்.)

**நற்சாங்கம்**[1] *nar-cāṅgam,* பெ. (n.) தாலம்ப வைப்பு நஞ்சு (சங்.அக.); a kind of prepared arsenic.

*[நல் + சாங்கம் → நற்சாங்கம்.]*

**நற்சாங்கம்**[2] *nar-cāṅgam,* பெ. (n.) நல்ல அடையாளம் (யாழ்.அக.); good sign or mark.

*[நல் + சாங்கம் → நற்சாங்கம்.]*

**நற்சாட்சி** *nar-cāṭci,* பெ. (n.) 1. பரிந்துரை; recommendation 2. பயனுள்ள சாட்சி; favour able testimony

*[நற் +* skt. *சாட்சி.]*

**நற்சாட்சிப்பத்திரம்** *nar-cāṭci-p-pattiram,* பெ. (n.) நல்லவரெனக் குறிக்குஞ் சீட்டு (துற்கா.); certificate of character and ability, letter of recommendation.

*[நல் + சாட்சி + பத்திரம்.]*

**நற்சாந்தம்** *nar-cāndam,* பெ. (n.) சிவந்த நச்சுப்புல்; red poisonous grass.

*[நல் + சாங்தம் → நற்சாங்தம்.]*

**நற்சாந்து** *nar-cāndu,* பெ. (n) 1. சுண்ணச் சாந்து; lime mortar, used in building, opp. to karuñjāndu 2. சன்னச்சாந்து; fine plaster, stucco

*[நல் + சாந்து → நற்சாந்து.]*

**நற்சார்பு** *nar-cārpu,* பெ. (n.) *நற்சார்வு (வின்.)* பார்க்க; see *nar-cārvu.*

*[நல் + சார்பு → நற்சார்பு.]*

**நற்சார்வு** *nar-cārvu,* பெ. (n.) 1. நல்லோர் கூட்டம்; good company நற்சார்வு சார்ந்தார் மேல் (நாலடி, 178.). 2. நல்லடைக்கலம்; safe refuge. 3. தெய்வநலங்கெழுமிய வல்லுநர் கூட்டம்; virtuous scholar 4. சமய நோன்பிகள்; religiousman. 5. தருமசிந்தை; virtuous

*[நல் + சார்வு → நற்சார்வு.]*

**நற்சாரி** *nar-cāri,* பெ. (n.) 1. நவச்சாரம் (மூ.அ.); sal ammoniac 2. *நற்சாறி* பார்க்க; see *nar-cāri.*

*[நல் + சாரி → நற்சாரி.]*

**நற்சாளை** *nar-cāḷai.* பெ. (n) உயர்ந்த சாளை மீன் வகை; a superior kind of oil - sardine or cāḷai.

*[நல் + சாளை → நற்சாளை.]*



**நற்சாறி** *narcāri,* பெ. (n) பளபளப்பானதும் எவ்வித மணமற்றதும், வெண்மையானதும் செங்கக்சூலையின் வேகாத பகுதிகளிலிருந்து சேகரிக்கப்படுவதுமான, கட்டித்தோற்றமுடைய மருந்துப்பொருள்; a colourless in odorous and translucent fibrous mass known as salammoniac (சா.அக.)

**மறுவ.** நவாச்சாரம்.

*[நல் + சாறி.]*

உடம்பிலுள்ள எல்லாக்கோளாறுகளுக்கும் நற்சாறி பயன்படும். இதை நவாச்சாரம் என்றும், அழைப்பர். நுரையீரல், கல்லீரல், மண்ணீரல், கருப்பை போன்றவற்றின் கோளாறுகளுக்கும், தலைவலி, நரம்புக் கோளாறு, கடுங்கோழை, இடுப்புவலி, ஈரல்நோய், மஞ்சட்காமாலை முதலான அனைத்து வகை நோய்களுக்கும், நற்சாறியைச் சாம்பலாக்கியும், கடைச் சரக்குகளுடன் சேர்த்தும் பயன்படுத்துவர். எல்லாவகையான ஊதை நோய்களையும் போக்கும்.

**நற்சான்றிதழ்** *naṟ-cāṉṟidaḻ,* பெ. (n.) ஒருவரின் நடத்தை குறித்துஅளிக்கும் சான்றிதழ்; conduct certificate.

*[நல் + சான்றிதழ்.]*

**நற்சித்தன்** *naṟ-cittaṉ,* பெ. (n.) உயர்ந்த நுண்கல்; a kind of precious stone (சா.அக.).

*[நல் + சித்தன் → நற்சித்தன்.]*

**நற்சித்தி**[1] *naṟ-citti,* பெ. (n.) 1. கருநொச்சி; an unknown black variety of chaste tree. 2. *விழுதி மூலிகை; a kind of herbal* medicine

*[நல் + சித்தி.]*

**நற்சித்தி**[2] *naṟ-citti,* பெ. (n.) தாயின்தங்கை அல்லது சித்தப்பாவின் மனைவி; mother's younger sister or wife of father's younger brother 2. தந்தையின் இளையமனைவி; father's second wife.

*[நல் + சித்தி.]*

நல்ல சிற்றன்னை, தாயுடன் பிறந்து வேறு வீட்டில் வாழும் சிற்றன்னை, அன்போடும், இரண்டாம் தாரமாகத் தந்தைக்கு வந்த சிற்றன்னை, வன்போடும் இருத்தல் இயல்பு.

**நற்சிலை** *naṟ-cilai,* பெ. (n.) கருங்கல் (யாழ்.அக.); black stone.

*[நல் + சிலை → நற்சிலை.]*

**நற்சிறிது** *naṟ-ciṟidu,* பெ. (n.) நிலவேம்பு; french chiretta.

**நற்சீந்தில்** *naṟ-cīndil,* பெ. (n) சீந்தில் வகை (வின்.); gulancha of a superior kind, moon creeper.

*[நல் + சீந்தல்.]*

**நற்சீர்**[1] *naṟcīr,* பெ. (n.) *நற்சீரகம்* பார்க்க; see *naṟcīragam.*

*[நல் + சீர் → நற்சீர்.]*

**நற்சீரகம்** *naṟ-cīragam,* பெ. (n) 1. சன்னச் சீரகம் (மூ.அ.); cumin, an annual. 2. *கருஞ்சீரகம் (மலை.)* பார்க்க; see *karuñ-jīragam,* black cumin.

**மறுவ.** சிறுசீரகம், கரிச்சீரகம்.

*[நல் + சீரகம் → நற்சீரகம்.]*

**நற்சீனப்பால்** *naṟ-cīṉa-p-pāl,* பெ. (n) பரங்கிப்பட்டை; china root

**நற்செங்கல்** *naṟ-ceṅgal,* பெ. (n.) காவிக்கல் (யாழ்.அக.); (சீவக. 353, உரை.) ochre

**நற்செய்தி**[1] *nar-ceydi,* பெ. (n.) நல்லசெய்தி (வின்.); good tidings, happy event.

*[நல் + செய்தி → நற்செய்தி.]*

**நற்செய்தி**[2] *nar-ceydi,* பெ. (n.) ஏசுபிரானின் வாழ்வு, அறவுரை குறித்து, புதியஏற்பாட்டில் நால்வர் எழுதிய குறிப்புகள்; gospel.

*[நல்செய்தி → நற்செய்தி.]*

**நற்செய்தியாளர்** *nar-ceydiyālar,* பெ. (n.) புதியஏற்பாட்டில் நற்செய்தியை எழுதியவர்; evangelist

**நற்சேந்தனார்** *narcēndanār,* பெ. (n.) சங்க காலப்புலவர்; a poet of Šaṅgam period

நற்றிணையில் 128–ம் அகநானூற்றில் 179 மற்றும் 232–ம் இவரியற்றியன.

*[நல் + சேந்தன் + ஆர் → நற்சேந்தனார். ]*

"பகலெரி சுடரின் மேனி சாயவும்
பாம்பூர் மதியின் நுதலொளி சுரப்பவும்
எனக்கு நீ யுரையா யாயினை நினக்கியான்
உயிர்பகுத் தன்ன மாண்பினே னாகலின்
அதுகண் டிசினால் யானே யென்றுநனி
அழுத லான்றிசி னாயிழை யொலிகுரல்
ஏனல் காவலி னிடையுற் றொருவன்
கண்ணியன் கழலன் தாரன் தண்ணெனச்
சிறுபுறங் கவையினனாக அதற்கொண்டு
அஃதே நினைந்த நெஞ்சமொடு
இஃதே கின்றுயா னுற்ற நோயே" (நற்.128.).

**நற்சேவுகன்** *narcēvagan,* பெ. (n.) கோடங் கிழங்கு; root of malabar glory.

மறுவ. கார்த்திகைக் கிழங்கு.

*[நல் + சேவகன். ]*

**நற்சொல்** *nar-col,* பெ. (n.) நற்குறி மொழி; word of good omen *"இருண்ட மாலை யிடத்து நற்செய்தி கேட்டது"* (பு. வெ. 14. கொளு. உரை.).

*[நல் + சொல் → நற்சொல். ]*

விரிச்சி என்று இடைக்காலத்துக் குறிக்கப்பட்ட குறிமொழி இன்றைய அறிவியலுக்குப் பொருந்தாமை அறிக.

**நற்பகல்நாயகி** *narpagal-nāyagi,* பெ. (n) புதர் போன்ற செடி வகை; kind of a thicket இதன் இலைகள் பூக்களில் இருந்து மணநெய் எடுக்கப்படுகின்றது (மூலி. களஞ்.).

**நற்பச்சை**[1] *narpaccai* பெ. (n) துரிசு; blue vitriol.

**நற்பசளை** *narpaśalai,* பெ. (n.) *பசலை* பார்க்க; see *pasalai.*

*[நல்பசளை → நற்பசளை.]*

**நற்படிரம்** *narpadiram,* பெ. (n) சந்தனம்; sandal wood paste

*[நற்படீரம் → நற்படிரம்.]*

**நற்பரங்குன்றி** *narparan-gunri,* பெ. (n) கடலுப்பு (சங்.அக.); sea-salt

மறுவ. சிந்துப்பு.

*[நல் + பரம் + குன்றி → நற்பரங்குன்றி. ]*

**நற்பலம்** *nar-palam,* பெ. (n) *வெட்பாலை (மலை.)* பார்க்க; see *vetpālai,* woolly dyeing rosebay

*[நல் + பலம் → நற்பலம். ]*

**நற்பலா** *naṟpalā,* பெ. (n.) வேர்ப்பலா; trunk jack fruit.

*[நல் + பலா → நற்பலா. ]*

வேர்ப்பகுதியில் காய்த்துப் பழுக்கும் சுவையுடைய பலா நற்பலா. உடல் நலத்திற்கு உகந்தது.

**நற்பவளம்** *naṟpavaḷam,* பெ. (n.) நல்லபவழம்; good coral

*[நல் + பவளம் → நற்பவளம். ]*

**நற்பன்னகம்** *naṟpaṉṉagam,* பெ. (n.) பாம்பின் நஞ்சு; snake poison.

*[நல் + பன்னகம் → நற்பன்னகம். ]*

**நற்பனை** *naṟpaṉai,* பெ. (n.) பெண்பனை; female palmyra tree.

*[நல் + பனை → நற்பனை. ]*

**நற்பாசகெந்தி** *naṟpāša-kendi,* பெ. (n.) தனிக்கந்தகம்; pure sulphate.

**நற்பாம்பு** *naṟpāmbu,* பெ. (n.) நல்லபாம்பு; cobra. (சா.அக.)

*[ நல் + பாம்பு → நற்பாம்பு. ]*

**நற்பாலை**[1] *naṟ-pālai,* பெ. (n.) பாலை மரவகை; (மாட்டுவா. 47.); a tree.

*[நல்பாலை → நற்பாலை.]*

**நற்பாலை**[2] *naṟ-pālai,* பெ. (n.) பாற்சோற்றுப் பாலை; milk - tree

*[நல்பாலை → நற்பாலை. ]*

**நற்பிரியம்** *naṟ-piriyam.* பெ. (n) **1.** மிக்க அன்பு (யாழ்.அக.); intimacy. **2.** பற்படாம் (மலை.); a chick weed.

*[நல் + skt.பிரியம். ]*

**நற்பிறப்பியல்** *naṟ-piṟappiyal,* பெ. (n.) மக்கள் இனத்தின் பண்புகளை உயர்த்துவதற்கான, வழிகளை ஆராயும் இயல்; eugenics

மரபுநிலை, சூழ்நிலை ஆகிய இரண் டினாலுமே, மக்கட் பண்புகள் உருவாக்கப் படுகின்றன. ஆனால், இவ்வியல் மரபினை மட்டுமே, முதன்மையானதாக எடுத்துக்கொண்டு செயல்படுகிறது.

**நற்பீடகம்** *naṟ-pīḍagam,* பெ. (n.) வாதுமைக் கொட்டை; almond.

*[நல் + பீடகம் → நற்பீடகம். ]*

**நற்பீர்க்கு** *naṟ-pīrkku,* பெ. (n.) கறிப்பீர்க்கு; common luffa.

*[நல்பீர்க்கு → நற்பீர்க்கு. ]*

பேய்ப்பீர்க்கு, காட்டுப்பீர்க்கு, கறிப்பீர்க்கு எனும் மூவகையுள் கறிப்பீர்க்கு மட்டுமே உண்பதற்குப் பயன்படுவதால், நற்பீர்க்கு என வழங்கலாயிற்று.

**நற்பு** *naṟpu,* பெ. (n) நன்மை; goodness *"நற்புடைய நாடமிர்து"* (சிறுபஞ். 4.).

*[நல்[1] → நல்பு → நற்பு. ]*

**ஒருகா.** நன்பு → நற்பு.

வலித்தல் திரிபு.

**நற்புத்தி** *naṟ-putti,* பெ. (n) **1.** அறிவுரை: advice, good counsel 'அவனுக்கு நற்பத்தி

சொன்னேன்' (உ.வ.). **2.** நல்லறிவு; right-mindedness உனக்கு நற்புத்தி இல்லையே (இக்.வ.)

*[நல் + புத்தி → நற்புத்தி. ]*

**நற்புதிற்பு** *narpu-tirpu,* பெ. (n.) நன்மைதீமை (நெல்லை); the good and the bad of a thing, merits and defects

மறுவ: நன்மைதின்மை

**நற்புறம்** *nar-puram,* பெ. (n.) துணிகளிலும், கடிதங்களிலும் அச்சிட்ட வடிவம், செம்மையாகத் தோன்றும் பக்கம் (இ.வ.); right side, as of a fabric

*[நல்[1] → புறம் → நற்புறம். ]*

**நற்போசனம்** *nar-pōšanam,* பெ. (n.) **1.** நல்ல சாப்பாடு; rich meals dainty dish. **2.** காய்கறி யுணவு; vegetable food.

*[நல் + Skt. போசனம் → நற்போசனம். ]*

*[நல் + போசனம். ]*

வடமொழியாளர்கள் புலால் உணவை வெறுத்தமையால், நற்போசனம் என்ற தலைப்புச்சொல்லிற்கு காய்கறியுணவு என்று வலிந்து பொருள் கூறுவர். நல்ல உணவு என்பது, புலால் உணவாகவும், புல்லுணவாகவும் இருக்கலாம்.

**நற்போர்** *nar-pōr,* பெ. (n.) அறநெறி தவறாத போர்; war in conformity with the traditional code of honour *"நற்போரோடா வல்விற்றூணி நாற்றி"* (முல்லை. 38.).

*[நல் + போர் = நற்போர். ]*

**நற்றங்கொற்றனார்** *narrankorranār,* பெ. (n.) சங்க காலப்புலவர்; a poet of šangam period

நற்றிணையில் 136ஆம் பாடல் இவரியற்றியதாகும்.

"திருந்துகோ லெல்வளை வேண்டியா னழவும்
அரும்பிணி யுறுநர்க்கு வேட்டது கொடாஅது
மருந்தாய்ந்து கொடுத்த அறவோன் போல
என்னை வாழிய பலவே பன்னிய
மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய
தலைப்பிரி வுண்மை யறிவான் போல
நீப்ப நீங்காது வரின் வரை யமைந்து
தோட்பழி மறைக்கு முதவிப்
போக்கில் பொலந்தொடி செறீஇ யோனே"
(நற்.136.).

**நற்றத்தம்** *narrattam,* பெ. (n) நற்றத்தனார் இயற்றிய ஒரு யாப்பு நூல் (யாப்.வி.); a treatise on prosody narrattanār.

**நற்றத்தனார்** *narrattanār,* பெ. (n) அகத்தியரின் மாணாக்கர், பன்னிருவருள் நற்றத்தமென்று வழங்கும் யாப்பிலக்கண மியற்றியவர் (யாப்.வி. 1, பக், 16.); the author of narrattam, said to be one of the 12 disciples of Agattiyar.

*[நல்தத்தனார் → நற்றத்தனார்.]*

**நற்றம்** *narram,* பெ. (n) நல்ல தன்மை; நல்ல பண்பு; goodness *"நாயினே செய்த குற்ற நற்றமாகவே கொள் ஞாலநாதனே"* (திவ். திருச்சந். 111.).

*[ நற்று → நற்றம். ]*

**நற்றமனார்** *narramanār,* பெ. (n.) புகழ்பெற்ற சங்கப்புலவர்; a famous šangam poet

"தோளே தொடிகொட் பானா கண்ணே
வாளீர் வடியின் வடிவிழந் தனவே நுதலும்

பசலை பாயின்று திதலைச் சில்பொறி யணிந்த பல்கா ழல்குல் மணியே ரைம்பால் மாயோட் கென்று வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்ற நாமுறு துயரஞ் செய்யல ரென்னுங் காமுறு தோழி காதலங் கிளவி இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த

தோய்மடற் சின்னீர் போல நோய்மலி நெஞ்சிற் கேமமாஞ் சிறிதே." (நற்.133.).

**நற்றரி—த்தல்** *naṟṟari-,* 4 செ.கு.வி. (v i.) நன்றாக நிலைத்தல்; to be well established, to settle firmly. *"பெரிய திருவடி கழுத்திலே நற்றரிக்கவிருத்தல்"* (திவ். திருமாலை, 10, வ்யா. பக். 47.).

*[ நள் + தரி → நற்றரி—, ]*

**நற்றலைதேவி** *naṟṟalaitēvi,* பெ. (n.) *கரிசலை* பார்க்க; see *karišalai.*

*[நல் + தலை + தேவி.]*

**நற்றவம்** *naṟṟavam,* பெ. (n) வீடு பெறுதற்குச் செய்யுந் தவம்; penance with a view to salvation *"நற்றவஞ் செய்வார்க்கிடம்"* (சீவக. 77.).

*[ நல்[1] + தவம் → நற்றவம். ]*

**நற்றவமூர்த்தி** *naṟṟava-mūrtti,* பெ. (n.) புத்தன் (திவா.); Buddhaṉ

*[ நல் + தவம் → நற்றவம் + மூர்த்தி. ]*

**நற்றாய்[1]** *naṟṟāy,* பெ. (n.) பெற்றதாய்; ones own mother. *"நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி"* (மணிமே. 22. 99).

*[ நல் + தாய் → நற்றாய். ]*

மகவை ஈன்றவளே தாய். இவளே நற்றாய் என்று இலக்கியங்களில் குறிக்கப்படுகிறாள். ஆனாலும், மகவை வளர்க்க அரண்மனைகளில், சிறப்பாகச் செவிலித் தாயார் இருப்பர். இன்றும் மேனிலைச்செல்வர்களின் வளமனை களில், வளர்ப்புத்தாயாரைக் காணலாம். நிகண்டுகள் ஐவகைத் தாயாரைப் பற்றிக் கூறுவது வருமாறு:—1. ஈன்றதாய். 2. ஊட்டுத்தாய். 3. முலைத்தாய். 4. கைத் தாய். 5. செவிலித்தாய்.

ஆகவே தாய் என்னும் பெயர், பெற்றவளை மட்டுமின்றி, மற்றவர்கள் சிலரையும், சிறப்பாகச் செவிலித்தாயையும் குறிக்கும் நிலை ஏற்பட்டமையால், பெற்றதாய், நற்றாய், எனப்பட்டாள்.

**நற்றாய்[2]** *naṟṟāy,* பெ. (n.) செவிலித்தாய்; foster mother.

*[ நல் + தாய் → நற்றாய். ]*

தோழியின் நற்றாயாகிய செவிலியை, அன்பு மிகுதி பற்றிக் கூறப்படுவது.

**நற்றாளி** *naṟṟāḷi,* பெ. (n) 1. தாளிக்கொடி; hedge bind weed 2. சிறுதாளி; common creamy white bindweed

*[ நல் + தாளி → நற்றாளி. ]*

**நற்றானம்** *naṟṟāṉam,* பெ. (n) தலைவனியற் பெயரின், முதன்மூன்றெழுத்துகளும், சிற்றிலக்கியத்தில், முதற்கண் வருமாறு பாடும், நன்மை விளைவிக்குஞ் செய்யுட்டானம் (பிங்.); a metrical device by which the first three letters of the name of the hero of a poem are made its opening letters, considered auspicious.

*[ நல்தானம் → நற்றானம். ]*

**நற்றிணை** *narriṇai,* பெ. (n.) பன்னாடு தந்த பாண்டியன் மாறன்வழுதி தொகுப்பித்ததும். எட்டுத்தொகையுள் ஒன்றானதும், அகப் பொருளைப் பற்றியதுமான தொகைநூல்; a classical anthology in Tamil, treating of aga-p-poruḷ compiled by pannāḍu-tanda-pāṇḍiyan-māran-valudi, one of ettu-t-togai

*[நல் + திணை → நற்றிணை.]*

நல் = நன்மை பயப்பது.

திணை = ஒழுக்கம்.

எந்நிலையிலும் எக்காலத்தும் வாழும் மாந்தர்தம் வாழ்வியல் நெறிகளைக் கூறும்பாடல்,

புறப்பாடல் நானூற்றைத் தொகுத்தபோது, ஆயிரத்து இருநூறு இருக்கவே, அவற்றுள் எட்டடிக்கு உட்பட்ட நானூறு பாடல்களைக் குறுந்தொகை என்றும், முப்பத்து மூன்றடிக்கு உட்பட்ட நானூறு பாடல்களை, அகநானூறு என்றும், வரையறுத்தபின், இடைப்பட்ட ஒன்பது அடிமுதல் பதினைந்து அடி வரை இருந்த பாடல்களை, நற்றினை நானூறு என்றும் வகுத்தமை உணரலாம்.

ஒருகா. நள் + திணை = நட்டிணை; ஈன்று நடுப்பட்ட அடிகள் கொண்டநூல் என்றுவழங்கி, நற்றிணை எனத் (நல் + திணை) திரிந்திருக்கலாம்.

நற்றிணைப் பாடல்கள் பழமையில் புதுமையைக் கூறுவனவாய் அமைந்துள்ளன. தொகுக்கப்பட்ட காலத்திலேயே நல் எனும் அடைச்சொல்லைப் பெற்றுள்ளன.

*"முந்தை இருந்து நட்டோர் கொடுப்பின் நஞ்சும் உண்பர் நனிநாகரிகர்"* (நற்.355.)

இப் பாடல்வரிகள், அகநாகரிகச் செம்மையும், நட்பின் பெருமையும் பேணிக் காக்கும் பெற்றிமையுடையன. எக் காலத்தும், எல்லாமாந்தரிடத்தும், குமுகாயத்தில் எஞ்ஞான்றும், பொருந்தித் திகழும் வாழ்வியல் உண்மையை, நிலையாமையை, நிலைநிறுத்துவன.

*"தேய்புரிப் பழங்கயிறு போல வீவது கொல்என வருந்திய உடம்பே"* (நற்.284) எனும் வரிகள் உணர்த்துகின்றன.

**நற்றிறம்** *narriram,* பெ. (n.) 1. அற(நீதி)நெறி; righteous course. *"நற்றிறம் படராக் கொற்கை வேந்தே"* (சிலப். வழக். 66.). 2. நோன்பு; vow *"நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி"* (மணிமே. 22:99.).

*[நல் + திறம் → நற்றிறம்.]*

**நற்று** *narru,* பெ. (n) நன்மை; that which is good. *"நற்றாங்கதி யடைவோமெனில்"* (திருவாச. 34:5.).

*[நல் + து = நற்று.]*

**நற்றுடி** *narruḍi,* பெ. (n.) 1. நாவல்மரம்; jambu 2. வேர்; tree. root.

**நற்றும்பை** *narrumbai,* பெ. (n.) 1. மூலிகை வகையுளொன்று; a kind of medicine. 2. காசித்தும்பை; flower toombay

*[நல் + தும்பை → நற்றும்பை.]*

**நற்றுளசி** *narruḷaśi,* பெ. (n.) நல்லதுளசி; holy basil.

*[நல் + துளசி = நற்றுளசி.]*

நாய்த்துளசி போன்று பயன்பாடாத் தன்மையினின்று, கடவுள் வழிபாட்டிற்கும் நுண்ணியிர் ஒழிப்பிற்கும், மருத்துவத்திற்கும் பயன்படும் தன்மையினால், இஃது நற்றுளசி என்றாயிற்று.



**நற்றுளி** *naṟṟuḷi,* பெ. (n.) 1. அத்திப்பிசின்; gum of fig tree. 2. அத்திமரம்; (சா.அக.); fig tree

*[நல்துளி→ நற்றுளி.]*

பிசின் துளித்துளியாய்க் கசிந்து படிவதாலும், அத்திப்பழத்தின் உள்விதை துளித்துளியாய் இருத்தலாலும், இப்பெயர் பெற்றது.

**நற்றூக்கம்** *naṟṟūkkam,* பெ. (n.) அயர்ந்த தூக்கம்; deep sleep.

*[நல் + தூக்கம்.]*

மறுவ. ஆழ்ந்த உறக்கம், ஆழ்துயில், நீடுதுயில்.

**நற்றூபம்** *naṟṟūbam,* பெ. (n.) 1. சாம்பிராணி; frankincense, benzoin 2. நறுமணத் தீபம்; fragrant fume

*[நல் + skt.தூபம்→ நற்றூபம்.]*

**நற்றேசி** *naṟṟēśi,* பெ. (n.) கழுதை; ass

*[நல்தேசி → நற்றேசி.]*

**நற்றோழி** *naṟṟōḻi,* பெ. (n.) அருமைத் தோழி; good, faithful maid. *“பாடுகம் வா வாழிதோழி நற்றோழி பாடுற்று”* (கலித். 41.)

*[நல் + தோழி→ நற்றோழி.]*

**நற** *naṟa,* பெ. (n.) *நறவு,* 1.2 பார்க்க; see *naṟavu,* 1.2 *“கொழு நீர் நறப்பருகும் பெரு நீர்மை யளிகுலமே”* (திருக்கோ. 123.).

*[நறா → நற.]*

**நறதியா** *naṟadiyā,* பெ. (n.) 1. வட்டத்துத்தி (சா.அக.); rox burghs lotus croton 2. பூசணிவகை; a kind of pumking.

**நறநறப்பு** *naṟa-naṟappu,* பெ. (n.) மன வேற்றுமை (இ.வ.); strained relationship, estrangement.

*[நற + நறப்பு.]*

இஃது, இரட்டைக்கிளவி.

**நறந்றவெனல்** *naṟa-naṟa-v-eṉal,* பெ. (n) நறநறெனல் பார்க்க; see naṟanaṟeṉal

**நறநறெனல்** *naṟa-naṟeṉal,* பெ. (n.) 1. பல்லைக் கடித்தற் குறிப்பு; grinding the teeth 2. சுரசுரப்புக் குறிப்பு; roughness, hardness

*[நறநற + எனல்.]*

**நறம்பருப்பு** *naṟam-paruppu,* பெ. (n) நறுமருப்பு (சங்.அக.); green ginger

மறுவ. இஞ்சி.

*[நறுமை + பருப்பு = நறும்பருப்பு.]*

ஒ.நோ. செந்தாமரை.

**நறவம்** *naṟavam,* பெ. (n) 1. தேன்; honey *“விரையார் நறவந் ததும்பு மந்தாரத்தில்”* (திருவாச. 6:36.). 2. கள்; toddy. *“அன்பெனு

*நறவ மாந்தி"* (கம்பரா. நாட்டுப். 1.). 3. பால்; milk. *"கோசொரி நறவ மென்ன"* (கம்பரா. சேதுப. 25.). 4. நன்மணம் (யாழ்.அக.); fragrance 5. சாப்பிரா (மலை.); ornotto. 6. மயிற் கொன்றை; peacocks crest. "நறவுமலி பாக்கத்து" (குறுந்.394.). 7. மணந்தருங் கொடி வகை; a kind of creeper. *"நந்தி நறவம் நறும்புன் னாகம்"* (குறிஞ்சிப். 91.). 8. குங்குமம் (மலை.); saffron. 9. ஞாழல் (மலை.); fotetid cassia

*[நறவு + அம் → நறவம். ]*

**நறவு** *naṟavu,* பெ. (n.) 1. தேன்; honey. *"நறவேய் கமழ்தெரியல்"* (பு. வெ. 3,11.). 2. கள்; toddy. *"சூடா நறவி னாண்மகி ழிருக்கை"* (பற்றுப் 85, 8.). 3. நன்மணம் (வின்.); odour, fragrance. *"நெய்த னற வுயிர்க்கு நீள்கடற் றண்சேர்ப்ப"* (நாலடி. 108.). 4. சாப்பிரா (மலை.); arnotto 5. நன்மணக் கொடி வகை; a kind of fragrance creeper. 6. சேரநாட்டிலுள்ளதோர் ஊர்; a city in the chērar dominions. *"ஊதையிற் பனிக்குந் துவ்வா நறவின் சாயினத்தானே"* (பதிற்றுப். 60, 12.).

*[நறு → நறவு.]*

**நறளை** *naṟaḷai,* பெ. (n.) 1. மரவகை (சங்.அக.); woolly heart-vine. 2. காட்டுப்பிரண்டை; pedately seven-leaved vine.

**மறுவ.** நறளைப் பூடு.

நறளை: = நறளை வகையுள், இதுவும் ஒன்று. கொடியும் மரமுமாகக் கலந்து காணப்படுகிறது என்று சாம்பசிவ மருத்துவ அகரமுதலி கூறும்.

1. புளிநறளை; sore creeper. இஃது படர் கொடி வகையைச்சார்ந்தது. காட்டுப் பிரண்டை என்று அழைக்கப்படுவது. சித்தமருத்துவத்தில் தோல் நோய்க்கும், செரியாமைக்கும் சிறந்த மருந்தாவது.

2. பெருநறளை; heart-leaved vine tree. மரவகையைச் சார்ந்தது; இதன் காய்கள் மேற்பக்கம் தட்டையாகவும், அடிப்பகுதி நான்கு பிரிவினதாயு மிருக்கும். இதனுள் நான்கு விதைகள் அமைந்துள்ளன. மழைக்காலத்திற் பூக்கும். இம் மரத்தின் பூக்கள் சிறியன. பச்சை நிறத்தன.

3. பெரும்புளி நறளை; large acid naralay.

4. சிறுபுளிநறளை; small acid naralay.

5. சிறு நறளை; large wooly lobed vine

**நறா** *naṟā,* பெ. (n.) 1. தேன் (வின்.); honey 2. கள்; toddy. *"அடுநறாக் காமம் போற் கண்டார்"* (குறள், 1090.). 3. நறுமணம் (வின்.); odour, fragrance.

*[நறு → ஆ =நறா.]*

**நறு** *naṟu,* பெ. (n.) அகல்; coromandel ailanto

**நறுக்கரிசி** *naṟu-k-karisi,* பெ. (n) பாதிவெந்த சோறு (நெல்லை.); rice half-boiled.

**மறுவ.** நொறுக்கரிசி.

*[நறுக்கு + அரிசி. ]*

*[ ஒருகா. நலுக்கரிசி → நறுக்கரிசி. ]*

**நறுக்கு¹–தல்** *naṟukku-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. வெட்டுதல்; to cut off. *"கைக்கத்திரிகை யிட்டு நறுக்கின தலையாட்டத்தினை யுடைய பரிகள்"* (பு. வெ. 3, 10, உரை.). 2. துண்டித்தல்; to mince, chop. கன்னலிடு மாலையி னறுக்கிடுதி (காசிக. சிவகன்மா. இயமன் 42.). 3. நொறுக்குதல்; to smash.

க., நரக்கு; தெ., நருக்கு; ம., நறுக்குக

*[நறுங்கு → நறுக்கு–,]*

*[நறுக்குதல் = வெட்டுதல், துண்டித்தல் நொறுக்குதல். உன்னைக் கண்டங் கண்டமாய் நறுக்குகிறேன் பார் என்னும் உலகவழக்கினை நோக்குக.]*

**நறுக்கு[2]** *narukku,* பெ. (n.) 1. துண்டு; piece, cut off 2. ஓலைச்சீட்டு; an ōlai bond, note of hand 3. பெருவங்கியம் (நாகசுரத்தின்) நாக்கு (வின்.); mouth piece of a pipe or clarionet.

**மறுவ.** தாழ்குரல், துளைக்கருவி, இசைக் குழல்.

*[நறு → நறுக்கு (வே.க. 3. 9.).]*

**நறுக்குக்கொடிச்சி** *narukku-k-kodicci,* பெ. (n.) தொழுகண்ணி; telegraph plant.

**நறுக்குச்சீட்டு** *narukku-c-cīttu,* பெ. (n.) *நறுக்கு, 2, (வின்.)* பார்க்க; see *narukku, 2.*

*[நறுக்கு + சீட்டு.]*

**நறுக்குத்திப்பலி** *narukku-t-tippali,* பெ. (n.) நறுக்கிய திப்பிலி வேர்த்தண்டு; pepper-stalk cut in small pieces.

**மறுவ.** தேசாவரம், திப்பிலிமூலம், கண்டத்திப்பிலி.

*[நறுக்கு + திப்பலி.]*

**நறுக்குத்தெறித்தாற்போல்** *narukku-t-terittār-pōl,* கு.வி.எ. (adv.) தெளிவாகவும் சுருக்கமாகவும்; succinctly. எதைப்பற்றியும் நறுக்குத்தெறித்தாற்போல் பேசுவதில், அவர் கைதேர்ந்தவர் (இ.வ.).

**மறுவ.** செறிவாக.

**நறுக்குநெட்டி** *narukku-netti,* பெ. (n) 1. நெட்டி; sola-pith 2. நறுக்கிய நெட்டிவேர்; root of the pith cut to make pith-toys

**நறுக்குப்புறுக்கெனல்** *narukku-p-purukkenal,* பெ. (n.) அரிசி முதலியன வெந்ததும், வேகாததுமாயிருத்தற் குறிப்பு (நாஞ்.); expr. signifying half-boiled condition, as of rice.

*[நறுக்கு + புறுக்கு + எனல்.]*

**நறுக்குமுறுக்கெனல்** *narukku-murukkenal,* பெ. (n.) கடினமானவற்றைக் கடித்துத் தின்னும் ஓசைக்குறிப்பு; onom. signifying biting sound of hard food-items. *'நறுக்குமுறுக்கென்று அரிசிமுறுக்கைக் கடித்தான்'* (உ.வ.)

*[நறுக்கு + முறுக்கு + எனல்.]*

**நறுக்குமுறுகெனல்** *narukku-murugenal,* பெ. (n.) பொறாமைக்குறிப்பு; expr. signifying jealously or envy. *"சிசுபாலாதிகள் நறுகுமுறு கென்றால்"* (ஈடு. 6:9:5.).

*[நறுகு + முறுகு + எனல்.]*

**நறுக்குமூலம்** *narukku-mūlam,* பெ. (n) 1. கண்டத்திப்பலி (தைலவ. தைல.); root of long-pepper. 2. வெட்டிவேர் (மூ.அ.); black cuscuss root. 3. நன்னாரிவேர் (சா.அக.); sarasaparilla.

*[நறுக்கு + மூலம்.]*

**நறுக்குவெட்டி** *narukka-vetti,* பெ. (n) வெட்டிநெட்டி; the stalathe.

**நறுக்கென்று** *naṟukkeṉṟu-,* கு.வி.எ. (adv) 1. *சுள்ளென்று வலிக்கும்படியாக;* sharply பாடத்தைக் கவனிக்காது, பேசிய மாணவன் தலையில் ஆசிரியர் நறுக்கென்று குட்டினார். (இ.வ.) 2. சுருக்கென்று மனதில் பதியும்படியாக; briefly. மேடையில் ஏறி நறுக்கென்று நாலுவார்த்தை பேசிவிட வேண்டும் போலிருந்தது. (இ.வ.)

*[நறுக்கு + என்று.]*

**நறுங்கரந்தை** *naṟuṅgarandai,* பெ. (n) கரந்தை வகை (யாழ்.அக.); sweet basil.

**மறுவ.** சிவகரந்தை நாறு கரந்தை.

*[நறும் + கரந்தை.]*

பண்பு முன்னொட்டுப்பெயர்.

**நறுங்கல்** *naṟuṅgal,* பெ. (n) *நருங்கல் (இ.வ.)* பார்க்க; see *naruṅgal*

*[நருங்கல் → நறுங்கல்.]*

**நறுங்கற்றாழை** *naṟuṅ-gaṟṟāḻai,* பெ. (n) *கற்றாழை வகை:* aloe

**நறுங்கு-தல்** *naṟuṅgu-,* 5. செ.கு.வி (v.i) வளர்ச்சி குறைதல்; to be stunted அவன் நறுங்கிப் போய்விட்டான்.

**க.,** நலுகு (g)

*[நுறு → நுறுங்கு → நறுங்கு-.]*

*நுல் எனும் வேரடியினின்று, கிளைத்த இச் சொல் நொறுங்குதல், பொடியாக்குதல் எனும் பொருண்மையினை அடிப்படை யாகக் கொண்டது. அடுத்த நிலையில் தேய்கையாதல், வளர்ச்சி குறைதல், எனும் பொருட் பாங்கில் மக்களிடையே வழக்கூன்றியது.*

**நறுங்குறிஞ்சி** *naṟuṅ-guriñji,* பெ. (n.) நல்ல குறிஞ்சி; cone head

**நறுசுவொறுசாக** *naṟušu-v-oṟušāga,* வி.எ. (adv) 1. செட்டாக; thriftily. '*அவள் நறுசு வொறுசாகப் பரிமாறுவாள்*' (உ.வ.). 2. நேர்த்தியாக; neatly.

**மறுவ.** சிக்கனமாக

*[நறுவிசு → நறுசு.]*

*'வி' = இடைக்குறை. நறுசுவொறுசு + ஆக. கட்டுச்செட்டாக வாழ்தலையும், சிக்கன மாயிருத்தலையுங், குறித்ததென்க.*

**நறுஞ்சுதை** *naṟuñjudai,* பெ. (n.) தூய்மையான ஆவின் பால் (தைலவ. தைல.); fresh milk of a cow

*[நறும் + சுதை.]*

பண்புத்தொகை.

**நறுஞ்சோதி** *naṟuñjōdi,* பெ. (n) நறுமணப்பூ; a fragrant flower

*[நறும் + Skt சோதி.]*

**நறுதடி** *naṟu-taḍi,* பெ. (n.) அடைகல் (யாழ்ப்.); goldsmiths anvil attached to a block

*[நறுக்கு + தடி → நறுதடி.]*

**நறுதடிக்குற்றி** *naṟutaḍi-k-kuṟṟi,* பெ. (n) அடைகற் கட்டை (வின்.); anvil-block of goldsmiths.

*[நறுக்குத்தடி → நறு + தடி + குற்றி.]*

**நறுந்தக்காளி** *narun-dakkaāḻi,* பெ. (n.) தக்காளி வகை; Winter cherry.

**நறுந்தாது** *narundādu,* பெ. (n.) 32 ஓமாலிகை களுளொன்றான நறுமணச்சரக்கு (சிலப். 6:7, உரை.).

*[நறும் + skt.தாது]*

**நறுந்தாளி** *narundāḻi,* பெ. (n) ஒருவகை நறுமணச்செடி வகை; a kind of fragrant plant

மறுவ. நறுநகை

*[நறும் + தாளி.]*

இதன் இலையைக் கீரையாக உபயோகிக்க உள்ளுறுப்பின் எல்லாவித அழலை, புண் முதலியன குணமாகும்.

**நறுந்தேன்** *narundēn,* பெ. (n.) கொம்புத்தேன்; medicinal honey

**நறுந்தை** *narundai,* பெ. (n.) *நறுந்தாளி* *(சங்.அக.)* பார்க்க; see *narun.dāḻi.*

*[நறு → நறுந்தை.]*

**நறுந்தைலம்** *narundailam,* பெ. (n.) நறுமண நெய்மம்; balsam.

**நறுந்தொகை** *narundogai,* பெ. (n.) அதிவீரராம பாண்டியனியற்றிய ஒரு அற(நீதி)நூல்; a minor didactic work by a pāṇḍiyan king, kulasēgaran, who ruled at korkai

*[நறும் + தொகை.]*

**மறுவ:** வெற்றிவேற்கை.

"கற்கைநன்றே கற்கைநன்றே பிச்சைப்புகினும் கற்கைநன்றே" என்பதுபோன்ற, பல்வகை நற்கருத்துப் பாக்களைக் கொண்ட குழந்தை இலக்கியம்.

**நறுந்தொடை** *narun-doḍai,* பெ. (n) மணமுள்ள மாலை (வின்.); fragrant garland.

**மறுவ.** தொங்கல்.

*[நறும் + தொடை.]*

**நறுநறெனல்** *naru-narenal,* பெ. (n) *நறநறெனல்* பார்க்க; see *nara-narenal*

*[நறு + நறு + எனல்.]*

**நறுநன்றி** *naru-nanri,* பெ. (n.) நன்னாரி (பதார்த்த. 492.); indian sarsasparilla

*[நறு + நன்று + இ.]*

*நறுநன்றி = நறுமணமிக்க கொடி.*



**நறுநாழி** *naru-nāḻi,* பெ. (n.) நிறை நாழி (இ.வ.); a measure filled with paddy

*[நறு+நாழி.]*

*திருமணம் முதலிய நன்னிகழ்வுகளில் மங்கலக்குறியாகப் படியில் நெல் வைத்து நிரப்பிய, நாழி.*

**நறுநாற்றம்** *naṟu-nāṟṟam,* பெ. (n.) நறுமணம் (வின்.); fragrance

*[நறு + நாற்றம்.]*

*மனங்கவரும் இனிமையான மணம்.*

**நறுநிண்டி** *naṟu-nindi,* பெ. (n.) நன்னாரி; sarasa parilla. (சா.அக.)

**நறுநுதல்** *naṟu-nudal,* பெ. (n.) அழகிய நெற்றியையுடைய பெண்; damsel, lady, as having a beautiful forehead.

மறுவ. நன்னுதல்

*[நல் + நுதல்]*

**நறுநெய்** *naṟu-ney,* பெ. (n.) ஆவின் நெய் (சங்.அக.); cows ghee of the best quality.

*[நறும் + நெய்.]*

**நறும்பிசின்** *naṟum-piśiṉ,* பெ. (n.) **1.** கரிய போளம்; socotrine aloe. **2.** இனிய மணமுள்ள பிசின்வகை (யாழ்.அக.); a kind of fragrant gum. *"நறும்பிசி னாகண நற்கோட்டம்"* (சிலப். 7. 76, அரும். மேற்கோள்.).

*[நறும் + பிசின்.]*

**நறும்பிளி** *naṟum-piḷi,* பெ. (n.) மரவகை; south indian pine

*[நறும் + புளி → பிளி.]*

**நறும்பு-தல்** *naṟumbu-,* 5 செ.குன்றாவி & செ.கு.வி. **1.** பல்லைக் கடித்தல் (யாழ்ப்.); to grind the teeth, gnash. **2.** பல்லால் கடித்தல்; to bruise, crush between the teeth

தெ. நறுமு.

*[நறு → நறும்பு-,]*

**நறும்புகை** *naṟumbugai,* பெ. (n.) நன்மணங்கமழும் தீச்சுடர்; incenser perfume.

புகை தீபத்திற்கு ஆகிவருதலின் பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை

*[நறும் + புகை.]*

**நறும்புல்** *naṟum-bul-,* பெ. (n.) நறுமப்புல்; fragrant grass.

**நறும்புன்னை** *naṟum-puṉṉai,* பெ. (n) 32 ஓமாலிகைளு ளொன்றான நறுமணச்சரக்கு; a fragrant substance, one of 32 ōmāligai. *"நண்ணு நறும்புன்னை நறுந்தாது"* (சிலப். 6. 77, உரை).

*[நறும் + புன்னை.]*

**நறுமகாசீரம்** *naṟu-magśīram,* பெ. (n.) நற்சீரகம்; cumin seed.

**நறுமண்** *naṟu-maṇ,* பெ. (n.) மகளிர் கூந்தலிற் றேய்த்துக் கொள்ளும், இனியமணங் கமழும் மண்; a fragrant earth, used in dressing womens hair. *"கூந்த ன்றுமண் சாந்தொடு கொண்டு"* (பெருங். உஞ்சைக். 40, 28.).

*[நறும் + மண்.]*

**நறுமணத்தக்காளி** *naṟumaṇa takkāḷi,* பெ. (n.) சிவப்பு மணித்தக்காளி; red indian hounds berry.

**நறுமரம்** *naṟu-maram,* பெ. (n.) பெருமரம்; tooth-leaved tree of heaven. (l.).

*[நறும் + மரம். ]*

**நறுமருப்பு** *naṟu-maruppu,* பெ. (n.) இஞ்சி (சூடா.); green ginger.

*[நறும் + மருப்பு. ]*

மறுவ. நறும்பருப்பு

**நறுமா** *naṟu-mā,* பெ. (n.) 1. அற்பம் (வின்.); insignificance 2. அற்பன் (வின்.); mean, vile person. 3. வெறுமை (யாழ்.அக.); bareness, emptiness.

*[நறும + மா. ]*

**நறுமாதுளம்** *naṟu-mādulam,* பெ. (n.) தித்திப்பு மாதுளை (தைலவ. தைல. 135.); sweet pomegranate

*[நறும் + மாதுளம் → மாதுலம். ]*

**நறுமு[1]–தல்** *naṟumu-,* 5 செ.கு.வி. (v.t.) பல்லைக்கடித்தல் (யாழ்ப்.); to grinds the teeth, gnash.

*[நற → நறு → நறுமு–. ]*

**நறுமு[2]–தல்** *naṟumu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பல்லாற் கடித்தல்; to bruise, crush between the teeth.

*[நறு → நறுமு–, ]*

**நறுமுருங்கை** *naṟu-muruṅgai,* பெ. (n) முருங்கை வகை; drum-stick.

**நறுமுறு–த்தல்** *naṟu-muṟu-,* 4 செ.கு.வி. (v.i ) 1. முறுமுறுத்தல்; to grumble, mutter, murmur. 2. உறுமுதல் (வின்.); to growl, as cats, dogs 3. பொறாமை கொள்ளுதல்; to envy. *"நறுமுறு தேவர் கணங்களெல்லாம்"* (திருவாச. 9:5.).

*[நறு → நறு + முறு–. ]*

**நறுமுறெனல்** *naṟu-muṟeṉal,* பெ. (n.) முறுமுறுத்தற் குறிப்பு; grumbling. *"நாகாதிபனு மயனு மாலு நறு முறென்னவே"* (அருட்பா, VI, மெய்யருள்வி. 14.).

*[நறு + முறு + எனல். ]*

**நறுமுன்னை** *naṟu-muṉṉai,* பெ. (n.) முன்னமரம்; Indian head-ache tree.

**நறுமை** *naṟumai,* பெ. (n ) மணங்கவரும் நறுமணம்; odour, scent, perfume. 2. நன்மை (புறநா. 29.); goodness.

க. நறு.

*[நறு → நறுமை.]*

**நறுமொறு–த்தல்** *naṟu-moṟu-,* 4 செ.கு.வி. (v.i ) நறுமுறு–. பார்க்க; see *naṟu-muṟu-.* *"இந்திரனு நறுமொறுப்ப நாவலர்கள் புகழ்ந்தேத்த"* (விநாயகபு. 65, 7.).

*[நறு + முறு → நறு + மொறு–. ]*

**நறுவட்டாணி** *naṟu-vaṭṭāṇi,* பெ. (n ) 1. மிகு திறமை; extraordinary skill 2. செயல்திறம், அறிவுடைமை; cleverness 3. கருத்துப் பொருளேதுமின்றித் திறமையாகப் பேசுமாற்றல்;

(திவ். இயற். பெரியதிருவந். 10, வ்யா.); skill in meaningless speech.

*[நறு + வட்டம் + ஆணி.]*

**நறுவல்லி** *naṟu-valli,* பெ. (n.) 1. செடிவகை; common sebesten. 2. பிண்ணாக்குச் செடி; jute. 3. செடி வகை; a species of jute.

*[நறு(ஊ)ம + வல்லி.]*

**நறுவிசு** *naṟuvišu,* பெ. (n.) தூய்மை (இ.வ.); cleanliness.

*[நறுவிது→நறுவிசு.]*

**நறுவிலி** *naṟu-vili,* பெ. (n.) 1. சிறுநறுவிலி; sebesten plum. 2. பெருநறுவிலி; large sebesten. 3. நாய் நறுவிலி; smaller sebesten. 4. அச்சிநறுவிலி; rough leaved sebesten. 5.சிறுமர வகை; oblong feather-nerwed. "நறுவிலி புனைந்து" (பெரியபு. ஆனாய. 15.). 6. சிறுமரவகை (பதார்த்த. 384.); orange long-flowered sebesten.

மறுவ. விருசமரம்.

ம., நறுவரி.

நறுவிலி: நறுவிலி மரத்தின் மருத்துவக் குணத்தையும், தோற்றத்தையும் அடிப்படை யாகக் கொண்டு, நான்கு வகையாகச் சாம்பசிவ மருத்துவ அகரமுதலி பிரித்துள்ளது.

1. பெரியநறுவிலி: நறுமணமிக்க, இன் சுவைக் கனிகளைத் தருவது. பல வண்ணப் பூக்கள் நிறைந்தது. அகண்ட வடிவுள்ள காய்களின் உட்பக்கம், நான்கு பிரிவுகளையுடையது. ஒவ்வொரு பிரிவிலும், ஒவ்வொரு விதையிருக்கும். வெட்டவெளியிலும், தோட்டங்களிலும் வைத்து வளர்க்கப்படும். கொட்டைக்களியைப் போன்ற சதைப்பற்று நிறைந்த, இப் பழங்கள் உணவாகப் பயன் படுவன. இப்பழங்களிலிருந்து கரும்பிசின் தயாரிக்கலாம். பழக்கொட்டைகளின், நாரினின்று கயிறு திரிக்கலாம்.

தீர்க்கும் நோய்:— மரவண்டிகளுக்கு இம் மரம் மிகவும் ஏற்றது. இம் மரத்தின் வேரினைக் கருக்கு நீரிட்டுக் குடித்தால், தீராத எலும்புருக்கு நோய் குணமாகும். இம் மரத்தின் பட்டைகள் துவர்ப்புச் சுவை மிக்கவை. இப் பட்டைகளைக் கருக்கிப் பல் தேய்த்தால், வாய்நாற்றம் தீரும்.

2. பொன்னறுவிலி: நறுவிலி வகையு ளொன்று. இந் நறுவிலிமரம் படர்ந்து கிளைக்குந் தன்மையது. இலைகள் அடர்ந்து வளர்வன. சாம்பல் நிறமுள்ள இம் மரப்பட்டைகளைக் கருக்கித் தோலில் தடவினால், தோல் மினுமினுக்கும்.

காய்கள் குலை குலையாயிருக்கும். பழச் சுளை பளபளப்பானது. மென்மையானது.

தீர்க்கும் நோய்கள்: நாட்பட்ட இருமலைத் தணிக்கும் இப் பழங்கள், உடம் பெரிச்சலையும் போக்குந்தன்மை யுடைத்து. நாவறட்சியை அகற்றும். அரத்தப்பித்தம், மேகம், படை முதலான தோல் நோய்களையும் நீக்கும் இயல்புடையன.

3. சிறுநறுவிலி:— சிறிய இலைகளுடன் கூடியவை. இச் சிறு நறுவிலியின் கொட்டையை இடித்துச் சாம்பலாக்கி, எண்ணெயிற் குழைத்துப் படை நோய்க்குத் தடவலாம். இம் மரத்தின் இலைகளைக் கருக்குநீரிட்டுக் குடித்தால், மூலஅரத்தம் குணமாகும்.

4. நாய்நறுவிலி:— முகத்திற் காணும் கொப்புளங்கட்கும், பருக்களுக்கும், இம் மரத்தின் இலைச்சாற்றினைப் பிழிந்து தடவுவர். இம் மரப்பட்டைகளை இடித்துக் காய்ச்சிக், கருக்குநீரிட்டு வாய் கொப்பளித்தால், வாய்நாற்றம் தீரும். பல்லாட்டம் நிற்கும். பல்லீறுகளிலுள்ள

புண்கள் ஆறும்.

இம் மரப்பட்டையின் சாற்றைத் தேங்கா யெண்ணெயிற் கலந்து உட்கொள்ள, வயிற்று நோய்கள் அனைத்தும் அகலும் என்று சாம்பசிவ மருத்துவ அகரமுதலி கூறுகிறது.

**நறுவிலியிலைச்சவ்வு** *naṟuvili-y-ilai-c-cavvu,* பெ. (n.) அல்குல் துளைக்குள்ளிருக்கும் நான்கு மடிப்புகளுள்ள சுருங்கிய தசை; four rings or folds of the membrane in the vagina. (சா.அக.).

*[ நறுவிலியிலை + சவ்வு. ]*

**நறுவிலியிலைத்தசைமடிப்பு** *naṟu-vili-y-ilai-t-tašai-maḍippu,* பெ. (n ) நறுவிலி யிலை யிலுள்ள சதைமடிப்பு; mysticle shaped nfleshy bodies

*[ நறுவிலியிலை + தசைமடிப்பு.]*

*சதைத்திரட்சி மிக்க மாந்தர்தம், தசைபோல் தோன்றும் தசைமடிப்பு என்று, சா.அக. கூறும்.*

*[ நறுவிலியிலை + தசை + மடிப்பு. ]*

**நறுவிளம்பிஞ்சு** *naṟu-viḷam-piñju,* பெ. (n ) 1. நறுமணமிக்க இளங்காய்; fragrant tender fruit. 2. நறுவிலிச் செடியின் இளங்காய்; the young fruits of sebesten

*[ நறுவிளம் + பிஞ்சு. ]*

**நறுவீழி** *naṟu-viḻi,* பெ. (n ) *நறுவிலி* பார்க்க; see *naṟuvili*

*[நறுவிலி →நறுவிளி → நறுவிழி.]*

**நறுவுளி** *naṟuvuḷi,* பெ. (n ) *நறுவிலி (யாழ்.அக.)* பார்க்க; see *naṟuvili*

*[நறுவிளி → நறுவுளி.]*

**நறுள்** *naṟuḷ,* பெ. (n.) மரவகை; small lance-leaved olivelinden (a )

**நறுளி** *naṟuḷi,* பெ. (n.) 1. சிறுநறுவிலி; common sebesten 2. நறுள் மரவகை; small lance-leaved olievelinden tree.

*[நறுள் → நறுளி.]*

**நறை** *naṟai,* பெ. (n ) 1. தேன்; honey *"முறுக்க விழ் நறைக் கமலம்"* (குணிகைப்பு. பிரமனருள். 2.). 2. கள் (பிங்.); toddy *"வெண்ணிற நறை"* (கம்பரா. உண்டாட்டு. 1.). 3. நறுநாற்றம்; fragrance *"நறைக்கண் மலிகொன்றை யோன்"* (திருக்கோ. 258.). 4. நறும்புகை (பிங்.); incense *"நறையொடு துகளெழ"* (கலித். 101.). 5. நறுமணப் பண்டம்; spices *"அருங் கலத்துப் பட்ட நறையாற் றாளித்து"* (பெரியபு. சிறுத்தொண்ட. 66.). 6. நறுமணக்கொடி வகை; a fragrant creeper. *"நறை நார்த்தொடுத்த வேங்கையங் கண்ணி"* (புறநா. 168.). 7. குற்றம் (சது.); fault defect

க., ம., நறு.

*[ நல் → நறு → நறை. ]*

**நறைக்காய்** *naṟai-k-kāy,* பெ. (n.) சாதிக்காய்; nutmeg. *"பைங்கொடி நறைக்கா யிடையிடுபு"* (திருமுரு. 190.).

*[ நறை + காய். ]*

**நறைக்கொடி** *naṟai-k-koḍi,* பெ. (n ) நறுமணக்கொடி; a fragrant creeper

*[ நறு → நறை + கொடி. ]*

**நறைசகி** *narai-šagi,* பெ. (n.) *நறைக்காய்* பார்க்க; see *narai-k-kāy.*

*[நறை + Skt. சகி.]*

**நறைபடுபுகை** *narai-padu-pugai,* பெ. (n.) கொழும்புகை; incense.

*[நறைபடு + புகை.]*

*அகில் முதலான நறுமணப் பொருட்களினின்று வரும், மணங் கெழுமிய நறும்புகை.*

*இப்புகையினை, நீராடிமுடித்த அரச அல்லது செல்வ மகளிர், தமது நெடுங்கூந்தலை உலர்த்துதற்பொருட்டுப் பயன் கொள்ளுவர். தமது கூந்தலுக்குச் செயற்கை மணம் ஊட்டுதற்குப் பயன்படுத்தியதாகக் குறுந்தொகையில் இறையனார் பாடிய பாடல் பகர்கின்றது.*

*[நறைபடு + பகை.]*

**நறையால்** *naraiyāl,* பெ. (n.) பகன்றைக் கொடி (திவா.); a creeper

**நன்கலந்தருநன்** *nankalan-darunan,* பெ. (n.) (இரத்தினப்) தொண்மணிப் பணித்தட்டான்; jeweller. "*பொன்செய் கொல்லரு நன்கலந்தருநரும்*" (சிலப்.5:31.).

*[நல் → நன் + கலம் + தருநன்.]*

**நன்கனம்** *nan-kanam,* வி.எ. (adv.) நன்றாக; well "*நாவிடை நன்னூ னன்கன நவிற்றி*" (மணிமே.13:24.).

*[நல் → நன் + கனம்.]*

**நன்காடு** *nan-kādu,* பெ. (n.) சுடுகாடு; cremation ground, used euphemistically. "*சுடு காட்டை நன்காடு என்றலும்*" (தொல்.சொல். 17, இளம்பூ.).

*[நல் → நன் + காடு.]*

நல் + மரம் = நன்மரம் என, 'மெலிமே வின் னணவும்' என்று நன்னூல் கூறுமாறு வரவேண்டும். நல் + காடு = நற்காடு எனவருவது, விதி விலக்காக, "நன்காடு" என வழங்கி வருவது உணர்க.

சுடுகாட்டை, ஈங்கு நன்காடென்று குறித்துள்ளது, மங்கல வழக்காகும். தீச்சொல்லை மறைத்து, மங்கலக் குறிப்பாகக் கூறுதல், உலகம் போற்றும் தமிழிலக்கியக் கூறாகும்.

**நன்கு[1]** *nangu,* பெ. (n.) 1. நல்லது; that which is good. "*நல்லவையு ணன்கு செலச்சொல்லு வார்*" (குறள்,719.). 2. மிகுதி (அக.நி.); abundance 3. அழகு (சூடா.); beauty "*பொருளின் விளைவு நன்கறிதற்கு*" (பு.வெ.1,4,கொளு.). "*கற்புடையாடன் மணாளரை விட்டிங் குறைகின்றது நன்குறுமோ*" (சிவரக. தேவியிமையம்பு.). 4. உடல்நலம்; health. 5. இன்னலம்; welfare "*இமையவர் காதல் பெற்று நன்காவரக் காண்டியால்*" (கம்பரா.நகர்நீ.24.). 6. நன்னி மித்தம் (நற்சகுணம்); good omen "*நன்றி மதுரைப் பதியை நன்கொடு கடந்தார்*" (திருவாத. பு.மந்திரி.38.). 7. மகிழ்ச்சி; happiness. "*ஆவி நன்குறா திருப்ப*" (திருவாலவா.16,6.).

*[நல் → நன் → நன்கு.]*

**நன்கு[2]** *nangu,* வி.எ. (adv.) மிகவும்; thoroughly well. "*இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்லின் நடைதெரிந்த நன்மை யவர்*" (குறள்,712.).

*[நல் → நல்கு → நன்கு.]*

**நன்குமதி—த்தல்** *nangu-madi-,* 4 செ. குன்றாவி. (v.t.) மிகவும் உயர்வாகக் கருதுதல் (குறள்,195,உரை); to respect, hold in high esteem

*[நன்கு + மதி—.]*

**நன்கொடை** *nan-kodai,* பெ. (n.) 1. வெகுமதி; donation 'சிலபள்ளிகளில் மாணவர்களைச் சேர்ப்பதற்கு நன்கொடை வாங்கு கிறார்கள்' (இ.வ.). 'வாழ்நாளில் தான்சேர்த்த பொத்தகங்களை எல்லாம் பொதுநூலகத்திற்கு நன்கொடையாகக் கொடுத்துவிட்டார்' (உ.வ.). 2. பணிக்கொடை; gratuity. 3. அறச் செயலுக்கான உதவி அல்லது மானியம்; benefaction, present. 4. முழு உரிமையுடன் கொடுக்கப்பட்ட தானம் (சட்டம்); gift with full power of disposal conferred on the donee.

*[நல்[1] → நன் → கொடை → நன்கொடை.]*

கோயில், கல்விநிறுவனம் போன்ற வற்றின் வளர்ச்சிக்காக, மனம் உவந்து வழங்கும் தொகை அல்லது பொருள்.

**நன்செய்[1]** *nan-šey,* பெ. (n.) ஏரி நீர் பாயும் நிலம்; wet land, opp. to *pun-šey.*

*[நல் → நன் + செய்.]*

**நன்செய்[2]** *nan-šey* பெ. (n.) நெல், கரும்பு, வாழை போன்றவை விளையும் கழனி; special products such as paddy, sugarcane, banana cultivated in wet land

*[நல் → நன் → செய்.]*

**நன்செய்த்தரம்புன்செய்** *nan-šey-t-taram-pun-šey,* பெ. (n.) 1. புன்செய்ப் பயிர் விளையும் நன்செய் நிலம்; wet land so poorly irrigated that it does not produce wet crops and is assessed at lower rates 2. கலப்பினம்; mixed descent, mixed breed

*[நன்செய் + தரம் + புன்செய்.]*

நன்செய் நிலத்தில், இரண்டு ஈடு நெல் விளைவித்துவிட்டு, நிலக்கடலை, எள், உழுந்து, பயறு போன்றவற்றை மூன்றாம் ஈடாய் இடுவது, தஞ்சைமாவட்ட வழக்கு.

**நன்செய்ப்பயிர்** *nanšey-p-payir,* பெ. (n) நீர் அதிகம் தேவைப்படும் பயிர்; large quantity of water for irrigation மழையில்லாமல் நன்செய்ப்பயிர் காய்கிறது. (உ.வ.).

*[நன்செய் + பயிர்.]*

**நன்செய்மேற்புன்செய்** *nan-šey-mēr-pun-šey.* பெ. (n) *நன்செய்த்தரம் புன்செய்* பார்க்க: see *nan-šey-t-taram-pun-šey*

*[நன்செய் + மேல் + புன்செய்.]*

**நன்செய்வான்பயிர்** *nan-šeyvān-payir.* பெ. (n) நன்செயில் விளையும் வெற்றிலை, கரும்பு முதலியன; special products, such as betel, sugarcane, cultivated in wet land

*[நன்செய் + வான் + பயிர்.]*

**நன்சொல்** *nan-šol.* பெ. (n) 1. இன்சொல் (வின்.); compliment, civil words. 2. நன்னலம் நல்கும் நல்லுரை; good advice. 3. ஆறுதல் அல்லது தேறுதலுரை; profitable discourse, words of comfort

*[நன்மை + சொல்.]*

**நன்ஞானம்** *nan-ñānam,* பெ. (n.) சமண சமயத்தில் வழங்கும் (இரத்தினத் திரயம்) மும்மணிக் கொள்கைகளுளொன்று

(சீவக.2813, உரை.); right knowledge one of (irattina-t-tirayam) mummani-k-kolgai. (jaina.)

*[நன்மை + ஞானம்.]*

*ஆதனைச் சமைத்து, நன்னிலைக்கு உயர்த்தும் நல்லறிவு. சமணம் மும்மணிக் கொள்கையாகக் கொண்டதைச் சைவம், இறைவனை அறியும் அறிவென்று கூறும்.*

**நன்பகல்**[1] *nan-pagal,* பெ. (n.) *நன்பகலந்தி* பார்க்க; see *nanpagal-andi* "*நன்பகலவணீத்து*" (கலித்.74,10.).

*[நன் + பகல்.]*

**நன்பகல்**[2] *nan-pagal,* பெ. (n.) **1.** அடியொத்த காலம்; high noon. "*வளைவாய்க் கூகை நன்பகற்கு முறவும்*" (பட்டின.268.). **2.** உச்சிக்காலம்; high noon, midday "*நன்பகல வணீத்து*" (கலித்.74,10.). **3.** எப்பொருளும் நுகர்தற்கு நன்றாகிய பகல்; ever utility of good noon "*என்பெழுந்தியங்குமியாக்கையர் நன்பகல்*" (திருமுரு.1:30.).

**நன்பகலந்தி** *nan-pagalandi,* பெ. (n.) உச்சிக்காலம்: high noon. "*நன்பகலந்தி நடையிடை விலங்கலின்*" (பொருந.46.).

மறுவ. நடுப்பகல். உச்சிப்பொழுது, நண்பகல்.

*[நன் + பகல் + அந்தி.]*

**நன்பலூர்ச்சிறுமேதாவியார்** *nan-palūr-c-cirumēdāviyār,* பெ. (n.) கழகக்காலப் புலவர்; an ancient šangam poet.

"தேம்படு சிமயப் பாங்கர்ப் பம்பிய
குவையிலை முசுண்டை வெண்பூக் குழைய
வானெனப் பூத்த பானாட் கங்குல்
மறித்துரூஉத் தொகுத்த பறிப்புற இடையன்
தண்கமழ் முல்லை தோன்றியொடு விரைஇ
வண்டுபடத் தொடுத்த நீர்வார் கண்ணியன்
ஐதுபடு கொள்ளி அங்கை காயக்
குறுநரி உளம்புங் கூரிருள் நெடுவிளி
சிறுகட் பன்றிப் பெருநிரை கடிய
முதைப்புனங் காவலர் நினைத்திருந் தூதுங்
கருங்கோட் டோசையொ டொருங்குவந்
திசைக்கும்
வன்புலக் காட்டுநாட் டதுவே அன்புகலந்து
ஆர்வஞ் சிறந்த சாயல்
இரும்பல் கூந்தற் றிருந்திழை யூரே."
(அகநா.94.).

**நன்பன்** *nan-pan,* பெ. (n) சணல் (மலையக.); sunn-hemp

**நன்பால்** *nan-pāl,* பெ. (n) நல்லொழுக்கம்: moral conduct "*நன்பால் பசுவே துறந்தார் பெண்டிர் பாலர் பார்ப்பார்*" (சீவக.443).

*[நன்மை + பால்.]*

**நன்பு**[1] *nanpu,* பெ. (n) **1.** நன்மை; goodness **2.** சிறப்பு, மேன்மை, மேம்பாடு; excellence "*நன்புளோர் வியந்தாரில்லை*" (திருவாலவா. 16,12.).

**தெ.** நன்பு.

**மறுவ.** நயம், செம்மை.

**நன்பு**[2] *nanpu,* வி.எ. (adv) செவ்வையாய், செம்மையாய், நன்றாய்; well "*நன்புருகி ஞானச் சுடர்விளக் கேற்றினேன்*" (திவ்.இயற்.2:1.).

*[நல் → நன் → நன்பு.]*

**நன்பொருள்** *naṉ-poruḷ,* பெ. (n.) 1. அடிப்படைச்சமயக்கோட்பாடு, மெய்யியல் கொண்முடிபு; fundamental doctrines of a religion. "*மெய்த்திறம் வழக்கு நன்பொருள் வீடெனும்*" (மணிமே.1:11.). 2. மகன்; son. "*நங்கை நீ நடக்கவேண்டு நன்பொருட் கிரங்கல் வேண்டா*" (சீவக.267.).

*[நன்மை + பொருள்.]*

**நன்மக்கட்பேறு** *naṉ-makkaṭ-pēṟu,* பெ. (n) *நன்மக்கள்* பார்க்க; see *naṉ-makkaḷ*

*[நன்மக்கள் + பேறு.]*

முதல்பத்தாண்டுகள் பெற்றோரால் வளர்க்கப்படும் பிள்ளைகள், பெற்றோரின் சோர்வுற்ற இறுதிப் பத்தாண்டுகளில், நன்கலமாய்த் திகழ்ந்து, குடும்பத்திற்கு ஆதாரமாய் அமைவர். மனைக்கு மாட்சிமை பயக்கும் நன்கலமே நன்மக்கள். ஒருவர் பெறற்கரிய பெரும்பேறுகளுள், உயர்ந்தபேறு நன்கலமாகத் திகழும் நன்மக்கட் பேறேயாகும். இதனை வள்ளுவர்,

"*மங்கலம் என்ப மனைமாட்சி மற்றதன் நன்கலம் நன்மக்கட் பேறு*" (குறள்,60.). என நவில்கிறார்.

**நன்மக்கள்** *naṉ-makkaḷ,* பெ. (n) சிறப்புறு மக்கட் செல்வம் (குறள்,அதி.7.); good children. 2. சான்றோர் (வின்.); the good, the virtuous, the eminent.

**மறுவ.** நற்சான்றோர், மேன்மக்கள்

*[நல் + மக்கள்.]*

அறிவறிந்த நன்மக்கட்செல்வமே, பெறற்கரிய பெருஞ்செல்வம். அறிவறிந்த நன்மக்கட் செல்வமே, ஞாலம் போற்றும் நற்செல்வம். இந் நன்மக்கட் செல்வம் நல்லமுறையில் ஒருவருக்கு வாய்த்து விட்டால், ஏனைய பேறுகள் இனிது அமையும், என்பதில் யாதொரு ஐயமில்லை. சிறப்புறு செல்வங்களுள் சிறந்தசெல்வம் நன்மக்கட் செல்வம் ஆகும்.

**நன்மச்சான்** *naṉ-maccāṉ,* பெ. (n) அம்மான் மகன் (யாழ்ப்.); son of a maternal uncle

*[நல் → நன் + மச்சான்.]*

மைதுனன் → மைத்துனன் → மச்சினன் → மச்சான்

**நன்மச்சினி** *naṉ-macciṉi,* பெ. (n.) தாய்மாமன் மகள்(வின்.); daughter of a maternal uncle

*[நன்மை + மச்சினி.]*

ஆண்பால் மச்சான் என்பதற்குப் பெண்பால் மச்சினி என்றறிக.

**நன்மதை** *naṉmadai,* பெ. (n) நருமதை; the river Narumadai. "*நன்மதைக்கரை நற்றவம் போற்றுவான்*" (சேதுபு.தனுக்.38.).

*[நருமதை → நர்மதை→நன்மதை.]*

ஒ.நோ. தருமம்→தர்மம்→தன்மம்.

**நன்மரம்**[1] *naṉ-maram,* பெ. (n.) கட்டட வேலைக்குப் பயன்படும் உறுதிமிக்க மரம்; strong, durable wood, used in building

*[நல் + மரம்.]*

**நன்மரம்**[2] *naṉ-maram,* பெ. (n.) 1. காய்க்கும் மரம்; fruitful tree. 2. பழம் முதலியன தரும் மரம்; trees yielding good fruit. (சா.அக.).

*[நல் + மரம்.]*

**நன்மருகன்** *naṉ-marugaṉ,* பெ. (n.) சொந்த மருமகன் (யாழ்ப்.); son of a man's sister or a woman's brother.

*[நன் + மரு(ம)கன்.]*

தாய்வழியிலோ அல்லது தந்தைவழியிலே வாய்த்த மருமகன்.

**நன்மருகி** *naṉ-marugi,* பெ. (n.) ஒருவனுக்கு உடன் பிறந்தாள் மகள் அல்லது ஒருத்திக்குத் தமையன் மகள் (வின்.); daughter of a man's sister or a woman's brother

மறுவ. மருமகள்.

*[நல் → நன் + மருகி.]*

**நன்மருமகள்** *naṉ-marumagaḷ,* பெ. (n.) *நன்மருகி (வின்.)* பார்க்க; see *naṉ-marugi*

*[நன் + மருமகள்.].*

**நன்மருமகன்** *naṉ-marumagaṉ,* பெ. (n.) *நன்மருகன் (வின்.)* பார்க்க; see *naṉ-marugadṉ.*

*[நன் → மருமகன்.]*

**நன்மனம்** *naṉ-maṉam,* பெ. (n.) 1. மனத் திருத்தி (யாழ்.அக.); perfect goodwill, heartiness. 2. நல்லதையே நினைக்கும் மனம்; mind with good thinking. 3. பிறருக்குத் தீங்கு புரியாத, இறையுணர்வு, இயல்பாய் வாய்த்த மனம்; a mind with pious thoughts.

*[நன் + மனம்.]*

**நன்மாமன்** *naṉ-māmaṉ,* பெ. (n.) தாயுடன் பிறந்தவனாகிய அம்மான் (யாழ்ப்.); maternal uncle

மறுவ. தாய்மாமன், முறைமாமன்.

*[நன் + மாமன்.]*

**நன்மாமி** *naṉ-māmi,* பெ. (n.) தந்தையுடன் பிறந்த அத்தை (யாழ்ப்.); paternal aunt.

*[நன் + மாமி.]*

**நன்மார்க்கம்** *naṉ-mārkkam* பெ. (n)
1. நன்னெறி (வின்.); path of virtue
2. அறநூல், நீதிமுறைமை; morality

*[நன் +* skt *மார்க்கம்.]*

**நன்முகம்** *naṉ-mugam,* பெ. (n.) 1. அழகிய முகம்; beautiful face *"கையுணன் முகம் வைக்கும்"* (திவ்.திருவாய்.5:5,8.). 2. இன்முகம் (வின்.); cheerful countenance, pleasant looks. 3. தாராளம் (யாழ்.அக.); liberality

*[நன் + முகம்.]*

**நன்முத்து**[1] *naṉ-muttu,* பெ. (n.) நல்லமுத்து; genuine pearls

*[நன் + முத்து.]*

*நலம் பயக்கும் முத்து. உடல் நலத்திற்கும், வளமான வாழ்விற்கும், உறுதுணையாகும் முத்து.*

**நன்முத்து**[2] *naṉ-muttu,* பெ. (n) கெட்டிமுத்து; solid natural pearl

*[நல் → நன் + முத்து.]*

**நன்முருங்கை** *naṉ-muruṅgai,* பெ. (n) முருங்கை வகை (நாஞ்.); a kind of muruṅgai tree.

மறுவ. நறுமுருங்கை

*[நல் → நன் + முருங்கை.]*

**நன்மை**[1] *nanmai,* பெ. (n.) 1. நலம்; goodness. "*தீமை நன்மை முழுதுநீ*" (திருவாச.33:5.). "*நன்மையுந் தீமையும் நாடி நலம்புரிந்த தன்மையால்*" (குறள்.511.). 2. சிறப்பு; excellence 3. உதவி, உறுதுணை; help, aid 4. நற்செயல்; benefit; benefaction. '*அவனுக்கு எவ்வளவோ நன்மை செய்திருக்கிறேன்*' (வின்.). 5. பயன், பயனுடைமை, பயனோக்கம்; utility, usefulness "*நன்மை கடலிற் பெரிது*" (குறள்,103). 6. அறநூல், அறமுறைமை, நன்னெறி (சன்மார்க்கம்); virtue, morality. "*நன்மை கடைப்பிடி*" (ஆத்திசூ.). 7. ஆக்கம்; auspiciousness, prosperity, welfare 8. நன்னிகழ்வு (மங்களம்); happy occasion "*நன்மை தின்மைகளுக்கு இரட்டைச் சங்கும்*" (S.I.I iii 47.). 9. நற்குணம், நல்லியல்பு; good nature, good temper. "*நயன் சாரா நன்மையி னீக்கம்*" (குறள், 194.). 10. பூப்பெய்துகை (இ.வ.); puberty. 11. நல்வினை (வின்.); good karumam. 12. வாழ்த்து மொழி; word of blessing, benediction. "*இவணிருந்தோர்க் கெல்லாம் ஞாலநாய கன்றன் றேவி சொல்லின ணன்மை*" (கம்பரா.திருவடி.7.). 13. மிகுதி (சீவக.2738.); abundance. 14. மேம்பாடு (குறள்,300.); superiority. 15. புதுமை (சிலப்.16,20.); that which is new. 16. அழகு (பு.வெ.10, முல்லைப்.10, கொளு.); beauty. 17. வழிபாட்டினிறுதியில் வழங்கும் நற்பொருள் அல்லது நல்லருள் (நற்கருணை. கிறித்.); eucharist.

க. நல்மெ.

*[நல்[1] → நன் → நன்மை.]*

**நன்மை**[2] *nanmai,* பெ. (n.) நற்செயல் நிகழ்வு; benefit

**நன்மைக்கிருத்துதல்** *nanmai-k-kuiruttudal,* பெ. (n.) இறப்பு நிகழ்வுகட்குப் பின்பு, நன்னிகழ்வுகளை (சுபகாரியங்களை) மேற்கொள்வதற்கறிகுறியாகச் செய்யும் நடைமுறைவினை (நாஞ்.); a ceremony of resuming auspicious practices at the close of funeral ceremonies

*[நன்மைக்கு + இருத்துதல்.]*

**நன்மைத்துனன்** *nan-maittunan,* பெ. (n.) நல்லம்மான் அல்லது நல்லத்தை மகன் (வின்.); son of a maternal uncle or a paternal aunt

*[நல்[1] + மைத்துனன்.]*

**நன்மைத்துனி** *nan-maittuni,* பெ. (n.) நல்லம்மான் அல்லது நல்லத்தைமகள் (வின்.); daughter of a maternal uncle or a paternal aunt

*[நல்[1] + மைத்துனி.]*

**நன்மைதின்மை** *nanmai-tinmai,* பெ. (n.) 1. நலமும் கேடும்; the good and the evil. 2. நன்னிகழ்வும், தீமைகளும் நிகழுங் காலம் (யாழ்.அக.); auspicious and inauspicious occasions "*நன்மை தின்மைகளுக்கு இரட்டைச் சங்கும்*" (S.I.I.iii.47.).

*[நன்மை + தீமை > தின்மை.]*

**நன்மைதீமைசொல்(லு)–தல்** *nanmai-tīmai-šol(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) இறக்குந்தறுவாயில் இறுதியாகப் பேசுதல் (வின்.); to utter the lost words before dying

*[நன்மை + தீமை + சொல்லு–.]*

காவல்துறையினர் இறக்கவுள்ள மாந்தர் கூறும் வாய்மொழிப் பதிவை, (மரணவாக்குமூலம்) முதன்மை கொடுத்துக் கருதுவது, மனச்சான்றின் படிச்சொல்வர் என்னும், உளவியல் பற்றியதே.

**நன்மைதீமைபோடு-தல்** *nanmai-tīmai-pōḍu-*, 20 செ.கு.வி. (v.i.) *நன்மை தீமை சொல்(லு)-தல் (வின்.)* பார்க்க; see *nanmai-tīmai-šol(lu)-*.

*[நன்மைதீமை + போடு-.]*

**நன்மைநிகழ்தல்** *nanmai-nigaldal*, பெ. (n.) ஒருவர் வீட்டில் திருமண முதலான நன்னிகழ்வுகள் நடைபெறுதல்; a happy occasion like marriage etc.

**நன்மைப்பகுதி** *nanmai-p-pagudi*, பெ. (n.) நல்வினைப்பயன் (வின்.); fruit of good karumam.

*[நன்மை + பகுதி.]*

**நன்மைப்பேறு** *nanmai-p-pēṟu*, பெ. (n.) *நன்மைப் பகுதி (வின்.)* பார்க்க; see *nanmai-p-pagudi*.

*[நன்மை + பேறு.]*

**நன்மைபெறுஅருள்நெறி** *nanmai-peṟu-aruḷneṟi*, பெ. (n) எல்லோரும் இன்புற்று வாழ, அனைத்து நலங்களையும், அனைவருக்கும் நல்கும் நெறி; benevolence

**நன்மையா-தல்** *nanmaiyā-*, 6 செ.கு.வி. (v.i.) பூப்பெய்துதல் (பெண் பருவமடைதல்); to attain puberty, become marriageable, as a girl.

மறுவ. சமைதல்.

*[நன்மை + ஆதல்.]*

*திருமணம் என்னும் நன்னிகழ்விற்கு, ஏற்ற வண்ணம் பருவமடைதல்.*

திரு.வி.க. பெண்ணின் பெருமை என்னும் நூலில், பெண்மை, தூய்மை, இறைமை என்னும் முப்படி நிலைகளாகக் கூறுகிறார். இனப்பெருக்கம் பெண் வழி நடத்தலின், தூய்மையுறும் பூப்பெய்தலை, நன்மையாதல் என்று கூறியுள்ளார்.

**நன்மொழி** *nan-moḻi*, பெ. (n.) 1. இன்மொழி; kind, good word. 2. உறுதிமொழி; spiritual or religious teachings. *"நன்மொழியைச் சிற்றின மல்லார்கட் சொல்லலும்"* (திரிகடு.32.). 3. தேவபாணி; sacred songs *"சீருடை நன்மொழி சீரொடு சிதறி"* (பொருந.24.).

*[நன்மை + மொழி.]*

**நன்மொழிபுணர்த்தல்** *nan-moḻi-puṇarttal*, பெ. (n.) நூலழகு பத்தனுள், இனிய மொழிகளைச் சேர்த்து வழங்குகை (நன்.13.); use of appropriate and elegant words, one of ten nūl-aḻagu.

"சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல், நவின்றோர்க் கினிமை, நன்மொழி புணர்த்தல், ஓசை யுடைமை, யாழமுடைத் தாதல், முறையின் வைப்பே யுலகமலை யாமை விழுமியது பயத்தல் விளங்குதா ரணத்த தாகுத னூலிற் கழகெனும் பத்தே" (நன்.13)

*[நன்மொழி + புணர்த்தல்.]*

**நன்றாக**[1] *nanṟāga*, வி.எ. (adv.) செம்மையாக, முழுமையாக; well, satisfactorily. *"நன்றாக நால்வர்க்கு... அறம் உரைத்தான்"* (திருவாச.12.). *'தன்னை நன்றாகத் தமிழ்ச் செய்யுமாறே"* (திருமந்.).

*[நன்று + ஆக.]*

**நன்றாக**[2] *nanṟāga*, வி.எ. (adv.) ஒரு வாழ்த்துத் தொடர்; a term of benediction (Insc.). *"நன்றாக குருவாழ்க, குருவே துணை"*

*[நன்று + ஆக.]*

**நன்றாய்** *naṉṟāy,* வி.எ. (adv.) 1. *நன்றாக* பார்க்க; see *naṉṟāga* 2. தாராளமாய் (வின்.); liberally.

*[நன்று + ஆய்.]*

**நன்றாயிரு—த்தல்** *naṉṟāy-iru-,* 20 செகு.வி. (v.i.) 1. நல்ல நிலைமையிலிருத்தல்; to be good, beautiful. 2. செழுமையாக நலவாழ் வுடனிருத்தல்; to prosper, flourish, farewell to be in health

*[நன்று + ஆய் + இரு—.]*

**நன்றி** *naṉṟi,* பெ. (n.) 1. நன்மை (சூடா.); goodness 2. உதவி; help. 3. அருட்பண்பு, அன்புச் செயல்; kindness. 4. நலன், பயன்; benefit, favour. "*எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்*" (குறள்.110). "*ஒரு நன்றி செய்தவர்க்கு*" (நாலடி,357). 5. செய்ந்நன்றி; gratitude "*நன்றி மறப்பது நன்றன்று*" (குறள்,108.). அவன் செய்த உதவிக்காக நன்றி கூறினான் (உ.வ.). 6. அறம்; virtue, merit "*நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்*" (குறள்,994.).

*[நல் → நன் → நன்றி.]*

**நன்றிக்கடன்** *naṉṟi-k-kaḍaṉ,* பெ. (n.) செய்த உதவிக்கு நன்றி செலுத்த விரும்பும் கடமை உணர்வு; debt of gratitude. '*என் நன்றிக் கடனை எப்படித் தீர்ப்பேன்*' (உ.வ.).

*[நன்றி + கடன்.]*

**நன்றிக்கேடு** *naṉṟi-k-kēḍu,* பெ. (n.) செய்ந்நன்றி மறக்கை; ingratitude.

*[நன்றி + கேடு.]*

**நன்றிகூறு—தல்** *naṉṟi-kūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) *நன்றி சொல்(லு—,* பார்க்க; see *naṉṟi-sol(lu)-.*

*[நன்றி + கூறு—.]*

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றிகொன்ற மகற்கு." "என்ற குறளில் நன்றி என்பது" நல்லசெயல் என்றும், செய்ந்நன்றி என்பது, உதவிக்கு மாற்று என்றும் பொருள்படுதல் காண்க.

**நன்றிகெட்டவன்** *naṉṟi-keṭṭavaṉ.* பெ. (n.) செய்ந்நன்றி நினைவில்லாதவன்; ungrateful person

*[நன்றி + கெட்டவன்.]*

**நன்றிகெடு—தல்** *naṉṟi-keḍu-,* 20 செ.கு.வி. (v.i.) செய்ந்நன்றி மறத்தல் (வின்.); to be ungrateful

*[நன்றி + கெடு—.]*

**நன்றிகொல்(லு)—தல்** *naṉṟi-kol(lu)-,* 13 செ.கு.வி. (v.i.) *நன்றி கெடு—,* பார்க்க: see *naṉṟi-keḍu-,* "*செய்ந்நன்றி கொன்ற மகற்கு*" (குறள்,110.). நன்றிகொல்லுதல் பண்பு இக்காலத்தே அதிகமாகக் காணப்படுகிறது (உ.வ.).

*[நன்றி + கொல்(லு)—.]*

ஒருவர் செய்த உதவியை மறந்தோ அல்லது மறைத்தோ, அவர்க்குக் கேடு சூழ்தல்.

**நன்றிகோறல்** *naṉṟi-kōṟal.* பெ. (n.) *நன்றிக்கேடு (வின்.)* பார்க்க; see *naṉṟi-k-kēḍu.*

*[நன்றி + கொல்தல்→ கோல்தல்→ கோறல்.]*

கோறல் முதனிலை நீண்டதொழிற்பெயர்.

ஒ.நோ. செல்தல்→சேறல்

**நன்றிசொல்(லு)-தல்** *nanri-šol(lu)-*, 13 செ.கு.வி. (v.i.) செய்ந்நன்றி யறிவித்தல் (வின்.); to acknowledge benefits, thank

*[நன்றி + சொல்லு-.]*

**நன்றியற்றவன்** *nanri-y-arravan*, பெ. (n.) செய்ந்நன்றி மறந்தவன் (வின்.); ungrateful person

*[நன்றி + அற்றவன்.]*

**நன்றியறி-தல்** *nanri-y-ari-*, 2 செ.கு.வி. (v.i.) செய்ந்நன்றி நினைத்தல் (வின்.); to be grateful, thankful

*[நன்றி + அறி-.]*

**நன்றியறிவு** *nanri-arivu*, பெ. (n.) செய்ந்நன்றி யறிகை; gratitude.

*[நன்றி + அறிவு.]*

**நன்றியில்செல்வம்** *nanriyil-šelvam*, பெ. (n.) பயனற்ற செல்வம் (குறள். 101–ஆம் அதி.); riches not used in doing good, useless wealth

*[நன்றி + இல் + செல்வம்.]*

**நன்றியீனம்** *nanri-y-inam*, பெ. (n.) *நன்றிக்கேடு (வின்.)* பார்க்க; see *nanri-k-ēdu*

*[நன்றி + ஈனம்.]*

**நன்று**[1] *nanru*, பெ. (n) 1. நல்லது; that which is good, goodness "*அங்கிது நன்றிது நன்றெனு மாயை யடங்கிடு மாகாதே*" (திருவாச.49:8.). 2. சிறப்பு (சூடா.); excellence. 3. பெரிது (தொல்.சொல்.343.); greatness, largeness. "*செய்ய சந்த நந்தீம்பழமாதியா நையவாரி நடந்தது நன்றரோ*" (சிந்தா.நாமக.8.). "*நன்று பெரிதாகும்*" (தொல்.உரி.45). 4. அறம்; merit, virtue. "*நட்டார் குறை முடியார் நன்றற்றார்*" (குறள்,908). "*சான்றோர் செய்த நன்றுண்டாயின்*" (புறநா.34.). 5. இன்பம்; happiness, felicity "*நன்றாகு மாக்கம் பெரிதெனினும்*" (குறள்.328.). 6. நல்வினை; good deed. 7. ஆதரவு, பயன்; benefit "*தக்கார்க்கு நன்றற்றார்*" (நாலடி.327.). 8. வாழ்வினாக்கம்; prosperity "*நன்றாங்கா னல்லவாக் காண்பவர்*" (குறள், 379.). 9. வீடுபேறு, துறக்கம்; heaven "*வாள்வாய் நன்றாயினு மஃதெறி யாது விடாதே காண்*" (கலித்.149.). 10. ஒப்புகைக் குறிப்பு (அங்கீகாரக் குறிப்பு), ஏற்றுக் கொள்ளுதற் குறிப்பு; expr signifying approval. "*நன்றப் பொருளே வலித்தேன்*" (சீவக. 1932.).

*[நல்[1] → நன் → நன்று.]*

**நன்று**[2] *nanru*, பெ. (n.) வாழ்வு; welfare (சா.அக.).

**நன்னடத்தை** *nannadattai*, பெ. (n) *நன்னடை (இக்.வ.)* பார்க்க; see *nannadai*.

*[நல் + நடத்தை.]*

ஒருவருக்கு அமைந்த நல்லொழுக்கம்.

**நன்னடத்தைச்சான்றிதழ்** *nannadattai-c-canridal*, பெ. (n) ஒருவரின் செயற்பாடு குறித்து அளிக்கும் சான்றிதழ்; conduct certificate.

*[நன்னடத்தை + சான்றிதழ்]*

ஒருவருக்கு அடிப்படையாக இருக்கும் நல்லொழுக்கம், நற்செயல் போன்றவை குறித்து அளிக்கப்படும் சான்றிதழ்.

**நன்னடத்தைப்பிணை** *nannadattai-p-pinai,* பெ. (n.) நல்லொழுக்கமாய் நடந்து கொள்ளுவதற்குக் கொடுக்கும் பிணை அல்லது உடன்பாடு; security for good behaviour (legal).

*[நன்னடத்தை + பிணை.]*

**நன்னடத்தைஜாமீன்** *nannadattai-jāmīn,* பெ. (n.) ***நன்னடத்தைப் பிணை*** பார்க்க; see *nannadattai-p-pinai.*

*[நன்னடத்தை + U. ஜாமீன்.]*

**நன்னடவடிக்கைஜாமீன்** *nannada-vadikkai-jāmīn,* பெ. (n.) ***நன்னடத்தை ஜாமீன்*** பார்க்க; see *nannadattai-jāmīn.*

*[நல்[1] + நடவடிக்கை + U. ஜாமீன்.]*

**நன்னடை** *nannadai,* பெ. (n.) நல்லொழுக்கம் (யாழ்.அக.); good conduct. "***நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே***" (புறநானூறு.).

*[நல்[1] → நடை → நன்னடை.]*

**நன்னயம்** *nannayam,* பெ. (n) **1.** இன்சொற் செயல்கள்; gratifying words or deeds, acts of kindness "***இன்னாசெய் தாரை யொறுத்த லவர்நாண நன்னயஞ் ,செய்துவிடல்***" (குறள், **314.**). **2.** பண்பட்ட பழக்கவழக்கம்; politeness, civility **3.** மகிழ்ஆட்டுகை, இன்முகமுடைமை (வின்.); complaisance **4.** நன்மை (வின்.); goodness, excellance. **5.** சைனர் கூறும் எழுவகைச் சொற்போர் முறை (சி.போ.பா.பக்.40.); the seven-fold doctrine of qualified predication (Jainam) **6.** நினைவு (வின்.); thought.

*[நல் + நயம்.]*

எழுவகைச் சொற்போர்முறையாவன:

(i) உண்டாம், (ii) இல்லையாம், (iii) உண்டும், இல்லையுமாம்,(iv) சொல் லொணாததுமாம், (v) உண்டும் சொல்லொணாததுமாம், (vi) இல்லையுமாம், சொல்லொணாததுமாம், (vii) உண்டும் இல்லையுமாம், சொல்லொணாத துமாம்.

**நன்னர்** *nannar,* பெ. (n) நன்மை; goodness, that which is good "***பலவுட னன்னர் நெஞ்சத் தின்னகை வாய்ப்ப***" (திருமுரு.64.). "***நன்னர் நெஞ்ச நெகிழ்த்த பின்றை***" (குறுந்.176); (சூ.நிக.8:36.).

*[நல் → நன் → நன்னர்.]*

**நன்னர்த்தொகை** *nannar-t-togai,* பெ. (n) தொழிலாளர்களுக்கு சம்பளத்தோடு கொடுக்கும் ஊதியப் பங்கீடு; bonus சென்ற ஆண்டு போக்குவரத்து, ஊழியர்க்குக் குறைந்த அளவு நன்னர்த் தொகை வழங்கப்பட்டது. (இக்.வ.).

*[நன்னர் + தொகை.]*

மேலைநாடுகளில் கிழமை (வாரம்)ச் சம்பளம் வழங்கப்படுகிறது. நம்நாட்டில் மாதச் சம்பளமே வழங்கப்படுகிறது. ஓர் ஆண்டிற்கு 52 கிழமைகள் இருப்பதால் 12 மாதங்கள் போக 4 கிழமை எஞ்சுவதால் 8.33 விழுக்காடு மிகை யூதியமாகத் தரப்படும் தொகையே நன்னர்த்தொகை.

**நன்னருக்கல்[1]** *nannarukkal,* பெ. (n.) **1.** பசி, மந்தம் முதலியவற்றால் வயிற்றில் விட்டுவிட்டு வலியுண்டாகுகை; slight, internal pains, as in the first stages of pregnancy, pain from hunger, indigestion or fever. **2.** குழந்தை பிறக்கும்பொழுது ஏற்படும் இடுப்பு வலி; first labour pains.

*[நல் → நன் + நருக்கல்.]*

**நன்னருக்கல்**[2] *nannarukkal,* பெ. (n) சிறுநோய்; slight diseases, indisposition.

*[நல் → நன் + நருக்கல்.]*

உடலில் ஏற்படும் சிறுசிறு நோய்கள்.

**நன்னல்** *nannal,* பெ. (n.) மதகரிவேம்பு; red cedar.

**நன்னலம்** *nannalam,* பெ. (n.) அழகு; beauty.

**நன்னன்**[1] *nannan,* பெ. (n.) விச்சிக்கோவின் மரபுவழியைச் சேர்ந்த மன்னன்; hereditary king of Vicci-k-kō

இவன் பல்குன்ற கோட்டமுடையான். பெண் கொலை புரிந்தவன் என்று, புறநானூறு கூறுகிறது. இவன் மகன்மீது இரணிய முட்டத்துப்பெருங்குன்றூர்ப் பெருங்கௌசிகனார் மலைபடுகடாம் பாடியுள்ளார்.

**நன்னன்**[2] *nannan,* பெ. (n.) பூழிநாட்டின் சிற்றரசன்; a petty king of pūḻināḍu. "*அகவுநர்ப் புரந்த அன்பின்... நன்னன்*" – (அகநா.97.). "*இசைநல்லி கைக்களிறு வீசுவண் மகிழ்... நன்னன்*" – (அகநா–152.).

இவன் சேரர் குடியைச் சார்ந்தவன். இந் நன்னனது பூழிநாடும் பிறவும் கொங்கணதேசம் எனப்படும். "*பொன்படு கொண்கான நன்னன்*" என்னும் நற்றிணை வரியால், இச் செய்தி பெறப்படுகிறது.

இவ்னது நாடு, ஏழில்மலை என்று, இன்று அழைக்கப்படுகிறது. இவனது பூழிநாட்டைச் சேர்ந்த ஊர்களாக, கடம்பின் பெருவாயில், பாரம், வியலூர், பிரம்பு முதலானவற்றை, அகநானூறு 152–ஆம் பாடலாலும், பதிற்றுப்பத்தின் நாலாம் பதிகத்தாலும், அறியலாம்.

இந் நன்னனது நாட்டுவளத்தினையும், கொடைச் சிறப்பினையும் அகநானூற்றின் 152–ஆம் பாடல் நன்கு விளக்குகிறது.

**நன்னன்**[3] *nannan,* பெ. (n.) செங்கண் மாத்துவேளும், மலைபடுகடாத்தின் பாட்டுடைத் தலைவனுமாகிய சிற்றரசன்; the chief of Šengaṇ-māttu-vēḷ and hero of malai-paḍu-kaḍām. "*செங்கண்மாத்துவேள் நன்னன் சேய் நன்னனை*" (மலைபடு.இறுதித்தொடர்.).

**மறுவ.** நன்னன் வேண்மான் நன்னன் சேய்நன்னன்.

இவனை நன்னன் சேய் நன்னன் என்றும், கூறுவர். வள்ளல் தன்மை கொண்டவன்.

இரணியமுட்டத்துப் பெருங்குன்றூர் பெருங் கௌசிகனார், இவனது வள்ளல் தன்மையைப் பாராட்டி மலைபடுகடாம் என்ற நூலை இயற்றியுள்ளார்.

இவன் நாடு பல்குன்றக் கோட்டம். இவன் தலைநகர் செங்கண்மா. இவன் மலைநாடு எழிற்குன்றம் என்று அழைக்கப்பட்டது. இவ் வெழிற்குன்று, ஏழுமலைகளை உள்ளடக்கி யதால், இப் பெயர் பெற்றதென்பர். இச் செய்திகளை மலைபடுகடாம் தெரிவிக் கின்றது.

அவ்வேழு மலைகளிற் பாழிச்சிலம்பு, நவிரம் என்னுமிரண்டே இப்போது தெரிவன. நன்னனது நாட்டில் பாழி, வியலூர், பாரம், பிரம்பு – என்ற ஊர்களும், சேயாறு என்னும் நதியும் இருந்தன என்பது, முன்னூல்களால் அறியப்படுகிறது.

இவன் ஆண்ட பல்குன்றக்கோட்ட நாடு இப்போது, வடஆற்காடு, தென்னார்க்காடு மாவட்டத்தில் அடங்கியுள்ளது. நன்னனது நவிரமென்னும் மலைமீது, "*காரியுண்டிக் கடவுள்*" என்னும் சிவபிரான் கோயிலொன்று உண்டு. அகநானூற்றில் உள்ள, பின்வரும் பாடல்வரிகள் இச் செய்தியினைத் தெரிவிக்கின்றன.

*"பாடுநர் செலினே அருங்குறும் பெறிந்த பெருங்கல வெறுக்கை சூழாது சுரக்கும் நன்னன்"* இவனது வெள்ளணிவிழா (பிறந்தநாள்)வின் சிறப்பினை, மாங்குடி மருதனார்,

*"பேரிசை நன்னன் பெரும்பயர் நன்னாள் சேரிவிழவின் ஆர்ப்பெழுந்தாங்கு"* என்று உவமித்துப்பாடுகின்றார்.

இவ்வெள்ளணி விழா நாளினை நச்சினார்க்கினியரும் *"நன்னாள்"* என்று தமதுரையில் குறித்துள்ளார்.

**நன்னன்வேண்மான்** *nannan-vēṇmān,* பெ. (n) **1.** சங்ககால சிற்றரசன்; a petty king of Sangam period *"நறவுமகி ழிருக்கை நன்னன் வேண்மான்"* (அகநா.97.). **2.** *நன்னன்*[3] பார்க்க; see *Nannan*[3].

*[நன்னன் + வேள்மான் → வேண்மான் .]*

**நன்னனார்** *nannanār,* பெ. (n.) ஒரு புலவர்; a poet

இவர் பரிபாடலின் 12ஆம் பாடலுக்கு இசை வகுத்தவர்.

**நன்னாகையார்** *nannāgaiyār,* பெ. (n.) சங்க காலப் பெண் கவிஞர்; a women poet of Sangam period.

இவர் ஊர் நாகபட்டினமாக இருக்கலாம்.

"புள்ளும் மாவும் புலம்பொடு வதிய
நள்ளென வந்த நாரின் மாலைப்
பலர்புகு வாயில் அடைப்பக் கடவுநர்
வருவீர் உளீரோ – எனவும்
வாரார் தோழிநம் காத லோரே

(குறுந்.118.).

சேறுஞ் சேறு மென்றலின் பண்டைத்தன்
மாயச் செலவாச் செத்து மருங்கற்று
பன்னிக் கழிகென் றேனே அன்னோ
ஆசா கெந்தை யாண்டுளள் கொல்லோ
கருங்கால் வெண்குருகு பேயும்
பெருங்குளம் ஆயிற்றென் இடைமுலை
நிறைந்தே" – (குறுந்,325.).

**நன்னாட்கொள்ளு–தல்** *nannā-ṭ-kollu-,* 13செ.கு.வி. (v.i.) நன் (மங்கல)னிகழ் விற்கேற்ற நாளினைக் குறிப்பிடுதல்; to appoint an auspicious day *"நன்னாட் கொண்டு பெரும்பயண மெழுகவென்று நலஞ்சாற்ற"* (பெரியபு.சேரமான்பெரு.46.).

*[நல்[1] → நன் + நாள் + கொள்ளு–.]*

**நன்னாரி** *nannāri,* பெ. (n.) **1.** கொடிவகை (பதார்த்த.492.); indian sarasaparilla **2.** நறுமணமிக்க வேர்; fragrant root

**மறுவ.** பாற்கொடி, நறுமணவல்லி.

*[நல் → நன் + நாறி .]*

உடம்பின் வெப்பத்தைப் போக்குதற்கும், கோடைக்காலத்தில் பருகும், இன்சுவைப் பருகங்களுக்கு நறுமணமூட்டுதற்கும், பயன்படும் வேர்மூலி. இது முறுக்கிக் கொண்டிருக்கும் தோற்றத்தையுடையது. இக் கொடியின் அடிப்பாகம் வழவழப்புடன் இருக்கும். இலைகள் இருபுறமும் கூரானவை. இதன் பூக்கள் உட்புறம் கருஞ்சிவப்புடனும், வெளிப்பக்கம் வெண்மை கலந்த பச்சை வண்ணத்துடனும் காட்சி தரும். மழைக் காலத்தில் பூக்கும். இக் கொடி வட இந்தியா, வங்காளம், தமிழகம், இலங்கை போன்ற எல்லா இடங்களிலும் பயிராகும். நறுமண மிக்க இதன் வேர்கள் இனிப்புச்சுவை பொருந்தியன. உடலின் வெம்மையை அகற்றி, குளுமையைத் தருவன. ஒளிநீரை (விந்து)ப் பெருக்கும் தன்மையது. நன்னாரி கலந்த இன்பருகத்தினால் மலச்சிக்கல் தீரும். சீறுநீரைடைப்பு நோய் குணமாகும். காய்ந்த

நன்னாரியின் வேரினைக் கருக்கு நீராகக் காய்ச்சி (கியாழம்) (கசாயம்) ஆவின் பாலுடன் சேர்த்துக் குடித்தால், கல்லடைப்பு, நீர்ச்சுருக்கு நீங்கும்.

செரியாமை, தொழுநோய், தோல்நோய், கடுஞ்சுரம், ஆறாப்புண், ஊதைநோய், இணைவிழைச்சு நோயினாலேற்பட்ட புண், கட்டி, வெள்ளைபடுதல் முதலான அனைத்து நோய்களுக்கும், இக் கருக்கு நீரினைச் சித்தமருத்துவர், பயன்படுத்துவர்.

மேலும் இந் நன்னாரிக் கருக்குநீர், அரத்தத்தைத் தூய்மையாக்கும் மாமருந்து. மிகுபித்தத்தினாலேற்பட்ட வாய்க்கசப்பை அகற்றும்.

தமிழ் மருத்துவத்திற்கு வாய்ந்த நன்மூலியான இந் நன்னாரிவேர், அனைத்து மருத்து வத்திற்கும் பயன்படும் அருமூலியாகும்.

குழந்தை மருத்துவத்திற்கு நன்னாரியை. கருக்கு நீருடன், சீரகம், பால் சருக்கரை சேர்த்துக் கொடுத்தால், கொக்கிருமல் தீரும். குழந்தைகளின் செரியாமைநோய் குணமாகும். வயிற்றுப்போக்கு தீரும்.

சித்தமருத்துவர். நன்னாரிக் கருக்கு நீருடன், வால்மிளகு, குக்குலு, கொம்மட்டி வேர் போன்ற கடைச்சரக்குகளைச் சேர்த்து யானைக்கால் நோயினைத் தீர்ப்பர்.

யுனானி மருத்துவர் நன்னாரி வேரில் இன்பருகம் (சர்பத்து) காய்ச்சி அனைத்துப் பிணிகளையும் போக்கும் மருந்துகளுடன் கலந்து தருவர் என்று சா.அக. கூறும்.

நன்னாரி வகைகள் : 1. நாட்டு நன்னாரி,

2. சீமை நன்னாரி. 3. பெரு நன்னாரி. 4. சிறு நன்னாரி.

**நன்னாள்** *nannāḷ,* பெ. (n.) 1. விழவு நாள்; festivel occasion, festival day "*தீவகச்சாந்தி செய்தரு நன்னாள்*" (மணிமே.1:35.). 2. நன்னிகழ்வுகட்குரிய மங்கல நாள்; auspicious day

*[நல் + நாள்.]*

**நன்னாறி** *nannāri,* பெ. (n.) பன்னீர்; rose water

*[நல் + நாறு + இ.]*

இ = சொல்லாக்கஈறு.

**நன்னி**[1] *nanni,* பெ. (n.) 1. *சிறியது;* that which is small, short. "*நன்னிக் குரங்கும் கொசுகும் பகையோ நமக்கென்றானே*" (இராமநா.உயுத்.1.). 2. மிகச் சிறியது; that which is minutie

தெ. நன்ன.

*[நுல் → நுன் + நுன்னி → நன்னி.]*

தோன்றல் கருத்தினின்று கிளைத்த இச் சொல், மிகச்சிறிய கொசுகு போன்ற உயிரிகளையும், சிறிய குட்டிகளையும் குறித்து வழங்கிற்று எனலாம்.

**நன்னி**[2] *nanni,* பெ. (n) பருத்தி; cotton

*[நல்→நன் + இ.]*

நெசவுக்குப் பட்டு நூலைவிடவும் நன்றாதலின் பருத்தி, இப்பெயர் பெற்றது. செயற்கைஇழை (நைலான் காற்றோட்டம் இன்மை அறிக.

**நன்னிக்கல்**[1] *nanni-k-kal,* பெ. (n.) மருந்து அரைக்கும் அம்மி (தைலவ.பாயி.12, உரை.); a grinding stone for preparing medicine

நல் → நன்.

*[நன்னி + கல் → நன்னிக்கல் மருந்தரைக்கும் சிற்றம்மி. (வே.க.3:4.).]*

**நன்னிக்கல்**[2] *nanni-k-kal,* பெ. (n) கழுவக்கல் செய்யவுதவும் கடினமான கல்;

hard stone used for making mortar which used for grinding medicine.

**நன்னிநூல்** *naṉṉi-nūl,* பெ. (n.) துணியின் நூற்குறை (வின்.); short ends of threads in cloth badly woven.

*[நன்னி + நூல் ↪ நன்னிநூல் = துணியின் ஓரத்திலுள்ள சிறு நூல் துணுக்கு (வே.க.3:4.).]*

**நன்னிப்பயல்** *naṉṉi-p-payal,* பெ. (n.) *நன்னிப் பையல்* பார்க்க; see *naṉṉi-paiyal*

*[நன்னி + பையல் → பயல்.]*

**நன்னிப்பயறு** *naṉṉi-p-payaṟu,* பெ. (n) துலுக்கப் பயறு (வின்.); aconite-leaved kidney bean

*[நன்னி + பயறு.]*

*[நன்னி = சிறுமை குறித்த வழக்குச் சொல். நன்னியுங்குன்னியும்.]*

**நன்னிப்பிள்ளை** *naṉṉi-p-piḷḷai,* பெ. (n.) சிறுபிள்ளை; small child.

**மறுவ.** நன்னிகுன்னி.

*[நன்னி + பிள்ளை.]*

**நன்னிப்பையல்** *naṉṉi-p-paiyal,* பெ. (n.) சிறுபையன் (வின்.); small boy

*[நன்னி + பையல் → பயல்.]*

பையல் > பையன்

**நன்னிபின்னி** *naṉṉi-piṉṉi,* பெ. (n.) சில்வாழ் நாள்களையுடைய சிற்றுயிரினம் (பிராணி.); minute insect, animalcule.

**மறுவ.** நன்னிகுன்னி.

*[நன்னிபின்னி = குறு விலங்கு, நுணுக்க உயிரி அல்லது கண்ணுக்குப் புலப்படாத உயிரினம். சிறுபிள்ளைகளையும் சிற்றுயிரிகளையும், நன்னியும் குன்னியும், நன்னிபின்னி என்பது உலகவழக்கு.]*

**நன்னியம்மா** *naṉṉi-y-ammā,* பெ. (n) பாட்டி(புதுக்); grandmother

(கிளை.மொ.இயல்) (புது.கோ.வழ.செ)

**நன்னியல்பு** *naṉṉiyalbu,* பெ. (n.) நல்லியல்பு; pleasing manner

*[நல் + நன் + இயல்பு.]*

பண்பு மீதூர்ந்த சொல்லாட்சிகளுள் ஒன்று. இயல்பாகவே நல்லியல்பு வாய்க்கப் பெற்றவர் பூண்டொழுகும் ஒழுக்கம்.

**நன்னிலம்**[1] *naṉṉilam,* பெ. (n) நாகை மாவட்டத்தில் உள்ளது; a village in Nāgai dist

*[நன்மை + நிலம்.]*

"பலங்கிளர் பைம்பொழிறண் பனிவெண் மதி
மைத்தடவ
நலங்கிளர் நன்னிலத்துப் பெருங் கோவில்
நயந்தவனே" (சுந்தரர்–98,2.)

சிறப்புடைய அல்லது செழிப்புடைய நிலம் என்ற இயல்பு காரணியமாக, இப் பெயர் பெற்றது எனலாம்.

**நன்னிலம்**[2] *naṉṉilam,* பெ. (n) நன்செய் (வின்.); wet-land.

*[நல்[1] + நிலம்]*

*நன்செய்ப் பயிர்களான நெல், கரும்பு, வாழை முதலியன விளையும் நிலம்.*

**நன்னிலமிதித்தல்** *nannila-midittal,* பெ. (n.) மணமகனான அரசன், தன் மனைவியை விட்டு, முதன்முதல் அத்தாணிமண்டபத்திற்கு அடிவைக்கும் சடங்கு; the ceremony in which a royal bridgegroom first steps out of his place and goes to his audience chamber, after marriage. "*திருமால் நன்னிலமிதித்தற்குப் போந்தான்*" (சீவக.2369, உரை.).

*[நல்[1] → நிலம் + மிதித்தல்.]*

**நன்னிலை** *nannilai,* பெ. (n.) 1. நல்ல நிலைமை; good position or condition. "*நன்னிலைக்கட் டன்னை நிறுப்பானும்*" (நாலடி.248.). 2. நல்லொழுக்கம் (சது.); moral conduct. 3. தவம் (அக.நி.); religious austerities. 4. உலகம் (சது.); the world

*[நல்[1] → நன் + நிலை. ]*

**நன்னிறம்** *nanniram,* பெ. (n.) வெண்ணிறம் (யாழ்.அக.); a white colour.

*[நல்[1] + நிறம். ]*

பன்னிறமாகிய ஏழ்நிறம் கலந்தது வெண்மை என்பது சி.வி. இராமனின் கண்டுபிடிப்பு எனினும், வெளுத்த தோலினர்க்குச் சார்புவண்ணமாகவும், கறுத்ததோலினர்க்கு எதிர்வு வண்ணமாகவும், தோற்றம் தருதலின், நன்னிறமாயிற்று.

**நன்னீர்**[1] *nannir,* பெ. (n.) 1. குடிநீர்; pure or wholesame water fit to be drunk 2. பனிநீர்; rose water. "*நன்னீர் விரவிய செந்நிறச் சுண்ணம்*" (பெருங்.நரவாண.7,59.). 3. மென்னீர் (சா.அக.); soft-water.

*[நல்[1] + நீர்.]*

நோய்பரப்பும் நுண்மங்கள் அழிக்கப்பட்ட குடிநீர் இயற்கையாய் இறைவன் தந்த மழைநீரும், பனிநீரும் உவர்ப்புச் சுவையற்ற தூய நன்னீர் எனலாம்.

**நன்னீர்**[2] *nannir,* பெ. (n.) நல்லியற்கை; good nature or disposition. "*நன்னீரை வாழி அனிச்சமே*" (குறள்,1111.).

*[நல்[1] + நீர்.]*

**நன்னீர்க்கடல்** *nannir-k-kadal,* பெ. (n.) எழு கடலுள், உவர்ப்பிலா நீரையுடைய கடல்; ring-shaped ocean of fresh water, one eḻu-kaḍal

*[நன்னீர் + கடல்.]*

**நன்னு** *nannu,* பெ. (n.) பெண்; girl.

நன்னு சிறுமைப்பொருளில் வந்தால் மேதை என்றும், நண்ணு→நன்னு திரிபுப் பொருளில் வருங்கால் மங்கை என்றும், பொருள்படும்.

**நன்னு**[1]**—தல்** *nannu-.* 5 செ.குன்றாவி. (v.t.) பல்லாற் கடித்தல் (யாழ்ப்.); to nibble, as rats or squirrels, to bite or nibble off anything, as nails.

*[நன் + நுதல்—.]*

**நன்னுதல்**[2] *nannudal,* பெ. (n.) அழகிய நெற்றியை உடைய பெண்; damsel, lady, as having a beautiful forehead "*நன்னுதல் கணவ*" (பதிற்றுப்.42,7.).

*[நல்[1] + நுதல்.]*

இது பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை

**நன்னூல்** *naṉṉūl*, பெ. (n.) 13 ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்த பவணந்தி முனிவர் இயற்றிய இலக்கணநூல்; a Tamil grammar by Pavaṇandi-muṉivar, early in the 13th-C.

*[நல் + நூல்.]*

தொல்காப்பியத்திற்குப் பிறகு, சில இலக்கண மாறுபாடுகளுடன் வெளிவந்த இலக்கணநூல் பவணந்தியாரின் நன்னூல்.

'மொழிப் பொருட்காரணம் விழிப்பத் தோன்றா' என்று தொல்காப்பியர் கூறியதைப் பவணந்தி, பகுதி + சந்தி + இடைநிலை + சாரியை + விகுதி என்று பிரித்துப் பொருள் கூறினார்.

நன்னூல் குறித்து மொழிஞாயிறு கொண்டிருந்த உடன்பாடு முரண்பாடு பற்றி 1957–இல், தென்றல் என்ற இதழில் அவர் எழுதியுள்ள மறுப்புக்கட்டுரையை இங்கு காணலாம்:–

> 'நன்னூல் நன்னூலே' என்னும் கட்டுரையாசிரியர் சென்னைச் சௌக்கார்பேட்டை செயின் உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர் வித்துவான் எ.சு.பி.கெம்பீர நைனார் என்னும் செய்தியொன்றே, அவர் பவணந்தி என்னும் சமண முனிவர் இயற்றிய நன்னூற் குறையை மறைத்தற்காரணத்தை அறிஞர்க்குணர்த்தப் போதுமானதாம்.

இனி, மறுப்பாசிரியர் மறுப்புகளையெல்லாம் ஒவ்வொன்றாய், எடுத்தறுப்பாம்.

மறுப்பு: நன்னூல் நன்னூலா? என்று கேட்டிருப்பது, மரத்தைக் கண்ட ஒருவன், இந்த மரம் மரமா? என்று கேட்பது போல் வினாவில் தவறுபட்டு வினா வழுவாய் அமைந்துள்ளது.

அறுப்பு: மரத்தை மரமென்று கண்ட ஒருவனுக்கு. இது நன்மரமா என்று ஐயம் எழுமேயன்றி, மரமா என்று ஐயம் எழாது. அதுபோல் ஒரு நூலைக் கண்டவனுக்கு இது நன்னூலா என்று ஐயம் எழுமேயன்றி, நூலா என்று ஐயம் எழாது. பவணந்தி முனிவர் தம் நூலுக்கு நன்னூல் என்று பெயரிட்ட அளவிலேயே, அது நன்னூலாகிவிடாது. பொருளுக்கும் பெயருக்கும் பொருத்தம் இருப்பினும் இருக்கலாம். இல்லாமலும் இருக்கலாம். இரு கண்ணுமில்லானுக்குத் தாமரைக்கண்ணன் என்றும், இருகாலு மற்றவனுக்குத் தாண்டவராயன் என்றும், பெயரிட்டிருக்கலாம் குற்றம் நிறைந்த வேறுசில நூல்கள்கூட நன்னூல் என்று பெயர்பெறலாம்.

ஒரு கனியை உண்டமட்டில் அது நன்றென்று ஒரு பொதுமகன் கொள்ளுதல் தகாது. அதனை ஆய்ந்து அதன் உண்மைத் தன்மையைக் காண்பவன் மருத்துவனே. அதுபோல், ஒரு நூலையும் ஒரு மாணவன் கற்ற அளவில், அது நன்றென்று கொள்ளுதல் முடியாது. ஆராய்ச்சியாளனே அதன் உண்மைத் தன்மையைக் காண இயலும்.

நன்னூல் என்ற பெயரளவில் அதை நன்னூலென்று தாம் மயங்கியதுமன்றி, தம்மைப்போற் பிறரையுங் கருதி அம் மயக்கத்தைப் பிறர் மீதும் ஏற்றிக்கொள்கின்றார், நம் மறுப்பாசிரியர். "நன்னூல் நன்னூலா"? என்னும் வினாவை, நல்லெண்ணெய் நல்லெண்ணெயா? நன்மாறன் நன்மாறனா? நல்ல பாம்பு நல்ல பாம்பா? என்றித் தகையவற்றுள் ஒன்றற்கு ஒப்பிடலாமேயன்றி, இந்த மரம் மரமா? என்னும் வினாவுக்கு ஒப்பிடலாகாது. இதை உவமையிலக்கணம் செவ்வையாய் அறிந்தாரே உணர்வர்.

மேலும், வினாவில் தவறுபட்டு வினா வழுவாயமைந்துள்ளது. என்னும் சொற்றொடர், கூறியது கூறலாம். வினாவில் தவறுபட்டுள்ளது. வினா வழுவாயமைந்துள்ளது என்னும் இவ் விரண்டில், ஒன்றே அமையும்.

மறுப்பு 2: "இன்னின்ன எழுத்துகள் இன்னின்ன இடத்தில் குறுகி ஒலிக்கும் என மாத்திரை குறிக்கும் இடத்தும், புணரியலிலும் கூறினாற் போதுமானதாம்." எனக் கூறி, முன்பு தாம் மறுத்த அச் சார்பு எழுத்துகளின் வகைகளை ஏற்றுக்கொள்ள உடன்படுகிறது."

அறுப்பு: சில எழுத்துகள் சிலவிடத்திற் குறுகி யொலித்தமட்டில் சார்பெழுத்து

களாகிவிடா. எழுத்துகள் குறுகி யொலித்தல் மட்டுமன்றி, நீண்டும் ஒலிக்கும்.

*"ஆவியு மொற்றும் அளவிற் றிசைத்தலும்*

*மேவு மிசைவிளி பண்டமாற் றாதியின்"*
(101)

என்று நன்னூலாரே நன்றாய் (தெளிவாய்)க் கூறியுள்ளார். ஆகவே, குறுகியும் நீண்டும் ஒலிக்குமிடமெல்லாம் சார்பெழுத் தியல்பைப் பிறழவுணர்தலாம். குற்றியலுகரம், குற்றியலிகரம், ஆய்தம் ஆகிய மூன்றும், குறுகி யொலித்தலால் மட்டுமன்றித் தத்தம் முதலினின்று திரிந்தொலித்தாலும் சார்பெழுத்து களாயின என்றறிதல் வேண்டும்.

**மறுப்பு 3 :** 'சன்மதி', 'யசோமதி' யென்ற பெயர்களும், 'பவணந்தி,' 'தரும நந்தி' என்ற பெயர்களும் பண்டுதொட்டு இன்றுகாறும், தமிழ்நாட்டு ஜைனர்களுக்கே யிட்டு வழங்கப்படும் பெயர்களாக அமைந்துள்ளன.... இப்படியிருக்க யாதொரு ஆதாரமுமின்றி நன்னூலாரை ஆரிய அந்தணர் என்றால், அதை ஆராய்ச்சியுலகம் அடியோடு ஏற்காது.

அறுப்பு : சன்மதி, யசோமதி, பவணந்தி, தருமநந்தி என்பன 'தமிழ்ப் பெயர் களல்லவென்பதும், சமணம் வடநாட்டினின்று வந்த அயன்மதம் என்பதும், யாவரும் அறிவர். பவணந்தியார், ஒருகால் பிறப்பளவில் திரவிடரா யிருந்திருப்பினும், கருத்தளவில் மாறுபட்டவர் என்பதை, எவரும் மறுக்கவொண்ணாது. ஒருவரை ஓர் இனத்தோடு சார்புபடுத்துவது, சிறப்பாக அவர் மனப்பான்மைபற்றியே யன்றிப் பிறப்புப் பற்றியன்று.

**மறுப்பு 4 :** நம் தமிழ்நாடு தொல்காப்பியர் காலத்திற்குப் பின்பும், நன்னூலார் காலத்திற்கு முன்பும் ஆகிய இடைப்பட்ட காலத்தில், தொடர்பைப் பெரிதும் மேற்கொண்டு, அவர் தம் நடையுடை பாவனைகளில் பெரிதும் ஈடுபட்டு இருந்ததோடன்றி, அவர் தம் வடமொழியையும் தமிழில் கலந்து வழங்குதலை, உயர்ந்த நாகரிகமாகக் கருதிவந்தது.

அறுப்பு : நம் மறுப்பாசிரியர் தமிழ் நாகரிகத்தையும் தமிழ் வரலாற்றையும் செவ்வையாய் அறியாமையை அவர் மறுப்பு அறிவிக்கின்றது. அதற்கு விடை விளக்கம் ஒரு பெருநூலாய் விரியும். வடமொழியாளர் தென்னாட்டுக்கு வந்த பின்பு, தமிழ்ப் புலவருள், தமிழன்பரும் (காட்டிக் கொடுக்கும்) தமிழ்ப் பகைவரும், (கவலையற்ற) நொதுமலருமாக மூவேறு சாரர் தோன்றினர். இடைக்காலத்தில் தமிழன்பர் கை முற்றும் தாழ்ந்து விட்டதினால், வடவர் வாழ்க்கை முறையும், வடமொழியும் போற்றப்படத் தொடங்கினவேயன்றி வேறன்று.

இந்திய நாகரிகப் பண்பாட்டின் அடிப்படை தமிழரதே யென்பதும், தமிழ் தெற்கில் மூழ்கிப் போன குமரிநாட்டில் தோன்றி, வடக்கே சென்று திரவிடமாய்த் திரிந்தென்பதும், திரவிடமே ஆரியத்துக் கடிப்படை யென்பதும், தமிழ் வடமொழியால் தளர்ந்ததேயன்றி வளர்ந்ததன்று என்பதும், கடந்த ஈராயிரம் ஆண்டுகளாகத் தமிழ் நூல்கள் ஒளிக்கப்பட்டும், ஒழிக்கப்பட்டும் வந்தன என்பதும், உலகம் அறியும் காலம் அடுத்து வருகின்றது என்பதை. நம் மறுப்பாசிரியர்க்கு உணர்த்த விரும்புகின்றேன்.

**மறுப்பு 5 :** "சீயகங்கன் அரும்பொருள் ஐந்தையும் தருகவெனக் கேட்டதாகவும். பன்னருஞ் சிறப்பிற் பாடித் தந்ததாகவும் பாயிரஞ் செப்புகின்றது. ஆதலின், ஐந்தும் அமைந்ததாய் அந் நன்னூல் நிறைநூலே ஆம் என்க."

அறுப்பு : சீயகங்கன் ஐந்திலக்கணமும் இயற்றித் தருமாறு பவணந்தி முனிவரைக் கேட்டிருக்கலாம். அவரும் இசைந்திருக்கலாம். ஆயின், அந் நோக்கம் நிறைவேறியதென்பதைக் காட்டற்கு யாதொரு சான்றுமில்லை.

பாயிரம், நூலியற்றியதைக் குறிக்குமிடத்து, *"முன்னோர் நூலின் வழியே நன்னூற் பெயரின் வகுத்தனன்"* என்று மட்டும் கூறுகின்றதே யன்றி, ஐந்திலக்கணமும் வகுத்தனன் என்று ஐயமறக் கூறவேயில்லை.

பெயரியலில் (11)

*"பல்வகைத் தாதுவி னுயிர்க்குடல் போற்பல*
*சொல்லாற் பொருட்கிட னாக வுணர்வினின்*
*வல்லோ ரணிபெறச் செய்வன செய்யுள்"*

என்று செய்யுளிலக்கணம் கூறியிருப்பது, சொல்லின் பொதுவிலக்கணம் கூறிய நூற்பாவில் உள்ள "*வழக்கொடு செய்யுளின்*" என்னும் பாகுபாட்டின் ஒரு பகுதியை விளக்க எழுந்ததாயினும், தொல்காப்பியத்தில் அங்ஙனம் கூறப்படாமையை நோக்கும் போது, நன்னூலில் செய்யுளதிகாரம் என ஒன்று என்றேனும் அமைந்திருந்ததாகத் தெரிகின்றிலது.

மேலும், சமணம் சம்பந்தர் காலத்துக்குப் பின் தமிழ்நாட்டில் தலை தாழ்ந்து போயினும், ஓரளவு இன்றுவரை இடையறாது தொடர்ந்து வருவதால், ஒரு சமணர் வீட்டிலும் ஐந்ததிகார நன்னூலில்லாமையும், ஏனை மூவதிகாரங்களுள் ஒன்றேனும் ஓரிடத்து மின்மையும், அவை ஆசிரியரால் இயற்றப்பட்டில என்பதே யுணர்த்தற் பால.

**மறுப்பு 6 :** தமிழ்ப்புலவராம் குடிகள்........

"*முன்னோர் ஒழியப் பின்னோர் பலரிலும்*
*நன்னூலார் தமக்கு எந்நூலாரும் இணையோ*"

எனப் புகழ்வராயினர்.

**அறுப்பு :** இது, குயக்கொண்டான்மாரும் சுவாமிநாத தேசிகன்மாரும், வையாபுரிகளும் ஆகிய கோடரிக்காம்புகளின் கூற்றேயெனக் கூறி விடுக்க.

**மறுப்பு 7 :** "*ஒன்றொழி முந்நூறு எழுபான் என்ப*" என்று விரிவைக் கண்டவர்களையும் காட்டுகின்றார்.

**அறுப்பு :** 'என்ப' என்பது அசைச் சொல்லாயும் வரும் என்பதை மறுப்பாசிரியர் அறியார் போலும். தொல்காப்பியம் – சொல்லதிகாரம் 293–ஆம் நூற்பா வுரையைக் காண்க.

மேலும், ஒன்றொழி முந்நூற்றெழுபான் என விரிக்கும் முன்னை நூலொன்றும் இதுபோதில்லை.

**மறுப்பு 8 :** உயிரெழுத்தாயினுஞ் சரி, மெய்யெழுத்தாயினுஞ் சரி, எல்லா எழுத்துகளையும் மனத்தால் நினைக்கும்போது மாத்திரம், வாய்திறவாமல் நினக்கலாமே யொழிய, எதிராளிக்குத் தாம் கூறிக் காட்டுங் காலத்து வாய் திறந்தே கூற வேண்டுதலின் மெய்த்தன்மையையுடைய ஆய்தம் அங்காத்தலில் தோன்றாது எனக் கொள்ளுதல், எப்படிப் பொருந்தும்?

**அறுப்பு :** மெய்யெழுத்துகளையும் கூறிக் காட்டுங்காலத்து அங்காந்தே கூற வேண்டியிருத்தலின், ஆய்தத்துக்குமட்டும் ஏன் 'அங்கா' முயற்சியை விதந்து கூற வேண்டும்?

மேலும் பவணந்தி முனிவரே,

"*அவற்றுள்*

*முயற்சியுள் அஆ அங்காப் புடைய*"

என முதலீருயிர்கட்கும்.

"*இஈ எஏ ஐஅங் காப்போ*

*டண்பன் முதனா விளிம்புற வருமே*"

என ஏனைச் சில வுயிர்கட்குமாக, அங்கா முயற்சியை இதழகல் உயிர்கட்கு மட்டும் ஏன் வரையறுத்தல் வேண்டும்?

**மறுப்பு 9 :** "தும்மல் ஒலிபோன்று ஆய்த ஒலி தலையில் பிறப்பதை யெப்படி மறுத்தல் இயலும் எனக் கேட்க நேரிடுகின்றது."

**அறுப்பு :** தும்மல் ஒலிபோன்று எங்ஙனம் ஆய்த வொலி தலையில் பிறக்கும் எனக் கேட்க நேரிடுகின்றது.

**மறுப்பு 10 :** ஙகரம் மொழிக்கு முதலாகும் எனக் கூறும் ஒரு கட்சியினரும், ஙகரம் மொழிக்கு முதலாகாது எனக் கூறும் மற்றொரு கட்சியினரும் இருந்தனர். அவ் விரு சாராரையும் ஒன்றுபட் டாலுண்டு வாழ்வே என ஒன்றுபடுத்துதற்கே நன்னூலார்...... கூறிய அதனைக் குற்றமாகக் காட்டினால் அறிஞர் உலகம் ஆதரிக்குமா?"

**மறுப்பு 11 :** "அங்ஙனம் என்று கூறலே தொன்றுதொட்ட மரபாகும் என்க."

அறுப்பு : "*ஆங்கன மாகிய வாதிரை கையால்*" என்று மணிமேகலையிலும் (16,128.), "*ஆங்ஙனம் விரிப்பின்*" என்று தொல்காப்பியத்திலும் (1308) வந்திருப்பதால், நெடின் முதல் வடிவமே முந்தியதென்பது பெறப்படும். தொல்காப்பியம் மணிமேகலைக்கு முந்தியதாயினும், ஆங்ஙனம் என்பது ஆங்கனம், என்பதன் திரிபென்பது ஆராய்ச்சியால் தெளிவாம். அங்கிட்டு, இங்கிட்டு என்னும் சொற்கள் முறையே, அங்ஙோட்டு இங்ஙோட்டு என மலையாளத்தில் வழங்குவது கவனிக்கத் தக்கது. ஆங்கனம் ஆங்ஙனம் என்னும் வடிவங்களே, முறையே, அங்கனம் அங்ஙனம் எனக் குறுகி வழங்குகின்றன. இங்ஙனமே, இங்கனம் இங்ஙனம் முதலியனவும், இவை யெல்லாம். பாண்டிநாட்டு வழக்கை யறிந்த சொல் லாராய்ச்சியாளர்க்கன்றிப் பிறர்க்குச் செவ்வன விளங்கா.

மறுப்பு 12 : "இடுகுறிப் பெயர், காரணப் பெயர், காரண இடுகுறிப்பெயர் என்ற இவற்றின் வேறுபாட்டைச் சூடாமணி நிகண்டு முதலிய பண்டைய நூல்களை ஓதியுணர்ந்தவர் மறுக்க முன்வரமாட்டார்."

அறுப்பு : சூடாமணி நிகண்டு மண்டலப்புருடன் என்னும் சமணர் 16ஆம் நூற்றாண்டில் தொகுத்த சொற்பொருட்டொகுதி. அது இலக்கண நூலுமன்று. ஆதலால், அதை அளவையாகக் கொள்பவர் தமிழியல்பை யறியார் என்பது தேற்றம்.

1. ஆங்ஙனம் என்பது ஆங்கு + அனம் எனப் பிரியும்.

2. அங்கிட்டு என்பது அங்கு + இட்டு எனப் பிரியும்.

"எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே." என்னும் தொல்காப்பியம் உண்மையானதாம்.

முடிவு: நன்னூல் நன்னூலே என்னுங் கட்டுரைக்கு உண்மையில் எதிர்மறுப்புத் தேவையில்லாவிடினும்,

"பல்குழுவும் பாழ்செய்யும் உட்பகையும் கொல்குறும்பும்" சேரவியலும் இற்றைத் தமிழ்நாட்டின் சீர்கெட்ட நிலை நோக்கி. தமிழ் மாணவர்மருள் நீங்கித் தெருளும் வண்ணம் தென்றலிதழின் கட்டுரையிடச் சிறுமைக்கும் என் ஒழிவு நேரக் குறுமைக்கும் ஏற்ப, சுருங்கச் சொல்லன் முறையில், ஓரளவு வரைந்தேன்.

தமிழ்நாடு தமிழுக்குச் சிறப்புரிமையின்றிப் பொது நாடாயிருக்கு மளவும், தமிழ்க் கொள்கைகள் தலையெடா. அறியாமையிலும் அடிமைத்தனத்திலும் மயங்கிக் கிடக்கும் இளங்காளையர் உள்ளம் தளிர்ப்பெய்துமாறு, தென்றல் வீசுகின்றது. தெளிந்தெழுக.

இதனால், நன்னூல் அறவே தீ நூல் என்பதன்று. அதிலும் சில நற்கூறுகள் உள. ஆயின், தமிழின் உயிர்நாடியான தனித் தன்மைக்கும் தமிழ்மொழி நூலுண்மைக்கும் மாறான பல கருத்துகள் உண்மையின், அது முற்றும் நன்னூலன்று என்பதே, நன்னூல் நன்னூலா? என்னும் கட்டுரைக்கும் இம் மறுப்பறுப்புக்கும் முடிபும் என்க.

– "தென்றல்" 16.11.1957

**நன்னெருக்கல்** *nannerukkal*, பெ. (n) *நன்னருக்கல்,2* (யாழ்ப்.) பார்க்க; see *nannarukkal*[2].

**நன்னெல்** *nannel*, பெ. (n.) செஞ்சாலி (பிங்.); a superior paddy of yellowish hue

*[நல்[1] + நெல்.]*

**நன்னெறி** *nanneri*, பெ. (n.) 1. (சன்மார்க்கம்) செந்நெறி; righteous conduct, path of virtue, moral life. 'ஏமஞ்சார் நன்னெறியும் சேர்கலார்' (நாலடி.327.). 2. 17ஆம் நூற்றாண்டிலிருந்த சிவப்பிரகாச முனிவரியற்றிய ஒரு நீதிநூல்; a didactic poem of 40 stanzas composed by Šiva-p-piragāša-munivar, 17th c.

*[நன் + நெறி.]*

**நன்னை** *nannai,* பெ. (n.) ஏளனம் (பே.வ.); mimicking, mooking, ridiculing.

மறுவ. நக்கல்.

*[நன் + நை]*

**நனந்தம்** *nanandam,* பெ. (n.) 1. புன்கு (மலை.); indian beach. 2. சணல்; sunn hemp (L.)

**நனந்தலை** *nanan-talai,* பெ. (n.) 1. அகன்ற விடம்; expanse "*நனவே களனும் அகலன், செய்யும்*" (தொல். சொல்.859.). "*நனந்தலைப் பேரூ ரெரியுநக்க*" (புறநா.57.). "*கழைபயினனந் தலைக்கறி வளரடுக்கம்*" (புறநா.168.). 2. மண்டலம்; region, dominion. "*பல்வேறு வகைய நனந்தலை ஈண்டிய*" (பதிற்றுப்.59,14.). 3. நடு; (பிங்.) middle "*நாற்றடந்தயிர் கடனனந்தலை நிலங்கீண்டு*" (திருவிளை. அந்நந்குழி.3.). 4. உச்சந்தலை; crown of the head 5. உச்சி (அக.நி.); the highest point, zen.the 6. திசை; cardinal point, direction. "*நால்வேறு நனந்தலை யோராங்கு நந்த*" (பதிற்றுப்.69,16.).

*[நல்→நன் + அம் + தலை.]*

**நனம்** *nanam,* பெ. (n) அகற்சி; wide extent, expansiveness "*கவின்கொண்ட நனஞ்சாரல்*" (கலித்.44.). "*கல்லுயர் நனஞ்சாரற்கலங்தியலு நாடகேள்*" (கலித்.52.).

மறுவ. அகலம்.

*[நல்→நன் + அம்.]*

**நனவு¹** *nanavu,* பெ. (n.) 1. விழிப்புநிலை (சாக்கிரம்); wakefulness, opp.to kanavu. "*நனவோ கனவோ வென்பதை யறியேன்*" (மணிமே.8,21.). "*நனவூடொரு பொருளாயிரு நயநங்கொள நின்றான்*" (மதுரை. பதிற்று.84.). 2. தேற்றம்; (சூடா.) certainty. 3. மெய்ம்மை; truth, reality "*நனவிற் பாடிய நல்லிசைக் கபிலன்*" (பதிற்றுப்.85,12.). 4. பகல்; daylight "*நனவினா னலம்வாட*" (கலித்.35.). 5. விழிப்பு; wakefulness 6. கனவு; dream. 7. மயக்கம் நீங்கல்: being free from drowsyness.

*[நல் → நன் → நனவு.]*

**நனவு²** *nanavu,* பெ. (n) உணர்வுநிலையில் உண்மையாக இருப்பது; realization as opposed to dream உங்கள் கனவுகள் நனவாக வாழ்த்துகிறேன். (பே.வ.)

*[நல் → நன் → நனவு]*

**நனவு³** *nanavu,* பெ. (n) 1. களன்; stage. "*நனவுப்புகு விறலியிற் றோன்று நாடன்*" (தொல்.சொல்.377, உரை.). 2. போர்க்களம் (இராமநா.); battlefield. 3. அகலம் (தொல்.சொல்.377.); width, breadth, expanse

**நனவோடை** *nanavōdai,* பெ. (n.) (உரைநடை இலக்கியத்தில்) குறிப்பிட்ட நேரத்தில், மனத்தில் எழும் எண்ணங்களையும், உணர்வுகளையும் தொடர்ச்சியாக எழுதுதல்; stream of consciouness (as a presentation technique in prose writing) (க்ரி.தற்.தமி.அக.). நனவோடைக் கதை (இக்.வ.)

*[நனவு + ஓடை.]*

**நனா** *nanā,* பெ. (n) *கனவு* பார்க்க: see *kanavu.* "*நனாவத்தையி லானவகையை*" (திருமந்.2310.).

**நனி¹** *nani,* வி.எ. (adv) அளவிற்கு அதிகமாய், மிகுதியாய்; well abundantly. "*வந்துநனி வருந்தினை வாழியென் நெஞ்சே*" (அகநா.19.).

மறுவ. மிகை.

*[நல் → நன் → நனி.]*

**நனி²** *naṉi,* வி.எ. (adv) பெருமை (பிங்கல.2225.); greatness.

**நனிபள்ளி** *naṉipaḷḷi,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஓர் சிற்றூர்; a village in Tañjāvūr dist. இன்று புஞ்சை எனச் சுட்டப்படுகிறது. "*செழுந் தரளப் பொன்னி சூழ் திருநனி பள்ளி*" (பெரிய, 34–112,1.).

*[நனி + பள்ளி.]*

**நனை¹–தல்** *naṉai-,* 4 செ.கு.வி. (v.i.) ஈரமாதல்; to become wet, to be moistened, soaked "*நனைகவுள் யானையால் யானை யாத்தற்று*" (குறள்.678.). முழுதும் நனைந்தவனுக்கு முக்காடு தேவையா? (பழ.). வீட்டுக்கு வரும்போது மழையில் நனைந்து விட்டேன் (இக்வ.).

*[நல் → நன் → நனை–.]*

**நனை²–தல்** *naṉai-,* 4 செ.கு.வி. (v.i) 1. அரும்புதல்; to bud. "*பிடவ மலரத் தளவு நனைய*" (ஐங்குறு. 499.). 3. தோன்றுதல்; to appear. "*மகிழ்நனை மறுகின் மதுரையும்*" (சிறுபாண்.67.).

நளிர் = குளிர்ச்சி.

நளிர் → நளிர்மை → (நளுமை) → நமை.

நமை → நனை – நமத்தல் = ஈரமாதல்.

(ஒ.நோ.) குளிர் → குளிர்மை → குளுமை.

*[நுல் → நல் → நன் → நனை.]*

*நனைதல், தோன்றுதல், அரும்புதல். "நுல்" என்னும் வேரடி, தோன்றுதல் என்னும் "தலைமைப் பொருண்மையை அடிப் படையாகக் கொண்டது. இத் தோன்றுதற் கருத்தினின்றே நனை–தல் என்னுஞ் சொல் கிளைத்தது.*

**நனை³–த்தல்** *naṉai-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஈரமாக்குதல் (வின்.); to wet, moisten, soak

*[நமை + நனை–.]*

*நளிர் → நளிர்மை → (நளுமை) → நமை.*
*நமத்தல் = ஈரமாதல்*

*நளிர் = குளிர்ச்சி.*

*(ஒ.நோ.) குளிர் → குளிர்மை → குளுமை.*

**நனை⁴** *naṉai,* பெ. (n) 1. பூவரும்பு (பிங்.); flower-bud. "*மாநனை கொழுதி மகிழ்குயி லாலும்*" (நற்.9.). "*வேப்புநனையன்ன நெடுங்கட்கள்வன்*" (ஐங்குறு 30.). 2. தேன்; honey "*நனைகொள் போது வேய்நது நாதற் பாடுகின்றான்*" (சீவக.1417.). "*நனைவழி வேம்பன்றேரிற்றண்டிக்கு நம்மை யென்னா*" (திருவிளை. மாமனாகவந். 33.). 3. கள்; toddy "*மாரியினளிக்குநின் சாறுட்டு திருவி னை மகிழரனே*" (பதிற்றுப்.65,17.). 4. எறும்பு; ant 5. கச்சோலம்: an aromatic drug 6. யானை வெறி; elephant must

**தெ.** நான்.

*[நல் → நன் → நனை. (வே.க.3:3).]*

**நனைகை** *naṉaigai,* பெ. (n) ஈரமாகுகை; becoming wet

*[நன் → நனை → நனைகை.]*

கையீற்றுத்தொழிற்பெயர்.

**நனைந்த** *naṉainda,* வி.எ. (adv) ஈரமான; wetted

இது பெயரச்ச வடிவம்.

**நனைந்தவம்** *nanaindavam*, பெ. (n.) சிறுகட்டுக் கொடி; a kind of shrub.

*[நனை + தவம்.]*

**நனைந்துசுமத்தல்** *nanaindu-šumattal*, பெ. (n.) 1. (மூட்டை அல்லது பாரத்தை நனைத்துத் தூக்குகை) முன்னிலைமையிலும் மிகக் கடுமையான செயலில், தன்னை உள்ளாக்கிக் கொள்ளுகை (இ.வ.); bearing a burden in a wet or drenched condition. rendering more difficult or irksome, what is already difficult or irksome. 2. உரிய காலத்தில் செயலைச் செய்யாதிருந்து, இடையூறு வந்த பின்பு, மிகுந்த துன்பத்துடன் அதைச் செய்கை; letting pass the proper time and doing a thing under more stringent circumstances, as not selling jewels instead pledging them and paying interest afterwards

*[நன் → நனை → நனைந்து + சுமத்தல்.]*

**நனைபூசனம்** *nanai-pūšanam*, பெ. (n.) ஈரம்; wet

*[நனை + பூசனம்.]*

**நனைபொருள்** *nanai-poruḷ*, பெ. (n.) நீரில் கரையும் பொருள்; wetting agent.

*[நனை + பொருள்.]*

**நனைவிற்கடா** *nanaivirkaḍā*, பெ. (n.) ஈரமில்லா நிலம்; dry place.

**நனைவு** *nanaivu*, பெ. (n.) ஈரம்; wet. mositure, humidity. "*நனைவிற் கடை*" (தைலவ.தைல.).

*[நன் → நனை → நனைவு.]*

**நா[1]** nā, நகரமெய்யும், ஆகார உயிரும், புணர்ந்து பிறக்கும் உயிர்மெய். the syllable formed by adding the long vowel, 'ā' to the consonant 'n'. "*அண்பல்லடி நா முடியுறத் தந வரும்*" (நன், 80.).

நா: நகரத்தின் நெடிலாகிய இவ் வெழுத்து, நகரத்திற்குரிய முயற்சியோடு, வாயை அங்காத்து நீட்டுவதால், இதன் ஒலியை எழுப்புகிறது.

### "நகர ஆகாரம்" – "நா" – வரிவடிவம்

கி.மு. 3–ஆம் நுற்றாண்டு முதல், நகர ஆகாரத்தின் (நா) வரிவடிவம், தமிழகக் குகைக் கல்வெட்டுக்களில், பரவலாகக் காணப்படுகிறது. படுக்கைக் கோட்டின் மேல், செங்குத்துக் கோட்டின், வடிவமே, இவ் வரிவடிவத்தின் அடிப்படைக்குறியாகும். கொற்கைப் பானையோட்டில் காணப்படுவதும், இக் குறியே ஆகும். இக் குறியே, தமிழகத்தில் தமிழி என்றும், இந்தியமொழிகளில் தமிழ்பிராமி என்றும், அசோகன் பிராமி என்றும், பெயர்பெற்றது. அசோகன் பிராமிக்கு முந்தியது தமிழ்பிராமி. இதன் காலம் கி.மு.6–ஆம் நுற்றாண்டு. கி.மு.3–ஆம் நூற்றாண்டு முதல் தமிழகத்திலும், சிறு மாற்றத்துடன் மௌரியர், குசானர், குப்தர் கல்வெட்டுகளிலும், மி குதியாகக் காணப்படுகிறது. புரோகிருதமொழி எழுத்துக் கல்வெட்டு என்பதை, புரோமி என்று குறியாது, பிரேமி என்று குறிப்பது ஆரியச் சூழ்ச்சியே.

நகரத்திற்கு வலப்புறம் தலைக்கட்டிலிருந்து இழுக்கப்படும் கோடு ஆகாரத்தைக் குறிக்கும். ஏனைய எழுத்துக்களின் வரிவடிவத்தைப் போலவே, இதுவும், அடுத்த வளர்ச்சிக் கட்டத்தில், ஆகாரக்குறி நடுவிலிருந்து இழுக்கப்பட்டது. வழக்கம்போல வலப்புறம் கோடு இழுத்தால், "ங" கரத்தின் உருவத்தைக் காட்டுமாகையால், குழப்பத்தைத் தவிர்க்க, இடையில் கோடு இடப்பட்டது.

⊥

செங்கம் நடுகற்களின் பழைய கல்வெட்டுக் களிலும், (கி.பி. 4,5 நூ.) ஆண்டிப்பட்டி, வேந்தன் நாணயத்திலும், இவ் வடிவம் காணப்படும். அதே சமயத்தில் பழைய "ஊ"-வின் வடிவமாக இருந்த இதனோடு, இந்தக்காலத்து ஊகாரம் என்ற தலை, வளைந்த வடிவத்தால் வேறுபட்டது. பின்பு, மறுபடியும் மேலிருந்தே கோடு இழுக்கப்பட்டு, மற்ற எழுத்துக்களோடு ஒத்தநிலையில் வளர்ந்தது.

கி.பி. 8 – ஆம் நூற்றாண்டில், வலப்புறக்கோடு வளைந்து பிரிந்து விட்டது. இஃது, இரண்டாம் பல்லவ பரமேச்சுரவருமனின் திருவதிகைக் கல்வெட்டில் காணப்படும் வரிவடிவம்.

கி.பி. 9 – ஆம் நூற்றாண்டில், நிருபதுங்கனின் (இலால்குடிக்) கல்வெட்டில், காணப்படுவது. இந் நிலையில், நகரத்தை அடுத்து, ஒரு புறமாக வளர்ந்த கோடு தோன்றிற்று.

கி.பி. 14 – ஆம் நூற்றாண்டிற்கு முன்பே, இராசநாராயண சம்புவரையனின், குன்றத்தூர்க் கல்வெட்டின்படி, நகரத்தோடு ஒட்டிய நிலையில் முழுவடிவம் பெற்றது.

விசயநகர ஆட்சிக்காலத்தில், இன்றைய நா. முழுவரிவடிவம் தோன்றிற்று.

**நா**[2] *nā*, பெ. (n.) **1.** நாக்கு; tongue. "*யாகாவா ராயினு நா காக்க*" (குறள், 127.). **2.** சொல்; word. "*நம்பிநாவினு ளுலகமெல்லா நடக்கும்*" (சீவக., 316.). **3.** நடு (திவா.); (மய்யம்.); middle, centre. **4.** துலைநா எடைக்கருவியின் முள்; index of a balance "*துலைநா வன்ன சமனிலை யுளப்பட*" (ஆத்திரையன் பேராசிரியன் பொதுப்பாயிரம்). **5.** மணியின் நாக்கு; clapper of a bell "*வாயிற்கடைமணி நடுநா நடுங்க*" (சிலப்.20: 53.). **6.** தீயின் சுடர்; flame-tongue எழுநா (பிங்.). **7.** பூட்டின் தாள் (வின்.); bolt of a lock **8.** திறவுகோலின் நாக்கு (வின்.); wards of a key. **9.** இசைக்குழலின் (நாயனத்தின்) ஊதுவாய் (வின்.); mouthpiece of a music-pipe **10.** அயல் (யாழ்.அக.); nighbourhood **11.** பொலிவு (யாழ்.அக.); splendour

**க.,** நாலகெ(g) **தெ.,** நாலுக.

**து.,** நாளாயீ ம. நாக்கு.

*[நாலு → நாவு → நா → (வே.க.3:29.).]*

நாலுதல் : தொங்குதல், அசைதல், வளைதல், ஆடுதல்.

நால்→நால்கு→நாகு→நாக்கு=வாய்க்குள் தொங்கும் உறுப்பு; அசைத்து ஆட்டி வலிக்கும் துடுப்பு (வே.க.3:29.).

நால்கு→நாகு→நாக்கு : நமது உடம்பில் அமைந்துள்ள மிகச் சிறந்த உறுப்புகளுள், உடம்பின் பாதுகாப்பிற்கும், ஊட்டத்திற்கும் பயன்படுவது. உணவுப் பொருள்களின் சுவையை உணர்ந்து, உடம்பிற்குள் செலுத்துவது மட்டுமின்றி, மனத்திற்கு மகிழ்வையும் உண்டாக்கும்.

உடம்பிற்கு, பயனற்ற உணவுப் பொருள்களை விலக்கும், தலையாய பணியினைச் செய்வது நாக்கேயாகும். இதன் மேற்புறம், சுவையை அறிவிக்கப் பயன்படாது. நாவின் விளிம்புப் பகுதியும், முதல், நடு, கடையென்றமைந்துள்ள இடங்கள்தாம், அனைத்துச் சுவையையும் உணர்ந்து, அறிவிக்குந் திறன் பெற்றவை.

நாவின் முன்பகுதி இனிப்பையும், பின்பகுதி கசப்பையும், நடுப்பகுதி, உப்புச்சுவையையும் உணர்த்தும். நாவின் கீழ்ப்பகுதி, கொழுப்புச் சுவையை அறிவிக்கும்.

ஒவ்வொருமாந்தனும், உடல்வாழ்விலும், உலகவாழ்விலும், வாழ்வாங்கு வாழ்ந்து, வளம் பல பெற்று, நலமடைய, நாவினை நன்முறையில் சொற்காத்துப் பேணிச், சோர்விலா வாழ்க்கை வாழ, நாக்கினை ஓம்ப வேண்டுமென்று, சா. அக. கூறும்.

வாயினுள் தொங்குந் தன்மையில் அமைந்து திகழும். மொழி வாழிடமாகும்; நாவலர், மொழிவலர் ஆவர்.

இஃது ஒரெழுத்துச் சொல்லாகும். பல் வகைப் பொருள் பயக்குந்தன்மைத்து. அடிப்படைக் கருத்து, நாக்கு என்ற பொருளைத் தழுவியது. வாயினுள் நாக்கு எப்படி நடுவில் இருக்கிறதோ, அதைப்போலவே, நடுநிலை என்ற பொருளும், உண்டு.

பேசுவதற்கு நா இன்றிமையாதது போல, நடுவுநிலைமை, மாசற்றவாழ்வு வாழ்வதற்கு இன்றியமையாதது. நீட்சிக்கருத்தினை அடிப்படையாகக் கொண்ட, "நா" – என்னுமிச்சொல், பேச்சு என்ற பொருளையும் தரும். மணியுள் நடுவில் தொங்கும் நாக்கிற்கும், 'நா' என்ற பொருள் உண்டு. துலை(தராசு)வின் நடுவில் எடையைக் குறிக்கும் முள்ளும் 'நா' என்றே, பெயர்பெறும். (நாகசுரத்தின்) நாயனத்தின், ஊதுவாயில் செருகப்படும், *சீவாளி* யெனும் ஊதுநெட்டியும், 'நா' என்றே, பொருள் தரும். யாழ்ப்பாணத்தில் இவ் வோரெழுத்துச் சொல்லிற்கு அயல், பொலிவு என்னும் பொருள்களுண்டு.

**நா³** *nā,* பெ. (n.). 1. தவசக்கதிர் (யாழ்ப்.); ear of corn, ear of grain. 2. படகு வலிக்குந் துடுப்பின் பலகை (வின்.) blade of an oar.

**நாஇ** *nāi,* பெ. (n.) *நாய் (தொல்.எழுத்து, 58 உரை);* பார்க்க; see *dog.*

**க., து.** நாயி.

*[நா + இ → நாஇ.]*

நாவினை நாய் எஞ்ஞான்றும் நீட்டிய வண்ணம் இருத்தலால், வந்த பெயராகலாம்.

**நாக்கசப்பு** *nā-k-kašappu,* பெ.(n.) மிகு பித்தத்தினால் ஏற்படும் வாய்க்கசப்பு; bitterness of taste experienced when the bile is excited.

*[நா + கசப்பு.]*

பித்தநீர் அளவிற்கதிகமாகச் சுரத்தலின் அறிகுறியாக, நாவிலேற்படும் கசப்புச்சுவை. இந் நாக்கசப்பு, உடம்பில் மிகுசுரம் இருக்குங்கால் ஏற்படும். இந் நாக்கசப்பு வந்தால், உண்டஉணவு சுவைச்காது; இந் நாக்கசப்பு, உள்காய்ச்சலின் அறிகுறியாகும்.

**நாக்கட்டி** *nā-k-katti,* பெ. (n.) 1. நாக்கிலெழும்புஞ் சிறுசிறு கொப்புளங்கள்; ulceration of the tongue. 2. *நாக்கொப்பளம்* பார்க்க; see *nā-k-koppalam.*

*[நாக்கு + கட்டி.]*

வயிற்றிலுண்டாகும், புண்களின் விளைவாக, நாவிலேற் படுங்கட்டி. ஒவ்வாமையின் விளைவாகவும் உருவாகும்.

**நாக்கட்டுப்பாடு** *nā-k-kaṭṭu-p-pāḍu,* உணவுக்கட்டுப்பாடு; food restriction நாக்கட்டுப்பாடு உடையவர்களே நலமுடன் நீண்ட நாள் வாழ்வர் (உ.வ.).

**மறுவ.** உணவுக்கட்டுப்பாடு.

*[நா+ கட்டு + படு → பாடு.]*

ஈளை நோயாளிகள் குளிர்காலத்தே, நாவைக் கட்டுப்படுத்துவதன் வாயிலாக, இசிவு(இழுப்பு) வாராமல் வாழலாம். இந் நோயாளிகள் பனிக்கூழ் (ஐஸ்கிரீம்) முதலான,

குளிர்மையுணவுகளைத் தவிர்த்து, நாவினைக் கட்டுப்படுத்தி, உணவுக்கட்டுப்பாட்டுடன், மருத்துவர்தம் அறிவுரைப்படி வெப்பந்தரும் உணவுகளையே உண்ணவேண்டும்.

**நாக்கடு** *nā-k-kaḍu,* பெ. (n). நாக்கின் பின்புறத்தின் மேல்காணப்படும், முள் போன்ற சிறுசிறு முளை; small elevations found on the back (upper) surface of the tongue.

*[நா + கடு.]*

**நாக்கடுகு** *nā-k-kaḍugu,* பெ. (n.). *நாய்க்கடுகு* பார்க்க; see *nāy-k-kaḍugu.*

*[நா + கடுகு.]*

**நாக்கடைப்பான்** *nā-k-kaḍaippāṉ,* பெ. (n). மாட்டுநோய் வகை (மாட்டுவை.); a disease of cattle.

*[நாக்கு + அடைப்பான்.]*

கூரியமுள் வாய்ந்த, கற்றாழை, கருக்குவேல் முதலான இலைதழைகளை உண்பதால், உண்டாகும் நோய்.

**நாக்கடைப்புரட்டி** *nā-k-kaḍai-p-puraṭṭi,* பெ. (n.). *நாகவைப்பு நஞ்சு* பார்க்க; see *nāga-vaippu-nañju..*

*[நாக்கடை + புரட்டி.]*

**நாக்கத்தான்பூச்சி** *nā-k-kattāṉ-pūcci,* பெ. (n). *நாக்குப்பூச்சி (இ.வ.)* பார்க்க; see *nākku-p-pūcci.* நாக்கத்தான் பூச்சி குழந்தைகளின் உணவை உண்டு, அவர்களை நோஞ்சான் ஆக மாற்றும் (உ.வ.)

*[நாக்கு + அத்து + ஆன் + பூச்சி.]*

**நாக்கப்பாம்பு** *nā-k-ka-p-pāmbu,* பெ. (n). *நாக்குப்பூச்சி* பார்க்க; see *nākku-p-pūcci.*

ம. நாக்குப்பாம்பு.

*[நாக்கு + அம் + பாம்பு.]*

*[நாக்கம்பாம்பு → நாக்கப்பாம்பு]*

**நாக்கப்பூச்சி** *nā-k-ka-p-pūcci,* பெ. (n.). *நாக்குப் பூச்சி* பார்க்க; see *nākku-p-pūcci.*

*[நாக்கு + அம் + பூச்சி.]*

*[நாக்கம்பூச்சி → நாக்கப்பூச்சி.]*

**நாக்கரணை** *nā-k-karaṇai,* பெ. (n.), நாக்கு நோய் வகை (பரராச. I, 226.); a disease of the tongue.

*[நாக்கு+அரணை.]*

அரணை = செந்நிறக் கோடுகளுடன் கூடியது. இந் நச்சுயிரியைப் போன்ற நிறத்துடன், நாக்கில் கட்டி ஏற்படும்; ஏதும் உண்ண வியலாதபடி நாக்கில், எரிச்சலுடன், வலியுண்டாகும்.

இந் நோய் ஏற்பட்ட நாக்கு, செந்நிறக் கோடுகளுடன், அரணை போன்றிருப்பதால், இப் பெயர் ஏற்பட்டது.

**நாக்கரளை** *nā-k-karaḷai,* பெ.(n). நாக்கு நோய் வகை (யாழ்.அக); disease of the tongue. Perhaps pappilloma.

*[நாக்கு+அரணை→அரளை.]*

நாவில் அரிப்பெடுக்குஞ், சிறுசிறு கட்டிகளை உருவாக்கும் நோய்.

**நாக்கரிக்கிரந்தி** *nā-k-kari-k-kirandi,* பெ.(n) அரிக்கும் உணர்வுடன் நாக்கிலெழும் சிறுசிறு கொப்புளம்; ulceration of the tongue due to syphilitic causes.

**மறுவ.** நாக்கரனை.

*[நா → நாக்கு + அரிக்கிரந்தி.]*

**நாக்கரிப்பு** *nā-k-karippu,* பெ. (n.). **1.** *நாக்கரிக் கிரந்தி* பார்க்க; see *nā-k-karikirandi.* **2.** வளி மிகுதியால் நாக்கிலேற்படும் உப்புச்சுவை; salin taste in the mouth, when the wind is excited in the system.

*[நாக்கு + அரிப்பு.]*

நா + கரிப்பு என்று பிரித்து, வழங்கும் வழக்கும் உண்டு.

**நாக்கழற்சி** *nā-k-kaḻaṟci,* பெ. (n ) *நாக்குப்புண் (இ.வ.)* பார்க்க; see *nā-k-ku-puṇ.*

*[நாக்கு+அழற்சி.]*

**நாக்களாம்பூச்சி** *nā-k-kaḷām-pūcci,* பெ. (n ). மண்புழு; earth.worm நாக்களாம் பூச்சி உழவர்களின் நண்பன் (இ.வ.).

**மறுவ.** நாங்கூழ்.

*[நாங்கூழ் + ஆம் + பூச்சி.]*

*[ நாக்களம் → நாக்களாம் + பூச்சி.]*

ஒ.நோ. கொப்பூழ்→தொப்புள்

**நாக்களின்கற்பம்** *nākkaḷiṉ-kaṟpam,* பெ. (n ). காக்கை, கரிச்சான், செந்தலைக் கழுகு முதலான பறவைகளின், நாக்கினைக் கொண்டு செய்யப்படும் வாணாள் மருந்து; a rejuvenating powder prepared by dying and then pounding the tongues of crow, black bird, red brahmini kite and vulture

**நாக்கறு-த்தல்** *nā-k-kaṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.). கத்தியால் நாக்கினைத் துண்டித்தல்; to excise of the tongue - Glossotomy

*[நாக்கு + அறு-.]*

**நாக்கறுத்தான்** *nā-k-kaṟuttāṉ,* பெ. (n.). *நாக்கறுத்தான் புல்* பார்க்க; see *nā-k-kaṟuttāṉ-pul.*

*[நாக்கு + அறுத்தான்.]*

**நாக்கறுத்தான்புல்** *nā-k-kaṟuttāṉ-pul,* பெ. (n ). தருப்பைப்புல் (M.M );sacrificial grass or kusa grass-Erogrostis cynosrinoides the blades of this grass are generally sharp It alludes to a leged that serpents which greedily lick the honey fallen on the grass get their tongue forked

*[நாக்கு + அறுத்தான் + புல்.]*

கூர்மையான இலையினையுடைய தருப்பை. இக் கூர்மையான புல்லின் மேலிருக்கும் தேனைப் பாம்புகள் ஆர்வத்துடன் நக்க வருங்கால், அவற்றின் நாக்குகள் அறுபடும் என்று சா.அக. கூறும்.

**நாக்கறுப்பு** *nā-k-kaṟuppu,* பெ. (n.) **1.** நாக்கை அறுக்கை; incision of the tongue **2.** நாக்கிலேற்படும் கறுப்பு நிறம்; the dark colour of the tongue.

*[நா + கறுப்பு.]*

*நாக்கில் கண்ணுக்கு எட்டாத நுண்ணுயிரி களால் ஏற்படும் கறுப்பு. (சா.அக.).*

**நாக்கனிடுங்கூர்மை[1]** *nākkaṉiḍu-ṅ-kūrmai,* பெ. (n.). கந்தகவுப்பு (சங்.அக.); impure chloride of sodium, black salt

**நாக்கனிடுங்கூர்மை²** *nākkaṉiḍuṅ-kūrmai,* பெ. (n.). கந்தக உப்புடன் ஏனைய கடைச்சரக்குகளைக் கொண்டு உருவாக்கப் படும் உப்பு (சா.அக.); a prepared salt from sulphur mixed with other ingredients.

**நாக்காம்பூச்சி** *nākkām-pūcci,* பெ. (n.), நாக்குப்பூச்சி (இ.வ.), வயிற்றில் நோயினை ஏற்படுத்தும் புழு; round worm, thread worm Ascaris lumbricoides. (L.)

[நாக்குப்பூச்சி → நாக்காம்பூச்சி]

ஒநோ: மண்கட்டி–மண்ணாங்கட்டி.

**நாக்காளப்பூச்சி** *nākkāḷa-p-pūcci,* பெ. (n ), *நாகப்பூச்சி* பார்க்க; see *nāga-p-pūcci.*

**மறுவ.** நாக்குளிப்பூச்சி.

*[நாக்காளம்பூச்சி → நாக்காளப்பூச்சி]*

**நாக்கி** *nākki,* பெ. (n ). மனித உடம்பில் உள்ள பத்து நாடிகளுள் ஒன்று; one of the ten tuberous vessels of the human body.

**மறுவ.** அலம்புசா.
(அலம்புடை).

எருவாயின் இறுதிப் பகுதிவரை, உணர்வு நரம்புகளைத் தட்டியெழுப்புந் தன்மை மிக்கதென்று, சா.அக. கூறும்.

**நாக்கியாக்கிரம்** *nākkiyākkiram,* பெ. (n,). 1. கருஞ்சுண்டி (யாழ்ப்.); a species of sensitive tree. 2. முட்செடிவகை (யாழ்.அக.); a thorny shrub.

**நாக்கிரந்தி** *nā-k-kirandi,* பெ. (n.). *நாக்குப்புண் (யாழ்.அக.)* பார்க்க; see *nākku-p-puṇ*

*[நா + SKt. கிரந்தி]*

இணைவிழைச்சு நோய் கொண்ட பெண்களைப் புணருவதால், ஆடவர்தம் நாக்கிலேற்படும் சிறுசிறு கொப்புளவகை என்று சா. அக. கூறும்.

**நாக்கில்வை-த்தல்** *nākkil-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒருவர்தம் வளர்ச்சியும், ஆக்கமுங்கண்டு, பழித்துக் கூறுதல்; to slander *"அவனை நாக்கில் வைத்துக் கரித்துக் கொட்டுகிறான்"* (இக்.வ.) 2. நாக்கில் வைத்துச் சப்பிச்சாப்பிடும் இருமல் மாத்திரை; chewable cough tablets etc. நச்சிருமலுக்கு நாக்கில் வைத்துச் சப்பிச்சாப்பிடும் (மாத்திரை) குளிகை நல்லது. (இக்.வ.). 3. சிறுவர் நாக்கில்வைத்துச் சுவைக்கும் இனிப்பு; sweets consuming by the children, by tasting with tongue

*[நாக்கில் + வை–.]*

ஒருவர்தம், ஆக்கமும் ஆள்வினையுடைமையும், அறிவுத்திறனுங் கண்டு, உள்ளங்குமைந்து, பொறாமையால் வெதும்புந் தன்மையரைக் குறிக்கும், மரபார்ந்த நாட்டுப்புற வழக்கு இஃதென்று உணர்க. மேலும், பெருந் தன்மையாளர்தம், சிறுசிறுபிழைகளைப் பெரிதுபடுத்தி, நாக்கில் வைத்து நச்சுரை நவிலும், சிறுமதியாளர்தம் செயலென்றறிக. இப் பண்பாளர் நாட்டுப் புறத்தும் நகர்ப்புறத்தும் மலிந்துள்ளமை கண்கூடு.

**நாக்கிலாம்பூச்சி** *nākkilām-pūcci,* பெ. (n.) *நாக்களாப்பூச்சி* பார்க்க; see *nākkaḷā-p-pūcci*

*[நாக்களாம்பூச்சி → நாக்கிலாம்பூச்சி.]*

**நாக்கிலிரு-த்தல்** *nākkil-iru-,* 4 செ.குன்றாவி. (V T ) பெ. (n.) பிறரின் வயிற்றெரிச்சலைக் கொட்டி, கடுஞ்சொற்களுக்கு ஆட்படுதல் அல்லது சாவித்தலுக்குள்ளாதல்; to be cursed by

causing irritation to others. நல்லமனிதர் நாக்கிலிருந்து நாசமாய்ப் போகாதே (உ.வ.)

*[நாக்கில் + இரு—.]*

**நாக்கிழுப்பு** *nākkiḻuppu,* பெ. (n.). நாக்குத் தடிப்பினாலேற்படும் நோய்; a disease of the tongue, marked by the thickness of the tongue

*[நாக்கு + இழுப்பு.]*

நாக்குத் தடிப்பினாலுண்டாகும், இந் நோய் குணமாவதற்கு கடுகுக் கொதிநீரை, நன்றாகச் சுண்டக் காய்ச்சித் தேன் அல்லது புளிப்புக்காடி சேர்த்து, வாய் கொப்புளிக்க வேண்டும்.

**நாக்கு**[1] nākku, பெ. (n.) **1.** உணவைச் சுவைத்து உண்ணவும் பேசவும் பயன்படும் வாய்க்குள் அமைந்திருக்கும் தொங்கு தசைப்பகுதி; tongue is a muscular organ of speech and taste

க., நாலகெ. தெ., நாலுக. மா., நாக்கு. து.

*[நால் → நால்கு → நாகு → நாக்கு.]*
வாய்க்குள் தொங்கும் உறுப்பு. (வே.க.3:29.)



**நாக்கு**[2] nākku. 4 பெ. (n.). மரக்கட்டையின் விளிம்பில் தனியே புடைத்து நிற்கும் நாக்குப் போன்ற அமைப்பு; tenon.

*[நால்கு → நாகு→நாக்கு.]*

அசைத்து ஆட்டி வலிக்கும் துடுப்பு. (வே.க.3:29.)

**நாக்குக்கறு—த்தல்** nākku-k-kaṟu-. 4 செ. குன்றாவி. (v.t.). *நாக்கறு—த்தல்* பார்க்க; see *nākkaṟu-.*

*[நாக்கு + கறு—.]*

**நாக்குக்கிளிஞ்சல்** *nākku-k-kiḷiñjal,* பெ. (n.). நீர்வாழ் உயிரி; a kind of shell.

*[நாக்கு + கிளிஞ்சல்.]*



**நாக்குக்குளறல்** *nākku-k-kuḷaṟal,* பெ. (n.). **1.** பேச்சுத் தடுமாறுகை; faltering **2.** நா செயல் இழத்தல்; having tongue unable to move freely or tongue tied.

*[நாக்கு +உளறல்.]*

**நாக்குச்சப்பு—தல்** *nākku-c-cappu-,* 5 செ. குன்றாவி. (v.t.). குழந்தைகள் பாலைச் சுவைத்துக் குடித்தல்; to make a shrap noise with the tongue as is done by a child when sucking.

*[நாக்கு + சப்பு—.]*

நாக்கும், மேலுதடும் சேர்ந்து இயங்குதல், சப்புதல் என்றும், மேலுதடும் கீழுதடும் சேர்ந்து இயங்குதல், உறிஞ்சுதல் என்றும், மக்கள் வழக்கில் குறிக்கப்படும்.

**நாக்குச்சாதல்** *nākku-c-cādal*, தொ.பெ.(vbl.n). நா சுவை உணர்ச்சியை இழத்தல்; losing the sense of taste, as tongue.

*[நாக்கு + சாதல்.]*

*'தல்'லீற்றுத் தொழிற்பெயர்.*

முதுமையிலும், நெடுநாள் நோய்வாய்ப்பட்ட ஞான்றும், நாக்கு மரத்துப்போதலை நாக்குச் சாதல் என்று குறித்தல் உலகவழக்கு.

**நாக்குச்சூலை** *nākku-c-cūlai*, பெ. (n.), நாக்கில் உண்டாகும், ஒரு குத்தல் நோய்; pricking or gouty pain of the tongue - Glossagra.

*[நாக்கு + சூலை = நாக்கில்]*

வெப்ப மிகுதியால் ஏற்படும் குத்தல்நோய்.

**நாக்குச்செத்துப்போ—தல்** *nākku-c-cettu-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.). 1. *நாக்குச் சாதல்* பார்க்க; see *nākku-c-cādal*. 2. உணவின் சுவையை இழந்தது போல் உணர்தல்; to loose sensation to get fed up நோயுற்ற காலத்தில் நாக்குச் செத்துப் போனதால் உடம்பு தேறவில்லை (இக்.வ.). உப்பில்லாக் கஞ்சியை மட்டுமே குடித்துக் குடித்து நாக்குச் செத்துப் போய்விட்டது (உ.வ.).

*[நாக்கு + செத்து + போ—.]*

நோயுற்ற காலத்தும், அகவை முதிர்ந்து நாட்பட்ட காய்ச்சலால் உடல் நலிவுற்ற காலத்தும், நாக்குச் சுவையறியும் தன்மையினை இழத்தல் இயல்பேயாகும். நீண்ட நாள் நோய் வாய்ப்பட்டோர், மருத்துவரின் அறிவுரையின் படி, காரவுணவைக் குறைத்துக் கஞ்சியை மட்டுமே, அல்லது விலக்கு (பத்திய) உணவை உண்பதால், சிறிது, காலத்திற்குச் சுவையறியுந் தன்மையை நா இழக்கும்.

**நாக்குச்சொறசொறப்பு** *nākku-c-coṟa-coṟappu*, பெ. (n.). நாக்கின் மேற்பகுதியில் முள்பாய்கை; roughness of the surface of the tongue.

*[நாக்கு + சொறசொறப்பு.]*

காய்ச்சலால் ஏற்படும் இச் சொறசொறப்பால், எந்த உணவும் சுவைக்காது என்று, சா. அக. கூறும்.

**நாக்குட்டிநகசம்வேர்** *nākkuṭṭi-nagašam-vēr*, பெ. (n.) *நாய்க்குட்டிச் செடி* பார்க்க; see *nāykkuṭṭi-c-ceḍi*.

*[நாக்குட்டி + நகசம்வேர்.]*

**நாக்குண்ணி** *nākkuṇṇi*, பெ. (n.). நாக்கைத் தின்று கொண்டே போகும் ஒருவகைக் கட்டி; cancer of the tongue

**மறுவ.** நாப்புற்று, நாவறளை.

*[நாக்கு + உண்ணி.]*

(ஒருகா; நாவுண்ணி → நாக்குண்ணி)

உண்ணிப்புழு மற்றொரு உயிரியின் அரத்தத்தை உறிஞ்சிச் செயலிழக்கச் செய்வது போன்று, நாவைச் சிதைக்கும் புற்றுநோய். என்ற சா.அக. கூறும்.

**நாக்குத்தட்டு—தல்** *nākku-t-taṭṭu-*, 5 செ.குன்றா.வி. (v.t.). நாக்கினால் ஒலி உண்டாக்குகை; to make a sharp sound with the tongue when tasting.

*[நாக்கு + தட்டு–.]*

உணவைச் சுவைத்துச் சுவைத்துச் சப்புக் கொட்டிச் சாப்பிடும் பொழுது, ஏற்படும் நாக்கொலி.

**நாக்குத்தட்டுகை** *nākku-t-taṭṭugai,* பெ. (n.). 1. திக்கிப் பேசுகை (வின்.); stammering. 2. பூட்டின் நாக்குக் கெடுகை; derangement of the bolt of a lock.

*[நாக்கு + தட்டுகை.]*

**நாக்குத்தடித்தல்** *nākku-t-taḍittal,* பெ. (n.). நா மரத்துப்போகை; stiffness or rigidity of the tongue due to chewing of betel.

*[நாக்கு + தடித்தல்.]*

**நாக்குத்தடிப்பு** *nākku-t-taḍippu,* பெ. (n.). 1. நாக்குப் பருமன்; tongue getting thick. 2. *நாக்குத் தடித்தல்* பார்க்க; see *nākku-t-taḍittal*

*[நாக்கு + தடிப்பு.]*

*நாக்குப் பருமனால் ஏற்படும் நோயாகும். இந் நோய்க்குக் கடைச் சரக்குகளுடன், மருதம் பட்டையினைச் சேர்த்துச் சுண்டக் காய்ச்சிக் கருக்குநீர் வைத்துக் குடிப்பதால் தீரும்.* (சா.அக.).

**நாக்குத்தப்பல்** *nākku-t-tappal,* தொ. பெ. (vbl. n.) 1. *நாக்குத் தப்பு–தல்* பார்க்க; see *nākku-t-tappu-.* 2. உணவைச் சுவைத்துச் சுவைத்துச் சப்புக்கொட்டிச் சாப்பிடுதல்; a sharp sound with the tongue when tasting 3. *நாக்குச்சப்பு* பார்க்க; see *nākku-c-cappu.*

*[நாக்கு + தப்பல்.]*

அல் ஈற்றுத் தொழிற்பெயர்.

**நாக்குத்தப்பு–தல்** *nākku-t-tappu-,* 5 செ.கு.வி.(v.i.) 1. பேச்சுறுதி தவறுதல்; to fail in a promise. '*அவன் நாக்குத் தப்பினான்*'. "*நாக்குத்தப்புதல் அவருக்குக் கைவந்தகலை*" (உ.வ.). 2. பொய் சொல்லுதல்; to speak falsely. நாக்குத் தப்புதலை அரசியல் தலைவர்கள் பிழைப்பாகக் கொண்டுள்ளனர் (உ.வ).

**மறுவ.** தவறிப்பேசுதல், மாற்றிப்பேசுதல்.

*[நாக்கு + தப்பு–.]*

தல் ஈற்றுத்தொழிற்பெயர்.

**நாக்குத்தம்பனம்** *nākku-t-tambaṉam,* பெ. (n.) 1. நாக்குச்செயலிழக்கும்படி செய்கை; arresting of the movements of the tongue 2. நாவினைப் பேசவொட்டாது இசிவு ஏற்படுத்துகை; pull of the tongue and there by rendering one unable to speak

*[நாக்கு + தம்பனம்.]*

**நாக்குத்தவறு–தல்** *nākku-t-tavaṟu-* 5 செ.கு.வி.(v.i.) *நாக்குத் தப்பு –.* பார்க்க; see *nākku-t-tappu-.*

*[நாக்கு → தவறு–.]*

**நாக்குத்தள்ளல்** *nākku-t-taḷḷal,* பெ. (n.) *நாக்குத் தள்ளு–*தல் பார்க்க; see *nākku-t-taḷḷu-dal.*

*[நாக்கு+தள்ளல்]*

நோய் அல்லது வேறு செயல்களால், நாக்கு வெளியே தள்ளல்.

**நாக்குத்தள்ளு–தல்** *nākku-t-taḷḷudal,* தொ.பெ. (vbl.n.) வாயினின்றும் நா வெளிவருதல்; the protrudiny of the tongue outside the mouth

*[நாக்கு + தள்ளுதல்.]*

**நாக்குத்தாபிதம்** *nākku-t-tāpidam,* பெ. (n.) *நாக்குப்புண் (இ.வ.)* பார்க்க; see *nākku-p-puṇ.*

*[நாக்கு + Skt. தாபிதம்.]*

**நாக்குத்தாளம்போடுதல்** *nākku-t-tāḷam-pōḍutal,* பெ. (n.) **1.** உணவு கொள்ள விரும்புகை; being greedy for food. **2.** வரையறையின்றி பகடி செய்தல் (இ.வ); indutlsing in unrestrained ridicule.

*[நாக்கு + தாளம் + போடுதல்.]*

**நாக்குத்தான்பூச்சி** *nākkuttāṉ-pūcci,* பெ. (n.) *நாக்குப்பூச்சி* பார்க்க; see *nākku-p-pūcci*

*[நாக்குத்தான் + பூச்சி.]*

நாக்கொத்தான் பூச்சி → நாக்கத்தான் பூச்சி → நாக்குத்தான் பூச்சி என்பன பேச்சு வழக்குத்திரிபு

**நாக்குத்திமிர்**[1] *nākku-t-timir,* பெ. (n.) நாக்கின் உணர்ச்சியறல்; loss of sensation of the tongue - Glossoplegia.

*[நாக்கு + திமிர்.]*

**நாக்குத்திமிர்**[2] *nākku-t-timir,* பெ. (n.) செல்வச் செழிப்பிலும், பதவி ஆசையிலும் ஆட்பட்டு, அறிவு மிகுதியை வெளிக்காட்டிப் பிறரை எடுத்தெறிந்து, தன் முனைப்புடன் பேசுகை; egotistic talk

*[நாக்கு + திமிர்]*

**நாக்குத்திருந்துதல்** *nākku-t-tirundudal,* பெ. (n.) எழுத்தின் பலுக்கம் திருத்தமாயிருக்கை; clearness and precision in pronunciation.

*[நாக்கு + திருந்துதல்.]*

**நாக்குத்தீட்டு**[1]**-தல்** *nākku-t-tīṭṭu-* 5 செ.கு.வி. (v.i.) உணவை மிகுதியாக விரும்புதல்; to hanker after food.

*[நாக்கு + தீட்டு-.]*

**நாக்குத்தீட்டு**[2]**-தல்** *nākku-t-tīṭṭu-,* 5 செ.குன்றாவி (v.t.) புகழ்தல் (யாழ்ப்.); to praise one-self

*[நாக்கு + தீட்டு-.]*

**நாக்குத்துடிப்பு** *nākku-t-tuḍippu,* பெ. (n.) **1.** *நாக்குத்தாளம் போடு-* பார்க்க; see *nākku-t-tāḷam-pōḍu-,* **2.** *நாக்குநீளம்,* பார்க்க; see *nākku-nīḷam*

*[நாக்கு + துடிப்பு.]*

**நாக்குத்தூக்கல்** *nākku-t-tūkkal,* தொ.பெ. (vbl n.) உணவில் மிகு சுவையையே எப்போதும் விரும்புதல்; fondness towards spicy edibles 'நாக்குத்தூக்கலாக உண்ணுவதையே சிலர் குறிக்கோளாகத் கொண்டுள்ளனர்'.

*[நாக்கு + தூக்கு + அல்.]*

'அல்' தொழிற்பெயர் விகுதி.

உறைப்பும், புளிப்புங் கலந்த காரசாரமுள்ள உணவுண்ணுதலே நாக்குத் தூக்கல் ஆகும். நறுமணங்கமழும் நாற்சுவைமிக்க நல்லுணவுகளைப் பற்றிக் கழககாலச் செய்யுட்களில் குறிப்புகள் காணப்படுகின்றன. நளபாகம் என்பது தமிழருக்கே உரிய நல்லூண் பற்றிய செய்தியாகும். உணவில் மிகுசுவை சேர்க்கும் உப்பு, காரம், புளிப்பு போன்றவற்றைக்

குறைப்பதே உடலுக்கு நலந்தரும் என்று மருத்துவர் கணித்துள்ளனர். நடுத்தரவயதிற்குப் பின்பு, நாக்குத் தூக்கல் உணவை விட, உடல் நலத்தைப் பேணும் உணவே, சாலச் சிறந்தது.

ஏலம், கிராம்பு, மிளகு, இஞ்சி பச்சைக்கருப்பூரம் போன்ற நாக்குத்தூக்கற் சுவை நல்கும் பொருட்களை பல்வேறு உணவுகளில் குறிப்பிட்ட அளவுகளில் இன்றும் பயன்படுத்துகின்றனர்.

**நாக்குத்தெறிக்கப்பேசு-தல்** *nākku-t-teṟikka-p-pēsu-*, 5 செ. குன்றாவி. (v.t.) பெரியோரைப் பழித்தல்(வின்.); to insult a superior, to speak in an unbecoming manner.

*[நாக்குத்தெறிக்க + பேசு-.]*

**நாக்குத்தேய்-த்தல்** *nākku-t-tēy-*, 4செ. குன்றாவி. (v.t.) நாக்குவழித்தல்; to clean of the tongue

*[நாக்கு + தேய்-.]*

**நாக்குத்தொங்கல்**[1] *nākku-t-toṅgal*, பெ. (n.) முடக்குவளி நோயால் நாக்கு வெளிக் காணும்படி, கீழ்தள்ளல் ; paralytic protrusion of the tongue

*[நாக்கு + தொங்கல்.]*

**நாக்குத்தொங்கல்**[2] *nākku-t-toṅgal*, பெ. (n.) நாவின் சுவைக்கு .முதன்மை தருகை; giving importance to eating tasty-food

*[நாக்கு + தொங்கல்.]*

**நாக்குநரம்பற்றவன்** *nākku-narambaṟṟavaṉ*, பெ. (n.) 1. அளவுகடந்து பேசுபவன்; a man who wags his tongue. 2. சொன்னசொல்லை மறுப்பவன்; one who denies previous speech.

*[நாக்கு + நரம்பு + அற்றவன்.]*

**நாக்குநீட்டு-தல்** *nākku-nīṭṭu-*, 5 செ.கு.வி (v.i.) 1. அளவுகடந்து பேசுதல்; to wag one's tongue. 2. ஆள் இருவர்தம் உரையாடலில், தொடர்பில்லாத மூன்றாமவர் கருத்துக் கூறுதல்; third person's unwarranted opinions.3. பெரியோர் அல்லது ஆசிரியர் உரையில் குறுக்கிடுதல்; to intervene in scholars or teachers speech

*[நாக்கு + நீட்டு-.]*

**நாக்குநீள்(ளு)-தல்** *nākku-nīḷ(ḷu)-* 5 செ.கு.வி (v.i.) 1. விருப்பமிகுதல்; to be greedy; to have unbounded desires "*நாக்கு நீள்வன் ஞானமில்லை*" (திவ். திருவாய். 4. 6:7). 2. கடுமையாய்ப் பேசுதல்; to be reckless in speech, to have a long tongue 3. அளவுகடந்து பேசுதல்; to talk endlessly 4. வரம்பு மீறுதல்; to speak in an impertinent.

*[நாக்கு + நீள்(ளு)-. ]*

**நாக்குநீளம்** *nākku-nīḷam*, பெ. (n.) 1. உணவு விருப்பம்; hankering for food, as that of a glutton 2. கடும்பேச்சு; reckeless of opeech. 'அவளுக்கு நாக்கு கொஞ்சம் நீளம்' (பே.வ.).

*[நாக்கு + நீளம்.]*

**நாக்குநோய்** *nākku-nōy*, பெ. (n.) நாக்கிலேற்படும் ஆறுவகை நோய்கள்; disease of the tongue, it is of six varieties

*[நாக்கு + நோய்.]*

**நாக்குப்பாம்புநோய்** *nākku-p-pāmbu-nōy,* பெ. (n.) *நாக்குப்பூச்சி நோய் (இ.வ.)* பார்க்க; see *nākku-p-pūcci-nōy.*

*[நாக்குப்பாம்பு + நோய்.]*

**நாக்குப்பிடிப்பிணைப்பு** *nākku-p-piḍi-p-piṇaippu,* பெ. (n.) ஒரு கல்லின் ஒரு பக்கத்தில் நாக்குவடிவ முனை அமைத்து, மற்றொரு வடிவ முனை பொருந்துமாறு துளையிட்டு, அத் துளையில் முனையைப் புகுத்தி இணைக்கை; a tongue shaped stone-coupling

**நாக்குப்பிடிப்பு** *nākku-p-piḍippu,* பெ. (n.) நாக்கின்அடிப்பகுதியிலுண்டாகும் சதைப் பிடிப்பு; a defect at the inferior surface of the tongue- tongue tied.

மறுவ: நாக்கு முடிச்சு

*[நாக்கு + பிடிப்பு.]*

**நாக்குப்பிளவை** *nākku-p-piḷavai,* பெ. (n.) நாக்கில் தோன்றும் கட்டி; carbancle of the tongue-

*[நாக்கு → பிளவு → பிளவை.]*

(அறுவையால்) பிளக்கும்படியான கட்டிக்குப் பிளவை என்பதாகக் கொள்ளலாம்.

(ஒ.நோ.) பிளந்த நாக்கினைப் போன்ற வடிவினது பிண்ணாக்கு.

**நாக்குப்புண்** *nākku-p-puṇ,* பெ. (n.) நாவில் தோன்றும் நோய்வகை (வின்.); inflammation of the tongue, Glossitis.

*[நாக்கு + புண்.]*

**நாக்குப்புரட்டு** *nākku-p-puraṭṭu,* பெ. (n) பொய் (யாழ். அக.); lie

*[நாக்கு + புரட்டு.]*

மெய்யினை அமிழ்த்தி, பொய்யினை உயர்த்திப் புகலும் பொய்மொழிகளே நாக்குப்புரட்டு. பொய்புரட்டு, புனைசுருட்டு எனும் வழக்கும் நாக்குப் புரட்டினையே குறித்தது.

**நாக்குப்புரள்(ளு)-தல்** *nākku-p-puraḷ(ḷu)-,* 16 செ.கு.வி (v.i.) சொல்தவறுதல்; to fail in one's word. 'அவன் நாக்குப் புரளுகிறான்' (உ.வ).

*[நாக்கு + புரள்(ளு) + உ -.]*

"உ" சாரியை. "தல்" தொ.பெ.ஈறு.

**நாக்குப்புரளாமை**[1] *nākku-p-puraḷāmai,* பெ. (n.). நாக்கை அசைக்க இயலாமை; limitation of the movement of tongue-tongue tie.

**நாக்குப்புரளாமை**[2] *nākku-p-puraḷāmai,* பெ. (n.). சொல் தவறாமை; keeping up one's word. நாக்குப் புராளாமையே ஒருவனை உயர்ந்த மனிதானாக்கும் (இக்.வ.).

**மறுவ:** மாற்றிப் பேசாமை.

*[நாக்கு + புரளாமை.]*

**நாக்குப்புற்று** *nākku-p-puṟṟu,* பெ. (n) நாவிலுண்டாகும் புண்வகை (யாழ்.அக.); cancer of the tongue.

*[நாக்கு + புற்று]*

நாக்கில் உருவாகும் கொப்புளங்களால் ஏற்படும் புற்று. (சா.அக.).

**நாக்குப்பூச்சி**[1] *nākku-p-pūcci,* பெ. (n.) **1.** நாக்கிலுண்டாகும் பூச்சிகள்; tongue-worm. **2.** மலப்பைச் சிறுபுழு; round worm, thread worm, Ascaris lumbricoides. **3.** வயிற்றிலுள்ள நீண்ட புழுவகை; tape-worm. **4.** நாங்கூழ்; earth worm. **5.** *நாகப்பூச்சி* பார்க்க; see *nāga-p-pūcci.*

**மறுவ.** குடற்புழு.

*[நாக்கு + பூச்சி.]*

பெரும்பாலும் மாந்தர்தம் குடலிற் காணப்படும் பூச்சிகளை, நாக்குப் பூச்சி என்று சா.அக.கூறும். இப் பூச்சிகள் உடம்பின் ஆற்றலால், உயிர் வாழ்கின்றன. இவற்றின் விளைவாக வயிற்றுவலி, இசிவுநோய், அரத்தசோகை முதலான நோய்கள் ஏற்படுகின்றன என்று சா.அக. கூறும்.

**நாக்குப்பூச்சி**[2] *nākku-p-pūcci,* பெ. (n.) விலங்குகளின் உறுப்புகளில் காணப்படும் பூச்சி; a genus of worm found in the organs of animals. - Porocephalus.

*[நாக்கு + பூச்சி.]*

**நாக்குப்பூச்சிநோய்** *nākku-p-pūcci-nōy,* பெ. (n.) வயிற்றிற் பூச்சியுண்டாக்கும் நோய்; intestinal worms (m.l).

**மறுவ:** நாக்குப்பாம்பு நோய்.

*[நாக்குப் பூச்சி + நோய்.]*

**நாக்குப்பூச்சியாணி** *nākku-p-pūcci-y-āṇi,* பெ. (n) சிறுகொண்டையுள்ள சிற்றாணி வகை (இவ); a nail with the small head.

**மறுவ.** நாவூத்தை.

*[நாக்குப்பூச்சி + ஆணி.]*

**நாக்குப்பூர்த்தல்** *nākku-p-pūrttal,* பெ. (n) *நாக்குமா* பார்க்க; see *nākku-mā.*

*[நாக்கு + பூர்த்தல்.]*

போர்த்தல்→பூர்த்தல்.

**நாக்குமம்** *nākkumam.* பெ. (n.) சுக்கு; dry ginger.

*[நாக்கு → நாக்குமம்.]*

**நாக்குமறுத்தல்** *nākku-maṟuttal,* பெ. (n.) நாக்கு மரத்து, உணர்ச்சியற்றுப் போகை; loss of sensation of the tongue-Glossoplegia

*[நாக்கு + மரத்தல் → மறத்தல் → மறுத்தல்.]*

**நாக்குமா** *nākku-mā,* பெ. (n) நாக்கில் படரும் ஊத்தை; white layer on the surface of the tongue.

*[நாக்கு + மா.]*

**மா:–** = உணவுண்டு உறங்கியெழுந்த நிலையில், நாவிற் படர்ந்து காணப்படும் ஊத்தை.

ஊற்றை → ஊத்தை.

**நாக்குமாபடிதல்** *nākkumā-paḍidal,* பெ. (n) நாக்கின் மேல் மாவைப்போல் வெண்மையாகப் படரும் ஊத்தை; tongue covered with a whitish layer - Coated tongue

*[நாக்கு + மா + படிதல்.]*

**நாக்குமாறி** *nākku-māṟi,* பெ. (n.) முன்னுக்குப்பின் முரணாகப் பேசுபவன்–ள்; man who talks inconsistently. 'நாக்கு மாறிகளே நாட்டில் பெரிய மனிதர்களாக உலாவருகின்றனர்' (இ.வ.).

மறுவ: பேச்சுமாறி.

*[நாக்கு + மாறி.]*

**நாக்குமீன்** *nākku-mīṉ,* பெ. (n.) 1. கடல் மீன்வகை; indian sole, Pleuronectida solea 2. பதினாறு அங்குலம் வரை வளர்வதும் கருநிறமுள்ளதுமான வாரையென்னு மீன்வகை; flat fish, brownish or purplish black, attaining 16 in. in length, Psettodes erumier.

தெ., நாலுகசேப. ம., நாக்குமீன்.

*[நாக்கு + மீன்.]*

உருவானும் நிறந்தானும், நாக்குப் போற் காணப்படும், கடல்மீன்

**நாக்குமீன்வகை**

1. எருமைநாக்கு மீன்.
2. கடல்நாக்கு மீன்.
3. திட்டைநாக்கு மீன்.
4. தடிநாக்கு மீன்.
5. வெள்ளைநாக்கு மீன்.
6. வரிநாக்கு மீன்.
7. கத்திநாக்கு மீன்.
8. பட்டைநாக்கு மீன்.

**நாக்குமுடிச்சு** *nākku-muḍiccu,* பெ. (n) நாக்குப் பிடிப்பு; tongue tie.

*[நாக்கு + முடிச்சு.]*

**நாக்குமுள்** *nākku-muḷ,* பெ. (n.) நோயினால் நாக்கில் காணப்படும் முள்ளைப் போன்ற எழுச்சி; roughness of the tongue due some diseases-Furred tongue.

மறுவ. களசுண்டி

*[நாக்கு + முள்.]*

**நாக்குமூக்கு** *nākku-mūkku,* பெ. (n.) மூக்கிரட்டை (சங்.அக.); spreading hog-weed

*[நாக்கு + மூக்கு.]*

**நாக்குமூக்குச்சாதல்** *nākku-mūkku-c-cādal* பெ. (n) நாக்குப் பகுதியும், மூக்குப்பகுதியும் உணர்ச்சியறுகை; lose of sensation of taste and smell of the tongue and nose due to sickness.

*[நாக்கு + மூக்கு + சாதல்.]*

**நாக்குமூக்குச்சுடுகை** *nākku-mūkku-c-cuḍugai,* பெ. (n) உடம்பினைத் தூய்மைப் படுத்துதற்குச் சூட்டுக்கோலினால், நாக்கையும், மூக்கையும் சுடுதல்; branding the tongue and the nose which is considered by the ancients as a purification of the contaminated body of an out cast.

*[நாக்கு + மூக்கு + சுடுகை.]*

**நாக்குமூக்குநடுவறுத்தான்** *nākku-mūkku-naḍu-v-aṟuttāṉ,* பெ. (n) மூக்கிரட்டை (சங்.அக); spreading hog-weed

*[நாக்குமூக்கு + நடுவறுத்தான்.]*

**நாக்குமேற்றாளி** *nākku-mēṟṟāḷi,* பெ. (n.) நாக்கு நோய் வகையுளொன்று; a disease of the tongue

*[நாக்கு + மேல்தாளி → மேற்றாளி.]*

**நாக்குரோதம்** *nākku-rōdam,* பெ. (n) காட்டாமணக்கு; bronze leaved physic nut-Jatropha gossypifolia

*[நாக்கு + skt. ரோதம்.]*

## நாக்கு மீன் வகைகள்



தட்டை நாக்கு மீன்



வரி நாக்கு மீன்



பட்டைநாக்கு மீன்



தடிநாக்கு மீன்



கத்தி நாக்கு மீன்



வெள்ளை நாக்கு மீன்



எருமை நாக்கு மீன்

**நாக்குலர்—தல்** *nākku-lar-,* 2 செ. குன்றாவி. (v.t.) நாக்கு பசைத்தன்மையற்றுப் போதல்; to parch of the tongue.

*[நாக்கு + உலர்—.]*

**நாக்குவரி** *nākku-vari,* பெ. (n) நாக்கு வெடிப்பு; cracked tongue, fissure of the tongue

*[நாக்கு + வரி.]*

**நாக்குவலி** *nākku-vali,* பெ. (n.) நாக்கில் ஏற்படும் வலி; pain in the tongue Glossalgia.

*[நாக்கு + வலி.]*

**நாக்குவழி[1]—த்தல்** *nākku-vaḻi-,* 4 செ.கு.வி. (v.i.) நாவின் மாசினை வழித்து நீக்குதல்; to scrape and clean one's tongue. "*நாக்குவழித்து நீராட்டு மிந்நம்பிக்கு*" (திவ்.பெரியாழ்.1:2:15).

*[நாக்கு + வழி—.]*

வழி—த்தல் = நாவிற் படர்ந்து நின்ற ஊத்தையை வழித்தெடுத்துத் தூய்மைப் படுத்துதல்.

**நாக்குவழி[2]—த்தல்** *nākku-vaḻi,* 4 செ.கு.வி. (v.i.) **1.** பயன்பெறாமல் போதல்; to be useless. '*பணமில்லாமல் வெறும்புகழை மட்டும் வைத்து நாக்கு வழிக்கவா முடியும்*' (இக்.வ.). **2.** போதிய அளவின்றிக் குறைதல்; to insufficient caused as contempt. '*நீ கொடுத்த பத்து உருபாவை வைத்து நாக்கு வழிக்கவா முடியும்*' (இக்.வ.).

*[நாக்கு + வழி—.]*

*இவ்வழக்குத் தொடர் பெரும்பாலும் நாட்டில் அனைத்துப் பகுதி மக்களிடையேயும் வழக்கூன்றியுள்ளது. மதிப்பற்றுப்போன ஒன்றை எதிர்மறைப் பொருளில் வழங்குதற்கும், இழிவு, பயன்பாடின்மை, சிறுமை முதலான பொருண்மையிலும் வழங்குவதறிக.*

*[நாக்கு + வழி—.]*

**நாக்குவழு** *nākku-vaḻu,* 4 பெ. (n) நாக்கின் மேற்காணும் வழுவழுப்பு; white or yellow slimy matter deposited on the surface of the tongue.

*[நாக்கு + வழு.]*

**நாக்குவளை—த்தல்** *nākku-vaḷai-,* 4செ. குன்றாவி (v.t.) பழித்தல்; to blame, despise '*நாக்கு வளைக்கும்படியான செயலைச் செய்யலாகாது.*' (இ.வ.).

*[நாக்கு + வளை—.]*

**நாக்குவாங்கல்** *nākku-vāṅgal,* பெ. (n.) முடக்குவளியினால், நாக்கு பேசவொட்டாது இழுத்தல்; நாக்குச் செயலிழத்தல்; paralysis of the tongue

*[நாக்கு + வாங்கல்.]*

**நாக்குவாங்கிப்போதல்** *nākku-vāṅgi-p-pōdal,* பெ. (n.) **1.** பேசமுடியாதபடி நா உள்ளிழுத்துக் கொள்கை; being tongue-tied in utter amazement, as when asked an exorbitant price. **2.** நா—வறளுகை; getting dry and parched in the tongue through thirst

*[நாக்குவாங்கி + போதல்.]*

**நாக்குவாங்கு—தல்** *nākku-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.t.) **1.** நாக்கை உள்ளிழுத்தல்; to draw in the tongue. **2.** களைத்துப் போதல்;

to be completely exhausted, sorely tried. வேலை என்னை நாக்கு வாங்குகிறது. (உ.வ.)

*[நாக்கு+ வாங்கு–.]*

**நாக்குவாதம்** *nākku-vādam,* பெ. (n.) வளி மிகுதியால் நாக்கெழாது பேசமுடியாமை; when the excited vaḷi (vāyu) affects the nerves supplying the voice box and tongue. paralysis of the tongue may occur rendering the patient unable to eat, drink or speak.

*[நாக்கு+ skt. வாதம்.]*

**நாக்குவிரணம்**[1] *nākku-v-iraṇam,* பெ. (n.) நாக்குப்புண்; ulcer of the tongue.

*[நாக்கு+ skt.இரணம்.]*

**நாக்குவிரணம்**[2] *nākku-v-iraṇam,* பெ. (n.) நாக்கில்வரும் சிவப்புத் தழும்புகள்; red patches on the tongue.

*[நாக்கு+ skt. இரணம்.]*

**நாக்குவிழல்** *nākku-viḻal,* பெ. (n.) *நாக்குவிழுதல்* பார்க்க; see *nākku-viḻudal.*

*[நாக்கு+ விழல்.]*

**நாக்குவிழுதல்** *nākku-viḻudal,* பெ. (n.) பேச நா வெழாமற் போதல்; (இ.வ.); inability to speak.

*[நாக்கு+ விழுதல்]*

**நாக்குவீக்கம்** *nākku-vīkkam,* பெ. (n.) நாக்கிலுண்டாகும் வீக்கம்; swelling of the tongue. Glossoncus.

*[நாக்கு+ வீக்கம்]*

**நாக்குவெடிப்பு**[1] *nākku-veḍippu,* பெ. (n.) நாவில் பிளவுண்டாகும் நோய்வகை; cracked tongue.

மறுவ. நாக்குவரி.

*[நாக்கு+ வெடிப்பு.]*

**நாக்குவெடிப்பு**[2] *nākku-veḍippu,* பெ. (n.) நாக்கின் சளி சவ்வுக்கு அழற்சி கண்டு வெடித்தல்; fissure in the mucous membrane marked by white thickened patches- Leukoplakia.

*[நாக்கு+ வெடிப்பு.]*

**நாக்குழறு—தல்** *nā-k-kuḻaṟu-,* 5செ.கு.வி. (v.i.) நாத்தழுதழுத்தல்; to falter or stammer, as in the ecstatic joy or other emotion. "*வேந்தர்... நாக்குழறிப் பாடினர் புகழ்ந்து*" (பாரத.இராச.150).

*[நா+ குழறு–.]*

**நாக்குழிஞ்சான்** *nākkuḻiñjāṉ,* பெ. (n.) மரவகை (வின்.); silky backed round-leaved tree caper.

**நாக்குளறுகை** *nā-k-kuḷaṟugai,* பெ. (n.) பேச்சுத்தடுமாறுகை; stammering.

மறுவ. நாத்திக்குகை.

*[நா+ குளறுகை.]*

**நாக்குளிப்பாம்பு** *nākkuḷi-p-pāmbu,* (n.) நாக்குப் பூச்சி (யாழ்.அக) பார்க்க; see nākku-p-pūcci. 2. குடற்புழு; long intestinal worm.

3. நாக்குள்ளிருக்கும் கண்ணுக்குத் தெரியாத நுண்பூச்சி; micro organism of the tongue.

*[நாக்குளி + பாம்பு.]*

**நாக்குளிப்பூச்சி** *nākkuḷi-p-pūcci,* பெ. (n.) 1. *நாக்குப்பூச்சி (யாழ்.அக)* பார்க்க; see *nākku-p-pūcci* 2. *நாக்குளிப்பாம்பு* பார்க்க; see *nākkuḷi-p-pāmbu.*

*[நாக்குளி + பூச்சி.]*

**நாக்குறுதி** *nākkuṟudi,* பெ. (n.) சொல் தவறாமை (இக்.வ.); being true to one's word. சொன்னசொற்படி நடத்தலே நாக்குறுதி ஆகும் (இ.வ.).

**மறுவ.** நாக்கோடாமை.

*[நாக்கு + உறுதி.]*

சொன்னசொல்லைக் காப்பாற்றுகை. கொடுத்த வாக்குறுதிப்படி, செயலாற்றுகை. நாக்குறுதி நல்லவர்க்கு அழகு என்பது மக்கள் வழக்கு.

**நாக்கூசு-தல்** *nā-k-kūśu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. விருப்பத்திற்கு ஒவ்வாத சுவையால் நாக்கில் வெறுப்புணர்ச்சி ஏற்படுதல்; to feel irritant sensation due to unsuitable taste மாங்காயின் அளவிற்கு அதிகமான புளிப்புச்சுவையால், நாக்கூசுகிறது (இக்.வ.). 2. விரும்பாதவற்றைச் சொல்லத் தவிர்த்தல். to feel bad taste as of telling unwanted or abusive language *"அல்லவை தேய அறம்பெருகும் நல்லவை நாடி இனிய சொலின்"* (குறள்,96.). கற்றோர் அவையில் நாக்கூசும்படி இழிந்தசொற்களை, அவர் பேசினார் (உ.வ.).

*[நா + கூசு-.]*

விருப்பத்திற்கு ஒவ்வாத சுவையால் நாக்கிலேற்படும் எரிச்சல், நாக்கூசுதலாகும். உண்ணும் உணவினால் நாக்கூசும். எண்ணும் எண்ணம் இனியதாயிருந்தால், எந்த இடத்திலும், நாக்கூசும் சொற்களை நாம் நவில மாட்டோம். நாக்கூசும் சொற்களை நாம் கூறாது இருத்தற்பொருட்டே, இனியவை கூறல் எனும் அதிகாரத்தை வள்ளுவர் வகுத்துள்ளார். நாக்கூசாத நல்ல சொற்களை நாம் பேசிவந்தால், அல்லவை அழியும். நல்லறம் செழிக்கும்.

**நாக்கூறல்¹** *nākkūṟal,* பெ. (n.) நாவில் தண்ணீர் கசிதல்; salivation.

*[நாக்கு + ஊறல்.]*

அளவிற்கு அதிகமாக நாக்கில் உமிழ்நீர் ஊறுதல், நாக்கூறல் எனப்படும்.

**நாக்கூறல்²** *nākkūṟal,* பெ. (n.) நேருக்கு நேர் ஏசுதல்; talking directly abusive language

*[நா + கூறல்.]*

நேருக்குநேராக இருந்து, இழிந்த சொற்களைக் கூறி, ஏசுதல், நாக்கூசும்படி யாரும்கூறமுடியாத தீய சொற்களைக் கூறுதல்.

**நாக்கெடு¹-த்தல்** *nākkeḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. நாக்கை நீக்குதல்; to remove of the tongue. 2. *நாக்கு வழி-த்தல்* பார்க்க; see *nākku-vaḷi-.*

*[நாக்கு + எடு-.]*

**நாக்கெடு²-த்தல்** *nākkeḍu-,* 4 செ. குன்றாவி, (v.t.) ஒருவரைத் தவறாகப் புரிந்து கொண்டு பேச வாயெடுத்தல்; to attempt to speak with wrong understanding as of others.

*[நாக்கு + எடு-.]*

**நாக்கெரிச்சல்** *nākkericcal,* பெ. (n.) பெருநோயின் விளைவாக நாக்கிலுண்டாகும் எரிச்சல்; burning sensation of the tongue as in cases of dyspepsia- Glossopyrosis. (சா.அக.)

*[நாக்கு + எரிச்சல்.]*

*எரி → எரிதல் → எரித்தல் → எரிச்சல்*

பெருநோயின் விளைவால், நாக்கில் எரிச்சல் ஏற்படும். சில நேரத்தில் வயிற்றில் செரிமானக்கோளாறு ஏற்படுவதினாலும், நாக்கெரிச்சல் ஏற்படும்.

**நாக்கெரிதல்** *nākkeridal,* பெ. (n.) *நாக்கெரிச்சல்* பார்க்க; see *nākkericcal.*

*[நாக்கு + எரிதல்.]*

**நாக்கெரிவு** *nākkerivu,* பெ. (n.) *நாக்கெரிச்சல்* பார்க்க; see *nākkericcal.*

*[நாக்கு + எரிவு.]*

**நாக்கேணி¹** *nākkēṇi,* பெ. (n.) பெருமருந்துப் பூடு; Indian birthwort- aristolochia indica.

*[நா + கேணி.]*

*நாவில் வைத்து நன்கு உமிழ் நீர் ஊறிய பின்விழுங்கும் மருந்து.*

**நாக்கேணி²** *nākkēṇi,* பெ. (n.) பரிந்துரை; recommendation.

*[நாக்கு + ஏணி.]*

நாக்கை ஏணியாகக் கொண்டு, பரிந்துரையால் வாழ்வில் முன்னேறுகை.

**நாக்கேணி செய்–தல்** *nākkēṇi-šey-* 1. செ.கு.வி. (v.i.) 1. பரிந்துரை செய்தல்; to recommend 2. தகவுரை கூறுதல்; to elaborate one's qualities.

*[நாக்கேணி + செய்–.]*

காலமறிந்து, இடமறிந்து, தகுதியானவரை, தகுதியான பதவிக்கு, அறிமுகம் செய்தல்.

**நாக்கை** *nākkai,* பெ. (n.) *நாக்குப்பூச்சி (யாழ்.அக.)* பார்க்க; see *nākku-p-pūcci.*

**நாக்கைப்பிடுங்கிக்கொள்¹(ளு)–தல்** *nākkai-p-piḍuṅgi-k-koḷ(ḷu),* 16 செ.கு.வி. (v.i.). 1. நாக்கினைப்பிடுங்கிக் கொண்டு, தற்கொலை செய்து கொள்ளுதல்(இ.வ.); to commit suicide, as by pulling out the tongue. 2. தவறு நடந்ததற்கு மிக்க வருத்தங் கூறுதல் (இ.வ.); to be extremely sorry for a mistake. 3. தன்னாலான முயற்சி யெடுத்துக் கொண்டும், செயல் நடவாது போதல்; to strike one's utmost. '*நீ நாக்கைப் பிடுங்கி கொண்டாலும்*' இதைச் செய்யமுடியாது (உ.வ.). 4. பிறர் மனம் புண்படும்படி மிகுதியாய்ப் பேசுதல் (இ.வ.); to talk much பிறர் நாக்கைப் பிடுங்கிக் கொள்ளும்படி இழிந்த சொற்களால் புண்படுத்துவது, பலருக்கு இன்று வாடிக்கையாக உள்ளது (இ.வ.).

*[நாக்கை + பிடுங்கி + கொள்ளு–.]*

**நாக்கைப்பிடுங்கிக்கொள்²(ளு)–தல்** *nākkai-p-piḍuṅgi-k-koḷ(ḷu)-,* 7 செ.குன்றாவி. (v.t.). பிறர் உள்ளத்தில் தைக்கும்படிக் கடுஞ்சொற்களால் ஏசுதல்; to abusive அவன்மீது, நாக்கைப் பிடுங்கிக் கொள்ளும் படிப் பழிசுமத்தினான்.

*[நாக்கை + பிடுங்கி + கொள்ளு–.]*

**நாக்கைப்பிடுங்கு—தல்** *nākkai-p-piḍuṅgu-,* 5செ.கு.வி. (v.i.) இறத்தல்; to die.

*[நாக்கு + ஐ → நாக்கை + பிடுங்கு—.]*

''கு'' – பிற்காலத்தில் பயின்று வழங்கிய சாரியை.

“ஐ” – இரண்டாம் வேற்றுமை உருபு.

**நாக்கைப்புரட்டல்** *nākkai-p-puraṭṭal,* பெ. (n.) *நாக்கைப் புரட்டு—தல்* பார்க்க; see *nākkai-p-puraṭṭu-.*

*[நாக்கை + புரட்டல்.]*

**நாக்கைப்புரட்டு—தல்** *nākkai-p-puraṭṭu-,* 5 செ.குன்றாவி, (v.t.) ஓகநிலையில் அடிநாக்கை இடையண்ணத்திற் படும்படிச் செய்தல்; to turn the tongue upwards to reach the palate in a yoga stage.

*[நாக்கை + புரட்டு—.]*

அடிநாக்கை இடையண்ணத்தில் பொருத்தல், ஓகநிலையில் ஒன்றாகும்.

**நாக்கைப்பூச்சி** *nākkai-p-pūcci,* பெ. (n.) *நாக்குப்பூச்சி* பார்க்க; see *nākku-p-pūcci.*

*[நாக்கு + ஐ + பூச்சி.]*

ஐ =சாரியை. நா = நழுவலாக வந்துள்ளது.

நாக்குப்பூச்சி என்பது, “ஐ” சாரியை பெற்று, நாக்கைப்பூச்சி என்று மக்களிடம் நாநழுவலால் ஏற்பட்ட, தவற்று வழக்காகும்.

**நாக்கொட்டி** *nākkoṭṭi,* பெ. (n.) நாக்கு ஏழாமல் அடிப்பக்கம் ஒட்டிக் கொள்ளுகை; adhesion on the tongue at the bottom.

**நாக்கொட்டு[1]—தல்** *nākkoṭṭudal,* பெ. (n.) 1. நாவறளுகை; the state of tongue being dry and cleaving to the palate, as from thirst. “*தாய்முலையை அகலில் நாக்கொட்டுமாபோல*” (ஈடு.1:3:9); 2. குலவையொலி எழுப்புதல்; to utter shrill sounds chorusly made by women.

*[நாக்கு + ஒட்டுதல்.]*

**நாக்கொட்டு[2]—தல்** *nā-k-koṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) நாவினால் பல்வகை யொலிகளை இசைததும்ப ஒலித்துக் காட்டுதல்; to mimicry.

*[நா + கொட்டு—.]*

நாடகப் பின்புலத்தில் காட்சிக்கு ஏற்ற வண்ணம், குதிரையின் குளம்படியோசை போன்றும், களிற்றின் பிளிற்றொலி போன்றும், பறவையின் கீச்சொலி போன்றும், நாவினால் ஒலித்துக் காட்டுதல்.

முற்காலத்தே நாக்கொட்டிப் பல்வகை ஒலிகளை ஒலிக்கும் பாங்கு, தெருக்கூத்துகளிலும், நாடகங்களிலும் இருந்தது. இக் காலத்தே, நாக்கொட்டி பல்வகை ஒலியெழுப்பும் பாங்கு திரைப்படங்களில் காணப்படுகிறது.

**நாக்கொட்டு[3]—தல்** *nākkoṭṭu-,* 5 செ.குன்றாவி, (v.t.) உணவின் சுவை மிகுதியால், நாவினைத் தட்டுதல்; to sound with the tongue from excessive taste.

மறுவ. சப்புக்கொட்டுதல்.

*[நா + கொட்டு—.]*

**நாக்கொப்புளம்** *nā-k-koppuḷam,* பெ. (n.) நாக்கிலுண்டாகும் சிறுசிறு கொப்புளங்கள்; ulcertation of the tongue.

*[நா + கொப்புளம்.]*

*நாக்கில் எழும்பும் சிறுசிறு கட்டிகள்: இதைத் தொடக்கத்திலேயே கண்டு, மருத்துவஞ் செய்யாவிடில், புற்றுக்கட்டிகளாக மாறும். இதற்கு, மருதம்பட்டை, வெள்ளைக்காசுக்கட்டி இரண்டையும் சேர்த்து, தூள்செய்து நாவில் தெளிப்பதால் தீரும் என்று சா.அக. கூறும்.*

*[நா + கொப்புளம்.]*

**நாக்கோடாமை** *nā-k-kōḍāmai,* பெ. (n.) நடுவுநிலை திறம்பாமை; not avert in promise.

*[நா + கோடு + ஆ + மை.]*

'ஆ' எதிர்மறை இடைநிலை.
'மை' பண்புப் பெயர் விகுதி.

ஒருகா:– நா + கோடாமை.

இது சான்றோர்க்கு அமைய வேண்டிய அருங்குணத்துள் ஒன்று.

**நாக்கோடு–தல்** *nā-k-kōḍu-,* 12 செ.கு.வி. (v.i.) ஒருபாற் சார்ந்து பேசுதல்; to speak impartiality *"நாக்கோடாமை சான்றோர்க்கு அழகு".* (உ.வ.). *"கோடானு கோடி கொடுப்பினும் தன்னுடைநாக் கோடாமை கோடிபெறும்"* (ஔவை–பாடல்).

*[நா + கோடு–.]*

நாக்கோடுதல் என்பது ஆகுபெயராய், நாவின் செயற்பாடாகிய பேசுதலைக் குறித்ததென்க.

**நாக்கோணல்** *nā-k-kōṇal,* பெ. (n.) சொல்மாறல்; insubstantiality.

*[நா + கோணல்.]*

'அல்' = தொழிற்பெயர் ஈறு.

நாவு கோணல் என்பது, சொன்ன சொல்லை, மாற்றிப் பேசுதல். கோணல் என்பது, மறுத்து அல்லது மறைத்துப் பேசுதலைக் குறித்து நின்றது.

நாக்குமாறி, சொற்புரட்டன், பேச்சுமாறி என்பனவெல்லாம், நாக்கோணல் பற்றிய கருத்தமைவுச் சொற்களே.

**நாகக்கசடு** *nāga-k-kaśaḍu,* பெ. (n.) துத்தநாகயிழையை உருக்கும் போது தங்கும் கசடு; a soft bluish metal obtained in the smelting of zinc ores-zinc deposit- cadmium.

*[நாகம் + கசடு.]*

**நாகக்கட்டு** *nāga-k-kaṭṭu,* பெ. (n.) பொன்னாக்க (வாத)முறையில் கட்டிய துத்தநாகம்; consolidated zinc by process of Alchemy

*[நாகம் + கட்டு.]*

**நாகக்கண்ணி** *nāga-k-kaṇṇi-,* பெ. (n.) கள்ளிச்செடி வகை; orange-flowered prickly pear.

மறுவ. நாகதாளிக்கள்ளி.

*[நாகம் + கண்ணி.]*

கள்ளி →கண்ணி.

ள → ண = திரிபு.

(ஒ.நோ.) களவாளி→களவாணி.

**நாகக்கல்** *nāga-k-kal,* பெ. (n.) நாகவுரு வமைந்த கற்சிற்பம் (இ.வ.); stone with serpent figures.

*[நாகம் + கல்.]*



**நாகக்கள்ளி** *nāga-k-kaḷḷi,* பெ. (n) *நாகதாளி(L.).* பார்க்க; see *nāgatāḷi*

*[நாகம் + கள்ளி.]*

**நாகக்கறுப்பு** *nāga-k-kaṟuppu,* பெ. (n.) மூலிகை வகையுளொன்று; a kind of medicinal herb. (சா.அக.).

*[நாகம் + கறுப்பு.]*

**நாகக்கிண்ணி** *nāga-k-kiṇṇi,* பெ. (n) நாகத்தினாற் செய்த வாயகன்ற ஏனம்; basin or broad vessel made of zinc.

*[நாகம் + கிண்ணி.]*

**நாகக்குந்தளமாக்கி** *nāga-k-kundaḷamākki,* பெ. (n.) துத்தநாகவைப்பு நஞ்சு; zinc poison used in Tamil medicine and alchemy.

*[நாகம் + குந்தளம் + ஆக்கி.]*

**நாகக்குமரி** *nāga-k-kumari,* பெ. (n.) பொன்னைக் கரைக்கும் ஆற்றலுடை நீர்மம்; a mineral dissolving gold

**மறுவ.** தங்கபேதி.

*[நாகம் + குமுறி → குமரி.]*

*மேலான மேன்மைக் குணத்துடனும், வண்ணத்துடனும் ஒளிரும் நாகம் போன்று, ஒளிரும் பொன்னைக் கரைக்கும் நீர்மமும், நாகக்குமரி என்று பெயர் பெற்றது, எனலாம்.*

**நாகக்குவடு** *nāga-k-kuvaḍu,* பெ. (n) செம்புமலை (யாழ்.அக.); copper mountain.

*[நாகம் + குவடு.]*

**நாகக்கொல்லி** *nāga-k-kolli,* பெ. (n.) சருக்கரை வேம்பு; a sweet variety of margosa tree - Azadirachta indica.

*[நாகம் + கொல்லி.]*

**நாககர்ணம்** *nāga-karṇam.* (n) செவ்வாமணக்கு (மூ.அ.); red caster plant

*[நாகம் + கருணம்.]*

**நாககள்ளி** *nāga-kaḷḷi,* பெ. (n) நாகதாளிக்கள்ளி; snake hood fig

**நாககற்பம்** *nāga-kaṟpam,* பெ. (n.) செவ்வீயம் (மூ.அ.); red lead

**மறுவ.** சிகப்பு ஈயம்.

*[நாகம் + கற்பம்.]*

**நாககன்னி** *nāga-kaṉṉi,* பெ. (n.) *நாக கன்னிகை* பார்க்க; see *nāga-kaṉṉigai.*

*[நாகம் + கன்னி.]*

**நாககன்னிகை** *nāga-kaṉṉigai,* பெ. (n.) நாகவுலகத்துப் பெண்; virgin of the serpent-world.

மறுவ. பருந்து

*[நாகம் + கன்னிகை.]*

**நாககாலன்** *nāga-kālaṉ,* பெ. (n) கழுலன்; brahmini kite.

*[நாகம் + காலன்.]*

**நாககுமாரகாவியம்** *nāga-kumāra-kāviyam.* பெ. (n.) நாககுமாரனைப் பற்றிய ஒரு காப்பியம்; a jaina poem treating of the story of nāga-kumāraṉ in Tamiḷ.

*[நாக + குமாரன் + skt. காவ்ய → காவியம்.]*

*ஐஞ்சிறுகாப்பியங்களுள் ஒன்று*

**நாககெந்தி** *nāga-kendi,* பெ. (n.) 1. நேர்வாளம்(மலை.); purging croton. 2. வஞ்சிக்கொடி; common rattan of south india

*[நாகம் + கெந்தி.]*

**நாககேசம்** *nāga-kēšam,* பெ. (n.) வெண்சம்பங்கி; white champak

மறுவ. சிறுநாகப்பூ, நாகசம்பங்கி.

*[நாகம் + skt. kēsa → த. கேசம் = இதன் நறுமணத்தால் கட்டுண்ட சிறுநாகப் பாம்புகள், இப் பூவிலேயே வசிக்கத் தலைப்பட்டன என்று, சா.அக. கூறும்.]*

**நாககேசரம்** *nāga-kēšaram,* பெ. (n) சிறுநாகப்பூ; iron- wood of ceylon.

*[நாகம் + கேசரம்.]*

**நாககேளி** *nāga-kēḷi,* பெ. (n.) *நாககேணி* பார்க்க; see *nāga-kēṇi.*

மறுவ. ஈசுரமூலி.

*[நாகம் + கேளி.]*

**நாககேணி** *nāga-kēṇi.* பெ. (n.) பெருமருந்து (சங்.அக.); indian birth-wort

*[நாககேளி → நாககேணி.]*

**நாகங்கட்டி** *nāgaṅgaṭṭi,* பெ. (n) 1. கருங்காளான்; black mushroom 2. இம்பலி வேர்ச்சாறு; juice of the root of common satin ebony.

*[நாகம் + கட்டி.]*

**நாகச்சாரம்** *nāga-c-cāram.* பெ. (n) பொன்துகள், பொன்மணல்; sand mixed with gold dust- gold-ore (சா.அக.).

மறுவ. ஏமமணல்.

*[நாகம் + சாரம்.]*

**நாகச்சுண்ணம்** *nāga-c-cuṇṇam.* பெ. (n.) முப்பு; a mystic salt prepared from zinc as one of the ingrediants

*[நாகம் + சுண்ணம்.]*

**நாகச்சுழி** *nāga-c-cuḻi,* பெ. (n) முன்னந் தலையில் அமையும் மயிர்ச்சுழி; curl formed in front part of the head.

*[நாகம் + சுழி.]*

*முன்னந் தலைச்சுழி நாகத்தின் படப்பகுதி போல காணப்படுவதால், அமைந்த பெயர்.*

**நாகசகம்** *nāga-šagam,* பெ. (n.) பாம்பினைப் போல் இணைந்து, பிணைந்து விளையாடும், இணைவிழைச்சு ஆட்டம்; a kind of coitus like that of snakes.

*[நாகம் + Skt. சகம்.]*

**நாகசண்பகம்** *nāga-sanbagam,* பெ. (n.) 1. பொன்னிறப் பூக்களையுடைய பாதிரி மரம்; yellow trumpet flower tree. 2. *நாகசெண்பகம்* பார்க்க; see *nāga-šenbagam.*

*[நாகம் + சண்பகம்.]*

**நாகசத்துமூலி** *nāga-šattu-mūli,* பெ. (n.) பூடு வகை; a prostrate herb- Herpestis mouniera.

*[நாகம் + சத்து + மூலி.]*

**நாகசந்திரன்** *nāga-sandiran,* பெ. (n.) தீர்த்தங்கரரு ளொருவர் (த.நி.போ.249,உரை.); jaina Arhat.

**நாகசப்பூ** *nāgasa-p-pū,* பெ. (n.) *நாகப்பூ* பார்க்க; see *nāga-p-pū.*

*[நாகசம் + பூ]*

**நாகசம்** *nāgašam,* பெ. (n.) 1. சிந்தூரம்; vermilin. 2. செவ்வீயம்; red lead.

*[நாகசு + அம்.]*

*'அம்' சொல்லாக்க ஈறு.*

**நாகசம்பங்கி** *nāga-šambangi,* பெ. (n.) *சிறுநாகப்பூ* பார்க்க; see *siru-nāga-p-pū,* narrow- leaved ceylon iron-wood.

க. நாகசம்பகெ.

*[நாகம் + சம்பங்கி. Skt. சம்பங்கி.]*

**நாகசம்பவம்** *nāga-šambavam,* பெ. (n.) *நாகசம் (யாழ்.அக.)* பார்க்க; see *nāgašam.*

**மறுவ.** நாககற்பம். செவ்வீயம்.

*[நாகம் + சம்பவம். Skt. சம்பவம்.]*

**நாகசர்ப்பம்** *nāga-sarppam,* பெ. (n.) நாகப்பாம்பு; cobra snake.

*[த. நாகம். → Skt. சர்ப்பம்.]*

**நாகசரம்** *nāga-saram,* பெ. (n.) *நாகசுரம் (யாழ்.அக.)* பார்க்க; see *nāga-suram.*

*[நாகம் + சரம்.]*

**நாகசாகம்** *nāga-šāgam,* பெ. (n.) பேரிலாழம்; a kind of medicinal herb.

*[நாகம் + சாகம்.]*

**நாகசாபூ** *nāgašā-pū,* பெ. (n.) *நாக சம்பங்கி* பார்க்க; see *nāga-šambangi.*

**நாகசாவம்** *nāga-šāvam,* பெ. (n.) நாகசாவம், தெறுமொழி, வசைமொழி சாபம் (சர்ப்ப); curse of childlessness. முற்பிறப்பில் நல்லபாம்பைக் கொன்றதனால், பிறங்கடையற்றுப் போம்படி நேருஞ்சாவம்; curse of childless resulting from cobra killing in former births.

*[நாகம் + சாவம்.]*

**நாகசிகு** *nāga-šigu,* பெ. (n.) *நாகசிகுவிகை* பார்க்க; see *nāga-šiguvigai.*

*[நாகம் + சிகு.]*

**நாகசிகுவிகை** *nāga-šiguvigai,* பெ. (n.) சிவப்பரிதார வைப்பு நஞ்சு(யாழ்.அக.); red arsenic

*[நாகம் + சிகுவிகை.]*

**நாகசிங்கி** *nāga-šiṅgi,* பெ. (n) தும்மலை உண்டாக்கும் அரிய மூலிகை; a rare medicinal plant, generally found grown in tanks and pools.

*[நாகம் + சிங்கி.]*

*நிலையான நீர்நிலைகளிற் காணப்படும், அரியமூலிகை. இதைப் பொழுதுக்கு முன் பிடுங்கினால், தும்மலை ஏற்படுத்தும் என்று, சா.அக. கூறும்.*

**நாகசிங்கு** *nāga-šiṅgu.* பெ. (n) 1. வன்னிமருந்து வகையுள் ஒன்றான கலப்புகுவன்னி; a rare medicinal plant probably of vaṉṉi (mesquit) variety. 2. பொடுதலை; creeping vervain.

*[ நாகம் + சிங்கு ]*

**ஒருகா.** *[நாகம் + சிங்கு.]*

*ஒன்பது வகை மாழைகளையும், வைப்பு நஞ்சினையும் கரைக்கும் வன்னிமருந்து.*

**நாகசிந்தூரம்** *nāga-šindūram,* பெ. (n.) *நாகசெந்தூரம்* பார்க்க; see *nāga-šendūram.*

*[ நாகம் + சிந்தூரம் ]*

**நாகசிலை** *nāga-šilai,* பெ. (n.) ***நாகசிலைக்கல்*** பார்க்க; see *nāga-šilai-k-kal.*

*[நாகம் + சிலை.]*

**நாகசிலைக்கல்** *nāga-šilai-k-kal.* பெ. (n) செந்நாகக்கலவை; red zinc ore-zno

*[நாக + சிலை + கல். –]*

*சிவப்பு வண்ணமுடைய இந் நாகக்கல் 120 வகை தமிழ் மருந்துகளுள் ஒன்றாகும்.*

**நாகசின்னம்** *nāga-šiṉṉam,* பெ. (n) *நாகசுரம்* ***(யாழ்.அக.)*** பார்க்க; see *nāgasuram.*

*[நாகம் + சின்னம்.]*

**நாகசீவனம்** *nāga-šīvaṉam,* பெ. (n.) துத்தநாகம் (சங்.அக.); zinc

*[நாக + சீவனம்.]*

**நாகசுரம்** *nāga-šuram,* பெ. (n.) துளைக்கருவி வகை; nāgašuram, one of the chief musical instruments "*தாரை நவுரி தவண்டை துடி நாகசுரம்*" (கூளப்ப.)

**மறுவ.** நெடுவங்கியம்.

*[நாகம் + சுரம்.]*

தமிழ் இசைக்கருவிகளில் தலைசிறந்தது. துளைக்கருவிகளுள் ஒன்று. இக் கருவி, இன்றும் மங்கலச்சின்னமாக, மக்களால் மதிக்கப்படுகிறது. இதன் ஓசை அனைத்து மங்கல நிகழ்வுகளிலும் இடம்பெறும்.

தமிழகத்திற்குத் தனிச்சிறப்புத்தரும் இசைக்கருவிகளில், சிறப்பிடத்தைப் பெற்றுள்ள இக் கருவியின் இன்னிசை, நெடுந்தொலைவு கேட்கும் தன்மைத்து.

மொழிஞாயிறு நாதசுரம் என்கிற நாயனத்தை 'நாகசுரம்' என்றே குறித்துள்ளார்.

கோவில் வழிபாடு – திருவிழாக்களிலும், இல்லங்களில் நிகழும் இசைநிகழ்ச்சிகளிலும், நாகசுரம், சிறப்பிடம் பெற்றுள்ளது.



**நாகசுவந்தை** *nāga-šuvandai,* பெ. (n.) *கீரிப் பூண்டு (யாழ்.அக.)* பார்க்க; see *kiri-p-pūṇḍu.*

*[நாகம் + சுவந்தை.]*

**நாகசெண்பகம்**[1] *nāga-šeṇbagam,* பெ. (n.) 1. சிறுமரவகை; common yellow trumpet flowered tree.s.tr., Tecoma stans. 2. *சிறுநாகப்பூ* பார்க்க; see *širu-nāga-p-pū.* 3. பொன்னிறப்பூக்களையுடைய பாதிரிமரம்; trumpet flower tree.

*[நாகம் + சண்பகம்.]*

**நாகசெண்பகம்**[2] *nāga-šeṇbagam,* பெ. (n.) பொற்கரை வேய்ந்த ஆடை; golden border of the dress.

**நாகசெந்தூரம்** *nāgašendūram,* பெ. (n.) நாகத்தைப் புடமிட்டுச் சுண்ணமாக்கிச் செந்தூரிக்கும் மூலிகை; drug-capable of turning zinc into red oxide by process of calcination.

மறுவ. மாகாளி சுரபுன்னை.

*[நாகம் + செந்தூரம்.]*

**நாகசெந்தூரிச்சி** *nāga-šendūricci,* பெ. (n.) நீண்டநாள் வாழச்செய்யும் வாணாள் மூலி; rejuvenating zinc.

மறுவ. மாஞ்சரோகனி.

*[நாகம் + செந்தூரம் → செந்தூரிச்சி.]*

கண்களின் பார்வையைக் கூர்மையாக்கி, நீண்ட நாள் வாழச்செய்யும், வாணாள் மூலிகை.

**நாகசேதகன்** *nāga-sēdagaṉ,* பெ. (n.) மலைகளின் சிறகை அரிந்த இந்திரன் (யாழ்.அக.); indiran, as one who clipped the wings of mountains.

*[நாகம் + சேதகன்.]*

**நாகஞ்சம்** *nāgañjam,* பெ. (n.) திருமால்காந்திச் (விட்டுணுக்கிராந்தி) செடி, அரியமருந்துச்செடி; a rare medicinal plant.

*[நாகம் + நாகஞ்சம்.]*

**நாகஞ்செம்பாக்கி** *nāgañ-jembākki,* பெ. (n.) செம்மரம்; red word capable of turning zinc into copper.

*[நாகம் + செம்பாக்கி–.]*

*[துத்த நாகத்தை தாமிர மாழையாக்கப் பயன்படும் மூலிகை. என்று, சா.அக. கூறும்.]*

**நாகஞ்சேர்வை** *nāgañ-jērvai,* பெ. (n.) மட்டமான மாழையும், துத்தநாகமும் இணைந்த கலவை; an alloy of zinc or any compound of zinc.

*[நாகம் + சேர்வை.*
*சேர்வை = மாழைக்கலவை.]*

**நாகஞ்சேர்வைச்செந்தூரம்** *nāgañjērvai-c-cendūram,* பெ. (n.) மற்ற கடைச் சரக்குகளுடன், நாகத்தைச்சேர்த்துப் புடமிட்ட

செந்தூரம்; a red oxide of zinc prepared with other drugs by process of calcination.

*[நாகஞ்சேர்வை + செந்தூரம்.]*

**நாகடமண்** *nāgaḍamaṇ,* பெ. (n.) உவர்மண்; saline-soil.

**மறுவ.** நாவடமண்,

உழை மண்,

சவட்டு மண்,

களர் மண்.

**நாகணத்தி** *nāgaṇatti,* பெ. (n.) காக்கட்டான் கொடி; crow creeper- Clitoria ternatea.

**நாகணப்பேரி** *nāgaṇa-p-pēri,* பெ. (n.) சுடலையாவரை; tanners cassia found grown in burial ground

*[நாகணம்+பேரி.]*

**நாகணம்[1]** *nāgaṇam,* பெ. (n.) நறும்பண்ட வகை (தைலவ.தைல.43,உரை.); an aromatic substance.

**மறுவ.** நகம்.

*[நாகம் → நாகணம்.]*

*இந் நறுமணச்சரக்கு மலட்டுத் தன்மையைப் போக்கும், கூர்மையான பார்வைக்கும், கண்களிலேற்படும் பிணிகளுக்கும், கைகண்ட மருந்து. பெருவயிற்றைக் குறைக்கும் தன்மைத்து என்று, சா.அக. கூறும்.]*

**நாகணம்[2]** *nāgaṇam,* பெ. (n.) **1.** நேர்வாளம்; croton oil plant. **2.** நாகணவாய்ப்புள்; the minabird. **3.** சங்கு; conch.

**நாகணவாய்** *nāgaṇa-vāy,* பெ. (n) *நாகண வாய்ப்புள் (யாழ்.அக.)* பார்க்க; see *nāgaṇa-vāy-p-puḷ.*

*[நாகணம் + வாய்.]*

**நாகணவாய்ச்சி** *nāgaṇa-vāycci* பெ. (n) *நாகணவாய்ப்புள்* பார்க்க; see *nāgaṇa-vāy-p-puḷ.* "*கேகயப்புள்ளும் நாகணவாய்ச்சியும்*" (குற்றா.குற.87.3.).

**நாகணவாய்ப்புள்** *nāgaṇa-vāy-p-puḷ* பெ. (n) பூவைப்பறவை (திவா.); bush myna. Fuscus acridotheres- Mainate.

**மறுவ.** மைனாக்குருவி

*[நாகண + வாய் + புள்.]*



**நாகணி** *nāgaṇi,* பெ. (n.) புன்கு; malabar poon.

**நாகணை** *nāgaṇai,* பெ. (n.) திருமாலின் பாம்பணைப் பள்ளிக் கொள்கை; the serpent-bed of Tirumāl "*நாகணைமிசை நம்பரர்*" (திவ்.நாய்ச்.10:10).

*[நாகம் + அணை.]*

**நாகணையான்** *nāgaṇaiyāṉ,* பெ. (n.) (பாம்பைப் படுக்கையா யுடைய) திருமால்; Tirumāl (viṣhṇu), as couched on a serpent.

*[நாகணை → நாகணையான்.]*

**நாகத்தம்** *nāgattam,* பெ. (n.) *நாகத்தாதனம்* பார்க்க; see *nāgattādaṉam.* "*நாகத்த மிடாதனம்*" (தத்துவப்107).

இரண்டுகால்களையும் கழுத்தில் ஏறிட்டு வைத்துத் தலைகால்களுக்குட்படுமாறு உடலை வளைத்து நிற்கும் இருக்கை வகை.

**நாகத்தம்பிரான்** *nāga-t-tambirāṉ,* பெ. (n.) தெய்வமாக வைத்து வணங்கப்படும் தலைமைப்பாம்பு (யாழ்ப்); cobra, regarded as a god

*[ஒருகா: நகர் → நாகு → நாகம் + தம்பிரான் = இளமையுடன் விளங்கித் தோன்றும், ஒளிமிக்க தலைமைத் தன்மைப்பூண்ட நாகம்.]*

**நாகத்தல்லி** *nāga-t-talli,* பெ. (n) நறுமணப்பொருள் (பெருங்,மகத.17,132); a kind of fragrant substance.

*[நாகம் + தல்லி.]*

**நாகத்தாதனம்** *nāgattādaṉam,* பெ. (n.) இரண்டுகாலுங் கழுத்திலேறிட்டு, தலை, காலுக்குட்பட, உடலை வளைத்து நிற்கும் ஒகவகை (தத்துவப்.107,உரை.); a posture in which the legs are twined round the neck in a yoga stage

*[நாகம் + அத்து + ஆதனம்.]*

**நாகத்தி** *nāgatti,* பெ. (n) மையிலை; small elliptia, leaved wild tea - Goldonia obtusa.

*[நாகம் → நாகத்தி.]*

**நாகத்திசை** *nāga-t-tiśai,* பெ. (n) வடமேற்கு; north- west.

*[நாகம் + திசை.]*

**நாகத்தின்சத்துரு** *nāgattiṉ-śatturu,* பெ. (n) சிறு பூனைக்காலி; passion flower.

*[நாகத்தின் + சத்துரு.]*

**நாகத்தின்பாம்பு** *nāgattiṉ-pāmbu,* பெ. (n) பூநாகம்; small snake found in flowers

**மறுவ.** சிறுபாம்பு.

*[நாகத்தின் + பாம்பு.]*

**நாகத்தினுயிர்பெந்தத்தி** *nāgattiṉuyir-pendatti,* பெ. (n) வெள்ளைக் கிலுகிலுப்பை; white flowered rattle wort.

**நாகத்துக்குருவாணி** *nāgattu-k-kuruvāṇi.* பெ. (n.) *நாகதமனியம்* பார்க்க; see nāgatamaṇiyam.

*[நாகத்துக்கு + உருவாணி.]*

**நாகத்துகள்** *nāga-t-tugaḷ,* பெ. (n.) *நாகப்பொடி* பார்க்க; see *nāga-p-poḍi.*

*[நாகம் + துகள்.]*

**நாகத்துரு** *nāga-t-turu,* பெ. (n) நாகமரத்தின் வேர்; root of jammoon tree

*[நாகம் → நாகத்துரு.]*

*நாகம் = நாகமரம்.*

**நாகத்தேமணி** *nāga-t-tēmaṇi,* பெ. (n.) *நாகதாளி*[3] பார்க்க; see *nāgatāḷi*[3].

மறுவ. மணித்தக்காளி

**நாகத்தைச்சூரணமாக்கி** *nāgattai-c-cūraṇam-ākki,* பெ. (n.) வெற்றிலை; betal leaf capable of reducing zinc into powder.(சா.அக.)

*[நாகத்தை + சூரணம் + ஆக்கி.]*

**நாகத்தைச்செந்தூரம்பண்ணி** *nāgattai-c-cendūram-paṇṇi,* பெ. (n.) அழுகண்ணி; indian weeping plant.(சா.அக.)

மறுவ. நலகண்ணி, நற்கள்ளி.

*[நாகத்தை + செந்தூரம் + பண்ணி.]*

**நாகத்தைச்செந்தூரியாக்கி** *nāgattai-c-cendūriyākki,* பெ. (n.) 1. கரூமத்தை; black dhatura. 2. கசப்புப்பசளை; bitter portulaca or spinach. (சா.அக.)

*[நாகத்தை + செந்தூரி + ஆக்கி.]*

**நாகத்தைச்சொர்ணமாக்கி** *nāgattai-c-cornamākki,* பெ. (n.) பொன்னாக்கி; நாகத்தைக் கரைக்கும் நீர்மம்; a solvent capable of converting zinc into gold. (சா.அக.)

மறுவ. கரைமம்.

*[நாகத்தை + சொர்ணம்+ ஆக்கி.]*

**நாகத்தைநாசமாக்கி** *nāgattai-nāšam-ākki,* பெ. (n.) முருங்கை; moringa. (சா.அக.)

*[நாகம் + அத்து + ஐ + நாசம் + ஆக்கி.]*

**நாகத்தைப்பற்பமாக்கி** *nāgattai-p-parpam-ākki,* பெ. (n.) மான் செவிக்கள்ளி; spiral leafy milk hedge

*[நாகம் + அத்து + ஐ + பற்பம் + ஆக்கி.]*

**நாகத்தைப்பேதமாக்கி** *nāgattai-p-pēdam-ākki,* பெ. (n.) பொன்னாக்க முறைக்குப் பயன்படும் செப்புச்சதுரக்கள்ளி; a red variety of milk spurge capable of transmuting zinc into gold. (சா.அக.)

மறுவ. பொன்னாக்கமூலி.

*[நாகத்தை + பேதமாக்கி.]*



**நாகத்தொட்டி** *nāga-t-toṭṭi,* பெ. (n) நாகம் சேர்த்துச் செய்த, தொட்டி வைப்பு நஞ்சு; a kind of prepared arsenic compound

*[நாகம் + தொட்டி.]*

**நாகதகனி** *nāgadagaṇi,* பெ. (n.) மரவகை; a tree. (சா.அக.).

*[நாகம் + தகனி.]*

**நாகதண்டிகை** *nāga-taṇḍigai,* பெ. (h.) **நாகதந்தம்** பார்க்க; see *nāga-tandam.*

*[நாகம் + தண்டிகை.]*

# நாகணவாய் வகைகள்



மலை நாகணவாய்



நாகணவாய்



சாம்பல்தலை நாகணவாய்



செவ்வா நாகணவாய்



காட்டு நாகணவாய்



கருங்கொண்டை நாகணவாய்

**நாகதந்தம்** *nāga-tandam,* பெ. (n) 1. யானைத் தந்தம்; elephant's tusk. 2. பாம்பின் பல்; serpent's fangs. 3. முளையாணி; peg.

*[நாகம் + தந்தம்.]*

**நாகதந்தி**[1] *nāga-tandi,* பெ. (n) மரவகை; heliotropeum indicum 2. பேய்த்தும்மட்டி; bitter apple

*[நாகம் + தந்தி.]*

**நாகதந்தி**[2] *nāga-tandi,* பெ. (n.) 1. முள்ளங்கி; garden radish. 2. நேர்வாளம்; croton.

மறுவ: நர்க்கணம்.

*[நாகம் + தந்தி.]*

**நாகதந்தி**[3] *nāgatandi,* பெ. (n.) நாகணம் பார்க்க; see nāgaṇam.s

**நாகதமனம்** *nāga-tamaṉam,* பெ. (n) தண்ணீர் விட்டான்; common asparagus. (சா.அக.)

*[நகர் → நாகம் + தமனம்]*

**நாகதமனி** *nāga-tamaṉi,* பெ. (n.) மாசிபத்திரி (மூ.அ); worm-wood (சா.அக.)

*[நாகம் + தமனி.]*

**நாகதமனியம்** *nāga-tamaṉiyam,* பெ. (n) 1. பழுபாகல்; prickly carolah 2. காய்ப்பாகல்; buffalo carolah 3. தலைச்சூடுவள்ளி; indian birth-wort (சா.அக.)

*[நகம் + நாகம் + தமனியம்.]*

**நாகதமாலம்** *nāga-tamālam,* பெ. (n) புன்கமரம்; indian beech, Pongamia glabra. (சா.அக.)

*[நகம் → நாகம் + தமாலம்.]*

**நாகதவனம்** *nāga-tavaṉam,* பெ. (n) நச்சுமூங்கில்; poison bamboo, Crinum asiaticum.

**நாகதாளி**[1] *nāga-tāḷi,* பெ. (n.) 1. *சப்பாத்துக் கள்ளி*(ட). பார்க்க; see *šappāttukkaḷḷi*-common Prickly-Pear 2. *நாகதாளிக்கள்ளி* பார்க்க; see *nāgatāḷi-k-kaḷḷi*

*[நாகம் + தாளி.]*



**நாகதாளி**[2] *nāga-tāḷi,* பெ. (n.) பேய்ப்பீர்க்கு; bitter luffa or wild luffa. Luffa acutangula

*[நாகம்+தாளி.]*

**நாகதாளி**[3] *nāga-tāḷi,* பெ. (n.) குங்குமப்பூவின் மணத்தையும், வெற்றிலையின் வடிவையும் உடைய தாளிச்செடி; a kind of tāli Ipomea plant its leaves smell like european saffron and the resemble betel leaves

மறுவ: நாகத்தமனி, நாகத்தேமனி.

*[நகம்→நாகம்+தாளி.]*

*இதன் சூரணத்தைப் பொடித்து, தேனில் கலந்து உட்கொள்ள, அனைத்து*

*நோய்களும் அகலும். இச் சூரணத்தை ஒரு மண்டலம் உண்டு வந்தால், வெருகம் பூனையின் நச்சுத்தன்மை படிப்படியாகக் குறையும். பாம்பின் நச்சுத்தன்மை நீங்கும். நரைதிரை மாறும். தோலின் சுருக்கம்மாறி, உடம்பில் மினுமினுப்பு ஏற்படும். நாகதாளிச் செடியின் தோற்றத்தையும், அதன் மருத்துவக் குணங்களையும் அடிப்படையாகக் கொண்டு, சாம்பசிவ மருத்துவ அகரமுதலி, பின்வருமாறு பிரித்துள்ளது.*

1. *கருநாகதாளி.*
2. *செந்நாகதாளி.*
3. *அடுக்கு நாகதாளி.*
4. *மஞ்சள் நாகதாளி.*

**நாகதாளி**[4] *nāga-tāḷi,* பெ. (n.) சதுர (கிரி)மலையிற் காணப்படும், மஞ்சள் வண்ண மூலிகைச்செடி; an another nāgatāḷi medicinal herb found grown in šadurakiri hills.

**மறுவ:** நாகமணிஇலை,ஈசுவரமூலி.

*[நாகம்+தாளி.]*

*மஞ்சள் நிறமுடைய இந் நாகதாளி சதுரமலையிற் பரவலாகக் காணப் படுகிறது. சிறிய வெற்றிலையின் தோற்றங் கொண்ட இவ் வகை நாகதாளி இலைக்கலவையினைக் கடைச் சரக்குகளுடன் சேர்த்து உண்டு வந்தால், நீண்ட வாணாளை வாரி வழங்கும். நன்கு காய்ச்சிய நல்லெண்ணெய், இதளியக் (பாதரச) கலவையில், இச் சாற்றினைச் சேர்த்தால், இதளியம் கட்டியாக மாறும். பின்பு, இக் கட்டியினைச் செந்தூரமாக்கி, ஆவின் நெய்யில் ஒரு வாரம் உண்டுவந்தால், உடலுள்ளூறு நோய்கள் அனைத்தும் அகலும்.*

**நாகதாளிக்கள்ளி**[1] *nāga-tāḷi-k-kaḷḷi,* பெ. (n.) 1. கள்ளிச்செடிவகை(வின்); Orange flowered Prickly Pear.sh.,Opuntia spinessisima 2. சப்பாத்துமுள்; slipper milk hedge

**மறுவ.** சப்பாத்திச் செடி,—சப்பாத்திக்கள்ளி, சப்பைக்கள்ளி, நாகக்கள்ளி, பலகைக்கள்ளி, மஞ்சள்கள்ளி.

இக் கள்ளி, இந்தியாவின் அனைத்துப் பகுதிகளிலும் கிடைக்கும் அமெரிக்கா விலிருந்து கொண்டு வந்து பயிராக்கப்பட்டது.

இச்செடி மஞ்சள் நிறமுடையது. இதன் அடித்தண்டு சப்பையானது. சதைப்பற்று மிக்கது. இதன் பூ பெரியது. மஞ்சள் அல்லது சிவப்பு வண்ணமுடையது. இப் பழங்களைப் பறவைகள் விரும்பி உண்ணும். இச் செடி அடர்ந்து முட்களுடன் வளருந்தன்மைத்து. இதைத் தீயிட்டுக் கொளுத்திச் சாம்பலாக மாற்றுவர். இச் சாம்பலினின்று உப்பு உண்டாக்குவர். இதன் பழம் கக்குவான், இளைப்பு, நாட்பட்ட இருமல், முதலான நோய்களுக்குக் கை கண்ட மருந்து. இந் நாகதாளிப் பழத்தின் மென்மையான சதைப்பகுதி, உடலுக்கு வலிமையையும், சூமிகுகுளிர்ச்சியையும் நல்கும். சூட்டைப்போக்கும்.

**நாகதாளிக்கள்ளி**[2] *nāga-tāḷi-k-kaḷḷi,* பெ. (n.) அசாம், கேரளம், நேபாள மலைகளிற் காணப்படும் நாகதாளிக்கள்ளி; many spined prickly pear. This is another variety found grown in hills in Assam, Malabar, Nepal and other places.

*[நாகதாளி+கள்ளி.]*

*இதன் இலைச்சாறு எல்லா நச்சுஉயிர்களின் நச்சுக்கடிக்குச் சிறந்த மருந்தாகும். இணைவிழைச்சு நோயினைப் போக்கும். இச் செடியின் கொழுந்து, மிகுந்த காரத்தன்மை மிக்கது. வயிற்றுப்போக்கினைப் போக்கும்.*

*இவ் வகை நாகதாளி இலைகள், நாட்பட்டு உடையாத கட்டிப்புண்களை உடைக்கும்.*

*இதன் பழச்சாற்றில் சருக்கரை சேர்த்துக்காய்ச்சி, இன்பருகம் உருவாக்கலாம். இப் பருகம், உடம்பிலுள்ள அனைத்து நச்சுநீரினையும் அகற்றும் இயல்புடையது. இருமல், மிகுகோழை (காசம்), ஈளை முதலான நோய்களையும் அகற்றும் என்று, சா.அக. கூறும்.*

**நாகதாளிவேர்** *nāga-tāḷi-vēr,* பெ. (n.) படமெடுத்தாடும் நாகத்தின் ஆட்டத்தைக் கட்டுப்படுத்தும் வேர்; the nāgatāḷi root is used to control snakes and draw their heads and retire

**மறுவ.** நல்லபாம்பு வேர், பாம்புக்கடி வேர்.

*[நாகதாளி+வேர்.]*

*நல்லபாம்பின்நச்சுத் தன்மையையும், சீறிப்பாயும் சினமிக்க நாகத்தின் ஆட்டத்தையும், மட்டுப் படுத்திக் கட்டுப்படுத்தும் வேர். பாம்பாட்டிகளுக்குப் பாதுகாப்புத் தரும் வேர்.*

*பாம்பாட்டிகள், இவ் வேரினைப் படமெடுத் தாடும் பாம்பின் முன்பு காட்டினால், பாம்புகள் தலையைப் பின்னுக்கு இழுத்துப் படத்தினைச் சுருக்கிக் கொள்ளும்.*

**நாகதிசை** *nāga-tišai,* பெ. (n.) மேற்கு; west.

*[நாகம் + திசை.]*

**நாகதீபம்** *nāga-tībam,* பெ. (n.) ஐந்தலை நாகத்தின் வடிவம் போன்ற விளக்கு (வின்.); lamp on a stand shaped like a five headed cobra

*[நாகம் + skt தீபம்.]*



**நாகதூமம்** *nāga-tūmam,* பெ. (n ) ஐந்துதலை நாகம் போன்று விரிந்த சீமையாதளை; common quince-cydonia vulgaris.(சா.அக.); on a stand shape like a five headed cobra.

*[நாகம் + தூமம்.]*

**நாகதெந்தி** *nāgatendi,* பெ. (n.) நேர்வாளம் (மலை); purging croton plant.

*[நாகம் + தெந்தி.]*

**நாகதெய்வம்** *nāga-teivam,* பெ. (n.) இந்துப்பு; sodium chloride

*[நாகம்+தெய்வம்.]*

**நாகதேமணி** *nāga-tēmaṇi,* பெ. (n ) மணித்தக்காளி; black berried solanum

*[நாகம் + தேமணி.]*

**நாகதேவதாளி** *nāga-tēva-tāḷi,* பெ. (n ) நாகதாளி + தேவதாளி ஆக இரண்டு மூலிகைகள்; snake hood.fig + snake luffa

*[நாகம்+தேவதாளி.]*

இவ் விரண்டு மூலிகைகளும், இதளியத்தைக் (பாதரசம்) கட்டுந் தன்மைமிக்கது. பொன்னாக்க முறைப்படிச் செம்புமாழையினை வெண்மையாக்குந் தன்மையது என்று, சா.அக. கூறும்.

**நாகதேவன்** *nāga-tēvaṉ,* பெ. (n.) திரு மாலிருக்கை (ஆதிசேடன்) (யாழ்.அக.); Adišeḍaṉ.

*[நாகம் + தேவன்.]*

**நாகதேவி** *nāga-tēvi,* பெ. (n.) நாகதேவதை (யாழ்.அக.); cobra,considered a Goddess

*[நாகம் + தேவி.]*

**நாகதேனி** *nāga-tēṉi,* பெ. (n.) பெருமருந்து (மலை); indian birth-wort.

**மறுவ.** ஈசுரமூலி, தலைச்சுருளி, தலைச் சூடுவல்லி முல்லை, பீநாறிச்சங்கு, தராசுக்கொடி.

**நாகதொனி** *nāga-toṉi,* பெ. (n.) மருதப் பண்களிலொன்று (பிங்); a melody-type of marudam class

*[நாகம் + skt.தொனி.]*

**நாகதோரணி** *nāga-tōraṇi,* பெ. (n) சிவப்பு எலிச்செவிக்கீரை; a red variety of rat's ear plant-Ipomea rheniformis.

*[நாகம் + தோரணி.]*

**நாகந்தகன்** *nāgandagaṉ,* பெ. (n.) கழுலன் (கருடன்); brahmini kite.

*[நாகந்தம்→ நாகந்தகன்.]*

**நாகந்தி¹** *nāgandi,* பெ. (n.) *நாகதெந்தி* பார்க்க; see *nāgatendi.*

**நாகந்தி²** *nāgandi,* பெ. (n.) **1.** நேர்வாளம்; croton oil plant **2.** *நாகணம்* பாரக்க; see *nāgaṇam*

**நாகநகர்** *nāga-nagar,* பெ. (n.) கீழுலகம் (சிலப்.1.21,அரும்.); the nether world.

*[நகர் → நகம் → நாகம் + நகர்.]*

**நாகநஞ்சு** *nāga-nañju,* பெ. (n) துத்த நாகத்தினால் ஏற்பட்ட நஞ்சு; zinc-poisoning

*[நாகம் + நஞ்சு.]*

**நாகநந்தி** *nāga-nandi,* பெ. (n.) மரவகையு ளொன்று; a kind of tree

*[நாகம் + நந்தி.]*

**நாகநாகிக்கிழங்கு** *nāga-nāgi-k-kiḻangu,* பெ. (n.) கிழங்கு வகையுளொன்று; a kind of tuberous root

*[நாகநாகி + கிழங்கு.]*

நாகநாகி = பாம்பு போல் தோற்றமும், உடம்பிற்கும் இளமையினையும். வனப்பினையும் வழங்கும் கிழங்கு.

**நாகநாடு¹** *nāga-nādu,* பெ. (n.) துறக்கவுலகம் (சிலப்.1.1:21.அரும்.); heavenly region

*[மாகம் → நாகம் + நாடு.]*

மாகநாடு = உயர்ந்த அல்லது மேலான. மேன்மை மிக்க நாடு; துறக்கவுலகம்.

*[ஒருகா. மாகநாடு → நாகநாடு.]*

**நாகநாடு²** *nāga-nāḍu,* பெ. (n.) **1.** நாகரென்பார் வாழும் நாடு; land of the nāga race. "*கீழ்நில மருங்கினாக நாடாளும்*" (மணிமே.8:54.). **2.** கீழுலகம்; the nether world. "*நாகநீண கரொடு நாக நாடதனொடு*" (சிலப்.1:21.).

*[நாகர் + நாடு → நாகநாடு]*

கி.பி.2–இல், நாகநாடு என்னும் பெயர், மேலை நாடுகளுக்கும், கீழைநாடுகட்கும், பொதுப்பெயராக வழங்கிற்றென்பதற்கு, மணிமேகலையும், சிலப்பதிகாரமும் நற்சான்று நல்குகிறது.

**நாகநாதம்** *nāga-nādam,* பெ. (n.) பண்வகையிலொன்று; a specific melody type.

*[நாகம் + Skt. நாதம்.]*

படமெடுத்தாடும் பாம்பினை, மென்மேலும் ஆட்டுவிக்கவும், பெட்டிப்பாம்பாய் அடக்கி வைப்பதற்கும் பயன்படும் பண்.

**நாகநாதன்**[1] *nāga-nādaṉ,* பெ. (n.) துறக்க வுலகத்திற்கிறைவன் இந்திரன் (சூடா); Indraṉ, as the lord of the celestial world.

*[மாகநாதன் → நாகநாதன்.]*

மாகம்:துறக்கவுலகம். மாகநாதன்:துறக்கவுலகத் தலைவனான இந்திரன். நாகநாட்டுத்தலைவன் இந்திரன்:நாகநாடு என்பது, இந்திரனின் நாடு: நாகநாடென்பது, மேலைநாட்டையும், கீழை நாட்டையும் குறிக்கும் பொதுப்பெயராகும்.

தேவருலகிலுள்ள இந்திரன் என்னும் பட்டம், சாலிநாட்டிலும் வழங்கியது.

துறக்கவுலகத்தலைவன் இந்திரனுக்கு வழங்கிய நாகநாதன் என்னும் தலைமை குறித்த பெயர், மேலை நாட்டிலும், கீழை நாட்டிலும், பொதுப் பெயராக வழங்குவதோடன்றி, இன்றும் அனைத்து ஊர்களிலும் வழக்கூன்றியுள்ளது.

**நாகநாதன்**[2] *nāga-nātaṉ,* பெ. (n.) 1. ஆதிசேடன்; Adišeḍaṉ, as lord of serpents. 2. (பாம்பரணனாகிய தலைவன்;) சிவன்; šivaṉ,as wearing serpants.

*[நாக + skt நாதன்.]*

**நாகநீள்நகர்** *nāga-nīḷ-nagar,* பெ. (n.) 1. தேவருலகம்; indra's heaven, the world of Gods. "*நாகநீள் நகரொடு நாகநாடதனொடு*" (சிலப்.1:21). மறுவ. உம்பர்நகர்.

*[நாகம் + நீள்நகர்.]*

[மாகம்= விண்ணுலகம், துறக்க நாடு. "மாகந்தொட நனி நிவந்த கொடி" (ஞானா:34:15) மாகநாடு → நாகநாடு: மாகம் என்பது, நாகமெனத்திரியும். நாகநாடென்பது, மேலையுலகத்திற்கும், கீழை நாடுகட்கும் பொதுப்பெயராம்.]

**நாகநெய்** *nāga-ney,* பெ.(n.) மருந்தெண்ணெய் வகை (இராசவைத். 132); a medicinal oil.

*[நாகம் + நெய்.]*

**நாகப்பகை** *nāga-p-pagai,* பெ. (n.) (பாம்பிற்குப் பகைவன்) கழுலன்; Garudaṉ, as the enemy of snakes. "*நாகப்பகைக் கொடியானுக்கு*" (திவ்.திருப்பல்.8.).

*[நாகம் + பகை.]*

**நாகப்பச்சை**[1] *nāga-p-paccai,* பெ. (n.) தரங்குறைந்த பச்சைக்கல்; ஆற்றுப் பச்சைக்கல்; an inferior green stone.

[நாகம் + பச்சை.]

சித்தமருத்துவத்திற்குப் பயன்படும் ஆற்றுப்பச்சைக்கல், 120–வகைக்கற்களுள் ஒன்று. இது மதிப்புக்குறைந்த தென்று, சா.அக. கூறும்.

**நாகப்பச்சை**[2] *nāga-p-paccai,* பெ. (n.) பச்சைக்கல் வகை; a variety of green stone.

*[நாகம் + பச்சை]*

**நாகப்பஞ்சமி** *nāga-p-pañjami,* பெ. (n.) பால், பயறு முதலியவற்றை, நாகத்துக்கு இட்டு, அதனை வணங்கும் மடங்கல் (ஆவணி) முழுநிலவு ஐந்தாம் நாள்; the fifth lunar day of the bright fortnight in the month of šrāvaṉa in the which the nāgar or serpent-

gods are worshipped with offerings of milk,grain,etc .

*[நாகம் + skt பஞ்சமி.]*

**நாகப்பட்டினம்** *nāga-p-paṭṭiṉam,* பெ. (n.) சோழநாட்டிலுள்ள ஒரு துறைமுகப்பட்டினம்.; a sea port town in the Cōḻanāḍu நாகப்பட்டினத்துச் சோழன் (பெரும்பாண்.31, உரை).

*[நகு → நகர் → நாகர் → நாகம் +பட்டினம்.]*

வங்கக்கடல் தோன்றுமுன் அங்கிருந்த நிலப்பரப்பில், நாகரிகப்பண்பாட்டுடன் விளங்கித்தோன்றிய மக்கள், வதிந்த இடம் நாகப்பட்டினம்.

**நாகப்படக்கள்ளி** *nāga-p-paḍa-k-kaḷḷi,* பெ. (n ) கள்ளிவகை; a kind of spurge

**நாகப்படக்கற்றாழை** *nāga-p-paḍa-k-kaṟṟāḻai,* பெ. (n ) *நாகப்படம்* பார்க்க; see *nāga-p-paḍam*

மறுவ. வாணாள்மூலி.

*[நாகப்படம் + கற்றாழை.]*

**நாகப்படத்தாலி¹** *nāga-p-paḍa-t-tāli,* பெ. (n ) *கழுத்தணி* வகையு ளொன்று; a kind of necklet

*[ நாகபடம் + தாலி.]*

**நாகப்படத்தாலி²** *nāga-p-paḍa-t-tāli,* பெ. (n ) நாகப்படமுகப்புடன் கூடியதும் திருமணத் தன்று கணவனால் அணிவிக்கப் பெறுவதுமான மங்கலநாண்; a kind of necklet

*[ நாகம் + படம்+தாலி.]*

*பழங்காலத்தே பரியம் போடுங்கால், கணவன் பெயரைப் பனை யோலையில் பொறித்தல் மரபு. பின்னர், திருமணத்தன்று. மணமகள் கழுத்தில் தொங்குமாறு மணமகனால் அணிவிக்கப்படும்*



**நாகப்படம்¹** *nāga-p-paḍam,* பெ. (n )
1. நல்லபாம்பின் படம்; hood of the cobra
2. படமெடுத்த நாகத்தின் உருவங் கொண்ட தோளணிவகை; armlet shaped like a coiled up cobra without-spread hood, "*வலய நாகபடங்கொடு பாரித்திட்டான்*" (இரகு. கடிமண.64). 3. பாம்புப்படத்தின் உருவங் கொண்ட மகளிர் காதணிவகை(வின்.); ear-ornament resembling a cobra's hood,worn by women

*[நாகம் + படம்.]*

**நாகப்படம்²** *nāga-p-paḍam,* பெ. (n ) முள்ளில்லாக் கற்றாழை; thornless aloe

மறுவ. சப்பாத்திச்செடி.

*[நாகம் + படம்.]*

நீண்டநாள் வாழ்வதற்கு உறுதுணை புரியும் கற்றாழை. இக் கற்றாழை, சதுர(கிரி) மலையில் மிகுதியாகக் காணப்படுகிறது. பாம்பின் படத்தினைப் போன்ற தோற்றமுடையது. கற்றாழைச்சாற்றுடன் பால் கலந்து பருகினால், தீராத மயக்கநோய் அகலும். இளமைப்பொலிவுடனும் உடல்வனப் புடனும் திகழும் என்று, சா.அக. கூறும்.

**நாகப்படலம்** *nāga-p-paḍalam,* பெ. (n.) கண்ணோய் வகை (யாழ்.அக); an eye disease.

*[நாகம் + படலம்.]*

*முதற்கண் நோயின் அறிகுறியாக இரு கண்களும் சிவக்கும். அடுத்த நிலையில், வளர்ந்து வரும் தடிப்புள்ள அழுத்தமான தசை வளர்ச்சியேற்படும். தசைவளர்ச்சி வெள்விழி முழுதும் படர்ந்து, கருவிழியையுங் கடந்து, நாளாவட்டத்தில் கண்ணின் நடுவிலுள்ள பாவையையும் மறைக்கும். இவற்றின் விளைவாகக் கண்களில் தீராத அரிப்புண்டாகும் மென்று, சா.அக. கூறும்.*

**நாகப்படக்கற்றாழை** *nāga-p-paḍa-k-kaṟṟāḻi,* பெ. (n.) நாகப்படம் பார்க்க; see nāga-p-paḍam.

மறுவ. வாணாள்மூலி.

*[நாகப்படம் + கற்றாழை.]*

**நாகப்படிக்கற்றாழை** *nāga-p-paḍi-k-kaṟṟāḻai,* பெ. (n.) *நாகப்படக்கற்றாழை* பார்க்க; see *nāga-p-paḍa-k-kaṟṟāḻai.*

*[நாகப்படி + கற்றாழை.]*

**நாகப்பணம்** *nāga-p-paṇam,* பெ. (n.) அணிவகை (S.I.I.vi,180); an ornament.

நாகப்பணம் = நாகமுகப்பிணையுடைய பளபளப்பும், வழவழப்பும் பொருந்திய அணி. நாகத்தின் உருவினைப் பல்வகை யணிகளில் பொறிப்பது இன்றும் காணப்படுகிறது.

*[நாகம்+பணம்.]*

**நாகப்பத்திரி** *nāga-p-pattiri,* பெ. (n.) பெருவகை; Parrot tree-Albizzia lebbek.

*[நாகம் + பத்திரி.]*

**நாகப்பழக்காடி** *nāga-p-paḻa-k-kāḍi,* பெ. (n.) நாகப்பழச்சாற்றினை மட்டும் பிழிந்தெடுத்து, ஏதும் கலக்காமல், புளிக்க வைத்தக் காடி; a fermented essence obtained by pressing and squeezing out the juice of jaumoon fruit, without adding water to it.

மறுவ. நாவல்பழக்காடி.

*[நாவ→நாக + பழம் + காடி.]*

*[நாகப்பழம் + காடி]*

*நாவல் பழச்சாற்றில், தண்ணீரோ அல்லது கடைச்சரக்குக் கலவையோ, ஏதுமின்றித் தனியாகப் புளிக்கவைத்த காடி. இதன் காடி குடற் காய்ச்சலைப்போக்கும். செரிமான ஆற்றலைப் பெருக்கும். சருக்கரைநோய்க்குக் கைகண்ட மருந்தாகும்.*

**நாகப்பழம்** *nāga-p-paḻam,* பெ. (n.) நாவல் பழம்; jaumnoon fruit.

*[நாவற்பழம் → நாகற்பழம் →நாகப்பழம்.]*

**நாகப்பழமரம்** *nāga-p-paḻa-maram,* பெ. (n.) *நாவல்மரம்* பார்க்க; see *nāval-maram.*

*[நாக + பழம்+மரம்.]*

**நாகப்பன்வெட்டு** *nāgappaṉ-veṭṭu,* பெ. (n.) பழையகாசுகளில் ஒன்று (பணவிடு.143); a kind of ancient coin.

*[நாகப்பன் + வெட்டு.]*

நாயக்கர்காலக் காசு. வெட்டு = வெட்டியமைக்கப்படும் வெண்கலக்காசு, அல்லது செப்புக்காசு.

**நாகப்பாம்பு** *nāga-p-pāmbu,* பெ. (n.) 1. நல்லபாம்பு; cobra. 2.வயிற்றுப்பூச்சி (இ.வா): round worms.

*[நாகம்+பாம்பு.]*

நாகம்பாம்பின் வகைகள்பற்றி, சா.அக. கூறுவது வருமாறு: கருநாகம் 2. பரநாகம் 3. கல்நெஞ்ச நாகம் 4. ஊமை நாகம் 5. கண்ணெரியனாகம்.



**நாகப்பாம்புநஞ்சு** *nāga-p-pāmbu-nañju,* பெ. (n) 1. நல்லபாம்பின் நஞ்சு; poison from snake bite- cobra venom

*[நாகப்பாம்பு+நஞ்சு.]*

**நாகப்பாலை** *nāga-p-pālai,* பெ. (n) கொடிப்பாலை; cotton milk plant-Dregea volubils

*[நாகம் + பாலை.]*

**நாகப்பிணையல்** *nāga-p-piṇaiyal,* பெ. (n) இணைந்த இரு பாம்புகள் போல வரைந்த ஓவியத்தின் (சித்திரத்தின்) அறைகளில், எழுத்துகளை அடைக்கும்படி அமைந்த, ஓவிய(சித்திர)ப் பாட்டு வகை; a variety of ōviyakavi (cittira-k-kavi,), whose letters can be arranged to fit in a diagram in the form of two intertwining snakes

*[நகர்வு → நகம் → நாகம் + பிணையல்]*

நாகப்பிணையல் வகை:- 1. இரட்டை நாகப்பிணையல். 2. எண்நாகப்பிணையல்.

இரட்டை நாகப்பிணையல், இரு நாகங்கள் பிணைந்திருப்பது போன்ற சித்திரத்தில், ஒன்றோடொன்று இடம்பெறும் பாட்டு.

அருளின் றிருவுருவே யம்பலத்தா யும்பர் தெருளின்மரு வாருயிர்ச் சீரே. பொருவிலா வொன்றே யுமையாளுடனேயுறுதிதரு குன்றே தெருளவருள்.

இப் பாடலின் வாயிலாக, இரண்டு நாகங்களின் தலையினின்று தொடங்கி, வால்முனைகளிறுதியாக, இடையிடையே தத்தம் உடலினும், பிறிதுபிறிதுடலினும் மாறாடிச், சந்திகளினின்ற எழுத்தே, மற்றை யிடங்களினு முறுப்பாய் நிற்க, ஒவ்வொரு பாம்பிற்கும், மேற்சுற்றுச் சந்தி நான்கினும், நான்கெழுத்தும், கீழ்ச்சுற்றுச் சந்தி நான்கினும், நான்கெழுத்தும், இரண்டு பாம்பிற்கும் நடுச்சந்தி நான்கினும், இரண்டு பாட்டிற்கும் பொருந்த நான்கெழுத்துமாக, ஓவியத்தி (சித்திரத்தி)லடைபட்டு முடியும் பாங்கினை அறியலாம்.

**நாகப்பிரண்டை** *nāga-p-piraṇḍai,* பெ. (n) படப்பிரண்டை; a kind of adament creeper- Vitex species

*[நாகம்+பிரண்டை.]*

*உணவிற்குக் கறியமுதாகப் பயன்படும், பிரண்டை வகை.*

**நாகப்பிரம்பு** *nāga-p-pirambu,* பெ. (n) பாம்புபோன்ற ஒருவகைப் பிரம்பு; a kind of snake-like rattan

*[நாகம் + பிரம்பு.]*

**நாகப்பிராசிகம்** *nāga-p-pirāšigam,* பெ. (n) சீமைப்பிச்சி; chinese jasmine

*[நாகம் + skt பிராசிகம்.]*

**நாகப்புல்லுருவி** *nāga-p-pulluruvi,* பெ. (n) செடிவகை(நாஞ்.); a plant

*[நாகம் + புல்லுருவி.]*

*நாகமரத்தில் வளரும் புல்லுருவி என்று, சா.அக. கூறும்.*

**நாகப்புல்வரி** *nāga-p-pulvari,* பெ. (n.) நாகப்புல்லுருவி (நாஞ்.); a plant.

**நாகப்பூ**[1] *nāga-p-pū,* பெ. (n.) 1. சிறுநாகப் பூ; iron wood of ceylon. 2.பெருநாகப்பூ; a species of iron wood.

*[நாகம் + பூ.]*

**நாகப்பூ**[2] *nāga-p-pū,* பெ. (n.) 1. மருந்துவகை; a kind of prepared medicine. 2. பூப்போன்ற துத்தநாகம்; flower of zinc.

மறுவ. தக்கோலம்.

*[நாகம் + பூ.]*

**நாகப்பூச்சி** *nāga-p-pūcci,* பெ. (n.) 1. *நாக்குப்பூச்சி* பார்க்க; see *nākku-p-pūcci.* 2. பூநாகம்; an earth worm.

*[நாகம் + பூச்சி.]*

**நாகப்பொடி** *nāga-p-poḍi,* பெ. (n.) நன்கு புடமிட்டு தூய்மைப் படுத்தப்பட்ட நாகத்தூள்; calcined white powder of zinc.

மறுவ. நாகபற்பம்.

*[நாகம் + பொடி.]*

முதற்கண், நாகத்தை இலுப்பை நெய்யில் 20 முறை உருக்கித் தூய்மைப் படுத்த வேண்டும். உருக்கிய நாகத்தில், இலைக்கள்ளியைச் சேர்த்து, இரும்புக் கரண்டியால் தீய்த்து, புகை வரும்வரை துழாவிக் கொண்டேயிருக்க வேண்டும். இவ்வாறு இலுப்பை நெய், இலைக்கள்ளி, துத்தநாகம் மூன்றும் எரிந்து சாம்பலாகும் வரை, வறுத்துக் கொண்டே இருக்கவேண்டும். இவ்வாறு வறுவலான கலவையை, மெல்லிய துணியில் நன்குவடிகட்டவேண்டும். இவ்வாறு வடிகட்டிய முக்கூட்டு மருந்தின், பொடியை, (பற்பம்) சித்தமருத்துவத்தில், பல்வேறு நோய்கட்கு, பல்வேறு வழிகளில் பக்குவப்படுத்திப் பயன் படுத்துவர். மேலும் சித்தமருத்துவர், இப் பொடியினை, அரத்தப்பிரமியம், வெள்ளை படுதல் முதலான நோய் களுக்குப் பயன்படுத்துவர்.உடம்பின் சூட்டைத் தணிப்பதற்கும் நாகப்பொடி பயன்படும் மென்று, சா.அக. கூறும்.

**நாகபந்தம்**[1] *nāga-bandam,* பெ. (n.) *நாகப்பிணையல்* பார்க்க; see *nāga-p-piṇaiyal.*

*[நாகம் + பந்தம்.]*

**நாகபந்தம்**[2] *nāga-bandam,* பெ. (n.) இணைந்த இரண்டு பாம்புகள் போல வரைந்த, சித்திரத்தின் அறைகளில், எழுத்துக்களை அடைக்கும்படி யமைந்த சித்திரவகை (தண்டி.95); a variety of cittira-k-kavi, whose letters can be arranged to fit in a diagram in the form of two interwining snakes.

*[நாகம் + Skt. பந்தம்]*

**நாகபந்தம்**[3] *nāga-bandam,* பெ. (n.) 1. ஆடு தின்னாப்பாளை–worm killer-Aristolochia bracteata. 2. பொன்னாவரை; fetid cassia sophera. 3. பாலிருள்; a white species of iron wood -Mesua.

*[நாகம் + skt. பந்தம்.]*

நாகத்தைக் கட்டும் மூலிகைகள்:–

நாகத்தின் படமெடுக்கும் பாங்கினையும், சீறிப்பாயும் சினத்தையும், உயிரைக் கொல்லும் நச்சுத் தன்மையையும் போக்கும் மூலிகைகள்.



**நாகபந்தனி** *nāga-bandaṉi,* பெ. (n) 1. நாகத்தின் நச்சுத்தன்மையைப் போக்கும் மூலிகைகள்; a medical herb to prevent cobra venom 2. *நாகபந்தம்* பார்க்க; see *nāga-bandam*

**மறுவ.** பாலிருள், பொன்னாவரை.

*[நாகம் + skt. பந்தம் → பந்தனி.]*

**நாகபந்து** *nāga-bandu,* பெ. (n.) அரசமரம் (யாழ்.அக); pipal tree - Ficus religiosa.

*[நாகம் + skt பந்து.]*

**நாகபலம்** *nāga-palam,* பெ. (n.) பூடுவகை; a kind of medicinal herbal sida spinosa alias S.alba

*[நாகம் + பலம்.]*

உடலுக்கு ஆற்றல் தரும் மூலிகை என்று, சா. அக. கூறும்.

**நாகபலன்** *nāga-palaṉ,* பெ.(n.) வீமன் (யாழ்.அக.) (யானை வலியுடையவன்); Vīmaṉ, as having the strength of an elephant.

*[நாகு + அ → வலன் > பலன்.]*

நாகு = வலிமை. ஆற்றல், யானை போன்று வலிமை, ஆற்றல் வாய்க்கப் பெற்ற வீமன்.

**நாகபலா** *nāga-palā.* பெ.(n) 1. நாகமல்லி; yellow jasmine, tree jasmine 2. வலிவைக் கொடுக்கும் மூலிகை; elephant-tonic-canthium parutiflora.

**மறுவ.** காரை

*[நாகம் + பலா.]*

*நாகம் : வலிமை. திறன், ஆற்றல். பலா = யானையின் வலிமையையும், ஆற்றலையும், உடலுக்கு ஊட்டக்கூடிய மூலிகை.*

**நாகபலி** *nāga-pali,* பெ. (n.) சுக்கு; dried ginger.

*[நாகம் + பலம் → பலி ]*

உடலுக்கு வலிவு, திறன், இளமை, பொலிவு அனைத்தையும் ஒரே நேரத்தில் அளிக்கும் ஆற்றல் சுக்கிற்குஉண்டு.

நண்பகலிலோ அல்லது மாலைப் பொழுதிலோ, நன்கு சுண்டக் காய்ச்சிய ஆவின் பாலில் சுக்கும். பனை வெல்லமும் சேர்த்துப் பருகுவதால், உடலுக்கு உறுதியும், தோற்றப்பொலிவும் ஏற்படும்.

காலை இஞ்சி, கடும் பகல் சுக்கு, மாலை கடுக்காய், மூன்று வேளையும் பருகினால், கோலூன்றி நடக்கும் கிழவனும், குமரனாக வான் என்பது, அனைவரும் அறிந்த முதுமொழி.

**நாகபலிகை** *nāga-paligai,* பெ.(n ) திரண்டபெண்; a woman who has recently matured

*[நாகம்: திரட்சி. திறன். நாகம் + பலிகை. பலிகை. = வலிமை. உடலாலும், உள்ளத்தாலும் மணவாழ்க்கைக் குரியவள். உடல் வலிமை, இல்லறத்திற்கு ஏற்ற உள்ளவலிமை, இரண்டுமுடையவள்.]*

**நாகபலை** *nāga-palai* பெ. (n ) *நாகமல்லி* **(தைலவ.தைல.)** பார்க்க; see *nāga-malli.*

**நாகபற்பம்** *nāga-paṟpam,* பெ. (n.) *நாகப்பொடி* பார்க்க; see *nāga-p-poḍi.*

மறுவ. நாகசூரணம்.

*[நாகம் + பற்பம்.]*

வாந்தி, வயிற்றுப் போக்கு, காக்கைவலிப்பு முதலான நோய்களுக்குரிய சூரணமென்று சா.அக.கூறும்.

**நாகபாசக்கம்பி** *nāga-pāša-k-kambi,* பெ. (n.) நாகபாசத்திலுள்ள கம்பிகள்; zinc threads.

*[நாகபாசம் + கம்பி.]*

**நாகபாசத்தார்** *nāga-pāšattār,* பெ. (n,) ஐந்துவகை இசைக்கருவிகளை இசைப்பவர்; one who is capable of five kinds of musical instruments. 'நாலுமுக நாகபாசத்தார் செப்பேடு'.

*[கல்வெட்டிதழ் – 2034 – ஆனி காலாண்டிதழ்.]*

நாகபாசத்தார் தோற்கருவி, துளைக்கருவி, மிடற்றுக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி முதலான ஐவகை இசைக்கருவிகளை இசைத்தனர். இவர்கள் காலம் – 1732–33.

**நாகபாசம்**[1] *nāga-pāšam,* பெ.(n ) மாட்டில் காணப்படும் தீயசுழி; cattle hair-curl considered as evil symptom.

*[நாகம் + பாசம்.]*

*மாடுகளின் இரு தொடைகளுக்கு மய்யப்பகுதியில், கையகலம் கரியநிறமாகப் பட்டையா யிருக்கும் தீயசுழி.*

**நாகபாசம்**[2] *nāga-pāšam,* பெ.(n,) போரிற் பகைவரைப் பிணிக்கச்செலுத்தும் பாம்புருவமான மந்திரக்கயிறு(கம்பரா.நாகபாச.); a kind of serpentine magical noose, used in battles.

*[நாகம் + பாசம்.]*

**நாகபாசம்**[3] *nāga-pāšam,* பெ. (n.) 1. நாகவொத்து (இ.வ.); a kind of armlet worn by women. 2. இரும்புக்கொக்கி வகை; W-shaped hook

*[நாகம் + பாசம்.]*

நாகப்பாம்பு சுருண்டு படமெடுத்தாடும் அமைப்புள்ளதும், நடனமங்கையர் அணிவதுமான, பச்சைக்கல் பதித்த தோளணி.




**நாகபாசம்**[4] *nāga-pāšam,* பெ. (n,) ஆலையில் முப்பது இழைகள் செல்லும் பகுதி; the part where thirty threads get into , in powerloom

**நாகபாசமுடிச்சு** *nāga-pāša-muḍiccu,* பெ.(n,) முடிச்சுவகை (சைவபூ.சந்.218); a kind of knot.

*[நாகபாசம் + முடிச்சு.]*

*நாகப்படம் போன்று வளைந்து சுருண்ட முடிச்சு வகை.*



**நாகபாடாணம்** *nāga-pāḍāṇam,* பெ.(n.) 1. வைப்புநஞ்சு வகையுளொன்று; a kind of prepared arsenic 2. நாகம் சேர்ந்த நஞ்சு; zinc poison.

*[நாகம் + skt பாடாணம்.]*

*யா + கு → யாகு → ஞாகு → நாகு.*

*நாகு + அம் → நாகம்*

யா = கருமைக் கருத்துவேர். வைப்புநஞ்சும், நாகங்கலந்த நஞ்சும் கருநீல நிறத்தது. பலவகை மருந்துச்சரக்கு களைத் சேர்த்துப்புடமிட்டு, உருக்கிக் கட்டியாகச் செய்யப்படும் வைப்புநஞ்சு, உருக்கிக் கட்டியாக்கச் சேர்க்கப்படும் மருந்துச்சரக்குகள் வருமாறு: 1. சூதம், 2. இலிங்கம், 3. கருவங்கம், 4. பச்சை, 5. பொன்னரிதாரம், 6: காரம் முதலானவற்றைப் பொடித்துக் குகையில் வைத்து மேல்மூடி, சீலைமண் செய்து, அனல் மூட்டிப் புடமிடுவர். அனல், கனன்று ஆறியபின், புடத்தினை உடைத்துப் பார்த்தால், மருந்து உருகிப் பின் இறுகிக் கட்டிவடிவில் இருக்கும். இதுவே நாக வைப்புநஞ்சு எனப்படும்.

இந் நஞ்சு மாழையில் (உலோகத்தில்) பழுக்குந் தன்மைத்து.

**நாகபாணி** *nāga-pāṇi,* பெ.(n.) தில்லைமரம்; tigers milk spurge-Excoecaria crenulata.

*[நாகம் + பாணி.]*

**நாகபுரம்** *nāga-puram,* பெ. (n.) சாவக நாட்டுத் தலைநகர்; the ancient capital of šāvagam *"நாகபுரமிது நன்னக ராள்வோன்"* (மணிமே. : 24:169).

*[நாகம் + புரம்]*

**நாகபூசணன்** *nāga-pūšaṇaṉ,* பெ. (n.) பாம்பணி பூண்ட சிவன்; šivaṉ as wearing serpent ornaments

**நாகம்**[1] *nāgam,* பெ. (n) 1. விண் (பிங்.); sky, visible heaven.*"நீடுநாக மூடுமேக மோட"* (கம்பரா.கலன்காண்.37). 2. துறக்கம் (திவா;) வீடுபேறு; indiras paradise *"எம்மை நாகமேலிருத்து மாற்றால்"* (சுந்தபு. திருவிளை.99). 3. மேகம்; cloud *"நாகமே லாயுலவென்னாகமே"* (கொண்டல் விடு.). 4. ஒலி (யாழ்.அக.); sound.

*[ மாகம் = விண்ணுலகம், மேலானவிடம், தேவருலகம். மாகம் → நாகம் ].*

ஒ.நோ. முப்பது→நுப்பது.

ஒருகா. *[*யாகு → ஞாகு→ நாகு + அம் → நாகம். *]*

வானம் கரியது; நீல நிறத்தது. கருமையும் நீலமும் ஓரளவிற்கு, ஒத்த தோற்றத்தின.

*[எடு ]* "கார்வான்" (புறநா. 147:3) "நீல்நிற விசும்பின் மீனொடு புரைய" (நற். 199:9.).

விசும்பு கரிய நிறத்தது: நீலமும் கருமையும் ஒத்தன்மையின என்பதற்குக் கழக இலக்கியப் பதிவுகள் ஏராளமாக உள்ளன. "யா" என்னும் கருமைக்கருத்து மூலவேர், நீலநிற வானைக் குறித்துப் பின்பு காலப்போக்கில், விண்ணுலகில் இருப்பதாகக் கருதப்படும், நாகப்பாம்பையும் குறிக்கலாயிற்று.

**நாகம்**[2] *nāgam,* பெ. (n) **1.** நல்ல பாம்பு; cobra. "*நன்மணியிழந்த நாகம்போன்று*" (மணிமே.25:195). **2.** பாம்பு (பிங்.); serpent "*ஆடுநாகமோட*" (கம்பரா. கலன்காண்.37). **3.** நஞ்சு; poison, "*அதகங் கண்ட பையண னாகம் போல*" (சீவக.403). **4.** நாகவுலகம்; nether region "*நாகர்நாகமும்*" (சீவக.2550). **5.** யானை; elephant. "*காளமேகமு நாகமுந் தெரிகில*" (கம்பரா.சித்திர.2). **6.** குரங்கு; monkey. "*வேடச்சிறா ருழைத்தோற்பறையை நாகம் பறித்துலர் வாகை நெற்றாற் கொட்ட.*" (திருப்போ.சந்.அலங்.14). **7.** கருங்குரங்கு (யாழ்.அக.); black monkey. **8.** காரீயம்; black lead **9.** துத்தநாகம்(பிங்.); zinc **10.** நஞ்சு வகை; a prepared arsenic **11.** நற்றூசு (பிங்.); fine cloth, as resembling a snake's slough. **12.** *நாகப்பச்சை* பார்க்க; see *nāga-p-paccai* **13.** மாட்டு வாலிலுள்ள தீச்சுழிவகை (அபி.சிந்.); an unlucky hair curl in the tail of cattles **14.** குறிஞ்சிப்பண் வகை(பிங்.).; a melody of the kuriñji class. **15.** கந்தகம் (யாழ்.அக.); sulphur.

**த.** நாகம் → Skt nāga, நாக(ஓ).

[நகர்வு = ஊர்ந்து செல்லுதல் நகர் → நாகம் = பாம்பு. ஊர்ந்து செல்லும் நச்சுயிரி.]

[ஒ.நோ.] E snake. F.snican, to creep. ஒ.நோ. நல்ல வெயில்.

வடவர் நக(மலை) என்னுஞ் சொல்லைக் காட்டி, மலையிலுள்ளதென்று பொருட் காரணங் கூறுவர். (வ.வ.பக்.19.).

இஃது பொருந்தப்பொய்த்தலே. நகர்வு என்னும் வினையினின்று நாகம் தோன்றியது என்று மொழிஞாயிறு கருதுகின்றார்.

கருமைக்கருத்து வேரிலிருந்து, "நாகம்" என்ற சொல்லை வருவிப்பதும், இன்னொரு ஆய்வுப் பார்வையாகும்.

ஒருகா. [யாகு → ஞாகு → நாகு + அம்.]

யா = கருமைக்கருத்து வேர். நாகம் = கருநாகம்

கருங்குரங்கு, கருநாகம், காரீயம் போன்ற கருமைப் பொருட்களைக் குறிக்கும் கருமைக்கருத்து வேரினின்று, "நாகம்" தோன்றிற்று என்றும் கொள்ளலாம்.

கருமைக்கருத்து வேரினின்று நாகம் தோன்றியது என்பதற்குக் கீழ்க்கண்ட இலக்கியச் சான்றுகள் வருமாறு.

1. "*நீலநாகநல்கிய கலிங்கம்*" (சிறுபாண்:96.)

2. "*திருமணி யுமிழ்ந்த நாகம்*" (அகம்:138:17.)

3. "*வேக வெந்திறல் நாகம் புக்கென*" (புறம்37:2.)

4. "*எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்*" (குறள்,763.).

5. "*பை அவிந்த நாகம் போல்*" (நாலடி,66:3.)

மேற்குறித்த கழகவிலக்கியங்களில், நாகம் கருமைக்கருத்துப் பொருண்மையில் ஆளப்பட்டுள்ளது. இவ் வுண்மையினை அறியாத வடவர் மலையில் உள்ளது என்னும் பொருண்மையில் மா.வி. அகரமுதலியில் நாக(ஓ) என்று குறித்துள்ளது. நாகம் அனைத்து இடத்திலும் வாழுந்தன்மைத்து. நாகம் தொடர்பான நல்ல தமிழ்ச்சொற்கள், நற்றமிழில் பேராளமாகப் பயின்று வந்துள்ளன. அவற்றுட் சில வருமாறு:–

(எ.டு.) நாகக்கல் = நாகவுரு அமைந்த சிலை.

நாகணை = திருமாலின் நாகப்படுக்கை.

நாகதாளி (நாகத்தாளி.) நாகப்படம் போன்ற தோற்றங்கொண்ட கள்ளிச்செடி (நாகக்கள்ளி).

நாகப்பாம்பு = நாகம், கருநல்லரா.

நாகப்பகை = நாகத்துக்குப் பகைவனான கலுழன், இன்னும், நாகமல்லி; நாகவல்லி, நாகவடம் போன்றசொற்கள் தமிழ்மொழியின் இருவகை வழக்கிலும், வழக்கூன்றியுள்ளது குறிக்கத்தக்கது. தமிழிலிருந்து வடவர் கடன்கொண்ட இச் சொல், இந்திய ஆரியமொழிகளில் பின்வருமாறு இடம்பெற்றுள்ளது.

த. நாகம் → skt nāga; pāli-nāga

pkt. nāya-oriya-naa sinhalese nay, nā.

மேற்குறித்தசான்றுகளை அடிப்படையாகக் கொண்டு இலக்கிய வழக்கிலும், மக்கள் வழக்கிலும் பயின்றுள்ளதால், நாகம் என்பது நற்றமிழ்ச்சொல்லே யெனலாம்.

**நாகம்**³ *nāgam*, பெ. (n.) மலை(பிங்.); mountain "*பொன்னாகமும்*" (கம்பரா.கார்முக.32.)

*[மாகம் = மேலான இடம், உயர்ந்த இடம் மாகம் → நாகம்.]*

ஒருகா. *[யாகு→ ஞாகு→ நாகு + அம் → நாகம்.]*

யாழ்ப்பாண அகரமுதலியும், பிங்கலமும், நாகம் என்னுஞ் சொல் மலை என்னும் பொருள் பற்றியது என்று குறித்துள்ளது காண்க.

(எ.டு.) 1. நாகு = மலை (யாழ்.அக.) 2. "*நாகமென் கிளவி....... வெற்பும்*" (பிங்.)

**நாகம்**⁴ *nāgam*. பெ. (n.) 1. சிறு கண்ணாகம், பெருங்கண்ணாகம் முதலான துத்த நாகவகை; term refering to different kinds of zinc ,as mentioned siṟu-kaṇ-ṇāgam and peruṅaṇ-ṇāgam. 2. ஐம்மாழைக் கலவை (பஞ்சலோகக்கலவை); an alloy of five metals.

*[யாகம் → ஞாகம்→ நாகம்.]*

**நாகம்**⁵ *nāgam*, பெ. (n.) 1. சுரபுன்னை; long-leaved two - sepalled gamboge "*நறுவீ யுரைக்கு நாகம்*" (சிறுபாண்.88) 2. புன்னை (பிங்.); mast-wood 3. ஞாழல் வகை (திவா.), cinnamon, Cinnamomum 4. கஞ்சாங் கோரை; white basil 5. இலாமிச்சைவேர்; cuscuss root

*[ஞாகு→ நாகு + அம் → நாகம்.]*

புன்னை மரத்தின் தோற்றம் கருநீல நிறத்தது. இரவு போன்ற இருண்ட நிறத்தையுடைய புன்னை என்று, நற்றினை நவில்வது காண்க.

(எ.டு.) "*எல்லியன்ன இருள்நிறப் புன்னை*" (நற்.354:5.) "*கருங்கோட்டுப் புன்னை*" (311:9.)

நற்றினை, ஐங்குறு (161:1–2.) போன்ற கழக இலக்கியப் பதிவுகள், புன்னை கருமை வண்ணத்தது என்பதற்கு நற்சான்றாய்த் திகழ்கின்ற தெனலாம்.

**நாகம்**⁶ *nāgam*, பெ. (n.) 1. கண்டத் திப்பிலிவேர்; root of long pepper 2. நாகம் விரும்பியுறையும் வெண்சம்பங்கி மலர்; white champak flower

*[ஞாகம் → நாகம்.]*

**நாகம்**⁷ *nāgam*, பெ. (n.) நாவல்மரம் (இ.வ.): jaumooan plum

*[ஞாவல் → நாவல்→நாகல்→நாகம்.]*

யா = கருமை நிறத்தினைக் குறிக்கும் வேரடி கரிய கனிகளைத்தரும் நாகம் என்னும் சொல்லும் கருமைப் பொருண்மையிலிருந்து முகிழ்த்த சொல் எனலாம். நாகப்பழம் என்று மக்களிடையே இச்சொல் வழக்கூன்றியது அறிக.

**நாகம்**⁸ *nāgam*, பெ. (n.) நாகமல்லி நாகதாளி, நாகமுள்ளு. நாகவல்லி முதலான மருந்துச் செடிகள்; the medicinal plants

*[நாகு + அம் → நாகம்.]*

நாகு = இளமைப்பொருள் பயப்பது.
அம் = சொல்லாக்க ஈறு.

**நாகம்**[9] *nāgam,* பெ. (n.) அம்மணம்; nakedness

*[நகு → நாகு + அம்.]*

நகுகை = ஆடையற்ற நிலையைக் கண்டு நகைக்கை.

**நாகம்**[10] *nāgam,* பெ.(n.) மட்டற்ற மகிழ்வுடன் கூடிய சிரிப்பு; joy, happiness.

*[நகு → நாகு → நாகம்.]*

நாகம் = இளமைக்கருத்து வேரினின்று கிளைத்தது. இளமை விளங்கித் தோன்றுவதற்கான, மட்டற்ற மகிழ்ச்சி.

**நாகம்பூசல்** *nāgam-pūšal,* தொ.பெ. (vbl.n.) மின்னேற்றம் செய்தல்; galvanising

*[நாகம் + பூசல்.]*

**நாகம்போத்தனார்** *nāgam-bōttaṉār.* பெ.(n.) கழகக்காலப் புலவர்; a šaṅgam poet.

இயற்கையெழிற் காட்சியினை வாழ்வியலுடன் இணைத்துப் பார்க்கும் பாடல்:–

"செவ்விகொள் வரகின் செஞ்சுவற் கலித்த
கவ்வை நாற்றின் காரிரு ளோரிலை
நவ்வி நாண்மறி கவ்விக் கடன்கழிக்கும்
காரெதிர் தண்புனங் காணிற் கைவளை
நீர்திகழ் சிலம்பின் ஓராங்கு விரிந்த
வெண்கூ தாளத் தந்தூம்பு புதுமலர்
ஆர்கழல் புகுவ போலச்
சோர்குவ வல்ல என்பர்கொல் நமரே"
(குறுந்.282.).

**நாகம்போல்படமமுக்கி** *nāgampōl-paḍam-amukki,* பெ. (n.) 1. அழுகண்ணி; indian weeping plant. 2. *நாற்கள்ளி* பார்க்க; see *nāṟ-kaḷḷi.*

*[நாகம்போல் + படம் + அமுக்கி.]*

**நாகம்மா** *nāgammā* பெ. (n.) *நாகதேவி* பார்க்க; see *nāga-tēvi*

**நாகமடிப்பட்டு** *nāgamaḍi-p-paṭṭu* பெ.(n.) பட்டாடைவகை (இ.வ.); a kind of silk cloth

*[நாகம் + மடி + பட்டு.]*

**நாகமண்** *nāga-maṇ.* பெ.(n.) செம்மண்; red earth, red ochre

*[நாகம் + மண்.]*

செந்நாகம் போன்று வெளிறிய சிவப்பு வண்ணத்திலுள்ள மண்.

**நாகமணல்**[1] *nāga-maṇal.* பெ.(n.) ஈயங்கலந்த மணல்(வின்.); sand containing lead

*[நாகம் + மணல்.]*

**நாகமணல்**[2] *nāga-maṇal.* பெ.(n.) துத்தநாகங் கலந்த மணல்; zincore.

*[நாகம் + மணல்.]*
120 வகை இயற்கைக் கனிமங்களில் ஒன்று.

**நாகமணி** *nāga-maṇi.* பெ. (n.) நாகபாம்பு வைத்திருப்பதாகக் கருதப்படும் மணி; a gem belived to be possessed by the cobra

*[நாகம் + மணி.]*

**நாகமதி** *nāga-madi.* பெ. (n.) துளசி; holy basil-Ocimum sanctum

*[நாகம் + மதி.]*

**நாகமதுசெம்பாக்கி** *nāga-madu-šembākki,* பெ. (n.) செவ்வலரி; oleander rosebay-Nerium odorum.

*[நாகம் + அது + செம்பாக்கி.]*

**நாகமதுநித்தார்நயனம்** *nāgamadu-nittār-nayaṉam,* பெ. (n.) அக்கமணி; rudrākṣa bead.

**மறுவ.** சிவமணி.

*[நாகமது + skt நித்தார்நயனம்.]*



**நாகமம்** *nāgamam,* பெ. (n.) *நாகரம்*[1] *(சங்.அக.)* பார்க்க; see *nāgaram*[1].

**நாகமரம்** *nāga-maram,* பெ. (n.) **1.** வெள்ளை நாகமரம்; chirimaun-Anogassus latifolia. **2.** *நாவல் மரம்* பார்க்க; see *nāval-maram.*

**மறுவ.** வெக்காலி.

*[நாகம் + மரம்.]*

**நாகமல்லி**[1] *nāga-malli,* பெ. (n.) கொடிவகை; white flowered justicia-Justicia nasuta

**மறுவ.** வெண்மல்லி, ஊரகமல்லி.

*[நாகம் + மல்லி.]*

**நாகமல்லி**[2] *nāga-malli* பெ. (n.) பாம்பு முதலான நச்சுயிரிகளின் எல்லாப்பூச்சி நஞ்சினையும்,தோல் நோயினையும் போக்கும் மருந்து வேர்; a medicinal root which act as a remedy for snake bites and all kinds of poisonous insect bites and also for all diseases.

**மறுவ.** நாகமுட்டி. அனிச்சைச்செடி, நச்சுமல்லி

*[நாகம் + மல்லி.]*

அனைத்து நச்சுயிரிகளின் நஞ்சினை முறிக்கும் சிறப்புமிக்க இந் நாகமல்லிச் செடி 4 முதல் 5 அடி வரை உயரமுடையது. குட்டையான காம்பினையும், சிறிய பூக்களையுமுடையது. மாவலிபுரம், திருவாங்கூர் போன்றவிடங்களில் மிகுதியாகப் பயிராகின்றது.

இதன் பச்சைநிற வேரையும், இலையையும் கலந்து, இடித்து எலுமிச்சைச் சாற்றுடன் கலந்து, உடம்பில் தடவினால், எல்லாத் தோல் நோய்களும் அகலும், தோல் பளபளப்புடன் திகழும். வண்டுகடி, படை, சொறி, சிரங்கு முதலான நோய்களைப் போக்கும்.

மேற்குறித்த மருந்தினைப் பாலில் கலந்து பருகிவந்தால், காமம் பெருகும். இந் நாகமுட்டிச் செடியின் இலைகளும், வேரும், உடம்பிற்கு மிகு வெப்பமூட்டி, எல்லா நோய்களையும் போக்கும் மருத்துவக் குணமிக்கவை.

**நாகமல்லி**[3] *nāga-malli,* பெ. (n.) பெருமல்லி அல்லது காட்டு மல்லிகை; jungle jasmine-Jasminum latifdium

*[நாகம் + மல்லி.]*

**நாகமல்லிகை** *nāga-malligai,* பெ. (n) *நாகமல்லி* பார்க்க; see *nāga-malli.*

*[நாகம் + மல்லிகை.]*

**நாகமலை**[1] *nāga-malai,* பெ. (n.) துத்தநாக மெடுக்கும் மலை; mountain containing zinc ore.

*[நாகம் + மல்லி.]*

துத்தநாகக் கனிமம் மிகுதியாகக் கிடைக்கும் மலை.

**நாகமலை²** *nāga-malai,* பெ. (n) மதுரை மாவட்டத்திலுள்ள ஊர்; a village in Madurai dt.

சமண முனிவர்கள் வாழ்ந்ததாகக் கூறப்பெறும் சமணப்பாழிகள் இங்கு காணப்படுகின்றன. தொல்லியல் துறையினர், பாதுகாத்து வருகின்றனர்.

**நாகமாணிக்கம்** *nāgā-māṇikkam,* பெ. (n.) 1. நாகத்தின் தலைமீதுள்ள உயர்ந்த இனத்தைச் சார்ந்த மணி; gem (ruby) supposed to be on the head of a species of cobra carbuncle. 2. நாகமணி; see *nāga-maṇi.*

*[நாகம் + மாணிக்கம்.]*

**நாகமாதா** *nāga-māda,* பெ. (n.) துளசி (சங்.அங்.); holly basil:ocitnum-sanctum.

**த.** மாதர்→skt. **மாதா.**

*[நாகம் + skt. மாதா.]*

**நாகமாதிகம்** *nāga-mādigam,* பெ. (n.) *நாக மாதா* பார்க்க; see *nāga-mādā.*

*[நாகமாதி → நாகமாதிகம்.]*

**நாகமாபுரம்** *nāgamāpuram,* பெ. (n.) மதுரை; Madurai. "*நாகமாபுரத்து வாழ்வோன்*" (திருவாலவா.35,16).

**நாகமாரணி** *nāga-māraṇi,* பெ. (n.) இதிர்க்கிழங்கு; wild elephant yarm-Dracontium polyphyllum.

*[நாகம் + ஆரணி.]*

**நாகமுகன்** *nāga-mugaṉ,* பெ. (n.) யானை முகத்தோன் கணபதி; Gaṇapadi, as elephant faced."*நாகமுக னம்பிக்கு நவிலலுற்றான்*" (பெரியபு. திருமுறைகண்.11).

*[நாகம் + முகன்.]*



**நாகமுட்டி¹** *nāga-muṭṭi,* பெ.(n.) கொடிவகை; snakewood.

**மறுவ.** நச்சுமுட்டிக்கொடி.

*[நாகம் + முட்டி.]*

**நாகமுட்டி²** *nāga-muṭṭi,* பெ. (n.) நச்சுமுட்டிக் கொடி; creepermushty, frog creeper

*[நாகம் + முட்டி.]*

வேலிகளில் முறுக்கிய நிலையில் காணப்படும் கொடி: இலைகள் அகன்றும், கூர்மையான முனையுடனுமிருக்கும். இலைக்காம்பு இலையின் பாதியளவிற்கு நீளமானது. மணமுள்ள, வெண்மையான சிறிய பூக்களுடன் வேலிகளிற் படர்ந்து காணப்படும்.

இப் பூக்களை அரைத்துத் தண்ணீரில் கலந்து குடித்தால், எல்லாவகைப் பாம்பின் நஞ்சும் நீங்கும். யானைக்கால் நோய்க்கும் இப் பூக்கள் சிறந்த மருந்தாகும். இதன் இலைகளைக் கருக்குநீராக்கிக் குடித்தால், உடம்பினுள் நாட்பட்ட புண்கள் விரைவில் குணமாகும்.

**நாகமுட்டி³** *nāga-muṭṭi,* பெ. (n.) **1.** எட்டிமரம்; nuxvomica tree. **2.** நாகமல்லி வகை; downy jasmine.

*[நாகம் + முட்டி.]*



**நாகமுடிச்சு** *nāga-muḍiccu,* பெ. (n.) பெண்களணியும் அனந்த முடிச்சு என்னும் காதணிவகை; a kind of woman's ear ornament.

*[நாகம் + முடிச்சு.]*

**நாகமுத்தக்காசு** *nāga-mutta-k-kāšu,* பெ. (n.) நீண்ட கோரை; straight sedge-Cyperus pertinuis

**மறுவ.** தருப்பைப்புல்.

*[நாகமுத்தம் + காசு.]*

**நாகமுல்லை** *nāga-mullai,* பெ. (n.) *நாகமல்லி* பார்க்க; see *nāga-malli.*

**மறுவ.** ஊரகமல்லி, அனிச்சைமல்லி.

*[நாகம் + முல்லை.]*

**நாகமுழணிவேர்** *nāga-muḻaṇi-vēr,* பெ. (n.) நல்லபாம்பின் நஞ்சினை மாற்றுவதற்குக் கொடுக்கும் நாகதாளி வேர்; root of nāga-tāḷi, it is an antidote to snake poison.

*[நாகமுழணி + வேர்.]*

**நாகமுள்ளு** *nāga-muḷḷu,* பெ. (n.) சப்பாத்திச் செடி; prickly pear cactus indus alias-Opuntia nigricans.

**மறுவ.** சப்பாத்திக்கள்ளி.

*[நாகம் + முள்ளு.]*

**நாகமூக்கத்தி** *nāga-mūkkatti,* பெ. (n.) *நாகமூக்கொற்றி* பார்க்க; see *nāga-mūkkoṟṟi*

*[நாகம் + மூக்கத்தி.]*

**நாகமூக்கொற்றி** *nāga-mukkoṟṟi,* பெ. (n.) **1.** தாளிவகை; Indian moon flower. **2.** தாளிக் கொடிவகை; American moon flower

**மறுவ.** நச்சுமூக்கொற்றி, சீமைநாக மூக்கொற்றி.

*[நாகம் + மூக்கொற்றி.]*

நல்லபாம்பு முதலாக அனைத்து, நச்சுயிரிகளின் நஞ்சினை, அகற்றும் அரிய மூலி. இதன் இலை, விதை அனைத்தும் உணவுக்குப் பயன்படும். பிஞ்சுவிதைகளுடன் கூடிய காயினை, கறிசமைத்து உண்பர். இதன் முற்றிய விதைகள் உயிர்ச்சத்து நிறைந்தது. சீமைநாக மூக்கொற்றியின் வேர் நெய்ச்சத்து நிறைந்தது. உப்புச்சுவை தருவது. அதன் வேர்ப்பட்டை மலமிளக்குந் தன்மையது.

**நாகமூசிகை** *nāga-mūšigai,* பெ. (n.) **1.** குங்குமமரம்; saffron tree monkey turmeric. **2.** கபிலப்பொடி; kamela dye.

*[நாகம் + மூசிகை.]*

**நாகமோடிசேலை** *nāga-mōḍi-śēlai,* பெ. (n.) நாகக்கோடிட்ட சேலைவகை (வின்); a kind of saree with serpent -like stripes.

*[நாகமோடி + சேலை.]*

**நாகமோடிவேட்டி** *nāga-mōḍi-vēṭṭi,* பெ.(n.) நாகக் கோடிட்ட வேட்டிவகை(வின்); a kind of cloth with serpent-like stripes

*[நாகம் + மோடி + வேட்டி.]*

**நாகமோதோவாக்கி** *nāga-mōdōvākki,* பெ. (n) காட்டுக்கொள்; wild gram-Rynchosia genus.

**நாகர்[1]** *nāgar,* பெ. (n.) தேவர்; celestial. "*வழுத்தவரங்கொடுப்பார் நாகர்*" (நாண்மணி.62) "*நாகம் வேட்டுறை நாகரை*" (சேதுபு.சேதுச்.46).

*[நகு → நகர் → நாகர்.]*

"நகு" = விளங்கித் தோன்றுகை என்னும் பொருள் தருவது. நகர் = வெண்சுதை மாளிகையுடன் விளங்கித் தோன்றுவது.

நாகர் = தெய்வநலத்துடனும் மிகுந்த ஒளியுடனும் விளங்கித் தோன்றும் தன்மையர். இன்று வடகிழக்கு எல்லையில் வாழும் நாகர்களும், மஞ்சள் வண்ணத்துடன், விளங்கித் தோன்றும் தன்மையர், என்பது குறிப்பிடத்தக்கது.

**நாகர்[2]** *nāgar.* பெ. (n.) பாதி மக்கள் வடிவும், பாதி நாகவடிவுமாயமைந்தார்; the race of serpents, half human in form. "*காமநனி நாகரிற்றுய்த்தவாறும்*" (சீவக.11.). 2. ஒரு பழைய இனத்தார்; a powerful scythian race having the serpent as their having totem. "*நக்கசாரணர் நாகர் வாழ்மலை*" (மணிமே.16:15.). 3. ஐந்தலை அல்லது ஏழுதலை நாகத் தலையணிவகை; a gold ornament having the design of a God under the hood of the five or sevan headed cobra, worn by woman on the crown of the head

*[நகு → நகர் → நாகர்.]*

கீழ்த்திசை நாட்டாரே நாகர். நாக வணக்கத்துடனும், நாகமுத்திரையுடனும் கீழ்த்திசை நாட்டில் வதிந்தவரே நாகர். இவர்கள் வாழ்ந்தநாடு நாகநாடு. மணிமேகலையில், நாகர்களைப் பற்றிய குறிப்பு காணப்படுகிறது. இங்கு குறிப்பிடப்படும் நாகர், நாகநாட்டில் வாழ்ந்தவர். நாகரிகத்துடன் விளங்கித் தோன்றுபவர். "*கீழ்நில மருங்கின் நாகநாடாளும்*" (மணிமே.9:55.). "*நாகநாடு நடுக்கின் றாள்பவன்*" (மணிமே.24:54.). வங்கக்கடல் தோன்றுமுன் அங்கிருந்த நிலப்பரப்பில் நாகர்கள் வாழ்ந்தனர். கீழக்கரை நெடுகலும் குடியேறியதனால் நாகர் சேர்ந்தவூர்கள், நாகர்கோவில், நாகூர், நாகப்பட்டினம், நாகபுரி எனப்பெயர் பெற்றன. இந் நாகரைக் குறிக்கும் கம்பராமாயணப் பாடலடிகள் வருமாறு:- "*கீண்டது வேலை நன்னீர் கீழுறக்கிடந்த நாகர் வேண்டிய வுலக மெங்கும் வெளிப்பட மணிகள் மின்ன*" (கம்பரா.கடல்தாவு.21.)

ஆரியத்தொல்கதை மயக்கினால், இடைக்காலப் பெரும்புலவரும் நாகர் என்னும் மாந்தரினத்தாரைப் பாம்பினமாகக் கருதிவிட்டனர். கீழ்நாடு என்பதையும், கிழக்கு நாடென்று கொள்ளாது, நிலத்திற்கும், நீருக்கும் கீழுள்ள நாடென்று பிழைபடக் கருதி விட்டனர். (தமிழக.வர.பக். பழையது.145.)

**நாகர்[3]** *nāgar,* பெ. (n.) இந்தியாவில் வடகிழக்கு எல்லைப்புற மாநிலங்களில் வாழும் வரலாற்றுச் சிறப்பு மிக்க பழங்குடியினர்; Nāgā's.

*[நகு → நகர் → நாகர்.]*

நாகர்கள் மஞ்சள் வண்ணத்துடன் விளங்கித் தோன்றுபவர்; இயற்கைவளம் கொழிக்கும் பகுதியில், மிகுந்த வளத்துடனும், செல்வத்துனும் வாழ்பவர். வேளாண்மை செய்து வாழும் இவர்தம் எண்ணிக்கை, 5 இலக்கம் ஆகும்.

**நாகரகம்** *nāgaragam*,பெ. (n.) *நாகரங்கம் (மலை)* பார்க்க; see *nāgaraṅgam*.

*[நாகர் + அகம்.]*

**நாகரகன்** *nāgaragaṉ*, பெ. (n.) **1.** வண்ணந் தீட்டுவோன்; painter. **2.** கள்வன்; thief

*[நாகர் → நாகரகன்.]*

**நாகரங்கம்** *nāgaraṅgam*, பெ. (n.) தேன்றோடை (மலை); a sweet orange Citrus

**நாகரசகந்தகம்** *nāgaraša-gandagam*, பெ.(n.) *நாகரசச் செந்தூரம்* பார்க்க; see *nāgaraša-c- cendūram*.

*[நாகரசம் + கந்தகம்.]*

**நாகரசச்செந்தூரம்** *nāgaraša-c-cendūram*, பெ. (n.) நாகம். இதளியம் (பாதரசம்) இவ் விரண்டையும் முதன்மையாகக் கொண்டு, கந்தகம் முதலிய கடைச் சரக்குகளையும் சேர்த்துச் செய்யப்படும் புடமிட்ட செந்தூரம்; an alchemical preparation consisting of zinc, mercury as chief ingredients mixed with sulphur and other drugs by process of calcination

*[நாகரசம் + செந்தூரம்.]*

இப் புடமிட்ட செந்தூரம் மிகச்சிறந்த வாணாள் மூலிகையாகவும், உடம்பிலுள்ள வளியின்ன அகற்றும் பொருளாகவும், உறுதுணை புரியுமென்று சா.அக. கூறும்.

**நாகரசவிந்து** *nāgaraša-vindu*, பெ. (n.) அரிய மூலிகைவகை; a kind of rare medicinal herb.

*[நாகரசம் + விந்து.]*

**நாகரசவூஞ்சல்** *nāgaraša-v-ūñjal*, பெ. (n.) நாகரசம், இதளியம், கோழிமுட்டை போன்ற வற்றால் உருவாக்கப்படும் மருந்து; an alchemical preparation consisting of zinc, mercury and fowl's egg

*[நாகரசம் + ஊஞ்சல்.]*

நாகரசம் இதளியம், கோழிமுட்டை முதலான வற்றை, சித்த மருத்துவர் உரிய முறையில் கலந்து, வாயகன்ற ஏனத்தில் ஊற்றி, தீக்கொழுந்து படும்படியாகப் ஏனத்தை உறியில் வைத்து, நன்கு எரித்துச் செய்யப்படும் மருந்தென்று, சா.அக. கூறும்.

**நாகரசு** *nāgarašu*, பெ. (n.) இல்வாழ்க்கைக்கு ஏற்றவண்ணம் சமைந்து, பக்குவப்பட்ட பெண்; a girl recently meanstruafed or attained maturity.

**நாகரடி—த்தல்** *nāgar-aḍi-*, 4.செ.கு.வி, (v.i.) நிறுவுதற் பொருட்டுக் கல்லில் நாகவுருவம் வகுத்தல்; to make a cobra image in stone for the nāga-nirumāṇam.

*[நாகர் + அடி—.]*

**நாகரத்தம்** *nāga-rattam*, பெ. (n.) கபிலப்பொடி; karmela dye- Mallotus philippinensis.

*[நாகர் + அத்தம்.]*

**நாகரத்தினம்** *nāga-rattiṉam*, பெ. (n.) *நாகமணி* பார்க்க; see *nāga-maṇi*

*[நாகர் + Skt. இரத்தினம்.]*

**நாகரம்[1]** *nāgaram*, பெ. (n.) **1.** தேவநாகரி; sanskrit script. *"நாகரநந்தி முதலியவை"* (சிவதரு.சிவஞானதா.32.).2.சுக்கு (தைலவ.தைல.).; dry ginger.

**நாகரம்**[2] *nāgaram,* பெ. (n.) 1. ஆதன் (ஆன்மா) அடையும் பேரின்பம்; blissful state for soul. 2. இளைப்பு; emaciation.

**நாகரம்**[3] *nāgaram,* பெ. (n.) 1. நாகரங்கம் (சங்.அக.); sweet orange. 2. நாரத்தை; bitter orange

**நாகரம்**[4] *nāgaram.* பெ. (n.) இணைவிழைச்சு இன்பவிளையாட்டுகளுள் ஒன்று, a posture of consisting of two attitudes.

*[நாகர் + அம்.]*

கணவனும், மனைவியும் ஒருவரது தொடையுடன், மற்றொருவர் தொடையைச் சேர்த்து, நாகம் போல் பின்னிப் பிணைந்து புணரும் நிலை. இஃது அறுபத்து நான்கு இன்ப விளையாட்டுகளுள் ஒன்று என்று, சா.அக. கூறுகிறது.

**நாகரமத்தகம்** *nāgara-mattagam.* பெ. (n.) *நாகரம்*[1] பார்க்க; see *nāgaram*[1].

*[நாகரம் + மத்தகம்.]*

**நாகரவண்டு** *nāgara-vaṇḍu,* பெ. (n.) 1. பொன்வண்டு (திவா.); green beetle, Chrysochroa chinensis. 2. நத்தைவகை; snail. 3. சிறுகுழந்தை; urchin, a term of contempt. நண்டுசிண்டு நாகர வண்டுகளெல்லாம் அங்கே வந்தன. (இ.வ.).

*[நாகரம் + வண்டு.]*

**நாகரவண்டுத்தூள்** *nāgara-vaṇḍu-t-tūḷ,* பெ. (n.) பாம்புப்புற்றுகளில் சிதைந்து கிடக்கும் வண்டுகளின் உடம்பிலுள்ள தோல் துண்டுகள்; the wings of insects usually found on the ant hills

*[நாகரவண்டு + தூள்.]*

**நாகரவிந்தாதியிளகியம்** *nāgara-vindādi-y-iḷagiyam,* பெ.(n.) உண்டஉணவு முறையாகச் செரித்து, உடலின் அனைத்துப் பகுதிகளும், ஆற்றல் பெறுவதற்காக உண்ணப்படும் இளகியம்; an electuary which causes good appetite and digestion, and gives energy and strength to the body and binds the semen.

*[நாகரவிந்தாதி + இளகியம்.]*

இவ் விளகியத்தை (இலேகியம்) முறையாக உண்பதால், மூன்று வேளையும் பசியுணர்வு உண்டாகும். உண்ட உணவும் செம்மையாகச் செரிமானமாகும். அவ்வாறு செரித்த உணவின் ஆற்றல், உடம்பின் அனைத்துப் பகுதிகளும் பெறும் வண்ணம், அரத்தவோட்டம் சீராக நடக்கும். மேலும் இவ் விளகியத்தால், உடம்பில் அரத்தவோட்டம் சீராக நடப்பதால், விழியம் (விந்து) மிகுதியாக ஊறிக் கெட்டிப்படுமென்று, சா.அக. கூறும்.

**நாகரன்** *nāgaraṉ,* பெ. (n.) 1. நகரத்தான்; townsman. 2. சிறந்தோன்; an illustrious person. 3. கணவனுடன் பிறந்தான்; husband's brother

*[நகர்→நாகர் + அன்.]*

**நாகராகம்** *nāga-rāgam,* பெ. (n.) பெரும்பண்களுளொன்று; (சிலப்.8:35,உரை). a main musical mode

*[நாகர் + ராகம்.]*

**நாகராசன்** *nāga-rāśaṉ,* பெ. (n.) காண்க: ஆதிசேடன்; Ādiśēaṉ, as chief of the nāgās.

*[நாகம் + அரசன் → அரைசன் → ராசன்.]*

**நாகராசா** *nāga-rāšā*, பெ. (n.) *நாகராசன்* பார்க்க; see *nāgā-rāsšan*. "*நாகராசாவினுடைய தேவிமாரும்.*" (தக்கயாகப்.39,உரை.).

*[நாகர் + skt ராசா.]*

அரசன் → அரைசன் → அரைசர் → ராசர் → ராசா.

**நாகராதி** *nāga-rādi*, பெ. (n.) *நாகராதித் தயிலம்* பார்க்க; see *nāgarādi-t-tayilam.*

**நாகராதித்தயிலம்** *nāgarādi-t-tayilam*, பெ. (n.) சுக்கு முதலியவற்றினின்று வடித்த நெய்மம்; (தைலவ.தைல.2). oil extracted from ginger and other substances "*கடத்திலிடு நாகராதித்தைலம்*"

*[நாகராதி + skt தயிலம்.]*

சுக்குடன் ஏனைய கடைச்சரக்குகளும் சேர்த்துக் காய்ச்சி, வடித்த நெய்மம் என்று சா.அக. கூறும்.

**நாகராதியிளகியம்** *nāgarādi-y-iḷagiyam*, பெ.(n.) சுக்கு இளகியம்; an electuary of dried ginger and other drugs

*[நாகராதி + இளகியம்.]*

**நாகராயர்** *nāga-rāyar*, பெ.(n.) பாம்புகட்கரசன்; serpent-king. "*வலமாக நாகராயர் சூழ் திருவாலவாயுள்*" (திருவாலவா.கடவுள்.13).

*[நாகம்+அரையர்→ராயர்.]*

**நாகரி** *nāgari*, பெ. (n.) 1. தேவநாகரி; the sanskrit script 2. குருக்கத்தி (பிங்.); a plant, common delight of the wood 3.தவசி முருங்கை பார்க்க; see tavaši-murungai.

*[நாகர் → நகரி → நாகரி.]*

முதற்கண், பண்பட்ட மக்கள் நகரத்தில் வாழ்ந்தனர். நகரத்தில் வாழ்ந்தவர், முதன்முதல் பயன்படுத்திய எழுத்து, நகரி அல்லது நாகரி எனப்பட்டது. முதற்கண், நகரங்களில் வழங்கியதனால் வடமொழியை, எழுதுவதற்குப் பயன்பட்ட வடமொழி எழுத்து, நாகரியெனப்பட்டது. பின்பு. வடமொழியாளரின் ஏமாற்றினால், 'தேவநாகரி'யெனப் பெயர் பெற்றது.

வடமொழியாளர், நகரத்தில் வழங்கிய வடமொழியெழுத்திற்குத் தெய்வத்தன்மையூட்டி, தேவநாகரியாக்கினர்.

**நாகரிகம்** *nāgarigam*, பெ. (n.) 1. நகரவொழுக்கம்; manners speech and dress pertaining to a city 2. நகர சம்பந்தமான செப்பம்; civilization "*நனிநாகரிகத்தம்மென் சாயலரிவை மகளிர்*" (பெருங்.உஞ்சை.41,83). 3. மென்னயநடை; politeness,refinement of manners. 4. பண்பட்ட பழக்க வழக்கம்; urbanity. "*நாகரிகமாமைந்தரை*" (சிவரக.தாருக.9). 5. கண்ணோட்டம்; friendly regard "*நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்*" 6. வீண்பகட்டு, பிலுக்கு (வின்.); affectation, foppishness(w)

*[நகர் + அகம் → நகரகம் → நகரிகம் → நாகரிகம்]*

த. நாகரிகம் skt. நாகரிக (nāgariga)

எல்லா நாட்டிலும், மாந்தர் முதன்முதல் நகரநிலையிலேயே நாகரிக மடைந்துள்ளனர். அதனால் நகரப்பெயரினின்று நாகரிகப்பெயர் தோன்றியுள்ளது. நாகரிகம் என்பது நகரமக்களின் திருந்திய வாழ்க்கை. மொழி ஞாயிறு எழுதிய நாகரிகம் என்னும் சொல் விளக்கம் வருமாறு: நகர மக்களின் திருந்திய பழக்கவழக்கமே நாகரிகமாயிற்று.

'நாகரிகம்' என்னும் சொல்லுக்குத் 'திருந்திய வாழ்க்கை' என்பது பொருள். அறிவும். அதன் வழிபட்ட ஒழுக்கமும் சேர்ந்து, திருந்திய

வாழ்க்கையாகும். ஒழுக்கமின்றி அறிவுமட்டு மி ருப்பின், அது நாகரிகமாகாது, அநாகரிகத்தின்பாற் படுவதேயாகும்.

அறிவென்பது, ஒழுக்கத்திற்குக் காரணமாய், இயற்கையாகவும், செயற்கை யாகவும் இருவகையா யிருப்பது. அவற்றுள், இயற்கையாவது குடிப்பிறப்பாலும், தெய்வத் தாலும் உண்டாவது; செயற்கையாவது, கல்வியாலும், நல்லினத்தாலும் உண்டாவது.

ஒழுக்கமென்பது, அகம், புறமென்னும் இருவகைத் தூய்மை. அவற்றுள் அகத் தூய்மையாவது, நினைவு, சொல், செயலென்னும் முக்கருமங்களும் தூயவாயிருத்தல். புறத் தூய்மையாவது உடம்பு, உடை, உணவு, காற்று, வீடு முதலியன தூயவாயிருத்தல்.

புறத்தூய்மையினும், அகத்தூய்மையே நாகரிகத்திற்குச் சிறந்ததாக எண்ணப்படும். ஞானத்தாலும், ஒழுக்கத்தாலும், இல்லறத்தினும், பன்மாண் சிறந்த துறவறத்தில், புறத்தூய்மை ஒரு பொருளாகக் கொள்ளப்படுவதன்று. இல்லறத்தினும், ஒருவன் எத்துணை எளியனா யிருப்பனும், தன்னையும், தன் பொருள்களையும், தூயவாய் வைத்துக் கொள்வதே புறத்தூய்மை யாகும். அழகியனவும், விலை யுயர்ந்தனவுமாகிய உடைகளால் உடம்பைப் பொதிவதும், விலையும், சுவையுமிக்க உண்டிகளைப் பன்முறையுண்பதும், மேனிலையும், அகலிடமுள்ள மாளிகைகளில் வாழ்வதும், வசதியும், விலையுயர்ந்தனவுமான வாகனங்களில் ஊர்வதும், இயந்திரத்தாலும், ஏவலாளராலும் வினைசெய்வதும், இன்னும் இவைபோல்வன பிறவும், (அறிஞர்களும் அறிவிலிகளுமான) செல்வர்க்கே யுரிய, ஆடம்பர வாழ்க்கையேயன்றி, நாகரிக வாழ்க்கை யாகா. இவற்றை நாகரிகமென் றெண்ணுவது, மேலைப்புது நாகரிகம்பற்றிய திரிபுணர்ச்சியாகும்.

"*கந்தை யானாலும் கசக்கிக் கட்டு*" வதும்,

"*கூழா னாலுங் குளித்துக் குடி*" ப்பதும்,

"*குடிலா னாலுங் கூட்டிக் குடியிரு*" த்தலுமே, தமிழ்நாட்டுத் தலைநாகரிகமாகும். கூட்டலாவது மயலகற்றல்.

பரிமேலழகர், திருக்குறளுரைப்பாயிரத்தில், ஒழுக்கத்தைப்பற்றி, "ஒழுக்கமாவது அந்தணர் முதலிய வருணத்தார், தத் தமக்கு விதிக்கப்பட்ட பிரமசரிய முதலிய நிலைகளினின்று, அவ் வவற்றிற் கோதிய, அறங்களின் வழுவா தொழுகுதல்" என்று கூறியுள்ளார். இது குலந்தோறும் வேறாகி, நடுவுநிலை திறம்பிய ஆரியவழி யொழுக்கமாதலின், எல்லார்க்கும் பொதுவானதும், நடுவுநிலை திறம்பாததுமான தமிழொழுக்கத்திற்குச் சிறிதும் வேண்டப்படாது, இதை அவ் வுரையாசிரியரே மீண்டும்,

"அதுதான் நால்வகை நிலைத்தாய் வருணந்தோறும் வேறுபாடுடைமையின், சிறுபான்மையாகிய அச் சிறப்பியல்புக ளொழித்து, எல்லார்க்கு மொத்தலிற் பெரும்பான்மையாகிய பொதுவியல்புபற்றி, இல்லறந், துறவறமென இருவகை நிலையாற் கூறப்பட்டது" என்று நூலர்சிரியர் கருத்திற்கேற்பக் குறித்துள்ளார். ஆதலால், ஒழுக்கமென்பது எல்லார்க்கும் பொதுவான, முக்கருமத் தூய்மையேயன்றி, குலந்தோறும் வேறுபட்ட வருணாசிரமத் தருமமன்று.

நாகரிகமென்னும் சொல்லை, திருவள்ளுவர் 'கண்ணோட்டம்' என்னும் பொருளில் வழங்கியுள்ளார்.

"பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர்
நயத்தக்க நாகரிகம் வேண்டு பவர்" (குறள்,50).

என்னும் குறளுரையில், நாகரிகத்திற்குக் கண்ணோட்டமென்று பொருள் கூறப் பட்டுள்ளது. இதே பொருளில் கம்பரும்,

"நாக்கரியும் தயமுகனார் நாகரிக ரல்லாமை" என ஆண்டிருக்கின்றார்.

'கண்ணோட்டம்' தூய நினைவுகளில், அல்லது திருந்திய குணங்களில், ஒன்றாதலின், நாகரிக மெனப்பட்ட தென்க.

நாகரிகமென்னும் சொல், 'நகர் அகம்' என்னும் சொற்றொடரின் (அல்லது

பகுசொல்லின்) திரிபாகும். நகர் என்பது, பேரூர் அல்லது பட்டினம், அகமென்பது, இடம் அல்லது இடத்திலுள்ள ஒழுக்கம்.

மக்கட்பெருக்கால், சிற்றூர்கள் பேரூர்களாவதும், பேரூர்கள் நகரங்களாவதும் இயல்பு. 'சிற்றூர்' சிறிது சிறிதாய் நகர்ந்து, பேரூரானபின் நகரெனப்படும். நகர் என்பது, முதனிலைத் தொழிலாகுபெயர்; நகரம் என்பது அம் சாரியை பெற்ற, முதனிலைத் தொழிலாகு பெயராகவும், அம் விகுதிபெற்ற தொழிலாகு, பெயராகவுங் கருதப்படும். நகர்தலாவது, பெயர்தல் அல்லது தள்ளுதல். மக்கள் நெருக்கம்பற்றி, ஒரு மனையிலுள்ளார் நகர்ந்து புதுமனை புகுவதும், ஒரு தெருவிலுள்ளார் நகர்ந்து, புதுத்தெரு புகுவதும் கண்கூடாகக் காண்கிறோம். இங்ஙனமே, ஓர் ஊரானது, சிறிது சிறிதாய் நகர்ந்து, நாளடையில் நகராகின்றது.

பண்டைத் தமிழின்படி, ஊர், நகரம் என்பன, ஒருபொருட் சொற்கள். ஊர் என்னும் பெயர்க்கும் இதுவே காரணம். ஊர்தலும், நகர்தலும் (ஏறத்தாழ) விரைவளவில், ஒன்றே. முற் காலத்தில், மருதநிலத்தூர்களே ஊர்களெனப்பட்டன. குறிஞ்சி, முல்லை, பாலை நிலங்களிலுள்ள, குறிச்சி, பாடி, பறந்தலைகளை விட, மருதநிலத்தூர்கள் மிகப் பெரியவனவா யிருந்தன. வாணிகம்பற்றி, நெய்தல்நிலத்துப் பட்டினங்களும், உழவுபற்றி, மருத நிலத்தூர்களும், மிகச் சிறந்தனவும், பெரியனவுமான நகரங்களாயின. அவ் விருவகை நகரங்களில், வாணிகம்பற்றியும், உழவுபற்றியும், பலவகைக் கைத்தொழில்களும் சிறந்திருந்தன. பட்டினங்களையும், ஊர்களையுமே, பண்டை மன்னரும், தத்தம் தலைநகராகக் கொண்டிருந்தார்கள். காவிரிப் பூம்பட்டினமும் கொற்கையும், நெய்தனிலத் தலைநகர்களாகவும், உறையூரும், மதுரையும் மருதநிலத் தலைநகர்களாகவும் இருந்தமை காண்க.

உழவு, வாணிகம் என்னும் இரண்டினுள், உழவே, தலைமை யானதாயும், உயிர்வாழ்க்கைக்கு இன்றியமையாததாயும், வாணிகத்திற்குக் காரணமாயு மிருத்தலின், முதலாவது ஏற்பட்ட தொழில், உழவேயென்றும், முதலாவது நகராகியது மருதநிலத்தூரே என்றும், தெரிந்துகொள்க. பலநிலத்து மக்களும், தொழில்பற்றியும், பாதுகாப்புப் பற்றியும், செயப்படுபொருள் (manufacture) களாலேற்பட்ட வசதிபற்றியும், வாணிகம்பற்றியும் ஊரையும், பட்டினத்தையும் அடுத்ததினால், அவை, விரைந்து, நகரும், மாநகருமாயின. ஊர் என்னும் பெயர், இக் காலத்தில், பலவகையூர்களுக்கும் பொதுப்பெயராகவும், சிற்றூர் என்னும் பொருளில், சிறப்புப் பெயராகவும் வழங்குகின்றது; நகரென்னும் பொருளில் வழங்குகின்றிலது.

பட்டிகளிலும், சிற்றூர்களிலுமிருந்த மக்களைவிட, பட்டினங்களிலும், நகர்களிலு மிருந்த மக்களே, நாகரிகமாயிருந்தனர். இக் காலத்திலும், பெரும்பான்மை அதுவே. மக்கட்பெருக்கால், நகரங்களில் வழக்குத் தீர்ப்பிற்கும், பொருட்காவலுக்கும், ஊராண்மை, நாட்டாண்மை முதலிய அரசியல்களும், அவற்றின் சட்டங்களும், அவற்றை மீறியவழித் தண்டங்களும் ஏற்பட்டன. தண்டனைகட் கஞ்சி, மக்கள் திருந்திய ஒழுக்கமுடை யராயினர். பலவகைக் கைத் தொழிலால், பலவகைப் பொருள்களும் செய்யப்பட்டதினால், வசதியாகவும், சிறப்பாகவும் வாழத்தொடங்கினர். சிறந்த பாத்திரங்களிற் சமைத்துண்ணவும், வசதியான வீடுகளில் வசிக்கவும், நெய்தவுடைகளை உடுக்கவும் தலைப்பட்டனர். நடையுடை பாவனைகள் நாளடைவில் திருந்திவரலாயின. இங்ஙனமே நாகரிகமானது நகரங்களில், சிறிது சிறிதாய் வளர்ந்து, முதிர்ச்சியடைந்தது. 'நகரகம்' என்னும் சொல், 'நகரிகம்', 'நாகரிகம்' என மருவி வரும்.

சிற்றூர்களிலும், பட்டிகளிலுமிருந்த மக்கள், நாகரிகமின்றி மிலேச்சராயும், முரடராயு மிருந்துவந்தனர். இக் காலத்திலும், நாகரிக மில்லாதவனைப் 'பட்டிக்காட்டான்' என்பது வழக்கம்.

ஆங்கிலத்திலும், நாகரிகத்தைக் குறிக்கும், 'civilisation' என்னும் சொல், இதே காரணத்தாற்றான் உண்டாயிருக்கின்றது. 'Civitas' என்பது, இலத்தீன் (Latin) மொழியில் 'நகர்'

அல்லது 'பட்டினம்' (city) என்று பொருள்படும். அதிலிருந்தே, 'civilise' என்னும் வினை யுண்டாகும். மரியாதையை அல்லது திருந்திய ஒழுக்கத்தை உணர்த்தும், 'civility' என்னும் சொல்லும், அதனின்றும் திரிந்ததே.

civil· having the refinement of city-bred people

civil war a war between citizens of the same state.

city a large town. L. civitas

(Chamber's Etymological Dictionary).

நாகரிகமென்னும் சொல், நாகர் என்னும் பெயரினின்று வந்ததென்றும், நாகரென்பார், நாகரிகத்திற் சிறந்திருந்தவரென்றும், ஆயிரத் தெண்ணூறாட்டைமுற் றமிழர் (The Tamils 1800 Years Ago) என்னும் நூலிற் கூறப்பட்டுள்ளது.

நாகரென்பர், நாகநாடெனப்பட்ட கீழ்த்திசை நாடுகளில், நாகவணக்கம், கொண்டிருந்த மக்கள் வகுப்பாரே. நாகவணக்க முடைமைபற்றி, நாகரெனப்பட்டார். நாகருடைய நாடு, நாகநாடெனப்பட்டது.

நாகம் என்பதும், நாகர் என்பதும், பாம்பின் பெயர்கள். நகர்வது நாகம், அது முதனிலை திரிந்த தொழிலாகு பெயர்; நாகர் என்பது நாகம் என மருவும். ஆங்கிலத்திலும் snake என்பது, இதே பொருள் பற்றியது.

snake a creeping animal: snican, to creep - (Chambers' Etymological Dictionary).

நகர், நாகம், என்னும் தமிழ்ச்சொற்களே, 's' என்னும் முதல் எழுத்துப் பெற்று ஆங்கிலத்தில் வழங்குமென்க. அது முதற்குறைக்கு மாறானதோர் முதல் விரிபாகும். அதை ஆங்கிலத்தில் 'prosthesis' என்பர்.

நாகம் என்னும் சொல்லுக்கு, மலையிலுள்ள தென்றும், மரத்திலுள்ள தென்றும்; வடநூலார் பொருள் கூறுவது சிறிதும் பொருந்தாது.

கீழ்த்திசை நாடுகளில், பெரும் பாம்புகளிருந்தனவாக, வான்மீகி இராமாயண, கிட்கிந்தா காண்டத்தா லறியக்கிடக்கின்றது. இற்றைக்கும், கழிபெரு நச்சுப்பாம்புகள், தென்அமெரிக்காக் கண்டத்தி லுள்ளனவாகச் சொல்லப்படும். நாகத்தின் தீமைபற்றி, அதைத் தெய்வமாக மக்கள் வணங்கி வந்தனர் என்க.

நாகத்தொடு பெயரொப்புமைபற்றி, நாகரை, நாகத்தலையும், மக(மாநுட)வுடம்பும் பெற்ற ஒருவகை உயர்திணை வகுப்பாராகப் பிறழக் கருதுவர் சிலர்.

பர்மா, சாவா முதலிய தீவுகளும், ஆத்திரேலியா, அமெரிக்கா வென்னும் கண்டங்களும், வங்காளக்குடாக்கடலில் அமிழ்ந்துபோன நிலப்பாகங்களும் நாகநாடுகளாகும்.

மணிமேகலையில்,

"கீழ்நில மருங்கி னாகநா டாளும்"

"நாகநன் னாட்டு நானூறி யோசனை
வியன்பா தலத்து வீழ்ந்துகே டெய்தும்"

"நாக நாடு நடுக்கின் றாள்பவன்
வாகை வேலோன் வளைவணன்"
(கம்பரா.சுந்தர20) எனக் கீழ்த்திசை நாடுகள் பொதுவாகவும், சிறப்பாகவும், நாகநாடெனச் சுட்டப்பட்டன.

சாவக நாட்டுள்ள புண்ணியராசன் தலைநகர், நாகபுரமெனக் கூறப்பட்டுள்ளது.

கம்பராமாயணச் சுந்தரகாண்டத்தில்,
"கீண்டது வேலை நன்னீர் கீழுறக் கிடந்த நாகர்
வேண்டிய வுலக மெங்கும் வெளிப்பட மணிகண் மின்ன
ஆண்டகை யதனை நோக்கி யரவினுக் கரசர் வாழ்வும்
காண்டகு தவத்த னானேன் யானெனக் கருத்துட் கொண்டான்"

என்னும் செய்யுளில், நாகநாடு குறிக்கப் பட்டுள்ளது. இதில், கீழென்பது கிழக்கு. இதைக்

கடலின் அடிப்பாகமெனக் கொண்டு இடர்ப்படுவர் சிலர்.

அனுமான் கடலைத் தாவின வேகத்தினால், எழுந்த காற்று மோதுதலினாலே, கீழ்த்திசையில், பூமியின் வளைவான பாகத்திலுள்ள கடல்நீர் விலகி, அதனால் முன்னம் மறைக்கப்பட்டு (அதற்கப்பால் கிழக்கே) இருந்த நிலப்பாகம் அல்லது நாகநாடு தோன்றிற்று என்பது, இச் செய்யுளின் கருத்தாகும்.

பூமி உருண்டையா யிருத்தலால், கிழக்கே செல்லச்செல்லப் பூமியின் கீழ்ப்பாகமாகும் அமெரிக்கா, பூமிக்கு நேர் கீழாகும். அதனால், கீழ்ப்பாகமெனப்படும். அது பூமியின் மேற்பரப்பின் வழியாய்ச் சென்றெய்தப் படுவதல்லது, நிலத்தை யகழ்ந்தும் கடலின் மூழ்கியும், நேர் கீழாகச், சென்றெய்தப் படுவதன்று. மேற்கே மலைத்தொட ரிருந்தமையால், தமிழ்மக்கள் மேற்றிசையிற் பெரும்பாலும் சென்றிலர். கிழக்கே மலையின்றி யிருந்ததுடன், நிலத்தொடர்பும் நெடுந்தூர மிருந்ததாகத் தெரிகின்றது.

நாகநாட்டை யடுத்த கீழ்கரையூர்கள், நாகூர், நாகப்பட்டினமெனப் பெயர் பெற்றிருக்கின்றன.

நாகரில், நாகரிகரும், அநாகரிகருமாக இருவகுப்பார் இருந்திருக்கின்றனர். நாகரிக வகுப்பைச் சேர்ந்த கன்னிகைகளையே, அர்ச்சுனனும், சோழனும் மணந்ததாகப், பாரதமும், மணிமேகலையுங் கூறும்.

மணிமேகலை, ஆதிரை பிச்சையிட்ட காதையுள்,

"சாதுவ னென்போன் தகவில னாகி

.........................

வங்கம் போகும் வாணிகர் தம்முடன்

தங்கா வேட்கையிற் றானுஞ் செல்வுழி

நளியிரு முந்நீர் வளிகலன் வௌவ

.........................

நக்க சாரணர் நாகர் வாழ்மலைப்

பக்கஞ் சார்ந்தவர் பான்மைய னாயினன்

.................

ஓங்குயர் பிறங்க லொருமர நீழல்

துஞ்சுதுயில் கொள்ளச் சூர்மலை வாழு

நக்க சாரணர் நடமிலர் தோன்றிப்

பக்கஞ் சேர்ந்து பரிபுலம் பினனிவன்

தானே தமியன் வந்தன னளியன்

ஊனுடை யிவ்வுடம் புணவென் றெழுப்பலும்

..................

கள்ளடு குழிசியுங் கழிமுடை நாற்றமும்

வெள்ளென் புணங்கலும் விரவிய விருக்கையில்

எண்குதன் பிணவோ டிருந்தது போலப்

பெண்டுட னிருந்த பெற்றி நோக்கி"
(மணிமே, 69.).

என்னும் அடிகளால், நாகரில் ஒரு வகுப்பார் அம்மணரா யிருந்தா ரென்றும், மக்களைக் கொன்று தின்றாரென்றும், அறியக் கிடக்கின்றது. ஆதலால் நாகரிகம் என்னும் சொல், நாகர் என்பதினின்றும் வந்ததன்று என்றும், நாகரென்பார் கீழ்த்திசை நாடுகள் பலவற்றிலுமுள்ள மக்கட்கூட்டத்தாரே என்றும், அவருட் சிலர் நாகரிகராயும், சிலர் அநாகரிகராயு மிருந்தனரென்றும்அறிந்துகொள்க. ("செந்தமிழ்ச் செல்வி" கடகம். 1932)

**நாகரிகர்** *nāgarigar,* பெ.(n) 1. நகரப்பதியோர் (திவா.); citizens, townsmen, city folk. "*காஞ்சி நாகரிகராலிவர்*" (திருவிளை. மெய்க்கா. 33). 2. கண்ணோட்டமுள்ளவர்; persons possessing a kindly feeling for their friends "*நஞ்சுமுண்பர் நனிநாகரிகர்*" (நற்.355).

3. பல்கலைவல்லோர்; scholars, learned persons. "*நுதிகொ ணாகரிக னென்பான்*" (சீவக.1110). 4. சதுரர் (பிங்.); skilful persons. 5. காமுகர் (பிங்.); licentious persons. 6. நேயர் (இரசிகர்); persons of cultivated taste in art, literature etc., "*நம்பர் நம்மில்லம் புகுந்து நின்றார் நாகரிகர் பெரிது மிளையர்.*" (திவ்.பெரியதி. 9:2:4.).

*[நாகரிகம் → நாகரிகர்.]*

**நாகரிகி** *nāgarigi*, பெ.(n) செப்பமான நடையுடையவள்; woman of refined manners. "*நங்கைதோழி நனிநாகரிகியும்.*" (பெருங். உஞ்சை.42,171.).

*[நாகரிகர் → நாகரிகி.]*

**நாகரிசம்** *nāgarišam*, பெ.(n.) தவசி முருங்கை; tranquebar gendarussu

*[நாகரி → நாகரிசம்]*



**நாகரிபு** *nāgaribu*, பெ. (n.) பருந்து; brahmini kite

**நாகரீகக்காரன்** *nāgariga-k-kāraṉ*, பெ. (n.) பண்பட்ட பழக்கவழக்கமுடையவன் (வின்); gentle, accomplished person.

மறுவ. நகர்ப்புறத்தான்.

த. நாகரிகம் → skt. நாகரிக → நாகரீக + காரன். "காரன்" – உடைமைப்பெயரீறு.

*[நாகரிகம் → நாகரிகம் +காரன். 'காரன்' உடைமைப் பெயரீறு. பண்பட்ட பழக்க வழக்கங்கள். முதன்முதல் நகர் அல்லது நகரத்திலேயே திருந்தின. திருந்திய பண்பட்ட பழக்க வழக்கத்தினை யுடையவன், நாகரிகக் காரன் எனப்பெயர் பெற்றான். வாழ்க்கைத் திருத்தம் அல்லது பண்பட்ட பழக்க வழக்கத்திற்கு உடைமையாளன் என்றறிக.]*

**நாகரீகங்காட்டு-தல்** *nāgarigaṅ-kāṭṭu-*, 5.செ.கு.வி.(v.i.) *நாகரிகம்பண்ணு-தல் (வின்.)* பார்க்க; see *nāgarigam-paṇṇu-*.

**நாகரீகசெம்பு** *nāgariga-šembu*, பெ. (n.) ஆண்குறி; penis.

மறுவ. தண்டு.

**நாகரீகம்** *nāgarigam*, பெ. (n.) 1. *நாகரிகம்* பார்க்க; see *nāgarigam* 2. புதுமை; something new, curiosity "*அந்த நாகரீக வேடிக்கை நான் சொல்லக்கூடுமோ.*" (இராமநா.உயுத்.124)

*[நாகரிகம் → நாகரீகம்]*

**நாகரீகம்பண்ணு-தல்** *nāgarigam-paṇṇu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. பண்பட்ட பழக்கத்துடன் நடத்தல்; to behave politely. 2. ஆடம்பர மாயிருத்தல்; to be foppish.

*[நாகரிகம்→நாகரீகம் + பண்ணு-.]*

மிதமிஞ்சிய பகட்டாரவாரம் காட்டுதல். அளவிற்கு அதிகமாகச்செயற்கை ஆடம்பரம் செய்தல்.

**நாகரீகம்விடு–த்தல்** *nāgarīgam-viḍu-*, 4.செ.கு.வி.(v.i.) பண்பட்டநிலையில் பேசுதல் (யாழ்.அக.); to speak politely.

*[நகரிகம் → நாகரிகம் → நாகரீகம் + விடு–.]*

**நாகரீகர்** *nāgarīgar.* பெ. (n.) *நாகரிகர்(சூடா.)* பார்க்க; see *nāgarigar*

*[நாகரிகர் → நாகரீகர்.]*

**நாகரு** *nāgaru,* பெ. (n.) குருக்கத்தி (மூ.அ); common delight of the woods.

**நாகருகம்** *nāgarugam.* பெ. (n.) தேன்றோடை (யாழ்.அக.); a sweet orange.

மறுவ. இலாமிச்சை, கிச்சலி, நாகரம்.

**நாகருசம்** *nāgarušam,* பெ.(n.) *நாகருகம் (சங்.அக.)* பார்க்க; see *nāgarugam.*

**நாகருடப்பூடு** *nāgaruḍa-p-pūḍu,* பெ.(n.) கீரிப்பூண்டு; mungoose plant- Ophiorrhiza mungoos

**நாகரேணு** *nāgarēṇu.* பெ. (n.) மிளகு(மலை); black pepper.

**நாகரேணுவம்** *nāgarēṇuvam,* பெ.(n.) செவ்வியம்; root of pepper plant.

*[நாகரேணு → நாகரேணுவம்.]*

**நாகரை**[1] *nāgarai,* பெ. (n.) பூடுவகை (யாழ்.அக.); a kind of mungoose

**நாகரை**[2] *nāgarai,* பெ. (n.) 1. கறிப்புடோல் snake gourd. 2. *நாகரவண்டு* பார்க்க; see *nāgara-vaṇḍu.*

**நாகரையன்** *nāgaraiyaṉ,* பெ. (n.) *நாகராசன்* பார்க்க; see *nāgarāssṉ.* "*கழனாகரையன் காவலாக*"(தேவா.138,10)

**நாகரொட்டியெலும்பு** *nāgaroṭṭi-y-elumbu,* பெ.(n.) மார்பெலும்பு; chest bone- Starnum

**நாகல்** *nāgal,* பெ. (n.) *நாவல்(சங்.அக.)* பார்க்க; see *nāval.*

**நாகலதை** *nāga-ladai,* பெ. (n) ஆண்குறி (யாழ்.அக.); virile membrum

மறுவ. தண்டு.

**நாகலிங்கசாத்திரி** *nāga-linga-šāttiri,* பெ. (n.) தமிழ்ப்புலவர்; a Tamil poet இவர் 'வேளாளர் இயல்பு' என்ற நூலை இயற்றியுள்ளார். இந் நூல் வேளாளரை, சூத்திரர் என்பது தவறு என்றும், வணிக மரபினரென்றும் காட்டுகிறது. வேளாளர் இயல்பு பற்றி, தேவாரம் முதலிய நூல்களிலிருந்து ஆதாரங்கள் காட்டப் பட்டுள்ளன.

**நாகலிங்கம்** *nāga-lingam.* பெ. (n) நாகத்தால் கவிக்கப்பெற்ற இலிங்கம் (குறி)போன்ற உருவத்தைத் தன்னுட்கொண்ட பூவுள்ள மரவகை (M.M 1277); cannon ball tree having a flower in which the staminal portion curves over the ovary like a cobra's hood, m tr., Couroupita guianensis.

மறுவ. ஆவுடையார்மரம்.

*[நாகம் + இலங்கம்→ இலிங்கம்.]*

*இயற்கையின் படைப்பிலுள்ள மிகவுயர்ந்த சிறப்பினுக்கு எடுத்துக்காட்டாகத் திகழும் மரம்.சிவப்பு மணமுள்ள பூவின் நடுவில் இலங்கத்தைப்போன்று அமைப்பு, உள்ளது. நாகப்படத்தைப் போன்ற இம்லிமரத்தின் இதழ்கள், ஆவுடையாரை யொத்த விடிவின: கதிரவன் சாயுங் காலத்து இலிங்கத்தைச் சுற்றியுள்ள பகுதி, நாகப்படத்தை யொத்த மேலிதழோடு பிரிந்து விழுந்துவிடும் தன்மைத்து. (சா.அக.)*



**நாகலிங்கமுனிவர்** *nāgaliṅga-muṉivar,* பெ.(n.) தமிழ்ப்புலவர்; a Tamiḻ poet.

இவரது ஊர், காஞ்சிக்கருகில் உள்ள ஏகனாம் பேட்டையாகும். வண்ணம் பாடுவதில் புலமைப்பெற்று, 'வண்ணக்களஞ்சியம்' என்ற பட்டம் பெற்றார். இவர், பல தமிழ் நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார். சிவனிய நூல்களைக் கற்பிக்க, 'மெய்கண்டான் கல்லூரி' யை நிறுவி, நடத்தினார். செங்குந்தமித்திரன் என்ற திங்களிதழை நடத்தினார். திருத்தணிகை வண்ண மஞ்சரி, தென்கடம்பன்துறை பதிற்றுப்பத்தந்தாதி, வடபழநி மயிலேறும் பெருமாள் மாலை, திருவாமாத்தூர் வண்ணங்கள், திருவெறும்பியூர் புராணம், முதலிய நூல்களை இயற்றியுள்ளார்.

**நாகலோகம்[1]** *nāga-lōgam,* பெ. (n.) *நாகவுலகம்[1]* பார்க்க; see *nāga-v-ulagam[1].*

*[நாகம் + த.உலகம் →skt லோகம்.]*

**நாகலோகம்[2]** *nāga-lōgam,* பெ. (n.) *நாகவுலகம்[2]* பார்க்க; see *nāga-v-ulagam[2].*

*[நாகம் + த.உலகம் →skt. லோகம்.]*

**நாகவங்கம்** *nāga-vaṅgam,* பெ. (n.) 1. நாகவங்கமணல்; an ore consisting of lead and zinc. 2. வங்கமணல்; sand mixed with lead graphite.

*[ நாகம் + வங்கம்.]*

**நாகவடம்** *nāga-vaḍam,* பெ. (n.) *நாகபடம் (வின்.)* பார்க்க; see *nāga-paḍam.*

**நாகவம்[1]** *nāgavam,* பெ. (n ) 1.கரணம் பதினொன்றனுள் ஒன்றாகிய காருவா, (அமாவாசை) உவாநாளின் பிற்பகுதி (விதான.பஞ்சாங்.29,உரை); a divison of time, the latter half of the new moon day, one of eleven karaṇam. 2. பாம்புகரணம் (சா.அக.); onion of two snakes

**நாகவம்[2]** *nāgavam,* பெ. (n.) திருகுகள்ளி; tursted spurge.

**நாகவராளி** *nāga-varāḷi,* பெ. (n.) பண்வகை (யாழ்.அக.); a musical mode

**நாகவல்லரி** *nāgavallari,* பெ. (n.) 1. வெற்றிலை; betel leaf 2. *நாகவல்லி[1]* பார்க்க; see *nāga-valli[1].*

நாகப்பாம்பின் படத்தினைப் போன்ற தோற்றமுடையதாலே வந்த பெயர்.

**நாகவல்லி¹** *nāga-valli,* பெ. (n.) **1.**வெற்றிலை (பிங்.); betel leaf. **2.** திருமணத்தின் இறுதியில் ஐந்தாம் நாள் நடக்கும் நிகழ்வு (சடங்கு); concluding ceremony of a marriage on the fifth day.

*[நாகம் + வல்லி.]*

**நாகவல்லி²** *nāga-valli,* பெ. (n.) **1.** நாகவல்லிக் கொடி; betel vine. **2.** ஓரிதழ்த் தாமரை; one petel lotus. **3.** பாம்புக்கொடி; snake creeper. **4.** கீரி புரண்டான்; mungoose plant.

**நாகவல்லித்தழை** *nāgavalli-t-talai,* பெ. (n.) **1.** நாகவல்லிச் செடியின் இலைகள்; leaves of nāgavalli **2.** *நாகவல்லி¹* பார்க்க; see *nāgavalli¹*

*[நாகம் + வல்லி → நாகவல்லி நாகவல்லி + தழை.]*

நாகம் போன்று சுருண்ட தன்மையுடன், வலித்துக் கொள்ளும் கொடிமுனைக் காம்பு. இக்காம்பு வளர வளர வலித்துக்கொண்டு, இழுத்துச் செல்லும் இயல்புபற்றி வந்ததென்க.

**நாகவள்ளி** *nāga-valli,* பெ. (n.) **1.** *நாகவல்லி¹ (யாழ்.அக.)* பார்க்க; see *nāga-valli¹.* a kind of valli creeper **2.** வள்ளிக்கிழங்கு; sweet potato.

*[நாகம் + வள்ளி.]*

வள் → வள்ளி = வளமுடன் உருண்டு திரண்டகிழங்கு



**நாகவள்ளித்தளம்** *nāgavalli-t-talam,* பெ. (n.) **1.** வெற்றிலை; betel leaf **2.** *நாகவல்லி²* பார்க்க; see *nāgavalli²*

*[நாகவல்லி → நாகவள்ளி + தளம்.]*

**நாகவாசம்** *nāga-vāsam,* பெ. (n.) **1.** நாதாங்கி; staple of a bolt, as shaped like a snake's head. **2.** குழந்தைகளை உட்காரப்பயிற்றும் நாகம் போன்ற முன்னணை யுள்ள ஊஞ்சல் வகை (இ.வ.); a kind of swing with a snake-shaped hold in the front, used for teaching infants to sit up. **3.** பாம்பு இருக்குமிடத்தினின்று குறிப்பாக அடைகாக்கும்போது வரும் மணம்; snake's incubating smell.

**தெ.** நாகவாசமு.

**மறுவ:** கொண்டி.

*[நாகம் +* skt *வாசம்.]*

*[வயம் → வசம் → வாசம்.]*

**நாகவாடை** *nāga-vādai,* பெ. (n.) **1.** துத்தநாகப்பிடிப்பு (வின்.); alloy of zinc and silver, used in soldering. **2.** செம்பூறல்; verdigris.

*[நாக(ம்) + அடை → நாகவடை → நாகவாடை.]*

**நாகவாதி** *nāga-vādi,* பெ. (n.) 1. துத்தநாகத்தைப் பொன்னாக்கும் கலையறிந்தவன்; an alchemist handling consolidated zinc 2. பாம்புப்பிடாரன்; snake charmer.

*[நாகம் + வாதி. நகர்வு → நாகம்.]*

**நாகவாய்** *nāga-vāy,* பெ. (n.) 1. கடைசற்கருவி வகை(வின்.); tool used in turning. 2. நாகத்தின் வாய்; the mouth of snake

*[நாகம் + வாய்.]*

**நாகவாயு** *nāga-vāyu,* பெ. (n.) பத்துவகை வளிகளுள் ஒன்றான நாகன்(சங்.அக.); one of the ten vital air in the human body supposed to assist in extending and contracting the body and in speaking

*[நாகம் + skt வாயு .]*

**நாகவாரிகம்** *nāga-vārigam,* பெ.(n.) 1. அரசர் அமர்வதற்குரிய யானை; royal elephant 2. கருடன்; garudan 3. மயில்; peacock

நாகு = இளமை; விளங்கும் அழகு.

*[நாகு + அம் + வார் + இகம்.]*

நாகம் + வாரிகம்.

இளமை விளங்கும் அழகுடைய மயில், கழுலன், யானை முதலியவற்றைக் குறித்து வந்தது.

**நாகவாரிகன்** *nāga-vārigan,* பெ. (n.) யானைப் பாகன் (யாழ்.அக.); elephant's driver.

*[நாகம் + வாரிகன்.]*

யானையை இயக்குபவன்.

**நாகவாலெலும்பு[1]** *nāga-vālelumbu,* பெ.(n) நெஞ்செலும்பு; breast bone.

மறுவ. மார்பெலும்பு.

*[நாகவால் + எலும்பு.]*

*நாகத்தின் வாலெலும்பு போன்ற, நெஞ்செலும்பு.*

**நாகவாலெலும்பு[2]** *nāga-vālelumbu,* பெ. (n.) நாகப்பாம்பின் வால்புறத்திலிருக்கும் எலும்பு; the bone of nāga snake's tail.

*[நாகவால் + எலும்பு.]*

**நாகவி** *nāgavi,* பெ. (n) வெட்டிவேர்; khuskhus root- Andropogn muricatus.

*[நாகம் > நாகவி.]*

**நாகவிடபாகம்** *nāga-viḍa-pāgam,* பெ. (n.) 1. துத்தநாகக்களிம்பு; verdigris of zinc. 2. நாகப்பாம்பின் நஞ்சு; cobra- poisoning. 3. துத்தநாகம் சேர்ந்த மருந்தினாலேற்பட்ட நஞ்சுநோய்; chronic zinc poisoning due to medicines, consisting of zinc compounds as ingredients- Zinc alism.

*[நாகம் + skt. விடம் + பாகம்.]*

**நாகவீதி** *nāga-vīdi,* பெ.(n.) 1. நாகப்பாம்பு மணலில் ஊர்வதாலேற்பட்ட வளைவுப் பாதை; a zic-zac line which created by snake. 2. பால்வீதி மண்டலம் (யாழ்.அக.); milky way.

*[நாகம் + வீதி.]*

**நாகவீதியர்** *nāga-vīdiyar,* பெ. (n.) துறக்கவுலகத்திற்குச் செல்லும் வழியில் வாழும் தேவ குலத்தார்; a glass of gods re-

siding on the way to švargam. "மருந்தினு மினிய நாகவீதியரென்றுரைப்பர்" (கூர்மபு. சங்.அக.).

*[நாகம் + வீதியர்.]*

ஏழுலகில் ஒன்றான துறக்க வுலகத்திற்குச் செல்லுங்கால், இருக்கும் ஏனைய ஆறுலகங்களில் ஒன்றாகிய, நாகவுலகிடை வாழும், ஒளியுடம்பினர்.

**நாகவுப்பு** *nāga-v-uppu,* பெ. (n.) துத்தநாக உப்பு; (C.E.M ) white vitriol, sulphate of zinc

*[ நாகம் + உப்பு.]*

*சித்தமருத்துவத்தில், பல கடைச் சரக்குகளுடன் சேர்த்துச் செய்யப்படும் உப்பு. இது நச்சுத்தன்மை மிக்கது. இவ் வுப்பினைக் குறிப்பிட்ட அளவு நோயின் தன்மைக்கு ஏற்றவாறு, கடைச் சரக்குகளுடன் சேர்த்து, மருந்து செய்யவேண்டுமென்று, சா.அக. கூறும்.*

**நாகவுலகம்**[1] *nāga-v-ulagam,* பெ. (n ) **1.** தேவ வுலகம் (சங்.அக.); Indiran heaven, švargam. **2.**எழுவகையுலகினுளொன்று (திருக்கலம்.,6, உரை); one of the seven worlds.

*[ நாகம் + உலகம்.]*

**நாகவுலகம்**[2] *nāga-v-ulagam,* பெ. (n.) கீழுலகம்; the nether region as the abode of the nāgas "*நீ நாகலோகந் தகுவழியே சாரக்*" (கோயிற்பு. பதஞ்சலி.75).

*[ நாகம் + உலகம்.]*

நாகர் வாழ்வதாகக் கருதப்படும் (பாதாளம்) கீழுலகம்.

**நாகவெள்ளி** *nāga-veḷḷi.* பெ. (n.) பொன்னாக் கத்துக்கும், சிவபூசைக்கும் பயன்படுத்தும் வெள்ளி; an alloy of zinc and copper used in alchemy and the worship of šivaṉ.

*[ நகு → நாகு + அ + வெள்ளி.]*

*நகு = மிக்கு கொளியுடன் விளங்கித் தோன்றுகை. நகு → நாகு 'அ'சாரியை. பளபளப்புடன் அழகுடன் விளங்கித் தோன்றும் வெள்ளி.*

**நாகவெள்ளை** *nāga-veḷḷai,* பெ. (n.) நாகபற்பம்; an Indian preparation of zinc oxide prescribed for gonorrhoea

**மறுவ.** நாகப்பொடி.

*[ நாகம் + வெள்ளை.]*

*நகர்→ நகம் → நாகம் + பற்பம். நகர் = வெண்மையான சுதை பூசப்பட்டு விளங்கித் தோன்றுவது. நகர் → நகம் → நாகம்: பளபளப்புடன் திகழும் வெண்துத்தம். வெண்மை யானதும், பளபளப்பதுமான நாகவெள்ளைப் பொடி.*

வெள்→வெண் (வெண்மை) + ஐ = வெள்ளை. ஐ = விகுதி.

**நாகவேதம்** *nāga-vēdam,* பெ. (n.) மருது; winged myrobalan

*[ நகம் → நாகம் + வேதம்.]*

நல்விதையில் வனப்புடன் வளர்ந்து, வழவழப்பாகவும், பளபளப்புடனும் திகழும் மருதமரம்.

**நாகவொத்து** *nāga-v-ottu,* பெ. (n.) **1.** மகளிர் தோளணிவகை; a kind of armlet with a golden bead suspended, worn by women. **2.** நாகசுரத்திற்கு இணையாக, ஒத்திசைக்கும்

கருவி; a parallal instruments when nagaśwaram played, with it.

**நாகன்**[1] *nāgaṉ*, பெ. (n) பத்துவகை வளியுள், விக்கல் முதலியவற்றை உண்டாக்குவது (பிங்.); the vital air of the body which produces hiccup, one of taśavaḷi.

*[நகர் – நகம் → நாகம் →நாகன்.]*

*நாகன் என்பது உடம்பில் எழுச்சியுடன் மேலெழும் வளி (வாயு.).*

**நாகன்**[2] *nāgaṉ*, பெ. (n.) நாகவளி(வாயு) பத்துவகை வளிகளுள் ஒன்றானதும், கொட்டாவி, விக்கல், குமட்டல், முதலிய குணங்களையும், ஆண்குறிக்கு எழுச்சியையும் ஏற்படுத்தும், தன்மையுள்ள வளி (வாயு.); one of the ten vital airs in the human system which is said to be responsible to cause yawning, hiccups, vomitting and erection of penis.

*[ நகம் → நாகம் →நாகன்.]*

**நாகன்சண்பகம்** *nāgaṉ-śaṉbagam*, பெ. (n.) **1.** சித்தமருத்துவ முறைப்படி செய்யப்படும் நாகப்பொடி; a calcined powder prepared as per process of siddha. medicine. **2.** *நாகேசுரம்* பார்க்க; see *nāgēśuram*.

*[ நாகம் → நாகன் + சண்பகம்.]*

**நாகனவல்லி** *nāgaṉa-valli*, பெ.(n.) வெற்றிலைக் கொடி; betel leaf.

*[ நாகு + அன் + அம் + நாகனம் + வல்லி. மணம், குணம், காரம் முதலான பண்புகளைத் தன்னகத்தே கொண்டது.]*

**நாகனழைத்தான்வேர்** *nāgaṉaḻaittāṉ-vēr*, பெ. (n.) நஞ்சுமுறிச்சான் வேர்; country ipecacuanha.

*[நாகன் + அழித்தான் → அழைத்தான் + வேர்.]*

நாகன் அழித்தான் என்பது, நஞ்சுமுறித்தலைக் குறித்தலால், "அழைத்தான்" என்பது மரூஉ வழக்காகலாம்.

**நாகனாதி** *nāgaṉ-ādi*, பெ. (n.) தேட்கொடுக்கி; scorpion sting plant.

*[ நாகம் →நாகன் + ஆதி.]*

**ஆதி:** முதன்மையானது விலங்கில் வால் முதன்மையென்று கருதப்படுதலால், இம் மூலிகை, நாகனாதி எனப் பெயர்பெற்றது.



**நாகனாய்** *nāga-ṉāy*, பெ. (n.) இலைக்கள்ளி; leaf spurge- leafy milk hedge.

*[நாகன் + நாய்.]*

நாகப்பாம்பின் படத்தையொத்த சதைப்பற்றான இலைகளையும், நாயின் பற்களையொத்த கூர்மையான முட்களையுமுடைய, கள்ளிவகை.

**நாகனி** *nāgaṉi*, பெ. (n.) திருகுகள்ளி; trusted milk hedge.

*[ நாகன் →நாகனி. ]*

**நாகா[1]–த்தல்** *nākā-,* 4 செ.கு.வி. (v.i.) பேச்சில் விழிப்பாயிருத்தல்; to speak vigilantly "*யாகாவா ராயினும் நாகாக்க*" (குறள்,127.). மேடைப்பேச்சாளருக்கு நாகாத்தல் இன்றியமையாதது (உ.வ.).

*[நா + கா–.]*

**நாகா[2]–த்தல்** *nā-kā-,* 4 செ.கு.வி. (v.i.) 2. உண்ணும்போது கட்டுப்பாட்டுடன் இருத்தல்; to kee pon dietary. சாப்பாட்டில் நா காத்தால், உடம்பு கட்டழகுடன் மிளிரும்.

*[நா + கா–.]*

மூச்சுவிடும் இயல்பும், மோப்பக்குணமும் மூக்கிற்கு உடைமையாதல் போல், நாவடக்கமும், உணவைச்சுவைக்குந் திறனும் நாக்கிற்கு உடைமை ஆகும்.

**நாகாகுயம்** *nāgā-guyam,* பெ. (n.) சிறுநாகப்பூ மரம்; ceylon iron-wood

*[நாகம் + குல் → குய் → குயம்.]*

நாகம் = மாந்தர்க்கு இளமையும் வலிமையும் நல்கும் வட்டமான பூப்பூக்கும் மரம்.

**நாகாங்கம்** *nāgāṅgam,* பெ. (n.) ஆடா தோடை; malabar winter cherry-Adadhota vesica

*[ நாகம் +* skt. *அங்கம். ]*

**நாகாசம்** *nāgāšam,* பெ. (n.) அசோகமரம்; asoka tree-Uvaria longifolia

மறுவ: நெட்டிலிங்கம்.

*நாகசம் → நாகாசம்.*

**நாகாசனம்** *nāgāšaṉam,* பெ. (n.) பாம்பை உணவாகவுடைய கருடன் (நாமதீப.236); garuḍaṉ, as feeding on snakes.

நாகம் +skt. ஆசனம்.

**நாகாசனன்[1]** *nāgāšaṉaṉ,* பெ. (n.) *நாகாசனம்* பார்க்க; see *nāgāšaṉam*

நாகம் + skt.ஆசனம் → ஆசனன்.

நாகத்தை கொத்தியுண்டபின்பு, அதன் தோலை இருக்கையாகக் கொண்ட கலுழன்.

**நாகாசனன்[2]** *nāgāšaṉaṉ,* பெ.(n.) கருடன் கிழங்கு; sky root - Bryonia epigaea.

**நாகாசி** *nāgāši,* பெ. (n.) காய்ப்பாகல்; spiked bitter cucumber - Momordica charantia

பச்சைப்பசேல் என்றிருக்கும் பாகற்காய்.

**நாகாஞ்சனம்** *nāgāñjaṉam,* பெ.(n.) வெண்துத்தம்; white vitriol

நாகம் + skt anjna → **த.** அஞ்சனம்.

**நாகாத்தம்மன்** *nāgāt-t-ammaṉ,* பெ. (n.) 1. மாந்தர், புதர்வாழ் பாம்பினைக் கண்டு அஞ்சிய சூழலிற் சூட்டிய பெயர்; people out of fear for the snake from the thick bush named Nāgāttammaṉ. 2. நாவடக்கம் வேண்டி வழிபடும் அம்மன்; people prayed for decent talk to this deity

1. நாகம் + ஆத்தா + அம்மன்.

2. நா + காத்த + அம்மன்.

மாந்தர், அச்சத்தின் பொருட்டும், நாவடக் கத்துடன் கூடிய அமைதியான வாழ்வு அமைதற்பொருட்டும், நாகாத்தம்மனை வழிபட்டனர் எனலாம். தாய்மை வழிபாடு தமிழகத்தில் தலைசிறந்து திகழ்கின்றது, என்பதற்கு நாகாத்தம்மன் வழிபாடு எடுத்துக்காட்டாகும்.

**நாகாத்திரம்** *nāgāt-tiram,* பெ. (n.) நாகபாணம் (யாழ்.அக.); serpant missile

*[நாகம் + skt astra → த. அத்திரம். ]*

**நாகாதிபன்**[1] *nāgādiban,* பெ. (n.) 1. இந்திரன்; Indira,as lord of the švargam. "*நாகாதிபன் மகன்*" (பாரத.அருச்சுனன்றீ.10). 2. (யானை அரசன்) ஐராவதம்; indra's elephant, as lord of elephants "*நாகாதிபன் விடுமும்மத நாறுந்திசை புக்கான்*" (பாரத. அருச்சுனன்றீ.10). 3. நாகவரசன்; Adišēḍaṉ, as lord of serpants. "*நாகாதிபன் மகண்மைந்தனங்கண்டு*" (பாரத.அருச்சுனன்றீ.10.).

*[நாகம் + skt அதிபன். ]*

நாகவுலகின் வேந்தன்.

யானைகளிற் சிறந்தது இந்திரனது ஊர்தியான ஐராவதம் ஆகும். தேவர்களின் தலைவனான இந்திரன் கவர்ந்து செல்வதால், இதுவே யானைகளின் தலைவனாக மதிக்கப் பெறுகிறது. பாம்புகளின் தலைவனான ஆதிசேடன் திருமாலுக்கு ஊர்தியாக, திகழ்வதால், பாம்புகளின்தலைவனாகத் திகழ்கிறது என்பது, தொன்மச்(இதிகாசச்) செய்தியாகும்.

**நாகாதிபன்**[2] *nāgādiban,* பெ. (n.) (மலையரசன்) இமயமலை; the Himālayās , as Lord of the mountains "*நாகாதிபன் வண்சாரலின்*" (பாரத.அருக்சுனன்றீ.10). 2. மேருமலை(யாழ்.அக.); Mt.mēru . 3. குறிஞ்சிநிலத் தலைவன் (சங்.அக.); king of the kuṟiñji tract

*[நாகம் + skt.அதிபன்.]*

மலைகளுள் அதிக உயரமுடைய இமயம் போல், ஆளுமைப் பண்பு அதிகம் பெற்றவன் குறிஞ்சிநிலத் தலைவனாவன்.

*[ஒருகா: நாகம் + அதிபன்.]*

நாகம் = விளங்கித்தோன்றும் மலை. இது அழகு மிக்கது. மலையும், மலைசார்ந்து திகழும் தன்மைவாய்ந்த குறிஞ்சி நிலமும், நாகம் என்று பெயர்பெற்றது. விளங்கித்தோன்றும், அழகு மிக்க மலைகள் நிறைந்த குறிஞ்சி நிலத்தலைவன், நாகாதிபன் என்று அழைக்கப்பட்டான்.

**நாகாதோரம்** *nāgādōram.* பெ. (n) 1. கருப்பம் வளராது, மெலிந்து அசைவின்றி, வயிற்றில் தங்குதல்; abortion of the ovum in the tubal pregnancy in the abdomen. 2. பாம்புவயிறு (சா.அக.); flat belly

**நாகாந்தகன்** *nāgāndagaṉ,* பெ.(n) (நாகங்களைக் கொல்பவன்) கழுலன் (யாழ்.அக.); garuḍan, as the destroyer of snakes

*[நாகம் + skt.andaga- த. அந்தகன்.]*

**நாகாபரணன்** *nāgābaraṇaṉ,* பெ. (n.) சிவன்; lord šivaṉ, as adorned with serpents "*பணஞ்செய் பொறியிள நாகாபரணர்*" (வெங்கைக்கோ.191.).

*[நாகம் + skt. ஆபரணன்.]*

**நாகாமத்தம்** *nāgāmattam,* பெ. (n.) கோரைவகையுளொன்று; a species of cyperus grass.

**நாகாயுதம்** *nāgāyudam,* பெ. (n.) *நாகாத்திரம்* பார்க்க; see *nāgāttiram.*

**நாகாராதி** *nāgārādi,* பெ. (n.) *நாகாந்தகன்* பார்க்க; see *nāgāndagaṉ.* (சா.அக)

**நாகாரி** *nāgāri,* பெ. (n.) கருடன்; brahmini kite.

**நாகாலயம்[1]** *nāgālayam,* பெ. (n.) (நாகங்கள் வாழ்விடம்) கீழுலகம்; nether region, the abode of the the nāgās. "*நாகாலயங்களொடு நாகருலகும்*" (கம்பரா.ஊர்தேடு.9).

**நாகாலயம்[2]** *nāgālayam,* பெ. (n.) தேவர்களிருப்பிடம் (யாழ்.அக.); the abode of the gods.

**நாகானந்தி** *nāgāṉandi,* பெ. (n.) 72–வகை மேளகருத்தாக்களுள் ஒன்று (சங்.சந்.47.); a primary music paṉ. (rāgam.).

*[நாகம் + skt.ஆணந்தி.]*

**நாகிதசரம்** *nāgidaśaram,* பெ. (n.) *நாகிதம்* பார்க்க; see *nāgidam.*

**நாகிதம்** *nāgidam,* பெ. (n.) *நாகியந்தம்* பார்க்க; see *nāgiyandam.*

**நாகியந்தம்** *nāgi-y-andam,* பெ.(n.) பால்; milk.

*[நாகி + skt. அந்தம்.]*

விளங்கித் தோன்றும் வெண்மை வண்ணமுள்ள பால்.

**நாகியர்** *nāgiyar,* பெ. (n.) தேவமாதர்; women of the celestial world."*நாகியர் திங்கண் முகத்தியர்*" (கம்பரா.ஊர்தே.121).

மிகுந்த அழகுடன் விளங்கித்தோன்றும் தெய்வநலஞ்சான்ற அரம்பையர். இத் தேவமாதர் நாக உருவத்தை முடியில் அணிந்தவர். இளமையாகவும், அழகாகவும், விளங்குபவராகையால் நாகியர் என்னும் பெயர் ஏற்பட்டது.

**நாகினி** *nāgiṉi,* பெ. (n.) 1.வெற்றிலை(மலை.); betel. 2. வஞ்சிக்கொடி (மலை.); common rattan of the south india.

**நாகினிப்பாலை** *nāgiṉi-p-pālai,* பெ.(n.) வெட்பாலை; oleandenr rosebay.

**நாகு[1]** *nāgu,* பெ. (n.) 1. இளமை; youthfulness, tenderness, juvenility. "*நாகிலைச் சொரிந்த வந்தீம்பால்*" (சீவக.2102). 2. பெண்மை (சீவக.74,உரை); femininity. 3. இளம்பெண், பெண் (தொல்.மரபு.3); youngwoman, woman. 4. எருமை; மரை, பெற்றம் என்பவற்றின் பெண்; female of erumai, marai and peṟṟam. 5. நத்தை; female snail, sea-snail."*நீர்வாழ் சாதியுணந்து நாகே*" (தொல்.பொருள்.618.). 6.சங்கு (சூடா.); conch. 7. மரக்கன்று (அக.நி.); sapling. 8. ஆவின் பெண்கன்று; (யாழ்.அக.) female calf, heifer. 9. பெண்மீன் (யாழ்.அக.); female fish. 11. கடல்நத்தை; sea-snail.

*[நுகு → நகு → நாகு.]*

*இளமை, இளமை கொழிக்கும் பெண். அழகுடன் வளர்ந்து விளங்கும் ஆவின் கன்றும், நாகு என்றே அழைக்கப்பட்டது.*

**நாகு[2]** *nāgu,* பெ. (n.) புற்று (தைலவ.தைல.); anti-hill.

**நாகு³** *nāgu,* பெ. (n.) மலை (யாழ்.அக.); mountain.

*[நகு → நாகு .]*

வலிமையுடன், வளர்ந்து விளங்கித் தோன்றும் மலை.

**நாகுகன்று** *nāgu-kaṉṟu,* பெ. (n) கிடாரிகன்று (S.I.I ii,489,491.); heifer.

**நாகுணம்** *nāguṇam,* பெ. (n) நாகணம் என்ற நறுமணப்பண்டம் (பெருங்.மகத.17,135.); the aromatic substance, nāgaṇam.

*[நாகணம் → நாகுணம் ]*

**நாகுதா** *nāgudā,* பெ. (n) மீகாமன்(வின்); captain of a ship

*[நாவு→நாகு→நாகுதா.]*

**நாகுதாளிலை** *nāgu-tāḷ-ilai,* பெ.(n.) *நாகதாளி* பார்க்க; see *nāgatāḷi.*

மறுவ. நாகமணி இலை.

*[நாகதாளி → நாகுதாளி + இலை. ]*

சிறிய வெற்றிலை போன்றம் சிறிய, நாகத்தின் படம் போன்றும், அமைந்துள்ள மூலிகை. இதற்கு ஈசுவர மூலி என்றும் பெயர்.

உடலைத்தூய்மை செய்வதற்கு நாகுதாளிச்சூரணம் மிகவும் பயன்படும்.

**நாகுராசிகம்** *nāgu-rāśigam,* பெ.(n.) சீயக்காய்; soap-pod- Acacia concianna



**நாகுருவேர்** *nāguru-ver,* பெ. (n.) சவர்க்காரம்; dhobies earth-soil.

*[நாகு → நாகுரு + வேர்.]*

**நாகுலி¹** *nāguli,* பெ. (n.) 1. அரத்தை; galangal. 2. பேரரத்தை; greater galangal 3. கீரிப்பூண்டு (மலை.); Indian snake-root

*[நாகு → நாகுலி.]*

**நாகுலி²** *nāguli,* பெ. (n.) மிளகுக்கொடி; pepper creeper

*[நாகு → நாகுலி.]*

**நாகுலிகம்** *nāguligam,* பெ. (n.) சுக்கு; dried ginger -Zingiber officinali.

**நாகூர்** *nāgūr,* பெ. (n.) நாகப்பட்டினத்திற்கு வடக்கிலுள்ளதும், முகமதியருக்கு சிறப்பிடமாகத் திகழ்வதுமான, கடற்றுறையில் அமைந்துள்ள ஓர் ஊர்; a sea-port north of Nāgapaṭṭiṉam, containing a mosque with a minaret 90 feet high, a place of pilgrimage for muslims.

**நாகூர்க்காசு** *nāgūr-k-kāšu,* பெ. (n.) *நாகூர்ச்சல்லி* பார்க்க; see *nāgūr-c-calli.*

*[நாகூர் + காசு.]*

**நாகூர்ச்சல்லி[1]** *nāgūr-c-calli,* பெ. (n.) 1. உலாந்தா நாட்டார் நாகூரில் அடித்து வழங்கிய, தாமிர நாணயவகை; a small copper coin of the Dutch, minted at Nāgūr. 2. மிகு ஏழை (இ.வ.); very poor person.

*[நாகூர் + சல்லி.]*

**நாகூர்ச்சல்லி[2]** *nāgūr-c-calli,* பெ. (n.) மருந்து செய்யப் பயன்படும், பழைய செப்பு நாணயம்; an old copper coin made of pure copper, so fit for making medicine.

*[நாகூர்ச்சல்லி = செம்புப்பொடி செய்வதற்குப் பயன்படும் தாமிரக்காசு. பழைய செப்புக்காசில், தாமிரக்கலவை மிகுதியாக இருப்பதால், மருந்துப்பொடி செய்வதற்குப் பயன்படுமென்று, சா.அக. கூறும்.]*

**நாகூராண்டவன்** *nāgūr-āṇḍavaṉ,* பெ. (n.) நாகூரில் அடக்கம் செய்யப்பட்ட முகமதியப் பெரியர் (இ.வ.); a Muhammadan šaint interred at Nagore.

*[நாகூர் + ஆண்டவன்.]*

**நாகூலகி** *nāgūlagi,* பெ. (n.) *சிறுகாஞ்சொறி;* climbing nettle-Tragia involucrata.

**நாகேசர்** *nāgēšar,* பெ. (n.) 1. யுனானி மருத்துவத்தில், நீரடைப்பு, மலச்சிக்கல் இவைகளைப் போக்கப் பயன்படும் மருந்துப்பூடு; (in uṉāṉi, medicine) a drug used for curing stranguary constipation etc,. 2. *நாகேசுரப்பூ* பார்க்க; see *nāgēšura-p-pū.* 3. சுரபுன்னை. soorapoon.

*[நாக → ஈசர் → நாகேசர்.]*

**நாகேசுரப்பூ** *nāgēšura-p-pū,* பெ. (n.) *சிறுநாகப்பூ;* serpent champak.

மறுவ: நாகாசிப்பூ, நாகப்பூ.

*[நாகம் + ஈசுவரப்பூ.]*

கருநாடகம், மலையாளக் கடற்கரையில் பயிராகும்; இம் மரம் 40 அடி உயரம் வளரும். இதன் பூக்கள் பெரியன; வெண்ணிறமுடையன. மணமிக்கவை; பழமும் நறுமணமிக்கது. இப் பூவின் நறுமணத்திற்காகவும், பழத்தின் சுவைக்காகவும், வீடுகளில் பயிரிடுவர். வெயிலின் வெம்மையைத் தணிப் பதற்காகவும், சந்தனத்துடன் அரைத்து உடம்பில் தடவிக் கொள்வர்.

நாகேசுர வேரினை இஞ்சியில் சேர்த்து, அரைத்துச் சாறு பிழிந்து அருந்தினால், சுரக்காய்ச்சல் குறையும். மிகுவியர்வை ஏற்படும். மந்தமான வயிற்றில் பசியுணர்வு ஏற்படும்.

நாகேசுர வேர், பட்டை, இஞ்சி, பூ போன்றவற்றைக் கடைச்சரக்குகளுடன் சேர்த்துக் கருக்குநீரிட்டுக் (கியாழம்) குடித்தால், செரியாமை அகலும்; மூலநோய் நீங்கும். ஆண்களுக்கு மிகு எழுச்சியான விழியம் (ஒளிநீர்) சுரக்கும்; இவ் வேரினையும், பட்டையையும் சேர்த்துச் சாறு பிழிந்து, கருப்பிணிகளுக்கு உண்டாகும் நீர்க்கட்டுக்கு மருந்தாகக் கொடுப்பர். இச் சாறு அனைத்து நோய்களுக்கும் கைகண்ட மருந்து.

நாகேசுரப்பட்டை, வேர் இரண்டையுஞ் சேர்த்துத் தனிச் சூரணம் செய்து, தேனில் கலந்து கொடுத்தால், வயிற்றுவலி, உடம்புவலி, நீரடைப்பு போகும். இச் சூரணத்தால் பெண்களுக்கு ஏற்படும் அரத்தப்போக்கு தடைப்படும்.

சதாப்பிலை மூலியுடன், இச் சூரணத்தைச் சேர்த்து, அரைத்துக் குடித்தால், முறைச்சுரம் போகும். இத் தனிப்பொடியைப் பாலில் கலந்து, வெண்ணெயில் சேர்த்துக் குடித்தால், பெண்களுக்கு ஏற்படும் எல்லாநோய்களும் அகலும். வெள்ளை படுதல் நீங்கும். சீதளம், அரத்தமூலம், பெரும்பாடு போன்றவை அகலும்.

நாகேசுர இலையைப் பாலில் சேர்த்துக் கொதிக்கவைத்துத் தலையில் கட்டினால், தலைப்பாரம் குறையும். கோழை, இருமல் நீங்கும். நாகேசுரக்காய்ப்பிஞ்சிலிருந்து எண்ணெய் எடுத்து, உடம்பில் தடவினால் கைகால் குடைச்சல் அகலும். மூட்டுக்களி லுண்டாகும் வலி, அறவே ஒழியும். ஊதைநோய் போகும்.

நாகேசுரப்பட்டை, வேர் இரண்டையும் கருக்குநீரிட்டுக் குடித்தால், ஆண்களுக்கும், பெண்களுக்கும் மலட்டுத்தன்மை அகலும். ஆற்றல் மிகும் என்று, சா.அக. கூறும்.

**நாகேசுரம்²** *nāgēšuram,* பெ. (n.) *நாகேசுரப்பூ* பார்க்க; see *nāgēšura-p-pū.*

**நாகேசுரம்³** *nāgēšuram,* பெ. (n.) நாகப்பொடி அல்ல நாகத்தூள் (பற்பம்); a calined powder.

*[நாகம் + ஈசுவரம்.]*

நாகப்பொடி (பற்பம்) இளங்கம், மனோசிலை, கந்தகம் முதலானவற்றுடன், கடைச் சரக்கினையும், நாகேசுரப் பழச்சாற்றையும் சேர்த்து, ஆயுர்வேத முறைப்படி புடமிட்டு எடுக்கப்படும் பற்பம், இப்(பற்பத்து) பொடியுடன் தேன்கலந்து, ஒருமண்டலம் உண்டு வந்தால், ஆண்களும், பெண்களும் ஆற்றல் அதிகரித்து, மகப்பேறு காண்குவர்

**நாகேசுவரச்சாறு** *nāgēšuvara-c-cāṟu,* பெ. (n.) நாகேசுவரத் துகள், இதளியம், சேர்த்துத் தூய்மையாக்கிய ஆயுர்வேத மருந்து; an Ayurvedic preparation given for curing consumption. anaemia, piles, diarrhoea fever etc. It is prepared according to the text by grinding and calcining the calcned powders of mercury zine, copper, and conch with the juice of the leaves madar.

*[நாகம் + ஈசுவரம் + சாறு.]*

தூய்மைப்படுத்திய நாகேசுரத்துகள் (பற்பம்) இதளியம் ஆகியவற்றைச் சேர்த்துப் புடமிட்டு, பொடி செய்த (ஆயுள் வேத வாணாள் மறை மருந்து.

இப் புடமிட்ட மருந்தினைச் செய்வதற்கு நாகேசுரப்பொடி, இதளியம், சங்குப்பொடி, எருக்கஞ்சாறு போன்றவற்றை, ஆயுர்வேத முறையில் கலந்து, புடமிட்டுப் பொடி செய்வர்.

நாள்பட்ட கொக்கிருமல், அரத்தசோகை, மூலம், கடுங் காய்ச்சல், நச்சுக்காய்ச்சல், குடற்புண்காய்ச்சல், தொழுநோய் போன்ற நோய்களுக்கு, நாகேசுவரச்சாற்றில் செய்த இம் மருந்து, கைகண்ட பயன்தரும் என்று, சா.அக. கூறும்.

**நாகேசுவரன்** *nāgēšuvaraṉ,* பெ. (n.) சிவபிரான்; šivaṉ, as the lord of wearing serpents.

**நாகேந்திரன்** *nāgēndiraṉ,* பெ. (n.) அரவரசன் (ஆதிசேடன்); Adišēḍaṉ, as lord of serpents.

**நாகை¹** *nāgai,* பெ. (n.) நாவல் (இ.வ.); jamun plum.

*[நாவல் → நாகல் > நாகை.]*

**நாகை²** *nāgai,* பெ. (n.) *நாகப்பட்டினம்* பார்க்க; see *Nāga-p-aṭṭiṉam.* "*குலோத்துங்க ணாகை*" (குலோத். கோ,173).

*[நாகப்பட்டினம் → நாகை.]*

ஒ.நோ. தஞ்சாவூர்→தஞ்சை

**நாகை[3]** *nāgai,* பெ. (n.) பாம்பு; snake. "*நாகைதே டெண்ணமாங்கில்லையோ*" (சரபேந்திரபூபால குறவஞ்சி,71,5.).

*[நாகம் → நாகை.]*

**நாகை[4]** *nāgai,* பெ. (n.) 1. வெற்றிலைச் செடி (சா.அக.); betel vine. 2. வெள்ளை நாகை; Annogeissus latifolia.

*[நாகு → நாகை.]*

**நாகைக்காரோணம்** *nāgai-k-kārōṇam,* பெ. (n.) நாகப்பட்டினத்துள்ள சிவன்கோயில்; šivan shrine in Nāga-p-attinam.

*[நாகை + காரோணம்.]*

**நாகோதரக்கருப்பம்** *nāgōdara-k-karuppam,* பெ. (n.) முறையற்ற உறவின் மூலமாகவோ, அல்லது ஆண், பெண், இருபிரிவினருக்கும் ஏற்படும் வளித்தொல்லையின் விளைவாகவோ, உண்டாகும் கருப்பம்; false or ampullar pregnancy.

*[நாக +* skt. *உதரம் + கருப்பம்.]*

பெண்களுக்கு ஏற்படும் வளித் தொல்லையால், இக் கரு வளர்ச்சி தடைப்படும். இக் குறைபாட்டினால், கருவுற்ற பெண்ணுக்கு, மிகுதியான அரத்தப்போக்கு ஏற்பட்டு, கருச்சிதைவு உண்டாகும்.

**நாகோதரம்** *nāgōdaram,* பெ. (n.) கருப்பையில் உண்டாகும் கருவின் கேடு; a diseases affecting the foetus in the womb.

*[நாகம் + உதரம்.]*

**நாங்கணைச்சான்** *nāṅgaṇaiccāṉ,* பெ. (n.) நாகணவாய்ப்புள் (கன்னியா.சிந்து.); bush myna.

**நாங்கர்** *nāṅgar,* பெ.(n.) வேளாண்மை; (C.G.) cultivation, agriculture.

**நாங்கல்** *nāṅgal,* பெ. (n.) நாகரகசம்பங்கி மரவகை; mesua genus.

நாங்கல் மரம், நாகசம்பங்கி என்று அழைக்கப்படுகிறது. இம் மரத்துள் இருவகையுண்டு:– 1. மண்ணை நாங்கல். 2. நீர் நாங்கல்.

**நாங்கள்** *nāṅgaḷ,* ப. (pr.n) பெ. (n.) தன்மைப் பன்மைப் பகரப்பெயர்; first person plural pronoun.

*[நாம் + கள் → நாங்கள்.]*

*இச்சொல், பேசுபவர், முன்னிருப்பவரை, உட்படுத்தாத தன்மைப்பன்மைச் சொல்லாக வழக்கிலுள்ளது. யாழ்ப்பாணத்தில், முன்னிருப்பவரையும், உள்ளடக்கிய தன்மைப்பன்மைச் சொல்லாக வழங்கி வருவதறிக.*

**நாங்கில்மரம்** *nāṅgil-maram,* பெ. (n.) 1. மரவகையு ளொன்று; a kind of tree. 2. நாங்கு பார்க்க; see nāṅgu.

நாங்கில் மரவகை;

1. சிறுநாங்கில்.

2. பெருநாங்கில்.

**நாங்கு[1]–தல்** *nāṅgu-,* 5.செ.கு.வி.(V.I.) மனவுறுதி தளர்தல்; to shrink in spirit, become nerveless. "*தாங்கி நாங்கிப் போக*" (யாழ்ப்).

*[நால்கு → நாங்கு–.]*

**நாங்கு[2]** *nāṅgu-,* பெ. (n.) தவசமாகச் செலுத்தும் வட்டி(C.G.); interest on debt, paid in grain.

**நாங்கு[3]** *nāṅgu,* பெ.(n.) மரவகை; musua. (சா.அக.).

**நாங்குமரவகை** *nāṅgu-maravagai,* பெ. (n.) 1. கருநாங்கு; long pointed broad leaved ceylon iron wood. 2. தாடி நாங்கு; mesua ferrea. 3. மலை நாங்கு; large flowered ceylon iron-wood. 4. நீர்நாங்கு; same as no 3. 5. மண்ணை நாங்கு; narrow leaved ceylon iron-wood.

**நாங்குழு** *nāṅguḻu,* பெ. (n.) *நாங்கூழ்* பார்க்க; see *nāṅgūḻ.* "*நாங்குழுவை வள்ளுகிரா லெற்றாமல்*" (பணவிடு.205.).

**நாங்கூழ்[1]** *nāṅgūḻ,* பெ. (n.) பெருங்குடலில் தொங்கும் நாகப்புழு போன்ற (சவ்வு) வளர்ச்சி; vermiform appendix.

**நாங்கூழ்[2]** *nāṅgūḻ,* பெ. (n.) நாக்குப்பூச்சி; earth worm. "*எறும்பிடை நாங்கூழெனப் புலனா லரிப்புண்டு*" (திருவாச.6:25.).

*[நாங்குள்→நாங்கூழ்.]*

**நாச்சி** *nācci,* பெ. (n.) தலைவி (நாமதீப.183); lady, mistress.

*[நாயகன்→நாயகச்சி + நாச்சி.]*

**நாச்சிமார்** *nāccimār,* பெ. (n.) 1. திருமாலின் தேவிமார்; two consorts of Vishṇu. 2. தெய்வ ஆற்றலுள்ள ஏழு அன்னைமார் (சப்தமாதர்) (வின்); the sevan divine mothers.

*[நாயகச்சி→நாய்ச்சி + மார்*

*ஒருகா. நாய்ச்சி→நாய்ச்சிமார்.]*

ஒ.நோ. பிள்ளை→பிள்ளைமார்.

**நாச்சியார்** *nācciyār,* பெ. (n.) 1. அரசி அல்லது தலைவி; lady, queen, mistress. அரசி அருள் "*இராணி மங்களேசுவரி நாச்சியார்.*" 2. பெண்தெய்வம்; Goddess. நாச்சியாரைக் கும்பிட்டபின்புதான் நல்லபேச்சுபேசவேண்டும் (இ.வ.). "*நாச்சியார்க்கு வைத்த சந்தி விளக்கொன்றும்.*" (S.I.I.iii,123). 3.ஆண்டாள்; the Vaiṣṇava female šaint of šrivilliputtūr. "*நாச்சியார் திருமொழி*" (திவ்.). நாச்சியார் ஆண்டாள், தெய்வத்தமிழ்மொழியால் நம்மையெல்லாம் ஆண்டாள் (உ.வ.).

தெ. நாஞ்சாரு.

*[நாய்ச்சிமார் → நாச்சியார்.]*

**நாச்சு** *nāccu,* பெ. (n.) நாட்டியம்; dance.

**நாச்செறு** *nā-c-ceṟu,* பெ. (n.) வசை; abuse, blame. "*நாச்செறு பராவு கொள்ளார்*". (சீவக.2825).

*[நா + செறு.]*

**நாசகரம்** *nāšagāram,* பெ. (n.) பேரழிவு; great destruction. நாசகார அணுகுண்டுகள் உலகை அழிக்குந் தன்மையான (இக்.வ.).

**நாசகாரி**[1] *nāša-kāri,* பெ. (n.) கேடுவிளைவிப்பவ–ன்–ள் (யாழ்.அக.); a person who causes ruin.

*[நாசம் + காரி.]*

*[நை → நசி → நாசம்.]*

*நாசம் = அழிவு, கேடு.*

**நாசகாரி**[2] *nāša-kāri,* பெ. (n.) 1. நோய்களை அழிக்கும் மருந்து (சா.அக.); an infalliable remedy. 2. வளித் (வாயு.) தனிமம்; nitrogen.

*[நாசம் + காரி.]*

**நாசகாலம்** *nāša-kālam,* பெ. (n.) அழிவுகாலம்; bad times. "*நாசகாலம் வரும்பொழு தாண்மையு ஞானமுங் கெடுமோ*" (பாரத.கீசக.14).

*[நாசம் + காலம்.]*

**நாசகாலன்**[1] *nāša-kālan,* பெ. (n.) கொடியோன்(வின்.); atrociously wicked person, as yaman.

*[நாசம் + காலன்.]*

**நாசகாலன்**[2] *nāša-kālan,* பெ. (n.) பொருளை யழிப்பவன்(இ.வ.); extravagant fellow, spendthrift, prodigal.

*[நாசம் + காலன்]*

நாசம் = அழிவு

**நாசநட்சத்திரம்** *nāša-naṭcattiram,* பெ. (n.) "*வெள்ளிநின்ற நாளுக்குப் பத்தாம் நாள்*" (விதான.குணாகுண.41,உரை.); the 10th nakṣatram counted from the asterism occupied by venus.

*[நாசம் + skt.நட்சத்திரம்.]*

**நாசநன்** *nāšnan,* பெ. (n.) 1. அழிவு செய்கிறவன்; destroyer. 2. *நாசகாரி* பார்க்க; *see nāša-kāri.* "*திமிரநாசநன் செய்ய மேனியன்.*" (பாரத.சூது.141.).

*[நாசம் + நன்.]*

ஒ.நோ. இயக்குநர், ஓட்டுநர், நடத்துநர்.

**நாசப்பழக்கம்** *nāša-p-paḻakkam,* பெ. (n.) கெட்டப்பழக்கம்; pernicious habits.

**நாசம்** *nāšam,* பெ. (n.) 1. அழிவு; destruction, ruin, dissolution, annihilation, loss, damage, waste. "*நாசமான பாசம்விட்டு*" (திவ்.பெரி யதி.1,3:8) "*நம்புண்ணியபூமி யாவையு நாசமாம்*" (சிவரக.நந்திகேசுரநம.7). 2. இறப்பு; death. "*சுமாலிகேசி தேனுகன் நாசமுற்று வீழ.*"(திவ்.திருச்சந்.107). 3. *நாசநட்சத்திரம் (விதான.குணாகுண.41)* பார்க்க; see *nāša-naṭcattiram.*

த நாசம் → skt. nāša.

*[நை → நசி.]*

*[நசி→நாசம்.]*

நசிவு = அழிவு, கேடு.

ஒருகா நசி → நசம் → நாசம்

நாசம் என்னும் சொல், "நசி" எனும் நெகிழ்ச்சிக்கருத்து வேரிலிருந்து தோன்றிய சொல். வடமொழியில் உள்ள, 'நச்' என்னும் வேரடிக்கு சரியான பொருள் கூறப்படவில்லை.

நுல்[4] என்னும் வேரடி, நெகிழ்ச்சிக் கருத்தினின்று தோன்றிய அழிதற்கருத்தினைக் குறிக்கும் வேரடி என்று தேவநேயர் வகுத்துள்ளார். நெகிழ்ந்தபொருள்

நைய்யுந்தன்மைத்து. நைந்தபொருள் அழியும். 'நசி' என்னும் வேரடியே, நாசம் என்னும் சொல்லிற்கு மூலமாகும்.

நொள் → நொய் → நய் → நை.

"*அகரத்திம்பர் யகரப் புள்ளியும் ஐஎன் நெடுஞ்சினை மெய்பெறத் தோன்றும்*" (தொல்.56.). நைதல் = நசுங்குதல், கெடுதல்.

நசிதல் = அழிதல். நை → நசி. நசி → நசிவு = அழிவு, கேடு நசி → நசம் → நாசம்.

நாசம் என்னும் சொல்லின் வேரடி, 'நசி' என்னும் வினையடியாகும்.

இலக்கியவழக்கு, மக்கள்வழக்கு என்னும் இருவழக்குகளிலும், அழிதல், முற்றுமழிதல், பெருங்கேடு அடைதல் என்னும் பொருண்மையில், 'நாசம்' என்னும் சொல், வழக்கூன்றியுள்ளது. குடித்துக்குடித்து அவர் நாசமாய்ப் போகிறார். (உ.வ.). பிறர்பொருளை எடுத்துக்கொண்டவர் நாசமாய்ப் போவது உறுதி (உ.வ.). நாசமாய் போவதற்கு நல்லநாள் பார்க்கணுமா (பழ.).

நாசம் என்னும் சொல், அழிவு, இறப்பு என்னும் பொருளில் நாலாயிரத் தெய்வபனுவலில், ஆளப்பட்டுள்ளது.

1. "நாசமான பாசம்விட்டு".

2. "சுமாலிதேனுகன் நாசமுற்று விழ" (திவ்.திருச்சசந்.107.).

"நசி" என்னும் நெகிழ்ச்சிக்கருத்து வேரினின்றே, 'நாசம்' என்னும் சொல் கிளைத்தது. மக்கள் வழக்கும் இக் கருத்திற்கு அரணமைக்கின்றன, என்பதில் யாதொரு ஐயமில்லை.

இன்றும் மக்களிடையே "நாசமாய்போ" நம்பியவரைக்கெடுத்தவன் நாசமாய் போவான் போன்ற வழக்குகள், சிற்றூர் முதல் நகரம் வரை வேரூன்றியுள்ளன.

**நாசம்வருவான்** *nāšam-varuvāṉ*, பெ. (n.) *நாசமற்றுப் போவான் (வின்.)* பார்க்க; see *nāšam-aṟṟu-p-pōvāṉ.*

*[நாசம் + உறுவான்→ வருவான்.]*

**நாசமற்றுப்போவான்** *nāšam-aṟṟu-p-pōvāṉ*, பெ. (n.) ஒரு வசைச்சொல் (இ.வ.); accursed person, used in imprecation.

*[நாசம் + உற்று→ அற்று + போவான்.]*

'உற்று' என்பது, மக்கள் வழக்குத் திரிபாக 'அற்று' என ஒலித்தது. குடும்பம் முழுதுமழிந்து பிறங்கடையற்றுப் போவான் என்பது இவ் வசைவழக்கின் பொருளாகும்.

**நாசமறுவான்** *nāšam-aṟuvāṉ*, பெ. (n.) *நாசமற்றுப்போவான் (வின்.)* பார்க்க; see *nāšam-aṟṟu-p-pōvāṉ.*

*[நாசம் + உறுவான்→ அறுவான்.]*

**நாசமாய்ப்போ-தல்** *nāšamāy-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.) வாழ்க்கையில் உருப்படாமல் அழிந்துபோதல்; to go to rack and ruin. குடித்துக்குடித்து நாசமாய்ப்போய்விட்டான் (இ.வ.). நல்லவர்கள் நாசமாய்ப்போ என்று பிறரை ஏசமாட்டார்கள் (உ.வ.). நீ நாசமாய்போ!

*[நை → நசி → நசம் → நாசம் + நாசமாய் + போ-.]*

**நாசமோசம்** *nāša-mōšam*, பெ. (n.) கேடு, அழிவு (வின்.) ; peril, jeopardy, danger of life.

*[நாசம் + மோசம்.]*

**நாசயோகம்** *nāša-yōgam,* பெ. (n.) கேடு விளைக்கும் வார விண்மீன்களின் சேர்க்கை (பெரியவரு.); inauspicious conjunction of nakšatram and vāram.

*[நாசம் +* skt. *யோகம்.]*

**நாசவக்கணை** *nāšavakkaṇai,* பெ. (n.) காகதும்புரு (சா.அக.); kanjilals mottled ebony.

**நாசவாயு** *nāša-vāyu,* பெ. (n.) வளித்தனிமம்; nitrogen.

*[நாசம் +* Skt. *வாயு.]*

**நாசவேலை** *nāša-vēlai,* பெ. (n.) யாரும் அறியாது, மந்தணமாகச் செய்யும், தீய நோக்கமுடைய செயல்; sabotage. "தொடர்வண்டியின் பேரழிவிற்குக் காரணம், நாசவேலைதான் என்று கூறப்படுகிறது. (இ.வ.); அமைதி (சமாதான) ஒப்பந்தத்தைக் கெடுப்பதற்கென்றே இந்த நாசவேலைகள் நடைபெற்றுள்ளன.

மறுவ. அழிவுப்பணி.

*[நாசம் + வேலை.]*

**நாசன்** *nāšaṉ,* பெ. (n.) 1. அழிப்பவன்; destroyer. "*என்பிறவி நாசனே*" (திருவாச.5:51); 2. எமன் (பிங்.); yamaṉ, as God of death.

மறுவ. கூற்றுவன்.

*[நாசம்→நாசன்.]*

**நாசனம்** *nāšaṉam,* பெ. (n.) *நாசம்* பார்க்க; see *nāšam.*

*[நாசம்→நாசன் + அம்.]*

**நாசனன்** *nāšaṉaṉ,* பெ. (n.) அழிவு செய்பவன்; கேடு விளைவிப்பவன்; destroyer. "*திமிரநாசனன்*" (பாரத.சூது.141).

*[நாசன் → நாசனன்.]*

**நாசனி** *nāšaṉi,* பெ. (n.) அழிவு செய்பவன்; destroyer. "*கன்மநாசனி*" (நாமதீப.).

*[நசி → நசம் → நாசம் → நாசம் → நாசன் + இ.]*

''நசி'' என்னும் அழிவுக்கருத்து வேரினின்று கிளைத்த சொல்

**நாசி—த்தல்** *nāši-,* 4செ.கு.வி (v.i.) 1. அழிதல்; to perish, to be destroyed, 2. ஒடுங்குதல்; to be reduced to primitive elements,

*[நசி → நசம் → நாசம்*
*ஒருகா நசித்தல் → நாசித்தல்.]*

**நாசித்தலை** *nāši-t-talai,* பெ. (n.) கோவில் திருமதில் கோபுரங்களில் அமைந்த யாளியின் தலை (யாழ்.அக.); figured head of the yāḷi on the walls of a temple.

*[நாசி + தலை.]*

**நாசுகம்** *nāšugam,* பெ. (n.) பீர்க்கு; gourd plant.

**நாசுவன்காறல்** *nāšuvaṉ-kāṟal,* பெ. (n.) வெண்மைகலந்த நீலநிறமுள்ள கடல்மீன்; a sea-fish, bluish-silvery.

**நாசோற்பத்தி** *nāšōṟpatti,* பெ. (n.) உலகம் மாறிமாறி அழிந்து தோன்றுகை(வின்.); periodical dissolution and appearance of the worlds.

*[நாசம் + உற்பத்தி.]*

**நாஞ்சில்**[1] *nāñjil,* பெ. (n.) 1. கலப்பை; plough. "*நாஞ்சி லொப்ப*" (புறநா.19.). 2. மதிலுறுப்பு; a component part of a fortification. "*தசும்புடைக் கனகநாஞ்சில்*" (கம்பரா. கடறாவு.90). 3. வள்ளுவன் என்ற தலைவற்கு உரியதாயிருந்த ஒருமலை; a mountain belonging to the chief, Vaḷḷuvaṉ."*நாஞ்சிற் பொருந*" (புறநா.137). 4. கலப்பை வடிவு போன்ற மூக்கு; a nose like a plough.

*[நாங்சு→நாஞ்சில் .]*

**நாஞ்சில்**[2] *nāñjil,* பெ.(n.) ஒரு ஊர்; a village.

**நாஞ்சில்வள்ளுவன்** *nāñjil-vaḷḷuvaṉ,* பெ. (n.) *நாஞ்சில் மலைக்குரியனான தலைவன்* (புறநா.137); an ancient chief of Nāñjil.

*[நாஞ்சில் + வள்ளுவன்.]*

**நாஞ்சிலான்** *nāñjilāṉ,* பெ. (n.) கலப்பைப்படையுடையோன் maṉ, as having a plough for his weapon. "*நாஞ்சிலான் றார்போல்*" (கலித்.36.).

*[நாஞ்சில் → நாஞ்சிலான்.]*

**நாஞ்சிலேறு—தல்** *nāñjil-ēṟu-,* 5செ.குன்றாவி. (v.t.) மூக்கில் புரையேறுதல்; to be suffocated by food passing into the wind-pipe. உணவு உண்ணும்போது நாஞ்சிலேறாமல் மெதுவாகத் தண்ணீர் குடிக்கவேண்டும். உணவு நாஞ்சிலேறினால், உயிருக்கு ஆபத்து ஏற்படும் (இ.வ.). (தஞ்சை.).

மறுவ. புரையேறுதல்.

*[நாஞ்சில் + ஏறு—.]*

**நாஞ்சிற்படையோன்** *nāñjiṟ-p-paḍaiyōṉ,* பெ.(n.) நாஞ்சிலான் பார்க்க; see nāñjilāṉ.

*[நாஞ்சில் + படையோன்.]*

**நாஞ்சினாடு** *nāñjiṉāḍu,* பெ.(n.) தென் திருவாங்கூர்ப்பகுதியான ஒரு நாடு; a portion of south Tiruvāṅgūr. "*நாஞ்சினாடுடையான்*" (S.I.I.ii,161).

*[நாஞ்சில் + நாடு.]*

**நாட்கடத்து—தல்** *nāṭ-kaḍattu-,* 5. செ.கு.வி. (V.I.) 1. நாள்கழித்தல் (யாழ்.அக.); to pass away time. 2. நாள் ஒற்றி வைத்தல் (இ.வ.); to put off from day to day.

*[நாள் + கடத்து —.]*

**நாட்கடன்** *nāṭ-kaḍaṉ,* பெ.(n.) காலைக்கடமை; daily observances, morning duties."*நாட்கடன் கழிந்தபின்*" (சீவக.1944).

*[நாள் + கடன்.]*

**நாட்கணக்கன்** *nāṭ-kaṇakkaṉ,* பெ.(n.) (வாழ் நாளுக்குக் கணக்கு வைத்திருப்போன்) எமன் (இ.வ.); yamaṉ, as keeping account of one's days.

*[நாள் + கணக்கன்.]*

**நாட்கணக்கு** *nāṭ-kaṇakku,* பெ. (n.) 1. அன்றாட வேலை (இ.வ.); daily work. 2. அன்றாடக் கணக்கு(வின்.); daily account. 3. வாழ் நாளின் எல்லை (வின்.); the term of life, one's appointed days.

[*நாள் + கணக்கு.*]

*ஒவ்வொரு நாளும், ஆற்ற வேண்டிய பணியினைப் பகுத்து, வகுத்துக் கணக்கிட்டுச் செய்கை; அன்றாடு ஆகும் செலவினைக் கணக்கிடுகை; இச்சொல் நீட்சிக்கருத்தின் அடிப்படையில் வாணாளெல்லையைக் குறித்தது.*

**நாட்கதிர்**[1] *nāṭ-kadir,* பெ. (n.) அறுவடைக்கு முன், நன்னாளிற் கொள்ளும், நெற்கதிர் (நெல்லை.); the first sheaves of an harvest gathered on an auspicious day. நாட்கதிரறுத்த நெல்லை நல்லநாளுக்குப் பயன்படுத்த வேண்டும் (இ.வ.).

மறுவ: தலைக்கதிர், முதற்கதிர்.

*[நாள் + கதிர்]*

இறைவனுக்குப் படைக்கு முகத்தான், முதல் விளைச்சலில், தெரிவு செய்து எடுத்த தலைநெற்கதிர்.

**நாட்கதிர்**[2] *nāṭ-kadir,* பெ. (n.) காலையில் தோன்றும் கதிரவனின் ஒளியிழை; the first rays of the rising sun.

*[நாள் + கதிர்.]*

*புலர்காலைப் பொழுதில் தோன்றும் புத் தொளிக்கதிர்*

**நாட்கவி**[1] *nāṭ-kavi,* பெ. (n.) அன்றன்று அரசனைப் புகழ்ந்து கூறும் பாடல்; daily salutaion to the king by the court poet, in verse. "*நாட்கவி பாடு நாட்போல்*", (ஈட்டியெழுபது.2.).

*[நாள் +* Skt. *கவி.]*

**நாட்கவி**[2] *nāṭ-kavi,* பெ. (n.) புலர்பொழுதில், மன்னன் பள்ளியெழுதற்பொருட்டு பாடும் பாணன்; the musical singer who awakens king.

*[நாள் + கவி.* Skt.*]*

*நாள்தோறும் பாடும் அரசனின் பள்ளியெழுச்சிப் புதுப்பாட்டிற்கும், அப் பாட்டினைப் பண்ணோடு இசைக்கும் பாணனுக்கும், பொதுமையாய் வந்தமை காண்க.*

**நாட்கழிவு** *nāṭ-kaḻivu,* பெ. (n.) 1. காலக்கழிவு; passing of time. 2. சம்பளம் போடுகையில் நாளைக் குறைத்துவிடுகை (வின்.); deduction of days while counting for payment of wages. 3. வீணே பயனின்றிப் பொழுது போக்குகை; passing the time uselessly.

*[நாள் → கள் → கழி + வு-"வு" தொ.பெ.ஈறு.]*

*[நாள் + கழிவு.]*

குறிப்பிட்ட நாளில் பெறும் கூலிக்கழிவு. யாதொரு பயனுமின்றிக் கிடைத்தற்கரிய வாணாளைப் பணியின்றிக் கழிக்கை.

**நாட்காட்டி** *nāṭ-kāṭṭi,* பெ. (n.) *நாள்காட்டி* பார்க்க; see *nāḷ-kāṭṭi.*

*[நாள் + காட்டி.]*

**நாட்கால்**[1] *nāṭ-kāl,* பெ. (n.) *நாட்காலம்* பார்க்க; see *nāṭ-kālam.* "*நாட்காலே நீராடி*" (திவ். திருப்பா.2).

*[நாள் + கால்.]*

**நாட்கால்**[2] *nāṭ-kāl.* பெ. (n.) 1. நன்முழுத்தக்கால் (முகூர்த்தக்கால்) (நெல்லை); a post set up with ceremony on an auspicious day to erect a wedding pavilion. 2. *நாட்காலம்* பார்க்க; see *nāṭ-kālam.*

*[நாள் + கால்*[2]*.]*

**நாட்காலம்** *nāṭ-kālam,* பெ. (n.) 1. விடியற் காலம்; early morning. '*நாட்காலத்துச் செய்யுங் கடன்களை*' (சீவக.1944,உரை). 2. ஏற்றபருவம்; appropriate time, fitting season. '*நாட்கால மன்றாயினும்*' (சீவக. 132,உரை.).

**மறுவ.** புலர்காலைப்பொழுது.

*[நாள் + காலம்.]*

**நாட்காலை** *nāṭ-kālai,* பெ. (n.) *நாட்காலம்* பார்க்க; see *nāṭ-kālam.*

*[நாள் + காலை.]*

*"ஐ" சொல்லாக்க ஈறு.*

**நாட்குணம்** *nāṭ-kuṇam,* பெ. (n.) நறுங்குறிஞ்சி; conchead.



**நாட்குறி-த்தல்** *nāṭ-kuṟi-,* 4செ.கு.வி, (v.i.) 1. ஏற்றநாளை யேற்படுத்துதல் (வின்.); to appoint a suitable day. 2. நற்செயல்களுக்கு உரிய நாளைத் தேர்ந்தெடுத்தல்; to select on auspicious day for good events.

*[நாள் + குறி. ]*

**நாட்கூலி** *nāṭ-kūli,* பெ. (n.) 1. அற்றைக்கூலி; daily wage. 2. புதிதாக வரையறுத்த கூலி; latest fixed wages.

*[நாள் + கூலி.]*

**நாட்கூறு** *nāṭ-kūṟu,* பெ. (n.) 1. முற்பகல்; fore noon. (சா.அக.) "*தொண்டர் நாட்கூறு திருவமுது செய்யக்கண்டு*" (பெரியு.திருஞான. 567). 2. பிற்பகல்; after-noon.

*[நாள் + கூறு.]*

**நாட்கொடி¹** *nāṭ-kodi,* பெ. (n.) 1. திருவிழா மற்றும் சிறப்பு நாளை யறிவித்தற்குக் கட்டுங் கொடி; flag hoisted on an auspicious day. "*இஞ்சி நாட்கொடி நுடங்கும்*" (புறநா.341,5). 2.அரசன் நாடோறுஞ் செய்த வெற்றிக்கு அறிகுறியாகக் கட்டிய கொடி; flag hoisted to celebrate the victory of a king. "*நாட்கொடி நுடங்கும் வாயில்*" (சிலப்.15:21).

*[நாள் + கொடி.]*

*நாள் = புதுமை, சிறப்பு*

**நாட்கொடி²** *nāṭ-kodi,* பெ. (n.) புதிதாகத் தோன்றுங் நிலைத்திணையியற் கொடி; the new creeper.

*[நாள் + கொடி நாள்= புதுமை.]*

**நாட்கொல்லி¹** *nāṭ-kolli,* பெ. (n.) (வாணாளைப் போக்குபவன்) கூற்றுவன்; yamaṉ, as ending one's days. "*நாட்கொல்லி யென்றா னடுங்கு கின்றாய்*" (அருட்பா.நெஞ்சறி.412).

*[நாள் + கொல்லி.]*

**நாட்கொல்லி²** *nāṭ-kolli,* பெ. (n.) பயனிலசொல்லிப் பிறர்நேரத்தை வீணாக்கு பவன் – ன்; useless-person talking useless word wasting other's time.

*[நாள் + கொல்லி.]*

**நாட்கொள்(ளு)—தல்** *nāṭ-koḷ(ḷu)-,* 13.செ.கு.வி, (v.i.) 1. நன்னாளில் தொழில் தொடங்குதல்; to enter on a work or business on an auspicious day. "*பின்பு செய்யும் மொய்யமருக்கு முதலே நாட்கொண்டு*". (சீவக.418.உரை). 2. அரச சின்னங்களைப் பரத்தானம் அல்லது புறவீடு விடுதல்; to send forward the royal equipage on an auspicious day preparatory to a king's journey. "*மன்னவன் குடைநாட் கொண்டன்று*" (பு.வெ.3,3).

*[நாள் + கொள்ளு—.]*

**நாட்கோள்** *nāṭ-kōḷ,* பெ. (n.) அரச சின்னங் களைப் புறவீடு விடுகை; sending the royal equipage forward on an auspicious day preparatory to a king's journey. '*புறத்தோன் குடைநாட் கோள்*' (தொல்.பொருள்.68,உரை.).

*[நாள் + கோள்.]*

**நாட்சரக்கு** *nāṭ-carakku,* பெ. (n.) 1. மகளிரின் பேறுகாலத்தைக் கணக்கிட்டு முன்கூட்டியே நல்ல நாளில் வாங்கும் மருந்துகள்; drugs bought on an auspicious day before child birth for use as medicine for a woman in confinement. 2. நாள்தோறும் வீட்டிற்குத் தேவைப்படும் பலசரக்கு; groceries for daily use.

*[நாள் + சரக்கு.]*

**நாட்செய்[1]—தல்** *nāṭ-cey-,* செ.குன்றாவி, (v.t.) நல்ல வேளையில் பணியினைத் தொடங்குதல்; to enter on a work or business on an auspicious day. "*மொய்யமர் நாட்செய்து*" (சீவக.448).

*[நாள் + செய்—.]*

**நாட்செய்[2]—தல்** *nāṭ-cey-,* 1, செ.குன்றாவி, (v.t.) விளையாட்டு நிகழ்வில் ஒளிமிக்க விளக்குகளையிட்டு இருளகற்றுதல்; to use flood lights during matches held in the night (day-night matches).

**நாட்செல்(லு)—தல்** *nāṭ-cel(lu)-,* 13,செ.கு.வி, (v.i.) 1. நெடுங்காலம் நிற்றல் ; to be long standing, as a chronic disease. 2. அகவை முதிர்தல்; to become old, advanced in years.

*[நாள் + செல்லு—.]*

**நாட்செலவு** *nāṭ-celavu,* பெ. (n.) 1. நாள் கழிகை; passage of time. 2.அன்றாடஞ் செலவாகும் பணச்செலவு; daily expenses 3. நாட்செலவிற்காக நாள்தோறும் மகனுக்கோ மகளுக்கோ கொடுக்கும் சிறுசெலவிற்கான காசு; pocket money

**மறுவ.** கைச்செலவு.

*[நாள் + செலவு.]*

வாழ்நாளில் ஒவ்வொரு நாளும், கழிதலும் நாட்செலவே யாகும். சிறுசிறு செலவிற்கும், இன்றியமையாத தேவைகட்கும் புதல்வர்க்குத்தரும் கைப்பணமும் காலப் போக்கில் நாட்செலவு, என்று பெயர் பெற்றது.

**நாட்சென்றவியாதி[1]** *nāṭ-ceṉṟa-viyādi,* பெ. (n.) நெடுநாட்பட்ட நோய்; chronic disease

**மறுவ.** நாட்பட்ட நோய்.

*[நாள் + சென்ற + skt. வியாதி.]*

நீண்டநாள் ஆகியும் நீங்காத நோய்; வாழ்நாள் முழுமையும், மருந்துகள் உட்கொண்டும் தீராத நோய்.

**நாட்சென்றவியாதி²** *nāṭ-ceṉṟa-viyādi,* பெ. (n.) கால்வழி (பரம்பரை) நோய்; hereditary disease

*[நாள் + சென்ற + skt. வியாதி.]*

**நாட்சோறு** *nāṭ-cōṟu,* பெ. (n.) காலைஉணவு; morning meal.

**நாட்டக்றோட்டு** *nāṭṭakṟōṭṭu,* பெ. (n.) நாட்டு அக்ரோட்டு பார்க்க; see nāṭṭu-akrōṭṭu.

*[நாடு + அக்றோட்டு.]*

இந்தக் கொட்டையிலிருந்து, ஆற்றலைத் தரும் எண்ணெய் எடுப்பர். இந்த எண்ணெய் மலமிளக்கியாகப் பயன்படும். இதன் பிண்ணாக்கு வயலுக்கு உரமாகப்பயன்படும்.

**நாட்டகத்தி** *nāṭṭagatti,* பெ. (n.) அகத்திவகை; west indian sesbane.

**நாட்டங்கால்** *nāṭṭaṅgāl,* பெ. (n.) நாட்கால்¹ பார்க்க; see nāt-kāl¹.

**நாட்டம்¹** *nāṭṭam,* பெ. (n.) **1.** கண்; eye. *"வயவர் தோளு நாட்டமு மிடந்துடிக்கின்றன"* (கம்பரா.கரன்வதை.71). **2.** பார்வை; sight. **3.** ஆராய்ச்சி; examination, investigation. *"நன்மதி நாட்டத் தென்மனார்"* (தொல்.எழுத்.483). **4.** கணியநூல்; astrology. *"சொற்பெயர் நாட்டங்கேள்வி நெஞ்ச மென்று"* (பதிற்றுப்.21,1). **5.** செவ்வழி யாழ்த்திற வகையு ளொன்று (பிங்.); a secondary melody- type of the mullai class. **6.** அழகு; beauty. *"இராசபுரமென்னு நாட்டமுடை நகரம்"* (சீவக.1785). **7.** விருப்பம்; desire. *'அரசனுக்கு அன்னத்தில் நாட்டமில்லை'* (வின்.). *'அவனுக்கு படிப்பில் நாட்டமில்லை'* (இக்.வ.). **8.** நோக்கம்; intention, pursuit, aim, quest. *"வேறொரு நாட்ட மின்றி"*. (தாயு.பாயப்புலி.12). **9.** சிறப்புநோக்கு; special sight. *"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக் கூட்டியுரைக்கும் குறிப்புரை யாகும்"* (தொல்.களவு.5). **10.** ஐயம் (வின்); suspicion *"அவன்பேரில் நாட்டமாயிருக்கிறது'* (வின்.). **11.** அசைவு, இயக்கம்; movement *"பெண்ணாட்ட மொட்டேன்"* (கம்பரா. நகர்நீ,122).

ம. நாட்டம்.

*[நாடு →நாட்டம்.]*

**நாட்டம்²** *nāṭṭam,* பெ. (n.) மாவட்டத் தலைமை; (R.T.) chiefship of a district

**நாட்டம்³** *nāṭṭam,* பெ. (n.) **1.** நிலைநிறுத்துகை; establishment. 'மறைமலையடிகள் தொடங்கிய தனித்தமிழ்க் கொள்கையை, மொழி ஞாயிறு தமது சொல்லாய்வின் மூலம், தமிழர்தம் மனதில் நிலைநாட்டம் செய்தார்'. (இக்.வ.) *"உரைத்திறநாட்டம்"* (தொல். பொருள்.41.). **2.** வாள் (பிங்.); sword.

*[நடு → நாடு →நாட்டம்.]* =நாட்டம் – கொள்கையை நிலைநாட்டுகை.



**நாட்டம்கார்** *nāṭṭam-kār,* பெ. (n.) ஒரு நிலத்தை வேளாண்மை செய்தற்குரிய நிலையான உரிமையுடையோன்;(R.T.). those having a perferential right of cultivating land in certain places.

**மறுவ.** நிலவுடமைக்காரன்.

*[நாட்டம் + காரர் → கார்]*

**நாட்டம்பலம்** *nāṭṭam-balam,* பெ. (n.) 1. ஊரவை; village council. 2. நாட்டுத்தலைவன்; headman of a village.

*[நாட்டு →நாடு+ அம்பலம்.]*

*ஊரவையைக் கூட்டுந்தலைவனுக்கும், ஊரார் கூடும் மன்றத்திற்கும், அம்பலம் பொதுவாகி நின்றது. சிற்றூரை ஆளுந்தகுதி பெற்றவன்.]*

**நாட்டம்பாட்டம்**[1] *nāṭṭam-pāṭṭam,* பெ. (n.) செங்கல்லைக் குறுக்கும் நெடுக்குமாக வைத்துக் கட்டுகை (இ.வ.); english bond in which bricks are placed in alternate courses of headers and stretchers.

*[நாட்டம் + பாட்டம்.]*

*நெடு → நடு → நாட்டம் = நெடுக்காக.*

*படு = கிடை; குறுக்காக.*

**நாட்டம்பாட்டம்**[2] *nāṭṭam-pāṭṭam,* பெ. (n.) விருப்பத்திற்கேற்ற பாடலைப் பாடுகை; the music played according to listner's Joice.

*[நாடு → நாட்டம் + பாடு → பாட்டம்.]*

*நாட்டத்திற்குத் தகுந்த பாடல்.*

**நாட்டமிலி** *nāṭṭamili,* பெ. (n.) குருடன்; (சா.அக.) blind man

நாட்டம் = பார்வை

*[நாட்டம் + இலி.]*

*(ஒ.நோ.) தேட்டமிலி, வாட்டமிலி.*

**நாட்டமைதி** *nāṭṭa-maidi,* பெ. (n.) 1. நாடு குழப்பமின்றியிருக்கும் நிலை (வின்.); settled state of a country. 2. செல்வம்; விளையுள், பல்வளம், செங்கோல், குறும்பின்மை, பிணியின்மையென நாட்டை வளம் படுத்தும், அறுவகைப் பொருள்கள் (பிங்.); things that promote the tranquillity of a state, six in numbers viz., selvam, viḷaiyuḷ, palvaḷam, seṅkōl, kuṟumbiṉmai, piṇi-y-iṉmai 3. ஊரில் நோயின்மை (சா.அக.); state free from epidemics.

*[நாடு + அமைதி.]*

**நாட்டவத்தனம்** *nāṭṭava-t-taṉam,* பெ. (n.) நாட்டுச்சந்தம் *(யாழ்ப்.)* பார்க்க; see *nāṭṭu-c-candam*

*[நாட்டவன் + தனம்.]*

**நாட்டவரை** *nāṭṭa-varai,* பெ. (n.) அவரைவகை; (சா.அக.); country beans

*[நாடு + அவரை.]*

சீமைஅவரைக்கு மாறுபட்டது (சா.அக.).

**நாட்டவன்** *nāṭṭavaṉ,* பெ. (n.) 1. திணைப் பிறப்புரிமையாளர்; native. 2. நாட்டுப்புறத்தான் (வின்.); rustic.

*[நாடு →நாட்டு + அவன் → நாட்டவன்.]*

**நாட்டா** *nāṭṭā,* பெ. (n.) சிற்றூரில் உள்ள ஆவினத்தைச் சார்ந்தது; country cow.

மறுவ. ஊரா.

*[நாடு + ஆ.]*

காட்டாவிற்கு மாறுபட்டது. மாந்தருடன் எளிதில் பழகும் தன்மைத்து.

**நாட்டாசாரம்** *nāṭṭāšāram,* பெ. (n.) நாட்டுநடப்பு அல்லது வழக்கம்; customs and manners of a country.

மறுவ. உலகநடப்பு.

*[நாடு + skt. ஆசாரம்.]*

**நாட்டாண்மை** *nāṭṭāṇmai,* பெ. (n.) 1. ஊரதிகாரம்; office of village headman, sovereignty, over- lordship of a country. *"நாட்டார்கள் யாவருமந் நாட்டாண்மை வேண்டி"* (அருட்பா. VI, அனுபவ.80). 2. ஆளுமை (நிருவாக) ஆற்றல்; business capacity.

ம, நாட்டாண்ம.

*[நாடு + ஆண்மை → நாட்டாண்மை.]*

*இச் சொல், திரிபுப்புணர்ச்சியில் எழுத்து தோன்றுந் தன்மைக்கு எடுத்துக்காட்டு.*

**நாட்டாண்மைக்காரன்** *nāṭṭāṇmai-k-kāraṉ,* பெ. (n.) 1. நாடு, இனம் முதலியவற்றின் தலைமைக்காரன்; headman of a village, of a tribe, etc., as the leading man in a nāḍu. 2. சில இனத்தவருக்குரிய பரம்பரைத் தலைவன் (இ.வ.); hereditary overlord of a tribe.

*[நாட்டாண்மை + காரன்.]*

'காரன்' உடைமை குறித்து வந்த பெயர்விகுதி.

**நாட்டாண்மைக்காரி** *nāṭṭāṇmai-k-kāri,* பெ. (n.) 1. நாட்டாண்மைக்காரன் மனைவி (வின்.); wife of a village headman. 2. துணிகரமுள்ளவள்; bold, forward woman. 3. பணியினைத் திறம்பட நிருவகிக்கும் பெண்; a woman having a good business capacity.

*[நாட்டாண்மை + காரி.]*

*உடைமை குறித்த பெண்பாலீறு.*

**நாட்டாமணக்கு** *nāṭṭāmaṇakku,* பெ. (n.) ஆமணக்குவகையுளொன்று; (சா.அக.) castor oil plant.

*[நாடு + ஆமணக்கு]*

கட்டாமணக்கிற்கு வேறுபட்டதென்று சா.அக. கூறும்.

**நாட்டாமை¹** *nāṭṭāmai,* பெ. (n.) *நாட்டாண்மை (வின்.)* பார்க்க; see *nāṭṭāṇmai.*

*[நாட்டு + ஆண்மை.]*

*நாட்டாண்மை என்னும் சொல், இக் காலத்தே நாட்டாமை என்று வழக்கிலுள்ளது.*

**நாட்டாமை²** *nāṭṭāmai,* பெ. (n.) குளத்தில் வாழும் ஆமை; trutle living in a pond.

*[நாடு + ஆமை.]*

*இவ்வகை ஆமை கடலாமையினின்று வேறுபட்டது. குளத்து மீன்போலக் குழம்பிற்குச் சுவைமிக்கது.*



**நாட்டார்** *nāṭṭār,* பெ, (n.) 1. தேசத்தார்; people of a country peoples. "*நாட்டார் நகைசெய்ய நாம் மேலை வீடெய்த*" (திருவாச.8,6). 2. நாட்டு மக்கள் (s.I,I,ii,514); assembly of country people. 3. நாட்டாண்மைக்காரர்; chief men. 4. கள்ளர், செம்படவர் முதலிய இனத்தவரின் பட்டப்பெயர்; title of certain castes as kaḷḷar, šembaḍavar. 5. தென்னார்க்காடு மாவட்டத்திலிருந்த ஒரு வேளாண்வகுப்பார(G.S.A.D.I.323); an ancient divison of cultivators in South Arcot district.

ம. நாட்டார்.

*[நாடு → நாட்டான் →நாட்டார்.]*

**நாட்டார்வழக்காற்றியல்** *nāṭṭār-vaḻakkāṟṟiyal,* பெ, (n.) சிற்றூர்ப்புறத்து மக்களின் வழக்காறுகளை ஆராயும்துறை; study of folk-lore;

*[நாடு → நாட்டார் + வழக்காறு + இயல்.]*

*கல்லாதவர் நாவில் வழங்கும் நல்ல தமிழ்ச்சொற்களை ஆராயும் துறை.*

**நாட்டார்வழக்காறு** *nāṭṭār-vaḻakkāṟu,* பெ,(n.) ஊரகத்தார்தம் உள்ளத்தே எழுதப்படாது நிலைநிற்கும் நிகழ்வுகளும், பழக்க வழக்கங்களும்; folklore.

*[நாட்டார் + வழக்காறு.]*

*சிற்றூர்வாழ் மாந்தர்தம் மனத்தகத்தே கருக்கொண்ட தாலாட்டுப்பாடல், விடுகதை, ஒப்பாரி, பழமொழிகள் முதலானவற்றில் வெளிப்படும் வாழ்வியற்கூறு அல்லது வழக்காறு.*

**நாட்டாரஞ்சி** *nāṭṭārañji,* பெ. (n) நாட்டுக்கிச்சிலி (சா.அக.); country orange.

*[நாடு + ஆரஞ்சி.]*

காட்டுக்கிச்சிலிக்கு மாறுபட்டதென்று சா.அக. கூறும்.

**நாட்டாவாரை** *nāṭṭāvārai,* பெ. (n.) 1. ஆவாரை வகை; tanner's senna 2. பேயாவாரை; wild cassia.

**நாட்டாள்** *nāṭṭāḷ,* பெ. (n.) கூலிவேலை செய்வோன்; labourer. '*நாட்டாளுக்கு ஒரு நீட்டாளோ*' (பழ.).

*நாடு = சிற்றூர்ப்புறம்.*

*சிற்றூர்ப்புறத்தே நாள்தோறும் கூலி வேலை செய்து, பிழைப்பவன்.*

**நாட்டான்** *nāṭṭāṉ,* பெ. (n) 1. தேசத்தான்; inhabitant of a country. "*தென்பாண்டி நாட்டானே*" (திருவாச1:90). 2. நாட்டுப்புறத்தான்; countryman, rustic, 3. வேளாண்மையை மேற்பார்க்கும் அலுவலர்; a revenue officer under native administration whose duty it was to superintend cultivation 4. *நாட்டாண்மைக்காரன்* பார்க்க; see *nāṭṭāṇmai-k-kāraṉ*

*[நாடு + அன் → நாடன் → நாட்டான்.]*

**நாட்டிகம்** *nāṭṭigam,* பெ. (n.) வெண்முத்துச் சோளம்; white guinea wheat - zesmays. (சா.அக.)

**நாட்டிஞ்சி** *nāṭṭiñji,* பெ. (n) தடித்த முரட்டிஞ்சி; wildginger.

*[நாடு + இஞ்சி.]*

காட்டுஇஞ்சிக்கு மாறுபட்ட குணத்தினை உடையதென்று சா.அக. கூறும்.

**நாட்டிடர்** *nāṭṭiḍar,* பெ. (n) *நாட்டுக்குற்றம் (பு.வெ.9.17.)* பார்க்க; see *nāṭṭu-k-kuṟṟam.*

*[நாடு + இடர்.]*

**நாட்டியக்காரன்** *nāṭṭiya-k-kāraṉ,* பெ. (n.) 1. கூத்தன்; dancer. 2. ஆரவாரம், வீண் பெருமை; foppish, ostentatious man.

*[நள் → நடி → நடு → நாட்டு + இயம் + காரன்.]*

(ஒ.நோ.) வாச்சியக்காரன். பாட்டியக் காரன்.

உள்ளத்தில் எழும் உணர்வுகளையும், கருத்துக்களையும், உடலுறுப்புகள் வாயிலாக, 108 உடற்கரணங்களை, பிறர் அறியும் வண்ணம் திறம்பட நாட்டிஆடுபவன், நாட்டியக்காரன்.

**நாட்டியக்காரி** *nāṭṭiya-k-kāri,* பெ. (n.) 1. நாட்டியம் ஆடுபவள்; dancing girl. நாட்டியக்காரியின் ஆட்டம் இன்னும் நெஞ்சில் நிற்கிறது. (உ.வ.) 2. வீண் பெருமை பேசுபவள்; foppish, ostentatious woman.

*[நடு → நட்டு → நாட்டு + இயம் + காரி.]*

முற்காலத்தே அகவுணர்வுகளைத் திறல்பட நாட்டி, 108 உடற்கரணங்களை, கை கால், கண்வாய் முதலிய உறுப்புகளின் தொழில்களோடு வெளிப்படுத்தி ஆடுபவள் நாட்டியக்காரி.

நுண்ணுணர்வுகளையும் நன்முறையில், பிறர்அறியும் பாங்கில் பிறர்உள்ளத்தே நிலை நிறுத்திப் பதியுமாறு நாட்டி, நாட்டியம் ஆடுபவள் நாட்டியக்காரி.

**நாட்டியத்தான்** *nāṭṭiyattāṉ,* பெ. (n.) ஆடவல்லான்; lord šivaṉ

*[நாட்டியம் + ஆன்.]*

எல்லோரையும் செயற்படுத்தும் சிவன் நினைப்பவர் மனம் கோயிலாகக் கொண்டு அனைவரையும் ஆட்டுவிக்கும் (செயற்படுத்தும்) செம்மேனிக்கடவுள்.

**நாட்டியத்தான்குடி** *nāṭṭiyattāṉ-kuḍi.* பெ. (n.) தஞ்சை மாவட்டத்திலுள்ள பாடல்பெற்ற ஊர்; a canonized place in Tañjore Dt.

*[நாட்டியத்தான் + குடி.]*

*நாவுக்கரசர், நம்பியாரூரர் இருவராலும் பாடல்பெற்ற ஊர்.*

**நாட்டியநன்னூல்** *nāṭṭiya-naṉṉūl,* பெ. (n.) தமிழ்த்திரவிடவியல் இசைக்களஞ்சியம்; a treatise on dance "*வேத்தியல் பொதுவியல் என்றிருதிறத்தில் நாட்டிய நன்னூல் நன்குகடைப்பிடித்து*" (சிலப்.39:48).

*[நள் → நடி → நடு → நட்டு → நாட்டு + இயம் → நாட்டியம் + நன்னூல்.]*

இலக்கியம் இயற்றுங்கால், செய்யுள் வழக்கும், மக்கள் பேச்சுவழக்கும் தழுவிச் செய்வது போன்று, வேந்தனுக்கு, அரண்மனைக் கண்ணும், பொதுமக்களுக்குக் கோவில் திருவிழாக்கண்ணும், நடத்துதற்குரிய நாட்டிய

உத்திகளை நன்கு உரைப்பது, நாட்டிய நன்னூல் என்றறிக.

பண்டு, நம்முன்னோர் நிகழ்த்திய நாட்டியம் குறித்தசொல்; தொல்காப்பியர் காலத்தே, 'கூத்து' என்று குறிக்கப்பட்டது. தேவநேயர் கூறுங்கால், "நட்டம் என்பதினின்றும் பிராகிருத வடிவமான நட்ட பிறக்கும்" இப் பிராகிருதத்தினின்றே "நாட்ய" என்னும் சொற்பிறக்கும்" என்கிறார். மொழியியலார், தமிழகத்தில், உள்ள வடபுலத்தார் பேசிய மொழியே, பிராகிருதம் என்பர். உள்ளத்துணர்வுகளைத் திறம்பட நிலைநாட்டுதலே நட்டம் ஆகும். இந் நட்டத்தினின்று தோன்றியதே நாட்டியம்; இந் நாட்டியம் குறித்துச் சிலப்பதிகாரத்தில் குறிக்கப்படும் நூலே, நாட்டியநன்னூல் ஆகும். நாட்டியம் குறித்த பல்வகை நூல்கள் பாங்குடன் பண்டைக்காலத்தே மிளிர்ந்ததை, அடியார்க்கு நல்லாரின் உரைப்பாயிரவுரையால் அறிந்து கொள்கிறோம். காலப்போக்கில் அனைத்துத் தமிழ் நாட்டியநூல்களும் அழிக்கப்பட்டன என்று, ஆய்வாளர் கருதுகின்றனர்.

**நாட்டியநாடகம்** *nāṭṭiya-nāḍagam,* பெ. (n.) இயல், இசை, நடிப்பு, நடனம் ஆகிய நான்கும், உரியமுறையில், உரியஇடத்திற் சேர்த்து நிகழ்த்தப்பெறும் கலை; dance-drama.

*[நாட்டியம் + நாடகம்.]*

சிலப்பதிகாரம், பெரியபுராணம், கம்பராமாயணம் போன்ற காப்பியங்களில் உள்ள நிகழ்வுகளை, நாட்டியம் பார்ப்பவர்தம் நெஞ்சில் நிலைநாட்டும் நாடகமே, நாட்டிய நாடகம். இன்றும், இதுபோன்ற நாட்டிய நிகழ்வுகள் சென்னை இராணி மெய்யம்மை கலையரங்கிலும், இராசா அண்ணாமலை கலையரங்கிலும், நிகழ்வது கண்கூடு. பாவேந்தரின் வீரத்தாய், பாரதியாரின் பாஞ்சாலிசபதம் போன்ற நாட்டிய நாடகங்களும், காண்போர்தம் நெஞ்சில் பதியும் வண்ணம் நடிக்கப்பெறுகின்றன.

**நாட்டியப்பிரியன்** *nāṭṭiya-p-piriyaṉ,* பெ. (n.) 1. நடனப்பிரியன்; one fond of acting on the stage or dancing. 2. *சிவபிரான் (வின்.)* பார்க்க; see *śiva-pirāṉ.* 3. *நாட்டியக்காரன்* பார்க்க; see *nāṭṭiya-k-kāraṉ.* 4. கருத்து (சூடா.); intention, idea.

*[நடு + நட்டு → நாட்டு + இயம் + skt பிரியன்.]*

இறைவன், அனைத்து ஆதனிடத்தும் ஆராக்காதல் கொண்டு, திருநடம் புரிபவன். மாந்தர் உய்வு பெறுதற் பொருட்டு ஆதன்மீது நடனமிட்டு, நல்வழிப்படுத்துதலையே விருப்பமாகக் கொண்டுள்ளவன் சிவபிரான் என்பது சைவக்கொண்முடிபாகும்.

**நாட்டியம்** *nāṭṭiyam,* பெ. (n.) 1. கூத்து; dancing, acting. *"நாட்டிய நன்னூல்"* (சிலப்.3:158). 2. கைமுதலியவற்றாற் காட்டுங் குறிப்பு; hint, signal.

*[நள் → நளி → நடி → நடு → நட்டு → நாட்டு நாட்டு + இயம். ]*

(ஒ.நோ.) வள் → வடு → வட்டு.

"இயம்" = சொல்லாக்க ஈறு.

(ஒ.நோ.) இலக்கியம்; பண்ணியம்; இன்னியம்; தமிழியம்; பாட்டியம்; பாவியம்; ஓவியம்; வாழ்வியம்.

நாட்டியம் என்பது தூயதென்சொல்.

நள் → நளி → நளிதல் = பொருந்துதல், ஒத்தல்; ஒத்துச்செய்தல் என்னும் பொருண்மையில், இலக்கியங்களில் வழக்கூன்றியுள்ளது. "*நள்*" எனும் பொருந்துதற்கருத்து வேரினின்று கிளைத்த சொல்லே நாட்டியம். நளி → நடி என்று திரியும். (ஒ.நோ.) களிறு → கடிறு. ள → ட திரிபு

"*நடி*" என்னும் சொல்லே நட்டு, நட்டுவம், நட்டம் முதலான நாட்டியப் பொருண்மையை விளக்கும் சொற்களுக்கு மூலச்சொல்லாகும்.

உள்ளத்துறும் உணர்வுகளை உடலுறுப்புகளின் வாயிலாகக் காண்பவர்தம் நெஞ்சில் மிகநுட்பம் செறிந்த அவிநயங்களுடன் நிலைநாட்டி ஆடுவது, நாட்டியமாகும்.

எழில்நுட்பஅசைவுகளைத் தன்னகத்தே கொண்ட நாட்டியம் பற்றி, நாட்டியக்கலை வல்லுநர், பின்வருமாறு பேசுவர், "*நெஞ்சிலே பீறெட்டெழும் பெருமை மிக்கஉணர்வுகளையும், அடக்கவியலாத அவலங்களையும், ஈடில்லா எண்ணக்குவியல்களையும், முகவமைதி கையமைதி மூலம், காண்பவர்தம், கருத்திலும் நெஞ்சிலும் நிலைநாட்டி நிறுவுதலே நாட்டியம்*"

சுருங்கக் கூறின்,

நாட்டியம் என்பது அழகுற ஆடுவது; அஃது நூற்றெட்டு உடற்கரணங்களோடும், கைகால், கண்வாய் முதலிய உறுப்புகளின் தொழில்களோடும் கூடியது. நுண்ணிய எழிற்கை வினைகளைக் காண்பவர்தம் உள்ளத்தில் நிலைநிறுத்தி ஆடுவது, நாட்டியம்.

நாட்டியம் என்னும் சொல் பண்டைத் தமிழ் மரபில், கூத்து என்று வழங்கி வந்தது. தொல்காப்பியர் காலத்துத் தமிழில் வழக்கிலிருந்த சில சொற்களும் பின்பு தோன்றிய மாறுதல்களும், வருமாறு:–

கூத்து = நாட்டியம்.

ஆடல் = நடனம்.

புலன் = 108 உடற்கரணங்களோடும் கை கால், கண் வாய் முதலான உறுப்புகளோடு இயைந்ததும் கருத்துகளைத் தெள்ளத் தெளிவாகக் கண்ணுறுவோர்தம் நெஞ்சில் நிலைநிறுத்துவதுமான நாட்டியம்.

ஆடுகளம் = அரங்கம்.

விறலி = நடனமாடுபவள், நடனமகளிர்.

கூத்தர், கூத்தி = நடிகர், நடிகை. நடி என்னும் முதனிலையே நாட்டியம் என்பதன் அடிச்சொல். வடவர் காட்டும் "*நாட்ய*" என்ற, நலிந்த வடிவம், நடு, நட்டு, நட்டம் என்னும் தீந்தமிழ்ச் சொற்களைத் திரித்த வடிவமாகும்.

பண்டைத் தமிழ் நாட்டியமே, இன்று பரதநாட்டியம் என்றபெயரில் வழங்குகிறது என்பார், மொழிஞாயிறு.

பரதசாத்திரம் கி.மு.4–இல் இயற்றப்பட்டது. தமிழ்ப்பரதமே. பரதசாத்திரத்திற்கு முந்தியது என்பார் பாவாணர்.

(எ.டு.) "*நாடகத்தமிழ் நூலாகிய பரதம், அகத்திய முதலாவுள்ள தொன்னூல்களு மிறந்தன*" என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதிகாரவுரைப் பாயிரத்தில்,உரைத்துள்ளதால் தமிழில், கி.மு.4–ஆம் நூற்றாண்டிற்கு முன்பே, நாட்டியம், நாடகம் தொடர்பான நூல்கள் இருந்தமையும், வடவரால் அழிந்து போனமையும், உள்ளங்கை நெல்லி போன்று, வெளிப்படை எனலாம். கி.மு. 3–ஆம் நூற்றாண்டிலேயே நாட்டியம் என்றசொல், மக்களிடையே வழக்கூன்றியிருந்ததால்தான், நாட்டியம், நாடகம் குறித்த நூல்களும், வடவரால் அழிக்கப்பட்டிருக்கலாம் என்பது, ஆய்வாளர்தம் கொள்கையாகும்.

"*நட்டம்*" என்னும் தமிழ்ச்சொல்லிலிருந்து, '*நட்ட*' என்ற பிராகிருதச்சொல் தோன்றும். தமிழகத்தின் வடபகுதியில், வடபுலத்தில் வாழ்ந்த தமிழர் பேசியமொழியே பிராகிருதம் என்பது மொழியியலார் கருத்தாகும். இக் கருத்தினை, "*வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழ்கூறு நல்லுலகத்து*" என்ற, தொல்காப்பியச் சிறப்புப்பாயிரம் உறுதி செய்துள்ளது. வடபுலத்தமிழர்தம் மொழியே பிராகிருதம். ஆகையால், அதில் 80 விழுக்காடு தமிழ்ச்சொற்கள் கலந்துள்ளதில், வியப்பேதும் இல்லை.

(எ.டு.) **த.** நட்டம் → skt. நட்ட → skt நாட்ய.

மேற்குறித்த இவ்வெடுத்துக்காட்டு, '*நாட்ய*' என்ற திரிசொல்லாம், வடசொல்லின், முதனிலை தமிழே என்று, மென்மேலும், உறுதிப் படுத்துகின்றது.

நள் → நளி → நடி → நடு → நட்டு → நட்டம். உள்ளத்துணர்வுகளை, உடலுறுப்புகளின் உறுதுணையுடன், திறம்பட வெளிப்படுத்துவதே

நட்டம். நம் அனைவர் நெஞ்சிலும், நட்டம் பயின்றாடும் நாயகனே, நம் தலைவன். இவனே தென்னாட்டில் குடிகொண்ட சிவன். எந்நாட்டவர்க்கும் இறைவனாகத் திகழ்பவன். நாட்டியத்தான் என்னும் பெயர், தொன்முதுச் செந்நெறித் தலைவனான சிவன் என்னும் செம்மேனி அம்மானுக்கேயுரிய செஞ்சொல். "*நாட்டியத்தான்குடி*" என்னும் ஊர், திருநாவுக்கரசராலும், நம்பியாரூரராலும் திருப்பதிகம் பெற்றது. ஆரூரரின் நற்றமிழ்ப் பாடல் வருமாறு:—

பூணாணாவதோ ரரவங்கண்டஞ்சேன்
புறங்காட்டாடல் கண்டிகழேன்
பேணீராகிலும் பெருமையை யுணர்வேன்
பிறவோனாகிலு மறவேன்
காணீராகிலுங் காண்பெனென் மனத்தாற்
கருதீராகிலுங் கருதிடிலிகழேன்
நானேலும்மடி பாடுதலொழியேன்
நாட்டியத்தான் குடி நம்பீ.

நாட்டியத்தான் குடி நம்பி ஆடிய நாட்டியக் கரணங்களைக் குறிக்குஞ் சிற்பங்கள், தில்லைக்கோயிற் கோபுரத்தில் திறம்படச் செதுக்கப்பட்டுள்ளதை, இன்றும் காணலாம்.

(ஒ.நோ.) நாட்டியம், நாட்டியக்கலை குறித்த செய்திகள், இரட்டைக்காப்பியங்களில் மிகுதியாகக் காணப்படுகின்றன. "*நாட்டிய நன்னூல்*" நாட்டிய நுணுக்கங்களை நுவல்வது:— "*நாட்டிய நன்னூல் நன்கு கடைப்பிடித்து*" என்ற சிலப்பதிகாரச் செய்யுளால், நாட்டியம், மக்களிடையே பெற்றிருந்த செல்வாக்கு இனிது புலப்படுகின்றது. மாதவி ஆடிய எட்டுவகை நாட்டியங்களாக இளங்கோவடிகள் கூறுவது:— "பண்ணல் பரிவட்டணை ஆராய்தல் தைவரல் கண்ணியசெலவு, விளையாட்டுக்கையும் கண்ணியகுறும்போக்கு என்று *நாட்டியம் எண்வகை*" (கானல்வரி).

நாட்டியம் என்ற சொல்லிற்கு "*ந்ருத்*" என்னும் வேரடியை, வடவர் மூலமாகக் காட்டுவர். இஃது பொருந்தப் பொய்த்தலாகும். "*நள் → நடு → நட்டு*"— என்னும், ஏரணச் சொற்பிறப்பில், "*நட்டு*" என்பதே, "*நாட்ய*" என்பதன் மூலம் என்பது தெள்ளிதிற் தெரிகிறது. (ஒ.நோ.) வள் → வடு → வட்டு.

நடு என்னும் சொல்லோடு கூடி நட்டுவம் என்பது, நட்டு எனக் குறுகிற்று. முட்டு = நட்டுவ இசைக்கருவிகள். நட்டுமுட்டுவர் = நட்டுவமேளக்காரர்.

தலைக்கழகக் காலத்திலிருந்து, தமிழ் இயல், இசை, நாடகம் என முத்தமிழாய் வழங்கி வந்துள்ளது. "*கூத்து*" என்பது, நாடகம், நாட்டியம் போன்றவற்றை உள்ளடக்கிய, பழஞ்சொல்.

வள்ளுவப்பெருந்தகையும்,

"*கூத்தாட் டவைக்குழாத் தற்றே*" (குறள்,332.) என்று கூறியுள்ளது, இங்கு எண்ணத்தக்கது. மொழியாராய்ச்சி இல்லாதாரும் தமிழ்ச்சொல் வளத்தை அறிந்தும் அறியாதும், தெரிந்தும் தெரியாதுபோன்று நடிப்போருமே, "*நாட்டியம்*" வடசொல் என்று, கருதுவர்.

பரதமுனிவரின் நாட்டியசாத்திரம் தொன்மச்செய்திகள் செறிந்தது. ஆனால் தமிழில் உள்ள நாட்டியம் என்ற சொல் ஆட்டம், பொருத்தமுறச் செய்தல் என்னும் பொருட் பொருத்தப்பாட்டினை உள்ளடக்கியது.

"*நள் → நடி*" என்னும் வேர்ப்பொருள் வளர்ச்சியே, நாட்டியம் என்ற சொல்லின் தோற்றம்! ஒத்தல், ஒத்துச்செய்தல், ஆட்டம் என்ற பொருட்பொருத்தப்பாட்டின் பொதிவே நாட்டியம். திருஞானசம்பந்தரும், "*ஆட்டம்*" என்னும் பொருண்மையில், "*நடி*" என்ற சொல்லைத் தமது தேவாரத் திருப்பதிகத்துள் எடுத்தாண்டுள்ளார்.

"*நடிகொள் நன்மயில் சேர்திரு நாரையூர்*" (தேவா.261:5) உள்ளத்தெழும் உணர்வுகளை ஆட்டத்தின் மூலம் 108 உடற்கரணங்கள் வாயிலாக நடித்து வெளிப்படுத்திக் காண்போர்தம் நெஞ்சில் நிலைநிறுத்துவதே நாட்டியம்.

"*ந்ருத்*" என்ற வடமொழி முதனிலைக்கு வேர்ப்பொருளே இல்லை.

"*ஆட்டம்போடுதல்*", "*நடித்தல்*"—என்னும் பொருட்பொருத்தப்பாட்டில், நாட்டுப்புறத்தே இன்றும் பலநல்லதமிழ்வழக்குகள், வேரூன்றி யுள்ளன.

(எ.டு.) 1. அளவுக்கு அதிகமாக ஆடுகிறான்

2. ஆட்டம் போட்டு நடிப்பதில் அவனுக்கு நிகர் யாருமில்லை.

3. ஆட்டம்போட்டு நடிப்பதில் அவள் கைதேர்ந்தவள்.

4. நொறுநாட்டியம் பிடித்தவன்.

5. ஆட்டம்போட்டு பாட்டுப்பாடும் அழகான கோமாளி வந்தோமய்யா!

மேற்குறித்த நாட்டுப்புற வழக்குகள் "*நாட்டியம்*" என்பது, தூயதென்சொல் என்று தெளிவுறுத்துகின்றன எனலாம்.

**நாட்டிருவமுது** *nāṭṭiru-v-amudu,* பெ. (n.) இறைவனுக்குப் படைக்கும் திருவமுது; daily midday meals offered to god and goddess in temples. "*நாட்டிருவமுதுக்கும் உச்சம் போதைக்கும்*" (S.I.I,iii 229).

*[நாள் + திருவமுது .]*

*நாள்தோறும் இறைவனுக்குப் படைக்கும் பகல்நேரத்து உணவு.*

**நாட்டிலந்தை** *nāṭṭilandai,* பெ. (n.) முருட்டுத் தன்மையுள்ள இலந்தை; indian plum.

*[நாடு + இலந்தை.]*

**நாட்டிலமிர்து** *nāṭṭil-amirdu,* பெ. (n.) நாடுபடு *திரவியம் (சீவக.2110,உரை)* பார்க்க; see *nāḍu-paḍu-tiraviyam.*

*[நாடு + இல் + அமிர்து.]*

**நாட்டிலவு** *nāṭṭilavu,* பெ. (n.) இலவமர வகையுளொன்று(சா.அக.); a kind of silk-cotton.

*[நாடு + இலவு.]*

**நாட்டிலுப்பை** *nāṭṭiluppai,* பெ. (n) இலுப்பை மரவகை(சா.அக.); mahwa of South India.

*[நாடு + இலுப்பை.]*

காட்டிலுப்பைக்கு மாறுபட்ட குணமுள்ளது.

**நாட்டீருள்ளி** *nāṭṭīruḷḷi,* பெ. (n) நாட்டுவெங்காயம் (சா.அக.); country onion

*[நாடு + ஈருள்ளி.]*



**நாட்டு[1]–தல்** *nāṭṭu-,* 5,செ.குன்றாவி,(v t) 1.நடுதல்; to set up, fix, plant, place in the ground, as a pole , to erect; to insert "*கற்பக நாட்டி*" (திருவாச.9:3). 2. நிலைநிறுத்துதல்; to establish, as laws, customs, rules, fame, reputation; to lay down, as a theory, an opinion. "*சிலப்பதிகார மென்னும் பெயரா னாட்டுதும் யாமோர் பாட்டுடைச்செய்யுள்*" (சிலப்.பதி.60). தமிழே ஞாலமுதன்மொழி என்று நாட்டுதல் பணியில் தமதுவாணாளைச் செலவிட்டவர் மொழி ஞாயிறு (இ.வ.). 3. வாழவைத்தல்; to establish one in life. '*அவனை நன்னிலையில் நாட்டினான்*' (இவ). 4. படைத்தல்; to create, "*மண்ணாட்டுநர் காக்குநர் வீட்டுநர் வந்த போதும்*" (கம்பரா.நகர்நீ.122). 5. எழுதுதல்; (ஈடு.4:5:2). to write, inscribe, as placing a style upon a palm leaf.

**க.தெ.** நாடு **ம.,** நாட்டுக.

*[நடு → நட்டு → நாட்டு-.]*

**நாட்டு²** *nāṭṭu,* **பெ.** (n.) **1.** நிலை; position, posture. "*ஒருநாட் டரசுணங்க*" (**சீவக.2582**). **2.** ஊருக்குரியது (**சா.அக.**); relating or referring to country

**க.தெ.** நாடு **ம.,** நாட்டுக.

*[நட்டு → நாட்டு.]*

**நாட்டு³** *nāṭṭu,* **பெ.** (n.) சுவரெழுப்பும்போது குறுக்கே வைக்குங் கல் (**இ.வ.**); the cross brick, in a layer of bricks.

*[நட்டு → நாட்டு.]*

**நாட்டுஅக்ரோட்டு** *nāṭṭu-akrōṭṭu,* **பெ.** (n.) ஆமணக்கு எண்ணெயைவிடச்சிறந்த மருத்துவக் குணமுள்ள எண்ணெயைத்தரும் மரம்; country akrōṭṭu nut is extracted a large proportion of fixed medicinal oil, which is pronounced to be superior to castoroil.

*[நாடு + அக்ரோட்டு.]*

சிறப்பான மருந்துக்குணமுள்ள அக்ரோட்டு எண்ணெய், குமட்டல், வயிற்றுவலி முதலானவற்றைப் போக்கும்; உடம்பின் மிகு வெம்மையை அகற்றிக் குளிர்மையூட்டுந்தன்மைத்து என்று, **சா.அக. கூறும்.**

**நாட்டுஅதிமதுரம்** *nāṭṭu-adimaduram,* **பெ.** (n) அதிமதுரவகையு ளொன்று; country liquorice

**மறுவ.** குன்றிவேர்.

*[நாடு + அதிமதுரம்.]*

நறுமணங்கமழும் குன்றிவேர் இவ்வகையைச் சார்ந்தது என்று சா.அக. **கூறும்.**

**நாட்டுஅதிவிடயம்** *nāṭṭu-adiviḍayam,* **பெ.** (n.) மூலிகைவகையுளொன்று(**சா.அக.**); a kind of herbal medicine

**நாட்டுஅமுக்கிராக்கிழங்கு** *nāṭṭu-amukkirā-k-kiḻaṅgu,* **பெ.** (n) கட்டிகளைக் கரைக்குந் தன்மையுள்ள அமுக்கிராக்கிழங்கு; the root of Indian winter cherry used as an absorbency of abscess

*[நாடு + அமுக்கிரா + கிழங்கு]*



**நாட்டுஇரவேல்சின்னி** *nāṭṭu-iravēl-ciṉṉi,* **பெ.** (n.) *நாட்டுமஞ்சட் சீனக்கிழங்கு* பார்க்க; see *nāṭṭu-mañjaṭ-ciṉa-k-kiḻaṅgu*

**நாட்டுஈச்சை** *nāṭṭu-īccai,* **பெ.** (n.) ஈச்சமரவகை; common date.

*[நாடு + ஈச்சை.]*

**நாட்டுஊமத்தை** *nāṭṭu-ūmattai,* **பெ.** (n) ஊமத்தை (**சா.அக.**); Indian datura

*[நாடு + ஊமத்தை]*



**நாட்டுளிவண்டு** *nāṭṭu-eri-vaṇḍu,* பெ. (n.) எரிவண்டு வகை; telimifly.

**நாட்டுக்கஞ்சா** *nāṭṭu-k-kañjā,* கஞ்சா வகையுளொன்று(சா.அக.); indian hemp.

*[நாடு + கஞ்சா. ]*

*சிற்றூர்ப்புறத்தே மறைவிடத்தில் பயிராகும் கஞ்சா.*

**நாட்டுக்கட்டை**[1] *nāṭṭu-k-kaṭṭai,* பெ. (n.) *நாட்டான். 2,* பார்க்க; see *naṭṭāṉ.2.*

**நாட்டுக்கட்டை**[2] *nāṭṭu-k-kaṭṭai,* பெ. (n.) உழைத்து உரமேறிய கட்டுடல் வாய்க்கப்பெற்ற சிற்றூரைச் சார்ந்த ஆண் அல்லது பெண்; sturdy man of the countryside; buxom country girl

*[நாடு + கட்டை.]*

சிற்றூர்மாந்தர், இயல்பாகவே வனப்பெய்தி இருப்பினும், அன்றாடப்பணிகளை, வஞ்சனையற்ற உள்ளத்துடன் செய்வதினால், வாய்த்த, உடல்அழகினைக் குறித்த சொல்லாகும். கடினப்பணியினையும், திடமனத்துடன் செய்வதால் ஏற்படும் கட்டுடல் வனப்பைக் குறித்த சொல்லாகும்.

**நாட்டுக்கடலை** *nāṭṭu-k-kaḍalai,* பெ. (n.) பருமனான கடலை; big size bengal gram

**மறுவ.** கொண்டைக்கடலை.

*[நாடு + கடலை.]*

**நாட்டுக்கடுக்கன்** *nāṭṭu-k-kaḍukkaṉ,* பெ. (n.) இலங்கையில் வடபாலுள்ள ஊர்களில் வாழ் வோ ரணியுங் கடுக்கன்வ கை (யாழ்ப்.); ear- rings worn in the rural districts north of ceylon.

*[நாடு + கடுக்கன்.]*

*பொதுவாக ஆடவர் அணியுங் காதணி*

**நாட்டுக்கடுக்காய்** *nāṭṭu-k-kaḍukkāy,* பெ. (n.) கடுக்காய் வகை; (சா.அக.); indian gall nut.

*[நாடு + கடுக்காய்.]*

**நாட்டுக்கடுகு** *nāṭṭu-k-kaḍugu,* பெ. (n.) முருட்டுக்கடுகு; black mustard.

*[நாடு + கடுகு]*

*சிறிது பருமனான கடுகு.*

**நாட்டுக்கடுகுரோகனி** *nāṭṭu-k-kaḍugu-rōgaṉi,* பெ. (n.) கருப்புக்கடுகு ரோகனி; black hellebore.

*[நாடு + கடுகுரோகனி.]*

**நாட்டுக்கணக்கன்** *nāṭṭu-k-kaṇakkaṉ,* ஊர்க்கணக்கன்; village accountant.

*[நாடு + கணக்கன்.]*

**நாட்டுக்கத்தரி** *nāṭṭu-k-kattari,* பெ. (n.) கத்தரிவகை; a kind of bringal.

*[நாடு + கத்தரி.]*



**நாட்டுக்கதலி** *nāṭṭu-k-kadali,* பெ. (n.) வாழை வகை (பதார்த்த.391); a kind of plantain.

**மறுவ.** நாட்டுமொந்தன், நாட்டுவாழை.

*[நாடு + கதலி.]*

**நாட்டுக்கந்தம்** *nāṭṭu-k-kandam,* பெ. (n.) பேராமுட்டி (சா.அக.); fragrant pavonia.

*[நாடு + கந்தம்.]*

*கந்தம் = நறுமணம்.*

**நாட்டுக்கமுகு** *nāṭṭu-k-kamugu,* பெ. (n) கமுகு வகையுளொன்று; a kind of areca nut palm.

*[நாடு + கமுகு.]*

**நாட்டுக்கர்ச்சு** *nāṭṭu-k-karccu,* பெ. (n.) ஊர்ப் பொதுச்செலவு; charges for the administration of the village. 2. தஞ்சைப்பகுதி நவாபு துரைத்தனத்தில் விதிக்கப்பட்ட தனிவரி; (பதார்த்த.391); extra cess imposed in Tañjāvūre under the Nawab government.

**நாட்டுக்கர்ணம்** *nāṭṭu-k-karṇam,* பெ. (n.) 1. *நாட்டுக்கணக்கன்* பார்க்க; see *nāṭṭu-k-kaṇakkaṉ.* 2. ஊர்க் கணக்குப் பொத்தகம்; the register kept by the village accountant

**நாட்டுக்கரு** *nāṭṭu-k-karu,* பெ. (n) 1. ஐங்காயமெழுகு (சா.அக.); a medicine prepared from the foetus. 2. வழலையின் பெயர்; salt found on the soil of fullers earth

*[நாடு + கரு.]*

**நாட்டுக்கருணை** *nāṭṭu-k-karuṇai,* பெ. (n) கருணைக்கிழங்கு வகையுளொன்று; a kind of elephant foot yam.

**மறுவ.** காராக்கருணை.

*[நாடு + கருணை.]*

காட்டுக்கருணைக் குணத்திற்கு மாறுபட்டது.

**நாட்டுக்கருவா** *nāṭṭu-k-karuvā,* பெ. (n.) கருவாப்பட்டை; country cinnamum

*[நாடு + கருவா.]*

**நாட்டுக்கருவாழை** *nāṭṭu-k-karu-vāḻai,* பெ. (n.) வாழை வகையுளொன்று; a kind of plantain.

*[நாடு + கருவாழை.]*

**நாட்டுக்கருவேல்** *nāṭṭu-k-karuvēl,* பெ. (n.) கருவேல்மர வகை (சா.அக.); a kind of black babool.

**மறுவ.** படர்கருவேல்.

*[நாடு + கருவேல்.]*

*சிற்றூர்ப்புறத்தே கண்மாய்களிலும், காடுகளிலும் படர்ந்து காணப்படும். இம் மரத்தின் காய்களும், இலைக் கொழுந்தும்,வெள்ளாடுகளின் விருப்பமான உணவாகும்.*

**நாட்டுக்கல்** *nāṭṭu-k-kal,* பெ. (n.) கொங்கு வேளாளரின் திருமண நாளில் அரசற்குப் பதிலியாக வைத்து மணமகன் வணங்கற்கு நாட்டுஞ் சிலை; (E.T.iii.420) stone set up on a marriage occassion among koṅgu-vēḷāḷar to represent the king, which the boy bridegroom worships.

*[நாட்டு + கல்.]*

**நாட்டுக்கல்நார்** *nāṭṭu-k-kalnār,* பெ. (n.) கல்நார் வகை(சா.அக.); a fibrous mineral substance.

*[நாடு + கல்நார்.]*

**நாட்டுக்கலக்கல்** *nāṭṭu-k-kalakkal,* பெ. (n.) *நாட்டுச்சரக்கு* பார்க்க; see *nāṭṭu-c-carakku.*

**நாட்டுக்கலப்பை** *nāṭṭu-k-kalappai,* பெ. (n.) மரக்கலப்பை; wooden plough.

**மறுவ.** காறுகலப்பை.

*[நாடு + கலப்பை.]*

*தரிசு உழவிற்கும், தொளியுழவிற்கும் முதன்முறை உழுவதற்குப் பயன்படும் கலப்பை. இக் கலப்பை முதன்முதல் நிலத்தை உழும்பொழுது, அஃதாவது மேட்டுப்பகுதியைச் சமப்படுத்தும்போது, சிற்றூர்ப்புறத்தே இன்றும், பயன் படுத்தப்படுகிறது.*



**நாட்டுக்கவுண்டன்** *nāṭṭu-k-kavuṇḍaṉ,* பெ. (n.) கொங்கு வேளாளருள் பெரியதனக் காரன்(E.T.iii,418); head of nāḍu, among koṅgu vēḷāḷar.

*[நாடு + கவுண்டன்.]*

**நாட்டுக்கற்பூரஇலை** *nāṭṭu-k-kaṟpūra-ilai.* பெ. (n.) கருப்பூரஇலை; comphor leaf

*[நாடு + கருப்பூரம் → கற்பூரம் + இலை.]*

**நாட்டுக்கற்பூரவல்லி** *nāṭṭu-k-kaṟpūra-valli,* பெ. (n.) நாட்டுப்புறத்தே பயிராகும் கருப்பூரவல்லி மருந்துப்பூடு; a kind of medicinal country lavender.

*[நாடு + கருப்பூரவல்லி → கற்பூரவல்லி.]*



**நாட்டுக்கற்றாழை** *nāṭṭu-k-kaṟṟāḻai,* பெ. (n.) கற்றாழை வகையுளொன்று; a kind of indian aloe.

மறுவ. குமரி, சோற்றுக்கற்றாழை.

*[நாடு + கற்றாழை.]*

**நாட்டுக்கறிவேப்பிலை** *nāṭṭu-k-kaṟi-vēppilai,* பெ. (n.) சமையலுக்கு நறுமணஞ்சேர்க்கும் கறிவேப்பிலை; curry leaf tree.

*[நாடு + கறிவேப்பிலை.]*

**நாட்டுக்காணிக்கை** *nāṭṭu-k-kāṇikkai,* பெ. (n.) பழைய வரிவகை (S.I.I.vi,2); an ancient tax

*[நாடு + காணிக்கை.]*

**நாட்டுக்காமிண்டன்** *nāṭṭu-k-kāmiṇḍaṉ,* பெ. (n.) சிற்றூர்த் தலைவர்களின் பட்டப்பெயர்களு ளொன்று (M.E R.229 of 1927–8); a title of village chieftains

*[நாடு + காமிண்டன்.]*

**நாட்டுக்காவல்** *nāṭṭu-k-kāval,* பெ. (n.) 1. நாடுகாக்குந் தொழில்; office of watchman of a nāḍu. 2. வரிவகையு ளொன்று; a kind of tax.

*[நாடு + காவல். ]*

*நாட்டைக் காவல்புரியும் காவலர்க்காக ஊரவையார் பெற்று வந்த வரிவகை.*

**நாட்டுக்கிச்சடி** *nāṭṭu-k-kiccaḍi,* பெ. (n.) உள்ளூர்க்கிச்சிலி; Indian country paddy.

*[நாடு + கிச்சடி]*

வெளியூர்க் கிச்சடிநெல்லியினின்று வேறுபட்டது.

**நாட்டுக்கிச்சிலி** *nāṭṭu-k-kiccili,* பெ. (n) நாட்டுப்புறத்தே விளையும் உள்ளூர்க்கிச்சிலி; indian country orange.

*[நாடு + கிச்சிலி.]*

**நாட்டுக்கிச்சிலிக்கிழங்கு** *nāṭṭu-k-kiccili-k-kiḻaṅgu,* பெ. (n.) கருப்பூரக் கிச்சிலிக்கிழங்கு; orange root.

*[நாடு + கிச்சிலி + கிழங்கு.]*

சீனக்கிச்சிலிக் கிழங்கினின்று தோற்றத்திலும் சுவையிலும் மாறுபட்ட தென்று, சா.அக. கூறும்.

**நாட்டுக்கிளுவை** *nāṭṭu-k-kiḷuvai,* பெ. (n) கிளுவை மரவகை; indian balsam tree.

*[நாடு + கிளுவை.]*

**நாட்டுக்கீழாநெல்லி** *nāṭṭu-k-kīḻā-nelli,* பெ. (n.) கீழக்காய்நெல்லி மருந்துப்பூடு (சா.அக.); feather foil.

*[நாடு + கீழக்காய்நெல்லி → கீழாநெல்லி.]*

நாட்டுப்புறத்தே பரவலாகக் காணப்படும் இக் கீழக்காய்நெல்லி மருந்துப்பூடு, மிகுதியான உடல்வெப்பத்தைத் தணிக்கும். ஆவின்பாலில், இதை அரைத்துப் புலர்காலைப்பொழுதில் உண்டுவந்தால், நாட்பட்ட மஞ்சள்காமாலை குணப்படும் என்று, மூலிகை அகரமுதலி கூறும்.

**நாட்டுக்குடி** *nāṭṭu-k-kuḍi,* பெ. (n) *நாட்டுக்குடி மக்கள்* பார்க்க; see *nāṭṭu-k-*

*kuḍimakkaḷ.* *'நாட்டுக்குடிகளுக்கு நன்மைசெய்வதே நல்லாட்சியின் குறிக்கோள்.'* (இக்.வ.).

*[நாடு + குடி.]*

**நாட்டுக்குடிமக்கள்** *nāṭṭu-k-kuḍimakkaḷ,* பெ. (n) சிற்றூரில் வாழ்பவர்; village peoples மிகக்கடுமையான தண்ணீர்ப் பற்றாக் குறையால், நாட்டுக்குடிமக்கள் அனைவரும், வயிற்றுப்பிழைப்பிற்கு வழிதேடி நகர்ப்புறம் செல்லுகின்றனர் (இக்.வ.).

மறுவ. நாட்டுப்புறத்தார்.

*[நாடு + குடிமக்கள்.]*

**நாட்டுக்குற்றம்[1]** *nāṭṭu-k-kuṟṟam,* பெ. (n.) விட்டில், கிளி, நால்வாய், வேற்றரசு, தன்னரசு, நட்டம், பெரும்பெயல், காற்று என்ற எண்வகை நாட்டுத் துன்பங்கள்; the evils of a country eight in number, viṭṭl, kiḷi, nālvāy vēṟṟrašu, taṉṉarašu, naṭṭam, perumpeyal, kāṟṟu, etc

*[நாடு + குற்றம்.]*

**நாட்டுக்குற்றம்[2]** *nāṭṭu-k-kuṟṟam,* பெ. (n) நாட்டுக்கு நாடு செய்யும் மறைமுக வன்முறை; underground activities that triggar enemity between nations

*[நாடு + குற்றம்.]*

**நாட்டுக்கூட்டம்[1]** *nāṭṭu-k-kūṭṭam,* பெ. (n.) மக்கள் கூட்டம்; assembly of countrymen

ம. நாட்டுக்கூட்டம்.

*[நாடு + கூட்டம்.]*

**நாட்டுக்கூட்டம்[2]** *nāṭṭu-k-kūṭṭam,* பெ. (n.) அனைத்து நாடுகள் அவை; united nations organization

*[நாடு + கூட்டம்.]*

**நாட்டுக்கெந்தி** *nāṭṭu-k-kendi,* பெ. (n) கௌரி வைப்புநஞ்சு வகையுளொன்று; (சா.அக.); a kind of prepared yellow oxide arsenic.

**நாட்டுக்கொட்டை** *nāṭṭu-k-koṭṭai,* பெ. (n.) சுவையுள்ள கொட்டைப்பருப்பு வகையுளொன்று; a kind of sweet country almound

*[நாடு + கொட்டை.]*

**நாட்டுக்கொட்டைக்களா** *nāṭṭu-k-koṭṭaikkaḷa,* பெ. (n.) கொட்டைக்களா எனும் முட்செடிவகை (சா.அக.); sweet thorn

**நாட்டுக்கொடிமுந்திரிகை** *nāṭṭu-k-koḍi-mundirigai,* பெ. (n) கொடிமுந்திரி வகையுளொன்று; common grape vine

*[நாடு + கொடி + முந்திரிகை.]*

*மலைச்சாரலில் அமைந்த சிற்றூர்ப்புறத்தே விளையும் திராட்சை. இக் கொடிமுந்திரி பழச்சாறெடுத்து, நீண்ட நாள் வைத்துப் பயன்படுத்துதற்கு உகந்தது. விழாக்காலங்களில், சிற்றூர் வாழ்நர், இந் நாட்டுக் கொடி முந்திரிப்பழத்துடன், பல்வகைப்பழச் சாற்றினைச் சேர்த்துக் கலக்கி, நாட்டுத்தேறல் அல்லது நாட்டுக்கலக்கல் மதுவை, உருவாக்குவர்.]*

**நாட்டுக்கொய்யா** *nāṭṭu-k-koyyā,* பெ. (n.) கொய்யாப்பழ வகை; common country guava.

*[நாடு + கொய்யா.]*

**நாட்டுக்கொழுஞ்சி** *nāṭṭu-k-koḻuñji,* பெ. (n.) சிறுகிச்சலி; small orange.

*[நாடு + கொழுஞ்சி.]*

**நாட்டுக்கொன்றை** *nāṭṭu-k-koṉṟai,* பெ. (n.) சரக்கொன்றை; common cassia.

*[நாடு + கொன்றை.]*

காட்டுக்கொன்றையினின்று மாறுபட்ட தென்று சா.அக. கூறும்.



**நாட்டுக்கோட்டைச்செட்டி** *nāṭṭu-k-kōṭṭai-c-ceṭṭi,* பெ,(n.) முகவை மாவட்டத்தில் செல்வம்படைத்து வாழும் ஒருசார் வகுப்பினர்; a prominent and wealthy ceṭṭi caste in Rāmnāḍu district.

*[நாட்டுக்கோட்டை + செட்டி.]*

**நாட்டுக்கோட்டையார்** *nāṭṭu-k-kōṭṭaiyār,* பெ.(n.) *நாட்டுக்கோட்டைச்செட்டி* பார்க்க; see *nāṭṭu-k-kōṭṭai-c-ceṭṭi.*

**மறுவ.** நகரத்தார். செட்டிநாட்டார்.

*[நாட்டுக்கோட்டை + செட்டி.]*

**நாட்டுச்சடாமாஞ்சி** *nāṭṭu-c-caḍā-māñji,* பெ. (n.) பெருங்கோரை(இங்.வை.); spikenard herb.

*[நாடு + சடாமாஞ்சி.]*

*நாட்டுப்புறத்தே, அஃதாவது சிற்றூர்ப் புறத்து வயல் வரப்புகளிற் காணப்படும், பெருங்கோரை வகை.*

**நாட்டுச்சடாமாஞ்சியெண்ணெய்** *nāṭṭu-c-caḍā-māñji-y-eṇṇey,* பெ. (n.) சடா மாஞ்சிலோடு, ஏனைய கடைச்சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சித் தலையில் தடவப் பயன்படுத்தும் எண்ணெய்(சா.அக.); a medicated oil prepared from valerian root as a chief ingredient along with other drugs for luxuriant growth of hair

*[நாடு+ சடாமாஞ்சி + எண்ணெய்.]*

*தலைமுடி நன்கு வளரவும், வெளுத்த நரைமுடியைக் கருப்பாக்கவும், பயன் படுத்தும் எண்ணெய். சடா மாஞ்சியொடு, ஏனைய கடைச் சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சிப் பதப்படுத்தும் எண்ணெய்.*

**நாட்டுச்சண்பகம்** *nāṭṭu-c-caṇbagam,* பெ. (n.) பொன்னிறமுள்ள சண்பகமலர்; golden champak

*[நாடு + சண்பகம்.]*

**நாட்டுச்சணச்சி** *nāṭṭu-c-caṇacci,* பெ. (n) பேய்த்தும்பை; leucus linifolia.

*[நாடு + சணச்சி.]*

**நாட்டுச்சதகுப்பை** *nāṭṭu-c-cadakuppai,* பெ. (n.) சதகுப்பை வகையுளொன்று; dill plant.

*[நாடு + சதகுப்பை.]*

*மகவீன்ற தாய்க்கு இச் சதகுப்பை மருந்தினைக் காயம், கருப்பட்டி போன்றவற்றுடன் சேர்த்துச் சாறுவைத்துக் கொடுப்பர். இச் சாறானது உடம்பிலுள்ள நச்சு நீரினையுங், கசடுகளையும் வெளியேற்றும் தன்மைத்து.*

சதக்குப்பை வகைகளாகச் சா.அக. கூறுவது வருமாறு:–

1. காட்டுச்சதகுப்பை.

2. சீமைச்சதகுப்பை.

**நாட்டுச்சந்தம்**[1] *nāṭṭu-c-candam,* பெ. (n.) பட்டிக்காட்டுத்தனம்(வின்.); rustic dress and manners.

*[நாடு + சந்தம்.]*

**நாட்டுச்சந்தம்**[2] *nāṭṭu-c-candam,* பெ. (n) நாட்டுப்புறப்பாட்டிற்குரிய இசைக்குழிப்பு; the music of folk-song.

*[நாட்டு + சந்தம்.]*

**நாட்டுச்சந்தனம்** *nāṭṭu-c-candaṉam,* பெ. (n.) சிவப்புச் சந்தனம்; red sandal wood.

*[நாடு + சந்தனம்.]*

*கடும் வெய்யிலில் தோன்றும் வேர்க்குரு, வேனற்கட்டி போன்றவற்றின் மீது, கடைச்சரக்கோடு கலந்து பூசுவதற்கும், உடலின் வெம்மையைப் போக்குதற்கும் பயன்படும் சந்தனம்.*

**நாட்டுச்சர்க்கரை** *nāṭṭu-c-carkkarai,* பெ. (n.) *நாட்டுச்சருக்கரை* பார்க்க; see *nāṭṭu-c-carukkarai.*

*[நாடு + சர்க்கரை.]*

உள்ளூர்க் கரும்பினின்று காய்ச்சி எடுக்கும் சிவப்புச் சருக்கரை. இச் சருக்கரை நாட்டுமருந்து செய்வதற்குப் பயன்படும்.

**நாட்டுச்சர்க்கரைவள்ளி** *nāṭṭu-c-carkkarai-vaḷḷi,* பெ. (n.) *நாட்டுச்சருக்கரைவள்ளிக் கிழங்கு* பார்க்க; see *nāṭṭu-c-carukkarai-vaḷḷi-k-kiḻaṅgu.*

*[நாடு + சர்க்கரைவள்ளி.]*

**நாட்டுச்சரக்கு**[1] *nāṭṭu-c-carakku,* பெ. (n.) உள்தேசத்திலுண்டாம் பண்டம்; indigenous product, goods or commodities

*[நாடு + சரக்கு.]*

**நாட்டுச்சரக்கு**[2] *nāṭṭu-c-carakku,* பெ. (n) 1. சாராயம்; arrack 2. அயல்நாட்டு மதுபோல், சிற்றூர்ப்புறத்தே உருவாக்கும் பழக்கலவைக் காடி; a local fruit beverage imitating the foreign wine.

மறுவ. நாட்டூறல்.

*[நாடு + சரக்கு.]*

*சிற்றூர்ப்புறத்தே, பல்வகைப் பழச்சாற்றினை, மட்பாண்டத்தில் வைத்துப் பலநாள் கழித்துப் பருகும் புளிப்பூறல்.*

**நாட்டுச்சருக்கரை** *nāṭṭu-c-carukkarai,* பெ. (n.) 1. கரும்புச்சாற்றில் காய்ச்சி எடுத்த பழுப்புச்சருக்கரை வகை; a kind of sugar-

cane brown sugar. 2. தூய்மை யாக்கப்பட்ட வெள்ளைச் சருக்கரை; white sugar purified from brown sugar.

மறுவ. சிவப்புச்சருக்கரை.

*[நாடு + சருக்கரை.]*

தமிழகத்தில் இன்றும், நாட்டுப்புறத்தில் உள்ள கரும்பாலையில் நாட்டுச் சருக்கரை, குடிசைத் தொழிலாக உருவாக்கப்படுகிறது.

**நாட்டுச்சருக்கரைவள்ளிக்கிழங்கு** *nāṭṭu-c-carukkarai-vaḷḷi-k-kiḻaṅgu,* பெ. (n.) சருக்கரை வள்ளிக்கிழங்கு; sweet potato

*[நாடு + சருக்கரை + வள்ளிக்கிழங்கு.]*

**நாட்டுச்சலம்** *nāṭṭu-c-calam,* பெ. (n.) நிலத்தடிநீர்; water of low level earth.

*[நாடு + சலம்.]*

**நாட்டுச்சவுக்காரம்** *nāṭṭu-c-cavukkāram,* பெ. (n.) 1. உழமண்; fuller's earth. 2. சுண்ணாம்புச் (சவுக்காரம்); சவர்க்காரம்; country soap

*[நாடு + சவுக்காரம்.]*

**நாட்டுச்சவுண்டல்** *nāṭṭu-c-cavuṇḍal,* பெ. (n.) பெருந்தகரை; west indian bead tree.

*[நாடு + சவுண்டல்.]*

**நாட்டுச்சாதிக்காய்** *nāṭṭu-c-cādikkāy,* பெ. (n.) சிற்றூரில் பயிராகும் சாதிக்காய்; common nutmeg cultivated in countries.

*[நாடு + சாதிக்காய்.]*

**நாட்டுச்சாம்பல்** *nāṭṭu-c-cāmbal,* பெ. (n.) நாவல்; common jaumoon.

*[நாடு + சாம்பல்.]*

**நாட்டுச்சாம்பிராணி** *nāṭṭu-c-cāmbirāṇi,* பெ. (n.) குங்கிலியம் (சா.அக.); frankincence

*[நாடு + சாம்பிராணி.]*

**நாட்டுச்சார்பு**[1] *nāṭṭu-c-cārbu,* பெ. (n.) மருதநிலம் (வின்.); agricultural tract.

*[நாடு + சார்பு.]*

முதற்கண் மனித நாகரிகந் தோன்றியது ஆற்றுப் படுகையிலேயே எனலாம். இப் படுகையைச் சார்ந்தே நாட்டுவளம் கணிக்கப்பட்டது.

**நாட்டுச்சார்பு**[2] *nāṭṭu-c-cārbu,* பெ. (n.) ஒருநாட்டின் கொள்கைகளும் செயற் பாடுகளும் இணைந்து செல்லும் தன்மை; integrated activities where preaching and practice go together.

*[நாடு + சார்பு.]*

**நாட்டுச்சாரி** *nāṭṭu-c-cāri,* பெ. (n.) சுடலையாவாரை; a kind of senna.

**நாட்டுச்சாவல்** *nāṭṭu-c-cāval,* பெ. (n.) உயர் இனமல்லாத ஆண்கோழி(வின்.); an inferior cock opp. to šādi-c-cāval.

*[நாடு + சேவல் → சாவல்.]*

**நாட்டுச்சிமிக்கி** *nāṭṭu-c-cimikki,* பெ. (n.) மலர்வகையுளொன்று; passion flower

**நாட்டுச்சிறப்பு** *nāṭṭu-c-ciṟappu,* பெ. (n.) தேயவளம்; excellencess, natural or artificial, of a country.

*[நாடு + சிறப்பு.]*

**நாட்டுச்சீயக்காய்** *nāṭṭu-c-cīyakkāy,* பெ. (n.) நல்ல சீயக்காய் மரம்; soap pod-tree

**நாட்டுச்சீரகம்** *nāṭṭu-c-cīragam,* பெ. (n.) சீரகவகையுளொன்று; common cumin.

*[நாடு + சீரகம்.]*

**நாட்டுச்சீரகவல்லி** *nāṭṭu-c-cīragavalli,* பெ. (n.) வள்ளிக்கிழங்குக் கொடி; common yam.

*[நாடு + சீரகவல்லி.]*

**நாட்டுச்சீனி** *nāṭṭu-c-cīṉi,* பெ. (n.) வெண்மை நிறக் கரும்புச் சாற்றிலிருந்து உருவாக்கப்பட்டச் சருக்கரை; fine white-cane sugar.

*[நாடு + சீனி.]*

நாட்டுச்சீனி, சீனத்திலிருந்து தமிழகத் திற்கு வந்த கரும்பிலிருந்து எடுக்கப்பட்ட சீனி. ஔவை அதியமானைப் பாடிய புறப்பாடலில் "***கரும்பிவண் தந்தும்***" என்ற அடியினால் அறியலாம்.

**நாட்டுச்சுண்டெலி** *nāṭṭu-c-cuṇḍeli,* பெ. (n.) வீட்டுச்சுண்டெலி; common mouse.

*[நாடு + சுண்டெலி.]*

**நாட்டுக்சுரை** *nāṭṭu-c-curai,* பெ. (n.) பெருஞ்சுரை; large bottle gourd.

*[நாடு + சுரை.]*

**நாட்டுச்சேங்கொட்டை** *nāṭṭu-c-cēṅ-koṭṭai,* பெ. (n.) பெரியசேரான் கொட்டை; glabrous marking-nut.

*[நாடு + சேங்கோட்டை.]*

**நாட்டுச்சேர்வை** *nāṭṭu-c-cērvai,* பெ. (n.) வல்லம்பர் இனத்தலைவன் (E.T.vii.300); head-man of the Vallambar caste.

*[நாடு + சேர்வை.]*

**நாட்டுச்சேவகன்** *nāṭṭu-c-cēvagaṉ,* பெ. (n) முதற்காலத்தில் நாட்டாண்மைக்காரனுக்கு, உதவி புரிந்த பணியாள்; a peon who helped nāṭṭāṇmai-k-kāraṉ collecting revenue.

*[நாடு + சேவகன்.]*

**நாட்டுச்சோளம்** *nāṭṭu-c-cōḷam,* பெ. (n.) சோளவகை; great millet

*[நாடு + சோளம்.]*

**நாட்டுடைமைச்சாலை** *nāṭṭuḍaimai-c-cālai,* பெ. (n.) தேசியநெடுஞ்சாலை; national high-ways.

*[நாடுடைமை + சாலை.]*

நாட்டுடைமையாக்கப்பட்ட நெடுஞ்சாலை.

**நாட்டுடைமையாக்கு-தல்** *nāṭṭuḍaimai-ākku-,* 5,செ.குன்றாவி, (v.t.) **1.** அரசுடைமை ஆக்குதல்; to nationalize. **2.** நாட்டிலுள்ள மக்களுக்கு உடைமையாகும் வண்ணம் பல்வகை அறிஞர் நூல்களுக்கு நல்கை (மானியம்) தருதல்; to nationalize literary sources to extend fiscal help to scholars.

பாவாணர் நூல்கள் அனைவருக்கும் பயன்படும் வண்ணம் அரசு நாட்டுடைமையாக்கியுள்ளது. (உ.வ.)

*[நாட்டு + உடைமை + ஆக்கு –.]*

**நாட்டுடைமைவங்கி** *nāṭṭuḍaimai-vaṅgi,* பெ. (n.) *நாட்டுடைமை வைப்பகம்* பார்க்க; see *nāṭṭuḍaimai-vaippagam.*

*[நாட்டுடைமை + வங்கி.]*

*Eng.* பாங்க் → வங்கி.

**நாட்டுடைமைவைப்பகம்** *nāṭṭuḍaimai-vaippagam,* பெ. (n.) பணம், நகை முதலானவற்றைப் பாதுகாப்பாக வைப்பதற்கான நாட்டுடைமை நிறுவனம்; nationalised bank, safty locker

*[நாட்டுடைமை + வைப்பகம்.]*

**நாட்டுத்தக்காளி** *nāṭṭu-t-takkāḷi,* பெ. (n.) 1. பிள்ளைத் தக்காளி; small Indian winter-cherry. 2. செடிவகை; bifarious green- leaved date- Phoenix rupticola.

*[நாடு + தக்காளி.]*

**நாட்டுத்தமரத்தை** *nāṭṭu-t-tamarattai,* பெ. (n.) தமரத்தை வகை; coramandal goose berry.

**நாட்டுத்தலையாரி** *nāṭṭu-t-talaiyāri,* பெ. (n.) நாடுகாவற்றலைவன்; district watch man under the native police system.

*[நாடு + தலையாரி.]*

**நாட்டுத்தாமரை** *nāṭṭu-t-tāmarai,* பெ. (n.) நீர்த்தாமரை; lotus.

*[நாடு + தாமரை.]*

**நாட்டுத்துவரை** *nāṭṭu-t-tuvarai,* பெ. (n.) துவரை; common dholl.

*[நாடு+துவரை.]*

**நாட்டுத்துளசி** *nāṭṭu-t-tuḷasi,* பெ. (n.) துளசிவகை; a kind of holy basil.

*[நாடு+துளசி]*

**நாட்டுத்தேவர்** *nāṭṭu-t-tēvar,* பெ. (n.) 1. நாட்டில் வணங்கப்படுந்தேவர்; the Gods whose worship is prevalent in a country. "*நாட்டுத் தேவரும் நாடரும் பொருளே*" (திருவாச:23.25). 2. அந்தணர்; andaṉar

*[நாடு + தேவர்.]*

**நாட்டுத்தேன்** *nāṭṭu-t-tēṉ,* பெ. (n.) சிற்றுப்புற மரங்களில் கிடைக்கும் தேன்; country honey.

*[நாடு+தேன்.]*

**நாட்டுநடப்பு[1]** *nāṭṭu-naḍappu,* பெ. (n.) 1. அன்றாடச் செய்தி, current news 2. செய்தித்தாள்; current news paper இன்றையச் செய்தித்தாள்கள், நாட்டு நடப்பினை நல்லமுறையில் தெரிவிக்கின்றன (இக்.வ.). நாட்டுநடப்பு மாணவர் பயன்படுமாறு, தேர்வுக்குரிய வினாவிடைகளை வெளியிடுகிறது (இ.வ.).

*[நாட்டு + நடப்பு.]*

அன்றாடச் செய்திகளை மக்களுக்குத் தெரிவிக்கும் செய்தித்தாள்.

**நாட்டுநடப்பு²** *nāṭṭu-naḍappu,* பெ. (n.) *நாட்டுப்போக்கு* பார்க்க; see *nāṭṭu-p-pōkku.*

**நாட்டுநன்னாரி** *nāṭṭu-nannāri,* பெ. (n.) நன்னாரி வகை; country sarasaparilla

*[நாடு+நன்னாரி.]*

**நாட்டுநாயகம்** *nāṭṭu-nāyagam,* பெ. (n.) நாட்டின் தலைமை (S.I.I.vii,49); headship of a nāḍu, a territorial division.

*[நாடு + நாயகம்.]*

**நாட்டுநாரத்தை** *nāṭṭu-nārattai,* பெ. (n.) நாரத்தை வகை; bitter-orange.

**நாட்டுநாவல்** *nāṭṭu-nāval,* பெ. (n.) சிற்றூரில் விளையும் நாவல்; country jaumoon

**நாட்டுநிலாவரை** *nāṭṭu-nilāvarai,* பெ. (n.) *நாட்டாவாரை* பார்க்க; see *nāṭṭāvārai.*

**நாட்டுநிலாவிரை** *nāṭṭu-nilāvirai,* பெ. (n.) நிலவாகை; Tinnevelly senna.

**நாட்டுநீங்கல்** *nāṭṭu-nīngal,* பெ. (n.) நாட்டின் அரசுரிமை நீங்கிய சிற்றூர்; land excluded from the ownership of the government. "*நாட்டு நீங்கலாய் உட்புரவாய் தேவர் தான மாக*" (S.I.I.ii.509.).

*[நாடு + நீங்கல்.]*

**நாட்டுநூக்கு** *nāṭṭu-nūkku,* பெ. (n.) நூக்குமரவகை; black wood.

**நாட்டுப்பச்சிலை** *nāṭṭu-p-paccilai,* *நாட்டுமூலிகை* பார்க்க; see *nāṭṭu-mūligai.*

*[நாடு + பசுமை + இலை]*

**நாட்டுப்பஞ்சு** *nāṭṭu-p-pañju,* பெ. (n) *நாட்டுப் பருத்தி பார்க்க;* see *nāṭṭu-p-parutti.*

*[நாடு+பஞ்சு.]*

**நாட்டுப்படகு** *nāṭṭu-p-paḍagu,* பெ. (n) மரபுவழிப்பட்ட பழமையான கடற்கலம்; country-small boat.

மறுவ. மரக்கலம், ஓடம்

*[நாடு + படகு]*



**நாட்டுப்படை** *nāṭṭu-p-paḍai,* பெ,(n.) நால்வகைப்படையுள் நாட்டுப்புறத்துள்ள மக்களாலியன்ற படை (குறள்,762,உரை.); army enlisted from the rural population of a country. corresponding śrēṇī-bala, one of nāl-vagai-p-paḍai

*[நாடு + படை.]*

**நாட்டுப்பண்டாரம்** *nāṭṭu-p-paṇḍāram,* பெ. (n.) வேற்றிடங்களில் அமைக்கப்பட்ட கருவூலம்; treasuries in the mofussil

*"தஞ்சாவூர்த் தேவர்க்கு அடைத்த நாட்டுப்பண்டாரங்களும் அளந்து"* (S.I.I.ii.311.).

*[நாடு + பண்டாரம்.]*

**நாட்டுப்பண்டுவம்** *nāṭṭu-p-paṇḍuvam,* பெ. (n.) ஊரகமருத்துவம்; country medical practice. 'தீராத நோய்களை நாட்டுப்பண்டுவம் தீர்க்கும்' (உ.வ.).

*[நாடு + பண்டுவம்.]*

இயற்கையாகக் கிடைக்கும் மூலிகைகளைக் கொண்டு, சிற்றூர்ப்புறத்தே செய்யப்படும் மருத்துவம்.

**நாட்டுப்பண்டுவர்** *nāṭṭu-p-paṇḍuvar,* பெ. (n.) சிற்றூர்ப்புறத்தேயுள்ள சித்தமருத்துவர்; country medical practioner.

*[நாடு + பண்டுவர்.]*

**நாட்டுப்பயறு** *nāṭṭu-p-payaṟu,* பெ. (n.) சிற்றூரில் விளையும் பயறு; cultivated green pulse

*[நாடு + பயறு.]*

**நாட்டுப்பருத்தி** *nāṭṭu-p-parutti,* பெ. (n.) சிற்றூரில் விளையும் பருத்தி; country cotton.

*[நாடு + பருத்தி.]*

**நாட்டுப்பலா** *nāṭṭu-p-palā,* பெ. (n.) ஊர்ப்பலா; common jack.

*[நாடு +பலா.]*

**நாட்டுப்பழம்** *nāṭṭu-p-paḻam,* பெ. (n) 1. நாட்டுவாழைப் பழம்; plantains of the plains. 2. ஒட்டுக்கனி யல்லாத பழம் (இ.வ.); fruits other than graft-mangoes.

*[நாடு + பழம்.]*

**நாட்டுப்பற்று** *nāṭṭu-p-paṟṟu,* பெ. (n.) ஒருவர் தன்நாட்டு நலனிலும் வளர்ச்சியிலும் கடமையுணர்வோடு இருக்கும் ஈடுபாடு; patriotism, love for one's country.

*[நாடு + பற்று.]*

**நாட்டுப்பறங்கிப்பட்டை** *nāṭṭu-p-paṟaṅgi-p-paṭṭai,* பெ,(n.) செடிவகை; groundsel, weed-Senecio arnothianus.

*[நாடு + பறங்கிப்பட்டை..]*

**நாட்டுப்பன்றி** *nāṭṭu-p-paṉṟi,* பெ. (n) சிற்றூரில் வளர்க்கும் பன்றி; country pig.

*[நாடு + பன்றி.]*

**நாட்டுப்பாங்கு** *nāṭṭu-p-pāṅgu,* பெ. (n.) நாட்டுச்சந்தம்(வின்.) பார்க்க; see nāṭṭu-c-candam.

*[நாடு + பாங்கு.]*

**நாட்டுப்பாடல்** *nāṭṭu-p-pāḍal,* பெ. (n.) *நாட்டுப்புறப்பாடல்* பார்க்க; see *nāṭṭu-p-puṟa-p-pāḍal.*

*[நாடு + பாடல்.]*

**நாட்டுப்பாதாம்** *nāṭṭu-p-pādām,* பெ. (n) நாட்டு வாதுமை பார்க்க; see nāṭṭu-vādumai.

**நாட்டுப்புகையிலை** *nāṭṭu-p-pugaiyilai,* பெ. (n.) சிற்றூர்ப் புகையிலை வகை; a kind of country tobacco.

*[நாடு + புகையிலை.]*

**நாட்டுப்புளி** *nāṭṭu-p-puḷi,* பெ. (n) சிற்றூர்ப்புறத்தே விளையும் சதைப்பற்றுமிக்க புளி; a kind of country tamarind.

*[நாடு + புளி.]*

**நாட்டுப்புறஅறிவியல்** *nāṭṭu-p-puṟa-aṟiviyal,* பெ. (n.) ஊரகமக்களின் பழக்கவழக்கம், மரபுவழி பற்றிய ஆய்வு; the science of folk-lore.

*[நாடு + புறம் + அறிவியல்.]*

**நாட்டுப்புறத்தான்** *nāṭṭu-p-puṟattāṉ,* பெ. (n.) 1. பட்டிக்காட்டான்; rustic, unpolished person. 2. நகரவாழ்க்கையையும், அறிவியல் பயன்பாட்டையும் அறியாதவன்; one who from the country. 'நாட்டுப்புறத்தான் பெரும்பாலும் உழுதுண்டு வாழ்வதையே உயிர்நாடியாகக் கொண்டவன்.' (இக்.வ.).

*[நாடு + புறத்தான்.]*

**நாட்டுப்புறப்பாடல்** *nāṭṭu-p-puṟa-p-pāḍal,* பெ. (n.) நாட்டார் வழக்காற்றில் உள்ள பாடல்; folk-song.

*[நாடு + புறம் + பாடல்.]*

கதையைப் பொருளாகக் கொள்ளாத பாடல். நாட்டுப்புற மாந்தர்தம் உள்ளத்துணர்வுகளை உணர்த்தும் தாலாட்டு, ஒப்பாரி, ஏற்றப்பாட்டு போன்றவை நாட்டுப்புறப்பாடலுள் அடங்குவனவாகும். நாட்டுப்புறத் தாலாட்டுப் பாடல்

"அத்தை அடிச்சாளோ அரளிப்பூச்
செண்டாலே
மாமன் அடிச்சானோ
மல்லிகைப்பூச்செண்டாலே
அடித்தாரைச் சொல்லியழு ஆக்கினைகள்
செய்திடுவோம் ஆரும்அடிக்கவில்லை
ஐவிரலும் தீண்டவில்லை ஏனோ
அழுகின்றான் ஏலம்பூ வாய்நோக
தானாய் அழுகின்றான் தம்பிதுணை
வேணுமென்று''

மேற்குறித்த பாடல் மாந்தர்தம் அகவுணர்வுகளை நயம்படவுரைக்கும் நற்றமிழ்ப் பாடல் எனில் மிகையன்று.

**நாட்டுப்புறம்** *nāṭṭu-p-puṟam,* பெ. (n.) 1. பட்டிக்காடு; country side, mofussil 'நாட்டுப்புறவளர்ச்சியே நாட்டின் முழுமையான வளர்ச்சி' (இக்.வ.). "*நாட்டுப் புறமாக்களும் வேட்டுவத் தலைவரும்*" (பெருங். உஞ்சைக்.43,54). 2. *நாட்டுப்புறத்தான்* பார்க்க; see *nāṭṭu-p-puṟattāṉ.*

மறுவ. சிற்றூர்ப்புறம்.

தெ. நாடுப்புறமு. ம. நாட்டுப்புறம்.

*[நாடு+ புறம்.]*

**நாட்டுப்புறா** *nāṭṭu-p-puṟā,* பெ. (n.) வீட்டுப்புறா; home pigeon.

*[நாடு + புறா.]*

**நாட்டுப்பூரா** *nāṭṭu-p-pūrā,* பெ. (n.) *நாட்டுச் சருக்கரை;* a kind of brown sugar.

*[நாடு + பூரா.]*

**நாட்டுப்பூவரசு** *nāṭṭu-p-pūvarašu.* பெ. (n.) ஊர்ப்பூவரசு; portia tree.

*[நாடு + பூவரசு.]*

**நாட்டுப்பூனை** *nāṭṭu-p-pūṉai,* பெ. (n.) வீட்டுப் பூனை; country cat.

*[நாடு + பூவரசு.]*

**நாட்டுப்பெண்** *nāṭṭu-p-peṇ,* பெ. (n.) மகன் மனைவி(இ.வ.); daughter-in-law.

**மறுவ.** மருமகள்.

*[நாடு + பெண்.]*

**நாட்டுப்பேய்ப்புடல்** *nāṭṭu-p-pēy-p-puḍal,* பெ. (n.) சிற்றூர்புடல்; snake gourd.

**மறுவ.** நாட்டுமாதரை.

*[நாடு + பேய்ப்புடல்.]*

**நாட்டுப்பைத்தியம்** *nāṭṭu-p-paittiyam.* பெ. (n.) எப்பொதுழும் ஊரிலேயே இருந்து வாழ்வதற்கு மனங்கொள்ளுகை; a mania for living in the country

*[நாடு + Skt. பைத்தியம்.]*

**நாட்டுப்பொட்டு** *nāṭṭu-p-poṭṭu,* பெ,(n.) மகளிரணியும் பொட்டுத்தாலி ; marriage badge tied on a kaikōḷar girl by the head-man of the caste, making her a tāši.

*[நாடு + பொட்டு.]*

**நாட்டுப்போக்கு** *nāṭṭu-p-pōkku,* பெ. (n.) 1. நாட்டுவழக்கம் (யாழ்.அக.); country style, fashion or manners. 2. பொதுவாக வழங்கும் முறை (இ.வ.); prevaling fashion or style.

*[நாடு+ போக்கு.]*

**நாட்டுப்போங்கு** *nāṭṭu-p-pōṅgu,* பெ. (n.) 1. *நாட்டுப்போக்கு* பார்க்க; see *nāṭṭu-p-pōkku.* 2. பட்டிக்காட்டுத்தனம் (வின்.); rusticity, coarseness

*[நாடு + போக்கு → போங்கு.]*

**நாட்டுபாதி** *nāṭṭu-pādi,* பெ,(n.) ஒரு பழைய வரி (S.I.I.ii **115.**): an ancient tax

*[நாடு + பாதி.]*

**நாட்டுமகிழம்** *nāṭṭu-magiḻam,* பெ. (n.) மகிழம்பூ வகை; a kind of ilanji.

*[நாடு + மகிழம்.]*

**நாட்டுமஞ்சட்சீனக்கிழங்கு** *nāṭṭu-mañjaṭ-ciṉa-k-kiḻaṅgu,* பெ,(n) கிழங்கு வகை; indian rhubarb.

*[நாட்டுமஞ்சள் + சீனக்கிழங்கு.]*

உருசியா, சீனம், துருக்கி போன்ற நாடுகளில் பயிராகும். இக் கிழங்கு நறுமணமிக்கது: புளிச்சத்து, சுண்ணாம்புச் சத்து செறிந்தது. மலக்கட்டு, அரத்த சோகை, சூலைப்பிடிப்பு போன்ற வற்றிற்குச் சிறந்த மருந்து.

**நாட்டுமட்டம்** *nāṭṭu-maṭṭam,* பெ. (n.) குதிரை வகை; country pony, opp-to paikō-maṭṭam.

*[நாடு + மட்டம்.]*

**நாட்டுமண்** *nāṭṭu-maṇ,* பெ. (n.) செம்மண்; red ochre.

**நாட்டுமந்தாரை** *nāṭṭu-mandārai,* பெ. (n.) மந்தாரை வகை; a kind of mountain ebony.

**நாட்டுமரம்** *nāṭṭu-maram,* பெ. (n.) *கட்டுமரம்* பார்க்க; see *kaṭṭu-maram.*

*[நாடு + மரம்.]*

*நாட்டுப்பழங்குடி மக்கள் பயன்படுத்திய மரக்கலம்*



**நாட்டுமரவட்டை** *nāṭṭu-maravaṭṭai,* பெ. (n) மரவட்டை வகை (**சீவரட்.358.**); a kind of mara-v-aṭṭai.

*[நாடு + மரவட்டை.]*

**நாட்டுமருக்காரை** *nāṭṭu-marukkārai,* பெ. (n.) கக்கல் மருந்து; emetic nut.

*[நாடு + மருக்காரை.]*

**நாட்டுமருத்துவம்** *nāṭṭu-maruttuvam,* பெ. (n.) தமிழ்ச்சிற்றூர்புறத்தே இயற்கையாகக் காணப்படும் மூலிகைகளைக் கொண்டு செய்யப்படும் மருத்துவம்; naturopathy.

*[நாடு + மருத்துவம்.]*

சிறப்பாக வேப்பிலை, வில்வம், துளசி போன்ற இயற்கைப் பச்சிலை மூலிகை களைக் கொண்டு, நோய்தீர்க்கும் மருத்துவம். நம் நாட்டிலேயே தோன்றி வளர்ந்த மருத்துவம். நாட்பட்ட ஈளை இசிவுநோய்களைப் போக்கும் மருத்துவம்.

**நாட்டுமருத்துவர்** *nāṭṭu-maruttuvar,* பெ. (n.) *நாட்டுப்பண்டுவர்* பார்க்க; see *nāṭṭu-p-paṇḍuvar.*

*[நாட்டு + மருத்துவர்.]*

உள்நாட்டிலேயே கிடைக்கும் மூலிகை வேர் போன்றவற்றைப் பயன்படுத்தி மருத்துவம் செய்யும். ஊரகமருத்துவர்.

**நாட்டுமருந்து** *nāṭṭu-marundu,* பெ. (n) சிற்றூர்களில் இயற்கையாகக் காணப்படும் பச்சிலை மூலி; native herbal medicine

*[நாட்டு + மருந்து.]*

**நாட்டுமருந்துக்கடை** *nāṭṭu-marundu-k-kaḍai,* பெ. (n.) மூலிகை மருந்துக்கடை; country medical shop

*[நாடு + மருந்து + கடை.]*

**நாட்டுமல்லிகை** *nāṭṭu-malligai,* பெ. (n) மல்லிகை வகை; a kind of jasmine.

**நாட்டுமானிடம்** *nāṭṭu-māṉiḍam,* பெ. (n.) 1. சமுதாயத்தில் கடைநிலை வகுப்பினர் குழு; proletariate 2. சாமானியர்; the common people of a country. "*நாட்டு மானிடத்தோ டெனக்கரிது*" (திவ்.பெரியாழ். 5:1:5.).

*[நாடு + மானிடம்.]*

**நாட்டுமானியம்** *nāṭṭu-māṉiyam,* பெ. (n.) ஊர்த்தலைவன் பயன்கொள்ளும் கொடை நிலம்; land held rent-free, as by the head-man of a village

*[நாடு + மானியம்.]*

வரிவிலக்குப்பெற்ற கொடைநிலம்.

**நாட்டுமிளகாய்** *nāṭṭu-miḷagāy,* பெ. (n.) நீளமான மிளகாய்; country chilli.

*[நாடு + மிளகாய்.]*

*குண்டு மிளகாயைக் காட்டிலும் நீண்ட வடிவினது.*

**நாட்டுமிளகு** *nāṭṭu-miḷagu,* பெ. (n.) மிளகு; common black - pepper

*[நாடு + மிளகு.]*

**நாட்டுமீன்** *nāṭṭu-mīṉ,* பெ. (n) குளம் அல்லது ஆற்றுமீன்; fresh water fish

*[நாடு + மீன்.]*

**நாட்டுமுயல்** *nāṭṭu-muyal,* பெ. (n) சிற்றூர்ப்புறதே வீடுகளில் வைத்து வளர்க்கப்படும் முயல்; country hare.

*[நாடு + முயல்.]*

**நாட்டுமுருங்கை** *nāṭṭu-muruṅgai,* பெ. (n.) ஊரகத்தே வீட்டுக் கொல்லையில் விளையும் முருங்கை; country muruṅgai.

*[நாடு + முருங்கை.]*

காடுகளில் விளையும் முருங்கை மிகு சுவையினையுடையது.

**நாட்டுமுள்ளங்கி** *nāṭṭu-muḷḷaṅgi,* பெ. (n) முள்ளங்கி வகையுளொன்று; a kind of country radish

*[நாடு + முள்ளங்கி.]*

ஊரகத்தே வீட்டின் கொல்லைப் புறத்தே, விளையும் முள்ளங்கி.

**நாட்டுமூங்கில்** *nāṭṭu-mūṅgil,* பெ. (n.) குழாய்மூங்கில்; hallow country bamboo

*[நாடு + மூங்கில்.]*

**நாட்டுமூப்பன்** *nāṭṭu-mūppaṉ,* பெ. (n.) பள்ளர்தலைவன்; the headman of the paḷḷar caste

*[நாடு + மூப்பன்.]*

**நாட்டுமூலிகை** *nāṭṭu-mūligai.* பெ. (n) சிற்றூர்ப்புறத்தே காணப்படும் வேப்பிலை, வில்வம் துளசி போன்ற மூலிகை; country medicine

**மறுவ.** நாட்டுமருந்து, இயற்கைமூலி.

*[நாடு + மூலிகை.]*

**நாட்டுரம்** *nāṭṭuram.* பெ. (n) *நாட்டெரு* பார்க்க; see *nāṭṭeru.*

*[நாடு + உரம்.]*

**நாட்டுரோசா** *nāṭṭu-rōsā,* பெ. (n) சீனம் அல்லது வங்கநாட்டிலிருந்து வந்த மலர்; Beṅgāḷ or Chiṉā rose

**நாட்டுவக்கீல்** *nāṭṭu-vakkīl,* பெ. (n) மேம்போக்காகச் சட்டம் அறிந்த சிற்றூரான்; the man who knows little law

*[நாடு +* Arabi *வக்கீல்.]*

**நாட்டுவசம்பு** *nāṭṭu-vaśambu,* பெ. (n.) நாட்டு(சித்த)மருத்துவத்தில் குழந்தை மருத்துவத்திற்குப் பயன்படும் மருந்து; sweet flag.

*[நாடு + வசம்பு.]*

சிற்றூர்ப் புறத்தே குழந்தைகள் செரியாமைக் கோளாறினால், வயிற்று நோவால் அழும்போது, வசம்பினை இழைத்துத் தேனுடன் சேர்த்துத் தருவர். இது பாட்டி மருத்துவம் என்றழைக் கப்படும்.

**நாட்டுவர்த்தமானம்** *nāṭṭu-vartta-māṉam,* பெ.(n.) தலைநகருக்கு வெளியிடங்களிலிருந்து வரும் செய்தி (வின்.); the mofussil news.

**மறுவ.** புறநகர்ச்செய்தி.

*[நாடு + Skt வர்த்தமானம்.]*

**நாட்டுவழக்கம்** *nāṭṭu-vaḻakkam,* பெ. (n.) நாட்டின் அடிப்படை வழக்காறு (ஆசாரம்); (யாழ்.அக.) customs of a country.

*[நாடு + வழக்கம்.]*

**நாட்டுவள்ளி** *nāṭṭu-vaḷḷi,* பெ. (n) சருக்கரைவள்ளி; sweet potato.

*[நாட்டு + வள்ளி.]*

*அரிசித்தட்டுப்பாடு ஏற்பட்டபோது, நாட்டுவள்ளிக்கிழங்கு பசியைப் போக்குதற்கும், ஊட்டசத்தாகவும் விளங்கியது.*

**நாட்டுவளப்பம்** *nāṭṭu-vaḷppam,* பெ. (n) 1. நாட்டுவளம் பார்க்க; see nāṭṭuvaḷam. 2. நாட்டுவழக்கம் பார்க்க; see nāṭṭu-vaḻakkam "கிணற்றுத் தவளைக்கு நாட்டு வளப்பமேன்" (உ.வ.).

*[நாடு + வளப்பம்.]*

**நாட்டுவளம்** *nāṭṭu-vaḷam,* பெ. (n) 1. தேச செழிப்பு; fertility. 2. தேசவமைதி (வின்.); good condition of a country, as regards its inhabiants, animals, etc.,

*[நாடு + வளம்]*

**நாட்டுவறியாள்** *nāṭṭu-vaṟiyāḷ,* பெ. (n.) பெருங்குறிஞ்சா; vomitting swallow root (சா.அக.).

**நாட்டுவன்**[1] *nāṭṭuvaṉ,* பெ. (n.) புதுக்கொள்கையை நிலைநிறுத்துபவன்; the person who establish a new theory. "மறைமலையடிகள், மொழிஞாயிறு தேவநேயர் போன்றோர், தனித்தமிழ்க் கொள்கையை நாட்டுவன் ஆயினர்" (உ.வ.).

*[நாட்டு + அன்.]*

*'அன்' = படர்க்கை ஆண்பால் விகுதி*

**நாட்டுவன்**[2] *nāṭṭuvaṉ,* பெ. (n) பெரியகுடித்தனக்காரன்; leading ryot or cultivator.

**நாட்டுவாகை** *nāṭṭu-vāgai,* பெ. (n) வாகைமர வகையுளொன்று; a kind of common sirissia tree

*[நாடு + வாகை.]*

**நாட்டுவாதுமை** *nāṭṭu-vādumai.* பெ. (n.) வாதுமை மரவகையுளொன்று; a kind of country almound tree - Terminalia catappa.(L.)

*[நாடு + வாதுமை]*

பாதாம்பருப்பின் சுவையையொத்த பருப்பினைத் தரும். இம் மரம், இந்தியா முழுமையும் காணப்படுகிறது. 50 அடி உயரம் வளருந்தன்மைத்து. இம் மரத்தின் இலைகள் கிளைகளையொட்டியே அமைந்திருக்கும். சிறிய

காம்புகளை யுடையன. வெளிறிய வெண்ணிறமுள்ள, இம் மரத்தின் பூக்கள் சிறியன.

இம் மரத்தின் கொட்டைப்பருப்புகள் பாதாம்கொட்டையைப் போன்றவை. தித்திப்புச் சுவையுடையவை. உண்ணுவதற்குகந்தவை. வாதுமைக்கொட்டைகளினின்று, வடித்தெடுக்கும் எண்ணெய், சமையலுக்குப் பயன்படும். இம் மரத்தின் இலை, பட்டை முதலானவை, வண்ணக்கலவை செய்வதற்குப் பயன்படு மென்று சா.அக. கூறும்.

**நாட்டுவாழை** *nāṭṭu-vāḻai,* பெ. (n.) சிற்றூர்ப்புறத்தே விளையும் வாழை; a kind of country plantain.

மறுவ: நாட்டுமொந்தன், கதலிவாழை

*[நாடு + வாழை]*

*மலச்சிக்கலைப் போக்குந் தன்மையுள்ள இப் பழத்தைத் தொடர்ந்து உண்டு வந்தால், அரத்தக்கொதிப்பு அகலும். நோயினால் நலிந்த உடல் தேறும்.*

**நாட்டுவாறிகம்** *nāṭṭu-vāṟigam,* பெ. (n) நெருஞ்சில்; caltropes.

**நாட்டுவியவன்** *nāṭṭu-v-iyavaṉ,* பெ. (n) நாட்டதிகாரி (S.I.I ii, 352.); headman of a nāḍu, a territorial division

*[நாடு + வயவன் → வியவன்.]*

*வலிமைசான்ற நாட்டதிகாரி.*

**நாட்டுவினியோகம்** *nāṭṭu-viṉiyōgam,* பெ. (n.) பழையவரிவகை (S.I.I.V.95.); an ancient tax

*[நாடு + skt. விநியோகம் → வினியோகம்.]*

**நாட்டுவெண்டை** *nāṭṭu-veṇḍai,* பெ. (n) சிற்றூர்ப் புறத்தே விளையும் வெண்டைக்காய்; country. veṇḍaikkāy.

*[நாடு + வெண்டை.]*

**நாட்டுவேங்கை** *nāṭṭu-vēṅgai,* பெ. (n.) வேங்கை மரவகையுளொன்று; common kino-tree.

*[நாடு + வேங்கை.]*

**நாட்டுவேம்பு** *nāṭṭu-vēmbu,* பெ. (n.) வேப்பமரவகை; country margosa.

*[நாடு + வேம்பு.]*

**நாட்டுவேல்** *nāṭṭu-vēl,* பெ. (n.) வேலமரவகை; common babool tree

*[நாடு + வேல்.]*

**நாட்டுவெள்ளரி** *nāṭṭu-veḷḷari,* பெ. (n.) வெள்ளரிவகை (வின்.); a kind of cucumber

*[நாடு + வெள்ளரி.]*

**நாட்டுவைத்தியம்** *nāṭṭu-vaittiyam,* பெ. (n.) *நாட்டுமருத்துவம்* பார்க்க; see *nāṭṭu-maruttuvam*

*[நாட்டு +* Skt. *வைத்தியம்.]*

**நாட்டுவைத்தியர்** *nāṭṭu-vaittiyar,* பெ. (n) *நாட்டுமருத்துவர்* பார்க்க; see *nāṭṭu-maruttuvar* அவர் கைராசியான நாட்டுவைத்தியர். (உ.வ.)

*[நாடு + skt வைத்தியர்.]*

**நாட்டெரிவண்டு** *nāṭṭeri-vaṇḍu,* பெ. (n.) கொப்பளிக்கச் செய்யும் எரிவண்டுவகை; telini fly.

*[நாடு + எரிவண்டு.]*

**நாட்டெரு** *nāṭṭeru,* பெ. (n.) இயற்கையெரு; natural fertilise.

*[நாடு + எரு.]*

*நாட்டுப்புறத்தே, இயற் கையாகக் கிடைக்கும், ஆடு,மாடு ஆகியவற்றின் சாணம், சாம்பல், தழை, குப்பை முதலியன. நாட்டெருப்போட்டு, நல்விளைச்சல் கண்டு, நோயற்ற நலவாழ்வு வாழ்ந்தனர், நம்முன்னோர்.*

**நாட்டைக்குறிஞ்சி** *nāṭṭai-k-kuriñji,* பெ. (n.) பண்வகை; a musical mode.

*[நாட்டை + குறிஞ்சி.]*

பழங்காலத்தில், குறிஞ்சி நிலத்துப் பண்ணாக இருந்து, இடைக்காலத்தே தேவாரப்பண்களுள் ஒன்றாக மாறியது.

**நாட்டைபைரவி** *nāṭṭai-pairavi,* பெ. (n.) பண்வகையுளொன்று (பரத. ராக. பக். 102.); a specific melody type.

*[நாட்டை + குறிஞ்சி.]*

**நாட்டையர்**[1] *nāṭṭaiyar,* பெ. (n.) கிறித்தவ நல்லாயர்; pastor.

மறுவ. மேய்ப்பர். பேராயர்.

*[நாடு → நாட்டு + ஐயர்.]*

*திருக்கோயிலின் அல்லது திருப்பேரவையின் தலைமை தலைமை நல்லார்.*

**நாட்டையர்**[2] *nāṭṭaiyar.* பெ. (n.) ஊரகச் சிறுதெய்வப் பூசகர்; the priest for the village diety.

*[நாடு → நாட்டு + ஐயர்.]*

**நாட்டையலைத்தான்** *nāṭṭai-y-alaittāṉ,* பெ. (n.) மூலிகை வகையுளொன்று; a country herbal medicine

**நாட்டோடரிசி** *nāṭṭōḍariši,* பெ. (n.) வெள்ளைப் பூண்டு; garlic

**நாட்பட்டகழிச்சல்** *nāṭ-paṭṭa-kaḻiccal,* பெ. (n.) நீண்டநாட்களாகத் தொடர்ந்து ஏற்படும் வயிற்றுப்போக்கு; chronic diarrhoea.

*[நாள்பட்ட + கழிச்சல்.]*

*மருந்து உட்கொண்டும் சீரக்க முடியாத, வயிற்றுப்போக்கு.*

**நாட்பட்டகள்** *nāṭ-paṭṭa-kaḷ,* பெ. (n.) *நாட்படுதேறல்* பார்க்க; see *nāṭpaḍu-tēṟal.*

*[நாள்படு + கள் → நாட்பட்டகள்.]*

**நாட்பட்டசரக்கு** *nāṭ-paṭṭa-šarakku,* பெ. (n.) சத்து இல்லாத பழைய மருந்து; an old drug without effect.

**நாட்பட்டநோய்** *nāṭ-paṭṭa-nōy,* பெ. (n.) தீராத நோய்; chronic disease

**நாட்பட்டிரு–த்தல்** *nāṭ-paṭṭiru-,* 3 செ.கு.வி, (v.i.) நெடுங்காலமிருத்தல்; to stay for a long time. "*நாட்பட்டிருந் தின்ப மெய்தலுற்று*" (தேவா.29:3).

*[நாள் + படு + இரு–.]*

**நாட்படு—தல்** *nāṭ-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. நெடுங்காலந்தங்குதல்; to be long-standing as a chronic disease. 'நாட்பட்ட நோய்' (உ.வ.); 'நாட்பட்ட வேலை.' (உ.வ.). 2. பழமையாதல்; to become old, stale நாட்பட்ட மரம் (இ.வ.), நாட்பட்ட வீடு (உ.வ.). 3. தற்காலப் பயன்பாட்டிற்குத் தகுதியற்ற தாதல்; to become out of date. இச் செயல் நாட்பட்டது (இ.வ.).

*[நாள் + படு—.]*

**நாட்படுதேறல்** *nāṭ-paḍu-tēṟal,* பெ. (n.) வெளியூட்டும் புளிப்பேறிய கள்; toddy. "*தேட்கடுப்பன்ன நாட்படு தேறல்*" (புறம்.).

*[நாள்படு + தேறல்.]*

*ஓரிரு நாளில் இறக்கப்பட்டதும், காலங் கடந்ததால் தேள்கொட்டியது போன்ற புளிப்புச்சுவை மிக்கதுமான, தேறல்.*

**நாட்பணி** *nāṭ-paṇi,* பெ. (n.) 1. புதிதாக ஏற்கும் பணி; a new job. 2. *நாட்பணிவிடை* பார்க்க; see *nāṭ-paṇi-viḍai.*

*[நாள் + பணி.]*

**நாட்பணிவிடை** *nāṭ-paṇi-viḍai,* பெ. (n.) 1. அன்றாட வேலை (யாழ்.அக.); daily work 2. நன்முழுத்தத்தில் செய்யும் வேலை; work done in an auspicious hour

*[நாள் + பணிவிடை.]*

**நாட்பழக்கம்** *nāṭ-paḻakkam,* பெ. (n.) அன்றாடம் மேற்கொள்ளும் வழக்கமான செயல்; daily practice.

**நாட்பறை**[1] *nāṭ-paṟai,* பெ. (n.) நாழிகைப்பறை (சிலப்.3; 27. உரை.); hour drum.

*[நாள் + பறை.]*

**நாட்பறை**[2] *nāṭ-paṟai.* பெ. (n.) புதிதாக அமைக்கப்பட்ட பறை; a new drum

*[நாள் + பறை. ]*

முரசுவழியாக மன்னன் தெரிவித்த செய்தியை, ஊரகங்களில் பரப்பும் பயிற்சியாளர்க்கு, முதியோர் ஆக்கித்தரும் புதியபறை.

**நாட்பார்—த்தல்** *nāṭ-pār-* 4 செ.குன்றாவி. (v.t.) திருமண முதலிய மங்கல நிகழ்வுகட்கு நன்னாள் குறித்தல்; to fix an auspicious day, as for a marriage

*[நாள் + பார் —.]*

**நாட்பார்**[2]**—த்தல்** *nāṭ-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) நாட்காட்டியில் நல்ல நிகழ்விற்குத் தக்க நாள் பார்த்தல்; looking for an auspicious day in a calander.

*[நாள் + பார் —.]*

*விடுமுறை நாளையோ, வாழ்வியலுக்கு இன்றியமையாத பிறபுதிய செய்திகளையோ, நாட்காட்டியில் பார்த்து அறிந்து கொள்ளுதல்.*

**நாட்பு** *nāṭpu,* பெ. (n.) 1. ஆற்றல் வண்மை (வின்.); power, strength, force. 2. ஞாட்பு பார்க்க; see ñāṭpu. "*விழுமியோர் துவன்றிய வகன்க ணாட்பின்*" (பதிற்றுப்.45,5.).

*[ஞாட்பு → நாட்பு.]*

**நாட்பூ** *nāṭpū,* பெ. (n.) *நாட்போது (யாழ்.அக.)* பார்க்க; see *nāṭ-pōdu.*

*[நாள் + பூ.]*

**நாட்பொருத்தம்** *nāṭ-poruttam,* பெ. (n.) மணமக்கள் பிறக்கும் போது காணப்படும் நாண்மீன் பொருத்தம். correspondence between the viṇmīṉ (naṭcattiram) of the prospective bride and bridegroom(astrol.). *"நாட்டுகின்ற சோதிடத்தி னாண் பொருத்த நாட்பொருத்தம்"* (ஏரெழு.9.) 2. செய்யுண் முதன்மொழிப் பொருத்தத்துள், பாட்டுடைத் தலைவன் பெயரின், முதலெழுத்தின் நாண்மீனுக்கும், நூலின் முதன் மொழியின், முதலெழுத்தின் நாண்மீனுக்கும் உள்ள பொருத்தம் (வெண்பாப். முதன்.11); rule of propriety which enjoins that the nāṇmīṉ of the initial letter of a poem and that of the initial letter of its hero's name should agree, judged by established rules, one of ten, seyyuṇ-mudaṉ-moḻi-p-poruttam (poet.). 3. ஒருவனுக்குரிய நாண்மீனொடு பொருந்திய நாளினன்மை (வின்.); the auspicious lunar mansions connected with one nāṇ-mīṉ.

*[நாள் + பொருத்தம்.]*

**நாட்போது**[1] *nāṭ-pōdu,* பெ. (n.) அன்றலர்ந்த பூ; new blown, fresh flower. *"தாமரை முகிழ்விரி நாட்போது"* (சிறுபாண்.183).

*[நாள் + போது.]*

போது = மலர்ந்தும் மலரா நிலையில் உள்ள, அவிழ்மொட்டு.

**நாட்போது**[2] *nāṭ-pōdu,* பெ. (n.) குறித்தபொழுது; குறித்த நிகழ்வினைக் குறித்தநாளில், குறித்தநேரத்தில் செய்து முடித்தற்குரிய பொழுது; apt time

*[நாள் → பொழுது → போது.]*

**நாடக்கரிவாள்** *nāḍa-k-karivāḷ,* பெ. (n.) வெள்ளாடு; goat.

**நாடகக்கணிகை** *nāḍaga-k-kaṇigai,* பெ. (n.) நாட்டியப்பெண்; actress, dancing girl *"நாடகக்கணிகையர் தகுதியென்னார் தன்மை யன்மையின்"* (மணிமே. 24:23).

**மறுவ.** நாடகமகள்.

*[நடி + அகம் →நாடகம் →கணிகை.]*

கண் → கணி → கை =கணிகை.

கணிகை = பண்ணும், தாளமும் இயைய, செம்மையாகக் கணித்துச் சீர்தூக்கி ஆடும் கூத்தி. ஆடல், பாடல், அழகு என்னும் மூன்றிலும் குறைவின்றித் திகழ்ந்த சிலப்பதிகார மாதவி, சிறந்த நாடகக்கணிகை. இவள் தலைக்கோல் பட்டம் பெற்றவள். சிலம்பும், மணிமேகலையும், பூம்புகார் நகரத்தில் வாழ்ந்த நாடகக்கணிகையர் பற்றிய செய்திகளையே தெரிவிக்கும் காப்பியங்கள். தஞ்சைப்பெருவுடையார் கோயில் கல்வெட்டுகளில், நூற்றுக் கணக்கான நாடகக் கணிகையரின் பெயர், அவர்கள் வதிந்த வீடு, தெரு முதலான செய்திகள் இடம் பெற்றுள்ளன.

**நாடகக்கதைமாந்தர்** *nāḍaga-k-kadai-māndar,* பெ. (n) 1. நாடகத்தில் சிறப்புப்பாத்திரம் ஏற்று நடிப்போர்; dramatic characters. 2. *நாடகப்பாத்திரம்* பார்க்க; see *nāḍaga-p-pāttiram.*

*[நாடகம் + கதைமாந்தர்.]*

**நாடகக்கலை** *nāḍaga-k-kalai,* பெ. (n.) முத்தமிழில் ஒன்றாகிய நாடகமாகிய கவின்கலை; drama

*[நடி + அகம் →நாடகம் →கலை.]*

காலந்தோறும் நாடகக்கலை தமிழ் மொழியில் வளர்ந்து வந்த பாங்கு வருமாறு:–

(1.) கண்ணாடி:

ஒரு நாட்டின் பண்பை, நாகரிகத்தைக் கண்ணாடியாகக் காட்டக் கூடியன, அந் நாட்டின் கலைகளே ஆகும். ஒரு நாட்டின் கலையைக் கொண்டே, அந் நாட்டின் பண்பாட்டை வெளிநாட்டார் கணிக்க முடியும். கலை அருகினால், பண்பாடு அருகும்; பண்பாடு அருகினால் நாடே அருகிவிடும். அதனால்தான் பண்டைத் தமிழ்நாட்டில், இக் கலைகளையெல்லாம், அரசனே, போற்றிப் பாதுகாத்துப் பேணி வளர்த்திருக்கின்றான்.

நாடகங்களில் இருபெரும் பிரிவுகள் இருந்தன. அவை, "*வேத்தியல்*" என்றும், "*பொதுவியல்*" என்றும் கூறுவர். நாகரீகம் மிக்கவர், கலைப்பணியில் உயர்ந்தவர் ஆவர். மன்னர் பயன்கொள்ளுகின்ற நாடகங்களை, "***வேத்தியல்***" நாடகங்கள் என்றும், பொதுமக்கள் பயன்கொள்ளுகின்ற நாடகங்களை "***பொதுவியல்***" நாடகங்கள் என்றும் பிரித்தார்கள். வேத்தியல் நாடகங்கள் வேந்தர்கள் மடியிலே தவழ்ந்தன. அவர்கள் போற்றும்வரை, அவை வாழ்ந்து வளர்ந்தன. ஆனால் வேந்தர்கள், சிற்றரசர்களாகி அவர்கள் கையில் சிக்குண்டு, அவை வெறும் காமக் கூத்துக்கள் ஆனபின், அருகி ஒழிந்தன. அதன் பின்னர்தான், "*பொதுவியல்*" நாடகங்கள், தன் மரபை மீறி, வேற்றியலோடு பொதுவியலாகி, பல நாடகங்கள் தோன்றலாயின.

நாடகமே உலகம் என்று சேக்சுபியர் சொல்லுகின்றார். தமிழ் மக்கள் இறைவனையே, கூத்தனாக்கிக் கூத்தபிரானாக வழிபட்டவர்கள். எனவே, அவர்கள் மனிதர்களின் உணர்ச்சிகளையும், உள்ளங்களில் தோன்றும் புயலையும், தென்றலையும் நாடகமாக நடத்திக் காட்டினார்கள்.

(1) தொல்காப்பியம்:

தமிழ் இலக்கியத்திற்கு இன்று கிடைத்துள்ள தொன்மையான நூல் தொல்காப்பியமாகும். தொல்காப்பிய காலத்திற்கு முன்னாலும், தமிழ்ச்சங்கங்கள் இருந்தன வென்றும், எண்ணிலடங்காத தமிழ் இலக்கியங்கள், இசை நூல்கள், நாடக நூல்கள், அவற்றிற்குரிய இலக்கண நூல்கள் இருந்தனவென்றும், ஆனால் அவையனைத்தும் கடல்கோள்களால் அழிந்தனவென்றும் வரலாற்றுச் சான்றுகள் கூறுவதால், அந் நாளில் இருந்த நாடகக்கலையின் இலக்கியம், இலக்கணம் என்னவென்று உணர முடியாமற் போயிற்று.

தொல்காப்பியத்தில் நாடகத்தைக் குறித்துப் பல குறிப்புகள் உள்ளன. '*மெய்ப்பாடு*' என்பனவற்றை ஆராய்ந்த பகுதிகள் உள்ளன. நாடகத்தைப் "*பண்ணை*" என்று தொல்காப்பியர் கூறினார். சுவை பற்றி சொல்லுகின்ற பகுதியிலே, முதல் நூற்பாவில் "*பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருள்*" என்று கூறுகிறார். நாடகம் மனதிற்கு மகிழ்ச்சியை விளையாட்டாக உண்டாக்குவதால், "*பண்ணை*" என்ற பெயர் ஈந்தார் போலும். மற்றும் தொல்காப்பியத்திலே ஆசிரியர் "நாடகவழக்கு" என்று ஒரு வழக்கைச் சொல்லுகின்றார். எனவே, அக் காலத்திலேயே, உலகியல் வழக்கு வேறு, நாடகவழக்கு வேறு என்று பகுத்து வைத்திருந்தார்கள் என்று தெரிகின்றது. உலகியல்வழக்கு என்பது, உள்ளதை உள்ளவாறு சொல்வது என்றும், நாடகவழக்கு என்பது, வாழ்க்கை நிலையைச் சற்று மிகைப் படுத்திக் காட்டுவது என்றும் தொல்காப்பியத்தின்கண் குறிக்கப்பட்டுள்ளன. இதுகாறும் கூறியவற்றால், நாடகத்தமிழ் மிகமிக தொன்மை வாய்ந்தது என்றும், மிக்க சிறப்புப் பெற்றதென்றும், தெரிகிறது.

தொன்மையில், நாடகத்தமிழ், கூத்துக்கள் மூலம் வளர்ந்தது. வசைக்கூத்து, புகழ்க்கூத்து, வேத்தியல் கூத்து, சாந்திக்கூத்து, ஆரியர் கூத்து, தமிழ்க்கூத்து, தேசிக்கூத்து, மார்க்கக்கூத்து, தெருக்கூத்து முதலியவை இருந்திருக்கின்றன என்று அறிகிறோம்.

நாடகம் ஒன்றில்தான், இலக்கியச் சுவையையும், இசைச்சுவையையும் மெய்ப்பாடாகிய சுவையையும், ஒருசேரக் காணலாம் என்பது வெள்ளிடைமலை; இலக்கியங்கள் எழுதலாம்; இசைப் பாட்டுக்களையும் எழுதலாம். ஆனால், பாட்டு என்பதற்கு இசைத்தால்தான் பாட்டாகும்.

அதுபோல, நாடகத்தையும் நடித்தால்தான் நாடகமாகும். மேலை நாட்டினரைப் போல நம் நாட்டு நாடகங்கள், வெறும் படிப்பதற்கான நாடகங்கள் என்றும், நடிப்பதற்கான நாடகங்கள் என்றும், பிரித்து நின்றது இல்லை. நம் நாட்டு நாடகங்கள் நடிப்பதற்காகவே எழுதப்பட்டன. நாடகங்கள் படிப்பதற்கு மட்டும் எழுதுவது என்பது, தமிழனின் கருத்தில் தோன்ற வேயில்லை.

(2) திருக்குறள்:

திருக்குறளில் துறவற இயலில் ''*நிலையாமை*'' என்னும் அதிகாரத்தில், ''*கூத்தாட்டு அவைக்குழாத்தற்றே பெருஞ்செல்வம் போக்கும் அது விளிந்தற்று*'' என்று ஒரு குறள் வருகின்றது.

இதிலிருந்து, இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன்பே, தமிழகத்தில் நாடக அரங்கங்களும், கூத்தாட்டங்களும் இருந்தன என்பதை அறியலாம். அது மட்டுமன்று. பொய்யாப் புலவர் இயற்றிய, முப்பாலில் ஒரு பாலான காமத்துப்பாலில் உள்ள 250 பாடல்களும், ''*நாடக*''மே யாகும். இப் பாடல்களில், வள்ளுவர்பெருமான் தான் புகாமல், கதைமாந்தர்களையே பேச வைத்திருக்கின்றார். உண்மையிலேயே நாடகத்தமிழுக்கு இக் காமத்துப்பாலை, "*முதல் மேற்கோள் நூல்*" என்றே குறிப்பிட வேண்டும்.

(3) சிலப்பதிகாரம்:

சிலப்பதிகாரக் காலத்தில் ஆடலரங்குகள், மக்களுடைய எண்ணத்தையெல்லாம் கவரக் கூடிய பகுதியாகிய, ஊரின் நடுவே அமைந்திருப்பதாகக் கூறப்படுகின்றது.

> "*ஊரகத்தாசி உளைமான் பூண்ட தேரகத்*
> *தோடும் தெருவுமுகம்நோக்கிக்*
> *கோடல் வேண்டும் ஆடரங்கதுவே*"

என்ற "*அரங்கேற்ற காதை*" வரிகள், அந்த நாளில் நாடகத்திற்கு மக்களிடையே இருந்த செல்வாக்கையே, புலப்படுத்துகின்றது.

மணிமேகலையில், ''*நாடகக்காப்பிய நன்னூல் நுனிப்போர்*'' என்று ஓர் இடத்தில் வருகின்றது. அக் காலத்துப் புலவர்கள் நாடகக் காப்பியங்களையும், அக் காப்பியங்களுக்குரிய, இலக்கணங்களையும் திறனாய்வு செய்து, அவற்றைப்பற்றிச் சொற்போர் செய்தனர் என்பதும் தெரிகின்றது. இவற்றாலும், அந் நாளில் நாடகத்திற்கிருந்த செல்வாக்கு நன்கு புலப்படுகின்றது. சிலப்பதிகாரக் காலத்திலே கூத்தச் சாக்கையன், சாக்கைக்கூத்தாடினான். விரிசடைக் கடவுளுடைய ஆட்டத்தை ஆடினான். அவ் வாட்டத்தை மெய்ப்பாட்டுடன் நடித்துக் காட்டினான் என்றெல்லாம் வருகிறது. இந்த ஆட்டம், பிறரால் விளக்கிச் சொல்ல வேண்டிய தேவையில்லாமல், கண் படைத்தோரும், கருத்துப் படைத்தோரும், கண்டு மகிழ ஆடின "*நாடகமாகும்*".

(4) திருவாசகம்:

திருவாசகத்தில் நாடகத்தைப் பற்றி பல குறிப்புகள் வருகின்றன. ''*நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து நான் நடுவே வீடகத்தே புகுத்திடுவான் மிகப் பெரிதும் விரைகின்றேன்*'' மாணிக்கவாசகப் பெருமான் தானியற்றிய திருவாசகத்தின் ஒரு பகுதியான, திருச்சதகத்தில் தான் ஒரு போலி (பக்தன்) அன்பன் என்று சொல்ல வந்தவர், நாடகம் என்ற சொல்லையும், நடிப்பு என்ற சொல்லையும், பயன்படுத்தியிருக்கிறார். "*இழு தொடு காட்டிடை நாடகமாடி*" என்று ஏழாவது பாடலிலும், "*நகவே தகும் எம்பிரான் என்னை நீ செய்த நாடகமே*" என்று பத்தாவது பாடலிலும், நாடகம் என்ற சொல்லை ''*ஆட்டம்*'' என்ற பொருளில் பயன்படுத்தியிருக்கிறார். எனவே, அக் காலத்திலும், நாடகம் நல்லதொரு சிறப்பினைப் பெற்றிருந்தது என்பதற்கு, இது ஒரு சான்றாகும்.

(5) 17–ஆம் நூற்றாண்டு:

17–ஆம் நூற்றாண்டில் பள்ளு, குறவஞ்சி முதலிய இசை நாடகங்கள் தோன்றின. நாடகத்தோடு நடனமும் ஒன்றி வளர்ந்தன. இவைகளிலே, மோன நாடகம் என்றும், இசையுடன் கலந்த நடன நாடகமென்றும், இருவகையாக தனித்தனியே வளர்ந்தன. சேர நாட்டிலிருந்த, "*கதகளி*" நாடகங்கள், நடன நாடகங்களுக்கு ஓர் பெரும் எடுத்துக் காட்டாகும்.

**(6) 18, 19—ஆம் நூற்றாண்டு:**

**18—**ஆம் நூற்றாண்டில் அருணாசலக் கவிராயர் "*இராம நாடகத்தை*" இயற்றினார். பின்பு (புராண இதிகாச) தொன்ம நாடகங்கள் பல தோன்றின. நந்தனார் நாடகம், இக் காலத்தில் இயற்றப்பட்டு, மிகவும் செல்வாக்குப் பெற்றது.

**19—**ஆம் நூற்றாண்டுக்கு மேல் நாடகப் பாணி தமிழகத்திற்கு வந்தது. அந்தப் பாணியை ஒட்டித் தமிழகத்திலும் நாடகங்கள் எழுந்தன. அவைகளில் குறிப்பிடத்தக்கவை, பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் "*மனோன்மணியம்*", சூரிய நாராயண சாத்திரிகள் எழுதிய, "*மான விஜயம்*", "*ரூபாவதி*", "*கலாவதி*" ,ஆகிய நாடகங்களாகும்.

**(7) 20—ஆம் நூற்றாண்டு:**

20—ஆம் நூற்றாண்டில் ஆங்கிலேயர் வருகையின் காரணமாகவும், அம் மொழியின் மீது ஏற்பட்ட காதலாலும், நாடகத்தமிழ் பயில்வோருக்கு ஒரு புத்துணர்ச்சியை அளித்தது. நம் தாய்மொழியின் மீது ஏற்பட்ட பற்று மிகுதியினால், கிரேக்க மொழியிலே தோன்றிய, உயர்ந்த நாடகங்களையும் செர்மன், பிரஞ்சு, வடமொழி ஆகியவைகளில் தோன்றிய உயர்ந்த நாடகங்களையும், ஆங்கில மொழியில் தோன்றிய "*சேக்சுபியர்*" எழுதிய நாடகங்களையும், ஆர்வத்தோடு படித்து, அவ் வாறான நாடகங்களைத் தமிழுலகுக்கு அளிக்கவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது. வயிற்றுப் பிழைப்புக்கென்று ஆரம்பிக்கப்பட்ட நாடக அரங்குகள் முதல், உண்மைக் கலையிலே ஆர்வம் கொண்டு இலங்கும் தமிழ்க்கலை மன்றங்கள் வரை, பிற நாட்டு நாடகங்களைத் தழுவிய தமிழ் நாடகங்கள் நூற்றுக்கணக்காக நடத்தப்பட்டன. இப்புதிய நூற்றாண்டில் பணி செய்த பெரியார்களுள் மறக்க முடியாதவர்கள், பம்மல் சம்பந்தமுதலியாரவர்களும், சங்கரதாசு சுவாமி களும் ஆவார்கள்.

சம்பந்த முதலியாரவர்கள், சேக்சுபியர் நாடகங்களை மொழிபெயர்த்தும், மனிதப் பண்பாட்டை விளக்கும் நாடகங்களை எழுதியும், மேலைநாட்டுப் பாணியை அப்படியே கையாண்டு, ஆங்கிலமொழி கற்ற இளைஞர் சமுதாயத்தை நாடகத்துறைக்கு ஈர்த்து விட்டார்.

சங்கரதாசு சுவாமிகள் நடத்திய நாடகங்கள் வேறு வகையைச் சேர்ந்தவை. அந் நாடகங்களில் நவரசமும் இருக்கும். கலித்தொகையும், குறுந்தொகையும், நற்றிணையும், நாலடியாரும், திருக்குறளும் விளையாடி வரும். அந்நாடகத்தில் வைக்கப்பட்ட கருத்துக்கள், தருமநெறியை வலியுறுத்துவதாகவே அமைந்து வரும். அவர் நாடகங்களிலே மறக்கமுடியாதவை, "*அபிமன்பு சுந்தரி*", "*சீமந்தனி*", "*பவளக்கொடி*" ,"*மணிமேகலை*", "*பிரபுலிங்க லீலை*" என்பன போன்று பலவாகும். அடுத்து ஆசிரியர் எஸ். டி. சுந்தரம் அவர்களின் "*கவியின் கனவு*", "*ஜீவா*", "*தீட்டிய உயிரோவியம்*", கு. சா. கிருட்டிணமூர்த்தி எழுதிய "*அந்தமான் கைதி*", அரு. இராமநாதன் எழுதிய "*இராசராச சோழன்*", அறிஞர் அண்ணா எழுதிய "*சந்திரோதயம்*", கலைஞர் கருணாநிதி எழுதிய "*மந்திரகுமாரி*" என்பன போன்ற பல நாடகங்களும் இன்றுள்ளன.

அன்றும், இன்றும், **தமிழ் நாடகக் கலை**

**(8) உருசியாவில்:**

மாசுகோ நகரத்தின் மையத்திலுள்ள "*பஃரூசியன் தியேட்டர் மியூசியம்*" என்ற கட்டிடத்தில், உருசிய நாட்டின் நாடக வரலாற்றைக் காட்சிப் பொருளாக வைத்திருக்கிறார்கள். உருசிய நாட்டில் நாடகங்கள் வளர்த்த முறைகள், அந் நாடகங்களை வளர்த்த பெரியார்களின் வாழ்க்கை, அவர்கள் அத் துறையிலே பட்ட இன்னல்கள், துன்பங்கள் ஆகியவைகளை அழகாகச் சித்தரித்து, பார்ப்போர் எளிதில் அறிந்து கொள்ளும் வண்ணம் வைக்கப்பட்டு உள்ளன. தமிழ்நாட்டின் நாடக வரலாற்றை அதேபோல் காட்சிப் பொருளாக வைத்திருக்கும் திரையரங்கமோ, காட்சிச் சாலையோ ஒன்று அமைக்க ஏற்பாடு செய்தால், நாடகக்கலை மென்மேலும் செழிக்கும் என்பதில் ஐயமில்லை!

(9) அனைத்துலக நாடக அமைப்பு:

மாந்தரினத்தைச் சேர்ந்தவர்கள் எந்தமொழியைப் பேசுகிறவரானாலும், எந்த தேசத்தவரானாலும், அனைவருக்கும் உள்ள இதயத் துடிப்புகள், உணர்ச்சிகள், இன்பதுன்பங்கள், அன்பு, ஈவு, இரக்கம், துன்பம், தீக்குணம் ஆகிய குணநலன்கள் அனைத்தும் ஒரே வகையினவாகவே இருக்கும். இந்த உலகப் பொது உணர்ச்சிகளை, குணநலன்களை உலகத்தோர்க்கு அடிக்கடி எடுத்துக் காட்ட வேண்டும். இதற்காக, அனைத்துலக நாடக அமைப்பு ஒன்றை ஏற்படுத்த வேண்டும். அவ் வமைப்பின் மூலம், ஆண்டுதோறும், ஒவ்வொரு நாட்டிலும், பல மொழிகளில் உள்ள நாடகங்களை நடத்தி, மக்கள் கண்டு இன்புறுமாறு செய்யவேண்டும். இப்படிச் செய்வதனால், அனைத்துலக அமைப்புக்கே உலகில் அமைதி காண இது உயிர்மூச்சாக அமையும்.

**நாடகக்கவி[1]** *nāḍaga-k-kavi,* பெ. (n.) *நாடகக் காப்பியம்* பார்க்க; see *nāḍaga-k-kāppiyam.* *'நாடகக் கவிசெய்யவல்ல நல்ல நூலை வல்லபுலவனும்'* (சிலப்.3:44,உரை).

*[நடி + அகம் → நாடகம் + skt. கவி.]*

**நாடகக்கவி[2]** *nāḍaga-k-kavi,* பெ. (n.) **1.** நாடகத்தை எழுதிய கவிஞன்; the poet who create the drama. **2.** நாடகத்தினிடையில் உணர்ச்சிக்கேற்ப வரும் பண்ணோடு இயைந்த பாட்டு; the musical songs in drama.

*[நாடகம் + skt. கவி.]*

ஒரு நாடகம் மக்கள் மனத்தில் நிலைக்க வேண்டுமாயின், பண்ணோடு இயைந்த இசைப்பாட்டு விரவிவரவேண்டும். நாடகக்கவி யெனுமிச் சொல் பண்ணார்ந்த பாட்டினையும், அப் பாப்பாடும் பாவலனையுங் குறித்து வந்தது எனலாம்.

**நாடகக்காப்பியம்** *nāḍaga-k-kāppiyam,* பெ. (n.) நாடகத்தமிழ் நூல்; dramatic work, drama. *"நாடகக் காப்பிய நன்னூ னுணிப்போர்"* (மணிமே. 9:80)

*[நடி + அகம் →நாடகம் + காப்பியம்.]*

முத்தமிழும் விரவிவரும் சிலப்பதிகாரம் நாடகக்காப்பியத்துள் தலையாயது. அடுத்தநிலையில் பேரா. சுந்தரம் பிள்ளை யவர்களால் எழுதப்பெற்ற, மனோண் மணியம், நாடகக் காப்பியக்கூறுகள் நிரம்பப்பெற்றது.

**நாடகக்காரன்** *nāḍaga-k-kāraṉ,* பெ. (n.)
**1.** நாடகம் ஆடுவோன்; actor in a drama.
**2.** ஒழுக்கக் கேடன், காமுகன்; profligate
**3.** ஏதுமறியாதது போல் பாசாங்கு செய்பவன் சூழ்ச்சியாளன் (இ.வ.); hypocrite,
**4.** போலியாகப் பகட்டுபவன்; பகட்டுப் பேர்வழி; pretender.

*[நடி + அகம் →நாடகம் + காரன்.]*

**நாடகச்சந்தி** *nāḍaga-c-candi,* பெ. (n.) முகம், படிமை முகம் (பிரதிமுகம்), கருப்பம், வளைவு, துய்த்தல் என்று ஐவகைப்பட்ட நாடகக்கதைப் பொருத்து (சிலப்.3:13,உரை); juncture or division of a drama, reckoned to be five in number, viz, mugam, paḍimai mugam, (piradimugam), karuppam, vaḷaivu, tuyttal.

*[நடி + அகம் →நாடகம் + சந்தி.]*

தொடக்கம் (முகம்), வளர்ச்சி (படிமை முகம்), சிக்கல் (கருப்பம்), வளைவு (திருப்பம்–climax), தீர்வு (துய்த்தல்) எனும் ஐங்கூறுகளும் நாடகத்திற்கு இன்றியமையாது வேண்டப்படுவன. இவ்வைந்து கூறுகளும், புனைகதை கட்கும், பொருந்தும்.

**நாடகசாலை** *nāḍaga-šālai,* பெ. (n.) **1.** கூத்து நிகழ்த்தும் அரங்கம் (சிலப்.25:14,அரும்.); stage, play-house, theatre. **2.** நாடகக்கணிகை (வின்.); dancing girl. **3.** கோவிலுக்கு நன்கொடையாளர் இறைவனைக் காணவரும் போது, அவர்க்கு முன் திருக்கோயில் நடனமகளிர், நாட்டியஞ்செய்து அழைத்து வரும் கோயில் மதிப்பு (மரியாதை); honour done to a donor to a temple, by which he is received with nautch as he approaches the temple.

*[நடி + அகம் → நாடகம் + சாலை.]*

**நாடகசாலையர்**[1] *nāḍaga-sālaiyar,* பெ. (n.) கூத்தர் (தொல்.பொருள்.168. உரை. பக்.741.); dancers.

*[நாடகம் + சாலையர்.]*

**நாடகசாலையர்**[2] *nāḍaga-šālaiyar,* பெ. (n.) நாடகம் செவ்வனே இயங்க உறுதுணை புரிவோர்; dramatists and technicians who help for the successful performance of the drama.

*[நாடகம் + சாலையர்.]*

**நாடகத்தமிழ்** *nāḍaga-t-tamil,* பெ. (n.) முத்தமிழுள் கூத்துப்பற்றி வழங்கும் தமிழிலக்கியப் பகுதி; the class of tamil literature which pertains to dances or to dramatic representation of puranic stories, one of mu-t-tamil *'இனிநாடகத் தமிழில் தேவபாணி வருங்கால்'* (சிலப்.6,35,உரை.).

*[நாடகம் + தமிழ்.]*

முத்தமிழ்ப்பிரிவில் மூன்றாவதாய் அமைவது

ஒருகா:– நாடு + அகம் → நாடகம்.

அகத்தை நாடுதல் நாடகமாகும்.

த. நாடகம் → skt nāḍaga. (t.)

நடி + அகம் → நாடகம். அகம் என்பது வீடு, நாடு, உலகு, காதல் ஆகியவற்றைக் குறிப்பதாகி, அவற்றுள் நடப்பதை – உண்மை நிகழ்வை – காட்டுவது நாடகம் என்றும் கூறுவார்.

கதை தழுவிய ஆடலே நாடகம் என்றும் கூறுவர். "*நாடகம் என்பது கலைக்காக*" என்பர்.

இயலும் இசையும் இணைந்து கதை தழுவிவரும் கூத்தே நாடகம் என்பதால், முத்தமிழும் ஒருங்கே அடைந்திருப்பது நாடகத்தமிழாகும்.

இதனை, "நாடகத்தின் கண்ணாடி, பாமர மக்களின் பல்கலைக்கழகம்" என்றும் கூறுவர்.

இது கூத்துக்கலையாகத் தொடங்கி, நாட்டியமாகி, நாட்டிய நாடகமாகி பின்பு நாடகமாக செழித்து வளர்ந்தது.

நாடகம் நிகழுமிடத்தை அடிப்படையாக வைத்து மேடை நாடகம், வீதிநாடகம் வானொலிநாடகம், தொலைக்காட்சி நாடகம் என்றவாறு வகைப்படுத்துவர்.

பயன்பாட்டைப் பொறுத்து நடிப்பதற்குரிய நாடகங்கள், படிப்பதற்குரிய நாடகங்கள், படிப்பதற்கும் நடிப்பதற்குமுரிய நாடகங்கள் என்று மூவகைப்படுத்துவர்.

உள்தன்மையைப் பொறுத்து:–

தொன்ம (புராண) நாடகங்கள், வரலாற்றுநாடகங்கள், குமுகாய (சமுதாய) நாடகங்கள், நகைச்சுவை நாடகங்கள், துப்பறியும் நாடகங்கள் என ஐவகைப்படுத்துவர்.

**நாடகத்தரம்பையர்** *nāḍaga-t-tarambaiyar,* பெ. (n.) மேனகை, அரம்பை, உருப்பசி, திலோத்தமை என்ற தேவகணிகையர் (பிங்.); celestial dancing-girls, four in number, viz., mēṉagai, arambai, uruppaši, tilōttamai.

*[நாடகம் + அத்து + அரம்பையர்.]*

"அத்து" = சாரியை.

**நாடகத்தரு** *nāḍaga-t-taru,* பெ, (n.) நாடகப்பாடல் வகை; a kind of song in drama.

*[நாடகம் + தரு.]*

**நாடகத்தி** *nāḍagatti,* பெ, (n.) 1. கூத்து நிகழ்த்தும் பெண் (யாழ்.அக.); actress. 2. விலைமகள் (வின்.); immodest woman.

*[நாடகம் + அத்து + இ.]*

'அத்து' = சாரியை.

"இ" பெண்பால் ஒருமைவிகுதி.

**நாடகத்துறை** *nāḍa-t-tuṟai,* பெ. (n.) நடனவித்தை (வின்.); dramatic art, art of dancing.

*[நாடகம் + துறை .]*

கதை தழுவிய கூத்துத்துறை. திரைப்படத்துறையின் புதியவடிவினால், நாடகத்துறை, பொலிவிழந்து நலிந்து வருவது கண்கூடு. பண்டைக்காலத்தே இத் துறை இசை தழுவியதாக இருந்ததற்குச் சிலப்பதிகாரம் நற்சான்றாகும்.

**நாடகநடி-த்தல்** *nāḍaga-naḍi-,* 4 செ.கு.வி, (v i.) *நாடகமடி (வின்.)-*. பார்க்க; see *nāḍagam-aḍi-.*

*[நாடகம் + நடி -.]*

**நாடகநூல்** *nāḍaga-nūl,* பெ. (n.) நாடக விலக்கணத்தைக் கூறும் நூல்; work on dramaturgy. '*நாடநூல்களி னமைந்த முறைமை யாகலான்*' (சிலப்.3:146,உரை.).

*[நாடகம் + நூல்.]*

நாடகவியல் நூல் என்று அழைக்கப்பெறும். நாடகக்கலை, கோட்பாடுகள் முதலான நாடகவியலை உள்ளடக்கியது.

**நாடகநூலார்** *nāḍaga-nūlār,* பெ, (n.) நாடக நூல் இயற்றிய ஆசிரியர்; writers on dramaturgy. '*'நாடகநூலார் இவ்விருப்பை ஐம்பதென விரிவரையரையாற்கூறி*" (சிலப்.8:25,உரை.).

*[நாடகம் + நூலார்.]*

நூலார் = நூலாசிரியர்.

**நாடகப்பண்** *nāḍaga-p-paṇ,* பெ, (n.) நாடகத்தில் வழங்கும் பண்வகை (வின்.); a tune sung on the stage.

*[நாடகம் + பண்.]*

**நாடகப்பரத்தை** *nāḍaga-p-parattai,* பெ, (n.) *நாடகக்கணிகை* பார்க்க; see *nāḍaga-k-kaṇigai.*

*[நாடகம் + பரத்தை.]*

**நாடகப்பாங்கு** *nāḍaga-p-pāṅgu,* பெ, (n) நாடகக்கதை மாந்தர் நாடகக்கதைக்கு ஏற்றவாறு, தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொள்ளும் செயல்; involvement role-play.

*[நாடகம் + பாங்கு.]*

**நாடகப்பாடகர்** *nāḍaga-p-pāḍagar,* பெ, (n.) நாடகத்தில் உரத்தகுரலிற் பாடுவதிலும், நடிப்பதிலும் வல்லார் (இ.வ.); actor as well as singer in a drama.

*[நாடகம் + பாடகர்.]*

**நாடகப்பாத்திரம்** *nāḍaga-p-pāttiram,* பெ, (n.) நாடகமேடையில் நடிப்போன் (இ.வ.); actor in a drama, dramatic person.

*[நாடகம் + பாத்திரம்.]*

**நாடகப்பிரியா** *nāḍaga-p-piriyā,* பெ, (n.) மேளகருத்தாக்களுளொன்று (சங்.சந்.47); a primary paṇ.

*[நாடகம் + skt.பிரியா.]*

**நாடகப்பின்பாட்டு** *nāḍaga-p-piṉ-pāṭṭu,* பெ, (n.) நாடகக் கதைமாந்தர்தம் பின்புலத்திலிருந்து பாடுபவர்; play-back singer of a drama.

*[நாடகம் + பின்பாட்டு.]*

நாடகம் தொய்வின்றித் தொடருதற் பொருட்டும், நாடகம் பார்ப்போருக்கு உவகை ஊட்டுதற்பொருட்டும், நாடகக் கதைமாந்தர் பாடலைப் பாடுந் தன்மையர் இவர்தமை நாடகப் பின்பாட்டு என்று அழைப்பர்.

**நாடகப்பெண்** *nāḍaga-p-peṇ,* பெ, (n.) ***நாடகக்கணிகை (யாழ்.அக.)*** பார்க்க; see nāḍaga-k-kaṇigai.

*[நாடகம் + பெண்.]*

**நாடகம்** *nāḍagam,* பெ, (n.) 1. தாளவொத்துக்கு இயைய நடிக்கும் நடம் (பிங்.); measursed dance. 2. கதை தழுவி வரும் கூத்து; dramatic performance play, drama. 3. இன்பியல் துன்பியல் எனும் இருவகைக்கூத்து; comedy and tragedy of play or drama. ***"கதை மாந்தர்தம் உருவம் பூண்டு ஒரு கதையை இயல்பாக நடந்தது போல் நடித்துக்காட்டுவது"*** (சிலப்,3:12,உரை.); 4. ***நாடகத்தமிழ்*** பார்க்க; see *nāḍaga-t-tamiḻ.* இயலிசை நாடகம்.

**த.** நாடகம்→ Skt. nātaga

*[நடி + அகம் →நாடகம் = நடம் (பிங்.) கதை தழுவி வருங் கூத்து " நாடக வழக்கினும் உலகியல் வழக்கிலும் பாடல் சான்ற புலனெறி வழக்கம்." (தொல்.அகத்.53.) (வே.க.3:54.)]*

பன்னெடுங்காலமாக இசைதழுவி யமைந்த கூத்து வகையே, காலப்போக்கில் கதை தழுவிய நாடகமாக மாறிற்று.

நாடகம் பற்றி மொழிஞாயிறு கூறுவது:-

நாடகம் என்பது தென்சொல்லே. நள்ளுதல் = பொருந்துதல், ஒத்தல். நள் →நளி என்பது ஓர் உவமஉருபு. நளிதல் = ஒத்தல். நளி → நடி **ஒ.நோ:** களிறு → கடிறு.

நடித்தல் என்பது, இன்னொருவனைப் போல் அல்லது இல்லாததை, உள்ளதுபோலச் செய்து காட்டுதல்.

**த.** நடி → நடம் → நட்டம் → ந்ருத்த (வ.)

ஒ.நோ: வட்டம் – வ்ருத்த (வ.).

நட்டம் → நட்டணம், நட்டணை.

நட்டம் → நட்ட(பிரா.).

ஒ.நோ: வட்டம் → வட்டணம் → வட்டணை.

**த.** நட்டணம் → நர்த்தன (வ.)

நட்டம் → நட்டுவன்.

ஒ.நோ: குட்டம் → குட்டுவன்.

நடி → நடனம். ஒ.நோ: படி → படனம் = படிப்பு.

நடி → நாடகம். ஒ.நோ: படி → பாடகம் = பாதத்திற் படிந்து கிடக்கும் அணி.

முத்தமிழ் தொன்றுதொட்டே இயலிசை நாடகம் என்றே வழங்கும்.

நாடகக்கலை கூத்து, நடனம், நாடகம் என முத்திறப்படும்.

குதித்தாடுவது கூத்து. அது வேத்தியல், பொதுவியல்; உலகியல், தேவியல்; வசைக் கூத்து, புகழ்க்கூத்து; வரிக்கூத்து, வரியமைதிக் கூத்து (வரிச்சாந்திக் கூத்து); அமைதிக் கூத்து (சாந்திக் கூத்து), வேடிக்கைக் கூத்து (விநோதக் கூத்து); அகக்கூத்து, புறக் கூத்து, விளையாட்டுக் கூத்து, வினைக் கூத்து; வெற்றிக்கூத்து, தோல்விக்கூத்து; எனப் பல்வேறு வகையில் வருங்கூத்தை வேத்தியல், பொதுவியல் என இருவகையுள் அடக்குவர்.

நடனம் அல்லது நடம் என்பது, அழகுற ஆடுவது. அது நூற்றெட்டு உடற்கரணங் களோடும், கைகால் கண்வாய் முதலிய உறுப்புகளின் தொழில்களோடும் கூடியது. கைவினைகள் எழிற்கை, தொழிற்கை, பொருட்கை என முத்திறப்பட்டு, பிண்டி அல்லது இணையா வினைக்கை யெனப்படும். ஒற்றைக்கை வண்ணம் முப்பத்து மூன்றும், பிணையல் அல்லது இணைக்கை யெனப்படும் இரட்டைக் கைவண்ணம் பதினைந்தும் கொண்டனவாகும்.

நடம், நடனம் என்னும் தென்சொற்கள், வடமொழியில் நட்ட, நட்டன என்று வலிக்கும். நட்ட என்பதினின்றும் 'நாட்ய' என்னும் சொற் பிறக்கும்.

நடி என்னும் முதனிலை வடமொழியில் இல்லை. நிருத்த என்னும் சொல்லின் "ந்ருத்" என்னும் அடியையே, முதனிலையாக ஆள்வர்.

தமிழ் நடனம் இன்று பரத நாட்டியம் என்று வழங்குகின்றது. பரத சாத்திரம் கி.மு. 4-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. அதற்கும் முந்தியது தமிழ்ப் பரதமே.

"*நாடகத்தமிழ்நூலாகிய பரதம் அகத்திய முதலாகவுள்ள தொன்னூல்களு மிறந்தன,*" என்று அடியார்க்குநல்லார், சிலப்பதிகாரவுரைப் பாயிரத்திற் கூறியிருப்பதால் அறிந்துகொள்க.

நாடகம் என்பது கதை தழுவிவரும் கூத்து. அது பொருள், கதை(யோனி), தலைமை (விருத்தி), நிலை (சந்தி), சுவை, வகுப்பு (சாதி), குறிப்பு, விறல் (சத்துவம்), நளிநயம் (அபிநயம்), சொல், சொல்வகை. வண்ணமா, வரி, சேதம் என்னும் பதினான்குறுப்புகளை யுடையது.

நாடக அரங்கு நல்ல கெட்டி நிலத்தில், ஈரடி நீளமுள்ள கோலால், எண்கோல் நீளமும் எழுகோல் அகலமும், ஒருகோல் உயரமும் உள்ளதாக அமைக்கப்பட்டு, மேலே முகடும், ஒருமுகவெழினி, பொருமுக வெழினி, கரந்துவர லெழினி என்னும் மூவகைத் திரைகளும், புகுவாயில், புறப்படவாயில் (Exit) என்னும் இருவாயில்களும், உடையதாயிருந்தது.

தமிழ் நாடகமெல்லாம் இசைப் பட்டுள்ளவையே (operas)

**நாடகம்²** *nāḍagam,* பெ. (n.) தேரையர் இயற்றிய மருத்துவ பாரதம் என்னும் தமிழ் மருத்துவ நூல்; a medical science by Thēraiyar.

**நாடகம்விளையாடு-தல்** *nāḍagam-viḷai-āḍu-,* 5 செ.கு.வி, (v.i.) *நாடகமாடு-* (*வின்.*) பார்க்க; see *nāḍagam-āḍu-.*

*[நாடகம் + விளையாடு-.]*

**நாடகமகள்** *nāḍaga-magaḷ,* பெ, (n.) 1. நாடகமாடுங் கணிகை; dancing- girl. "*நாடக மகளிர்க்கு நன்கனம் வகுத்த*

*வோவியச் செந்நூல்*" (மணிமே.2:30.). 2. *நாடகக்கணிகை* பார்க்க; see *nāḍaga-k-kaṇigai.*

*[நாடகம் + மகள்.]*

நாடகமாடுங்கணிகை, ஆடலும் பாடலும், அழகும் எனும் முத்திறனும், குறைவின்றி நிறைவாகப் பெற்றிருக்கவேண்டும்.

**நாடகமடி—த்தல்** *nāḍagam-aḍi-,* 5 செ.கு.வி, (v.i.) 1. பாசாங்கு செய்தல் (யாழ்.அக.); to play the hypocrite 2. புறத்தே மாற்றுருக்காட்டுதல்; to make an outward show. 3. வீணே, பகட்டாரவாரங் காட்டுதல்; to be showy, ostentatious 4. சினம் முதலியவற்றால், பிறருக்கு எரிச்சலூட்டும்படி, வெறுப்புடன் நடத்தல் (வின்.); to be arrogant or affected, as a woman in displeasure.

*[நாடகம் + அடி—.]*

**நாடகமரபு** *nāḍaga-marabu,* பெ, (n.) நாடக அழைப்பில் தொன்றுதொட்டு கடைப்பிடிக்கும் உத்தி; traditional techniques of drama.

*[நாடகம் + மரபு—.]*

நாடகத்தில் தொன்றுதொட்டு கடைப்பிடிக்கப்படும், அடிப்படைக் கலைநுணுக்கம்.

**நாடகமாடு—தல்** *nāḍagam-āḍu-,* 5 செ.கு.வி, (v.i.) 1. கூத்து நடித்தல்; to act or play on the stage, to dance. "*கழுதொடு காட்டிடை நாடக மாடி*" (திருவாச.5.7); 2. *நாடகமடித்தல்* பார்க்க; see *naḍagam-aḍi-.*

*[நாடகம் + ஆடு—.]*

**நாடகமுகப்பு** *nāḍaga-mugappu,* பெ, (n.) நாடகமேடை; stage. "*நாடக முகப்பிற் றழுங்கு பல்லியம்*" (உபதேசகா.சிவபுண்.102.).

*[நாடகம் + முகப்பு.]*

**நாடகமேடை** *nāḍaga-mēḍai,* பெ, (n.) நாடகமாடும் அரங்கு (இ.வ.); stage.

*[நாடகம் + மேடை.]*

நாடகமேடையின் அமைப்புப் பற்றி இளங்கோவடிகள், "*நூனெறி மரபின் அரங்கம் அளக்கும் காலளவு இருபத்து நூல் விரலாக, எழுகோல் அகலத்து எண்கோல் நீளத்து, ஒருகோல் உயரத்து உறுப்பினதாகி*" என்று அரங்கேற்றுகாதை (99—103)யில் கூறியுள்ளார்.

**நாடகர்** *nāḍagar,* பெ, (n.) *நாடகியர் (வின்.)* பார்க்க; see *nāḍagiyar.*

*[நடி + அம் → நாடகம். கதைதழுவி வருங் கூத்து. நாடகம் → நாடகர்.]*

*அகத் தெழும் உணர்வை, அஃதாவது உள்ளக் குறிப்பைத் திறலுடன், புறத்தே மெய்ப்பாடு மிளிர, வெளிப்படுத்துபவர்.*

**நாடகவரங்கம்** *nāḍaga-v-araṅgam,* பெ, (n.) நாடகம் நிகழுமிடம்; drama theatre.

**த.** நாடகம் → skt. நாட்டக்க.

*[நடி + அம் → நாடகம். + அரங்கம்.]*

(ஒ.நோ.) படி + அகம் → பாடகம். அர் → அரங்கு + அம் → அரங்கம்.

அரங்கு = அறை.

**த.** அரங்கம் → skt ரங்க.

நாடகவரங்கம் = நாடகம் நிகழும் கூடம் அல்லது அரங்கம்.

**நாடகவழக்கு** *nāḍaga-vaḻa-kku,* பெ. (n.) நாடகத்திற்குரிய நெறி; dramatic usage- 2, புனைந்துரை வழக்கு; idealism in poetry, opp, to ulagiyal vaḻakku. *"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்"* (தொல்.பொருள்.53).

*[நாடகம் + வழக்கு.]*

**நாடகவியல்** *nāḍaga-v-iyal,* பெ. (n) நாடகநூல் பார்க்க; see nāḍaga-nūl.

*[நாடகம் + இயல்.]*

பரிதிமாற் கலைஞரால், கி.பி. 1897–ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட நூல். நடிகர் இயல்பு, நடிப்பின் தன்மை, நாடகவரங்க அமைப்பு போன்றவற்றை, நூற்பாவடிவில் இயற்றப்பட்ட தலைச்சிறந்த நாடக இலக்கணநூலாகும்.

**நாடகவிருத்தி** *nāḍaga-virutti,* பெ, (n.) சாத்துவதி, ஆரபடி, கைசிகி, பாரதி என்ற நால்வகை நாடகநடை (சிலப்.3:13.உரை.); the style of dramatic art, of four kinds, viz., šāttuvadi, ārapaḍi, kaišigi, pāradi.

*[நாடகம்+Skt.விருத்தி.]*

**நாடகவுத்தி** *nāḍaga-v-utti,* பெ, (n.) *நாடகமரபு* பார்க்க; see *nāḍaga-marabu.*

*[நாடகம்+உத்தி.]*

**நாடகன்** *nāḍagaṉ,* பெ. (n.) 1. நடனமாடுவோன் (பிங்.); dancer. *"பதஞ்சலிக்கருளிய பரம நாடக" (திருவாச.வ:138).* 2. நடிகன்; actor.3. நடிப்பையும், நடனத்தையும், வாழ்க்கைத் தொழிலாகவுடையர்; player.

*[நடி + அகம் → நாடகம் → நாடகன்.]*

**நாடகாங்கம்** *nāḍagāṅgam,* பெ.(n.) 1. அகத்துணர்வைத் தெரிவிக்கும் மெய்ப்பாட்டசைவு (வின்.); gesture. 2. நிற்கும் நிலை, மனப்பாங்கினை வெளிப்படுத்தும் கலைப் பாங்கு; pose.

*[நாடகம் + அங்கம் → நாடகவங்கம் → நாடகாங்கம்.]*

**நாடகி** *nāḍagi,* பெ. (n) நாடகமாடுபவள் (இ.வ.); actress.

*[நாடகம்→நடகி.]*

**நாடகியர்** *nāḍagiyar,* பெ. (n.) 1. கூத்தர் (திவா.); dancers 2. நடிகர்; actor. 3. *நாடகன்[3].* பார்க்க; see *nāḍagaṉ.[3].*

*[நாடகம் + நாடகர் →நாடகி + அர்.]*

**நாடகீயர்** *nāḍagīyar,* பெ. (n.) *நாடகியர் (வின்.)* பார்க்க; see *nāḍagiyar*

*[நாடகியர் → நாடகீயர்.]*

**நாடங்காய்** *nāḍaṅgāy,* பெ. (n.) சுரைக்காய் (யாழ்ப்.); bottle gourd.

**நாடடிப்படு–த்தல்** *nāḍaḍi-p-paḍu-,* 20 செ.கு.வி, (v i.) நாட்டைவென்று கீழ்ப்படுத்தல் (யாழ்.அக.); to subjugate a country.

*[நாடு + அடிப்படு–.]*

**நாடவர்** *nāḍavar,* பெ. (n) தேசத்தார்; countrymen, people of the country "*நாடவர்*

*பழித்துரை பூணது வாக"* (திருவாச.4:69.). *"நாடவர் நந்தமை ஆர்ப்ப ஆர்ப்ப நாமும் அவர்தம்மை ஆர்ப்ப ஆர்ப்ப".* (திருவாசக.9:28).

*[நாடு → நாடவர்.]*

**நாடறிவான்** *nāḍarivāṉ,* பெ. (n.) நாடுகளை அறியும் நிலவன் (சந்திரன்.); moon, as witnessing all countries. *"நாடறிவான் பொன்புந்தி"* (சினேக்.தாது.2).

*[நாடு + அறிவான்.]*

**நாடன்** *nāḍaṉ,* பெ. (n.) 1. தேசத்தான்; inhabitant, countryman. *"வானாடர் கோவுக்கே"* (திருவாச.13:5 ). *"வான நாடனே வழித்துணை மருந்தே"* (தேவா.) 2. ஆளுந் தலைவன்; ruler, lord of a country. *"தென் பாண்டி நாடனைக் கூவாய்"* (திருவாச. 18:2). 3. குறிஞ்சிநிலத் தலைவன்; chief of kuriñji tract *"நாட னென்கோ வூர னென்கோ"* (புறநா.49). 4. கார்த்திகை விண்மீன் (திவா.); the third(naksatra) viṇmīṉ.

*[நாடு + அன் → நாடன்.]*

**நாடன்பருத்தி** *nāḍaṉ-parutti,* பெ. (n.) பருத்தி வகை (மூ.அ); coconada cotton-. Gossypium nadam.

*[நாடன் + பருத்தி.]*

**நாடன்பூ** *nāḍaṉ-pū,* பெ. (n) மருத்துவகுணமுள்ள மலர்; a kind of medicinal flower.

*[நாடன் + பூ.]*

**நாடன்மஞ்சள்** *nāḍaṉ-mañjaḷ,* பெ. (n.) மஞ்சள் வகை; a kind of turmeric. *"திருச் சுண்ணத்துக்கு நாடன்மஞ்சள் நாற்பதின் பலமும்"* (S.I.I iii,187.).

*[நாடன் + மஞ்சள்.]*

**நாடா** *nāḍā,* பெ, (n.) 1. நெசவுக்கருவி வகை; weaver's shuttle, commonly made of a small hallow bamboo *"தார் கிடக்கும் நாடாப்போல மறுகுவர்"* (சீவக.3019,உரை). 2. கட்டுதற்கு உதவும்படி ஆடைக்கரையில் நெய்யப்பட்ட நாற்பட்டை; ribbon, tape. நாடா வைத்துத் தை. 3. யூதர்கள் தம் வேதத்தொடர்களை எழுதிச் சிறுதோற்பையிலடக்கஞ் செய்து அணிந்து கொள்ளும் அணிவகை(கிறித்.); phylactery, frontlet.

த. நாடா→ ப. நாரா.

நாளம் → நாளி → நாழி = உள்துளைப்பொருள்.

நாழி → நாடி = அரத்தக்குழாய்.

நாடி → நாடா = நெசவுக்குழல்.



**நாடாஎக்குகை** *nāḍā-ekkugai.* பெ. (n) நாடாவின் இடையே பாவுநூல் தாண்டிச்செல்கை; shuttle's thread flying between two ends of the warp.

*[நாடன் + எக்குகை.]*

**நாடாக்கம்பம்** *nāḍā-k-kambam,* பெ. (n.) நாடாவில் தார் செருகுவதற்குரிய இரும்புக்கம்பி; steel bobbin.

*[நாடா+ கம்பம்.]*

**நாடாக்குமிழ்** *nāḍā-k-kumiḻ,* பெ. (n.) நூல்தறி நாடாவின் இருமுனையிலும் இரும்பால் செய்யப்பட்டக் கூம்பு; iron knob fixed at both ends of shuttle.

*[நாடா+ குமிழ்.]*

**நாடாட்சி** *nāḍāṭci,* பெ. (n.) தேசத்தை ஆளுகை (S.I.I.ii,512.); administeration of a country.

*[நாடு + ஆட்சி→* நா(ட்)டாச்சி.*]*

ஒ.நோ. ஊராட்சி, நகராட்சி.

**நாடாத்தந்தம்** *nāḍā-t-tandam,* பெ. (n.) தந்தத்தாலான பட்டுத்தறி நாடாவின் குமிழ்; ivory shuttle's knob of the silk-loom.

*[நாடு+* skt *தந்தம்.]*

**நாடாத்தி** *nāḍātti,* பெ. (n.) சான்றார் (சானார்) பெண்ணுக்குரிய சாதிப்பெயர்; title of sāṉṟār woman.

*[நாடான் → நாடாத்தி.]*

(ந.நோ.) *குறவன் → குறத்தி.*

*மறவன் → மறத்தி.*

*குயவன் → குயத்தி.*

*'அத்தி' பெ.பா. ஈறு.*

**நாடாநகரமைப்பு** *nāḍā-nagar-amaippu,* பெ. (n.) சீரான, ஒரே மாதிரியான கட்டட அமைப்புகளைக் கொண்ட நகர வளர்ச்சி; ribbon development.

*[நாடா + நகர்+ அமைப்பு.]*

**நாடாப்புழு** *nāḍā-p-puḻu,* பெ. (n.) 1. நீண்ட தட்டையான பூச்சி; tape-worm. 2. பெரிய நாடாப்புழு; tape-worm of man.

*[நாடா + புழு.]*

**நாடாப்பூச்சி** *nāḍā-p-pūcci,* பெ. (n.) வயிற்றுப் புழுவகை; tape-worm.

*[நாடா+ பூச்சி.]*

**நாடார்** *nāḍār,* பெ. (n) *நாடான்* பார்க்க; see *nāḍāṉ.*

**நாடாவில்** *nāḍā-vil,* பெ. (n.) நூல்தறி நாடாவில் உள்ள வில்போன்ற தகடு; a steel plate fixed in the shuttle of the loom.

*[நாடா+ வில்.]*

**நாடாள்வார்** *nāḍāḷvār,* பெ. (n.) 1. பழனிமலைப் பகுதியிலுள்ள ஒரு சாதியார்; a caste in the Paḻaṉi region 2. ஆளுங்கட்சியர்; ruling party.

*[நாடு + ஆள்வார்.]*

**நாடான்** *nāḍāṉ,* பெ. (n) சான்றார் சாதிப் பெயர்; title of the sāṉṟār.

*[நாடு → நாடான்.]*

**நாடி**[1] *nāḍi,* பெ. (n.) **1.** நாட்டிலுள்ளவள்; woman of a country. "*மிதிலை நாடிக்கும்*" (கம்பரா.சித்திர.48.). **2.** நாட்டையுடையாள்; queen of a country., "*மையறு சிறப்பின் வானநாடி*" (சிலப்.11:215);

*[நாடன்→ நாடி.]*

**நாடி**[2] *nāḍi,* பெ. (n.) **1.** (வாதம்) வளி அல்லது ஊதை, பித்தம், சளி முதலானவற்றைக் குறிக்கும் தாதுநரம்பு; நாழிகைக்கணக்கில் குருதியோடும் குழாய். pulse, of three kinds, viz., vaḷi-nāḍi(vādam), pitta-nāḍi, silēṭṭuma-nāḍi "*மூளையெலும்புகள் நாடி நரம்புகள்*" (திருப்பு–918.). **2.** உடல் முறுக்கு; vitality நாடி தளர்ந்த பிறகுதான் சிலருக்குத் தாம் செய்த தவறுகள் நினைவுக்கு வருகின்றன (இ.வ.). **3.** உட்டுளையுள்ள இடை, பிங்கலை, சுழிமுனை என்ற மூச்சுக் குழாய்கள்; tubular, organs of breath, of which there are three viz., iḍai, piṅgalai, suḻimuṉai **4.** அரத்தக்குழாய் முதலியன; artery, vein tendon, sinew, muscle, ligament **5.** யாழ் நரம்பு; lute- string.**6.** உட்டொளை யுடையது (அரு.நி.); anything tubular, tubular stalk, as of a plant. **7.** பூவின்தாள் (யாழ்.அக.); flower- stalk. **8.**மயிர் (அக.நி.); human hair. **9.** நாழிகை (24 நிமையம்) (சூடா); the indian hour of 24 minutes.

*[நாள் + நாளி →நாழி →நாடி ]*

*அரத்தம் அல்லது மூச்சுக்குழாய். ஊதை(வாத), பித்தம், கோழை. நாடி, நாடித்துடிப்பு (வ.வ.19.).*

**நாடி**[3] *nāḍi,* பெ. (n) கணிய நூல் (சோதிடம்); astrological treatise.

*[நள் → நடு → நாடு → நாடி.]*

**நாடி**[4] *nāḍi,* பெ. (n.) மோவாய்; chin. நல்ல வார்த்தை சொல்லி நாடியைத் தாங்கினான் (நெல்லை); உதவி கேட்டு நாடியைப் பிடித்துக்கெஞ்சினார் (இக்.வ.).

*[தாடை → தாடி → நாடி.]*

**நாடி**[5] *nāḍi,* பெ, (n) **1.** மூக்கு (தைலவ. தைல.); nose. **2.** மாளிகையின் மேற்பாகத்த தோர் உறுப்பு; a component part of the upper storey of a mansion. "*நாடிமுக நான்கதனின்*" (சீவக.598.).

*[நாளி → நாழி → நாடி.]*

**நாடிஅழுந்தல்** *nāḍi-aḻundal,* பெ. (n.) நாடி நடைக்குறவு; sinking of pulse.

*[நாடி + அழுந்தல்.]*

நாடி அழுந்தல் **16** வகைப்படும் இதுபற்றிச் சா.அ்க. கூறுவது:–

1. அற்று நிற்றல்.
2. சிதறி ஓடல்.
3. கழன்று காணல்.
4. அழுந்தி நிற்றல்.
5. உதறி நிற்றல்.
6. விரைந்து (கதிப்பொடு) துடித்து நிற்றல்.
7. தணித்துத் தளரல்.
8. வேகமாய் ஓடல்.
9. மாறி ஓடல்.
10. நடுங்கி ஓடல்.
11. இரண்டுற ஓடல்.
12. அடுத்தடுத்தோடல்.
13. விரிந்து ஓடல்.
14. கூர்மையாய் ஓடல்.
15. புழுப்போலூர்தல்.
16. வலித்து ஓடுகை.

**நாடிக்கட்டி** *nāḍi-k-kaṭṭi,* பெ. (n.) *நாடி வித்திரதி (இங்.வை.)* பார்க்க; see *nāḍi-vittiradi.*

*[நாழி → நாடி + கட்டி.]*

**நாடிக்கதிப்பு** *nāḍi-k-kadippu,* பெ. (n.) 1. நாடிக்குழலின் வாய் சிறுத்துப்போகும் தன்மை; the undue augumentation. 2. நாடிநடையின் விரைவு; (சா.அக.); rapid pulse

*[நாடி + கதிப்பு.]*

நாடிக்குழல்கள் தடித்துப்போவதினால் நாடிக்குழாய் வாயில் உண்டாகும் மாற்றம் சுருங்குதல் தன்மை.

**நாடிக்கபாடம்** *nāḍi-k-kabāḍam,* பெ. (n) அரத்தம் பின்னிட்டு ஓடாதபடித் தடுக்கும் நாடிப்பூட்டு (சா.அக.); semilunar valves of the vessels.

**நாடிக்கமலம்** *nāḍi-k-kamalam,* பெ. (n.) மூக்கினின்று வடியும் நீர்; the watery discharge from the nose.

**நாடிக்கவசம்** *nāḍi-k-kavašam,* பெ. (n.) நாடிச்சுவரின் உள், நடு, வெளி ஆகிய மூன்று பகுதிகள்; the three coats of the walls of an artery.

*[நாடி + Skt. கவசம்.]*

**நாடிக்காயம்** *nāḍi-k-kāyam,* பெ. (n.) நாடிக்குழலில் ஏற்படும் சிதைவு; injury or wound to blood vessels.

*[நாடி + காயம்.]*

அரத்தக்குழலில் ஏற்படும் அழிபாடு.

**நாடிக்குழல்** *nāḍi-k-kuḻal,* பெ. (n.) செங்குருதியைக் கொண்டும் செல்லும் குழல் (சா.அக.); arterial tube conveying the bright red blood.

*[நாடி + குழல்.]*

**நாடிக்குறி** *nāḍi-k-kuṟi,* பெ, (n.) வளி(வாத), பித்த, கோழை நாடிகளின் குறிப்பு; indication of the pulse.

*[நாழி → நாடி + குறி.]*

**நாடிக்குறிப்பு** *nāḍi-k-kuṟippu,* பெ. (n) அரத்தவோட்ட நிலைமை; the state of blood in the arteries.

*[நாடி → குறிப்பு.]*

**நாடிகம்** *nāḍigam,* பெ. (n.) 1. பொட்டிக்கீரை; bristle leaved jew's mallow. 2. தொண்டை; wind-pipe throat

*[நாடி → நாடிகம்.]*

**நாடிகரணம்** *nāḍi-karaṇam,* பெ. (n.) தண்டைப்போன்ற கால்களுடைய பறவை; stalk legged bird.

**நாடிகருப்பம்** *nāḍi-karuppam,* பெ.(n.) மரமஞ்சள் (சங்.அக.); tree turmeric

**நாடிகுடிலம்** *nāḍi-kuḍilam,* பெ. (n) வளைந்து அல்லது குறுக்காக ஓடும் நாடி நடை; a bent or crooked movement of the pulse

**நாடிகுணம்** *nāḍi-kuṇam,* பெ. (n.) மூன்றுவகை நாடியின் தன்மைகள்; the three characteristic symptoms of the pulse.

*[நாடி + குணம்.]*

**நாடிகூடம்** *nāḍi-kūḍam,* பெ. (n.) திருமணம் உறுதிசெய்யுங்கால், பார்க்கும் கோள்சேர்க்கை; planetary conjuction consulted before a matrimonial alliance is fixed(astrol.)

*[நாடி+ கூடம்.]*

**நாடிகெர்ப்பம்** *nāḍi-kerppam,* பெ. (n) நாடிகருப்பம் பார்க்க; see nāḍi-karuppam.(ச.அக.).

*[நாடி+ skt. கெர்ப்பம்.]*

**நாடிகெற்பம்** *nāḍi-keṟpam,* பெ. (n.) மரமஞ்சள்; tree turmeric.

**நாடிகேரளம்** *nāḍi-kēraḷam,* பெ. (n.) தென்னை மரம்; cocoanut tree.

**நாடிகேளம்** *nāḍi-kēḷam,* பெ. (n) தென்னை(யாழ்.அக.); coconut tree.

*[நாளிகேரம் → நாடிகேளம்.]*

*நாளி → நாடி. கேரம் →கேளம். நாடி= மூங்கிலொத்த புறக்காழ்த்தென்னை. மூங்கில் போன்றே, தென்னையும், குமரி நாட்டுத் தொன்மையை உணர்த்தும் சொல்லாகும்.*

**நாடிகை** *nāḍigai,* பெ. (n) குருதிக்குழாய்; artery or vein.

*[நாடி→நாடிகை.]*

**நாடிசுத்தி** *nāḍi-sutti,* பெ.(n.) ஓகஞ்செய்வதற்கு நாடியைத் தூய்மைப்படுத்துகை; purification of pulse for yōga practice

*[நாடி+ skt. சுத்தி.]*

நாடி = செங்குருதியோடுங்குழல்.

**நாடிஞானம்** *nāḍi-ñāṉam,* பெ. (n.) நாடியின் தன்மையை அறியும் அறிவு; knowledge of pulse.

*[நாடி→ஞானம்.]*

**நாடித்துடிப்பு**[1] *nāḍi-t-tuḍippu,* பெ. (n.) 1. குருதியோட்டத்தினால் உடம்பிற் பலவிடங்களிற் காணும் படபடப்பு; the beating of the pulse felt at several parts of the body owing to the circulation of blood. 2. நாடி வேகமாய் அடித்தல்; rapit pulsation

*[நாடி+ துடிப்பு.]*

குதிக்கால், உந்தி, மார்பு, கைம்மூலம் சந்து, கழுத்து, காதடி, மணிக்கட்டு, கவின் துண்டம் ஆகியன நாடிநடையை உடம்பிற் கண்டறியத்தக்க விடங்களென சா.அக. குறிப்படும்.

**நாடித்துடிப்பு**[2] *nāḍi-t-tuḍippu,* பெ. (n.) அரத்தம் (இதயம்) நெஞ்சாங்குலையிலிருந்து விட்டுவிட்டுப் பாய்வதால் அரத்தக்குழாய் (தமனி) விரிந்து சுருங்கி ஏற்படுத்தும் துடிப்பு; pulse. மணிக்கட்டைப் பிடித்துப் நெற்றிப்பார்த்தால், நாடித்துடிப்பை உணரலாம்.

*[நாடி+ துடிப்பு.]*

**நாடித்தூக்கம்** *nāḍi-t-tūkkam,* பெ. (n.) நாடியொடுக்கம்; sinking of the pulse

*[நாடி+தூக்கம்.]*

**நாடித்தொகுதி** *nāḍi-t-togudi,* பெ. (n.) பலநாடிகள் சேர்ந்த கூட்டம் (சா.அக.); group of arteries

*[நாடி+தொகுதி.]*

**நாடித்தொந்தம்** *nāḍi-t-tondam,* பெ. (n.) மூன்றுவகை நாடிகளின் பிணைப்பு; the pulse interchanging of three humours

**நாடித்தோற்றம்** *nāḍi-t-tōṟṟam,* பெ. (n.) 96(அங்குலம்) விரலஅளவுள்ள உடம்பில் காணப்படும் 72000 நரம்புகள்; there are 72,000 nerves in the 96 inches body.

**நாடிதயம்** *nāḍidayam,* பெ. (n.) குழலின் வழியாக இழுத்தல் அல்லது குடித்தல்; sucking or drawing through a tube.

**நாடிதரங்கம்** *nāḍi-daraṅgam,* பெ. (n) நஞ்சுவகையு ளொன்று; a kind of poison.

**நாடிதாது** *nāḍi-tādu,* பெ. (n.) உடம்பின் ஆக்க மூலப்பொருளைக் கொண்டு செல்லும் தசைக்கட்டு நிரம்பிய வலிமை வாய்ந்த நரம்பிழை; nervous tissue.

*[நாடி+தாது.]*

**நாடிதாரணை** *nāḍi-tāraṇūai,* பெ. (n.) 1. நாடியோட்டம் பார்க்க; see nāḍi-y-ōṭṭam. 2. நாடிகளின் நடைமுறை (வின்); the system of nerves and arteries with their ramifications.

மறுவ. நாடிநடை.

ஒரு நிமையத்திற்கு 30 அடிதூரம் பாய்ந்து ஓடும் செவ்வரத்தக் குழல்களின் துடிப்பே, நாடிதாரணை யெனப்படும். மருத்துவ முறைப்படி நாடிதாரணையை மிக நுண்மையாக அறியவேண்டின். கணுக்கைக்கருகில் உள்ள மணிக் கட்டினை அழுத்திப் பார்த்து அறியலாம்.

**நாடிநடை** *nāḍi-naḍai.* பெ.(n.) 1. *நாடியோட்டம்* பார்க்க; see *nāḍi-y-ōṭṭam.* 2. *நாடிதாரணை* பார்க்க; see *nāḍi-tāraṇai.*

*[நாடி+ நடை.]*

நெஞ்சாங்குலை சுருங்கி விரிவதன்மூலம், உண்டாகும், செவ்வரத்தக்குழல்களின் துடிப்பே, நாடிநடை. சுருங்கக்கூறின் செவ்வரத்தக் குழல்களின் அரத்தவோட்ட நிலைமை, நாடிநடை எனப்படும்.

**நாடிநரம்பு** *nāḍi-narambu,* பெ. (n.) அரத்தக்குழலும், நரம்பும் (சா.அக.); blood vessels and nerves "*மூளையெலும்புகள் நாடிநரம்புகள்*" (திருப்பு.918).

*[நாடி+ நரம்பு.]*

**நாடிநாளம்** *nāḍi-nāḷam,* பெ. (n) செவ்வரத்தமும், காரரத்தமும் ஓடும் குழல்; artery and vein

*[நாடி+ நாளம்.]*

**நாடிநிலை** *nāḍi-nilai,* பெ. (n.) நாடியின் நிலைமை; state of the pulse.

*[நாடி + நிலை.]*

**நாடிநூல்** *nāḍi-nūl,* பெ. (n.) உடம்பில் நாடிகள் இயங்கும் தன்மையைக் கூறும் நூல்; a treatise on pulsation

**நாடிப்பத்திரம்** *nāḍi-p-pattiram-,* சேம்பு;, cocoa root (சா.அக.)

**நாடிப்பயிற்சி** *nāḍi-p-payiṟci,* பெ. (n.) நாடியைத் தெரிவு செய்கை; examination of the pulse, feeling the pulse.

*[நாடி + பயிற்சி.]*

**நாடிப்பரீட்சை** *nāḍi-p-parīṭcai,* பெ.(n.) *நாடிப்பயிற்சி* பார்க்க; see *nāḍi-p-payiṟci.*

*[நாடி + skt. பரீட்சை.]*

**நாடிபார்–த்தல்** *nāḍi-pār-,* 4 செ.குன்றாவி, (v.i.) தாது பார்த்தல்(யாழ்.அக.); to feel the pulse

*[நாளி →நாடி + பார்]*

*மணிக்கட்டில் விரலால் அழுத்தி நாடியை உணர்தல்.*

இந் நாடி பார்த்தலாலேயே, உயர் அரத்தவழுத்தத்தினையும், குறைந்த அரத்தவழுத்தத்தினையும், மருத்துவரால் அறிவியலும். அன்று முதல் இன்று வரை நாட்டுமருத்துவத்திலும் ஆங்கில மருத்துவத்திலும், நாடிபார்த்து, உடல் நலத்தை மருத்துவர் கணிப்பர்.

**நாடிமண்டலம்** *nāḍi-maṇḍalam,* பெ. (n.) **1.** சூரியவீதி (வின்.), நிலநடுக்கோடு; celestial equator, equinoctial. **2.** நரம்புமண்டலம்; nervous region. **3.** நாடிநடையைக் குறிப்பிடக்கூடிய இடங்கள்; the places in which the human body, where in the pulsation is perceivable.

*[நாடி + மண்டலம்.]*

*கோளங்களின் இருதுருவங்களுக்கு இடையிலுள்ள நடுவட்டக்கோடு, அஃதாவது, நிலவுலக ஊடச்சுக்குச் செங்குத்தான தளமுடைய, வான்கோள் வட்டம்.*

**நாடிமருத்துவம்** *nāḍi-maruttuvam,* பெ. (n.) ஊதை, பித்தம், கோழை என்னும் முந்நாடியையும் நாடி, நாடித்துடிப்பு அல்லது நாடிநடையறிந்து செய்யும் மருத்துவம் South Indian system of medical treatment.

**மறுவ.** சித்தமருத்துவம்.

*[நள் → நாளம் → நாளி → நாழி → நாடி+மருத்துவம்.]*

அறிவரால் வளர்க்கப்பெற்ற மருத்துவமே நாடி மருத்துவம். முதற்கண் ஊதை, பித்தம், கோழை என்னும் முத்திற நாடியையும் ஆய்ந்து, நாடிதுடிப்பையும் உணர்ந்து, நோயின் தன்மைக்கு ஏற்றவாறு, செந்தூரச்சுண்ணம், வேர்களால் உருவாக்கிய மருந்துகளினால் செய்யப்படும் மருத்துவம். தமிழ் மருத்துவக்கலை, சித்தரால் வளர்க்கப்பெற்றது. நாடிபிடித்துநோயின் தன்மையை அறிந்து செய்யப்படுவதே நாடிமருத்துவம். நாடிமருத்துவர் தமிழகத்தின் அனைத்துச்சிற்றூர்களிலும் வதிந்து, நாடிமருத்துவக் கலையினை நன்கு வளர்த்துள்ளனர்.

மாந்தர்தமை நூற்றுக்கணக்கான ஆண்டுகள் வாழ்விப்பதும், நோயினை வேரொடு களைவதும், நாடி மருத்துவத்தின் தலையாயச்சிறப்பெனின் மிகையன்று. வள்ளுவப் பொருந்தகை நாடி மருத்துவம் பற்றிக் கூறுங்கால், "*மிகினும் குறையினும் நோய்செய்யும் நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்று*" (குறள்,941). எனக் குறித்துள்ளது அறிக.

ஊதை, பித்தம், கோழை என்னும் முத்திற நாடியையும் நாடி. அதனால் இற்றைக் கருவிகளைக் கொண்டு தலைசிறந்த தேர்ச்சிபெற்ற மேலை மருத்துவரும் கண்டுபிடிக்க முடியாத, நோயின்தன்மையை

"*நோய்நாடி நோய்முதல்நாடியது தணிக்கும் வாய்நாடி வாய்ப்பச்செயல்*" (குறள்,648.) என்று, வள்ளுவர் வகுத்த வண்ணம், நாடிபிடித்துப் பண்டுவஞ் செய்யும் சித்தமருத்துவனின் செயல், தெய்வத்திறமாம்.

நாடி பார்க்கும் திறமில்லாதவன் மருந்தனே யன்றி, மருத்துவனாகான் இந்திய மருத்துவம் எனப்படுவது யாதெனின் நாடிபார்த்துச் செய்யப்படும் நாட்டுமருத்துவமே ஆகும்.

"*வேர்பார், தழைபார், மெல்ல, மெல்லச் செந்தூரச் சுண்ணம் பார்*" என்பது நாடிபார்த்துச் செய்யப்படும் நாட்டுமருத்துவப் பழமொழி, "*ஆயிரம் வேரைக் கொன்றவன் அரைமருத்துவன்*" (பழ.) என்பது "*ஆயிரம் பேரைக் கொன்றவன் அரைமருத்துவன்*" என்னும் பழமொழியின் திரிபே. இங்கு, வேர் → பேர் (வேர் என்பது பேர்) என்று மக்கள் பேச்சுவழக்கில் வழக்கூன்றியுள்ளமை அறிக.

நாடி மருத்துவமென்பது யாதெனின், உடம்பில் நாடிநடையைக் குறிக்கும், உந்தி, மார்பு, கைம்மூலம், சந்து, கண்டம், காதடி, இருகை, கவின்துண்டம் முதலானவற்றில் உள்ள நாடியை ஆய்ந்து, உந்தியில் தோன்றும் ஊதையையும், மார்பிலுறையும் பித்தத்தையும், தலையில் படியும் கோழையையும், நீக்குவதேயாகும்.

**நாடிமூங்கில்** *nāḍi-mūṅgil,* பெ. (n.) குழாய் மூங்கில்; hollow bamboo.

**நாடியழற்சி** *nāḍi-y-alaṟci,* பெ. (n) செவ்வரத்தக் குழாய்களில் ஏற்படும் வீக்கம்; inflammation of an artery.

**நாடியழுந்து—தல்** *nāḍi-y-aḻundu-,* 5செகுன்றாவி. (v.t.) நாடியனது நடை குறைதல்; to come down the function or rate of pulse. "*நாடியழுந்தியதால் அவர், அதிகநாள் தாங்கமாட்டார்*" (இ.வ.).

*[நாடி + துடிப்பு.]*

வாணாளில் இறுதிக்காலத்தே, சிறிது சிறிதாக, நாடித்துடிப்புக் குறைதல்.

**நாடியளவு** *nāḍi-y-aḷavu,* நாடிநடையின் வேகத்தினளவு – வளி(வாதம்)1, பித்தம்1/2, கோழை(கபம்) 1/4 இவ்வளவேயிருப்பின் உடம்பில் நோயில்லையெனக் கொள்ளப்பெறும் (சா.அக.); vaḷi, pittam and kabam in normal sate must be in the proportion of 1:1/2:1/4 any difference in the proportion indicates disease.

*[நாடி + அளவு.]*

**நாடியிருக்கம்** *nāḍi-yiyakkam,* பெ. (n.) நாடிநடை; beating of the pulse.(சா.அக.)

**நாடியுப்பு** *nāḍi-y-uppu,* பெ. (n.) வளையலுப்பு (சங்.அக.); glass-gall

*[நாடி + உப்பு.]*

**நாடியெழு—தல்** *nāḍi-y-eḻu-,* 2 செ.கு.வி. (v.i.) *நாடியெழும்பு—தல்* பார்க்க; see nāḍi-eḻumbu-

*[நாடி + எழு—.]*

**நாடியெழும்பு—தல்** *nāḍi-eḻumbu-,* 5 செ.கு.வி, (v.i.) துடிப்பு கிளம்புதல்; to rise of the pulse.

**மறுவ.** தாதுஓடுதல்

*[நாடி + எழும்பு—.]*

**நாடியைத்தாங்கு—தல்** *nāḍi-yai-t-tāṅgu-,* செ.குன்றா.வி, (v.t.) இரத்தல் (இ.வ.); to entreat, beg.

*[நாடி[4] + தாங்கு]*

**நாடியொடுங்குதல்** *nāḍi-y-oḍuṅgudal,* பெ. (n.) *நாடிவிழுதல்* பார்க்க; see *nāḍi-viḻudal*

*[நாடி² + ஒடுங்குதல்.]*

நாடியொடுங்குதல் சாக்குறி நிலையாகும்.

**நாடியோட்டம்** *nāḍi-y-ōṭṭam,* பெ, (n.) **1.** தாது நடக்கும் இயல்பு; pulsation. **2.** *நாடி நிலை* பார்க்க; see *nāḍi-nilai.*

*[நாடி + ஓட்டம்.]*

**நாடிவித்திரதி** *nāḍi-vittiradi,* பெ, (n.) நாடிக்குழாய்கள் விரிந்து காணும் ஒருவகைக் கட்டி (இங்.வை.); morbid dilatation of the coats of an artery.

*[நாடி + skt.வித்ரதி → வித்திரதி.]*

**நாடிவிசை** *nāḍi-viśai,* பெ, (n.) நாடிநடையின் வேகம்; a rapidity of the pulse.(சா.அக.)

*[நாடி + விதி.]*

**நாடிவிதி** *nāḍi-vidi,* பெ, (n.) நாடித்திட்டம் அறிவிக்கும் ஒரு நூல்; a treatise on pulse.

*[நாடி + விதி.]*

**நாடிவிரணம்** *nāḍi-viraṇam,* பெ, (n.) நரம்பில் ஏற்படும் கட்டி; abscess of the artery.

**நாடிவிழுதல்** *nāḍi-viḻudal,* பெ, (n) **1.** தாதுவின் ஒடுக்கம்; sinking of the pulse. **2.** துணி விழக்கை: மனஉறுதி குறைகை; losing courage and hope, becoming downhearted.

*[நாடி + விழுதல்.]*

**நாடிவேகம்** *nāḍi-vēgam,* பெ, (n.) நாடிவிசை பார்க்க; see nāḍi-viśai (சா.அக.)

**நாடு¹–தல்** *nāḍu,* 5 செ.குன்றாவி, (v.t.) **1.** தேடுதல்; to seek, enquire after "*தனக்குத் தாய் நாடியே சென்றாள்*" (நாலடி,15.). **2.** விரும்பித்தேடுதல்; to seek. கட்சிக்காரர் தேர்தல்காலத்தில் மட்டும் மக்களை நாடுகின்றனர் (இக்.வ.). பழுத்தமரத்தை நாடிப் பறவைகள் வருதல் இயல்பே (இக்.வ.). உங்களிடம் ஒருஉதவி நாடி வந்திருக்கிறேன் (இக்.வ.). **3.** தொடர்தல் to pursue. **4.** ஆராய்தல்; to examine "*நாடாது நட்டலிற் கேடில்லை*" (குறள்,791.) **5.** துருவித்தேடுதல்; to investigate **6.** விரும்புதல்; to desire earnestly. "*நாடல் சான்ற நயனுடை நெஞ்சின்*" (பதிற்றுப்.86.7). அமைதியைநாடி ஊர்ஊராகத் திரிந்தார் (இ.வ.). பணத்தை நாடாதவர்கள் யார் (இ.வ.). **7.** தெரிதல் ; to know, understand. "*முன்னவ னிதனை நாடி*" (கந்தபு. ததீசியு.32): **8.** ஒத்தல்; to resemble. "*வேயொடு நாடிய தோள்*" (தொல்.பொருள்.286,உரை.) **9.** அளத்தல்; to measure. "*நாடற்கரிய சீர் ஞானசம்பந்தன்*" (தேவா.518:11). "*நாடற்கரிய நலத்தை நந்தாத் தேனைப் பழச்சுவை ஆயினானை*" (திருவாச.) **10.** கிட்டுதல்; to reach, approach. இங்கே நாடவொட்ட வில்லை (உ.வ.) **11.** நினைத்தல்;to think, consider "*நன்மார்க்க ஞானத்தை நாடி*" (சி.சி. 8,22.) **12.** மோப்பம் பிடித்தல்(வின்.); to scent, as dogs

ம., நாடுக து., நாடுனி.

*[நோள் → நோடு → நாடு–.]*

**நாடு²–தல்** *nāḍu-,* 5 செ.கு.வி, (v.i.) பயன்கருதிச் செல்லுதல்; to opproach சிக்கல் அல்லது நிலத்தகராறு போன்றவற்றைப் போக்க அறமன்றங்களை நாடுவதால் பணச் செலவுதான் மிஞ்சும் (உ.வ.).

*[நோடு → நாடு.]*

**நாடு³–தல்** *nāḍu-,* 5 செ.கு.வி, (v.i.) அளவு படுதல்; to be measured. "*நண்பென்னு நாடாச் சிறப்பு*" (குறள்,74.).

ம., நாடுக து., நாடுனி.

*[நோள் → நோடு → நாடு–.]*

**நாடு⁴** *nāḍu,* பெ, (n.) **1.** முல்லைக்கும் நெய்தற்கும் இடைப்பட்டமருதநிலம்; agricultural tract "*நாடிடையிட்டும் காடிடையிட்டும்*" (சிலப். 8:61, அரும்.) **2.** மக்கள் வாழுமிடம்; city, locality, situtaion "*ஈமநாட்டிடையிராமல்*" (கம்பரா. இலங்கைக்கே. 45.) **3.** தேசம்; country **4.** தேசப்பகுதி; district, province "*நாடு மூரு மறியவே*" (திவ்.பெரியாழ்.3:7:5.) (எ–டு) பாண்டிநாடு (S.I.I.ii.48.). **5.** ஊர்; town, village (எ–டு) கூறைநாடு. **6.** சிற்றூர்; small village **7.** நாட்டுப்புறம் (இ.வி.), rural tracts,opp.to nagar-p-puram **8.** நிலப்பரப்பு,பூமி; earth, land. **9.** உலகம்; world. "*புலத்தலிற்புத்தேள் நாடுண்டோ*" (குறள்,1323.) **10.** முடியரசு நாடு; kingdom. **11.** அரசியல்; மாநிலம்; state. ஆட்சிப்பகுதி, "*நாடுகவர்ந்தான்*" (கம்பரா.மாரீசன்.108.).

க,தெ,து, நாடு ம. நாடு

*[நண் →நள் →நடு →நாடு.]*

**நாடு⁵** *nāḍu-,* பெ, (n.) **1.** இடம்; place, **2.** இடப்பரப்பு(வின்.); open place. space, area. **3.** அறை; room, **4.** பக்கம் (வின்.) side. **5.** கால்பங்கு: 25 விழுக்காடு; quarter **6.** ஒரு பேரெண்(பிங்.); a very large number = 8 padumam.

*[நள் → நடு → நாடு.]*

**நாடுகடத்து–தல்** *nāḍu-kaḍattiu-,* 5 செ.குன்றாவி, (v.t.) நாட்டிற்கு இரண்டகம் செய்தல், கமுக்கச் செய்திகளை வெளியிட்டுக் காட்டிக் கொடுத்தல் போன்ற சட்டத்திற்குப் புறம்பான செயல்களுக்காக, ஒருவரை நாட்டைவிட்டு வெளியேற்றுதல்; to exile. to banish.

*[நாடு + கடத்து–.]*

**நாடுகண்காட்சி** *nāḍu-kaṇkāṭci,.* பெ, (n.) நாட்டில் நடக்கும் நிருவாகத்தையும் செயற்பாடுகளையும் கண்காணிக்கும் அதிகாரி; overseer of a nāḍu. (I.M.P.cg.211.).

*[நாடு+ கண்காட்சி.]*

**நாடுகாவல்** *nāḍu-kāval.* பெ. (n.) வரிவகை (S.I.I.iii 437.); an ancient tax

*[நாடு + காவல்.]*

**நாடுகிழவோன்** *nāḍu-kiḻavōṉ.* பெ. (n.) நாட்டிற்குரியோன்; king of owner of that region "*பழமுதிர்சோலை நாடுகிழவோனே*" (திருமுருகாற்றுப்படை).

*[நாடு + கிழவோன்.]*

நாடுகிழவோன் என்பது, ஊர்த்தலைவனைக் காட்டிலும், ஆளுமைப் பண்பிற்குரியவனும், உயர்ந்த நிலையி லிருப்பவனுமான, குறுநிலமன்னனைக் குறிக்கும். நாடு என்பது, ஒன்றிற்கு மேற்பட்ட பலவூர்களை உள்ளடக்கியது. கிழார் என்பவன் கிழவர் என்பதன் மரூஉ.

(ஒ.நோ.) கிழவன்→ கிழான்.

பெருமான் + பிரான்.

கிழவர் என்பது, கிழவன் என்பதன் உயர்வுப்பன்மை குறித்த, உரிமைப்பெயர். கிழவன் என்பவன் நிலத்திற்குரியவன்; உழவன்

என்னும் பொருண்மை பொதிந்த சொல். இக் கருத்தினை உலகப்பொதுமறை பின் வருமாறு பேசும். "*செல்லான் கிழவன் இருப்பின் நிலம்புலர் இல்லாளின் ஊடி விடும்*" (குறள், 1039.).

ஈங்கு, நாடுகிழவோன் என்றவிடத்து "*நாட்டிற்கு உரிமையாளன்*" என்னும் பொருண்மையே பொருந்தும்.

**நாடுகூறு** *nāḍu-kūṟu,* பெ. (n.) நிலத்தீர்வை விதிப்போன்; (cōḻas ii, 254); revenue officer.

*[நாடு + கூறு.]*

**நாடுகை** *nāḍugai,* பெ, (n.) மனஉறுதி குறைகை; losing courage and hope.

*[நாடு → நாடுகை.]*

**நாடுசார் நிலம்** *nāḍušār-nilam,* பெ, (n.) நாட்டின் பக்கத்திலுள்ள கழனி முதலியவை (வின்.); lands adjacent to a populated area.

*[நாடுசார் + நிலம்.]*

**நாடுதலவாரிக்கை** *nāḍu-tala-vārikkai,* பெ, (n.) வரிவகை; a kind of tax (I.M.P.sm.91.).

*[நாடு + தலவாரிக்கை.]*

**நாடுநீங்கு-தல்** *nāḍu-niṅgu-,* 5 செ.கு.வி, (v.i.) அரசன் இறத்தல் (நாஞ்.); to die, said of a king.

*[நாடு + நீங்கு-.]*

**நாடுபடிதல்** *nāḍu-paḍidal,* பெ, (n.) தேசம் ஆணைக்கீழ் அடங்குகை (வின்.); submission of a country , as to its rulers.

*[நாடு + படிதல்.]*

**நாடுபடுதிரவியம்** *nāḍu-paḍu-diraviyam,* பெ, (n.) நாட்டில் விளையும் செந்நெல், சிறுபயறு, ஆனெய், கரும்பு, வாழை ஆகிய பொருள்கள் (பிங்.); products of country parts, viz., šennel, siṟu-payaṟu, āney, karumbu, vāḻai.

*[நாடு + skt. திரவியம் = அரசிற்குப் பெரு வருவாயினை ஈட்டித்தரும் பணப்பயிர்கள்.]*

**நாடுபாவு-தல்** *nāḍu-pāvu-,* 5செ.குன்றாவி, (v.t.) பகைவர்நாட்டில் படையுடன் நுழைதல்; to invade. "*முத்தரைசர் நாடுபாவஇய தஞ்சிற்றப்படிகள் பொன்மாந்தனார்*" (செங்கம் நடுகற்கள்-கி.பி.7. பல்லவர்காலம்).

*[நாடு + பாவு-.]*

**நாடுபிடி-த்தல்** *nāḍu-piḍi-,* 4 செ.கு.வி, (v.i.) 1. தேசத்தை வென்று கைக்கொள்ளுதல்; to seize, capture a country. 2. குத்தகை யெடுத்தல்; to take a lease. "*நாடு பிடித் தார்க்கு ஒழுகைக் காட்டி*" (திவ். திருமாலை.3 வ்யா.22.).

*[நாடு + பிடி-.]*

**நாடுரி** *nāḍuri,* பெ, (n.) $1^{1/2}$ நாழிகொண்ட முகத்தலளவை (தொல்.எழுத்.240); a standard measure- $1^{1/2}$nāḻi.

*[நாழி + உரி → நாடுரி.]*

**நாடுவாழ்க்கை** *nāḍu-vāḻkkai,* பெ, (n.) அரசாட்சி புரியுங்காலம் (T.A.S iii, 174); duration of a reign, one's region

**மறுவ.** ஆட்சிக்காலம்.

*[நாட்டுவாழ்க்கை → நாடுவாழ்க்கை]*

**நாடுவாழுமவர்** *nāḍu-vāḻu-mavar,* பெ, (n.) நாட்டை வழிநடத்திச்செல்லும் அரசதிகாரிகள் (T.A.S.iii,167.); officers governing a country.

*[நாடு→வாழுமவர்.]*

உலகம் என்பது நாட்டை வழி நடத்தும் உயர்ந்தோர். இதனைத் தொல்காப்பியர் "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்று பொருளியலில் பேசுவார்.

நாடு பசியும் பிணியும் நீங்கி, வசியும் வளனும் பெற்று, வாழ்வாங்கு வாழத் திறமையாக அரசினை வழிநடாத்திச் செல்லும், அரசதிகாரிகள்.

**நாடேயன்** *nāḍēyaṉ,* பெ, (n.) நாடகக் கணிகையின் மகன் (யாழ்.அக.); the son of an actress or a dancing- girl.

*[நாடக + ஏய் + அன் → நாடேயன்.]*

**நாடோடி** *nāḍōḍi,* பெ, (n.) 1. நாட்டுகட்குரியது (வின்.); that which is common to a country, 2. இயல்புவழக்கிற்குரியது; customary, 3. நடைமுறை யொழுங்கிற்குட்பட்டது; habitual routine. 4. பொதுவானது (சாதாரணமானது) (வின்.); that which is average merit 5. ஊர்சுற்றித்திரிபவன் (இ.வ.); ஒன்றிற்கும் உதவாதவன்; vagrant. 6. போக்கற்றவன்; நாடுகுடியற்றவன்; vagabond, stroller. மக்கள்தொகைக் கணக்கெடுப்பில் நாடோடிகளைச் சேர்த்துக் கொள்வதில்லை (இக்.வ.).

**மறுவ.** ஊர்சுற்றி

**க.** நாடாடி.

*[நாடு + ஓடி.]*

*எந்த ஒரு இடத்திலும், நிலையாகத் தங்கி, வாழ்ந்திடாமல் பல இடங்களுக்குச்சென்று, பிழைப்பு நடத்தி வாழ்பவரைக் குறித்த இச் சொல், காலப்போக்கில் பயனின்றி ஊர்சுற்றித் திரியும், உதவாக்கரைப் பேர் வழியையும் உணர்த்தலாயிற்று.*

**நாடோடிஇலக்கியம்** *nāḍōḍi-ilakkiyam,* பெ, (n.) நாட்டுப்புற இலக்கியம்; folklore.

*[நாடோடி + இலக்கியம்.]*

இவை பெரும்பாலும் கல்வியறிவு நிரம்பாத மக்களால் உண்டாக்கப்பட்டதாகும்.

பண்டைக்கால மக்கள் தாங்கள் காண்பவைகளை எல்லாம், விளக்க முயன்றார்கள், அதன் பயனாகவே நாடோடி இலக்கியம் எழுந்தது.

இவை எழுதப்பட்ட இலக்கியமல்ல. ஒரு தலைமுறையினர், அடுத்த தலைமுறை யினருக்குச் சொல்ல, தொடர்ச்சியாக சமுதாய மக்களால் நுகரப்பட்டு வந்தனவாகும்.

நாடோடி இலக்கியத்தைப் பெரும்பாலும் இரு பகுதிகளாகப் பிரிப்பர்.

1. பழங்குடி மக்களிடம் வழங்குபவை.

2. நாகரிகம் வாய்ந்த மக்களிடம் வழங்குபவை.

கதைகள், பாடல்கள், பழமொழிகள், விடுகதைகள் ஆகியன நாடோடி இலக்கியமாகும்.

சிறிதளவு வரலாற்றுச் செய்திகளை உள்ளடக்கிப் பெரிய அளவிலான கற்பனைகள் சேர்ந்து உருவானதாக நாடோடிக்கதைகள் அமைந்திருக்கும்.

அமைப்பிலும் கருத்துக்களிலும் பலவகைப்பட்டனவாகவும், சில சிறுகவிதை களாகவும், சில பெருங்காவியங்களைப் போல் பலநாள்கள் சொல்லத்தக்கவையாகவும், தொன்றுதொட்டு வரும் பழக்கவழக்கங்களைக் கொண்டதாகவும், சமூகத்தாக்கங்களைக் கொண்டதாகவும், சமய நம்பிக்கைகளைக்

கொண்டதாகவும், மனித வாழ்வின் விளக்கமாகவும், நாடோடிப் பாடல்கள் இருக்கும்.

பல்வேறு காலங்களில் நேர்ந்த நுகர்ச்சியினால் ஏற்பட்ட, அறிவில் விளைந்த சொற்களே, பழமொழிகளாகும்.

**நாடோடிஇனம்** *nāḍōḍi-iṉam,* பெ, (n.) நிலைத்து வாழாது ஊர்சுற்றித் திரிந்து தொழில் புரியும் இனம்; nomads.

*[நாடோடி + இனம்.]*

"*மாடுமேய்க்கும் நாடோடி இனமாக நாவலந்தேயத்திற்குள் புகுந்த ஆரியர், கோயிற்பூசகராகித் தமிழரை ஏமாற்றிப் பிழைக்கின்றனர்*" என்பார், மொழி ஞாயிறு பாவணர்.

**நாடோடிஓவியம்** *nāḍōḍi-ōviyam,* பெ, (n) நாட்டுப்புற வரைகலை; folk painting.

மட்பாண்ட ஓவியமே, நாடோடி ஓவியக் கலையின் தொடக்கமாகும். பாண்டங்களில் ஓவியம் தீட்டுவதே. மிகத் தொன்மையான தாகும். பின்னர் அது மற்றகுடிசைத் தொழில்களான, ஆடைநெய்தல், பனை ஓலையை முடைந்து பொருட்கள்செய்தல், போன்றவற்றால் பெரிதும் வளர்ந்தது.

விளையாட்டுப் பொருட்கள் செய்தல், பொம்மைகள் செய்தல், போன்ற கலைகளும் நாடோடி ஓவியமுறையை வளர்ந்தன.

கண்ணாடியில் ஓவியம் வரையும் முறை, தஞ்சாவூரில் தோன்றி வளர்ந்தது.

துணிகளிலும் ஓவியங்கள் வரையப் பட்டன.

சங்குகளைத்தேய்த்து, அதன் மீதும் ஓவியத்தை ஏற்படுத்தியுள்ளனர்.

பாய். கூடை. பெட்டி ஆகியவை முடையும் போது அதன் மீதும் ஓவியங்களை வரைந்துள்ளனர்.

நாடோடி ஓவியங்களில் இன்றுவரை தொடர்ந்து நிலைத்திருப்பது. கோலமிடுதலே ஆகும்.

உடல் மீது பச்சைக்குத்துதலையும், நடோடி ஓவியவகையுள் அடக்குவர்.

இக் கலைக்கு அரசின் ஆதரவு கிடைக்காததால், இதன் வரலாறு காலமணலில் புதையுண்டு கிடக்கிறது.



**நாடோடிக்கதை** *nāḍōḍi-k-kadai,* பெ, (n) **1.** நாடோடிகளின் வாழ்வியல் கதை; nomad stories. **2.** *நாடோடி இலக்கியம்* பார்க்க; see *nāḍōḍi-ilakkiyam*

*[நாடோடி + கதை.]*

**நாடோடிக்கூட்டம்** *nāḍōḍi-k-kūṭṭam,* பெ, (n) கூட்டங்கூட்டமாக வாழும் நாடோடிக் குழுமம்; nomad's group.

*[நாடோடி + கூட்டம்.]*

**நாடோடிச்சொல்** *nāḍōḍi-c-col,* பெ, (n.) வழக்குச்சொல்; words common in a country, colloquial word.

*[நாடோடி + சொல்.]*

**நாடோடிநடனம்** *nāḍōḍi-naḍaṉam,* பெ, (n.) நாட்டுப்புறமக்கள் ஆடும் நடனம்; folk dances.

*[நாடோடி + நடி + அனம் → நடனம்.]*

மக்கள் மனதில் எழும் உணர்ச்சிகள் வெளிப்படுவதற்கு, நடனமே முதலில் எளிய கருவியாய், இருந்துள்ளது.

நாடோடி நடனங்கள், வெறும் மகிழ்ச்சிப் பெருக்கின் பொழுது போக்குக்காக மட்டுமல்லாது, தெய்வப்பற்று, நல்லொழுக்கம், அழகுணர்ச்சி இவற்றைப் புகட்டி, மக்களின் வாழ்வைப் பண்படுத்துவதாகவும், வளர்ந்து வந்துள்ளன.

தமிழக நாடோடி நடனங்களை, 1. விழாக்களில் மக்களால் ஆடப்படுவது. 2. தொழில் குழுவினர் ஆடுவது. 3. மலைவாசிகள் ஆடுவது, என மூன்று வகைகளாகப் பிரிப்பர்.

கும்மியும் கோலாட்டமும் முதல் வகையின.

பொம்மலாட்டம், தேவராட்டம், பொய்க்கால், குதிரையாட்டம், தோற்பாவைக் கூத்து, நிழலாட்டம், தெருக்கூத்து, ஒட்டந்துள்ளல், கரகம், புலியாட்டம் முதலியன, இரண்டாம் வகையின.

பழங்குடியினர் சடங்கு முறைகளாகக் கையாண்டு வரும் ஆடல்கள், மூன்றாம் வகையின.

இவையே இன்றைய நாகரிக ஆடல்களுக்கு. அடவுகளை அமைத்துத் தந்துள்ளன, எனில் மிகையன்று.

**நாடோடிப்பாட்டு** *nāḍōḍi-p-pāṭṭu,* பெ, (n.). நாடோடி மக்கள் பாடும் பாட்டு; nomads song

*[நடோடி + பாட்டு.]*

*கிடைபோடுவோர்: ஆடுமாடு மேய்ப்போர் பாடும் பாட்டு. வழிநடைக் களைப்பினைப்போக்குதற் பொருட்டுப் பாடும் பாட்டும், இவ்வகையைச் சார்ந்தது.*

**நாடோடிப்பாஷை** *nāḍōḍi-pāṣai,* பெ, (n.) *நாடோடிப்பேச்சு* பார்க்க: see *nāḍōḍi-p-pēccu*

*[நாடோடி + skt பாஷை.]*

**நாடோடிப்பேச்சு** *nāḍōḍi-p-pēccu,* பெ, (n) 1. நாட்டில் வழங்கும்பொதுமக்கள் பேச்சு மொழி(வின்.) தாய்நில மொழி; vernacular language. 2. நாட்டுமக்களின் பொதுப் (இயல்புப்) பேச்சில் வழங்கும் மொழி; colloquial word.

*[நாடோடி + பேச்சு.]*

**நாடோடிமரபினர்** *nāḍōḍi-marabiṉar,* பெ, (n.) மேய்ச்சல் நாடி, இடத்துக்குஇடம் அலைந்து திரியும் வாழ்வினை, வழிவழியாக மேற்கொள்ளும் இனத்தவர்; nomad.

**மறுவ.** குடிநிலவரம்பற்றவர்.

*[நாடோடி + மரபினர். ]*

*நிலையான இருப்பிடமற்றவர். அலைந்து திரியும் வாழ்க்கை மரபினர். ஆடுமாடு மேய்த்துக் கிடைபோடுவோர், வாத்து மேய்ப்போர், போன்றோரைக் குறிப்பிடலாம்.*

**நாடோறும்** *nāḍōṟum,* வி.எ, (adv) ஒவ்வொரு நாளும் (தினமும்); daily *"நாடீர் நாடோறும்"* (திவ்.திருவாய்.10:5:5).

*[நாள் + தோறும்.]*

**நாடோன்**[1] *nāḍōṉ,* பெ. (n) *நாடேயன் (யாழ்.அக.)* பார்க்க; see *nāḍēyaṉ.*

**நாடோன்**[2] *nāḍōṉ,* பெ. (n.) நாட்டைச் சார்ந்தவன்; one who belongs to the nation.

**நாண்**[1] *nāṇ,* பெ. (n.) **1.** வெட்கம்; sense of shame "*நாணாக நாணுத்தரும்*" (குறள்,902.). **2.** மகளிர்க்குரிய கூச்சம்; bashfulness, modesty. "*அச்சமு நாணும்*" (தொல்.பொருள்.99.).

தெ., நாண. க. நாண்.

*[நால் → நால் → நாண்] வெட்கவுணர்வினால் ஏற்படும் கூச்சத்தில், உடல் நாணல் போன்று வளைதல்.*

**நாண்**[2] *nāṇ,* பெ. (n.) **1.** கயிறு (சூடா.); string. **2.** வில்லின் நாண், bowstring "*வஞ்சிலை வல்விற் புரிநாண் புடையின்*" (கலித். 15, 21.). "*சூழ்கழி மருங்கின் நாண் இரை கொள்*" (ஐந். 111, 2.). **3.** மங்கலவணியில் கோத்த சரடு; woman's necklet containing the marriage badge "*உன் கழுத்தின் நாணுன் மகற்குக் காப்பின் நாணாம் என்றான்*" (கம்பரா. நகர்நீங்.49.). 4. அரைஞாண்; waist- string. "*நாணும் அரைத்தொடரும்*" (திவ்.பெரியாழ்,1:2:4.).

க. நேண்.

*ஒருகா. ஞாண் → நாண்.*

**நாண்**[3] *nāṇ,* பெ. (n) **1.** தேள் scorpion, **2.** தலைச்சுருளிவேர்; root of indian birth wort.

**நாண்கொடை**[1] *nāṇ-koḍai,* பெ. (n.) தொன்று தொட்டு வரும் மரபுப்படி, சிறப்பு நாட்களில், உறவினர் முதலியோர்களுக்குக் காணிக்கையாகக் கொடுக்கப்படும் நன்கொடை (சுக்கிரநீதி.145.); customary offering made to relations, friends, etc., on auspicious occasions

*[நாண் →நாள்+ கொடை.]*

**நாண்கொடை**[2] *nāṇ-koḍai,* பெ. (n.) நிலவுடைமையாளர்களால், பண்ணைப் பணியாளர்களுக்குத் திருமண நாட்களில் தரப்படும், தாலிக்கொடை; a golden tāli given by land-lords serb for their wedding.

*[நாண் →நாள்+ கொடை.]*

**நாண்ஞாயிறு** *nāṇ-ñāyiṟu,* பெ. (n.) காலை; sunrise. "*நாண்ஞாயி றுற்ற செருவிற்கு*" (களவழி.1).

*[நாள் + ஞாயிறு.]*

*நாள்ஞாயிறு = புதிதாகப் புலர்பொழுதில் தோன்றும் ஞாயிறு.*

**நாண்டுகொள்(ளு)-தல்** *nāṇḍu-koḷ(ḷu)-,* 13 செ.கு.வி.(v.i.) *நாணிக்கொள்(ளு)-தல்(தஞ்.)* பார்க்க; see *nāṇi-k-koḷ(ḷu-)*

*[நால் → நாலுதல் = தொங்குதல். நான்று →நாண்டு +கொள்(ளு)-.]*

நான்று→நாண்டு = திரிபு.

ஒப்புநோக்கு: கன்றுக்குட்டி→கண்டுக்குட்டி.

**நாண்புடை** *nāṇ-puḍai,* பெ. (n.) வில்லின் நாணொலி; twang of a bow string. "*வஞ்சிலை வல்விற் புரிநாண் புடையின்*" (கலித்.15,2.).

*[நாண் + புடை.]*

புடைத்தல் = வில்லின் நாண் ஒலிக்கை.

**நாண்பூட்டு-தல்** *nāṇ-pūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *நாணேற்று-தல்* பார்க்க; see *nāṇ-ēṟṟu-*

*[நாண் + பூண் + து-பூட்டு-.]*

"தல்" தொழிற்பெயர் பகுதி.

**நாண்மகிழ்** *nāṇ-magiḻ,* பெ,(n.) *நாண்மகிழிருக்கை* பார்க்க; see *nāṇ-magiḻirukkai.* "*நாண்மகிழ் மகிழின்*" (புறநா.123).

*[நாண் + மகிழ்.]*

**நாண்மகிழிருக்கை** *nāṇ-magiḻ-irukkai,* பெ. (n.) நாளோலக்கம்; durbar, as of a king. "*வீயாது சுரக்குமவனாண் மகிழிருக்கையும்*" (மலைபடு.76.).

*[நாண்மகிழ் →நாள்மகிழ் →இருக்கை.]*

மன்னன் நாட்பொழுதில் மகிழ்வோடு, தன் அரியணையில் வீற்றிருக்கை.

**நாண்மங்கலம்** *nāṇ-maṅgalam,* பெ. (n.) **1.** தருமத்தினை யுண்டாக்கும் செங் கோலினையும், அருளினையும் விரும்பியோன் பிறந்த நாளின் சிறப்பைச் சொல்லும் புறத்துறை (பு.வெ.9:24.); theme celebrating the birthday of a just and benign ruler. **2.** அரசற்கு யாண்டு இத்துணை சென்றது என்று கல்வெட்டில் எழுதும் மங்கலம் (தொல். பொருள்.91,பக்.336.); the ceremony of writing down the regnal year of a king.

மறுவ. வெள்ளணி மங்கலம்.

*[நாள்மங்கலம் →நாண்மங்கலம்.]*

மன்னன் தமது பிறந்தநாளின் போது, வெள்ளாடையுடுத்திக் கொடை கொடுக்கும் மரபு, தொன்றுதொட்டுப் பயின்று வருவது. இது குறித்த முத்தொள்ளாயிரப் பாடலடிகள் வருமாறு:—

"அந்தணர் ஆவொடு பொன்பெற்றார், நாவலர் மந்தரம்போல் மாண்ட களிறூர்ந்தார்"

இலங்கிலைவேல் தென்னன்இரேவதி நாட்(டு) என்னோ சிலம்பிதன் கூடிழுந்தவாறு (முத்தொள்.82.).

முத்தொள்ளாயிரம் முத் தமிழில் இருக்கும் முதிர்சுவைநூல். மக்கள் மன்னனின் பிறந்தநாளை ஒட்டடை அடித்துக் கொண்டாடியதால், சிலந்திகள் வீடிழுந்தன என்று, குறித்துள்ள இலக்கிய நயம் குறிக்கத்தக்க வொன்றாகும்

**நாண்மதி** *nāṇ-madi,* பெ, (n.) (முழுநிலவு) வெள்ளுவா; full moon. "*நாண்மதியே நீ யிந்நாள்*" (திவ். திருவாய்.2:1:6.).

*[நாள் + மதி.]*



**நாண்மதியம்** *nāṇ-madiyam,* பெ. (n.) *நாண்மதி* பார்க்க; see *nāṇ-madi.* "*நன்னாண்மதியக் குடையான் குலோத்துங் கன்*" (குலோத்.கோ.173).

*[நாள்மதியம் → நாண்மதியம்.]*

**நாண்மலர்** *nāṇ-malar,* பெ. (n) அன்றலர்ந்த பூ; fresh, new- blown flower. "*நளிச்சினை வேங்கை நாண்மலர் நச்சி*" (சிறுபாண்,23.).

*[நாள் + மலர் → நாண்மலர்.]*

**நாண்மீன்** *nāṇ-mīṇ,* பெ. (n.) இரலை(அசுவதி) முதலிய விண்மீன்; the lunar asterism. "*நாண் மீன் வாய் சூழ்ந்த மதிபோல்*" (கலித்.104:27.).

*[நாள் + மீன் → நாண்மீன்.]*

**நாண்முதல்** *nāṇ-mudal,* பெ. (n) புலர்காலைப் பொழுது (அதிகாலை); early morning. *"நாண்முதற் கமைந்த யாவுநயந் தன னியற்றி"* (கம்பரா.கங்கை.52.).

*[நாள் + முதல் = நாண்முதல்.]*

**நாண்முல்லை** *nāṇ-mullai,* பெ. (n.) போரின் பொருட்டுக் கணவன் பிரிந்த இல்லின் கண்ணே, தலைவி தற்காத்துத் தங்கிய நிலைமை கூறும் புறத்துறை (பு.வெ.10, முல்லைப்.4.); theme describing how the heroine protected her honour, living in the very house where her lord left her for joining a battle.

*[நாண் + முல்லை.]*

தலைவியின் கற்புநிலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழும், முல்லைத்திணை ஒழுக்கத்தினை உரைப்பது.

**நாண்முழவு** *nāṇ-muḻavu,* பெ. (n.) 1. காலை முரசு; morning drum. 2. நாழிகைப்பறை (சிலப்.3:27;உரை.); hour-drum to indicate the nāḻigai.

*[நாள் + முழவு → நாண்முழவு.]*

அரசன் உறையும் அரண்மனையில் தினந் தோறும், அரசனின் அன்றைய அலுவல் நிலையினை அரசனுக்கு அறிவித்தற் பொருட்டு ஒலிக்கும் முரசே, நாண் முழவு எனப்படும்.

**நாண்மேயல்** *nāṇ-mēyal,* பெ. (n.) பகல் மேய்ச்சல்; early pasturing of flocks and herds. *"எருமை கயிறுபரிந் தசைஇ நெடுங் கதிர் நெல்லின் நாண்மேய லாரும்"* (ஐங்குறு,95.).

*[நாள் + மேயல் → நாண்மேயல்.]*

மேய்ச்சல்→மேயல்

நாள் = பகலவன் விளங்கித்தோன்றும் பகற்பொழுது. பகற்பொழுதில் மேயும் கால்நடை, மேயல் எனப்பட்டது.

**நாண்மை** *nāṇmai,* பெ,(n.) *நாண்*[1] பார்க்க; see *nāṇ*[1]. *"நாண்மையே யுடையார் பிழைத்தார்"* (கம்பரா.தாடகை.56.).

*[நாண் → நாண்மை.]*

**நாணக்கேடு** *nāṇa-k-kēḍu,* பெ. (n.) வெட்கக்கேடு; immodesty, shamelessness

*[நாணம் + கேடு.]*

**நாணகபரிட்சை** *nāṇaga-pariṭcai,* பெ,(n) நாணய நோட்டம்; assay

*[நாள் + நயம் → நாணயம் → நாணகம் skt பரிட்சை.]*

*வெள்ளீயம், தாமிரம், செம்பு முதலான மாழைகளாற்செய்யப்பட்டதால், பளபளப்புத் தன்மையுடன் கூடிய காசு என்னும் பொருண்மை ஏற்பட்ட தென்றறிக. பளபளப்புமிக்க பணத்தாளில் அச்சிட்டது பணம் என்று பெயர்பெற்றது போல், பளபளப்புமிக்க மாழையிற் செய்யப்பட்டது நாணயம்.*

**நாணகம்** *nāṇagam,* பெ. (n.) நாணயம்; stamped coin.

**நாணங்கப்புல்** *nāṇanga-p-pul,* பெ. (n) மான்மணத்தி, நாறிப்புல்; musk grass.

**நாணத்தேளி** *nāṇa-t-tēḷi,* பெ. (n.) மீன்வகையுளொன்று; a kind of fish.

**நாணநாட்டம்** *nāṇa-nāṭṭam,* பெ. (n.) தலைவி நாணும் வகையால், அவட்குத் தலைவனுடன் கூட்டமுண்மையை ஆய்ந்தறிகை (திருக்கோ.67.); theme in which the maid makes indelicate enquiries and suggestions, and seeing her mistress blush, infers the truth of her clandestine marriage.

*[நாணம் + நாட்டம்.]*

பகற்குறியில் தினைப்புனத்தே பாங்கனோடு வந்த தலைவன், பாங்கியற் கூட்டத்திடை கணை எய்த மான் தேடிவந்ததை உணர்ந்த தோழி தலைவியிடம், 'நும் ஆளா?' என்று நாணநாட்டமும், 'என்னவனே', என்று நடுங்க நாட்டமும், நடாத்தல் குறித்த அகத்திணை மரபாகும்.

**நாணம்[1]** *nāṇam,* பெ. (n.) 1. மகடூஉக்குணம் நான்கனுள் ஒன்றான வெட்கம் (பிங்.); shyness, coyness, as a feminine quality, one of four magaḍū-k-kuṇam. 2. வெட்கம், கூச்சம்; bashfulness in certain relationships as the mother-in-law, towards her son-in-law, as a man in a gathering of women. embarrassment. "*நனிநாண மீதூரா*" (சீவக.736.). 3. உண்மைக்குத் தலைவணங்கும் தன்மை, போற்றரவு, பெருமதிப்பு; delicate regard, esteem, respect. அவனுடைய சொல்லுக்கு இவன் நாணப்படுவான் (வின்.). 4. பழிச்சொல் முதலியவற்றால் உண்டாகும் மானக்கேடு; shame, sensitive, dread of evil: keen moral sense. "*நாணொணாததோர் நாணமெய்தி*" (திருவாச.30:4.). 5. தணிகை (வின்.); yielding, as a disease to its antidote. 6. செடி கொடி முதலியவற்றுக்கு உண்டாகும் கூச்சம்; (வின்.) shrinking, as a sensitive plant to a touch, shying, as a startled animal.

தெ., நாண. ம. நாணம்.

*[நள் → நண் → நாண் + அம்]*

*[நள்ளுகை = நெருங்குகை. நள்ளுகை → நண்ணுகை. ஆணுடன் பெண் நெருங்குங்கால், முகம் தரையை நோக்குவதால் ஏற்படும் வெட்கம் அல்லது கூச்சம்.]*

'நள்' எனும் நெருங்குதற் கருத்து வேரினின்று கிளைத்த சொல். ஆடவர் நெருங்குங்காலுண்டாகும் கூச்சம் அல்லது வெட்கத்தால் முகம் தலையை நோக்குவதே, நாணம் ஆயிற்று.

**நாணம்[2]** *nāṇam,* பெ. (n.) 1. அறிவு; knowledge. "*நாணமுடைய மரமுதலியவையும்*" (நீலகேசி.374.). 2. அறிவுக்கூர்மை; intelligence

நாள் = புதுமை. புதியகருத்துக்களைப் புரிந்து கொள்ளுங்கால் உண்டாகும் அறிவுத் தகைமை.

*[நாள் → நாண் + அம்.]*

அம் – சாரியை

**நாணமாலை** *nāṇa-mālai,* பெ. (n.) தேரையற் இயற்றிய மருத்துவநூல்; a medical treatise by Tēraiyar.

*[நாணம்+மாலை.]*

**நாணயக்கயிறு** *nāṇaya-k-kayiṟu,* பெ. (n.) மூக்கணாங்கயிறு; nose- string.

*[நாணயம் + கயிறு.]*



**நாணயக்காரன்** *nāṇaya-k-kāraṉ,* பெ. (n.) **1.** காசுக்கடைக்காரன்; gold- dealer. **2.** சொல் தவறாமல் நேர்மையாகச் செயலாற்றுபவன்; upright dealer, a man of his word, a man of credit.

*[நாணயம் + காரன்.]*

"காரன்" உடைமைப் பெயரீறு. சொல்லும் செயலும் ஒன்றாக மதிப்பவன்.

**நாணயங்குத்து–தல்** *nāṇayaṅ-kuttu-,* 5 செ.கு.வி, (v.i.) மாட்டிற்கு மூக்குத்துளைத்தல் (யாழ்ப்.); to perforate the septum of a bullock's nose.

*[நாண் +அயம் + குத்து–.]*

இளங்காளை கலப்பையோ, வண்டியோ இழுக்கும்போது, முரடாக இருந்தால், ஓட்டுநர் நாணி முகம் கவிழ்த்தல் போல், சுண்டி இழுக்க ஏதுவாக, மூக்கில் குத்தித் துளைவழி, கயிறு மாட்டுதல் வழக்கம். இப்பழக்கம் இன்றும் நாட்டுப்புறத்தே காணப்படுகிறது. அடங்காத இளைஞனுக்குக் கால்கட்டும் அடங்காத காளைக்கு மூக்கணாங் கயிறும் பூட்டு. (பழ.).

**நாணயச்சரக்கு** *nāṇaya-c-carakku,* பெ. (n) நாள்பட்டால், விலை தாழக்கூடிய உயர்ந்த சரக்கு (யாழ்.அக.); commodity of value, liable to depreciate from being kept for a long- time.

*[நாணயம் + சரக்கு.]*

**நாணயசில்லம்** *nāṇaya-šillam,* பெ. (n.) **1.** *நாணயத்தப்பு* பார்க்க; see *nāṇaya-t-tappu.* **2.** மதிப்புக்குறைவு, வெட்கக்கேடு; disgrace.

*[நாணயம் + சில்லம்.]*

**நாணயஞ்செலுத்து–தல்** *nāṇayañ-šeluttu-,* 5செ.கு.வி, (v.i.) செய்யும் செயலில், (ஆற்றும் வினையில்) தகுதி காட்டுதல்; to acquit oneself honourably, in business.

*[நாணயம் + செலுத்து–.]*

ஆற்றும் பணியினைச் சீர்மையுடன், நேர்மையாகச் செய்தல்; மேற்கொண்ட வினையில், தமது முழுத்திறமையும் விளங்கும் வண்ணம், தகுதி காட்டிச் செம்மையுடன் முடித்தல். வாழ்வில் முக்கால் பங்கு பொறுப்பேற்கும் நாணயம், கொடுக்கல் வாங்கலில், ஒரு மாந்தன் குறித்த நாளில், குறித்தபடி இயங்கும் இயக்கத்தினைக் குறிக்கும் வழக்கம், இன்றைய வழக்கில் உள்ளது கருதத்தக்கது.

**நாணயத்தங்கம்** *nāṇaya-t-taṅgam,* பெ. (n.) காசுசெய்வதற்கு ஏற்ற பொன்; gold suitable to mint coins.

*[நாணயம் + தங்கம்.]*

**நாணயத்தப்பு** *nāṇaya-t-tappu,* பெ. (n.) நேர்மை தவறுகை; dishonour, loss of one's credit.

*[நாணயம் + தப்பு.]*

*நேர்மை தவறுவதா லுண்டாகும் மதிப்புக்குறைவு.*

**நாணயப்பணம்** *nāṇaya-p-paṇam,* பெ. (n.) நற்காசு (வின்.); good coin, opp.to. tēykaḍai-p-paṇam

*[நாணயம் + பணம்.]*

**நாணயப்புடைவை** *nāṇaya-p-puḍaivai,* பெ. (n.) உயர்ந்த சீலை (வின்.); fine cloth. நல்லவிலை கொடுத்தால்தான் நாணயப் புடைவை கிடைக்கும் (உ.வ.).

*[நாணயம் + புடைவை.]*

கூடுதல் நாணயம் கொடுத்து வாங்கிய மதிப்புமிக்க விலையுயர்ந்த புடைவை.

**நாணயம்[1]** *nāṇayam,* பெ. (n.) **1.** முத்திரையிட்ட காசு; stamped coin. "*அங்கங்கே நாணயங்களாக வைத்தாய்*" (பணவிடு.128.). **2.** நேர்மை; uprightness, honesty, probity, honour, as in money-dealings, punctuality. "*இது மெத்த நாணயமே*" (தனிப்பா.11,176,431.). **3.** இயற்கை நிகழ்ச்சி (வின்.); extraordinary facts or supposed facts in nature, as of the cobra shrinking from the sight of the nāga-tāḷi root. **4.** செயல் முதலியன குறித்த பயன் தவறாமை (வின்.); supposed virtue of an action or plant, as the presenting of a herb to the eyes, as a cure for opthalmia. **5.** கட்டுப்பாடு (யாழ்.அக.); restriction, rule **6.** நேர்த்தியானது, ஒழுங்கானது; that which is of good quality, as a commodity. 'நாணயமான புடைவை' (இ.வ.).

த. நாணயம்→Skt nāṇga

க., நாணய, தெ., நாணயமு,
ம. நாணியம்,

*[நாள் + நயம்.]*

நாள் என்பது பகலவன் விளங்கித் தோன்றும் நேரம். பகற்போது நாட்கதிர் ஒளிரும் பளபளப்பான பொழுதாகும். நாட்கதிரின் ஒளிக்கற்றைகள் பளபளப்புடன் ஒளிறுவது போல், அக் காலத்து மன்னர்தம் முகத்தை, முத்திரையாகப் பெற்றிருந்த பொன், வெள்ளி, செப்புக்காசுகளும் பளபளக்கும் தன்மையன. நாணயம் என்னும் சொல்லிற்கு, வடமொழியில் குறிப்பேதும் இல்லை. திராவிட மொழிகளில் இனச்சொற்கள் காணப்படுகின்றன.

அக் காலத்தே ஆட்சி செய்த மன்னர்களின் ஒழுங்கு, நேர்மை, கட்டுப்பாடு, புகழ் போன்றவற்றை புலப்படுத்தும் சின்னங்களாகவும், நாணயங்கள் திகழ்ந்தன.

நாணயத்தின் ஒரு புறத்தில், மன்னர் தம் முகமுத்திரையையும், மறுபக்கத்தே, அவர்தம் ஆட்சியாண்டும், முறையாக இடம் பெற்றிருக்கும்.

மறுபக்கத்தில், நெறிப்படி வரிசையாகக் குறிக்கப்பட்ட நாணயத்தின் எண்ணானது, கொடுக்குநரும், வாங்குநரும் நெறிபிறழாது ஒழுகவேண்டும் என்பதைக் குறிப்பால் உணர்த்தின எனலாம்.

**நாணயம்[2]** *nāṇayam,* பெ. (n.) **1.** உறுதி மொழியைக் காப்பாற்றுகை; honesty **2.** நம்பிக்கை, நன்மதிப்பு; credit trust worthiness. எனக்கு முழுநம்பிக்கை உண்டு (இ.வ.). நாணயமான முறையில் வாழ்க்கை நடத்துவதில் தொல்லைகள் பல உண்டு (இக்.வ.).

*[நா + நயம்.]*

உண்மையே பேசுதல், சொல்லிலும், செயலிலும், பிறரை ஏமாற்றாமல் இருத்தலை, நாணயத்துடன் இருத்தல் என்னும் பொது வழக்குண்மையால் அறியலாம்.

**நாணயம்[3]** *nāṇayam,* பெ. (n.) **1.** விலங்கின் மூக்கிலிடும் கயிறு (யாழ்ப்.); the rope inserted in a beast's nose, nose-string. **2.** மாடு முதலியவற்றிற்கு, மூக்குத்துளைக்கை (யாழ்ப்.); perforation of the septum of a beast's nose for inserting a rope to giude it.

*[ஞாண்→நாண் → நாண் → நயம்.]*

*நாண் = கயிறு.*

**நாணயம்[4]** *nāṇayam,* பெ. (n.) மனச்சான்று; conscience (pond.).

*[நா + நயம் ]*

மனச்சான்றுடன், எதிலும் பொய்மைத் தன்மையின்றி இருத்தலும், நாணயம் ஆகும். நாணயம் என்னும் இவ் வாழ்வியல் கொள்கையானது, உள்ளத்தின் உள்ளே ஒளிரும் உண்மைப் பொருளான இறைமைத் தன்மை பொருந்திய மனச்சான்றினையே முடிந்த முடிபாகக் குறித்து வழங்கியது எனலாம்.

**நாணயமதிப்பீடு** *nāṇaya-madippīḍu,* பெ. (n) உலகஅளவில் ஒரு நாட்டின் நாணயத்துக்கு உள்ள மதிப்புப்படி, பிறநாட்டு நாணயத்தை *மதிப்பீடு செய்யும் முறை; money exchange* rate

*[நாணயம் + மதிப்பீடு.]*

**நாணயமதிப்பு** *nāṇaya-madippu,* பெ. (n) பணத்தை மதிப்பிடும் முறை; *currency.* அமெரிக்க நாணயமதிப்பு அண்மையில் மிகவும் உயர்ந்துள்ளது (இக்.வ.).

*[நாணயம் + மதிப்பு.]*

**நாணயமாற்றுமுறை** *nāṇaya-māṟṟu-muṟai,* பெ. (n.) *நாணயமதிப்பீடு* பார்க்க; see *nāṇaya-madippīḍu.*

*[நாணயமாற்று + முறை.]*

**நாணயவட்டம்** *nāṇaya-vaṭṭam,* பெ. (n.) நாணயமாற்றிற் கொடுக்கும் தள்ளுபடி; discount on coins (P.T.L.).

*[நாணயம் + வட்டம்.]*

**நாணயவரியோலை** *nāṇaya-vari-y-ōlai,* பெ. (n.) இருப்புத்திட்டம், மாதவருவாய், முதலியவற்றைக் காட்டும், நாணயக்கணக்கு (நாஞ்.); a monthly account of coins showing balance in hand, at the begining of a month, collections in the month,etc.

*[நாணயம் + வரியோலை.]*

**நாணயவான்** *nāṇayavāṉ,* பெ. (n.) நேர்மை தவறாதவன் (யாழ்.அக.); a man of credit or honour.

*[நாணய + வ் + ஆன்.]*

**நாணயவேலை** *nāṇaya-vēlai,* பெ. (n.) நேர்த்தியான வேலை; fine, superior work, opp.to maṭṭi-vēlai.

*[நாணயம் + வேலை.]*

நாணயம் போன்ற வேலை. மனச்சான்றுடன் செய்யும், திறமையான வேலை.

ஒழுங்காகவும், நேர்த்தியாகவும் செய்யப்பட்ட நாணயம் போல், ஆற்றும் பணியை, அறிவை அனைவருக்கும், செப்பமுறத் தெரிவிக்கும் வேலை.

**நாணயன்** *nāṇayaṉ,* பெ. (n.) *நாணயக்காரன்* பார்க்க; see *nāṇaya-k-kāraṉ.*

*[நாணயம் → நாணயன்.]*

**நாணல்¹** *nāṇal,* பெ. (n.) நாணுகை; feeling bashful, modest. "*பிறர் தன்னைப் பேணுங்கா ணாணலும்*" (திரிகடு.6.).

*[நாண் → நாணல் = வெட்கத்தால் வளைகை: மெய்கூசுகை.]*

**நாணல்²** *nāṇal,* பெ. (n) 1. புல்வகை; kaus, a large and coarse grass. 2. எழுதுவதற்குப் பயன்படும் புல்வகை; penreed-grass.

3. *கோரை* பார்க்க; see *kōrai.* 4. தருப்பை வகை; lalong-grass, Imperata arundinacea. (L.) 5. பெருநாணல் (சா.அக.); large reed.

த> நாணல் + skt. நாட

*[நாளம் → நாணம் →நாணல் = உட்டுளையுள்ள புல் வகை.]*

**நாணல்கெண்டை** *nāṇal - keṇḍai,* பெ. (n.) மீன் வகையுளொன்று; a kind of fish.

*[நாணல் + கெண்டை.]*



**நாணல்தட்டை** *nāṇal-taṭṭai,* பெ. (n.) நாணல் புல்லின் அடித்தண்டு; the stalk of reedgrass

மறுவ. பேய்க்கரும்பு.

*[நாணல் + கெண்டை.]*

**நாணவந்தான்** *nāṇa-vandāṉ,* பெ. (n.) நாகணவாய்ப்புள் (வின்.); common myna.

*[நா(கு)ண + வந்தான்.]*

**நாணற்கரும்பு** *nāṇaṟ-karumbu,* பெ. (n) கரும்புவகை (பதார்த்த.179.); a kind of sugar-cane.

*[நாணல் + கரும்பு.]*

தட்டையாக இருக்கும், இக் கரும்பின் சாறு, வயிற்று நோய்கள் அனைத்தையும் போக்கும். அரத்தசோகையை அகற்றும்.

**நாணற்குழாய்** *nāṇaṟ-kuḻāy,* பெ. (n.) 1. மணிவகை (இ.வ.); a kind of bead. 2. நாணல் போன்ற குழாய் மணிவகை (இ.வ.); bugle beads, as reed- shaped. 3. நாணற் குழாய் போன்று, பொன்னாலா கியதும் கனப்பொள்ளல் வடிவில் செய்யப் படுவதும், தாலியோடு கோக்கப் படுவதுவான குழல்; a hollow tube like ornament of gold, tied along with tāli.

*[நாணல் + குழாய்.]*

**நாணற்குளம்** *nāṇaṟ-kuḷam,* பெ. (n) நாணற்கற்கண்டு; sugar candy prepared from reeds

**நாணற்கோரைக்கட்டை** *nāṇaṟ-kōrai-k-kaṭṭai,* பெ. (n.) மருந்துக்குணமுள்ள வேர்; a kind of medicinal root Clansena-indica

*[நாணல் + கோரைக்கட்டை.]*

**நாணற்புதர்** *nāṇaṟ-p udar,* பெ. (n.) நாணல்புல்தூறு; reed grass bush.

*[நாணல்+ புதர்.]*

**நாணற்புல்** *nāṇaṟ-pul,* பெ. (n.) *நாணல்* பார்க்க; see *nāṇal.*

*[நாணல் + புல்.]*

**நாணற்பூ** *nāṇaṟ-pū,* பெ. (n.) பழுத்த வெண்ணிறமுள்ள நாணற்பூ; the yellowish white flower of reedgrass.

*[நாணல்+ பூ.]*

**நாணற்றாது** *nāṇaṟ-rādu,* பெ. (n.) நாணற்பூவின் கருவுறச் செய்யும் ஆண்பாற்கூறு; pollen grains of reed.grass.

*[நாணல் + தாது.]*

**நாணாங்கள்ளி** *nāṇāṅ-kaḷḷi,* பெ. (n ) 1. இலைக்கள்ளி வகை (இ.வ.); spiral five-tubercled spurge. s.tr. Euphorbia nivulia(L ). 2. *நாணுகக்கள்ளி* பார்க்க; see *nāṇuga-k-kaḷḷi.*

*[நாண் + ஆம் + கள்ளி.]*

**நாணாளும்** *nāṇāḷum-,* கு.வி.எ. (adv ) நாள்தோறும், ஒவ்வொரு நாளும்; daily, every day, day by day. "*நாணாளு மச்சத்தா ணாணுத னாணன்றாம்*" (நாலடி,299). நாணாளும் நாம் நன்மையே செய்யவேண்டும். (இக்.வ.).

*[நாள் + நாளும்.]*

**நாணி[1]–த்தல்** *nāṇi-,* 4 செ.கு.வி. (v.i ) நாணங்கொள்ளுதல் (யாழ்ப்.); வெட்கப்படுதல்; to be shy, bashful.

*[நாணு → நாணி–.]*

**நாணி[2]** *nāṇi-,* பெ. (n.) நாணமுடையாள்(ன்); bashful person.

*[நாண் → நாணி.]*

**நாணி[3]** *nāṇi-,* பெ. (n.) 1. வில்லின் நாண் (சூடா.); bowstring. "*நாணியிற் கோலொன்றி னால்*" (தேவா.616:4.). 2. தொடைநரம்பு (சா.அக.); nerve of thigh.

*[நாண் → நாண் →நாணி.]*

நாண் = கயிறு . கயிறு போன்று இழுத்துக் கட்டிய நாண்.

**நாணிக்கொள்ளு–தல்** *nāṇi-k-koḷḷu-.* 16 செ.கு.வி (v.i.,) நான்று (கழுத்தில் சுருக்கிட்டுக்) கொள்ளுதல்; to hang oneself. "*நாணிக்கொள்ளப் பஞ்சமோ கயிறு*" (இராம நா.உயத்.72.).

*[நால் → நாண் →நாணி + கொள்ளு–.]*

**நாணிலி** *nāṇili,* பெ. (n.) நாணமற்றவன்–(ள்); a shameless person. "*வருவையான் நாணிலி நீ*" (கலித்.116:17.).

*[நாண்+ இலி.]*

**நாணிழல்** *nāṇiḻal,* பெ. (n.) கலை நிழல் ; fore noon shadow "*நாணிழற்போல விளியுஞ் சிறியவர் கேண்மை*" (நாலடி,116.)

*[நாள்+ நிழல்.]*

நாள் = புதியது நாள்.

நிழல் = காலைவெயிலில் தோன்றும் நிழல்.

காலை ஞாயிறு, கதிர்கடாவுறுக்குங்கால் தோன்றும் நிழல்.

**நாணு[1]–தல்** *nāṇu -,* 5 செ.கு.வி. (v.i.) வெட்கப்படுதல்; to be shy, to feel bashful, to be embarrassed, as a woman "*அஞ்ஞான்று கண்டேம் போ னாணுதுமால்*"

(நாலடி,385.). 2. மனங்குன்றுதல்; to be abashed, to shrink back, as from a forbidding sight; to feel repugnance or dislike. "*தகவுடையார் தாமேயு நாணித் தலைச்செல்லார்*" (நாலடி,241.). 3. அச்ச மின்றித் துணிவு காட்டுதல் (வின்.); to acquiesce or yield through regard. 4. ஒன்றற்கு அடங்குதல் (வின்.); to shrink from the touch, as some plants, to yield, as disease to medicine, to be subdued, as snakes in proximity to certain roots. 5. அஞ்சுதல்; to fear. "*தன்கட் பழிநாணுவானை*" (குறள்,794.). 6. குவிதல்; to close, as flowers. "பங்கயம் போல்னாணி" (தஞ்சைவா.210.). 7. பிணங்குதல் (யாழ்ப்.); to be affected unfavourably, as some trees or plants by nearness to the tamarind, to be uncongenial to each other, as the red and white lotus.

க. நாண்சு.

*[நாண் → நாண் → நாணு –.]*

**நாணு**[2] *nāṇu,* பெ. (n.) *நாணம்* பார்க்க; see *nāṇam.* "*கருமத்தா னாணுத னாணு*" (குறள், 1011.).

*[நாண் → நாணு–.]*

**நாணுகம்** *nāṇugam,* பெ. (n.) 1. குதிரை (வின்.); horse. 2. நறுமணப்பூ; a fragrant flower.

*[நாணு → நாணுகம்.]*

**நாணுவத்தான்** *nāṇu-vattāṉ,* பெ. (n.) *நாணுவம்* பார்க்க; see *nāṇuvam.*

**நாணுவம்** *nāṇuvam,* பெ. (n.) நாகண வாய்ப்புள் (வின்.), common myna.

**நாணுவரையிற–த்தல்** *nāṇu-varai-y-iṟa-* 4 செ.கு.வி. (v.i.) பத்துத் துன்பத்துள் நாணம் நீங்குதலாகிய தொல்லை; (தொல்.பொருள். 100.). transgreesing the bounds of propriety and modesty, as a heroine in love, one of ten avattai.

*[நாணு + வரையிறத்தல்–.]*

**நாணுவான்** *nāṇuvāṉ,* பெ. (n) *நாகணவாய்ப்புள் (யாழ்.அக.)* பார்க்க; see *nāgaṇavāy-p-puḷ.*

*[நாணுவம் → நாணுவான்.]*

**நாணெறி–தல்** *nāṉ-eṟi-,* 2 செ.குன்றாவி. (v.t.) நாணைத் தெறித்து ஒலியெழுப்புதல்; to twang the bowstring "*நாணெறிந்து முறைமுறை தொடர்ந்து*" (கம்பரா.நாகபாச.61.).

*[நாண்[2] + எறி–.]*

**நாணேற்று–தல்** *nāṉ-ēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) வில்லை வளைத்து நாணைச் செருகுதல்; to bend a bow and fasten its string.

*[நாண் + ஏற்று–.]*

**நாணேறிடு–தல்** *nāṉ-ēṟidu-,* 5 செ.கு.வி. (v.i.) *நாணேற்று–.* பார்க்க; see *nāṉ-ēṟṟu-.*

*[நாண் + ஏறி+இடு–.]*

**நாணையம்** *nāṇaiyam,* பெ. (n.) *நாணயம்*[1] (இ.வ.) பார்க்க; see *nāṇayam*[1].

*[நாணயம் → நாணையம்.]*

**நாணொளிப்புளி** *nāṉoḷi-p-puḷi,* பெ. (n.) புளிமரவகையுளொன்று; a kind of tamarind tree.

**நாத்தடுக்கு**[1] *nāt-t-aḍukku,* பெ. (n.) திக்கல் (pond); stammering

*[நா + தடுக்கு.]*

**நாத்தடுக்கு—**[2]**தல்** *nāt-t-taḍukku-,* 5.செ. குன்றாவி. (v.t.) *நாத்தாங்கிப் பேசு—தல்* பார்க்க; see *nā-t-tāṅgi-p-pēšu-*

*[நா + தடுக்கு—.]*

**நாத்தம்** *nāttam.* பெ. (n). 1. கந்தகம்; Sulphur 2. வசம்பு; sweet flag

**நாத்தலைமடிவிளி** *nā-t-talai-maḍi-viḷi,* பெ. (n.) சீழ்க்கை; whistle "*நாத்தலை மடிவிளிக் கூத்தொடு குயிறர*" (சீவக.120.).

*[நா + தலைமடி + விளி.]*

**நாத்தழும்பிரு—த்தல்** *nā-t-taḻumbiru-,* 2 செ.கு.வி. (v.i.) *நாத்தழும்பேறுதல்—.* பார்க்க; see *nāttaḻumbēṟu-* "*நாத்தழும் பிருப்பப் பாடாதாயினும்*" (புறநா.200).

*[நா + தழும்பு + இரு—.]*

**நாத்தழும்பு—தல்** *nā-t-taḻumbu-,* 5 செ.கு.வி. (v.i.) *நாத்தழும்பேறு—.* பார்க்க; see *nāttaḻumbēṟu-* "*நாத்தழும்ப வேத்தாதார்*" (சீவக. 1469.).

*[நா + தழும்பு—.]*

**நாத்தழும்பெழு—தல்** *nā-t-taḻumbeḻu-,* 2 செ.கு.வி. (v.i.) *நாத்தழும்பேறு—.* பார்க்க; see *nāttaḻumbēṟu-.* "*நாத்தழும்பெழ நாரணாவென் றழைத்து*" (திவ்.பெருமாள்.2:3).

*[நா + தழுப்பு + எழு—.]*

**நாத்தழும்பேறு—தல்** *nā-t-taḻumbēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) பலமுறை சொல்லுதலால் நாவுக்குப் பழக்கமுண்டாதல்; to acquire ease in utterance, as tongue by constant recitation "*நாத்திகம் பேசி நாத்தழும் பேறினர்*" (திருவாச.4:4.).

*[நா + தழும்பு + ஏறு—.]*

**நாத்தன்தகரை** *nāttaṉ-tagarai,* பெ. (n.) கெட்ட மணமுள்ள தகரை; fetid cassia.

**நாத்தனார்** *nāttaṉār.* பெ. (n.) கணவனுடன் பிறந்தாள்; husband's sister

க. நாதினி.

*[நாற்றுாண் → நாத்துாண் → நாத்தன் + ஆர்.]*

ஒரு குடியிற் பிறந்தபெண், பூப்பெய்தித் தக்கபருவம் வந்தக்கால், புக்ககம் செல்வது பொதுமரபாகும். இஃதே போன்று, ஒருகுடியில் நாற்றாயிருந்து, மறுகுடிக்கு, நடுபயிராகச் செல்லுந்தன்மை யுடையாளாதலின், "நாற்று அன்னார்," என்னும் பொருண்மையிற் கூறுதல் பொருந்துமென்க.

ஒருகா. நாத்துணையார் → நாத்தனார்.

நா + துணையார் = பிறந்தகத்திலிருந்து, புகுந்தகத்திற்கு வந்த, பெண்ணுட னுறைந்து, ஆறுதலும், தேறுதலும் தரும், கணவனின் தமக்கை அல்லது தங்கை.

சிலப்பதிகாரத்தில், இளங்கோ அடிகள், 'நாத்தூண் நங்கை' என்று குறிப்பதால்,

புகுந்த வீட்டார், பிறந்தவீட்டைத் தாழ்த்திப் பேசினால், புதுப்பெண் தன் வீட்டுப் பெருமையைத் தூணாக நின்று காப்பவள் என்று, பொருள்படுதல் காண்க.

**நாத்தாங்கி** *nā-t-tangi,* பெ. (n.) 1. *நாதாங்கி* (வின்.) பார்க்க; see *nātāngi.* 2. இலைக்கள்ளி வகை; five- tubercled spurge. 3. வலி, கொருக்கு வலி.(சா.அக.); cramp.

*[நா + தாங்கி → நாத்தாங்கி.]*

தாழ்க்கோலின், 'நா' போன்ற தண்டினைத் தாங்கும் தாழ்ப்பாள்.

**நாத்தாங்கிப்பேசு-தல்** *nā-t-tāngi -p-pēšu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. திக்கிப்பேசுதல்; to falter in speech, stammer. 2. எண்ணிப்பேசுதல்; to speak thoughtfully.

*[நா + தாங்கிப்பேசு-.]*

**நாத்தாங்கிவாய்** *nā-t-tāngi-vāy,* பெ. (n.) 1. நாதாங்கி(இ.வ.); hasp. 2. மூலப்பொருள், ஆக்கப்பொருளுக்கு மூலமான அடிப்படைச் சரக்கு; staple.

**மறுவ.** கொக்கி, கொளுவி, கொண்டி.

*[நா + தாங்கி + வாய்.]*

**நாத்தி**[1] *nātti,* பெ. (n.) *நாத்தனார் (இ.வ.)* பார்க்க; see *nāttanār.*

[நாற்றூண் → நாத்தூண் → நாத்தன் + ஆர் → நாத்தன் → நாத்தி.]

**நாத்தி**[2] *nātti,* பெ. (n.) 1. இன்மை; non-existance. யாரியற்றினு நாத்திசெய் தெங்கணும் (விநாயகபு.73,30.). 2. ஒன்றுக்கு உள்ளதான ஒருபொருள், மற்றொன்றுக்கு இல்லாதாகை; absence, as of a characteristic. *"மனைவி யானகாலத்துப் புத்திரியாகாமை போல" "நாத்தியொன்று மித்திறப்பங்கமேழும்"* (மேரு மந்.708.). 3. நாசம்(யாழ்.அக.): destruction.

**நாத்தி**[3] *nātti,* பெ. (n.) தாழ்வாரம் (யாழ்.அக.); sloping roof.

**நாத்திக்காசு** *nātti-k-kāšu,* பெ. (n.) நாத்திப்பட்டத்திற்குப் பகரமாகக் கட்டப்படும் பொற்காசு; instead of gold pendant, a gold coin is tied.

*[நாத்தி + காசு.]*

*பொருளாதாரச் சூழலுக்கு ஏற்ற வண்ணம், சிலர் பொற்பட்டமாகவும், வசதிவாய்ப்பற்றோர், சிறியகாசுவடிவிலும், மணமகளின் நெற்றியில் கட்டுவர்.*

**நாத்திப்பட்டம்** *nātti-p-paṭṭam,* பெ. (n.) திருமணத்தில் மணமகனின் தங்கை அல்லது தமக்கையான நாத்துணை நங்கை, மணமகளின் நெற்றியில் கட்டும் பொற்பட்டம்; it is an golden pendant tied on the forehead of bride by bridegrooms sister.

*[நாத்தி + பட்டம்.]*

*நாத்தி என்னுஞ்சொல், நாத்துணையாள் என்பதன் மரூஉ.*

**நாத்திப்பணம்** *nātti-p-paṇam,* பெ. (n.) மணமகன் அல்லது மணமகள் வீட்டார், நாத்திவிளக்கேந்திய பெண்ணுக்குத் தரும் பணம்; money given to bridegroom's sister who held the holy lamp by bride or bridegrooms parents.

*[நாத்தி + பணம்]*

**நாத்திரம்** *nāttiram,* பெ. (n.) புகழ்; fame.

*[நா + திறம் → திரம்.]*

ற → ர = திரிபு.

மந்திரம், தந்திரம் என்பவும், இவ்வாறு திரிந்தன என்பது, பாவாணர் கருத்து. நாவின் வாயிலாக ஒருவர்தம் திறனை அல்லது புகழை, வானளாவ உயர்த்திப் பேசுகை.

**நாத்திவிளக்கு** *nātti-viḷakku,* பெ. (n.) திருமணத்தில் மணமகனின் தமக்கை ஏந்திச்செல்லும் விளக்கு; on the occasion of wedding the holy lamp held by bridegrooms sister.

*[நாத்தி + விளக்கு.]*

*திருமணத்தில், தாலிகட்டும் நிகழ்வு நடைபெறுங்கால், மணமகனின் தங்கை அல்லது தமக்கையான நாத்தனார் எனப்படும் நாத்துணையாள், தாம்பலத்தில் வைத்துப் பிடித்து மணமக்கள் மண மேடையைச் சுற்றிவரும் பொழுது, முன்கொண்டு செல்வதுமான கைவிளக்கு*

**நாத்திவேடம்** *nātti-vēḍam,* பெ. (n.). அசோகு; asoka tree.

**நாத்து** *nāttu,* பெ. (n.) ***நாத்தனார்*** பார்க்க; see *nāttaṉār.*

**நாத்துடுக்கு** *nāt-tuḍukku,* பெ. (n.) கடுஞ்சொற்களால் ஏசுகை; abuse. நாத்துடுக்காகப் பேசுபவர்களே, நல்லமுறையில் இருக்கிறார்கள் (இ.வ.).

*[நா + துள் → துடு → துடுக்கு.]*

பணச்செருக்கிலும், பதவிவெறியிலும் பிறரை மதிக்காது, நாத்துடுக்காக எடுத்தெறிந்து பேசுகை.

**நாத்தூண்** *nāttūṇ,* பெ. (n.) 1. ***நாத்தனார்*** பார்க்க; see *nāttaṉār* 2. ***நாத்தூண்நங்கை*** பார்க்க; see *nāttūṇ-naṅgai.*

ம. நாத்தூண்.

**நாத்தூண்நங்கை** *nāttūṇ-naṅgai,* பெ. (n.) கணவனுடன் பிறந்த மங்கை; husband's sister. "***நாத்தூ ணங்கையொடு.....அடிசி லாக்குதற்கு***" (சிலப். 16:19.).

*[நாற்றூண் → நாத்தூண் + நங்கை.]*

பிறந்த வீட்டுப்பெருமைக்கு, பிறழ்வு நேராவண்ணம், தன் பிறந்தகத்துப் பெருமையை, நாவின் சொற்களால், தாங்கி நிலைநிறுத்தும் நங்கை.

**நாத்தொங்கல்** *nāttoṅgal,* பெ. (n) நாக்கு வெளிகண்டு தொங்கல்; port rusion of the tongue. (சா.அக.).

**நாதசலசயம்** *nādaśalaśayam,* பெ. (n.) இலாமிச்சை வேர்; cuscus root.

**நாதசாரம்[1]** *nāda-śāram,* பெ. (n.) மருந்துவகை; a medicine.(சங்.அக.)

**நாதசாரம்[2]** *nāta-sāram,* பெ. (n.) சிவ சாரவுப்பு; a kind of prepared salt.

**நாதசுரம்** *nāda-śuram,* பெ. (n.) ***நாகசுரம்;*** பார்க்க; see *nāga-śuram.*

**நாதத்து பீடம்** *nādattu-pīḍam,* பெ. (n) துத்தநாகம்; Zinc.

**நாதநாதம்** *nāda-nādam,* பெ. (n.) பேரரத்தை; greater galangal.

**நாதநாமக்கிரியை** *nāda-nāma-k-kiriyai,* பெ. (n) பண்வகையுளொன்று; a musical mode.

**நாதநீர்** *nāda-nīr,* பெ. (n.) பனிக்குடத்து நீர்; amniotic-fluid.

**நாதபரவாசல்** *nāda-paravāšal,* பெ. (n.) பெண்குறி; the vagina in the female genital.

**நாத பருணி** *nāda-paruṇi,* பெ. (n.) மலம்; fecal matter.

**நாதமுட்டை** *nāda-muṭṭai,* பெ. (n.) சினை; ovum.

**நாதமுனி** *nāda-muṇi,* பெ. (n.) திருவாய் மொழி முதலான நூல்களை முதன்முதற் கண்டு, வெளிக்கொணர்ந்த திருமாலியத் தலைவர் (அஷ்டப். திருவரங்கந்.காப்பு.3.); the first Vaiṣṇava Acārya who brought to light Tiruvāy-moḻi and other prabandhas.

**நாதயந்தனஞ்சரி** *nādayandaṉañjari,* பெ. (n.) சிறுகுறிஞ்சா; small indian opicacuanha.

**நாதயம்** *nādayam,* பெ. (n) இந்துப்பு; rock salt

**நாதரவி** *nādaravi,* பெ. (n.) **1.** உடற்கொழுப்பு (மூ.அ.); fat in the body. **2.** வெண்கண்டங் கத்தரி; white flowred prickly night shade.

**நாத வடியுப்பு** *nāda-vaḍiyuppu,* பெ. (n.) கறியுப்பு; common salt.

**நாதவணு** *nāda-v-aṇu,* பெ. (n.) பெண்ணின் கருமுட்டை; female. ovum.

**நாதவத்தம்** *nāda-v-attam,* பெ. (n.) **1.** *யானை நெருஞ்சி (மலை)* பார்க்க; see *yāṉai-neruñji.* a small plant. **2.** பெருநெருஞ்சில்; large caltrope.

**நாதவாகி** *nāda-vāgı,* பெ. (n.) கருப்பைக்குழல்; uteras-tube.

**நாதவுப்பு** *nāda-v-uppu,* பெ. (n.) நிலத்தி லுண்டாகும் முப்பு; salt from mines under the earth.

**நாதவொளி** *nād-v-oḷi,* பெ. (n.) பொன்; gold.

**நாதாக்கள்சட்டை** *nādākkaḷ-šaṭṭai,* பெ. (n.) மரப்பட்டை; bark.

**நாதாங்கி** *nādāṅgi,* பெ. (n.) பூட்டு, தாழ்ப்பாள்; சங்கிலி இவை மாட்டவுதவும் கதவுநிலையுறுப்பு; hasp of a lock, staple; clincher of a chain

*[நா + தாங்கி.]*

**நாதாங்கிமொந்தன்** *nādāṅgi-mondaṉ,* பெ. (n.) ஈரோட்டுப் பக்கத்தில் வளரும் மொந்தன் வாழை வகை; a species of the mondaṉ plantain, cultivated near Erode.

*[நாதாங்கி + மொந்தன்.]*

**நாதாசயம்** *nādā-šayam,* பெ. (n.) உயிரணுக்கள் உருவாகும் சினைப்பை; egg. glands.

**நாதாந்திக்காவி** *nādāndi-k-kāvi,* பெ. (n.) *கற்காவி; red-ochre.*

**நாதி** *nādi,* பெ. (n) 1. பெருங்காய வகை (வின்.); a kind of asafoetida. 2. தான்றிக்காய்; devils abode.

**நாதிருடி** *nādirudi,* பெ. (n.) எருக்கிலை; giant swallow wortk

**நாதேயம்** *nādēyam,* பெ. (n) 1. வஞ்சிக்கொடி; *rattan cane palm.* (மூ.அ.); 2. சீந்தில்(மலை.); gulancha 3. துரிசு (தைலவ.தைல.); sulphate *of copper* 4. இந்துப்பு (வின்.); rock salt

*[நா + தேயம்.]*

**நாதேனி** *nādēni,* பெ. (n.) மணித்தக்காளி (மலை.); indian hounds-berry

*[நா + தேனி.]*

**நாந்தகம்** *nāndagam,* பெ. (n.) 1. திருமாலின் வாள்; sword of Tirumāl. "*நாந்தகஞ்சங்கு தண்டு*" (திவ்.பெரியாழ்.4,1:2.). 2. வாள் (பிங்.); sword. "*நாந்தக மின்னும் வீசி*" (கம்பரா. அதிகாய.209.).

*[நாந்து + அகம்.]*

**நாந்தல்** *nāndal,* பெ. (n.) 1. மழைமூட்டம் (வின்.); cloudiness, 2. ஈரம் (வின்.); dampness. 3. *நாந்தற் காலம்* பார்க்க;see *nāndar-kālam.*

தெ., நாந்துடு. க. நாந்து.

**நாந்தற்காலம்** *nāndar-kālam,* பெ. (n) மழை வானமாயிருக்குங் காலம்; damp, cloudy weather

**மறுவ.** கார்காலம்.

*[நாந்தல் + காலம்.]*

வானம் மேகம் சூழ்ந்து, மப்பும் மந்தாரமுமாக இருக்கும் காலம்.

**நாந்தி**[1] *nāndi,* பெ. (n) 1. நாடகமுன்னுரை; an invocatory verse, as in a drama 2. பாயிரம்; prologue. "*இது ...... நாந்தி கூறுகின்றது*" (பி.வி.3,உரை.). 3. திருமணம் முதலிய நற்செயல் செய்வதற்கு முன், செய்யுமோர் சடங்குமுறை; a virtual ceremony, performed. to propitiate a class of manes before celebrating any auspicious event

**நாந்தி**[2] *nāndi,* பெ. (n.) முதுகு (இ.வ.); back

**நாந்திகந்தரு** *nāndi-gandaru,* பெ. (n.) மர மஞ்சள் (சங்.அக.); turmeric.

**நாந்திசிராத்தம்** *nāndi-širāttam,* பெ. (n.) *நாந்தி*[1] 3. பார்க்க; see *nāndi*[1]. 3.

*[நாந்து + skt. சிராத்தம்.]*

**நாந்திமுகம்** *nāndi-mugam,* பெ. (n) *நாந்தி*[1] பார்க்க; see *nāndi*[1]. "*நாந்திமுக மெனுஞ் சிராத்த மோம்பி*" (தணிகைப்பு.வள்ளி.161.).

**நாந்து—தல்** *nāndu-,* 5 செ.கு.வி. (v.i.) நனைதல்(யாழ்.அக.); to become wet.

க. நாந்து.

*[நந்து → நாந்து.]*

**நாந்தெனி** *nāndeṉi,* பெ. (n.) *நாந்தொனி (யாழ்.அக.)* பார்க்க; see *nāndoṉi.*

**நாந்தேனி** *nāṇḍēṉi,* பெ. (n.). நச்சுப்பூடு; poisonous herb. (சா.அக.).

**நாந்தொனி** *nāndoṉi,* பெ. (n.) பூடுவகை (சங்.அக.); a plant.

**நாநல்கூர்—தல்** *nā-nalkūr-,*17 செ.கு.வி. (v.i.) பேசாதிருத்தல்; to be poor or sparing in words, to be silent. "*மலரடி வணங்காது நாநல் கூர்ந்தனை*" (மணிமே.10:34.).

*[நா + நல்கூர் —.]*

**நாநலம்** *nā-nalam,* பெ. (n.) சொல்வன்மை; சொல்லாற்றல்; பேச்சுநயம்; eloquence. "*நாநலமென்னு நலனுடைமை யந்நலம் யாநலத் துள்ளதூஉ மன்று*" (குறள்,641.). பேரறிஞர் அண்ணா, தமது மிகச் சிறந்த நாநலத்தால், தமிழர்தம் நெஞ்சில் நிலையான இடத்தைப் பெற்றார் (இக்.வ.).

*மறுவ.* பேச்சாற்றல், பேச்சுத்திறன்.

*[நா + நலம்]*

அமைச்சனுக்கு அமைய வேண்டிய தலையாய நலம். அஃதாவது ஈடு இணையற்ற தனிப்பெருஞ்செல்வமான நாநலத்தால் அமைச்சன், தன் சூழ்ச்சியை அரசனுக்கு எடுத்துச் சொல்வதில் வல்லவனாதல், அமைச்சிலக்கணங்களுள் இன்றியமையாது, வேண்டப்படும் தனிப்பெருங்குணம். இதனை வள்ளுவர் வரையறுக்குங்கால்

நாநலம் என்பது, அறிவுடையோரால் மதிக்கப்பெறும் உயர்பெருஞ்செல்வம். அமைச்சனுக்குரிய தனிப்பெருஞ்செல்வமும், தலையாய செல்வமும், இஃதே. இச் செல்வம் யாவராலும் விரித்துரைக்க இயலாத மாப்பேறாகும். நற்பேறுகட்கு அப்பாற்பட்ட நனிபெரும் பேறாகும். இத் தன்மைத்து என்று எவராலும் எடுத்தியம்ப இயலாத தனிப்பெருஞ் செல்வமாகும். புகழ்பெறும் அமைச்சனுக்குரிய வாழ்வியற் பேறாகும்.

இம் மாப்பேறு பற்றி மொழிமீட்பர் கூறுவது:—

நாவின் நலம் நாநலம். அது நாவின் நன்மையும், வன்மையும் கலந்தது. நன்மை, பிறருக்கு நன்மை செய்வதும், வன்மை, பிறரை வயப்படுத்துவதுமாகும். இப் பேறு தனிப் பட்டதாதலின், "*யாநலத்துள்ளதூஉ மன்று,*" என்றார்.

நாநலம் பற்றிப் பரிமேலழகர் பகருங்கால், "*நாவால் உளதாய நலம்*" இந் நலம் உலகத்தைத் தம் வயத்ததாக்கும், அமைச்சர்க்கு வேறாக வேண்டும், என்னும் நீதிநூல் வழக்குப் பற்றி, நாநலம் என்னும் நலன் என்றும் பிறர்க்கும், இது போலச் சிறந்தது பிறிது இன்மையான், "*அந் நலம் யாநலத் துள்ளதூஉம் அன்று*" என்றும் கூறினார். பிரித்தல், பொருத்தல் முதலிய தொழில் இல்லாதார்க்கும், இஃது இன்றி யமையாததாயின், அத் தொழிலார்க்குக் கூறவேண்டுமோ என்பது கருத்து.

இந் நானிலத்தில் நல்வாழ்வு வாழவிரும்பும் அனைவருக்கும் வேண்டப்படுந் தனிப்பெருஞ்செல்வமே, நாநலம். இந் நலம் சிறப்பாக அமைச்சர்க்கு இன்றியமையாது, வேண்டப்படுந் தனிப்பெருங் குணமென்றறிக.

**நாநாழி** *nānāḻi,* பெ. (n). பெரியபடி கொண்ட அளவு; one chennai measure.

**நாநீட்டு—தல்** *nā-nīṭṭu-*,5 செ.கு.வி.(v.i) பேசுதல்; to speak, tell, as wagging one's tongue "*அவையறிந்து நாநீட்டுதல் ஆன்றோர்க்கு அழகாகும்*" (இக்.வ.). "*ஓதியி னொதுங்கி... நாநீட்டும்*" (மணிமே.5:108). கண்ட இடத்தில் கண்டபடி நாநீட்டினால், மிஞ்சுவது பகையே ஆகும். (இக். வ.). நாநீட்டுதல் எனும் பண்பினைத் தக்க இடம் அறிந்து மேற்கொள்ளவேண்டும். 2. ஏசுதல்; to rebuke.

*[நா + நீட்டு—.]*

**நாப்பண்**[1] *nā-p-paṇ*, பெ. (n.) 1. நடு; middle, centre. "*பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்*" (புறநா.13). 2. தேர்நடு; central flat of a chariot. 3. யாழினுறுப்பு (சூடா.); bridge of a lute.

*[நடு + பண் → நாப்பண்.]*

*[நடு → நா + பண்.]*

**நாப்பண்**[2] *nā-p-paṇ*. பெ. (n) வாய்ப்பாட்டு; notes

*[நா + பண்.]*

**நாப்பாடம்** *nā-p-pāḍam*, பெ. (n.) நெட்டுருப் பண்ணிய வாய்ப்பாடம், எழுத்துவகைச் சுவடியில்லாமல் வாய்வழியாகவே பயிற்றிய பாடம் lip-learned lessons. "*நாப்பாடஞ்சொல்லி நயமுணர்வார் போற் செறிக்குந் தீப்புலவற் சேரார்*" (நாலடி.312).

*[நா + படி → பாடம்.]*

உள்ளத்தில் காலூன்றிப் படிந்து, நாவில் எஞ்ஞான்றும் நிலைத்திருக்கும் பாடம்.

**நாப்பிவிடு—தல்** *nāppi-viḍu-*, 18 செ.கு.வி. (v.t) *நாப்புக் காட்டு—, (வின்.)* பார்க்க; see *nāppu-k-kāṭṭu-*

*[நாப்பு + விடு—.]*

**நாப்பு**[1]**—தல்** *nāppu-*, 5 செ.கு.வி. (v.t.) *நாப்புக்காட்டு—,(வின்.)* பார்க்க; see *nāppu-k-kāṭṭu-*.

**நாப்பு**[2] *nāppu*, பெ. (n.) 1. இகழ்ச்சி, ஏளனம் (பரிகாசம்); mockery. 2. எள்ளி நகையாடுகை; ridicule. 3. நடையுடைத்தோற்றம் போன்ற வற்றைப் போலச் செய்யும் நடிப்பு; mimicry "*இந்திரனுமெனை நாப்புக் காட்டுவானே*" (இராமநா. உயுத்.80).

*[நகைப்பு → நாப்பு.]*

**நாப்புக்காட்டு—தல்** *nāppu-k-kāṭṭu-*, 5 செ.குன்றாவி. (v.t) 1. அழகு காட்டுதல்; to imitate in derision, to mimic 2. வஞ்சித்தல், ஏய்த்தல்,(வின்.); to deceive

*[நாப்பு + காட்டு—.]*

நகைப்பு → நாப்பு = பிறருக்குத் துன்பமிழைத்து, அவர்படுந் துயரங்கண்டு, அகமகிழ்தல்.

**நாப்புற்று** *nā-p-puṟṟu*, பெ. (n.) 1. நாவினி லுண்டாகும் வீண்தசைத்திரட்சி அல்லது கழலை; excrescence 2. நா நோவுவகை; a cancerous disease on the tongue.

*[நா + புற்று.]-*

புற்றுக்கட்டி வகையுளொன்று; நாவிலேற் படும் எழுச்சி அல்லது கழலை.

**நாப்பொடி—தல்** *nā-p-poḍi-*, 2 செ.குன்றாவி. (v.t.) நாவுலர்தல் (யாழ்.அக.); to dry up of the tongue

*[நா + பொடி—.]*

**நாபதி** *nā-padi,* பெ. (n.) நாவிற்கு நீர் வார்ப்பவன்; he whose grace is indispensable for speech. "*நாரணனை நாபதியை*" (திவ்.இயற்.நான்மு.67.).

**நாபம்** *nābam,* பெ. (n.) நஞ்சுவகை (வின்.); a strong poison prepared from the root of indian aconite.

**நாம்[1]** *nām,* பெ. (n.) அச்சம்; fear, dread, terror. "*பேம் நாம் வரும் என வரூஉம் கிளவி ஆமுறை மூன்றும் அச்சப்பொருள*" (தொல்.சொல்.365).

*[யா → யாஅம் → யாம் → ஞாம் → நாம்.]*

யா = கருமைக்கருத்து வேர்.

விண்மீன்கள் தவிர, மாந்தர், பறவை விலங்கு, தம்ரும், பிறரும் கண்களுக்குப் புலப்படாத தன்மையில் அமைந்த, நள்ளிருள் செறிந்த–கடுங்காலமான, அச்சந் தருங் காலத்தை, நடுயாமம் என்பர், நம் முன்னோர்.

கருமைக்கருத்து வழித் தோன்றிய இருண்மைக்கருத்து, அச்சக்கருத்து வளர்ச்சிக்கு வழிகோலியது என்பார், ப.அருளி [semantic extension] தொல்காப்பியரும், "நாம்" என்பது அச்சப்பொருள் தரும் தன்மைத்து என்று உரைத்துள்ளது, நாம் அறிந்ததே. உரியியலில் அமைந்துள்ள இந் நூற்பாவிற்குத் தெய்வச்சிலையார், "போம் என்னும் சொல்லும். "நாம்" என்னும் சொல்லும், உரும் என்னும் சொல்லுமாகிய அம் முறைமையுடைய மூன்று சொல்லும், அச்சப்பொருண்மையை உடைய, என்று குறித்துள்ளார்.

மொழிஞாயிறு கூறுவது, நாம் + அம் → நாமம் = அச்சம். இஃது, உரிச் சொல். அகலம், ஆழம், தீயவுயிர்கள், கொந்தளிப்பு, நிலமுழுக்கு போன்றவற்றால் ஏற்படுவது, என்று மொழிந்துள்ளமையால், "நாம்" என்னுஞ்சொல், அச்சப்பொருண்மையை, முதன்மையாயுடைத்து என்று, துணியலாம்.

**நாம்[2]** *nām,* ப, பெ. (pron.) 1. தன்மைப் பன்மைச் சொல்; (தொல்.சொல்.164); we. 2. தாங்கள்; you, used honorifically. "*நடந்தவரோ நாமென்ன*" (கம்பரா.சூர்ப்ப.119).

க. நாவு.

நாம்: தன்மையையும், படர்க்கையையும் இணைத்து வழங்கும் உளப்பாட்டுத் தன்மைப் பன்மைச் சொல். பேசுபவரையும், கேட்பவரையும் சேர்த்துக் குறிப்பிடும், தன்மை இடத்துப் பன்மைச்சொல்.

**நாம்பல்** *nāmbal,* பெ. (n) 1. இளைப்பு (நாமதீப.761),; emaciation, leanness. 2. இளைத்த விலங்கு (யாழ்ப்.); emaciated creature.

*[நாம்பு → நாம்பல்.]*

அல்லீற்றுத் தொழிலாகுபெயர்.

**நாம்பன்** *nāmban,* பெ. (n) இளவெருது (யாழ்ப்); steer, bull-calf.

மறுவ. கட்டிளங்காளை.

*[நம்பன் → நாம்பன்.]*

**நாம்பு[1]–தல்** *nāmbu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. இளைத்தல் (வின்.); to become meagre, thin or emaciated. 2. நாவு–தல் பார்க்க; see nāvu-.

க. நாம்பு.

*[நரம்பு → நம்பு → நரம்பு–.]*

நரம்பு போன்று இளைத்தல். நரம்பன், நரம்பி போன்ற மக்கள் வழக்குகளை நோக்குக.

**நாம்பு²** *nāmbu-,* பெ. (n.) **1.** மெலிந்தது (வின்.); anything lean. **2.** மெல்லிக்கொடி; small climber. "*சுருங்கிய நாம்பின் முடிமுதிர் பரதவர்*" (நற்.207.)

**க.** நாம்பு.

*[நரம்பு → நம்பு → நாம்பு–.]*

இஃது, இளைத்தல் பொருண்மை குறித்த சொல். நரம்புபோல் இளைத்த மெல்லிய கொடி. நண்பர் நரம்புபோல் நாம்பிவிட்டார் என்பது உலகு வழக்கு.

**நாமக்கட்டி** *nāma-k-katti,* பெ. (n.) திருமண்கட்டி (இ.வ.); pipe clay, used for the Vaisṇava mark

*[நாமம் + கட்டி.]*

நாமம் = வெண்மை.

நாம் = அச்சம். மாந்தர்தம் அச்சத்தை அகற்றும் வெண்மையான திருமண் என்பர், மாலியத்தார்.

**நாமக்கரடி** *nāma-k-karaḍi,* பெ. (n.) அச்சந்தரும் கரடிவகை; (இ.வ.); a species of bear.

*[நாம் + அ + கரடி.]*

*பார்த்த அளவில் மாந்தர்க்கு அச்சத்தை யுண்டாக்கும் கரடி. 'அ' சாரியை. கரடு + இ → கரடி. "பேம் நாம் உரும் என வரூஉம் கிளவி ஆமுறை மூன்றும் அச்சப் பொருள" (தொல். உரி. 848.). மேற்காட்டிய தொல்காப்பிய நூற்பா, "நாம்" என்னும் முன்னொட்டு, அச்சப் பொருண்மையுணர்த்தும் பான்மையில் அமைந்துள்ளது காண்க.*

**நாமக்கரும்பு** *nāma-k-karumbu,* பெ. (n.) நாமம் போற் கீறுகளமையப் பெற்ற கரும்பு (இ.வ.); a spicies of red sugar-cane with white streaks.

**மறுவ.** நாமதாரிக்கரும்பு.

*[நாமம் + கரும்பு.]*

**நாமக்கல்¹** *nāmakkal,* பெ. (n.) வெள்ளைக் களிமண்; pipe clay.

*[நாமம் + கல்.]*

நாமம் = வெண்மை.

**நாமக்கல்²** *nāmakkal,* பெ. (n.) ஈரோடு மாவட்டத்தைச் சேர்ந்த ஓர் பேரூர்; a city in Erode.dist.

தமிழ்நாட்டிலேயே அதிகமான சரக்குந்துகள், கோழிப்பண்ணைகள், நிறைந்த பேரூராகும்.

**நாமக்காரர்** *nāma-k-kārar,* பெ. (n.) நெற்றியில் திருமண் குறியிட்ட மாலியத்தார்; (Vaisṇavas) Māliyattār, as wearing the nāmam

*[நாமம் + காரர்.]*



**நாமக்காரல்** *nāma-k-kāral,* பெ. (n.) காரல் மீன்; a kind of fish

**நாமக்காலம்** *nāma-k-kālam,* பெ. (n.) அச்சந்தரும் இரவுக்காலம்; dreaded night. "*காமக்காலத்துண்டெனத் தோ தோழி*" (தொல்.பொருள்.146.).

*[யாமம் → நாமம் + காலம்.]*

*ஒ.நோ. யான் → நான்.*

**நாமக்காறல்** *nāma-k-kāṟal,* பெ. (n.) பக்கங்களில் பொற்கோடுகள் கொண்டதும், வெண்ணிறமானதும், ஐந்து (அங்குலம்) விரற்கிடை வரை. வளரக் கூடியதுமான மீன்வகை; sea fish, silvery, with golden stripes along the sides, attaining 5 in. in length equula daura

*[நாமம் + காறல்.]*

நாமம் = வெண்மை. வெண்ணிறமுள்ளகாறல் மீன்.



**நாமக்கிரியை** *nāma-k-kiriyai,* பெ. (n) பண்வகையுளொன்று; a kind of musical mode

*[நாமம் + skt. கிரியை.]*

**நாமக்குச்சரி** *nāma-k-kuccari,* பெ. (n.) வரிக்கோடிட்ட புடைவை வகை (இ.வ.); a kind of striped saree

**நாமக்குச்சலி** *nāma-k-kuccali,* பெ. (n.) *நாமக்குச்சரி* பார்க்க; see *nāma-k-kuccari.*

**நாமக்குச்சிலி** *nāma-k-kuccili,* பெ. (n) *நாமக்குச்சரி* பார்க்க; see *nāma-k-kuccari.*

**நாமக்குவளை** *nāma-k-kuvaḷai,* பெ. (n.) நாமக்கட்டியால் செய்த குவளை (வின்.); a kind of cup made of white clay

நாமம் = வெள்ளைககளிமண்:

*[நாமம் + குவளை.]*

**நாமக்கூசா** *nāmak-kūšā,* பெ. (n.) *நாமக்குவளை* பார்க்க; see *nāma-k-kuvaḷai*

*[நாமம் + கூச்சு → கூசா.]*

**நாமக்கோவை** *nāma-k-kōvai,* பெ. (n) கோவைவகையுளொன்று; a variety of indian caper

*[நாமம் + கோவை.]*

**நாமகம்** *nāmagam,* பெ. (n.) தும்பை; lecuas flower

**நாமகரணி** *nāma-garaṇi,* பெ. (n.) வெள்ளூமத்தை; white flowered dhatura

**நாமகள்**[1] *nā-magaḷ,* பெ. (n) சிவப்பரிதாரம்; red arsenic

**மறுவ.** தாளகம்.

*[நா + மகள்.]*

**நாமகள்**[2] *nā-magaḷ,* பெ. (n) கல்விக்கு இறைவியான கலைமகள்; Kalai-magaḷ (saraswadi) Goddess of learning.

*[நா + மகள்.]*

கல்வி முதலான கலைகளுக்கு இறைவியாக மதிக்கப்பெறுபவள்.

**நாமகா** *nāmagā,* பெ. (n.) நாரத்தை; bitter orange.

**நாமகி** *nāmagi,* பெ. (n) மஞ்சள்வண்ண சாதிபத்திரி; yellow coloured pulp extending over the nutmeg.

**நாமச்சி** *nāmacci,* பெ. (n.) நத்தை; snail.

மறுவ. ஊமச்சி.

**நாமசங்கிதை** *nāma-šangidai,* பெ. (n.) ஒரு சிற்பநூல்; a treatise on architecture.

**நாமசேயம்** *nāma-šēyam,* பெ. (n) வெண்சாரணை; white shauranay.

**நாமஞ்சாத்து—தல்** *nāmañ-sāttu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. ஏமாற்றுதல் (பே.வ.); to deceive. 2. திருமண் பூசுதல்; to wear tridental mark. 3. *நாமம் போடு—தல்* பார்க்க; see *nāmam-pōḍu-*

*[நாமம் + சார்த்து → சாத்து—.]*

**நாமடந்தை** *nā-maḍandai,* பெ. (n.) நாமகள்[2] பார்க்க; see nāmagaḷ[2]. "*நாமடந்தை யழுதாள்*" (கம்பரா.பிராட்டி.களங்.5.).

*[நா + மடந்தை.]*

**நாமடிக்கொள்ளு—தல்** *nā-maḍi-k-koḷḷu-,* 7 செ.குன்றாவி. (v.t) நாவை மடித்தல்; to touble the tongue "*நாமடிக் கொண்ட உதட்டையும்*" (ஈடு.4,87.).

*[நா + மடிக்கொள்ளு—.]*

சினக்குறிப்புக் காட்டுங்கால், நாவை மடித்துக்கொண்டு பேசுதல், அல்லது நடித்தல்.

**நாமத்தம்**[1] *nāmattam.* பெ. (n.) வெண்ணிறக் கடல் மீன்; white sea fish.

**நாமத்தம்**[2] *nāmattam.* பெ. (n.) சடாமஞ்சில்; spihenard.

**நாமத்தராசு** *nāma-t-tarāšu,* பெ. (n.) சீர்கோல் வகை (இ.வ.); a kind of weighing balance.

*[நாமம் + தராசு.]*

விறகுக்கடையில் பயன்படுத்தும் பெரியதலைக்கோல்.

**நாமத்தவளை** *nāma-t-tavaḷai,* பெ. (n.) தவளை வகை (இ.வ.); a kind of frog.

*[நாமம் + தவளை.]*

வரிக்கோடுகளையுடைய தவளை.



**நாமத்தாலி** *nāma-t-tāli,* பெ. (n.) கார்காத்த வேளாளரது விளக்கிடு கலியாணத்தில், பெண்

கழுத்திலணியும் தாலிவகை (G.Tn.D.1,241.). a kind of tāli worn by bride in the viḷakkidu-kārkātta-vēḷāḷar.

*[நாமம் + தாலி.]*

தஞ்சைப் பகுதியில் வாழும் கார்காத்த வேளாளர்தம் விளக்கிடு திருமண நிகழ்வில், இத் தாலிவகை, இன்றுங் காணப்படுகிறது.

**நாமத்துத்தி** *nāma-t-tutti,* பெ. (n.) துத்திச் செடிவகையுளொன்றான திருநாமத்துத்தி; lobe leaved mysore mallow.

**நாமத்துரு** *nāma-t-turu,* பெ. (n.) சவ்வு; membrane

**நாமதாரணம்** *nāma-dāraṇam,* பெ. (n.) திருமண் பூசுகை; wearing a Vaiṣṇava mark.

**நாமதாரி**[1] *nāma-dāri,* பெ. (n.) திருமண் காப்பிடும் மாலியத்தான்; a Māliyattāṉ (Vaiṣṇavaṉ) as wearing the nāmam.

*[நாமம் +* skt.*தாரி.]*

**நாமதாரி**[2] *nāma-dāri,* பெ. (n.) மூங்கில் வகை; female bamboo.

**நாமதாரிக்கரும்பு** *nāma-dāri-k-karumbu,* பெ. (n) *நாமக்கரும்பு* பார்க்க; see *nāma-k-karumbu.*

**நாமதீபநிகண்டு** *nāma-tība-nigaṇḍu,* பெ. (n) கல்லிடைக்குறிச்சிச் சிவசுப்பிரமணிய கவிராயரால், 808 வெண்பாக்களில் இயற்றப்பட்ட நிகண்டு; a glossary in 808 stan zas of veṇpā metre by šivasubramaṇiya-k-kavirāyar of kalliḍai-k-kuṟicci.

*[நாமதீபம் + நிகண்டு.]*

**நாமநாத்தி** *nāma-nātti,* பெ. (n.) வக்கணத்திப் பூடு; mottled ebony

**நாமநாராயணி** *nāma-nārāyaṇi,* பெ. (n.) தலைமைப்பண் (சங்.சந்.47.); a primary rāgam

**நாமநீர்** *nāma-nir,* பெ. (n) அச்சந்தரும் கடல்; sea, asinspiring fear "*நாமநீர் வைப்பின்*" (குறள்,149.)

*[நாமம் + நீர்.]*

நாமம் = அச்சம். இஃது, உரிச்சொல். அகலம், ஆழம் தீயஉயிர்கள், கொந்தளிப்பு, நிலமுழுக்கு முதலியவற்றால், அஞ்சத் தக்கதாகலின், கடலை நாமநீர் என்றார். (திருக்.மரபு.பக்.108.).

இளங்கோவடிகளும், அச்சத்தைத் தருகின்ற கடல்சூழ் உலகு எனும் பொருண்மையில், பின்வருமாறு கூறியுள்ளதை நோக்குக.

"*நாமநீர் வேலி யுலகிற்கு*" (சிலம்பு:1:8.).

**நாமநீர்வைப்பு** *nāma-nir-vaippu,* பெ. (n.) கடல்நீர் சூழ்ந்த உலகம்; the world sourrounded the sea.

*[நாமநீர் + வைப்பு.]*

அச்சம் பொருந்திய நீரையுடை கடல்சூழ்ந்த உலகம்.

**நாமப்பாறை** *nāma-p-pāṟai,* பெ. (n.) அகன்ற பொற்கோடுள்ளதும், வெண்ணிறமுடையது மான மீன்வகை; horse-mackerel, silvery, with broad golden stripes.

*[நாமம் + பாறை.]*



**நாமப்பூசல்** *nāma-p-pūšal,* பெ. (n) அச்சந்தரும் சண்டை; uproar. *"நாமப்பூசல்"* (நற்.65,7.)

*[நாமம் + பூசல்.]*

**நாமம்[1]** *nāmam,* பெ. (n.) தும்பை (மலை); a common herb with milk-white flowers.

*[நாம் + அம் → நாமம்.]*

வெண்மைப்பொருளில் தும்பை மலரைக் குறித்தது. நாமக்கல், நாமக்கட்டி, நாமச்சாந்து போன்ற வெண்மைப் பொருள்கரும் சொற்களை நோக்குக.

**நாமம்[2]** *nāmam,* பெ. (n.) **1.** அச்சம்; fear. *"நாமக்காலத்து"* (தொல்.பொருள்.146.) **2.** நிறைவு; fulness *"நாமவெள்ளத்து நடுவட் டோன்றிய வாய்மொழி மகனொடு"* (பரிபா.3,92.) **3.** *நாம்[1]* பார்க்க; see *nām[1]*

*[யாம் → ஞாம் → நாம் + அம் → நாமம்.]*

யா = கருமைக்கருத்துவேர்.

யா + அம் → யாம்.

யாம் + அம் → யாமம்.

யாமம் = அச்சம் தரும் நள்ளிருள்.

நடுஇரவுக்காலம் அச்சம் தரும் காலம். அச்சக்கருத்திற்கு அடிப்படைக்கருத்து இருண்மையே, இருட்டைக் கண்டு அஞ்சுவது மாந்தரியல்பாகும். இது பற்றிச் சொல்லாய்வாளர் ப. அருளி *"கருமைக்கருத்துவழித் தோன்றிய இருண்மைக் கருத்து அச்சக்கருத்து வளர்ச்சிக்கு வழிகோலியது"* என்று, (Semantic extension ) கூறியுள்ளார்.

தேவநேயரும், நாமம் என்பது அச்சப்பொருள் தரும் உரிச்சொல் என்று, குறித்துள்ளமை காண்க.

அச்சப்பொருண்மை பற்றித் தொல்காப்பியர், உயிரியல் 67–ஆவது நூற்பாவில் குறிப்பிட்டுள்ளார். மேலும் கற்பியலில், களவுக்காலத்தை, *"நாமக்காலம்"* என்று கூறியுள்ளது, கூர்ந்து நோக்கத்தக்கது.

*"தலைவன் வரும் வழியின் இடையூறுகளை எண்ணித் தோழியும், தலைவியும், தலைவனுக்கு என்ன நேருமோ என, அஞ்சுதற்கு ஏதுவாகிய களவுக்காலம்"* என்று உரையாசிரியர் நாமக்காலத்தைக் குறிப்பிடுவர். மேலும் கழக இலக்கியங்களில்

*"நாமஅருந்துறை"* என்று, அகம் 18–ஆம் பாடலிலும், *"நாமநள்ளிருள்"* என்று, நற்றிணை 122–ஆம் பாட்டிலும், *"நாமஞ்சால் தெவ்வர்"* என்று, கலித்தொகை 30–ஆம் பாட்டிலும், *"நாமம் அறியா வேம வாழ்க்கை"* என்று பதிற்றுப்பத்திலும் (68:12.); *"நாமநீர்வைப்பு"* என்று திருக்குறளிலும், (குறள், 149.) *"நாமநீர்வேலி"* சிலப்1:8.) என்று சிலம்பிலும், *"நாமப்பூசல்"* என்று நற்றிணை 65–ஆம் பாட்டிலும், *"நாமவெள்ளத்து நடுவண்"* என்று பரிபாடல் 3–ஆம் பாட்டிலும், அச்சப்பொருள், கழக இலக்கியப் புலவர்களால் சிறப்பித்துப் பேசப்பட்டுள்ளது கண்டு, தெளிக.

**நாமம்**[3] *nāmam,* பெ. (n.) 1. புகழ்; fame, reputation. "*வழுதியர் நாமம் வளர்க்கின்ற வாணன்*" (தஞ்சைவா.7.) 2. வெள்ளைக் களிமண்ணாலாகிய திருமண்கட்டி; white clay, used for nāmam. 3. சமணசமயத்தில் எண்குற்றங்களுள் ஒன்றான கருமம் (சூடா.); the karumam which determines one's kati, one of eṇ-karumam. 4. முள்ளுத்தராசின் நடு (வின்.); the part of the scales enclosing the needle as resembling a nāmam

*[நமம் → நாமம்.]*

**நாமம்**[4] *nāmam,* பெ. (n.) 1. நாரத்தை; bitter orange 2. பாசி; moss

**நாமம்போடு**[1]**—தல்** *nāmam-pōḍu-,* 20, செ.குன்றாவி. (v t ) கொடுத்ததற்குரியதைத் தராமல் ஏமாற்றுதல்; to cheat. வேலை வாங்கித் தருவதாகச் சொல்லிப் பணம் பெற்றுக் கொண்டு, எல்லோருக்கும் நாமம் போட்டு விட்டான். (இக். வ.).

*[நாமம் + போடு—.]*

ஒரு பணியின் பொருட்டோ அல்லது பொருளுக்காகவோ, முன்கூட்டியே பணம் பெற்றுக் கொண்டு ஏமாற்றுதல்.

**நாமம்போடு**[2]**—தல்** *nāmam-pōḍu-,* 20 செ.குன்றாவி. (v t ) திருமண் காப்பிடுதல்; to wear the Vaiṣṇava tridental mark.

*[நாமம் + போடு—.]*

மாலியத்தில், நாமத்திருமண்காப்பினை, நெற்றியில் இட்டுக்கொண்டவர்களை, நாராயணனாகவே மதிக்கும் பாங்கு, இன்றும் காணப்படுகிறது.

**நாமமிடுதல்** *nāmam-iḍu-,* 20 செ.குன்றாவி (v.t.) *நாமஞ்சாத்துதல் (சங்.அக.)* பார்க்க; see *nāmañ-śāttu-*

*[நாமம் + இடு.]*

**நாமருதை** *nā-marudai,* பெ. (n.) வெள்ளிக்குன்றி மணி; white jeweller's beed.

**நாமலைக்கிநீலம்** *nā-malaikki-nīlam,* பெ. (n.) மயில்துத்தம் (துருசு); blue vitriol

*[நாமலைக்கி + நீலம்.]*

**நாமலோமலம்** *nāmalōmalam,* பெ. (n.) கொறுக்காய்ப்புளி; malabar tamarind

**நாமவந்தம்** *nāma-vandam,* பெ. (n.) ஆனைநெருஞ்சி (சங்.அக.); a small plant

மறுவ. பெருநெருஞ்சில்.

**நாமவந்திகம்** *nāma-vandigam,* பெ. (n ) பெருந்தும்பை; large variety of leuca flower

**நாமவாழை** *nāma-vāḻai,* பெ. (n ) செவ்வரி இலைகொண்ட வாழைவகை (இ.வ.); a kind of banana.

*[நாமம் + வாழை.]*

**நாமவிரி** *nāma-viri,* பெ. (n ) நறுவிலி வகை; felted large sebesten.

**நாமவெகுண்டம்** *nāma-veguṇḍam,* பெ. (n.) *நாமவைகுண்டம்* பார்க்க; see *nāma-vaiguṇḍam*

**நாமவைகுண்டம்** *nāma-vaiguṇḍam,* பெ. (n ) தும்பை (மலை.); a common herb with milk-white flowers.

**நாமனூரலைவாய்** *nāmaṉūr-alaivāy,* பெ. (n) திருச்செந்தூர் (திருமுரு. 125, உரை.); Tiruccendūr inTirunelvēli district.

**மறுவ.** திருச்சீரலைவாய்.

*[நாமநீர் → நாமனூரர் + அலைவாய்.]*

அச்சம் தரும் கடல்நீர் சூழ்ந்த ஊர்.

**நாமுடி** *nā-mudi,* பெ. (n.) நாவின் நுனி (வின்.); tip of the tongue.

*[நா + முடி.]*

**நாமுள்** *nā-mul,* பெ. (n.) நாக்கில் இலவு முள்ளைப் போல் காணும் குறி; morbid symptom in which the tongue is found furred

*[நா + முள்.]*

**நாமுள்தோஷம்** *nā-mul-tōṣam,* பெ. (n.) கருவுயிர்த்த காலத்தில், தாய்க்கு ஏற்பட்ட மிகுபசி, நாவறட்சி முதலியவற்றால் குழந்தைகளுக்கு உண்டாகும் நோய்; a congenital disease in childeren inherited while in the womb, when the mother was especially suffering from hunger, thirst etc.

*[நாமுள் + skt. தோஷம்.]*

**நாய்¹** *nāy,* பெ. (n.) 1. மூலிகையின் முதற்பெயர்; medicinal plants first term 2. புளியமரம்; tamarind tree. 3. விண்மீன் வகை; a kind of star. (சா.அக.).

**நாய்²** *nāy,* பெ. (n.) 1. ஒரு விலங்கு; dog. "*நாயேபன்றி புலிமுய னான்கும்*" (தொல். பொருள்.1507). 2. சூதாடுங் கருவி; game-pieces, used in dice. "*நாயிடக் குழிந்த வல்லி னல்லகம்*" (புறநா.52).

**க.,ம.,து.,** நாய்.

நாவைத் தொங்கவிட்டுக் கொள்ளும் இயல்பு மிக்கதால் வந்த பெயர்.

*[நா + இயி = நாய்.]*

(ஒ.நா.) குதி → குதிரை.

நாய்களின் அமைப்பினைக் கருத்திற்கொண்டு, சாம்பசிவம் மருத்துவ அகரமுதலி வகைப் படுத்தியமை வருமாறு:–

1. ஓநாய்.
2. கடல்நாய்.
3. காட்டுநாய்.
4. கோம்பைநாய்.
5. கோனாய்.
6. சீமைஓநாய்.
7. சீமைநாய்.
8. செந்நாய்.
9. நரிநாய்.
10. நாட்டுநாய்.
11. நீர்நாய்.
12. பரநாய்.
13. மரநாய்.
14. வீட்டுநாய்.
15. வேட்டைநாய்.



**நாய்க்கட்டம்** *nāy-k-kaṭṭam,* பெ. (n.) *நாய்க்கரணை* பார்க்க; see *nāy-k-karaṇai.*

மறுவ. நாய்வேளை.

**நாய்க்கடம்பு** *nāy-k-kaḍambu,* பெ. (n.) வெள்ளைக்கடம்பு (சா.அக.); bridal-couch plant (L.).

*[நாய் + கடம்பு.]*

**நாய்க்கடி** *nāy-k-kaḍi,* பெ. (n.) **1.** நாயின் கடிப்பு; dog - bite. **2.** *நாய்க்கடிசன்னி (வின்.)* பார்க்க; see *nāy-k-kaḍi-šaṉṉi.* **2.** நாய்க்கடியினால் ஏற்படும் புண்; dog-bite injury.

*[நாய் + கடி.]*

**நாய்க்கடிச்சை** *nāy-k-kaḍiccai,* பெ. (n.) வரிக்கற்றலை என்னுங் கடல் மீன்; a sea-fish, reddish, Lutjanus sebae.

மறுவ. கற்றலைமீன்.

**நாய்க்கடிசன்னி** *nāy-k-kaḍi-šaṉṉi,* பெ. (n). *நாய்க்கடியிசிவு* பார்க்க; see *nāy-k-kaḍi-y-išivu.*

*[நாய்க்கடி + சன்னி.]*

**நாய்க்கடிசன்னிவாதம்** *nāy-k-kaḍi-šaṉṉi-vādam,* பெ. (n.) வெறிநாய்க்கடியின் விளைவாக ஏற்படும், இசிவுநோய்; rabies with symtoms like those of acute paralyis.

*[நாய்கடி + skt. சன்னிவாதம்.]*

**நாய்க்கடிப்புண்** *nāy-k-kaḍi-p-puṇ,* பெ. (n) வெறிநாய்க்கடியால் ஏற்பட்ட புண்; ulcer due to dog-bite.

*[நாய்கடி + புண்.]*

**நாய்க்கடிமருந்து** *nāy-k-kaḍi-marundu,* பெ. (n.) ஊமத்தை; datura.

**நாய்க்கடியிசிவு** *nāy-k-kaḍi-y-išivu,* பெ. ( n) வெறிநாய்க்கடியின் விளைவாக மனிதர்க்குண் டாகும், நீர்வெறுப்பு நோய்; rabies, hydrophobia (M L)

*[நாய்க்கடி + இசிவு.]*

*[இழுப்பு → இழிவு → இசிவு .]*

**நாய்க்கடிவேர்** *nāy-k-kaḍi-vēr,* பெ. (n ) நாய்க்கடிக்கு பயன்படுத்தும் வேர்; root used for dog-bite.

*[நாய்கடி + வேர்.]*

**நாய்க்கடுகு** *nāy-k-kaḍugu,* பெ. (n). **1.** வேளைப்பூடு; black cleome. **2.** நாய்வேளை (பதார்த்த.104); a sticky plant that grow's best in sandy places **3.** காட்டுக்கடுகு (சா.அக.); jungle mustard.

மறுவ. காட்டுக்கடுகு.

*[நாய் + கடுகு.]*

நாய் வேளைப்பூண்டின் விதை . இது சமைப்பதற்குப் பயன்படாத கடுகு வகையைச் சேர்ந்ததென்றறிக. வெம்மைத் தன்மையுள்ள இக் கடுகு காதுவலியைப் போக்கும். உடம்பிலுள்ள அனைத்து வலியையும் அகற்றும். வயிற்றிலுள்ள நாக்குப்பூச்சிகளைக் கொல்லும். செரியாமையைச் சீராக்கிப் பசியையுண்டாக்கும் என்று சா.அக. கூறும்.

**நாய்க்கடுவான்** *nāy-k-kaḍuvāṉ,* பெ. (n). பார்ப்பனப் பெண்ணிடம் வேறுகுலத்தவனுக்குப் பிறந்த மகன்: son of brahmin woman by some other cast man. "*நாய்க்கடுவான் றீண்டியிடின்*" (சிவதரு. பரி.43).

*[நாய்க்கு + அடுவன் → அடுவான்.]*

**நாய்க்கயிறு** *nāy-k-kayiṟu,* பெ. (n). கவிப்புக் (தொப்பி) கயிறு; hat retainer நாய்க்கயிறு : தலையிலுள்ள கவிப்பு (தொப்பி) கழன்று விழாதவாறு, இறுக்கிப் பிணைக்கும் கயிறு.

*[நால்கயிறு → நாய்க்கயிறு.]*

**நாய்க்கரணை** *nāy-k-karaṇai,* பெ. (n). சிறுகாஞ்சொறி; small climbing nettle.

**நாய்க்கரந்தை** *nāy-k-karandai,* பெ. (n). **1.** குன்றி (மலை.); crab's eye. **2.** குன்றிமணிக் கொடி; indian liquorice plant (சா.அக.)

**மறுவ.** சிறுகாஞ்சொறி.

**நாய்க்கரிச்சான்பட்டை** *nāy-k-kariccāṉ-paṭṭai,* பெ. (n). மருந்துவகையுளொன்று; a kind of herbal.

*[நாய் + கரிச்சான்பட்டை.]*

நாய்க்கடிமருந்து என்று சா.அக. கூறும்.

**நாய்க்கரும்பு** *nāy-k-karumbu,* பெ. (n) *நாணல்;* buffalo reed

**ம.** நாய்க்கரிம்பு.

*[நாய் + கரும்பு.]*

**நாய்க்கல்** *nāy-k-kal* பெ. (n) கல் வகையுளொன்று; a kind of stone

*[நாய் + கல்.]*

**நாய்க்கள்ளி** *nāy-k-kaḷḷi,* பெ. (n) இலைக்கள்ளி வகை; a kind of leafy milk-spurge

**மறுவ.** நாய்நக்கி, நாய்நாக்குக்கள்ளி.

*[நாய் + கள்ளி.]*

**நாய்க்கற்றாழை** *nāy-k-kaṟṟāḻai,* பெ. (n) பேய்க்கற்றாழை; demon aloe

*[நாய் + கற்றாழை.]*

**நாய்க்காசு** *nāy-k-kāšu,* பெ. (n) சிறு குழந்தைகளரையில் பாதுகாப்பாகக் கட்டும் நாயுரு வரைந்த பட்டைச்சிறுகாசு; an amulet of copper coin bearing the figure of a dog, worn by children at the waist

*[நாய் + காசு.]*

ஐம்படைத்தாலியுள் ஒன்று.

**நாய்க்காத்தான்** *nāy-k-kāttāṉ,* பெ. (n). குன்றிமணி; jeweller's bead.

*[நாய் + காத்தான்.]*

**நாய்க்காய்ச்சல்** *nāy-k-kāyccal,* பெ. (n) நாய்க்கடியால் வரும் சுரம்; fever due to dog-bite.

*[நாய் + காய்ச்சல்.]*

**நாய்க்காளான்** *nāy-k-kāḷāṉ,* பெ. (n). *நாய்க்குடை* பார்க்க; see *nāy-k-kuḍai.*

*[நாய் + காளான்.]*

**நாய்க்கிட்டம்** *nāy-k-kiṭṭam,* பெ. (n) *நாயுருவி* பார்க்க; see *nāyuruvi.*

**நாய்க்குட்டி** *nāy-k-kuṭṭi,* பெ. (n). 1. குட்டி நாய்; puppy, 2. ஒரு பணிவுமொழி; a term of humility.

*[நாய் + குட்டி.]*

**நாய்க்குட்டிச்செடி** *nāy-k-kuṭṭi-c-ceḍi,* பெ. (n). செடிவகை (யாழ்.அக.); a plant.

*[நாய்க்குட்டி + செடி.]*

நாய்க்குட்டி போல் தோற்றமுள்ள, கொத்துச்செடி.

**நாய்க்குட்டிப்பாம்பு** *nāy-k-kuṭṭi-p-pāmbu,* பெ. (n). கண்ணாடி விரியன்; russell's viper.

*[நாய்க்குட்டி + பாம்பு.]*

நாய்க்குட்டி படுத்திருப்பது போல், தோற்றமுள்ள பாம்பு.



**நாய்க்குட்டிமரம்** *nāy-k-kuṭṭi-maram,* பெ. (n). சுணங்கன் மரம்; dog or pup tree.

**நாய்க்குடை** *nāy-k-kuḍai,* பெ. (n). காளான் வகையுளொன்று (இ.வ.); a kind of mushroom.

*[நாய் + குடை.]*

*உண்ணுவதற்கு உரியதன்று: சில நாய்க்குடைக் காளான், விளையும் இடத்திற்கு ஏற்றவாறு நச்சேறுந் தன்மைத்து. வெண்மை, கருமை, பழுப்பு முதலான மூன்று வண்ணத்தில் காணப்படும்.]*



**நாய்க்குணம்** *nāy-k-kuṇam,* பெ. (n). 1. இழிகுணம்; meanness. low-minded. நாற்பது அகவையில் 'நாய்க்குணம்' (உ.வ.); 2. முரட்டுத்தனம் (வின்.); rudeness, churlishness.

*[நாய் + குணம்.]*

காக்கைபோல் தன்னினம் தழுவாமையும், யானை போல் இனக்குழுவோடு வாழாமையும் கொண்டு, அயல்தெருவில் உள்ள தன் இனநாய் வரின், வெறுப்பைப் பலரும் அறியக் குரைத்துக் காட்டுதல்.

**நாய்க்குமிழ்** *nāy-k-kumiḻ,* பெ. (n). ஆற்றுப்பூவரசு; river portia.(L.)

*[நாய் + குமிழ்.]*

**நாய்க்குரங்கு** *nāy-k-kuraṅgu,* பெ. (n) கட்டைவாற்குரங்கு; a monkey with short tail.

**நாய்க்குருவி**[1] *nāy-k-kuruvi,* பெ. (n.) *நாயுருவி. (மலை.)* பார்க்க; see *nāy-uruvi.*

*[நாய் + குருவி.]*

**நாய்க்குருவி**[2] *nāy-k-kuruvi,* பெ. (n). இலைக் கள்ளி (சங்.அக.); five tubercled spurge

*[நாய் + குருவி.]*

**நாய்க்கெரி-த்தல்** *nāy-k-keri-,* 4 செ.கு.வி. (v.i). 1. இழிதொழில் செய்தல்; to perform the vilest services "*நாய்க்கெரிக்கும் புலைநிருபன்*" (ஞானவா.காதிக.17.). 2. நாய்க்குச் சமைத்தல்; to cook for a dog.

*[நாய்க்கு + எரி-.]*

**நாய்க்கெரிப்போன்** *nāy-k-keripppōṉ,* பெ. (n.) 1. கீழ்த்தரமானவன்; low, degraded man 2. போக்கிரி; villian. "*பிலைநாய்க் கெரிப் போனாலே*" (ஞானவா.காதிக.16.). 3. நாய்க்குச் சோறு சமைப்பவன்; cook for a dog.

*[நாய்க்கு + எரிப்போன்.]*

**நாய்க்கெளிறு** *nāy-k-keḷṟu,* பெ. (n) *நாய்க்கெளுத்தி* பார்க்க; see *nāy-k-keḷutti.*

*[நாய் + கெளிறு.]*

**நாய்க்கெளுத்தி** *nāy-k-keḷutti,* பெ. (n) நீலங்கலந்த வெண்மைநிறமுடையதும் ஆறு(அங்குலம்)விரற்கிடை வரை வளரக் கூடியதுமான, ஆற்று மீன் வகை; fresh-water fish, bluish silvery attaining 6inch in length.

*[நாய் + கெளுத்தி.]*

கெளிறு → கெளிற்றி → கெளுத்தி.



**நாய்க்கொட்டான்வேர்** *nāy-k-koṭṭāṉ-vēr,* பெ. (n.) காட்டுக்கொட்டையின் வேர்; a medicinal root of kāṭṭu-k-koṭṭai.

*[நாய்க் கொட்டான் + வேர்.]*

**நாய்க்கொட்டி** *nāy-k-koṭṭi,* பெ. (n.) கொட்டிச் செடிவகை (தைலவ.தைல.); an aquatic plant

*[நாய் + கொட்டி.]*

**நாய்க்கொல்லி** *nāy-k-kolli,* பெ. (n.) நச்சுவேர்; aconite root.

**நாய்கன்** *nāygaṉ,* பெ. (n.) வணிகன்பிங்); merchant, chetti, "*மதலையிற்றுழி நாய்கர்போற் றுயர்க் கடன் மறிகின்றார்*" (கந்தபு. மோனநீங்.2.).

*[நாயகன் →நாய்கன்.]*

*நாய்கன் = வணிகர் தலைவன். (மு.தா.170.).*

கண்ணகியின் தந்தை மாநாய்கன். நாவாய்கன் → நாய்கன். கடல் வணிகத் தலைவனைக் குறிக்கும் பான்மையில் வழங்கியதெனலாம். மேலும் 'மா' எனும் உரிச்சொல், 'பெரிய' என்னும் பொருளில், பெரிய கடல் வாணிகனாகத் திகழ்ந்ததால், 'மாநாய்கன்' என்னும் பெயர் வந்ததாகக் கொள்ளலாம்.

**நாய்ச்சாறு** *nāy-c-cāṟu,* பெ. (n.) நாய்ச்சிறுநீர்; dog's urine

*[நாய் + சாறு.]*

**நாய்ச்சி** *nāycci,* பெ. (n.) தலைவி; lady, mistress.

*[நாயன் →நாய்ச்சி.]*

*நாய்ச்சி → ஆய்ச்சி.*

**நாய்ச்சிமார்** *nāyccimār,* பெ. (n.) திருமாலின் தேவிமார்; the two consorts of Tirumāl "*தேவரீரையும் நாய்ச்சிமாரையும்*" (ஈடு.1,3:10.).

*[நாய்ச்சி →நாய்ச்சிமார். ]*

ஒ.நோ. பிள்ளை → பிள்ளைமார்.

**நாய்ச்சியார்** *nāycciyār,* பெ. (n) 1. தலைவி; lady, mistress 2. ஆண்டாள்; šaint Āṇḍāḷ. 3. மலைமகள்; Malaimagaḷ (Pārvadi) 'நாயனாய்ச்சியார்' (யாழ்ப்.).

*[நாய்ச்சி + ஆர் → நாய்ச்சியார். ]*

**நாய்ச்சீரகம்** *nāy-c-cīragam,* பெ. (n) காட்டுச்சீரகம்; purple fleabane

*[நாய் + சீரகம்.]*

**நாய்ச்சுண்டை** *nāy-c-cuṇḍai* பெ. (n) பேய்ச்சுண்டை; wild brinjal

*[நாய் + சுண்டை.]*

**நாய்ச்சுரம்** *nāy-c-curam,* பெ. (n) நாய்க்கடியால் ஏற்படும் காய்ச்சல்; fever due to dog bite.

*[நாய் + சுரம். ]*

**நாய்ச்சூலை** *nāy-c-cūlai,* பெ. (n) சூலைநோய் வகையுளொன்று; a kind of šūlai-nōy diseases

*[நாய் + சூலை. ]*

பெண்களுக்கு மாதவிடாய்க் காலத்தில் ஏற்படும் சூலைநோய்.

**நாய்ச்சொறி** *nāy-c-coṟi,* பெ. (n) நாயினால் மனிதனுக்கு ஏற்படும் சொறிநோய்: a communicable cutaneous disease of domestic animals as dog etc. 2. நாய்க்கு ஏற்படும் சொறிநோய்; scabbies of dogs

*[நாய் + சொறி. ]*

**நாய்ச்சோளகம்** *nāy-c-cōḷagam,* பெ. (n) பெண்துவரை; white dholl

*[நாய் + சோளகம். ]*

**நாய்த்தயிர்வேளை** *nāy-t-tayirvēḷai,* பெ. (n.) *நாய்வேளை (யாழ். அக.)* பார்க்க; see *nāy-vēḷai.*

*[நாய் + தயிர்வேளை.]*

**நாய்த்தருவை** *nāy-t-taruvai,* பெ. (n) புல் வகை; a kind of grass

*[நாய் + தருவை.]*

**நாய்த்திசை** *nāy-t-tiśai,* பெ. (n) தென் மேற்றிசை (வின்.); south-west(astrol )

*[நாய் + திசை.]*

எட்டுத்திசைக்கும், எண்கடவுளரை அக் காலத்தில் கூறியிருக்கின்றனர். அதன்படி பைரவர் திசை என்றும் நாய்த்திசை என்றும், தென்மேற்றிசையைக் குறிப்பர்.

**நாய்த்திராட்சை** *nāy-t-tirāṭcai,* பெ. (n ) நச்சுக்குணமுள்ள கொடிமுந்திரி; dog-grape

**மறுவ.** நாய்க்கொடி முந்திரி.

*[நாய் + திராட்சை.]*

நச்சுத்தன்மையுள்ள, இத் திராட்சைச் சாறு, கண்விழிநோய்க்கு மருந்தாகும். முறைச்சுரத்தைத் தணிக்கும். நோயின் தாக்கத்தைக் குறைக்கும்.

**நாய்த்தீற்றி** *nāy-t-tīṟṟi,* பெ. (n.)நாய்க்குரிய இழிவான உணவு; miserable food, as fit only for a dog

*[நாய் + தீற்றி.]*

**நாய்த்துளசி**[1] *nāy-t-tuḷaśi,* பெ. (n) வெண்மை கலந்த சாம்பல் நிறமுடையதும், மருந்திற்குப் பயன்படுவதுமான துளசி; white basil, wild morjoram Indian tea

**க.** நாய்தொளசி.

*[நாய் + துளசி.]*

இக் காட்டுத் துளசியின் காய்கள் மருந்து குணமுடையது. கடுஞ்சுரம். சிணுக் கிருமல், கோழை போன்றவற்றிற்கு, இக் காட்டுத் துளசியின், காய்கள் பயன்படும்.

**நாய்த்துளசி**[2] *nāy-t-tuḷaśi,* பெ. (n ) கஞ்சாங் கோரை; basil

**மறுவ.** காட்டுத்துளசி.

**க.** நாய்தொளசி.

*[நாய் + துளசி. ]*

துழாய் → துளாய் → துளசி.

மிகுசுரம், சிணுக்கிருமல் போன்றவற்றிற்கு நாய்த்துளசியிலையினைச் சுண்டக்காய்ச்சித் தேயிலை போன்று பருகினால், நன்மை பயக்குமென்று சா.அக. கூறும்.

துளசி போன்று தோற்றமுடையதும். பூசை மருந்து இவைகளுக்கு பயன்படாத் தன்மையினால், இஃது நாய்த்துளசி எனப்பெயர் பெற்றது. இது போலவே நாய்க்கடுகு, நாய்வேம்பு, நாய்க்காளான் போன்றவையும் பயன்படாத் தன்மையால் வந்த பெயரென்று கொள்ளலாம்.

**நாய்த்துளசியிலை** *nāy-t-tuḷaśi-y-ilai,* பெ. (n) தேயிலைக்குப் பதிலாகப் பயன்படுத்தும் நாய்த்துளசி இலை; leaves of white basil used as a substitute for tea

*[நாய்துளசி + இலை. ]*

**நாய்த்தேக்கு** *nāy-t-tēkku,* பெ. (n ) புன்னை வகை (யாழ்ப்), a large timber tree

மறுவ. கற்றேக்கு.

*[நாய் + தேக்கு. ]*

இருபது அடிஉயரம் வளரும் புன்னைமரம். மணமிக்க பொன்னிறம் வாய்ந்த பூக்களைத் தரும். பூ, காய் உணவாகப் பயன்படும்.

**நாய்நரம்பு** *nāy-narambu,* பெ. (n.) கக்குவான் நோய் நீங்கவேண்டிக் குழந்தைகளின் கழுத்திற்கட்டும் நரம்பு (வின்.); catgut hung round the neck of children for whooping cough

*[நாய் + நரம்பு.]*

நாய்க்குக் கழுத்தில் கட்டுவதுபோல், குழந்தைக்குக் கட்டுவதால் வந்தபெயர்.

**நாய்நறுவிலி** *nāy-naṟuvili,* பெ. (n.) நறுவிலி வகை (யாழ்ப்.); a kind of sebesten

*[நாய் + நறுவிலி.]*

நாய் + நறுவு + இலி.

நறுமணமில்லாத வகை.

**நாய்நாக்கி** *nāy-nākki,* பெ. (n.) *நாய்நாக்கு (வின்.)* பார்க்க; see *nāy-nākku.*

**நாய்நாக்கு** *nāy-nākku,* பெ. (n) இலைக் கள்ளி (மலை.); five-tubercled spurge

*[நாய் + நாக்கு.]*

நாய்நாக்குப் போன்ற இலைவடிவால் வந்தபெயர்.



**நாய்நாக்குக்கள்ளி** *nāy-nākku-k-kaḷḷi,* பெ. (n) *நாய்நாக்கு* பார்க்க; see *nāy-nākku.*

*[நாய்நாக்கு + கள்ளி.]*

நாயின் நாக்கு தொங்குவது போன்ற, தோற்றமுடைய இலைக்கள்ளி.

**நாய்ப்பயறு** *nāy-p-payaṟu,* பெ. (n.) பூடுவகை (வின்.); dog green gram

*[நாய் + பயறு.]*

பச்சைப்பயிறு போன்ற, பயறு வகையினைச் சார்ந்தது என்று, சா.அக. கூறும்.

**நாய்ப்பல்** *nāy-p-pal,* பெ. (n.) கோரைப்பல்; canine tooth.

*[நாய் + பல்.]*

**நாய்ப்பனிப்பூண்டு** *nāy-p-paṉi-p-pūṇḍu,* பெ. (n.) நெருஞ்சி; caltropes.

**நாய்ப்பாகல்** *nāy-p-pāgal,* பெ. (n.) கொடி வகை (பதார்த்த.334.); bryony.

*[நாய் + பாகல்.]*

கசப்பில்லாதது.

**நாய்ப்பாலை** *nāy-p-pālai,* பெ. (n.) நீர்க் குறிஞ்சா (யாழ்ப்.); indian ipecacuanha (L).

*[நாய் + பாலை.]*

**நாய்ப்புகையிலை** *nāy-p-pugai-y-ilai,* பெ. (n.) மருந்திலை; medicinal plant.

**நாய்ப்புடல்** *nāy-p-puḍal,* பெ. (n) கொடிவகை; a kind of creeper.

*[நாய் + புழல் → புடல்.]*

**மறுவ.** பேய்ப்புடல்.

புடலையினத்தைச் சார்ந்த நாய்ப்புடல் காய்களைக் கறிசமைத்து உண்பர். இக் காய்கள் கசப்புத் தன்மையு டனிருப்பினும், வயிற்றுக் கோளாற்றினை அகற்றும். மலத்தை இளக்கும். செரிமானத்தை ஏற்படுத்தும். நாய்ப்புடல் விதைகள் சுரத்திற்கு மருந்து. இதன் பூக்கள் வயிற்றுப் பூச்சிகளைக் கொல்லும்.

**நாய்ப்புடுக்கன்** *nāy-p-puḍukkaṉ,* பெ. (n.) இருட்பூ (வின்.); malabar wrinkled logs matrix.

*[நாய் + புடுக்கன்.]*

நாய்ப்புடுக்கன் இலையைப் பாலிலிட்டுக் கொதிக்க வைத்துச் சிறிது தேன்கலந்து, உடம்பில் பூசினால், தோலில் உண்டாகும் அனைத்து நோய்களும் அகலும்.

நாய்புடுக்கன் விதையினின்று வடித்த எண்ணெய், நாட்பட்ட தொழுநோய் சொறிசிரங்கிற்கு உகந்தது என்று, சா.அக. கூறும்.

**நாய்ப்புடோல்** *nāy-p-puḍōl,* பெ. (n.) *நாய்ப்புடல்* பார்க்க (வின்.); see nāy-p-puḍal.

*[நாய் + புடல் → புடோல்.]*

**நாய்ப்புல்** *nāy-p-pul,* பெ. (n.) **1.** சுணங்கன் புல்; dog-grass. **2.** அறுகம்புல்; dogs tooth grass.

*[நாய் + புல்.]*

**நாய்ப்புலி** *nāy-p-puli,* பெ. (n.) பதினைந்தாம் புலி; a kind of dice game.

**மறுவ.** ஆடுபுலி ஆட்டம்.

*[நாய் + புலி.]*

**நாய்மண்டை** *nāy-maṇḍai,* பெ. (n) நாயின் தலையோடு; dog's skull-bone.

*[நாய் + மண்டை.]*

**நாய்மரம்** *nāy-maram,* பெ. (n) மரவகை; dog-wood.

*[நாய் + மரம்.]*

குளிர்காய்ச்சல், முறைக்காய்ச்சல், வலிப்பு போன்ற நோய்களுக்கு, நாய்மரக்கருக்கு நீர் பயன்படுமென்று சா.அக. கூறும்.

**நாய்மீன்** *nāy-mīṉ,* பெ. (n.) கடல்மீன் வகை; parrot wrasse, olivaceous. **2.** குரங்கன் சுறா; dog-fish fawn coloured shark. **3.** உல்லமீன் வகை; dog erring-fish.

*[நாய் + மீன்.]*



**நாய்முருகை** *nāy-murugai,* பெ. (n.) முருகைக்கல் வகை (யாழ்ப்.); a kind of coral stone

*[நாய் + முருகை.]*

**நாய்முள்** *nāy-muḷ,* பெ. (n.) ஒரு வகைச் சினைப்பு (இ.வ.); nettle rash- urticaria.

*[நாய் + முள்.]*

இலவமுள்ளைப் போன்றவை. பெரியவர்களுக்கு உடம்பிலுண்டாகும் குருக்கள், இவ் வகையைச் சார்ந்தவை என்று சா.அக. கூறும்.

**நாய்முள்தீட்டு** *nāy-muḷ-tīṭṭu,* பெ. (n.) சூலுற்றிருக்கும்போது தாயின் பசியினாலும், மிகுதுயரினாலும், குழந்தைக்கு உண்டாகும் நோய் வகை (சீவரட்.221.); a disease of children produced by the famished condition, grief,etc of the mother during pregnancy

*[நாய்முள் + தீட்டு.]*

**நாய்முள்ளி** *nāy-muḷḷi,* பெ. (n.) செடிவகை (யாழ்அக.); indian nightshade.

**மறுவ.** கறிமுள்ளி.

*[நாய் + முள்ளி.]*

**நாய்மூங்கில்** *nāy-mūṅgil,* பெ. (n.) ஆண்மூங்கில்; dog bamboo, stone bamboo.

**மறுவ.** கல்மூங்கில்.

*[நாய் + மூங்கில்.]*

**நாய்வணங்கி** *nāy-vaṇaṅgi,* பெ. (n.) *நாயுருவி* பார்க்க; see *nāyuruvi.*

*[நாய் + வணங்கி.]*

**நாய்வால்நெல்** *nāy-vāl-nel.* பெ. (n) நெல் வகை; a kind of paddy.

*[நாய் + வால் + நெல்.]*

ஒ.நோ. குதிரைவால் சம்பா.

**நாய்விட்டைக்கல்** *nāy-viṭṭai-k-kal* பெ. (n.) ஒருவகைச் சுண்ணாம்புக்கல் (யாழ்ப்.). a kind of Limestone

*[நாய்வட்டைக்கல் → நாய்விட்டைக்கல்.]*

**நாய்விடக்கடி** *nāy-viḍa-k-kaḍi.* பெ. (n.) வெறிநாய்க்கடியினால் ஏற்படும் இசிவுநோய்; a tetanic disease communicated to man by bite of a mad-dog

*[நாய் + skt விஷம் + கடி.]*

**நாய்விருத்தி** *nāy-virutti,* பெ. (n.) ஊழியஞ் செய்யும் வாழ்வு; dog's life, a life of miserable subserviency *"சேவகஞ் செய்தல் வைத்த நாய்விருத்தி"* (காஞ்சிப்பு.ஒழுக்.37).

*[நாய் +* skt. *விருத்தி.]*

**நாய்விளா** *nāy-viḷā,* பெ. (n.) குட்டிவிளா மரவகை (யாழ்ப்); musk-deer plant, dog wood apple.

*[நாய் + விளா.]*

**நாய்விளாஞ்சு** *nāy-viḷāñju* பெ. (n) மரவகை; a kind of tree Dulbergia Paniculata

**நாய்வெள்ளங்கு** *nāy-veḷḷaṅgu,* பெ. (n) பன்றிவாகை (யாழ்ப்.), tube-in-tube wood

*[நாய் + வெள்ளங்கு.]*

**நாய்வெள்ளை**[1] *nāy-veḷḷai,* பெ. (n.) கபில நிறம் (வின்.); whitish brown

**மறுவ.** புகர்நிறம்.

*[நாய் + வெள்ளை.]*

**நாய்வெள்ளை**[2] *nāy-veḷḷai,* பெ. (n.) *நாய் வேளை (யாழ்.அக.)* பார்க்க; see *nāy-vēḷai.*

**மறுவ.** நாய்த்தை வேளை.

*[நாய் + வெள்ளை.]*

**நாய்வேட்டம்** *nāy-vēṭṭam,* பெ. (n.) **1.** நாயின் உதவிகொண்டு ஆடும் வேட்டை; hunting with dogs **2.** நாய்கள் *வேட்டையில் விலங்குகளை வருத்துவது போன்ற இடுக்கண்*; teasing like a dog worrying its game. "*நாய் வேட்ட மாடாத மாத்திரையே*" (சீவக.2788).

*[நாய் + வேட்டு + அம்.]*

**நாய்வேம்பு** *nāy-vēmbu,* பெ. (n.) சிறுமர வகை (வின்.); dog-neem

*[நாய் + வேம்பு.]*

**நாய்வேளை** *nāy-vēḷai,* பெ. (n.) பெருவேளைச் செடிவகை (பதார்த்த.286.); a sticky plant that grows best in sandy places

**மறுவ.** நாய்க்கடுகுச்செடி.

*[நாய் + வேளை.]*

ஆண்டுதோறும் காய்க்கும், நாய் வேளையின், காய்களில் கருப்புவிதைகள் இருக்கும். இதன் இலைகள் பெருங் காயம் போன்று காரமணமிக்கவை. நாய்வேளைக்கீரை சமையலுக்கு உகந்தது. நாய்வேளைச் சாறு, தலைவலி, மிகு குளுமையைப் போக்கும் என்று சா.அக. கூறும்.

**நாயக்கச்சி** *nāyakkacci,* பெ. (n.) வடுகர், வன்னியர், வேடர், இருளர் முதலிய இன மகளிர்; woman of certain castes as vaḍugar, vaṉṉiyar vēḍar iruḷar

*[நாயக்கன் → நாயக்கச்சி.]*

**நாயக்கவரசர்** *nāyakka-v-arašar,* பெ. (n.) மதுரையையும், திருச்சியையும் தலைநகர் களாய்க்கொண்டு ஆண்ட வடுகமன்னர்; Nāyakkar rulers of Madurai and Trichy

*[நாயகன் → நாயக்கன்.*
*நாயக்கன் + அரசர் (மு.தா.170).]*

**நாயக்கன்** *nāyakkaṉ,* பெ. (n.) **1.** வடுகருள் ஒரு சாரார் தம் இனப்பெயர்; title of certain Telugu castes. **2.** வன்னியர், வேடர், இருளர் முதலிய தமிழினப் பெயர்; title of certain Tamiḻ castes, as vaṉṉiyar, vēḍar, iruḷar **3.** ஓர் தலைமையாளர் (யாழ்.அக.); captain, soldier, headman

*[நாயகன் → நாயக்கன் .]*

*சில குலத்தார் பட்டப்பெயர். ஒருகா. நாய்கன் → நாயக்கன் = படைத்தலைவன். நாயகன், நாயக்கம் முதலான வடிவங்கள் முதற்கண் குலத்தலைவர்க்கு வழங்கியவை. (மு.தா.170).*

**நாயகக்கண்டம்** *nāyaga-k-kaṇḍam,* பெ. (n.) பதக்க அணிவகை (S I I Viii.53.): a kind of necklace ornament.

*[நாயகம் + கண்டம்.]*

கழுத்தில் தொங்கும் முகப்புடன் கூடியதும், அனைத்து அணிகலன்களுக்கும் தலைமை சேர்க்கும் தன்மை மிக்கதுமான கழுத்தணி வகை. இம் முகப்பானது பொன்னில், மணிகள் இழைக்கப்பட்டு, வேலைப்பாட்டுடன் கூடியது. இக் கழுத்தணிக்கு, இம் முகப்பே அனைவராலும் விரும்பப்படுவதும், நடுநாயமாகத் திகழ்வதுமாகையால், நாயகக்கண்டம் என்றும் பெயர் வந்தது.

**நாயகசின்னம்** *nāyaga-šiṉṉam,* பெ. (n.) நாகசுரம்; a kind of clarionet.

*[நாயகம் + சின்னம்.]*

சின் → சின்னம்.

**நாயகசுரம்** *nāyaga-šuram,* பெ. (n.) *நாயக சின்னம் (யாழ்.அக.)* பார்க்க; see *nāyaga-šiṉṉam.*

*[நாயகம் + சுர்+அம் → சுரம்.]*

சுரம் என்பது பாலை நில வெப்பம் குறித்த பழந்தமிழ்ச் சொல்.

**நாயகத்தான்** *nāyagattāṉ,* பெ. (n.) நாயகன் பார்க்க; see nāyagaṉ. "*வானோர் தொழு திறைஞ்சும் நாயத்தான் பொன்னடிக்கணான்*" (திவ்.இயற்.பெரியதிருவந்.45).

*[நாயகம் + அத்து + ஆன்.]*

**நாயகத்தி** *nāyagatti,* பெ. (n.) *நாயகி (யாழ்.அக.)* பார்க்க; see *nāyagi.*

*[நாயகம் + அத்து + இ.]*

**நாயகத்தூக்கம்** *nāyaga-t-tūkkam,* பெ. (n.) சிறந்து நிற்கும் அணிகலத்தொங்கல் (S.I.I.ii, 226); the chief pendant in an ornament.

*[நாயகம் + தூங்கு → தூக்கு + அம்.]*

தொண்மணிகளுடன் கூடிய முகப்புடன் தொங்கும், கழுத்தணி.

**நாயகப்பத்தி** *nāyaga-p-patti,* பெ. (n.) நாடகமாடுந் தலைமையிடம்; the stage where acting takes place. '*தூண்களின் நிழல் நாயகப்பத்தியின் கண்ணும், அவையின் கண்ணும் படாதபடி*' (சிலப். 3:108,உரை).

*[நாயகம் + பத்தி.]*

பந்தி → பத்தி.

**நாயகப்பானை** *nāyaga-p-pāṉai,* பெ. (n.) கோயிலிற் பொங்கலிடும் பெரிய பானை (வின்.); a pig pot used for poṅgal at a temple.

*[நாயகம் + பானை.]*

**நாயகப்பேர்** *nāyaga-p-pēr,* பெ. (n.). வேலைக்காரரின் தலைவன்; head man of a gang of servants. "நாயகப்பேர் இரண்டுக்கு" (S.I.I.vii.27.).

*[நாயகம் + பேர்.]*

**நாயகம்[1]** *nāyagam,* பெ. (n.) தலைமை; head-ship, superiority, supremacy, pre-emience. "*மூவுலகுக்குந் தருமொருநாயகமே*" (திவ். திருவாய்.3:10:11). 2. மேம்பாடு; greatness, honour, esteem. "*தன்சீறடியா லுதைக்கின்ற நாயகம்*" (திவ்.இயற். திருவிருத்.34). 3. சிறப்பின்மிக்கது; the choicest or the most prized of a class of things. "*சுடர்க்கெலா நாயகமனையதோர் மாலை*" (கம்பரா. மந்தரை.52). 4. *நாயகமணி* பார்க்க; see *nāyaga-maṇi,* "*நாயகத்தைத் தொட்டு*

*நவில்க*" (சைவச.பொது.139). 5. கிரந்தி நாயகம்; a plant.

த. நாயகம் → skt. nāyaka

*[நாயன் →நாயகன் = தலைவன், கணவன், அரசன், கடவுள். நயம் →நாயம் →நாயகம் = அனைவராலும் விரும்பப்படும் தலைவன், அரசன், கடவுள். (மு.தா.170).]*

**நாயகம்**[2] *nāyagam,* பெ. (n.) இறைவனால் அனுப்பப்பட்ட (இசுலாமிய) இறைத்தூதர்; messenger of Allā

*[நயம் →நாயம் →நாயகம்.]*

*நயம் = விருப்பம்*

*அனைவராலும் விரும்பப்படும் இறைத்தூதுவர்.*

*நயம் = விருப்பம்.*

**நாயகம்**[3] *nāyagam,* பெ. (n.) கத்தூரி மணமுள்ள செடிவகையுளொன்று (சா.அக.); a kind of musk

**நாயகம்பண்ணு-தல்** *nāyagam-paṉṉu-,* 5 செ.கு.வி. (v.i.) தலைமைத்தன்மை செலுத்துதல் (யாழ்.அக.); to rule, exercise sovereignty, to impose authority.

*[நாயகம் + பண்ணு-.]*

தலைமைத் தகவால், தவறுகளைத் தட்டிக் கேட்டு நெறிப்படுத்துதல்.

**நாயகமணி** *nāyaga-maṇi,* பெ. (n.) 1. மணிமாலையின் நடுக்கோக்கும் பெருமணி (சைவச.பொது.139.); a large bead at the centre of a necklace 2. அணிகலனின் நடுமணி; central gem in an ornament. '*வனவசை நகரத்தை நாயக மணியாகக் கூறவே*' (பிரபுலிங். மாயையினுற்.6.உரை).

*[நாயகம் + மணி.]*

**நாயகமுத்து** *nāyaga-muttu,* பெ. (n) தொங்கலியின் நடுவிலமைந்த பெருமுத்து; a big pearl at the centre of a necklace. '*துனையிடாத நாயகமுத்தென்றுமாம்*' (சீவக. 2184. உரை).

*[நாயகம் + முத்து.]*

**நாயகமேனி** *nāyaga-mēṉi,* பெ. (n.) மரகதப்பச்சை (யாழ்.அக.); a kind of emerald.

*[நாயகம் + மேனி.]*

வண்ணங்களிற் சிறந்ததும், தலையாயதுமான, தமிழர் மேனிநிறம் மாநிறம் என்பது பச்சை நிறமுடைய திருமாலை, நீலவண்ணன், கருநிறத்தன், பச்சைமா மலைபோல் மேனியன் (திவ்.பிர.) என்று குறித்ததால் அறியலாம்.

**நாயகர்** *nāyagar,* பெ. (n.) நாயகர் என்ற இனப்பெயர்; a subtitle of nāyagar caste

*[நாயக்கர் → நாயகர்.]*

**நாயகவளந்து** *nāyaga-vaḷandu,* பெ. (n) *நாயகப்பானை (யாழ்.அக.)* பார்க்க; see *nāyaga-p-pāṉai.*

**நாயகன்**[1] *nāyagaṉ,* பெ. (n.) 1. தலைவன்; lord, master, chief "*பூதநாயகன்*" (கம்பரா.அங்கத.21.). 2. கணவன்; husband. (பிங்.) "*மலர் மங்கை நாயகன்*" (திவ்.

பெரியதி.10:7:6). 3. அரசன் (திவா.); king. "*நாயகன் வன நண்ணலுற்றானென்றும்*" (கம்பரா. நகர்நீங்கு.222). 4. கடவுள்; the supreme being. 5. நடத்துவோன் (சங்.அக.); leader, conductor. 6. இருபது யானைகட்கும் இருபது குதிரைகட்கும் தலைவன் (சுக்கிரநீதி.74); head of 20 elephants and 20 horses. 7. பத்து ஊர்களுக்குத் தலைவனாக நியமிக்கப் பட்டவன் (சுக்கிரநீதி.27.); a person appointed to the headship of ten villages. 8. பாட்டுடைத்தலைவன் அல்லது கதை நாயகன்; hero of a poem or story.

த. நாயகன் → skt nāyaka.

*[நாயன் → நாயகன் = தலைவன், கணவன், அரசன், கடவுள் (மு.தா.170).]*

*ஒருகா: நாயகம் →நாயகன்.*

**நாயகன்²** *nāyagaṉ,* பெ. (n.) 1. கலுழக்கல்; a kind of stone. 2. கந்தக நஞ்சு; a kind of native arsenic

**நாயகாதிபன்** *nāyagādibaṉ,* பெ. (n.) அரசன் (யாழ்.அக.); king

*[நாயக + skt. அதிபன்.]*

மக்களை வழி நடத்தும் தலைமைப் பண்பினன்.

**நாயகி** *nāyagi,* பெ. (n.) 1. தலைவி; lady. 2. மனைவி (சூடா.); wife, mistress 3. பார்வதி; pārvati 4. பண்வகை; a kind of tune. 5. கதைத்தலைவி; heroine, as of a story.

*[நாயகன் → நாயகி.]*

**நாயகிமேனி** *nāyagi-mēṉi,* பெ. (n.) பச்சைக்கல் (மரகதம்) வகையுளொன்று; a green gem-Emerald.

**நாயகிவாணி** *nāyag-vāṇi,* பெ. (n.) நால்வகைப்பெண் பிரிவில், சங்கினி வகையினள்; one of the four kinds of woman.

**நாயகை** *nāyagai,* பெ. (n.) கத்தூரிவகை (பதார்த்த.1081); a kind of musk

[நாயகி + நாயகை.]
தலைமையான நறுமணப்பொருள்.

**நாயங்கியிலை** *nāyaṅgi-y-ilai,* பெ. (n.) கள்ளி; spurge tree.

**நாயடியேன்** *nāy-aḍiyēṉ,* பெ. (n.) 'நாய்போல் அடிமைப்பட்ட யான்', என்ற பொருளில் வருமொரு பணிவுமொழி; a term of humility meaning this dog is your slave. "*நாயடியேன் பாழ்த்த பிறப்பறுத்திடுவான்*" (திருவாச.5:13.).

*[நாய் + அடியேன்.]*

**நாயர்** *nāyar,* பெ. (n.) மலையாளருள் ஓர் இனத்தார்; a caste of hindus in malabar

ம. நாயர்.

*[நாயன் = தலைவன், அரசன்,கடவுள், தந்தை.*
*நாயம் →நாயன் →நாயர்= சேர(மலையாள)- நாட்டுப் படைத்தலைர் வழிவந்த குலத்தார் (மு.தா.170.).]*

**நாயரஞ்சி** *nāyarañji,* பெ. (n.) *நாயுருவி (மலை.)* பார்க்க; see *nāy-uruvi.*

**நாயறல்** *nāyaṟal,* பெ. (n.) எருமைநாக்கி; flat fish

**நாயன்** *nāyaṉ,* பெ. (n.) 1. கடவுள்; the Supreme Being 2. அரசன்; king. 3. தலைவன்; master, lord *"நாயன் வென்றிகொள பாடல் கேட்க"* (திருவாலவா. 54,36.).

த. நாயன் → skt. nāya nāyaga.

*[நய →நாயம் →நாயன் = தந்தை, தலைவன், அரசன், கடவுள்.]*

*நயத்தல் = விரும்புதல்; அனைவராலும் விரும்பப்படுதல், பேணுதல் = விரும்புதல்; போற்றுதல். எல்லோராலும் விரும்பப்படும் குலத்தலைவன். குடிகள் விரும்புந் தலைவனும், ஞாலத்துயிர்களைப் பேணிக்காக்கும் இறைவனும் ஒன்றே. இறைவனையும், மன்னனையும், ஒருசேரவைத்து, உய்த்துணர்ந்த கழகப்புலவோர், "மன்னன் உயிர்த்தே மலர்தலை யுலகம்" என்றனர். திருவுடைய மன்னனையும் திருமாலையும் ஒன்றாகக் கருதிப்பாடினர். "திருவுடை மன்னனைக் காணின் திருமாலைக் கண்டேனே" என்று (நாலாயிரத் தெய்வப்பனுவலில்,) நாயன் எனுமிச்சொல், திருவுடைய மன்னனையும், இறைவனையும் ஒன்றாகக் குறித்தல் காண்க.*

*நாயன் என்னும் பெயர் தந்தை பெயராகவும், குலப்பட்டப் பெயராகவும் வழங்கும் வழக்கு, வடமொழியில் இல்லை. மேலும், நாயன் என்னும் பெயர், தமிழக மாந்தர்தம் வாழ்வியலில் தந்தை, குலத்தலைவன் என்னும் பொருண்மையில் வழக்கூன்றி யுள்ளமை அறிக. தமிழில் வழங்கும் பல்வேறு வடிவங்கள் வடமொழியில் இல்லை. நாய,(nāya) நாயக (nāyaga) என்னும், இரு வடிவங்களே அங்குள.*

**நாயன்தே** *nāyaṉdē,* பெ. (n.) '*சாமி*' யென்று பொருள்படும் தொடர்; a term of address meaning 'my lord' '*நாயன்தே இவன் திரு வரைக்கு ஈடாம்படி வாட்டின படி*' (ஈடு.4:3:5);

*[நாயம் →நாயன் →நாயன்தே.]*

நாயன் + தே → நாயந்தே அல்லது நாயன்றே என்று கூட்டு ஒலிபெறும்.

**நாயன்மார்** *nāyaṉmār,* பெ. (n) 1. தலைவர் (வின்.); lords, masters 2. கடவுளர்; Gods. *"மற்றைத் திருப்பதிகளின் நாயன் மார்க்கும்"* (ஈடு.7:2:11.). 3. பெரியபுராணத்தில் வரலாறு கூறப்பெற்ற சிவனடியார்; canonized Šaiva Šaints whose history is narrated in Periya-purāṇam

*[நாயன் + மார் →நாயன்மார்.]*

நாயகன் → நாயன் → மார்.

**நாயனகாரன்** *nāyaṉa-kāraṉ,* பெ. (n) பெரு வங்கியம் (நாகசுரம்) வாசிப்போன் (இ.வ.); player on clarionet

*[நாயனம் + காரன்.]*

**நாயனம்** *nāyaṉam,* பெ. (n.) நாயகச்சின்னம்; native clarionet.

*[நாயன் + அம் →நாயனம்.]*

மங்கல இசையாக ஒலிபெருக்கி இல்லாத காலத்திலிருந்து அனைத்து நன் நிகழ்ச்சிகளிலும், இசைக்கும் இசைக் கருவிகளுள், தலைமையானதும், இனிமையானது மான நாகசுரம்.

**நாயனாய்ச்சியார்** *nāyanāycciyār,* பெ. (n) 1. உமையும் சிவனும்; Šivan and Malaimagal. 2. தலைவன் தலைவி; master and mistress, as of a slave.

*[நாயன் + நாய்ச்சியார்.]*

**நாயனார்** *nāyanār,* பெ. (n.) 1. தலைவர்; Lord, Master 2. கடவுள்; God. "*இந் நாயனார்க்குத் திருவிடையாட்டமாக*" (S.I.I i, 68:60.). 3. சிவபெருமான்(தக்கயாகப் பக்.344.); Šivan. 4. தந்தை; father. '*நாயனார் போன நாள் இன்றென்று அகத்துலுள்ளோ ரெல்லாருங் கூறி அழுத பின்பு*' (சீவக.209,உரை.). 5. சிவனடியார்; title of canonized Šaiva Šaint. 6. சில இனத்தாரின் பட்டப்பெயர்; title of certain caste, as Jainar, kaikkōlar, udaiyār and a section of vēlālar. 7. *திருவள்ளுவர்* பார்க்க; see *Tiruvalluvar.*

ம. நாயனார்.

*[நாயன் → நாயனார் = இறைவனடியாரையும் தலைவரோடொப்பக் கருதும் வழக்க முண்மையால், நாயன், நாயனார் என்னும் பெயர்கள், அடியாரையுங் குறிக்கு மென்றறிக.]*

நயத்தல் = விரும்புதல்.

*[நய → நாயம் → நாயன்.]*

நாயன் = கடவுள், தலைவன், அரசன், தந்தை நாயனார் என்னுஞ்சொல் விரும்புதற் கருத்தினடிப்படையில் தந்தையையுங் குறிக்கும். (எ.டு) 'நாயனார் போன நாள் இன்றென்று அகத்திலுள்ளோர் எல்லாருங் கூறி' (சீவக;2097,உரை.).

**நாயாட்டம்** *nāy-āttam,* பெ. (n.) 1. உலைச்சல்; physical pain. 2. பேயாட்டம்; restless activity of an obsessed person

*[நாய் + ஆட்டம்.]*

"ஆட்டம்" என்பது இங்கு உவமஉருபாக வந்துள்ளது.

[ஒ.நோ.] குரங்காட்டம்.

நாய் இரைக்கு அலைவது போன்று, ஒருவர் பணத்தேட்டத்திற்காக அலைவதால் ஏற்பட்ட, உடல்துன்பம்.

**நாயாடி** *nāy-ādi,* பெ. (n) 1. வேட்டையாடு வோன்; hunter "*நாயாடிகளும் தூதுவரும்*" (S.I.I.ii,352.). 2. திருவிதாங் கூரிலுள்ள காட்டுச்சாதியார்; a hill-tribe in Tiruvidāngūr.

*[நாய் + ஆடு → ஆடி.]*

நாயுடன் சென்று வேட்டையாடுபவன். 'இ' சொல்லாக்க விகுதி.

**நாயிகை** *nāyigai,* பெ. (n.) தலைவி; lady. mistress. 'இவள் நாயிகை' (ஈ.டு.5,3,3.).

*[நாயகி → நாயகை → நாயிகை.]*

**நாயிந்தே** *nāyindē,* பெ. (n.) corr of *நாயன்தே* பார்க்க; see *nāyandē*

*[நாயன் + தே → நாயிந்தே.]*
எழுத்துத் திரிபினாலேற்ற உலகவழக்கு.

**நாயிராஞ்சி** *nāyirāñji,* பெ. (n.) நாயுருவி; indian burr.

**நாயிருமல்** *nāyirumal,* பெ. (n.) **1.** நாயைப் போல் இருமுதல்; a deep resonant cough. **2.** தொண்டையை அமுக்குவது போல் இருமுருகை; compression cough

*[நாய் + இருமல்.]*

**நாயில்** *nāyil,* பெ. (n.) மதிலுறுப்பு வகை; a component part of a fortification. "*நாயில் பூண்முலை*" (சீவக.144:4.).

[ஞாயில் → நாயில்.]

**நாயிலந்தை** *nāyilandai,* பெ. (n.) நரியிலந்தை; small round errate and obtuse leaved jubube.

**நாயிலை** *nāyilai,* பெ. (n.) இலைக்கள்ளி; leafy euphorphia.

*[நாய் + இருமல்.]*

**நாயிறு** *nāyiṟu,* பெ. (n) **1.** சூரியன்; sun. "*கருநாயிறு போல்பவர்*" (கம்பரா.கடிமண.4.). **2.** ஞாயிற்றுக் கிழமை; sunday.

**க.** நேசறு.

*[ஞாயிறு + நாயிறு.]*

**நாயிறுதிரும்பி** *nāyiṟu-tirumbi,* பெ. (n) நாயிறு வணங்கி (மலை.) பார்க்க; see nāyiṟu-vaṇaṅgi.

**மறுவ.** சூரியகாந்தி. பொழுதுவணங்கி.

*[ஞாயிறு → நாயிறு + திரும்பி.]*

**நாயிறுபாடு** *nāyiṟu-pāḍu,* பெ. (n.) காலை; early morning, as the coming of the day. "*சக்ரவர்த்திக்கு...அன்று நாயிறுபாடு*" (ஈடு.6:7:3).

*[ஞாயிறு → நாயிறு + படு → பாடு.]*

கதிரவன் சாயுங்காலத்தில் நடத்தப்படும், கலைநிகழ்ச்சி.

**நாயிறுபோது** *nāyiṟu-pōdu,* பெ. (n.) மாலை; evening, as the going of the day "*ஒரு தீர்த்தத்தினன்று நாயிறு போது*" (ஈடு.6:4:10).

*[ஞாயிறு → நாயிறு + பொழுது → போழ்து போது.]*

*ஞாயிறு சாயும் பொழுது. சாயும் + காலம் → சாங்காலம்*

**நாயிறுவணங்கி** *nāyiṟu-vaṇaṅgi,* பெ. (n) பொழுது வணங்கி (மாலை.) என்ற செடி; sun flower.

மறுவ. சூரியகாந்தி.

*[ஞாயிறு → நாயிறு + வணங்கி.]*

**நாயீ** *nāy-ī,* பெ. (n) ஈவகை (வின்.); dog-fly

*[நாய் + ஈ.]*

**நாயுடு** *nāyuḍu,* பெ. (n.) வடுகநாயக்க இனத்தாரின் இனப்பெயர்; title of the vaḍuga nāyak caste

*[நாயக்கர் → நாயுடு.]*

**நாயுண்ணி** *nāy-uṇṇi,* பெ. (n.) உண்ணிவகை (வின்.); dog-tick. Ixodes.

*[நாய் + உண் + இ.]*

**நாயுண்ணு** *nāyuṇṇu,* பெ. (n.) தோற்புலவு; heart leaved woolly jacker. (சா.அக.).

**நாயும்புலியும்** *nāyum-puliyum,* பெ. (n) பதினைந்தாம் புலியென்னும் விளையாட்டு (வின்); a dice game

மறுவ. ஆடும் புலியும்.

*[நாயும் + புலியும்.]*

15 நாய்களும், புலிகளும் என்ற எண்ணிக்கையில், காய்களை வைத்து நகர்த்தும் விளையாட்டு.

**நாயுரீஇ** *nāy-urīi,* பெ. (n.) *நாயுருவி* (திவா.) பார்க்க; see *nāyuruvi.*

*[நாயுருவி →நாயுரீஇ.]*

**நாயுருவி** *nāy-uruvi,* பெ. (n.) பூடுவகை (திவா.); a plant growing in hedges and thickets.

*[நாய் + உருவி.]*

*நாயுருவி என்பது, சிறு செடி வகையைச் சேர்ந்தது. விலங்குகளினால் விதை பரவும் வகையில், இதன் விதைகள் சிறு சிறு முட்களைக் கொண்டதாக இருக்கும்.*

*நாயுருவி, இந்தியாவில் எங்கும், எக் காலத்திலும் பயிராகும். மழை, குளிர் காலங்களில், இச் செடி நன்கு விளையும். இச் செடி 3 முதல் 4 அடி வரை வளரும் தன்மையுடையது. இதன் இலைகளின் தண்டு, நீல நிறமும், பச்சை வண்ணமும், கலந்து காணப்படும். இதன் வேரைப் பற்குச்சியாக பயன்படுத்துவதன் வாயிலாக, பல்நாற்றம், பல்லரணை அகலும். நாயுருவி வேரினைக் கருக்குநீரிட்டுக் குடித்தால், சிறுநீர்க் கடுப்பு தீரும். அரத்த மூலம் அகலும். வெறிநாய்க்கடி, பாம்புக்கடி, தேள்கடி போன்ற நச்சுக்கடிகளுக்கு, இக் கருக்கு நீரினைப் பாலில் கலந்து குடித்தால், நச்சுத் தன்மை அழியும். இதன் இலைகளைக் கசக்கிக், தேள் கடிக்கு கொடுத்தால், நச்சுத்தன்மை அகலும். நாயுருவி வேரினைக் கருக்கு நீரிட்டுக் குடித்தால், முதிர்கரு அழியும். எளிய மகப்பேற்றிற்கும், இஃது உறுதுணை புரியும். இதன் வேரினைச் சூரணமாக்கி, நல்லெண்ணையில் கலந்து, காதில் விடுவதால், காதிரைச்சல் நீங்கும் என்று. சா.அக. கூறுகின்றது.*



**நாயுருவிஅரிசி** *nāyuruvi-ariši,* பெ. (n) நாயுருவிச் செடியின் விதை; the seeds of the nāyuruvi plant.

**நாயுருவிச்சாம்பல்** *nāyuruvi-c-cāmbal,* பெ. (n.) நாயிருவியின் விதைச் சாம்பல்; ashes obtained from the burnt plant Inion burr.

*[நாயுருவி+ சாம்பல்.]*

**நாயுருவியுப்பு** *nāyuruvi-y-uppu,* பெ. (n.) நாயிருவிச்சாம்பலினின்று செய்த மரவுப்பு; salt prepared out of the ashes of the burunt Indian burr.

*[நாயுருவி + உப்பு.]*

**நாயுருவிவேர்** *nāyuruvi-vēr,* பெ. (n) நாயுருவிச்செடியின் வேர்; root of indian burr

*[நாயிருவி + வேர்.]*

பிறரைத் தன்வயப்படுத்த, நாயுருவிவேர் பயன்படும் என்று சா.அக. கூறும்.

**நாயுள்ளி** *nāy-uḷḷi,* பெ. (n.) நரிவெண்காயம்; indian squill, Urginia indica.

*[நாய் + உள்ளி.]*

**நாயுறக்கம்** *nāy-uṟakkam,* பெ. (n) சிறுதூக்கம் (வின்.); dog- sleep.

*[நாய் + உறக்கம்.]*

நாய் சிறிது நேரம் உறங்குதல் குறித்த சொல்லாட்சி.

ஒ.நோ. காக்கைகுளியல்.

**நாயெச்சில்** *nāy-eccil,* பெ. (n) படர்தாமரை; (இ.வ.); ring-worm.

*[நாய் + எச்சில்.]*

**நாயெலுமிச்சை** *nāy-elumiccai,* பெ. (n.) நாய்விளா, மரவகை (யாழ்ப்.); musk deer plant

*[நாய் + எலுமிச்சை.]*

**நாயோட்டம்** *nāy-ōṭṭam,* பெ. (n.) குதிரை முதலியவற்றின் கதிவகை (யாழ்.அக.); a pace, as of a horse

*[நாய்+ஓட்டம். ]*

நாய் விரைந் தோடுவது போன்று, மிகவிரைந்து செல்லும் குதிரை முதலான விலங்குகளின் ஓட்டத்தையும், காலப்போக்கில் குறித்தது.

**நாயோட்டு மந்திரம்** *nāy-ōṭṭu-mandiram,* பெ. (n) திருவைந்தெழுத்தில் 'சி' என்னும் எழுத்து; the letter in the sacred five lettered *'si' mantra of the šaivaites.* *"நாயோட்டு மந்திரம் நாதனிருப்பிடம்"* (திருமந்.பதிப்புரை. பக்.30).

*[நாயோட்டு + மந்திரம். ]*

சிவாயநம மந்திரத்தில், 'சி' எனும் ஐந்தெழுத்து மந்திரம் தொன்முதுச் சிவத்தின் முதல் எழுத்தாகும். சிவநெறி, சிந்துவெளிச் சீமையில் கிளைத்த செந்நெறி. நாயினைச் "சீ" என்று ஓட்டுங்கால், *[ சி → சீ. ]* சிவாயநம மந்திரத்தின் முதலெழுத்தான 'சி'காரம். "சீ" காரமாக, ஒலிக்கப்படுவது, தொன்று தொட்டு வழங்கும் வாழ்வியல் உண்மையாகும்.

"சீ" என்று, நாயை விரட்டுவதும். அதை 'சிவாயநம' என்னும் ஐந்தெழுத்து மந்திரத்தின் முதலெழுத்தாகக் குறிப்பதும், அக் கால வழக்குப் போலும்.

**நார்[1]** *nār,* பெ. (n.) 1. மட்டை முதலியவற்றின் நார்; fibre, as from the bark of a leaf-stalk வாழைநார் பூத்தொடுக்கப் பயன்படும் (உ.வ.). வாழை மட்டையால் மூக்குப் பொடி மடிக்கலாம். "நாரின் முருங்கை நவிரல் வான்பூ" (அகநா:1). 2. கயிறு; string, cord, rope, as made of fibre தென்னை நாரில் கொச்சக்கயிறு பின்னலாம் (இ.வ.). *"உள்ளமெனு நாரினாற் கட்டி"* (நாலடி,153). 3. வில்லின் நாண்; bowstring. *"நாருள தனுவுளாய்"* (கம்பரா.நகர்நீங்.156). 4. பன்னாடை; web about the foot of a coco-nut or palmyra leaf *"நாரரி நறவி னெருமை யூரன்"* (அகநா.36). 5. அன்பு; love, affection, as a bond. *"நலத்தின்க ணாரின்மை தோன்றின்"* (குறள்,958). 6. கல்நார்(தைலவ. தைல.); asbestos. 7.நரம்பு; *nerve,*

க., ம., நார். து., நாரு. தெ., நார. *Nēpāḷi-nāri.*

*[ யார் → ஞார் → நார். ]*

யா = பொருந்துதற் கருத்துவேர். யாத்தல் = கட்டுதல்.

யா → யார் → ஞார் → நார்.

ய → ஞ = திரிபு.

பண்டையப் பயன்பாட்டில், நூல் கயிறு தோன்றுவதற்கு முன்பு, தென்னை, பனை, கற்றாழை, வாழை முதலானவற்றின் பட்டையினின்று எடுத்த நார் கயிறு என்னும் பொதுப் பொருளில், பழக்கத்தில் இருந்தது. பின்பு, காலப்போக்கில் கயிற்றுப்பின்னல் போன்று, நன்கு அமைக்கப்பட்ட வில்லின் நாண், பன்னாடை நார் போன்றவற்றிற்கும், நார் என்ற பெயர் ஏற்பட்டது.

பனை, தென்னை, வாழை, கற்றாழை முதலான நிலைத்திணைப் பொருட்களின் மட்டையிலிருந்து பிரித்தெடுக்கப்படும் இழை அல்லது பட்டை; இந் நார் பொரும்பாலும் மயிரிழை போன்றும், நூலிழை போன்றுமி ருக்கும். நாரின் வகைகளாகச் சாம்பசிவ மருத்துவ அகரமுதலி கூறுவது வருமாறு:-

1. சணல் நார்.
2. பூண்டு நார்.
3. காய்கறி நார்.
4. பட்டை நார்.
5. தேங்காய் நார்.
6. வித்து நார்.
7. கற்றாழை நார்.
8. முள்ளி நார்.
9. பருத்தி நார்.
10. வாழை நார்.
11. எருக்கு நார்.
12. செம்புளிச்சை நார்.
13. வக்கை நார்.

**நார்[2]** *nār,* பெ. (n) மாந்தன் அல்லது விலங்குகளில் காணப்படும், நூலிழை போன்ற நார்ப்பொருள் அல்லது, தசைப்பகுதி (நிணநார்); in physiology, fibre is an elongated thread like structure of organic tissue animal fibres

*[ நூல் + நார். ]*

இந் நாரின் உட்பிரிவுகளாகச் சாம்பசிவமருத்துவ அகரமுதலி கூறுவது வருமாறு :

1. நரம்பு நார்.
2. கிளை (உப) நார்.
3. தசை அல்லது நரம்பிணைக்கும் நார்.
4. மூளை இடை நார்.
5. மயிர் நார்.
6. பாவை நார்.
7. பாசி நார்.
8. தசை நார்.

**நார்க்கட்டில்** *nār-k-kaṭṭil,* பெ. (n.) கட்டில்வகை; a kind of cot.

*[ நார் + கட்டில். ]*

*நார்க்கயிற்றால் கட்டப்பெற்ற கட்டில்.*



**நார்க்கட்டு** *nār-k-kaṭṭu,* பெ. (n.) பனைநார்த் தொகுதி; a bundle of palmyra fibre cords, commonly 100.

*[நார் + கட்டு.]*

**நார்க்கண்ணாடி** *nār-k-kaṇṇāḍi,* பெ. (n.) கல்நாராலான கண்ணாடி; fibre glass.

*[நார் + கண்ணாடி.]*

**நார்க்கத்தி** *nār-k-katti,* பெ. (n.) மட்டையினின்று நாரெடுக்குங் கத்திவகை; a kind of knife for peeling off bark from palmyra leaf-stalk.

*[நார் + கத்தி.]*

**நார்க்கதுவு—தல்** *nār-k-kaduvu-,* 5 செ.கு.வி. (v.i.) கத்தியாற் பட்டை சீவி நாரெடுத்தல்; to peel off bark from palmyra leaf-stalks.

*[நார் + கதுவு—.]*

**நார்க்கயிறு** *nār-k-kayiṟu,* பெ. (n.) கொச்சுக்கயிறு; coir rope.

*[நார் + கயிறு.]*

*தென்னைநாரால் பின்னப்பட்டதும், வலிமையான சிறிய நாரிழைகளால் நன்கு முறுக்கேற்றியதுமான, கொச்சுக்கயிறு.*

**நார்க்கழிவு** *nār-k-kaḻivu,* பெ. (n.) மக்கிய தென்னை நார் உரம்; decomposed coconut fibre fertilizer.

**நார்ச்சத்து** *nār-c-cattu,* பெ. (n.) செரிமான மண்டலத்தின், சீரான இயக்கத்திற்குத் தேவையான கீரை, வாழைத்தண்டு போன்றவற்றிலிருக்கும், நார்ப்பொருள்; fibrous matter, found in certain greens, banana pith, etc. நார்ச்சத்துள்ள உணவு மலச்சிக்கலைத் தவிர்க்கும் (இக்.வ.).

*[நார் + சத்து.]*

*உடலுக்கு உறுதி பயப்பதும், நெஞ்சாங்குலைக்கு வலிவு சேர்த்து, நீண்ட வாணாளைக் கொடுக்குந் தன்மை வாய்க்கப் பெற்றதுமான, நார்ச்சத்து.*

**நார்ச்சிலந்தி** *nār-c-cilandi,* பெ. (n.) புழுவகை (இ.வ.); guinea-worm.

*[நார் + சிலந்தி.]*

**நார்ச்சீலை** *nār-c-cīlai,* பெ. (n.) *1. நார்மடி* பார்க்க (வின்.); see *nār-maḍi.* 2. மரவுரி (யாழ்.அக); bark of trees.

*[நார் + சீலை.]*

**நார்ப்பட்டடை** *nār-p-paṭṭaḍai,* பெ. (n.) நாருரிக்கும் எந்திரம் (இ.வ.); fibre-extracting machine.

*[நார் + பட்டு + அடை.]*

**நார்ப்பட்டு** *nār-p-paṭṭu,* பெ. (n.) *1. நார்மடி* பார்க்க; see *nār-maḍi.* 2. வலைக்கோணி (தைலவ.தைல.); gunny cloth.

ம. நாா்ப்பட்டு.

*[நார் + பட்டு.]*

**நார்மட்டை** *nār-maṭṭai,* பெ. (n.) நாருரிக்கத் தகுதியான பனைமட்டை; stalk of palmyra leaf fit for nār.

*[நார் + மட்டை.]*



**நார்மடி** *nār-madi*, பெ. (n.) பட்டாடை போல்வதும், நாராற்செய்ததுமான ஆடைவகை (பதார்த்த.1323); cloth made of fibre, resembling silk.

க. நார்மடி.

*[நார் + மடி.]*

சிலவகை நிலைத்திணை (தாவரங்களின்) நாரிலிருந்து, உருவாக்கப்படும், பட்டுப்போன்ற ஒருவகைத் துணி.

**நாரகம்** *nāragam*, பெ. (n.) நிரையம் (யாழ்.அக.); hell.

த. நரகம் → skt. nāraga.

*[நரகம் → நாரகம்.]*

**நாரகர்** *nāragar*, பெ. (n.) நிரையத்துக்குரிய மாந்தர் (பாவிகள்); sinners, as fit for hell. "*கடவுளைக் கயந்த நெஞ்சா நாரகர்*"(சிவதரு.பாவ.8).

த. நரகம் → skt. nāraga.

*[நார் + அகர்.]*

**நாரங்கம்** *nārangam*, பெ. (n.) *நாரத்தை* (சூடா.) பார்க்க; see *nārattai.*

*[நார் + skt. அங்கமி.]*

**நாரங்கி**[1] *nārangi*, பெ. (n) *நாரங்கம்* (இ.வ.) பார்க்க; see *nā-rangam*

*[நார் + skt. அங்கி.]*

**நாரங்கி**[2] *nārangi*, பெ. (n). *நாராங்கி* (இ.வ.) பார்க்க; see *nārāngi.*

**நாரசிங்கம்** *nāra-śingam*, பெ. (n.) 1. கிளைத்தொன்மத் தொன்று (பிங்.); a secondary purāṇam, one of up a kiḷai-p-purāṇam, (q v.) 2. மருந்துவகை (பதார்த்த.1216); a compound medicine.

*[நர → நார + சிங்கம்.]*

**நாரசிங்கன்** *nāra-śingaṉ*, பெ. (n.) மனிதனின் உடலும், (சிங்கத்தின்) மடங்கலின் தலையுமாக உருவங் கொண்டு, தோற்றரவு செய்த திருமால்; Tirumāl in his man-lion incarnation.

*[நரசிங்கன் → நாரசிங்கன்.]*



**நாரணவன்** *nāraṇavaṉ*, பெ. (n.) 1. செம்மறியாட்டின் கொம்படியில் உண்டாம் புழுப்பூச்சி வகை (யாழ்ப்.); a kind of maggot in rams, under the horns. 2. மாட்டு நோய் வகை; a disease in cattle.

**நாரணன்** *nāraṇaṉ,* பெ. (n.) திருமால்; *Tirumāl* 'நாராணனை நாபதியை' (திவ்.இயற்ற. நான்மு.67.).

*[ நாராயணன் → நாரணன். ]*

**நாரணா** *nāraṇā,* பெ. (n.) நெட்டி(மலை.), sola pith

*[ நார் + அணவு → அணா. ]*

**நாரணி** *nāraṇi,* பெ. (n.) கொற்றவை (துர்க்கை) (பிங்.); Koṟṟavai.

**நாரணிச்சட்டி** *nāraṇi-c-caṭṭi,* பெ. (n.) திருக் கார்த்திகையன்று கோயிற்றிருமுன் எரிக்கும் விளக்குச் சட்டி; (நாஞ்) a kind of broad mud-vessel, used as a lamp on Tiru-k-kārttigai day.

மறுவ. அகல்விளக்கு.

*[ நாரணி + சட்டி. ]*

**நாரணியவன்** *nāraṇi-y-avaṉ,* பெ. (n.) சிவபிரான்; šivaṉ, as the Lord of Nāraṇi. "அந்திவணங்கொண்ட மேனிய னாநந்த னாரணியவன்" (மருதூரந்.41).

*[ நாரணி + அவன். ]*

**நாரத்தம்** *nārattam,* பெ. (n.) 1. வசம்பு (வின்.); sweet flag 2. சடாமாஞ்சி; spikenard herb.

*[நார் + அத்தம்.]*

**நாரத்தம்புல்** *nārattam-pul,* பெ. (n.) புல்வகை (வின்.); lemon grass, Andropogon schoenanthus.

*[ நாரத்தம் + புல். ]*

**நாரத்தை** *nārattai,* பெ. (n.) 1. மரவகை (பதார்த்த.746); orange, Citrus aurantium 2. கடார நாரத்தை; seville orange 3. கொழுஞ்சிவகை (இ.வ.); loose - skinned orange 4. காட்டு நாரத்தை; indian wild-lime

*[ நார் + அத்து + ஐ. ]*

கரும்பச்சைவண்ணத் தோலையும். புளிப்புச் சுவையுள்ள, சுளை சுளையான சதைப் பகுதியையும் கொண்ட காய். மேற்குறிப்பிட்ட காயைத் தரும், முள் உள்ள சிறுமரம்.

**நாரதசரிதை** *nārada-šaridai,* பெ. (n.) இறந்து பட்டதொரு தமிழ்நூல்; (புறத்திரட்டு.) an ancient work, not extant

*[நாரத + skt சரிதை. ]*

**நாரதப்பிரியம்** *nārada-p-piriyam,* பெ. (n.) தணிகை மலை; Taṇigai hill *"மகதியாழ் முனிக்குறு பிரியம் விரவிய சிறப்பா னாரதப் பிரியம்"* (தணிகைப்பு.புராணவர.60).

*[நாரதன் + skt. பிரியம். ]*

**நாரதபரிவிராசகம்** *nārada-parivirāšagam,* பெ. (n.) நூற்றெட்டுபநிடதங்களு ளொன்று; an upaniṣad, one of 108.

*[நாரதன் + பரிவிராசகம்.]*

**நாரதம்** *nāradam,* பெ. (n.) 1. *நாரதீயம்* பார்க்க; see *nāradiyam.* 2. பெரிய யாழ்வகை; a large lute. *"ஆரியப் பதங்கொ ணாரதப் பேரியாழ்"* (கல்லா.81). 3. மேகம் (யாழ்.அக.); cloud.

*[நாரதன் → நாரதம். ]*

**நாரதராட்டம்** *nāradar-āṭṭam,* பெ. (n.) புறங்கூறி ஒருவருக்கொருவர் பகை யுண்டாக் குகை (வின்.); sowing discord by tale bearing.

*[நாரதர் + ஆட்டம். ]*

**நாரதவேலை** *nārada-vēlai,* பெ. (n.) இருவரிடமும் சென்று பேசிக் கலகம் மூட்டுகை; act of setting one against another "நாரதர் வேலை நன்மையில் முடியும் என்பது பழைய(தொன்மப்) பழமொழி. (இக்.வ.).

*[நாரதர் + வேலை. ஆனால் இக் கலகத்தின் முடிவு நன்மையே என்பது முதுமொழி. [கலகமூட்டும் வேலை. ]*

**நாரதன்** *nāradaṉ,* பெ. (n) 1. படைப்புத் தேவன்(பிரமன்) மகன்களுள் குறிப்பிடத்தக்க முனிவர்; nārada a celebrated sage and son of brammā. "நாரதன் வீணை" (சிலப்.6;18). 2. புத்தருள் ஒருவர் (வின்.); a Buddhar (w.) 3. கலகக்காரன்(உ.வ.); mischief-maker tale-bearer.

*[நரன் → நாரதன். ]*

**நாரதீயம்** *nāradīyam,* பெ. (n.) 1. பதினெண் (புராண)தொன்மதொன்று; (பிங்.), a chief purāṇam, one of padiṉeṉ-purāṇam 2. ஓர் துணைத் (புராணம்) தொன்மம்; (திவா.) a secondary purāṇam, one of 18 upa-purāṇam,

*[நாரதம் + இயம் → நாரதியம் → நாரதீயம். ]*

**நாரநிதி** *nāra-nidi,* பெ. (n.) கடல்; sea. *''நாரநிதியினை நோக்கிச் செல்லும்''* (சேதுபு.திருநா.22). 2. நீர்நிலை; a water- store house.

*[நார + Skt நிதி. ]*

நாரம் = நீர், நீர்நிரம்பிய கடல்.

**நாரப்புண்** *nāra-p-puṇ,* பெ. (n) நரம்புச் சிலந்தி; guinea-worm

**தெ.** நரிபுண்டு.

[நரம் → நாரம் + புண்.]

நாரப்புண் நரம்பிலுண்டாகும் மெல்லிய கட்டி.

**நாரம்[1]** *nāram,* பெ. (n.) 1. அன்பு; love. attachment. 2. காதல்; fondness, affection love. "நாரங்கொண்டார்" (கம்பரா. மாரீசன். 180.)

**த.** நாரம் → skt. nāra.

*[நார் + அம் → நாரம். ]*

"அம்" பெருமைப்பொருள் பின்னொட்டு.

நாரம் = அன்பு வலைக்குள் அகப்படும் காதல்.

**நாரம்[2]** *nāram,* பெ. (n) 1. நீர்; water "நாரநின் றனபோற் றோன்றி" (கம்பரா.நட்பு.31). 2. பாசி; (பிங்.); moss, muscus. 3. ஆன்மாக்கள்; (வின்.) souls, living beings. 4. மக்கட்பகுதி; (யாழ்.அக.); multitude, crowd of persons. 5. ஆவின்கன்று (யாழ்.அக.); calf 6. நீர்வாழ் புள்; (யாழ்.அக.) aquatic bird

**நாரம்[3]** *nāram,* பெ. (n.) *நாரத்தை,1.* (பிங்.) பார்க்க; see *nārattai.1.*

**நாரன்** *nāraṉ,* பெ. (n.) மன்மதன்; indian cupid, as exciting love. "வேழவில்லால்...எய்யு நாரனார்" (கம்பரா.இராவண.244).

[நரன் → நாரன். ]

ஒருகா. நார் : அன்பு, காதல்.

நார் + அன் → நாரன்.

ஆண், பெண் இருபாலரிடத்தும், அன்பையும், காதலையும் வெளிப்படுத்தும் அம்பினை எய்பவன்.

**நாராங்கி** *nārāṅgi,* பெ. (n.) பூட்டு, தாழ்ப்பாள், தொடரி, (சங்கிலி) இவை மாட்ட உதவும் கதவுநிலை உறுப்பு, (இ.வ.); staple for the bolt of a door

[நாதாங்கி → நாராங்கி. ]

த→ர திரிபு.

**நாராசநாழி** *nārāśa-nāḻi,* பெ. (n.) ஒருவகை அளவுப்படி; a kind of measure, used in temples (S.I.I.v 242.)

[ நாராசம் + நாழி.]

**நாராசம்** *nārāśam,* பெ. (n.) **1.** இரும்புக்கம்பி; iron pin, rod, probe. "நாராசத்திரிவிற் கொள்ளத்தகுவது காந்தம்" (மணிமே.27,55). **2.** இரும்பிற் செய்த அம்பு; iron arrow **3.** எழுத்தாணி; iron style. **4.** தெருவிலிருந்து குறுக்கே போகும் ஒடுக்கச்சந்து (வின்.); narrow straight lane at right angles to a street.

**நாராசம்பாய்ச்சு-தல்** *nārāśam-pāyccu-.* 5 செ.கு.வி. (v.i.) *நாரசமேற்று,²-.* பார்க்க; see *nārāśam-ēṟṟu-.²*

[ நாராசம் + பாய்ச்சு-. ]

**நாராசமுத்திரை** *nārāśa-muttirai* பெ. (n.) முத்திரை வகை; (யாழ்.அக.) a finger-pose

[நாராச + முத்திரை. ]

**நாராசமேற்று-தல்** *nārāśam-ēṟṟu-* 5 செ.கு.வி. (v.i.) **1.** ஓலையில் துளையிடுதல்; to pierce a hole by passing a boring pin through an ōlai. **2.** தண்டனையாகக் காதில் இரும்புக்கம்பி செலுத்துதல்; to thrust an iron rod into one's ear. as a punishment

[நாராசம் + ஏற்று-. ]

**நாராயணகௌளம்** *nārāyaṇa-kauḷam,* பெ. (n.) பண்வகையு ளொன்று; a kind of tune.

*[நரன் > நாரம் +* skt *அயணம் = நாராயணம். நாராயணம் +* skt. *கௌளம்.]*

**நாராயணசாமிகொண்டாடி** *nārāyaṇa-śāmi-koṇḍāḍi,* பெ. (n) வெள்ளைமண்கட்டியால் நாமமிட்டுக் காவியுடையுடுத்தும் ஒருசார் சாத்தாத வைணவக்குரு; a class of non-brahmin vaiṣṇavaite priests who. wearing nāmam of white clay. put on salmon coloured cloth and act as soothsayers

*[நாராயணசாமி + கொண்டாடி.]*

**நாராயணத்தைலம்** *nārāyaṇa-t-tailam,* பெ. (n.) வளிப்(வாயு)பிடிப்பைப் போக்குந் நெய்மவகை; an ointment for rheumatism

*[நாராயணம் + தயிலம். ]*

*தைலம் = நெய்மம்.*

**நாராயணப்பிரியன்** *nārāyaṇa-p-piriyaṉ,* பெ. (n.) சிவபிரான் (யாழ்.அக.); Šivaṉ as visṇu's friend.

*[நாராயணம் + skt பிரியன். ]*

**நாராயணம்** *nārāyaṇam,* பெ. (n) 1. நூற்றெட்டுப நிடதங்களு ளொன்று; an upanişda, one of 108. 2. அரசு (மலை.), pipal. 3. நாராயணன் தும்பிலி (வின்.) பார்க்க ; see; nārāyaṇaṉ-tumbili.

*[நரன் → நாரன் + skt.அயணம். ]*

**நாராயணமண்டூரம்** *nārāyaṇa-maṇḍū-ram,* பெ. (n) மருந்து வகை(பதார்த்த. 1210); a tonic

*[நாராயணன் + மண்டூரம். ]*

**நாராயணரசம்** *nārāyaṇa-rašam,* பெ. (n.) குளிகை வகை; a compound pill.

*[நாராயண் + skt ரசம். ]*

**நாராயணன்** *nārāyaṇaṉ,* பெ. (n.) 1. திருமால் (திவ். இயற்.நான்மு.1); Visṇu as reposing on the waters 2. சிவபிரான் (யாழ்.அக.); Šivaṉ 3. நான்முகன் (பிரம்மன்) (யாழ்.அக.); bramma 4. வருணன் (யாழ்.அக.); varuṇaṉ. 5. நிலவு (யாழ்.அக.); moon. 6. திருமாலின் பிறப்பியமான ஒரு முனிவர்; a sage, as an incarnation of Viṣṇu. 7. நாரை வகை; blue heron.

த. நரன் + skt. ayaṇa.

*[நரன் → நாரன் + skt.அயணன். ]*

மனித நிலையினின்று, தெய்வநிலையை அடைந்தவன்.

**நாராயணன்சுழி** *nārāyaṇaṉ-šuḻi* பெ. (n) வெள்ளை முள்ளி; (இவ.) esser yellow nail-dye.(I.)

*[நாராயணன் + சுழி.]*

**நாராயணன்தும்பிலி** *nārāyaṇaṉ-tumbili,* பெ.(n.) பதினாறு அங்குலம் வளர்வதும். பொன்னிறங் கொண்டதுமான, கடல் மீன்வகை; sea-fish. golden, attaining 16 in in length, Saurus myops

*[நாராயணன் + தும்பிலி.]*

**நாராயணன்பூண்டு** *nārāyaṇaṉ-pūṇḍu,* பெ. (n.) சவரிக்கொத்து எனும் பூடு (சங்.அக.); a plant.

*[ நாராயணன் + பூண்டு.]*

**நாராயணி** *nārāyaṇi,* பெ. (n) 1. வெற்றிச் செல்வி (பிங்.); Koṟṟavai. Durgai. 2. எழுவகை பெண்தெய்வங்களுள் ஒருத்தி; Nārāyaṇi one of the šapta-mādar 3. பார்வதி (சங்.அக.); Pārvadi. 4. கங்கை (சங்.அக.); the Ganges 5. குறிஞ்சியாழ்த் திறத் தொன்று; (பிங்.) a secondary melody type of the kuriñji class 6. தண்ணீர் விட்டான் (தைலவ.தைல.); long pungent Sparsifasciculate asparagus.

*[ நாராயணன் → நாராயணி. ]*

**நாராயணிதம்** *nārāyaṇidam,* பெ. (n.) ஒரு செய் நஞ்சு (மூ.அ); a prepared arsenic

*[நாராயணி + (இ)தம்.]*

**நாராயணீயம்** *nārāyaṇīyam,* பெ. (n.) வடமொழியில் நாராயணர் இயற்றிய ஒரு கணிதநூல்; a sanskrit treatise on astronomy by Nārāyaṇar. "*நாராயணீயம் வாராகம் முதலிய கணிதங்களும்*" (தொல்.பொருள்.75,உரை).

*[நாராயணி + அம் → நாராயணீயம்.]*

**நாராயநாழி** *nārāya-nāḻi,* பெ. (n.) *நாராசநாழி* பார்க்க; see *nārāša-nāḻi* (T.A.S.ii,143).

*[ நாராயம் + நாழி. ]*

**நாராயம்¹** *nārāyam,* பெ. (n.) 1. அம்பு; arrow. "*குறுநரிக்கு நல்ல நாராயங்கொளல்*" (பழ.80.). 2. எழுத்தாணி (நாஞ்.); style.

*[நார் + ஆயம்.]*

நார் = நாண்.

நாராலாகிய நாணிலிருந்து, இடையறவின்றி, வரிசையாகச் சரமாரியாக எய்யப் படுவதால், அம்பைக் குறித்து வழங்கிற்று.

**நாராயம்²** *nārāyam,* பெ. (n.) அளவு படிவகை; a measure. "*நாராயத்தால் நிசதம் உரிநெய்*" (S.I.I v,286.).

*[நாழி → நாளி →நாலி →நாரி + ஆயம்.]*

ஒரு முகத்தலளவு திரிந்து, வேறொரு முகத்தலளவுப் பெயராக மாறிற்று

**நாரி¹** *nāri,* பெ. (n) 1. வில்லின் நாண்; bow-string "*நாரியின் பேரொலி*" (கந்தபு.தாரக.142). 2. பன்னாடை (பிங்.); fibrous covering at the bottom of a leaf-stalk , as of a coconut palm. 3. யாழ்நரம்பு (வின்.); lute-string. 4. இடுப்பு (யாழ்ப்.); loins, hip.

**க., தெ.** நாரி.

*[நார் + இ.]*

"இ" சொல்லாக்க ஈறு.

நாரி =நாரால் முறுக்கேற்றிச் செய்யப்படும் நாண்.

**நாரி²** *nāri,* பெ. (n.) 1. கள் (பிங்.); toddy. 2. தேன் (உரி.நி); honey. 3. தாளகம்; orpiment.

*[நார் + இ →நாரி.]*

**நாரி³** *nāri,* பெ. (n.) நன்னாரி (தைலவ.தைல.); indian sarasa parilla.

*[நல் + நாரி → நன்னாரி → நாரி.]* *நாராலாகியதும், இனியமென்பருகலுக் குரியதுமாகிய நன்னாரி.*

**நாரி⁴** *nāri,* பெ. (n.) 1. பெண் (பிங்.); woman. "*நாரிய ரில்லையிஞ் ஞாலமேழு மென்ன*" (கம்பரா.கைகேசி சூழ்.22.). 2. மலைமகள் (பிங்.); Malaimagaḷ.

**த.** நாரி → skt. nāri.

*[நரன் →நாரன் → நாரி.]*

**ஒருகா.** நார் + இ → நாரி.

நார் = அன்பு, விருப்பவுணர்வு, காதல்.

நார் + அம் → நாரம் = அன்பு, காதல்.

நார் + அன் → நாரன் = காமன்.

நாரி என்னுஞ்சொல் விரும்பத்தக்கவள், அன்புடையவள், பெண் என்னும் பொருண்மையில் கழகவிலக்கியங்களில் பரவலாகக் காணப்படுகிறது.

(எ.டு.) "*நலத்தின் கண் நாரின்மை தோன்றின்*" (குறள்,958.). "*நாரில் நெஞ்சம்*" (குறுந்,212:2.).

நாரியர், நாரிகை என்னும் சொற்கள் தமிழிலக்கியப் பரப்பில், பெண் என்னும் பொருளில் மிகுதியாக வழக்கூன்றியுள்ளன. அவற்றுட் சில:–

"*நாரியர் இல்லை இஞ் ஞாலம் ஏழும் என்ன*" (கம்பரா.கைகே.22.).

"*நாணா ளவனையிந் நாரிகை*" (பரிபா.12:56.). "நாரம்" என்னுஞ்சொல்லும், அன்பு காதல் என்னும் பொருண்மையில் பயின்று வந்துள்ளது.

(எ.டு.) "*நாரங்கொண்டார்*" (கம்பரா. மாரீச.180.). பிங்கலநிகண்டும், "பெண்" என்னும் பொருளையே குறித்துள்ளது நோக்குக. "*நறவு பெண் நாணி பன்னாடை நாரி*" (பிங்.3721.).

"நாரி" என்னும் சொல்லை, வடசொல்லாக சென்னைப் பல்கலைக்கழக அகரமுதலி குறித்துள்ளது. இஃது, முற்றிலும் பிழையே.

அன்புடையவள், விரும்பத்தக்கவள், பெண், காதல் என்னும் பொருட்பொருத்தப்பாட்டில், "நாரி" என்னும் சொல் கழகவிலக்கியங்களில் வழக்கூன்றியுள்ளது. பிங்கல நிகண்டிலும் இடம்பெற்றுள்ளது.

மேற்குறித்த எடுத்துக்காட்டுகளால், நாரி என்பது தமிழ்ச்சொல்லே, என்பது நன்கு போதரும். பெண் என்னும் சொல் ஈங்கு, "பெள்" என்னும் விரும்புதற்கருத்து வேரிலிருந்து தோன்றியது.

பெள் + பெண்.

பெள் + பு → பெட்பு = விருப்பம் (சூடா.).

பெள் + தல் → பெட்டல் = விருப்பம் (திவா.).

பெட்டார் = விரும்பியவர். "*பேணாது பெட்டார்*" (குறள்,1178.).

தாய்மை, அன்பு,போன்ற அனைத்து ஆரா அன்பினுக்கும் இருப்பிடம் பெண்; பெண்ணைக் குறிக்கும் "நாரி" எனுஞ் சொல், அன்பு, விருப்பம், காமம் என்னும் பொருண்மைகளில், இலக்கியங்களில் பயின்றுள்ளதால், இச் சொல் நற்றமிழ்ச்சொல் என்பதில் யாதொரு ஐயமில்லை.

**நாரி⁵** *nāri,* பெ. (n.) தானை (சேனை) (யாழ்.அக.); army.

*[நார் → இ. நாரால் வரிசையாகத் தொடுத்த மாலைபோன்று திகழும், படை அணிகுப்பு.]*

**நாரி⁶** *nāri,* பெ. (n.) நறுமணம் (வின்.); odour, fragrance.

*[நாறு → நாரு → நாரி.]*

*நாறுதல் = தோன்றுதல்.*

*விளங்கித் தோன்றும் நறுமணம் என்னும் பொருண்மையில், ஆளப்படும்சொல்.*

**நாரிக்கரு** *nāri-k-karu,* பெ. (n.) பெண்களின் சினைப்பை; the female reproductive cell which develops after impregnation ovum 2. முப்பு; mystic salt

*[நாரி⁴ + கரு.]*

**நாரிக்குத்து** *nāri-k-kuttu,* பெ. (n.) இடுப்புவலி (யாழ்ப்.); pain in the loins.

*[நாரி + குத்து.]*

நாரி = இடுப்பு. குத்து = வலி. நாரால் பிணைக்கப்பட்டது போன்று, அமைந்த இடுப்புப்பகுதியி லேற்படும் குத்தல்வலி.

**நாரிகேரம்** *nāri-kēram,* பெ,(n.) *நாரிகேளம் (யாழ்ப்.)* பார்க்க; see *nārikēḷam*

*[நார் → நாரி + நேரம்.]*

**நாரிகேளபாகம்** *nāri-kēḷa-pāgam,* பெ. (n.) மட்டை முதலியவற்றை உரித்து நீக்கி, உட்புறத்துள்ள பருப்பைக் கடித்து மென்றா லன்றித் தேங்காயினது இனிப்பை அறிய

இயலாததுபோல், மிக வருந்தாது, அழகை அறிய முடியாத செய்யுள் நடைவகை; a style of poetic composition in which the beauty of a poem, can be appreciated only after hard and laborious study.

*[நாரிகேளம் + பாகம்.]*

நாரி + கீள் → கேள் + அம் + பாகம்.

**நாரிகேளம்** *nāri-kēḷam,* பெ. (n.) தென்னை; coconut.

*[நாரி + கேளம்.]*

நுள் → நள் → நாள் → நாளம்.

நாளம்= உட்டுளையுள்ள தென்னைமரம், புறக்காழுடையது.

*"புறக்காழனவே புல்லென மொழிப"* (தொல்.பொருள்.1585.) எனுந் தொல்காப்பிய நூற்பாவால், நார்மட்டையை உடையது, நாரி என்று தென்னையைக் குறிக்கும். புறக்காழுள்ள நார்த்தன்மை மிக்க மட்டைகளை யுடையது தென்னை.

நார் → நாரி.

கீள் → கேள் + அம் = கேளம்.

கேளம் = பருப்பைத் தோண்டி எடுக்குந் தன்மையுடைய காய்.

**நாரிகேளாஞ்சனம்** *nāri-kēḷāñjaṉam,* பெ. (n.) இளநீரினைக் கொண்டு செய்யும் கண் மருந்து வகை; medicinal collyrium prepared from the milk of tender cocounts.

*[நாரி + கோளம் + skt.அஞ்சனம்.]*

**நாரிகை** *nārigai,* பெ. (n.) பெண்; woman. *"நாணா ளவனையிந் நாரிகை"* (பரிபா.12,56).

*[நரன் → நாரன் → நாரி + கை.]*

"கை"=சொல்லாக்க ஈறு.

**நாரிச்சுண்ணம்** *nāric-c-uṇṇam,* பெ. (n) 1. மூப்பு; mystic salt. 2. நாரிக்கரு பார்க்க. see nāri-k-karu.

*[நாரி + சுண்ணம்.]*

**நாரிசண்டன்** *nāri-šaṇḍaṉ,* பெ. (n) ஆணலி; female hermaphrodite. (சா.அக.).

*[நாரி + சண்டன்.]*

**நாரிசி** *nāriši,* பெ. (n) பேய்த்துவரை; a kind of bitter dhal. (சா.அக.).

*[நாரி⁴ → துவரை.]*

**நாரிசுக்கிலம்** *nāri-šukkilam,* பெ. (n.) பெண்களுக்கு, புணர்ச்சிக்காலத்தே வெளிப்படும் நீர்மம்; ovarian discharge in female during sexual intercourse.

*[நாரி⁴ + skt. சுக்கிலம்.]*

**நாரிசுரம்** *nāri-šuram,* பெ. (n) வீட்டுக்கு விலக்கான (மாதவிடாய்ப்) பெண்களுடன், உடலுறவு கொள்ளுவதால் உண்டாகும் காய்ச்சல்; a kind of fever 2. *நாரிக்கரு* பார்க்க; see *nāri-k-karu.*

*[நாரி + அரம்.]*

**நாரிட்டம்** *nāriṭṭam,* பெ. (n.) உணவைச் செரிமானமாக்கும் வயிற்றுத் தீ; fire of digestion, gastric fire 2. மூச்சுக்காற்று; the wind of birth. 3. மல்லிகை; arabian jasmine

*[நார் + இட்டம்.]*

**நாரிண்டு** *nāriṇḍu,* பெ. (n.) இண்டஞ்செடி வகை; a kind of plant of the mimosa genus.

**மறுவ.** நுரையிண்டு.

*[நார் + இண்டு.]*

**நாரிப்பால்** *nāri-p-pāl,* பெ. (n.) முலைப்பால்; woman's breast milk.

*[நாரி[4] + பால்.]*

நாரி = பெண்.

**நாரிப்பிடிப்பு** *nāri-p-piḍippu,* பெ,(n.) இடுப்புப்பிடிப்பு (யாழ்ப்.); contraction of muscles in the loins.

*[நார் → நாரி + பிடிப்பு.]*

**நாரிபாகன்** *nāri-pāgaṉ,* பெ,(n.) மாதொரு பங்கினனான சிவபிரான் (வின்.); Šivaṉ. as having his consort on one side of his body.

*[நார் → நாரி + பாகன்.]*

பகு → பாகம் + அன்.

நாரி = பெண்.

பெண்ணைப் பாகமாக உடையோன்.

**நாரிமருந்து** *nāri-marundu,* பெ.(n.) *நாரிசுக்கிலம்* பார்க்க; see *nāri-šukkilam*

*[நாரி + மருந்து.]*

**நாரிமின்னாள்கரு** *nāri-miṉṉāḷ-karu,* பெ,(n.) *நாரிக்கரு* பார்க்க; see *nāri-k-karu.*

*[நாரிமின்னாள் + கரு.]*

**நாரிமூலம்** *nāri-mūlam,* பெ, (n.) நன்னாரிவேர்; root of Indian sarasaparilla.

*[நாரி + மூலம்.]*

**நாரியங்கம்[1]** *nāriyaṅgam,* பெ, (n.) தேன்றோடை (மலை.); sweet orange.

*[நாரி +* skt.*அங்கம்.]*

**நாரியங்கம்[2]** *nāriyaṅgam,* பெ. (n.)
1. *நாரிமூலம்* பார்க்க; see *nāri-mūlam.*
2. பெண்ணின் உடம்பு; female body.
3. பெண்குறி; the genial of a female.

*[நாரி +* skt *அங்கம்.]*

**நாரியதாபம்** *nāriya-dābam,* பெ. (n.) பருந்து; kite.

**நாரியர்பால்** *nāriyar-pāl* பெ. (n.) தாய்ப்பால்; woman's breast milk.

**மறுவ.** அம்மம் (சா.அக.).

*நாரி = பெண். தாய்.*

**நாரிரோகம்** *nāri-rōgam,* பெ. (n.) பெண்களுக்கு ஏற்படும் நோய்கள்; diseases peculiar to women.

*[நாரி +* skt.*ரோகம்.]*

*நாரி = பெண்.*

**நாரிவல்லபம்** *nāri-vallabam,* பெ. (n.) ஞாழல்; orange cup-calyxed brasiletto-climber wagaty.

**நாரிவலி**[1] *nāri-vali,* பெ. (n.) நாரிக்குத்து; pain in the loins.

மறுவ. இடுப்புவலி.

*[நாரி + வலி.]*

**நாரிவலி**[2] *nāri-vali,* பெ,(n.) *நாரிக்குத்து* பார்க்க; see *nāri-k-kuttu.*

*[நாரி + வலி]*

**நாரிவிரசு** *nāri-virašu,* பெ,(n.) நாய்நறுவிலி; smaller discscabrid-leaved sebesten.

*[நாரி + விராய் → விரசு.]*

**நாரிவெருட்டி** *nāri-veruṭṭi,* பெ. (n.) 1. புலிநகக் கொன்றை; a species of cassia tree like tigers claws. 2. நன்னாரி வேர்; root of indian sarasaparilla.

**நாரிவேர்** *nāri-vēri,* பெ. (n.) ***நன்னாரி*** பார்க்க; see *naṉṉāri.*

**நாரீசம்** *nārišam,* பெ. (n.) பிண்ணாக்குச் செடி; pat fibre.

**நாரை** *nārai,* பெ,(n.) 1. பறவை வகை; pelican ibis. "*நந்து நாரையோடு*" (பதிற்றுப்.23). 2. கொக்கு வகை; common crane. 3. வெண் கொக்கு; white stork. 4. நொள்ளைமடையான்; a small heron. 5. மாட்டின் அலைதாடி (மாட்டுவா.14); dewlap. 6. ஒருவகை ஆ; a kind of cow.

*[நார் → நாரை.]*

நார் = வெண்மை.

நாரை = வெண்மை நிறக்கொக்கு, நாரை போன்றவை.

முன்னொடுங்கி இருக்கும், நீண்ட அலகை உடைய கொக்குப் போன்ற பறவை. மீனைத்தின்று வளரும். நாட்டுப்புறத்தில் இப் பறவையினைச் சுட்டுத் தின்பர். நாரையின் வகைகள் வருமாறு:–

1. அகத்திப்பூ நாரை.
2. அகலவாயன் நாரை.
3. கருநாரை (கருப்பு நாரை (அ) கருப்பு மூக்கு நாரை).
4. குருட்டு நாரை.
5. கொய்யடி நாரை.
6. கோணக்கால் நாரை.
7. கோணமூக்கு நாரை (கரண்டி மூக்கு நாரை).
8. சங்க நாரை (சங்கு வளை நாரை).
9. சாம்பான் நாரை.
10. சிறுநாரை.
11. செங்கால் நாரை.
12. செவ்வரி நாரை.
13. தடும்ப நாரை.
14. துடுப்பு மூக்கு நாரை (துடுப்பு நாரை).
15. நத்தைக்குத்தி நாரை (நத்து நாரை).
16. நீர் நாரை.
17. நெடலை நாரை.
18. பவளக்கால் நாரை.
19. பூ நாரை.
20. பெரு நாரை.
21. மஞ்சள் மூக்கு நாரை.

# நாரை வகைகள்



மஞ்சள் மூக்கு நாரை



செங்கால் நாரை



சாம்பல் நாரை



நத்தை குத்தி நாரை



பெருநாரை



நந்து நாரை

22. வண்ணாத்தி நாரை.

23. வெண்கழுத்து நாரை.

24. வெள்ளை நாரை.



**நாரைக்கெண்டை** *nārai-k-keṇḍai,* பெ. (n.) கெண்டைமீன்வகையுளொன்று; a kind of keṇḍai fish

*[நாரை + கெண்டை = கெண்டை மீன்வகையைச் சார்ந்தது.]*



**நாரைக்கொம்பன்** *nārai-k-kombaṉ,* பெ. (n) நீண்ட வெண்கொம்புள்ள மாடு (யாழ்ப்.); ox having long white horns.

*[நாரை + கொம்பன்.]*

**நாரைப்பசு** *nārai-p-paśu,* பெ. (n.) *நாரையா* பார்க்க; see *nārai-y-ā.*

**நாரைமூலி** *nārai-mūli,* பெ. (n.) நற்கள்ளி மூலி; Indian weeping plant

**மறுவ.** அழுகண்ணி

*[நாரை + மூலி.]*

**நாரையா** *nārai-y-ā,* பெ. (n.) வெண்மை நிறமுள்ள ஆ; a kind of cow.

*[நாரை + ஆ.]*

நாரை = வெண்ணிறம்.

**நாரையாப்பால்** *nārai-y-ā-p-pāl,* பெ. (n) வெண்ணிறமுள்ள நாரையினத்தைச் சார்ந்த ஆவின்பால்; the milk of a species of cow known as "Narai".

*[நாரையா + பால்.]*

நாரையா = வெண்ணிறமுள்ள ஆ (பசு.)

**நாரையுளுவை** *nārai-y-uḷuvai,* பெ. (n) உளுவை மீன்வகையுளொன்று; a kind of uḷuvai fish.

*[நாரை + உளுவை=நாரைகளால் விரும்பியுண்ணப்படும் மீன்.]*

**நாரொடுப்பை** *nāroḍuppai.* பெ. (n.) நிலப்பாலை மூலிகை வகையுளொன்று; a kind of herbal medicine.

**நால்¹(லு)—தல்** *nāl(lu)-,* **16 செ.கு.வி.** (v.i.) **1.** தொங்குதல்; to hang, swing, to be suspended, hung up. "*நான்ற முலைத்தலை நஞ்சுண்டு*" (திவ்.இயற்.1,18). **2.** கழுத்திற் சுருக்கிட்டுக் கொள்ளுதல்; to hang oneself. "*நான்றியான் சாவலென்றே*" **(சீவக.2513).**

[நால் → நாலுதல் = சரிந்து அல்லது தளர்ந்து தொங்குதல்.]

ஞால் → நால் → நாலுகை = சரிந்து தொய்வுற்றுத்தொங்குகை.

துளைத்தற் பொருண்மையினின்று கிளைத்த, நெகிழ்ச்சி அல்லது தளர்ச்சிக் கருத்துச் சொல்லாகும். சரிந்து தளர்வுடைய பொருள்களெல்லாந் தொங்குந் தன்மைத்து, தளர்தற் பொருண் மையுடைய இச் சொல், காலப் போக்கிற் கழுத்திற்சுருக்கிட்டுத் தொங்கிச் சாதலைக் குறித்தது.

**நால்²** *nāl.* பெ. (n.) 1. நான்கு; the number four "*நாலிரு வழக்கிற் றாபதப் பக்கமும்*" (தொல்.பொருள்.75), 2. *நாலடியார்* பார்க்க; see *nāladiyār* "*பழகுதமிழ்ச்சொல்லருமை நாலிரண்டில்*" (பெருந்தொ.).

**க., ம.,** நால். **தெ.** நல்லு.

*[நல் → நால்.]*

**நால்³** *nāl.* பெ.எ. (adj.) நான்கு என்னும் எண்ணின் பெயரடை வடிவம்; adjectival form of nāṉgu நால்வகை: நாலுலகு. "நாலுமிரண்டும் சொல்லுக்குறுதி" "நாலும் கலந்துனக்கு நான்தருவேன்" (ஔவையார் பாடல்).

[நால்கு → நால்.]

**நால்⁴** *nāl.* பெ. (n.) பிரம்பு; cane. (சா.அக.).

*[ஞால் → நால்.]*

நாலுதல் = வளைதல். வளைத்துச் செய்த பிரம்பு.

**நால்கண்ணாடி** *nāl-kaṇṇāḍi.* பெ. (n.) கோரோசனை; cow's bezoar

ஆவின் வயிற்றிலிருந்து எடுக்கப்படும் மஞ்சள் நிறமுள்ள நறுமணப் பொருள்.

**நால்கு** *nālgu.* பெ. (n.) நான்கு; the number four, "*வாலுளைப் புரவி...நால்குடன் பூட்டி*" (பெரும்பாண்.489).

**க.,** நால்கு. **தெ.,** நாலுகு.

*[நால் → நால்கு.]*

**நால்திசை** *nāl-tišai* பெ. (n.) *நாற்றிசை* பார்க்க; see *nāṟṟišai*

**நால்வகுப்பு** *nāl-vaguppu.* பெ. (n.) மறவர், அரசர், வணிகர், வேளாளர் என்று தொழிலை அடிப்படையாக வைத்துப் பிரித்த குமுகாயப் பகுப்பு; the four division of the society viz., kings, virtuous persons, merchants, agriculturists

[*நால் + வகுப்பு.*]

தொழிலை அடிப்படையாக வைத்துப் பிரித்த நால்வகைப்பகுப்பு, பிற்காலத்தில், ஆரியப் பிராமணர் பிறப்பையடிப்படையாக மாற்றி வழக்குப்படுத்தியது. வரலாறு.

**நால்வகைச்சாந்து** *nāl-vagai-c-cāndu* பெ. (n.) கலவை, பொன் வண்ணம் (பீதம்), புலி, வட்டிகை என்ற நால்வகையாகிய சாந்து (திவா.); the four kinds of sandal unguents, viz., kalavai, poṉ-vaṇṇam (pīdam), puli, vaṭṭigai.

**மறுவ.** நறுமணச்சாந்து.

*[நால்வகை + சாந்து.]*

**நால்வகைத்தேவர்** *nāl-vagai-t-tēvar,* பெ. (n.) பவணர், வியந்தரர், சோதிசுகர் (ஜோதிஷ்கர்), கல்பவாசியர் என்ற நால் வகையான தேவர்கள் (மேருமந்.8,உரை); the four kinds of gods, viz., pavaṇar, viyandarar, jotiṣukar, kalpavāṣiyar.

*[நால்வகை + தேவர்.]*

இறைமறுப்பாளரான சமணர், வடமொழிப் பாங்கினை அடியொட்டி, அமைத்த பெயர்கள்.

**நால்வகைத்தோற்றம்** *nāl-vagai-t-tōṟṟam,* பெ. (n.) நால்வகை உயிர்த்தோற்றங்கள் (அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம்), the four modes in the genesis of life, viz. (aṇḍasam, suvēdasam, uṟpiccam, sarāyušam.)

[*நால்வகை + தோற்றம்.*]

(ஸ்வஸ்திக்) நாற்கோணக்குறியீடு (卐) நான்குவகைத் தோற்றத்தைக் குறிப்பதாகச் சமணம் சாற்றியது.

**நால்வகைநிலம்** *nāl-vagai-nilam,* பெ. (n.) *நானிலம்* பார்க்க; see *nāṉilam.*

*[நால்வகை + நிலம்.]*

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன நான்குவகை நிலங்கள். பாலைநிலம் தமிழகத்தில் இல்லை. அதனால் சிலப்பதிகாரம், "முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்குதுயர்உறுத்துப், பாலை என்பதோர் படிவங்கொள்ளும்" என்று நிலையற்ற நிலமாகப் பாலை நிலத்தைக் குறித்துள்ளது.

**நால்வகைப்பூ** *nāl-vagai-p-pū.* பெ. (n.) கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, புதற்பூ அல்லது நிலப்பூ என்ற நால்வகையான மலர் (திவா.); the four kinds of flowers, viz., kōṭṭu-p-pū, koḍi-p-pū, nīr-p-pū, pudaṟ-p-pū on nila-p-pū.

*[நால்வகை + பூ.]*

**நால்வகைப்பொருள்** *nālvagai-p-poruḷ,* பெ. (n.) அறம், பொருள், இன்பம், வீடு என்ற நால்வகையான உறுதிப்பொருள் (சூடா.); the four kinds of uṟudi-p-poruḷ, viz., aṟam, poruḷ, iṉbam, vīḍu

*[நால்வகை + பொருள்.]*

**நால்வகையுணவு** *nālvagai-y-uṇavu.* பெ. (n) உண்டல், தின்றல், நக்கல், பருகல் என நான்கு வகையான உணவு (சூடா.); the four kinds of food, viz., uṇḍal, tiṉṟal, nakkal, parugal.

*[நால்வகை + உணவு.]*

**நால்வகையோனி** *nālvagai-yōṉi,* பெ. (n) நான்குவகையாகப் பகுத்த பெண் பிறப்புறுப்பு; the four varieties of vagina

**நால்வகைவருணம்** *nālvagai-varuṇam,* பெ. (n.) *நால்வகுப்பு* பார்க்க; see *nāl-vaguppu.* "*நெறிமுறை நால்வகை வருணமுமாயினை*" (திவ்.இயற். திருவெழு.29.).

செய்யுந்தொழில் அடிப்படையில், வாழ்வை வழுப்பட, வடவர் வர்ணாசிரமம் என்றனர்.

*[நால்வகை + வர்ணம்→வருணம்.]*

**நால்வண்ணம்** *nāl-vaṇṇam,* பெ. (n.) *நால்வகுப்பு* பார்க்க; see nāl-vaguppu.

*[நால் + வண்ணம்.]*

வடவர் சிவப்பு, வெள்ளை, நீலம், கருமை என்னும் நான்கு வண்ணத்தில் குலப்பிரிவு அமைத்துப் பண்பும் கூறினர்.

**நால்வர்** *nālvar,* பெ. (n.) திருநெறிய தமிழ் என்னும் திருப்பதிகத் தமிழ்நெறியைத் தோற்றுவித்து, வளர்த்து, நிலைநாட்டிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரர், மாணிக்கவாசகர்; the canonized Šaiva, Šaints, Tiruñaṉa-sambandar, Tirunāvu-k-karašar, Tirunāvalūrar, Māṇikka vāšagar.

**மறுவ.** சமயக்குரவர்.

**நால்வர்நான்மணிமாலை** *nālvar-nāṉmaṇi-mālai,* பெ. (n) சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் என்ற சிவனடியார்கள்மேல், சிவப்பிரகாசர் இயற்றிய நால்வகையாப்பில் அமைந்த நாற்பது பாடல் கொண்ட சிறந்த சிற்றிலக்கியம்; a poem by Sivappiragāsar, on the four, Šaivam Šaints, Šampandar, Appar, Šundarar and Māṇikka-vāšagar.

*[நால்வர் + நான்மணிமாலை.]*

நம்பியாரூரரின் தோழமை நெறியினைச் சிவப்பிரகாசர் நால்வர் நான்மணி மாலையில், நவிலும் பான்மை வருமாறு:-

"அறிந்து செல்வம் உடையானாம் அளகைப் பதியான் தோழமை கொண்டு

உறழ்ந்த கல்வி உடையானும் ஒருவன் வேண்டும் என இருந்து

துறந்த முனிவர் தொழும் பரவை துணைவா, நினைத் தோழமை கொண்டாண்டெறிந்த அறிவு வடிவமாய்த் திகழும் நுதற்கட் பெருமானே."

**நால்வருணம்** *nāl-varuṇam,* பெ. (n.) *நால்வகுப்பு* பார்க்க; see *nāl-vaguppu.*

*[நால் + வர்ணம்→வருணம்.]*

**நால்வலங்கம்** *nāl-valaṅgam,* பெ. (n) கல்வெள்ளாங்கு; bastard rose wood.

**மறுவ.** நால்வெள்ளங்கு.

**நால்வரோதயம்** *nālvarōdayam,* பெ. (n) மணித்தக்காளி; black berried solanum.

**நால்வாய்** *nāl-vāy,* பெ. (n) தொங்கும் வாய்; hanging mouth or jaw "*நால்வாய்க் கரி*", (திருக்கோ. 55.). 2. யானை (சூடா.), elephant

[ஞால் → நால் + வாய்.]

நாலுதல் = தொங்குதல்.

நால்வாய் = தொங்கும் வாய்.

அதியமான் ஔவைக்குப் பரிசாக யானை தந்தபோது, ஒருவாய்க்கு உணவின்றி நான் துயர்ப்படுங்கால் (தொங்கும் அகன்ற வாய் கொண்ட) யானையைப் பரிசளிக்கிறாயே என்று, இரட்டுறமொழிதலாகப் பாடியிருப்பது (புறநானூறு). இங்கு குறிக்கத் தக்கது.

**நால்வாயன்** *nāl-vāyaṉ,* பெ. (n.) 1. யானை முகக்கடவுள்; Piḷḷaiyār as elephant-like. "*ஒரு கோட்டன்...நால்வாயன்*" (சி.சி.காப்பு.) (அக.நி.). 2. ஐராவத யானையை யுடைய இந்திரன்; (அக.நி.) indiran, as having an elephant

*[ஞால்நால் →நாலுகை = தொங்குகை. நால்வாய் →நால்வாயன்= தொங்கும் வாயன்.]*

**நால்வேதியன்** *nāl-vēdiyan,* பெ. (n.) மூலிகைக் கொடி; a medicinal creeper.

**நாலடி** *nāladi,* பெ. (n.) *நாலடியார்* பார்க்க; see *nāladiyār.* "*நாலடி நான்மணி நானாற்பது*" (தனிப்பா.).

*[நால் + அடி.]*

**நாலடிநானூறு** *nāladi-nāṉūṟu,* பெ. (n.) *நாலடியார்* பார்க்க; see *nāladiyār.* "*அள வினாற் பெயர்பெற்றன...நாலடிநானூறு முதலாயின*" (நன்.48,மயிலை.).

*[நாலடி + நானூறு.]*

**நாலடியார்** *nāladiyār,* பெ. (n.) பதினெண் கீழ்க்கணக்கினுள் ஒன்றாயதும், சமண முனிவர்களால் இயற்றப்பட்டதும், அறம், பொருள், இன்பம் இவற்றை, 400 வெண்பாக் களாற் கூறுவதுமாகிய நூல்; a Tamil classic treating of virtue, wealth and love, being a collection of 400 veṇbās or quatrains composed by Jaina ascetics, one of padiṉ-eṇ-kīḻkkaṇakku.

*[நால் + அடி + ஆர்.]*

ஒருவரே இயற்றியது என்ற ஆய்வுக்கருத்தும் உண்டு.

நாலடியார் சங்கம் மருவிய காலத்தது என்பர். பதுமனார், நாற்பது அதிகாரங்களாகப் பகுத்து உரையும் இயற்றினார். இந் நூலுள் அமைந்துள்ள கடவுள் வாழ்த்தும், அவரால் பாடப்பட்டதாகும்.

கற்றுத்துறைபோகிய நுண்மாண் நுழைபுலமிக்க வல்லுநராயினும் வாழ்வாங்கு வாழவேண்டுமாயின், தக்க மெய்ந்நூல்களைத் தெரிவுசெய்து, தெளிவாகத் கற்கவேண்டும் என்னும் கருத்தமைந்த நாலடியார் பாடல் வருமாறு:—

"கல்விகரையில ! கற்பவர் நாள் சில
மெல்ல நினைக்கின் பிணிபல

தெள்ளிதின் ஆராய்ந்தமைவுடைய
கற்பவே— நீரொழியப் பாலுண்குருகின் தெரிந்து"
(நாலடி,135.).

**நாலம்**[1] *nālam,* பெ. (n.) தொங்கும் கோளம் அல்லது உலகம்; the earth hanging in the space or orbit.

*[ஞால் → நால் →நால் →நாலம் = ஞாலம். ஒ.நோ. ஞெண்டு → நண்டு. (தமி.வ.149).]*

**நாலம்**[2] *nālam,* பெ. (n.) தாமரை முதலிய பூவின் காம்பு; pedicles of flowers like lotus.

*[நால் + அம் → நாலம்.]*

**நாலம்பலம்** *nāl-ambalam,* பெ. (n.) கோயிலுள் ஒரு பகுதி (நாஞ்.); a portion of a temple.

நால்திசை வாயில் கொண்ட, நடுத்திறப்புப் பகுதி.

**நாலல்** *nālal,* பெ. (n.) தணக்கு; yellow flowered silk- cotton.

*[ஞால் → நால் + அல்.]*

தொங்கும் கிளைகள் மிக்க தணக்கு.

**நாலறிவுயிர்** *nālaṟi-v-uyir,* பெ. (n.) சுவை, ஒளி, ஊறு, நாற்றம் என்ற நான்கறிவுடைய நண்டு, தும்பி முதலியன (தொல்,பொருள்.586); living creatures having the four senses of taste, sight, touch and smell, as crabs, beetles.

*[நால் + அறிவு →நாலறிவு + உயிர்.]*

**நாலா[1]** *nālā,* பெ. எ. (adj.) 1. பல; many, "*நாலாபக்கமும்*", 2. நான்கு; four

*[நால் → நாலா.]*

ஒ.நோ. தலை → தலா.

*நாலா = நால்வகை, எல்லா, பலவகை.*

*நால் → நாலா= அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்னும் நால்வகுப்பைச் சேர்ந்த எல்லா மக்களும் வந்திருந்தனர் என்றும், நாற்றிசை யிலுமிருந்து மக்கள் வந்திருந்தனர் என்பதை, நாலா திசையிலுமிருந்து மக்கள் வந்திருந்தனர் என்று கூறுவது மரபு. (வ.வ.19).*

**நாலா[2]** *nālā,* பெ. (n.) 1. வாய்க்கால் (வின்.); water channel; water-course. நாலா பக்கமும் தண்ணீர் பாய்வதற்கு ஏதுவாக நன்செய் உள்ளது. (உ.வ.) 2. பள்ளத்தாக்கு; ravine

*[ஞால் → ஞாலா → நாலா.]*

**நாலாங்காண்டம்** *nālāṅ-gāṇḍam,* பெ. (n) கொடிமாதுளை; lemon citron

*[நாலாம் + skt காண்டம்.]*

**நாலாங்காய்ச்சல்** *nālāṅ-kāyccal,* பெ. (n) 1. நான்குமுறை காய்ச்சி எடுத்தது; that which is boiled and filtered four times 2. வெடியுப்பு; nitre

*[நாலாம் + காய்ச்சல்.]*

**நாலாங்காய்ச்சலுப்பு** *nālāṅ-kāyccal-uppu,* பெ. (n) 1. நான்கு தடவை காய்ச்சித் தெளிவிறுத்த வெடியுப்பு; nitre boiled and filtered four times; four times purified nitre 2. நான்கு மாதக் கருப்பிண்டத்தைப் பனிக் குடத்து நீர்விட்டு நான்கு தரம் எரித்து, வடிகட்டித் தெளிவிறுத்த ஓர்வகைப் பிண்டவுப்பு; a salt prepared from four months foetus by boiling it with amiotic fluid four times and filtering the same. (சா.அக.).

*[நாலாம் + காய்ச்சல் + உப்பு.]*

**நாலாஞ்சடங்கு** *nālāñ-šaḍaṅgu,* பெ. (n.) நாலாநீர் பார்க்க; see *nālā-nīr.*

*[நால் + ஆம் + சடங்கு.]*

**நாலாட்டுயாபடிலம்** *nālāṭṭāu-yā-paḍilam,* பெ. (n) ஏலரிசி; cardamon seeds. (சா.அக.).

**நாலாதிசீலம்** *nālādi-šīlam,* பெ. (n) கடல் அல்லது மலையின் மேல்மட்டத்திலுள்ள தண்ணீர்; water from the hills and mountains above the sea-level. (சா.அக.).

**நாலாதிசை** *nālā-tišai,* பெ. (n.) கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு முதலான நான்கு திசை; all directions viz. east, west, north and south

*[நாலா + திசை.]*

**நாலாநீர்** *nālā-nīr,* பெ. (n) 1. திருமணத்தின் நான்காம் நாள், மணமக்கள் புரியும் நீராட்டநிகழ்வு; bath taken by a newly married pair on the fourth day of marriage. 2. திருமணத்தின் நான்காம் நாள் (இ.வ.), the forth day of marriage

*[நால் → நாலா + நீர்.]*

**நாலாநீராடு—தல்** *nālā-nīr-āḍu-,* 5 செ.கு.வி. (v.i.) பூப்படைந்து நாலாநாள் நீராடுதல்; to take a purificatory bath on the fourth day after menstruation.. "*நாலாநீராடி வந்தாள்*" (கொக்கோ.).

*[நாலா + நீர் + ஆடு–.]*

**நாலாபக்கமும்** *nālā-pakkamum,* பெ. எ. (adj.) நாலாதிசையும் எல்லாப் பகுதியும். எல்லாத் திசையும்; all directions. காணாமல் போன சிறுவனைத் தேடி, நாலாபக்கமும் ஆட்கள் சென்றிருக்கிறார்கள் (இக்.வ.). நாலாபக்கமும் தீ எரிய ஆரம்பித்தது (இக்.வ.).

*[நாலா + பக்கமும்.]*

**நாலாபுறமும்** *nālā-puṟamum,* பெ.எ. (adj.) *நாலாபக்கமும்* பார்க்க; see *nālā-pakkamum*

*[நாலா + புறமும்.]*

**நாலாபேரும்** *nālā-pērum,* பெ.எ. (adj.) எல்லாரும்; many people. திருவள்ளுவர் திருநாள் விழாவிற்கு நாலா பேரும் வந்திருந்தனர் (இக்.வ.).

*[நாலா + பேரும். ]*

*எல்லா, எல்லாரும், பலவகை.*

*அரசு நடத்தும் திருவள்ளுவர் திருநாள் விழாவிற்கு, எல்லா மக்களும் வந்திருந்தனர் என்பதை, 'நாலாபேரும்' வந்திருந்தனர் என்பர்.*

**நாலாம்பாதகன்** *nālām-pādagaṉ,* பெ. (n.) கொலைகாரர்; murderer, as one who commits the fourth im-peruṅ-kuṟṟattāṉ "*நன்றெனவுவந்து நாலாம் பாதக னதற்கு நேர்ந்தான்*" (திருவிளை.அங்க.12.)

*[நால் + ஆம் + skt. பாதகன்.]*

**நாலாம்பொய்யுகம்** *nāl-ām-poy-yugam,* பெ. (n.) கலியூழி; kali-ūḻi. "*செம்பொன் மேனி வேறாகி நாலாம் பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துருவாகி மன்னும்*" (திருவிளை. இரச.30.).

*[நாலாம் + பொய் + உகம்.]*

**நாலாம்வருணம்** *nālām-varuṇam,* பெ. (n.) வேளாளர் குலம்: the Šūttirar caste, as the fourth varuṇam

*[நாலாம் + வருணம்.]*

**நாலாம்வாசல்** *nālām-vāšal,* பெ. (n.) நிலக்கிழார் தம் வீட்டின் முற்றத்தை ஒட்டியுள்ள தாழ்வாரம்; passage leading to courtyard in a landlord's house (G.Tn.D.i.102).

*[நால் + ஆம் + வாசல்.]*

**நாலாமாயிரம்** *nālām-āyiram,* பெ. (n.) நம்மாழ்வாரின் திருவாய் மொழி; a book of fourth verse of Nālāyira-teyva-p-paṉuval

*[நால் + ஆம் + ஆயிரம்.]*

**நாலாமாறல்** *nālām-āṟal,* பெ. (n.) நான்காமுறைக் காய்ச்சல்; quartan fever (சா.அக.).

**நாலாமுறைக்காய்ச்சல்** *nāla-muṟai-k-kāyccal,* பெ. (n.) நான்கு நாட்களுக்கொரு முறை வரும் முறைக்காய்ச்சல்; quartan fever

*[நாலாமுறை + காய்ச்சல்.]*

**நாலாயிரத்தெய்வப்பனுவல்[1]** *nālāyira-t-teyva-p-paṉuval,* பெ. (n.) ஆழ்வார்கள் அருளிச்செயல்களாய், மாலியத்தின் மாண்புகளை விளக்குந் தன்மையில் அமைந்த 4000 பாடல்களைக் கொண்ட நூற்றொகுதி; a collection of 4000 hymns in Tamiḻ by Alvārs

சிவனிய இலக்கியத்திலுள்ள தேவாரத்திற்கு ஒப்பாக மாலிய இலக்கியத்திலுள்ளது, நாலாயிரத் தெய்வப்பனுவல். இது 6–, 7–,

8–, 9–ஆம் நூற்றண்டுகளில், முதலாழ்வார் முதல், திருமங்கையாழ்வார் வரை பன்னிரு தலைசிறந்த திருமாலடியாராற் பாடப்பெற்ற திருமால் வழுத்துத்திரட்டு, வேதாந்த தேசிகரின் பிரபந்த சாரம்,

*"வையகமென் பொய்கை பூதம்*
*பேயாழ்வார் மழிசையக் கோன்*
*மகிழ்மாறன் மதுரகவி*
*பொய்யில் புகழ்கோழியர் கோன்*
*விட்டு சித்தன் பூங்கோதை*
*தொண்டரடிப் பொடிபாணாழ்வார்*
*ஐயனருட் கலியன்.....'*

என்று, பன்னீராழ்வார் பெயரையும் காலமுறைப் படுத்திக் கூறும். ஆயின் பாடற்பொருள் நோக்கி, பன்னீராழ்வார் பாடல்களும், நாலாயிரத் தெய்வப்பனுவற்றிரட்டில் பின்வரு மாறு அமைக்கப்பட்டுள்ளன.

I. முதலாயிரம்.

1. திருப்பல்லாண்டு.
2. பெரியாழ்வார் திருமொழி. பெரியாழ்வார் (8ஆம்–நூற்.).
3. திருப்பாவை.
4. நாச்சியார் திருமொழி ஆண்டாள் (8–ஆம் நூற்.).
5. பெருமாள் திருமொழி–குலசேகராழ்வார் (7ஆம்–நூற்.).
6. திருச்சந்த விருத்தம் (திருமழிசையாழ்வார்–7–ஆம் நூற்.).
7. திருமாலை.
8. திருப்பள்ளியெழுச்சி தொண்டரடிப் பொடியாழ்வார் (7–ஆம் நூற்.).
10. கண்ணி நுண்சிறுதாம்பு–மதுரகவியாழ்வார் (9–ஆம் நூற்.).

II. இரண்டாமாயிரம் அல்லது பெரிய திருமொழி.

1. பெரிய திருமொழி.
2. திருக்குறுந்தாண்டகம்– திருமங்கையாழ்வார் (8–ஆம் நூற்.).
3. திருநெடுந்தாண்டகம்.

III. மூன்றாமாயிரம் அல்லது இயற்பா.

1. முதல் திருவந்தாதி–பொய்கையாழ்வார்.
2. இரண்டாம் திருவந்தாதி–பூதத்தாழ்வார்.
3. மூன்றாந்திருவந்தாதி–பேயாழ்வார் (6–ஆம் நூற்.).
4. நான்முகன் திருவந்தாதி–திருமழிசையாழ்வார் (7–ஆம் நூற்.).
5. திருவிருத்தம்.
6. திருவாசிரியம்.
7. பெரியதிருவந்தாதி – நம்மாழ்வார் (9–ஆம் நூற்.).
8. திருவெழு கூற்றிருக்கை.
9. சிறிய திருமடல்.
10. பெரிய திருமடல் திருமங்கையாழ்வார் (8–ஆம் நூற்.).

**நாலாயிரப்பிரபந்தம்** *nālāyira-p-pirabandam,* பெ. (n.) *நாலாயிரத்தெய்வப்பனுவல்* பார்க்க; see *Nālāyira-t-teyva-p-paṉuval.*

[*நாலாயிரம்* + skt. *பிரபந்தம்.*]

**நாலாயிரம்** *nāl-āyiram.* பெ. (n.) *நாலாயிரப் பிரபந்தம்* பார்க்க; see *nālāyira-p-pirapandam.* "*நாதனுக்கு நாலாயிர முரைத்தான் வாழியே*" (வாழித்திருநாமம்.).

[*நால்* + *ஆயிரம்.*]

**நாலாரச்சக்கிரம்** *nālāra-c-cakkiram,* சித்திரப்பாட்டுவகை (மாறனலங். 282,உரை); a kind of cittira-k-kavi

[*நாலாரம் + சக்கிரம்.*]

**நாலாவது** *nālāva-du,* பெ. (n.) புகையிலை (இ.வ.); tobacco leaf, as being the fourth article used in chewing.

**நாலாவான்** *nāl-āvāṉ,* பெ. (n.) 1. நான்காமவன்; the fourth man. 2. நான்காம் இனத்தவன்; the šūttiraṉ as belonging to the fourth. "*நாலாவான் மந்திரியு மாவான்*" (தனிப்பா. 1, 106,40);

**மறுவ.** நாலாமன்.

[*நால் + ஆவான்.*]

[*நாலாமவன் →நாலாவான்.*]

**நாலாவித** *nālāvida,* பெ.எ. (adj.) குறிப்பிட்ட வகையில் அடங்கும் பல்கூறு; of all kinds of sorts. ஊரில் புகுந்த கொள்ளையர்களை மக்கள், கத்தி,கம்பு போன்ற, நாலாவித ஆயுதங்களையும் எடுத்துக்கொண்டு துரத்தினார்கள் (இக்.வ.)

**மறுவ.** நானாவித,

[*நால் → நாலா + வித.*]

**நாலாவிததட்சணி** *nālāvida-taṭcaṇi,* பெ. (n.) தலைச்சுருளி; flame flower.

**நாலி** *nāli,* பெ. (n.) 1. கந்தைத்துணி; rag. 2. கார்த்திகைப்பூ அல்லது கிழங்கு (மலை.); malabar Tlory-lily. 3. முத்து (சது.) (மனோன்.I.iii.163); pearl. 4. தகரை; ring worm plant.

[*நால் →நாலி.*]

கோலுங் கொடுக்குமாய்த் தொங்கும் கந்தைத் துணி (வே.க.3.27).

கையினாலும், கோலினாலும் எளிதாய்த் துளைக்கப்படும் அல்லது ஊடுருவப்படும் பொருள்களெல்லாம், நீருங்கூழும் போல் நெகிழ்ச்சிப்பொருள்களாகும்;

கந்தைத்துணி. முத்து, போன்ற பொருள்களெல்லாம், துளைத்தற்கருத்தினின்று தோன்றிய நெகிழ்ச்சிப்பொருள் என்றறிக.

**நாலிக்கம்** *nālikkam,* பெ. (n.) பித்தளை அல்லது தாமிரத்தகடு; alloy copper and spelter.

[*நாலி → நாலிக்கம்.*]

**நாலிகங்கபாடிக்கல்** *nāli-kaṅgapāḍi-k-kal,* பெ. (n.) தொண் (ஒன்பது) மணி வகையுளொன்று (S.I.I ii196); one of the nine precious gems.

**நாலிகம்**[1] *nāligam,* பெ. (n.) 1. தாமரை; lotus. 2. எருமை; buffalo

**நாலிகம்**[2] *nāligam,* பெ. (n.) காகம் (மூ.அ); crow.

**நாலிகாடி** *nālikāḍi,* பெ. (n.) காட்டாமணக்கு; purging nut

[*நாலி → நாலிகாடி.*]

**நாலிகை** *nāligai,* பெ. (n.) மூங்கில் (சங்.அக.); bamboo.

[*நால் → நாலி → நாலிகை=உட்டுளையுள்ள மூங்கில் (வே.க.3-12).*]

**நாலிலைப்புன்னை** *nālilai-p-puṉṉai.* பெ. (n.) நான்கு இதழ்களையுடைய புன்னை; four leaved poon, rhomb leaved poon. (சா.அக.)

[*நாலிலை + புன்னை.*]

**நாலிலைப்பைரவி** *nālilai-p-pairavi,* பெ. (n.) சதைமொட்டி மூலி; a medicinal plant consisting of four leaves

**நாலிலொன்றாய்க்காய்ச்சல்** *nālil-oṉṟāy-k-kāyccal,* பெ. (n.) மருந்துக்களுக்கு நீரை நாலில் ஒரு பங்காகும்படிச் சுண்டக் காய்ச்சுதல்; boiling down any decotion to one fourth of its original quantity.

**நாலிவாடி** *nālivāḍi,* பெ. (n.) கருங்குளவி; wasp

**நாலு[1]-தல்** *nālu-,* **1.** சரிந்து அல்லது தளர்ந்து தொங்குதல்; to saggy; to dangle. "*நான்ற முலைத்தலை நஞ்சுண்டு*" (திவ்.இயற்.1:18.). **2.** *நான்று கொள்(ளு)தல்* பார்க்க; see *nāṉṟu-koḷ(ḷu)-*

[நல் → நால் → நாலு-.]

[ஒருகா. ஞால் → நால் → நாலு-.]

**நாலு[2]** *nālu,* பெ. (n.) **1.** நான்கு; the number four, **2.** பல; many, manyfold, **3.** சில; a few நாலு வார்த்தைதான் பேசினான்; **4.** நாலடியார் பார்க்க; see *nālaḍiyār.* "*ஆலும் வேலும் பல்லுக் குறுதி, நாலுமிரண்டுஞ் சொல்லுக் குறுதி*" (பழ.)

[*நால் → நாலு.*]

**நாலுகட்டு** *nālu-kaṭṭu,* பெ. (n.) நாற்புறமும் சுற்றுக்கட்டுத் திண்ணைகொண்ட வீட்டின் பகுதி (நாஞ்.); the central portion of a house surrounded with verandas on all sides.

[*நாலு + கட்டு.*]



**நாலுகண்சட்டி** *nālu-kaṇ-šaṭṭi,* பெ. (n.) அடியில் நான்கு துளையிட்ட மண்சட்டி; an earthern ware or pot with four holes underneath. (சா.அக.)

[*நாலுகண் + சட்டி.*]

**நாலுகண்மீன்** *nālu-kaṇ-mīṉ,* பெ. (n.) *நான்குகண்மீன்* பார்க்க; see *nāṉku-kaṇ-mīṉ.*

[*நாலுகண் + மீன். நால் → நாலு + கண்+மீன்.*]

**நாலுகவிப்பெருமாள்** *nālu-kavi-p-perumāḷ,* பெ. (n.) நான்கு வகைப்பாவிலும் வல்லவரான, திருமங்கையாழ்வார் (குருபரம்.); Tirumaṅgai-āḻvār, as pre-eminent in the four kinds of verses.,

[*நாலு* + skt. *கவி + பெருமாள்.*]

வெண்பா, அகவல், கலி, வஞ்சி என்பது பழமைப்பகுப்பு. இடைக்காலத்தே ஆசு,

மதுரம், சித்திரம், வித்தாரம் என்று கூறப்பட்டன.

**நாலுகாசு** *nālu-kāšu,* பெ. (n) பிறர் தன்னை மதிக்கிற அளவுக்கு அல்லது ஒன்றைத் தனித்து நின்று செய்கிற அளவுக்கு, போதிய பணம்; money necessary (for a comfortable life). *'நாலுகாசு (சம்பாதிக்கத்) தேடத் தெரியவில்லை'* (இ.வ). நாலுகாசு உள்ள ஆளைப்பார்த்துப் பெண்கொடு (இ.வ.). நாலுகாசு சேர்த்தால்தான் உலகம் மதிக்கும் (இ.வ.).

[*நால் → நாலு + காசு.*]

**நாலுகாற்சீவன்** *nālu-kāṟ-šīvan,* பெ. (n.) விலங்கு; quadruped. "*நாலுகாற் சீவனோ நரர்களோ பறவையோ*" (சீவக்.பிரபந்.பக்.345.).

[*நாலுகால்* + skt *சீவன்.*]

**நாலுகாற்பிராணி** *nālu-kāṟ-pirāṇi,* பெ. (n.) நான்கு கால்களையுடைய விலங்கு; fostered animal.

**நாலுகாற்புணர்ச்சி** *nālu-kāṟ-puṇarcci,* பெ. (n.) பெண்களுடன் விலங்குகளைப்போல் கூடுதல்; having sexual union with females like quadripeds.

*[நாலுகால் + புணர்ச்சி.]*

இக் கலை 64 இன்ப விளையாட்டுகளுள், ஒன்று.

**நாலுசதுரக்கமலம்** *nālu-šatura-k-kamalam,* பெ. (n.) மூலாதாரம்; a lotus shaped mystic centre situated above the generative organ. "*நாலுசதுரக்கமல முற்றின்*" (திருப்பு.399).

*[நாலு + சதுரம் +* skt *கமலம்.]*

கருவாய்க்கும் எருவாய்க்கும் இடையே, நெற்றிவரை அமைந்துள்ள ஆறு இடங்கள்.

**நாலுசாதிப்பூ** *nālu-šādi-p-pū,* பெ. (n.) *நால்வகைப்பூ* பார்க்க; see *nāl-vagai-p-pū.*

**நாலுத்தட்டு** *nālu-t-taṭṭu,* பெ. (n.) மகளிர் கழுத்தணி (நாஞ்.); a kind of woman's ornament, worn along with šiṟṟuru

[*நாலு + தட்டு.*]

*சிற்றுருக்களோடு சேர்த்து மகளிர் கழுத்திலணியும் அணிகலன்.*

**நாலுதட்டு** *nālu-taṭṭu,* பெ. (n.) ஞாலித்தட்டு; a kind of woman's ornament.

[*ஞாலு → நாலு + தட்டு.*]

நாலுதல் = தொங்குதல்.

**நாலுபாதசைவம்** *nālu-pāda-šaivam,* பெ. (n.) சைவம் பதினாறனுள் சரியை, கிரியை, ஓகங்களால் ஞானமடைந்து, பின் ஆன்மா வீடுபெறும் என்று கூறும் மதபேதம்; a šaiva doctrine that the initiate should pass successively through šariyai, kiriyai, yōgam and ñāṉam stages and thence obtain mōksam one of sixteen Šaivam

*[நாலு + பாதசைவம்.]*

**நாலுபேர்** *nālupēr,* பெ. (n.) ஒருவருக்கு உதவி செய்கிற அல்லது ஆதரவாக உள்ள ஆட்கள் சிலர்; people who are well disposed. இருந்தா நாலுகாசு இருக்க வேண்டும் இல்லாவிட்டால், நாலுபேராவது இருக்க வேண்டும் (இக்.வ.) இப்படி நடந்தால் நாலுபேர்

உன்னைப்பற்றி என்ன சொல்வார்கள்? (இக்.வ.).

[நாலு + பேர்.]

**நாலுமா** *nālu-mā,* பெ. (n.) ஐந்திலொன்றைக் குறிக்கும் 'கி' என்னும் பின்னவெண்; the fraction 1/5, as four mā.

[நாலு + மா.]

**நாலுமூலைக்கப்பு** *nālu-mūlai-k-kappu,* பெ. (n.) *நாலுமூலைத்தாய்ச்சி* பார்க்க; see *nālumūlai-t-tāycci.*

[நாலு + மூலை + கப்பு.]

**நாலுமூலைத்தாய்ச்சி** *nālu-mūlai-t-tāycci,* பெ. (n.) மகளிர் விளையாட்டு வகை; a girls play.

[நாலு + மூலை + தாய்ச்சி.]

**நாலூர்** *nālūr,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள தேவாரத்திருப்பதிகப் பாடல்பெற்ற ஊர்; a canonized place in Tañjāvūre Dt., "*நறை யார் பொழில் புடைசூழ் நாலூர் மயானம்*"

[நாலு + ஊர் → நாலூர்.]

திருஞானசம்பந்தரால் பாடப்பெற்ற இத் திருக்கோயிலைச் சுற்றிலும், நான்கு இனத்தவரின் குடியிருப்புப் பகுதிகள் இருந்தமையால், இப் பெயர் பெற்றது.

**நாவக்கலப்பூர்வசத்து** *nava-k-kala-p-pūrva-šattu,* பெ. (n.) பலகல்லின் சத்து; essence of several kinds of stones.

**நாவகம்** *nāvagam,* பெ. (n.) பாம்புஇணைவம்; copulation of snakes (சா.அக.).

மறுவ. பாம்புக்கரணம்.

**நாவகீச்சான்** *nāva-kiccān,* பெ. (n.) மீன் வகையுளொன்று; a kind of fish.

**நாவச்சென்னை** *nāva-c-cennai,* பெ. (n.) செந்தினை; red italian millet.

**நாவசிகரம்** *nāva-šigaram,* பெ. (n.) வில்வம்; Indian bael

**நாவசை-த்தல்** *nā-v-ašai-,* 4 செ.கு.வி. (v.i.) பேசுதல்; to speak, ulter a word, as moving ones tongue.

[நா² + அலை → அசை-.]

**நாவட்சரம்** *nāvaṭsaram,* பெ. (n.) நாக்கில் தோன்றும் கொப்புளம் அல்லது கட்டி; ulcerative stomatitis

**நாவடக்கம்**¹ *nā-v-aḍakkam,* பெ. (n.) 1. மந்திரத்தால் வாயைப் பேசவொட்டாமற் செய்கை; silencing one by magic. 2. அமைதி; reserve, silence. 3. நாவின் சுவையை அடக்குகை; suppressing the sense of taste.

ம. நாவடக்கம்.

[நா² + அடங்கு → அடங்கு → அடக்கம்.]

கடுஞ்சொல் பேசாது நாவை அடக்கி வைத்தலும், மந்திரத்தால் நா எழாதபடி செய்தலும், நாவடக்கம் ஆகும்.

**நாவடக்கம்**² *nāvaḍakkam,* பெ. (n.) மருக்காரை; common emitic nut. (சா.அக.).

**நாவடக்கி** *nā-v-adakki,* பெ. (n.) மருந்துப்பூடு; a medicinal plant. "*நின்று சிணுங்கி நிலம்பரண்டி நாவடக்கி*" (தெய்வச். பிறலிவிடு.403.).

*[நா + அடக்கி.]*

*நாவறட்சியினைப் போக்குவது.*

**நாவடக்கு—தல்** *nāvaḍakku-,* பெ. (n.) 1. உணவின் சுவையை நாக்கு அடக்கிவைத்தல்; to suppress the sense of taste. 2. நா எழாமல் பண்ணுதல்; to render one incapable of move the tongue through sorcery

*[நா + அடக்கு—.]*

**நாவடங்கணம்** *nāvaḍaṅgaṇam,* பெ. (n.) தேத்தான்கொட்டை; water clearing nut. (சா.அக.).

**நாவடம்** *nāvaḍam,* பெ. (n.) 1. நாகவடம்; a pendent ear-ornament. 2. தாலியுருவகை; a jewel worn along with the marriage-badge.

*[நால்வடம் → நாவடம்.]*

தொங்குமாறு செய்யப்பட்ட அணிகலன்.

**நாவடமஞ்சள்** *nāvaḍa-mañjaḷ,* பெ. (n.) திகைப்பூச்சி; a hypnotic insect. (சா.அக.).

**நாவடிக்கோளம்** *nāvaḍi-k-kōḷam,* பெ. (n.) நாக்கின் அடிப்பகுதியில் அமைந்துள்ள சுரப்பிகள்; the smallest of the salivary glands.

*[நாவடி + கோளம்.]*

**நாவடிவீக்கம்** *nāvaḍi-vīkkam,* பெ. (n.) நாக்கினடிப் பகுதியிலேற்படும் வீக்கம்; swelling below the tongue

*[நாவடி + வீக்கம்.]*

**நாவடை** *nā-v-aḍai,* பெ. (n.) கிணற்றில் நீர் இறைப்பவன், நீர்ச்சாலைச் சாய்க்கும் இடம் நீர் (இக்.வ.); place near a well where the baling bucket is emptied

*[நா² + அடு → அடை.]*

**நாவடைக்கல்** *nāvaḍai-k-kal,* பெ. (n.) தண்ணீர் பாயும் கல்; rock where water flows.

*[நா + அடை + கல்.]*

**நாவடைசலம்** *nāvaḍai-šalam,* பெ. (n) நிலத்தின் மேற்பரப்பின் மீதுள்ள தண்ணீர்; water of an elevated place.

*[நாவடி → நாவடை + சலம்.]*

**நாவடைத்துப்போ—தல்** *nā-v-aḍaittu-p-pō-*, 5 செ.கு.வி. (v.i.) பேச முடியாமற் போதல்; to become speechless, dumb founded.

*[நா + அடைத்து + போ—.]*

**நாவணம்** *nā-v-aṇam,* பெ. (n.) உள்நாக்கு (வின்.); uvula.

*[நா² + அண்ணம் → அணம்.]*

**ஒருகா.** நா + வண்ணம் → வணம்

**நாவணை** *nāvaṇai,* பெ. (n.) எருத்தின் நான்கு இணை (வின்.); four pairs of oxen.

*[நாலணை → நாவணை.]*

**நாவதாரு** *nāva-tāru,* பெ. (n.) வேதிமப்பொருளுள் ஒன்றான வீரம்; corrosive sublimate.

**நாவரசு** *nā-v-araśu,* பெ. (n.) அறுபத்து மூவருள் ஒருவரான திருநாவுக்கரசு நாயனார்; a canonised šaiva šaint, 7th,c. one of the three Tēvāram hymnists,one of 63 "*மிளிர்தரு நாவரசே*" (சிவப்.பிரபந்.நல்வர்.34).

மறுவ. தாண்டகவேந்தர்.

*[நா² + அரசு.]*

**நாவரணை** *nā-v-araṇai,* பெ. (n.) நாப்புற்று நோய் வகை; a kind of pimple or ulicer on the longue

*[நா + அரண் → அரணை.]*

பல்லிற்கு அரண்போன்று அமைந்துள்ள பல்லரணையிலோ, அல்லது நாவிலோ ஏற்படும் புண்.

**நாவரையர்** *nā-v-araiyar,* பெ. (n) *நாவரசு* பார்க்க; see *Nāvaraśu.* "*தமிழின் செய்யுள் பாடு நாவரையர் புகழ்மொழிகள்*" (சேதுபு. கடவுள்,வா.9.).

மறுவ. திருநாவுக்கரசு நாயனார்.

*[நா + அரசர் → அரைசர் → அரையர்.]*

**நாவல்¹** *nāval,* பெ. (n.) 1. மரவகை; jaumoon-plum-, Cugenia fambolana. "*நாவ றழீஇயவிந் நானிலம்*" (திருக்கோ.191). 2. மலை மரவகை; arnott's mountain black plum. 3. *நாவலந்தீவு* பார்க்க; see *nāvalan-ḍivu.* "*நாவலந் தண்பொழில்*" (மணிமே.22:29). 4. போர்க் கழைக்கை (நன்,100,மயிலை.), challenging for fight. 5. வெற்றிக் குறிப்பாக இடும் ஒலி; a shout of victory in the form of nāvalō-nāval. "நாவலிட்டுழிதர்கின்றோம்" (திவ். திருமாலை,1.)6. நெற்போரிடுவோர் மகிழ்ச்சியினா லிடுமொலி (ஏரெழு.59); a shout of joy made while heaping grain on the threshing-floor. 7. நெற்போர் தெழிக்கும் பகட்டினங்களைத் துரப்பதொரு சொல்; a shout of driving the oxen while treading sheaves on the threshing-floor "*காவலுழவர் ..நாவலோஓ வென்றிசைக்கு நாளோதை*" (நன்,101,உரை). 8. துயரக்குறிப்பு; exclamation of grief. "*கன்னி மீர் நாவ லிக்கண நண்ணுதிர்*" (கந்தபு. பானுகோ.192). 9. எள்காயை அழிக்கும் பூச்சிவகை; (S.A,) a kind of insect which blights the gingelly crops

ம. ஞாவல்.

*[ஞாவல் → நாவல். ]*

**நாவல்²** *nāval,* பெ. (n.) துவர்ப்புக் கலந்த இனிப்புச்சுவையுடைய கருநீலச் சிறுபழம். மேற்குறிப்பிட்ட பழத்தைத் தரும் உயரமான மரம்; jaumoon-plum (the fruit and the tree).

யா = கருமைக்கருத்துவேர்.

*[யா + வு → யாவு; யாவு + அல் → யாவல் → யாவல் → ஞாவல் → நாவல். ]*

நாவற்கனி நம் மண்ணுக்குரியது. கன்ன ங்கரியது.

யகர ஞகரத்திரிபு = யாவல் → ஞாவல்.

ஞகர நகரத்திரிபு = ஞாவல் → நாவல்.

கருமைக்கருத்தினை அடிப்படையாகக் கொண்டே, "நாவல்" என்னும் பெயர் ஏற்பட்டது என்பார் சொல்லாய்வாளர், ப. அருளி. கருங்கனி, இருங்கனி என்னும் கருமைப் பொருண்மையை விளக்கும், நாவல் பற்றிய சொல்லாட்சிகள் கழகஇலக்கியப் பரப்பில் பரவலாகக் காணப்படுகின்றன.

(எ.டு) "புன்கால் நாவல் பொதிப்புற இருங்கனி" (நற்.35:2.). "காலின் உதிர்ந்தன கருங்கனி நாவல்" (மலை.135.) "கருங்கனி நாவல் இருந்து கொய் துண்ணும்" (புறம்.177:11.).

மேற்குறித்த கழகஇலக்கியப் பதிவுகளில், கருமைக்கருத்து, மிகத்தெளிவுற ஒளிர்கின்ற பாங்கினைக் கண்டு தெளிக.

நாவல்மரம் வரலாற்றுச் சிறப்புமிக்கது. பண்டைய இந்தியா நாவலந்தேயம் எனப் புகழ்பெறுதற்கு, இம் மரமே முழுமுதற் கரணியமென்பார் மொழி ஞாயிறு. நாவல் மரமும், பழமும், நானிலத்தவர்தம் நலவாழ்விற்கு நற்றுணை நல்குவனஎனில், மிகையன்று. நாவல் பழத்தை நாகப்பழமென்றும் அழைப்பர். இம் மரம் பரந்து வளரும் பான்மையது. மனையடி நிலத்திலும், தோப்புத்துரவிலும் நாவல் நன்கு செழித்து வளரும். இம் மரம் 70 முதல், 80 அடி உயரம் வரை வளரும். இதன் இலைகள் 3, 6 விரலம் நீளமுடையவை. மாசி, பங்குனியில் அரும்பும், இம் மரத்தின் பூக்கள் சிறியதாகவும், வெண்மை நிறங்கொண்டதாகவும் இருக்கும். இதன் விளைச்சல் 40 ஆண்டுகளில் பூரணமாய்க் கிடைக்கும். கருநீல நிறத்திலும், சிறியதாகவும் உள்ள இப் பழம் சுவையானது. துவர்ப்பாயும் இருக்கும். இதன் பட்டையும் துவர்க்குந் தன்மைத்து. நாவல் பழத்தை நசுக்கினால் கருப்பூரமணம் வீசும். இந்த நாவலிலிருந்து பச்சை நிற எண்ணெய் தயாரிக்கலாம். இந்த எண்ணெய், குடற்கோளாற்றினைப் போக்கும். செரிமான ஆற்றலை மிகுவிக்கும். நாவல்மரத்தினது பட்டையை மற்ற கடைச்சரக்கோடு சேர்த்து அரைத்து, வாய்ப்புண்களைக் குணப்படுத்துவர். பட்டைச்சாற்றை, வெள்ளாட்டுப்பாலில் கலந்து கொடுக்க, குழந்தைகளின் வயிற்றுப்போக்கு நீங்கும். இதன் கொட்டைகள் நீரிழிவு நோய்க்குச் சிறந்த மருந்தாகும். நாவல்மரத்தின் மேற்பட்டைச் சூரணத்தைச் சீழ்வடிகின்ற புண்ணில் விட்டால், காயம் குணமாகும். தோல்நோயைப் போக்கி உடம்பிற்கு மினுமினுப்பை ஏற்படுத்தும். இம் மரத்தின் வேரால் கரப்பான் புண், மச்சை மேகம் ஆகியன ஆறும். நாவல்பழச் சாற்றில் இன்பருகம் செய்து அருந்தினால், நன்கு செரிமானமாகும். நாவற்சூரணம் இருமல், ஈளை, வாய்ப்புண் முதலான உடம்பிலுள்ள பெரும்பாலான நோய்களுக்குக் கைகண்ட மருந்தாகும்.

நாவல் வகைகளாகச் சா.அக. கூறுவது வருமாறு:–

1. ஈழத்து நாவல்.
2. ஓர நாவல்.
3. கரு நாவல்.
4. கரும்பு நாவல்.
5. காட்டு நாவல்.
6. குழி நாவல்.
7. கொடி நாவல்.
8. கொட்டை நாவல்.
9. கொரநாட்டு நாவல்.
10. சம்பு நாவல்.
11. சாவா (ஜாவா) நாவல்.
12. சிவப்பு நாவல்.
13. சிறு நாவல்.
14. திப்பிலி நாவல்.
15. நரி நாவல்.
16. நாட்டு சம்பு நாவல்.
17. நிழல் நாவல்.
18. நீர் நாவல்.
19. புளி நாவல்.
20. பூ நாவல்.
21. பூமி நாவல்.
22. பெரு நாவல்.
23. மலை நாவல்.
24. வெண்ணாவல்.
25. வெள்ளை நாவல்.

**நாவல்³** *nāval,* பெ. (n.) உரைநடையில் விரிவாகக் கதையைக் கூறும் ஓர் இலக்கிய வடிவம்; novel; fiction.

**மறுவ.** நவீனம், புதினம்.

**நாவல்கூறு-தல்** *nāval-kūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) நாவலோ நாவலென்று சொல்லுதல்; to shout nāvalō-nāval. "*விளியும் பண்டமாற்றும் நாவல் கூறலும்*" (யாப்.வி.பக்.45).

**மறுவ.** அறைகூவல் இடுதல்.

*[நாவல் + கூறு-.]*

**நாவல்நீர்** *nāval-nīr,* பெ. (n.) நாவல் மரத்து வேரில் ஊறிய நீர்; water where in the root of the jaumoon tree is soaked

*[நாவல் + நீர்.]*

உடலுக்கு ஆண்மையைத் தரும், நீரிழிவு, மிகுகாய்ச்சல் போன்றவற்றைப் போக்கும்.

**நாவல்நெல்** *nāval-nel,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

*[நாவல் + நெல்.]*

**நாவலகலிடம்** *nāval-agal-iḍam,* பெ. (n) *நாவலந்தீவு* பார்க்க; see *nāvalan-dīvu.* "*நாவலகலிடத்து ஞாயிறனையனாய்*" (பு. வெ.8.17).

*[நாவல் + அகல் + இடம்.]*

**நாவலந்தண்பொழில்** *nāvalan-daṇpoḻil,* பெ. (n.) ஏழுதீவுகளுள் ஒன்று: பெருந். India. "*நாவலந் தண்பொழில் நண்ணார் நடுக்குற*" (மணிமே.22:25).

**மறுவ.** நாவலந்தேயம், மூவர் தண்பொழில்.

*[நாவல் + அம் + தண்பொழில்.]*– பொழி + இல் = மழைப்பொழிவால் செழிக்கும் இடம்.

நாவல் மரங்கள் சூழ்ந்த, இந்து தேயம். பொழில் = சோலை; மரங்களின் பொழிப்பு அல்லது தொகுப்பு. நாவலந்தண் பொழில் குறித்து, மொழி ஞாயிறு கூறுவது வருமாறு:–

மாந்தன் தோன்று முன்பும், மக்கள் பெருகு முன்பும், ஞாலத்திலுள்ள நிலமெல்லாம் தோன்றிற்று. பெருநிலப்பகுதிகளும், சிறுநிலப் பகுதிகளும், தனித்தனி பெருஞ்சோலையும், சிறுசோலையுமாக விருந்தன. இதனால் மண்ணுலகும், அதன் கண்டங்களும், நாடுகளும் 'பொழில்' என்னும் பொதுப்பெயர் பெற்றன.

பொழில் என்பது சோலை. மரங்களின் பொழிப்பு அல்லது தொகுப்பு பொழில். "*தொழில் காவல் மலிந்தியலும் பொழில் காவலன் புகழ் விளம்பின்று*" என்னும் புறப்பொருள் வெண்பாமாலைக் கொளுவில் 'பொழில்' என்பது,

ஞாலத்தை (பூமியை)க் குறித்தது. "*ஏழுடையான் பொழில்*" என்னும், திருக்கோவைத் தொடரில், 'பொழில்' என்பது, ஞாலம் போன்ற உலகத்தைக் குறித்தது,

"*நாவலந் தண்பொழில் நண்ணார் நடுக்குற*" (மணிமே.22:26) என்னும் மணிமேகலை யடியில், '*பொழில்*' என்பது, இந்து தேயத்தைக் குறித்தது. இச் சொல் காலப்போக்கில், "*வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்*" *(தொல்.79)* என்னும் தொல்காப்பிய அடியில், தமிழ்நாட்டைக் குறித்தது.

பரத கண்டமெனப்படும் இந்து தேயம், பழங் காலத்தில் நாவல் மரத்தால், சிறப்புற்றிருந்தமையால், நாவலம் பொழில் எனப்பட்டது. ஒரு காலத்தில் குமரிமலை முதல், பனிமலை (இமயம்) வரையும், தமிழக வேந்தர் ஆட்சி செலுத்தி யமையால், தமிழகம், நாவலந்தண்பொழில் என்னும் பெயர்பெற்றது. இஃது பிற்கால வழக்காகும்.

நாவலந் தண்பொழிற்கு, மூவர் தண்பொழில் என்றும் பெயர். பிற்காலத்தில் தமிழ் வழக்கும் தமி ழாட்சியும் தெற்கே ஒடுங்கிவர; மூவர் தண்பொழில் என்பது, தென்னாட்டை அல்லது தமிழ் நாட்டை மட்டும் குறித்தது. (சொ.ஆ.பக்.17).

**நாவலந்தீவம்** *nāvalan-tīvam,* பெ. (n.) *நாவலந்தீவு* பார்க்க; see *nāvalan-tīvu.* "நாவலந்தீவம் போற்றி" (திருவாலவா.கடவு.8).

*[நாவலம் + தீவு + அம்.]*

**நாவலந்தீவு** *nāvalan-tīvu,* பெ. (n.) ஏழுதீவுகளுள் உப்புக்கடல் சூழ்ந்த தீவு; the central annular continent surrounded by the ocean of salt-water one of eḻu-tīvu, (q.v) "*நாவலந்தீ வாள்வாரே நன்கு*" (ஏலாதி.56).

*[நாவலம் + தீர்வு → தீவு = நாற்புறமும் கடலால் சூழ்ந்திருப்பது.]*

த. தீர்வு → தீவு → skt. dvipa.

நால்வலம் → நாவலம் → நாவலம் + தீவு. ஞாலநிலப்பகுதி, ஒருகாலத்தில் ஏழு தீவுகளாகப் பிரிந்திருந்தது. ஏழுதீவுகளும், ஒன்றிலொன்று தீர்ந்திருந்தமையால், தீவுகள் எனப்பட்டன. இவ்வெழு தீவுகளுள், நாவலந் தீவும் ஒன்றாகும். இத் தீவுகளைப் பற்றித் திவாகரம், பின்வருமாறு பேசும்.

"நாவலந் தீவே இறலித் தீவே
குசையின் தீவே கிரவுஞ்சத் தீவே
சான் மலித் தீவே தெங்கின் தீவே
புட்கரத் தீவே எனத்தீவேழே".

வடமொழியாளர் தீவம் என்னுந் தென் சொல்லைத் '*த்விப்*' என்று திரித்து, இருபுறமும் நீரால் சூழப்பட்டது எனப் பொருட்கரணியங்கூறுவர். தீவு என்னும் பெயர், நாவலந்தீவு, ஆப்பிரிக்காவினின்றும் பிரிந்துபோன நிலையைக் காட்டும் என்பார், தேவநேயர்.

நாவலந் தீவின் முந் நிலைகள் குறித்து மொழி ஞாயிறு வரையறுப்பது வருமாறு:

1. பனிமலையும் வடஇந்தியாவும் இல்லாத இந்தியநிலப்பகுதி; தெற்கில் முழுகிப்போன குமரிக் கண்டத்தொடு அல்லது பழம்பாண்டி நாட்டொடு கூடியது.

2. பனிமலையொடு கூடிய இந்தியாவும் பழப்பாண்டி நாடும்,

"*பஃறுளி யாற்றுடன் பன்மலை அடுக்கத்து குமரிக்கோடுங் கொடுங்கடல் கொள்ள வடதிசைக் கங்கையும் இமயமும் கொண்டு தென்றிசை யாண்ட தென்னவன் வாழி*" (சிலப்.11:19:32) என்று சிலப்பதிகாரம் கூறுவதால், பழம்பாண்டி நாடு முழுமையும் இருந்த காலத்தில், பனிமலையும் இருந்தமை அறியப்படும்.

3. பழம் பாண்டி நாடு இல்லாத இந்தியா. "*நாவலந் தீவிலிந் நங்கையை யொப்பார்*" (மணிமே,25:12.)

நாவல் மரங்களின் செறிவிடம் என்னும் பொருட்காரணமாகவே, இந்தியா "நாவலந்தீவு" என்னும் பெயர் பெற்றது. (எ.டு) "நாவல் தழீஇய நானிலம்" (திருக்கோ.19.).

"நாவலொடு பெயரிய மாபெருந் தீவத்து" (மணிமே.11:107.)

"நாவல் ஓங்கிய மாபெருந்தீவத்து" (மணிமே.2:1.).

திவாகரநிகண்டில் நாவலந்தீவு குறிக்கப்பட்டுள்ளது காண்க.

"நாவலந் தீவே.........எனத்தீவேழே" இவ்வாறு, நாவலந்தீவு, இலக்கியங்களில் பதிவு பெற்றுள்ளது.

**நாவலந்தேயம்** *nāvalan-tēyam,* பெ. (n.) 1. இந்தியா; India. 2. நாவலந்தண் பொழில் பார்க்க; see nāvalan-daṇpoḻil.

மறுவ. நாவலம்பொழில்.

*[நாவலம் + தேசம் → தேயம்.]*

(ஒ.நோ.) நேசம் → நேயம்.

தொன்முது காலத்தில், நாவல் மரங்களினால், சிறப்புற்றமையால் (இந்தியா) நாவலந்தேயம் எனப்பட்டது.

**நாவலம்புவி** *nāvalam-puvi,* பெ. (n) *நாவலந்தீவு* பார்க்க; see *nāvalantīvu.* "*நாவலம் புவிமன்னர் வந்து வணங்க*" (திவ். பெரியதி. 9,10,6).

**நாவலம்பொழில்** *nāvalam-poḻil,* பெ. (n.) *நாவலந் தண்பொழில்* பார்க்க; see *nāvalandaṇ-poḻil.*

*[நாவலம் + பொழில்,]*

நாவலம்பொழில் என்பது, நிலைத்திணையால் (தாவரத்தால்) நிறைந்து, ஒரு மாபெருஞ் சோலை போல் தோன்றியதனால், பெற்ற பெயராகும். பரதகண்ட மெனப்படும் இந்து தேயம், பழங்காலத்தில் நாவல் மரத்தாற் சிறப்புற்றிருந்தமையால், நாவலம்பொழில் எனப்பட்டது. (சொ.ஆ.பக்.17).

**நாவலர்[1]** *nā-valar,* பெ. (n.) 1. புலவர்; poets, oractors, the learned. "*செந்நாவலர் பரசும் புகழ்த் திருப்பெருந்துறை யுறைவாய்*", (திருவாச.34,1) 2. அமைச்சர்; ministers "*நாவலர் சொற் கொண்டார்க்கு நன்கலாற்றீங் குவாரா*" (சீவக.206), 3. நாவன்மையுடவர்கள்; attributed persons. "*நாவலர்கணான் மறையே*" (தேவா.297,3).

*[நா → நாவலர்=நாவன்மையுடையவர்.]*

**நாவலர்[2]** *nāvalar,* பெ. (n) சொல்வன்மையாளர், மொழிவல்லுநர்; langnage expert. "*மொழி ஞாயிறு தேவநேயபாவணர் மிகச்சிறந்த நாவலர்*" (இக்.வ.).

*[நா + வல்லவர் → வலர் – 'ல்' இடைக்குறை.]*

நாவலர். சோமசுந்தரபாரதியார், நாவலர். ந.மு.வேங்கடசாமிநாட்டார், நாவலர். செய்குத்தம்பி பாவலர், நாவலர். இரா.நெடுஞ்செழியன் எனப் பலர் பாராட்டப்பட்டனர். இரா.பி. சேதுபிள்ளை அரசியல் அறிஞர் அண்ணாவுக்கு முன்னோடியாக, மோனைநடையில் பேசும் உத்தியைத் தொடங்கியதால், நாவலர் என்னும் பொருளில், 'சொல்லின் செல்வர்' என்று அடைமொழியுடன் அழைக்கப்பட்டார்.

**நாவலர்க்காந்தம்** *nāvalar-k-kāndam,* பெ. (n.) *நாகமுக்கொற்றி* பார்க்க; see *nāga-mūkkōṟṟi.*

*[நாவலர் + காந்தம்.]*

**நாவலர்கோன்** *nāvalar.kōṉ,* பெ. (n.) *நாவலூராளி (பெரியபு.திருமலை.17)* பார்க்க; see *nāvalūrāḷi.*

மறுவ. தம்பிரான்தோழர்.

*[நாவலர் + கோன்.]*

**நாவலூராளி** *nāval-ūr-āḷi,* பெ. (n.) சுந்தரர்; the šaiva šaint šuntarar, a native of nāvalūr, "*நாவலூராளி நம்பி வன்றொண்டன்*" (தேவா. 942,10).

மறுவ. நம்பியாரூரர்.

*[நாவல் + ஊர் + ஆள் + இ.]*

இ=விகுதிமேல்விகுதி.

ஒ.நோ. அவர் + கள்.

திருநாவலூரில் தோன்றியவர். நாவலூர் இறைவனை உடைமையாகவும், தோழனாகவும், வாழ்க்கையில் ஏற்று, வாழ்ந்து காட்டியவர்.

**நாவலோ** *nāvalō,* பெ. (n.) *நாவலோ நாவல்(நன்.101,உரை)* பார்க்க; see *nāvalō-nāval.*

*[நாவல் →நாவலோ.]*

**நாவலோநாவல்** *nāvalō-nāval,* பெ. (n.) *நாவல்,5,6,* பார்க்க; see *nāval,5,6.* "*நாவலோ நாவலென நாடிய முறையிட்ட*" (ஏரெழு.59).

*[நாவல் →நாவலோ + நாவல்.]*

**நாவழற்சி** *nā-v-aḻaṟci,* பெ. (n.) நாக்கு வெந்து போகை; inflammation of the tongue.

*[நா + அழற்சி.]*

**நாவழிக்கை** *nā-vaḻikkai,* பெ. (n.) நாக்கைத் தூய்மைப் படுத்துகை; cleaning the tongue by scraping.

*[நா + வழிக்கை.]*

**நாவழி[1]-த்தல்** *nā-vaḻi-,* செ.குன்றாவி. (v.t) நாக்கின் அழுக்கிசைச் சுறண்டுதல்; to clean the torgue by scraple.

*[நா + வழி-.]*

**நாவழி[2]** *nā-vaḻi,* பெ. (n.) நாக்குவழிக்குங் கருவி; tongue scraper. "*பொன்னா வழியாற் புகழ் நாவழித்து*" (சீவக.3045).

*[நா[2] + வழி.]*

**நாவழுக்கல்** *nā-vaḻukkal,* பெ. (n) 1. நாக்கில் மாசு படருதல்; tongue being covered with a coat of pale matter. 2. நாக்குத் தவறுகை (சா.அக.); slip of the tongue

*[நா + வழுக்கல்.]*

**நாவழுக்கு** *nā-vaḻukku,* பெ. (n.) நாக்கின்மேல் பகுதியில் படரும் வெள்ளை அல்லது மஞ்சள் நிறமான மாவைப் போன்ற, அழுக்கு; the whitish or yellowish layer or coating on the surface of the tongue

*[நா + அழுக்கு.]*

**நாவழுவழுத்தல்** *nā-vaḻu-vaḻuttal,* பெ. (n.) நாக்கில் சளிச்சவ்வு படர்ந்திருத்தல்; a feeling of the tongue from mucous.

*[நா + வழுவழுத்தல்.]*

**நாவளநோக்கு** *nāvaḷa-nōkku,* பெ. (n.) மறு; mole.

**மறுவ.** மச்சம்.

**நாவற்பொழில்** *nāvaṟ-poḻil,* பெ. (n) *நாவலந்தீவு* பார்க்க; see *nāvalandīvu* "*பூமலி நாவற் பொழிலகத்து*" (பு.வெ.9.38).

*[நாவல் + பொழில்.]*

**நாவறட்சிக்கசாயம்** *nāvaṟaṭci-k-kašāyam,* பெ. (n) நிலவேம்பு, வசம்பு, மிளகு, கருஞ்சீரகம், ஓமம் முதலான கடைச் சரக்குகளால், உருவாக்கப்படும் கருக்குநீர்; the above drugs are slightly fried and decoction is prepared as per rules

*[நாவறட்சி + skt. கசாயம்.]*

இக் கருக்குநீர் மிகுகாய்ச்சலைத் தணிக்கும். நாவறட்சியைப் போக்கும் என்று, சா.அக. கூறும்.

**நாவறட்சிக்காய்ச்சல்** *nāvaṟaṭci-k-kāyccal,* பெ. (n.) நாவை வறளச்செய்யும் நச்சுக் காய்ச்சல்; a kind of malarial fever, marked by dryness of tongue

*[நாவறட்சி + காய்ச்சல்.]*

மிகு நீர்வேட்கையை உருவாக்கும் காய்ச்சல்.

**நாவறட்சி** *nā-vaṟaṭci,* பெ. (n.) நீர்வேட்கை; thirst, as causing dryness of the tongue.

**மறுவ.** நாக்குலர்வு.

*[நா[2]+ வறட்சி.]*

**நாவறளுகை** *nā-vaṟaḷugai,* பெ. (n.) நீர்வேட்கையால் நா காய்தல்; feeling thirsty from dryness of the tongue.

*[நா + வறளுகை.]*

**நாவறளை** *nā-varaḷai,* பெ. (n.) *நாப்புற்று* பார்க்க; see *nāppuṟṟu.*

*[நா வறள் → நாவறளை.]*

**நாவன்மை** *nā-vaṉmai,* பெ. (n.) 1. பேச்சாற்றல்; power of speech; eloquence. தங்களது நாவன்மையினால் மக்களைக் கவர்ந்தவர்கள் பலர் (இக்.வ.). 2. *நாநலம்* பார்க்க; see *nā-nalam.*

*[நா + வன்மை.]*

**நாவாசித்தி**[1] *nāvā-šitti,* பெ. (n.) *நாவூறு (யாழ்.அக.)* பார்க்க; see *nā-v-ūṟu.*

[*நா + ஆசித்தி.*]

**நாவாசித்தி**[2] *nāvā-šitti,* பெ. (n.) *நாவாய்ச்சித்தி (யாழ்.அக.)* பார்க்க; see *nāvāy-c-citti.*

**நாவாசீகம்** *nāvā-šīgam,* பெ. (n.) சிற்றொடுவை மரம்; a kind of medicinal tree.

**நாவாஞ்சகம்** *nāvāñjagam,* பெ. (n.) சிறுகாடை; common quail.

**நாவாதி** *nāvādi,* பெ. (n.) *அக்கமணி* பார்க்க; see *akkamaṇi.* downy-nerved olive linden.

**நாவாய்**[1] *nāvāy,* பெ. (n.) உள்ளீடற்ற கதிர் (இ.வ.); blighted grain.

*[நா + வாய்.]*

**நாவாய்**[2] *nāvāy,* பெ. (n.) 1. மரக்கலம்; vessel, ship "*முந்நீர் வழங்கு நாவாய் போலவும்*" (புறநா.13); 2. *நாவாய்ப்பறை* பார்க்க; see *nāvāy-p-paṟai* "*பறை நாவாய்*" (இலக்.வி.392,உரை)

**த.** → நாவாய் → **வ.** நௌ.

நாவுதல் = கொழித்தல். நாவு → நாவாய்.

கடல் நீரைக் கொழித்துச் செல்லும் பெருங்கலம்.

"வானி யைந்த விருமுந்நீர்ப்

பேஎநிலைஇய விரும் பௌவத்துக்

கொடும்புணரி விலங்கு போழக்

கடுங்காலொடு கரைசேர

நெடுங்கொடி மிசை யிதையெடுத்

தின்னிசைய முரசமுழங்கப்

பொன்மலிந்த விழுப்பண்ட

மாடியற் பெருநாவாய் நாடார நன்கிழி தரு

மழைமுற்றிய மலைபுரையத்

துறைமுற்றிய துளங்கிருக்கைத்

தெண்கடற் குண்டகழிச்

சீர்சான்ற வுயர்நெல்லி

னூர் கொண்ட வுயர்கொற்றவ"

என்று, (மதுரைக்.75–88). தலையாலங் கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் மீது, அவன் முன்னோருள் ஒருவன். சாலி(சாவக)த் தீவைக் கைப்பற்றியமை ஏற்றிக் கூறப்பட்டிருத்தல் காண்க. (வட.மொ.வ.20).

வேத ஆரியர், கடலையும் கப்பலையும் கண்டறியாது நிலவழியாக இந்தியாவிற்கு வந்தவர். சிந்தாற்றில் இயங்கிய படகுகளைப் பற்றித்தான், அவர்க்குத் தெரியும். அதனால் வடநாட்டில் வழங்கிய நௌ என்னும் சொல்லாற், படகையே முதலிற் குறித்தனர். வடவர் காட்டும் வேடிக்கையான சொன்மூலம் வருமாறு:

1. நௌ = வாச்(c)–(நிருக்த,1,11). வாச்= பேச்சு, மொழி, குரல், ஒலி. 2. நு[4] = பராவு(praise) தெய்வத்தைப் பராவும் மன்றாட்டு (prayer) வானு லகிற்குச் செலுத்துகின்ற காலமாக இருக்கின்றது.

"2. nau = vāe, nir.i.ll (either because prayer is a vessel leading to heaven or fr.4.nu, to praise)" மா.வி.அ.ப.571.

த. நாவாய் → L navis = ship.OF navie = fleet
நாவாய் → E Navy = a fleet

**நாவாய்க்குழி** *nāvāy-k-kuḻi,* பெ. (n) அல்குலின் இதழ்கள் விரியும் இடத்தினுள்ளே, உட்புறமாய் அமைந்தகுழி; a groove of furrow seen on separating the labia between their inferior extremities or cavity behind the vaginal aperture.

[*நாவாய் + குழி.*]

**நாவாய்ச்சித்தி** *nā-vāy-c-citti,* பெ. (n.) வாக்குச்செல்வாக்கு (வின்.); influence superstitiously attributed to the words of some persons.

[*நா² + வாய் + சித்தி.*]

**நாவாய்ப்படி** *nāvāy-p-paḍi,* பெ. (n.) மேல்மதகுக்கட்டை சொருகும் துளை; inesrting hole for sluice.

[*நாவாய் + படி.*]

**நாவாய்ப்பறை** *nāvāy-p-paṟai,* பெ. (n.) நெய்தனிலப்பறை (இறை,1,பக்,17); drum used in neydal tract.

[*நாவாய் + பறை.*]

**நாவாயெலும்பு** *nāvā-y-elumbu,* பெ. (n) கைக்குழைச்சின் (மணிக்கட்டின்) மேல்வரிசை யெலும்புகளில் ஒன்று; one of the bones in the proximal row of wrist.

[*நாவாய் + எலும்பு.*]

**நாவாள்** *nāvāḷ,* பெ. (n.) நாமகள் (வின்.); Kalai-magaḷ, "*நாவாளுடனீ யென நான்முகனே*" (சேதுபு.சிவதீர்.46).

**மறுவ.** கலைமகள்.

[*நா + ஆள்.*]

நாவாகிய வாள் = [*நா + வாள்.*]

**நாவி¹** *nāvi,* பெ. (n) 1. கத்தூரி மான்; musk-deer 2. புனுகுப்பூனை; civet-cat 3. பச்சைக்கருப்பூரம்; crude camphor. 4. கருநாவி; blackaconite. 5. சவ்வாது; zibet.

[*நவ்வி → நவி → நாவி.*]

**நாவி²** *nāvi,* பெ. (n.) 1. பச்சைநாவி (பதார்த்த.1054); indian aconite, Aconitum ferox. 2. *ஊமத்தை (மலை.)* பார்க்க; see *ūmattai,* trumpet-flower nightshade 3. நச்சுவேர்; aconite root

[நவ்வி → நாவி.]

பச்சை நாவி என்று அழைக்கப்படுகின்ற இச் செடியானது, பச்சையாய் தென்படுவது குறைவு. காரணம், இவை பனிமலையிலும் (இமயம்) அதன் சுற்றுப்புறங்களிலும், அதிகம் தென்படும். இச் செடியின் மேல்தண்டு 2–3 அடி உயரம் வரை நேராக வளரும். இதன் வேர்க்கிழங்கு 4 விரலம் நீளமும், வெளிப்புறம் சிறிது கருப்பாகவும், உடபுறம் வெண்மையாயு மிருக்கும். பூக்கள் நீலநிறமும் வெண்மையும் கலந்து, நீண்டும் காணப்படும். வேர்க்கிழங்கு 3–4 விரலம் நீளமும், 1–2 விரலம் பருமையுங் கொண்டது. இவ் வேரினைச் சூரணமாக்கி, தேள்கடி, பாம்புக்கடி போன்ற நச்சுக்கடிகளுக்கு தேறலில் (மதுவில்) கலந்து கடிபட்ட இடத்தில் தடவ, நச்சுத்தன்மை நீங்கும். உடலின் வெப்பத்தை தணிப்பதற்கும், பச்சை நாவியைப் பயன்படுத்துவர். இவ் வேரானது நச்சுத்தன்மை கொண்டது. 10 ஆண்டுகள் வைத்திருந்தாலும்,

நச்சுத்தன்மை நீங்காத்தன்மைத்து எனவே, இதைத் தனி ஒரு மருந்தாகப் பயன்படுத்தக் கூடாது. மற்ற கடைச்சரக்குகளுடன் சேர்த்து வயிற்றுப்போக்கு, முறைச்சுரம், பல்வலி தலைநோய், செரிமானமின்மை, பசியின்மை, மூளைக்கோளாறு, இருமல், ஈளை, தொண்டைக்கட்டு போன்ற நோய்களுக்கு மருந்தாகக் கொடுக்க, மேற்சொன்ன நோய்கள் அகலுமென்று, சா.அக. கூறுகின்றது. நாவி வகைகள்பற்றிச், சா.அக. கூறுவது வருமாறு:–

1. அந்தணநாவி.
2. அரசநாவி.
3. கருநாவி.
4. சீமைநாவி.
5. செந்நாவி.
6. பச்சைநாவி.
7. வெண்ணாவி.

**நாவி³** *nāvi.* பெ. (n.) *நாவாய்², 1.* பார்க்க; see *nāvāy², 1.* "*வங்க நாவியி னதன்வடக் கிழிந்து*" (மணிமே.26,85).

நாவாய் → நாவி.

**நாவிக்கிழங்கு** *nāvi-k-kiḻangu,* n கிழங்கு வகையுள்ஒன்று (சா.அக.); green aconite root - Aconitam ferox

**மறுவ.** கலப்பைக்கிழங்கு.

[*நாவி + கிழங்கு.*]

**நாவிக்குழம்பு** *nāvi-k-kuḻambu,* பெ. (n.) புனுகு; civet. '*நாவிக்குழம்புறீஇ*' (சீவக.2692)

[*நாவி + குழம்பு.*]

**நாவிகன்** *nāvigaṉ,* பெ. (n.) கப்பற்காரன்; mariner.

[*நாவி → நாவிகன்.*]

**நாவிகாக்கிழங்கு** *nāvigā-k-kiḻangu,* பெ. (n.) *நாவிக்கிழங்கு* பார்க்க; see *nāvi-k-kiḻangu.*

**நாவிகாக்குவளை** *nāvigā-k-kuvaḷai,* பெ. (n.) செங்குவளை; red water-lily

**நாவிகாச்சங்கு** *nāviga-c-cangu,* பெ. (n.) பீச்சங்கு; fetid smooth volkameria.

**நாவிச்சட்டம்** *nāvi-c-caṭṭam,* பெ. (n.) **1.** மான்மணத்திச் சட்டம்; the scrotum of the musk-deer, whence musk is taken **2.** புனுகுச்சட்டம்; ventricle or sack in the civet cat in which civet is generated **3.** சவ்வாது; புனுகுப்பூனை; zibet.

[*நாவி + சட்டம்.*]

**நாவிச்சூலை** *nāvi-c-cūlai,* பெ. (n.) சூலைநோய்வகையு ளொன்று. இஃது வசநாவியினால் ஏற்படுவது; a kind of severe colicky pain in the abdomen arising from taking aconit internally (சா.அக.).

[*நாவி + சூலை.*]

**நாவிடம்** *nāviḍam,* பெ. (n.) **1.** உடம்பின் நரம்பு; nerves in the body **2.** நாக்கின் அமைப்பு; the nature of the tongue. **3.** தெறுமொழி, வசைமொழி (சாபம்); curse.

[*நா + இடம் → நாவிடம்.*]

**நாவித்தண்டை** *nāvi-t-taṇḍai,* பெ. (n.) **1.** *வெதுப்படக்கி (மலை.)* பார்க்க; see *veduppaḍakki.* **2.** எருமுட்டை (சங்.அக.); dried dung-cake. **3.** பீநாறிச்செடி; stinging plant

[நாவி + தண்டை.]

**நாவிதன்**[1] *nāvidaṉ,* பெ. (n.) **1.** ***கார்த்திகை*** பார்க்க; see *kārttigai,* **2.** பூரநாள்; the 11th naksatra, part of leo.

**நாவிதன்**[2] *nāvidaṉ,* பெ. (n.) மயிர் திருத்துவோன்; barber. "சாபத்தி னாவித னாயினான்" (சீவக,2491.).

[நாவிசன் → நாவிதன்.]

**நாவிநெய்**[1] *nāvi-ney,* பெ. (n.) **1.** மயிர்ச்சாந்து; a perfumed pungent. **2.** நாவிக்கிழங்கினின்று வடிக்கும் பச்சை வண்ண எண்ணெய்; a bright green oil extracted from aconite root.

[*நாவி + நெய்.*]

**நாவிநெய்**[2] *nāvi-ney,* பெ. (n.) புனுகு; civet

[*நாவி + நெய்.*]

**நாவிப்பிள்ளை** *nāvi-p-piḷḷai,* பெ. (n.) கத்தூரி மான் குட்டி (தொல்.பொருள்.562,உரை); fawn of the musk-deer.

[*நாவி + பிள்ளை.*]

**நாவிப்புருதி** *nāvi-p-purudi,* பெ. (n )நாக்கில் எழும்பும் கட்டி; abscess of the tongue.

**மறுவ.** நாப்புற்று.

**நாவிப்புழுகு** *nāvi-p-puḻugu,* பெ. (n.) புனுகு (யாழ்ப்.); civet

[*நாவி + புழுகு.*]

**நாவிப்பூனை** *nāvi-p-pūṉai,* பெ. (n.) **1.** கத்தூரிமான்; musk-deer **2.** புனுகுச் சட்டம்; civet cat. **3.** சவ்வாதுபூனை; zibet cat.

[*நாவி + பூனை.*]

**நாவிமிருகம்** *nāvi-mirugam,* பெ. (n.) ***நாவிப்பூனை*** பார்க்க; see *nāvi-p-pūṉai.*

[*நாவு + skt. மிருகம்.*]

**நாவியப்பூ** *nāviya-p-pū,* பெ. (n.) கார்த்திகைப்பூ; november flower.

[நாவியம் → நாவியப்பூ.]

**நாவியம்** *nāviyam,* பெ. (n.) ***காந்தள்*** பார்க்க; see *kāndaḷ,* malabar glory-lily

[*நாவு → நாவயிம்.*]

**நாவில்லாவலரி** *nā-v-illā-v-alari,* பெ. (n.) ஈழத்தலரி; pagoda tree(L.)

[*நா + இல்லா + அலரி.*]

**நாவில்லான்** *nāvillāṉ,* பெ. (n ) **1.** நாக்கு இல்லாதவன்; a person without a tongue. **2.** ஊமை; dumbness.

[*நா + இல்லான்.*]

**நாவிலட்சரம்** *nāvilaṭcaram,* பெ. (n.) ***நாவட்சரம்*** பார்க்க; see *nāvaṭcaram.*

**நாவிலரணை** *nāvilaraṇai,* பெ. (n.) ***நாவரணை*** பார்க்க; see *nāvaraṇai.*

**நாவிலை** *nā-v-ilai,* பெ. (n.) வெற்றிலை; betel leaf.

[*நா + இலை.*]

**நாவிழுப்பு** *nāviḻuppu.* பெ. (n.) நாக்கு உள்ளே இழுத்துக்கொள்ளுகை; with drawal of the tongue there by rendering in capable of utterance

[*நா + இழுப்பு.*]

**நாவின்கிழத்தி** *nāviṉ-kiḻatti,* பெ. (n) நாமகள்; Nāmagaḷ, goddess of learning "*நாவின் கிழத்தி யுறைதலால்*" (நாலடி.252).

மறுவ. கலைமகள்.

[*நாவின் + கிழத்தி.*]

**நாவின்மா** *nāviṉ-mā,* பெ. (n) *நாவழுக்கு* பார்க்க; see *nāvaḻukku.*

[*நாவின் + மா.*]

**நாவின்முடிச்சு** *nāviṉ-muḍiccu,* பெ. (n) நா பேசமுடியாதபடி, நாக்கின் அடியிலுள்ள முடிச்சு; tongue

**நாவினார்** *nāviṉār* பெ. (n.) நாவலர்; poet "*முந்திய நாவினார்*" (கம்பரா.பாயி.).

[*நாவின் → நாவினார்.*]

**நாவீங்கித்தொங்கல்** *nā-vīṅgi-t-toṅgal.* பெ. (n.) நாக்கில் தோன்றும் நோய்வகை; a kind of tongue disease

**நாவு¹-தல்** *nāvu-* 5 செ.கு.வி. (v.t.) 1. கொழித்தல் (நெல்லை); to winnow and clear grain from stones 2. நா வளைத்தல் (யாழ்.அக.); to thrust out the tongue and move it sideways, 3. நாவாற் குறிகாட்டி ஏளனஞ் செய்தல் (வின்.), to mock by thrusting out the tongue

[*நா → நாவு → நாவு-. = கொழித்தல்.*]

**நாவு²** *nāvu,* பெ. (n) நாக்கு; tongue

[*நா → நாவு.*]

**நாவுக்கரசு** *nāvukkarašu,* பெ.(n) 1. திருநாவுக்கரசு நாயனார்; a canonised Saiva Saint 7th.c). 2. நாவால் (பேச்சாற்றலால்) புகழ் பெற்றோர்; superstitiously attributed to speak of some person

[*நாவுக்கு + அரசு.*]

"கு" நான்காம் வேற்றுமை. கொடைப்பொருள் குறித்த ஈறு.

மறுவ. அப்பர், தாண்டகவேந்தர்; மருணீக்கியார்; தருமசேனர்; வாகீசர்.

திருநின்றசெம்மை என்ற பெயரில், திருத்தொண்டு நெறியைக் கொள்கையுமாகவும், செயல்முறைப் பட்டிகையாகவும், அமைத்தவர். அப்பர் பெருமான். மகேந்திரபல்லவன் காலத்தவர். ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். செயற்பாட்டு நிலையில் அமைந்த வரலாற்று வாழ்வியல் நிகழ்வுகளைக் கொண்டவர். குமுகாயத்தில் நிகழும் சமயமாற்றத்தின் சூழல்களையும், காரணங்களையும் ஆய்ந்து விளக்கியவர்; திருஞானசம்பந்தரின் சமகாலத்தில் வாழ்ந்து, அவருடன் இணைந்து தொண்டு செய்தவர். தீர்திறனைத் திறம்பட எடுத்தியம்பியவர். சைவசமயத்துக்குப் பல வகையான அரண்களை அமைத்துக் காத்தவர். திருநாவுக்கரசரைச் செயற்படுத்திய திலகவதியார், திருத்தொண்டு நெறியினுக்குக் கட்டளைக் கல்லாக அமைந்தவர். திலகவதியார், திருநாவுக்கரசருடன் தோன்றி, மிகு சூலைநோயால் நலிவுற்ற ஞான்று, திருவாலவாயன் திருநீறு தந்து, நாவுக்கரசரை ஆற்றுப்படுத்தித், தொன்முதுச் செந்நெறியாம் சைவத்திருநெறி, நானிலத்தில் ஓங்கி வளரச்

பன்னிரு திருமுறைகளுள் திருநாவுக்கரசர் அருளியவை:—

1. நான்காம் திருமுற்ற—113 பதிகங்கள். 1069 பாட்டுக்கள்.

2. ஐந்தாம் திருமுறை—100 பதிகங்கள். 1015 பாட்டுக்கள்.

3. ஆறாம் திருமுறை—99 பதிகங்கள். 980 பாட்டுக்கள்.

மொத்தப்பதிகங்கள் = 312.

மொத்தப்பாட்டுக்கள் = 3064.

நான்காம் திருமுறை முழுவதும், பண்முறையின் அடிப்படையில், அருளப் பெற்றவை.

ஐந்தாம் திருமுறை முழுவதும், குறுந்தொகை என்னும் யாப்புமுறையில் அமைந்தவை. "திருக்குறுந் தொகை'' என்பது பொதுப்பெயர். குறுகிய அமைப்புடைய பாடல்களைக் கொண்டது.

ஆறாந்திருமுறை முழுவதும், திருநாவுக்கரசரால் முதன்முதலாக, மூல இலக்கியமாகப் பாடப்பெற்றவை. தாண்டகயாப்பு முறையில் அமைந்தவை. இலக்கிய உலகில், "தாண்டகவேந்தர்" என்னும் சிறப்புப்பெயரைப் பெற்றுத்தந்தவை. அப்பர் பெருமான் பாடிய தாண்டகப்பாக்களே, எண்சீர் விருத்தப்பாக் களுக்கு முன்னோடி எனலாம். நம்பியாண்டார் நம்பி பாடிய "*திருநாவுக்கரசு தேவர் திரு ஏகாதச மாலை*" யில் உள்ள பதினொரு பாடல்களும், திருத்தொண்டர் திருவந்தாதியில் வரும், 24, 25 ஆம் எண்களுள்ள திருப்பாடல்களும், அப்பர்தம் வரலாற்றினை எடுத்தியம்புகின்றன, எனலாம்.

திருநாவுக்கரசர் தம் வாழ்வியல் நிகழ்வுகளை, நெஞ்சில் நிலைநிறுத்தீக் காட்டும், நம்பியாண்டார் நம்பிகள் பாடிய திருத்தொண்டர் திருவந்தாதிப் பாடல் வருமாறு:—

"*மணியினை மாமறைக் காட்டு மருந்தினை*
*வண்மொழியால்*
*திணியன நீள்கதவந் திறப்பித்தன*
*தெண்கடலிற்*
*பிணியன கன்மிதப்பித்தன*
*சைவப்பெருநெறிக்கே*
*அணியன நாவுக்கரையர் பிரான்றன்*
*அருந்தமிழே*"

மேற்குறித்த பாடலின், வரலாற்றுண்மையை தெளிவுறுத்தும், நாவுக்கரசர்தம் பாடல் வரிகள்:—

"*கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்*
*நற்றுணையாவது நமச்சிவாயவே*"

நம்பியாரூரர், நாவுக்கரசரைப் பற்றி நவில்வது:—

"*திருநின்ற செம்மையே செம்மையாக்கொண்ட திருநாவுக்கரசர்*".

தொன்முதுச் செந்நெறியாம் சைவநெறி ஞாலந்தழீஇய பொதுமைத் தொண்டுநெறி என்பதைத் தம் வாழ்வியல் நிகழ்வுகள் வாயிலாக, வையத்தார்க்கு உணர்த்திய பெருமை, நாவுக்கரசரையே சாரும். இதனாற்றான் சேக்கிழார் பெருமான்,

''திருநாவுக்கரசு வளர் திருத்தொண்டின் நெறிவாழ வருஞானத் தவமுனிவர் வாகீசர்" என்று விதந்து போற்றுகின்றார்.

வாய்மை வாழ்வினையே, தமது வாழ்வியல் பேரறமாகக் கொண்டு ஒழுகியவர், நாவுக்கரசர். வாய்மையாக வாழ்பவர்க்கு அச்சவுணர்வு, அணுவளவும் இருக்காது. வாய்மையெனும் உயர்தனிப் பேரறத்தில், தம்வாழ்வை அமைத்துக்கொண்டவர்.

"நாவுக்கரசு" பெயர்க்கரணியம் பற்றி:—

"*சொல்லுக்கு உறுதி அப்பரெனச் சொல்*" என்னும் சொற்றொடருக்கு, ஏற்றவண்ணம் நாவுக்கரசர் பாடிய நற்றமிழ்ச் செய்யுட்கள் நின்றிலங்குகின்றன. நாவுக்கரசர்தம் சொற்களில் பொதிந்துள்ள வாழ்வியல் மெய்மை, செம்மை போன்றவற்றை விரிக்கின், பெருகும். இலக்கிய உலகில், திருநெறிய தமிழைக் கட்டிக்காத்த தமி ழாளியாகத் திகழ்கிறார். தாண்டகப் பாக்களை, இலக்கியவுலகில் முதற்கண் எடுத்தாண்டார். காய்ச்சீர் இரண்டும், மாச்சீர் இரண்டும், கலந்தமைத்துப் பாடல்கள் பாடியபெருமை, இவருக்கு உண்டு. நாவுக்கரசு என்னும் அருட்பெயர், இலக்கியஉலகில், நயப்புற மன்னுதற்கு, எடுத்துக் காட்டாக, இவர் பாடிய மறுமாற்றத் திருத்தாண்டகம் திகழ்கிறது. அருளாளர்தம் குறைதீர்க்கும் தாண்டகமாகத் திகழ்ந்த இப் பாடல்களே, எண்சீர்மண்டலப் பாக்களுக்கு முன்னோடி எனலாம்.

(எ.கா.)

''நாமார்க்குங் குடியல்லோம் நமனை அஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம், நடலையில்லோம்,
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லோம்
இன்பமே எந்நாளும் துன்பமில்லை,
தாமார்க்குங் குடியல்லாத் தன்மையான
சங்கரன் நற்சங்க வெண்குழையோர்காதிற்
கோமாற்கே நாமென்றும் மீளை ஆளாய்க்
கொய்மலர்ச் சேவடியினையே குறுகினோமே."

திருக்குறுந்தொகை: திருநேரிசை என்னும் யாப்புமுறையில் அமைந்த நாவுக்கரசர்தம் பாடல்கள் அனைத்தும் பண்ணோடு அமைந்த, பைந்தமிழ்ப் பாக்களாகத் திகழ்கின்றன.

"*தமிழோடு இசைபாடல் மறந்தறியேன்*" என்ற இவர்தம் இசைப்பாடல் எல்லோர் நெஞ்சிலும் நின்று நிலவும் நற்றமிழ்ப் பாடலாகும்.

நான்காம், ஐந்தாம், ஆறாந்திருமுறையில் அமைந்துள்ள அனைத்துப் பாக்களும், நாவுக்கரசரின் திருநின்ற செம்மை, மெய்மை போன்ற வாழ்வியல் கொள்கைகளை விளக்குவதோடு மட்டுமல்லாமல், இவர்தம் பெயர்க்கரணியத்தை நிலைநிறுத்தும் நற்சான்றாகவும் மிளிர்கின்றன.

நாவுக்கரசு என்னும் பெயர் விளக்கிக்காட்டும் வாழ்வியல் அடிப்படைக் கொள்கைகள் இரண்டு.

நாவுக்கரசு என்னும் பெயர்ச்சிறப்பினை, தமது வாழ்வியலின் வாயிலாகவே விளக்குகிறார், அப்பர்.

1. சிவன் எனச்சொல்லும் நாக்குடையவர், தம்மை ஆளும் அரசு எனக்கொண்டு, அடிமை பேணுதல்.

(எ.டு) "*செம்பவளத் திருமேனிச் சிவனே என்னும் நாவுடையார் நமையாள உடையார் அன்றே*" (மறுமாற்றத்திருத்தாண்டகம்–6ஆம் பாட்டு)

2. சிவத்தின் பெருமையே, பேசுமாறு தம்முடைய நாக்கை முதற்கண் செயற்படுத்துதல். பின்னர், அந் நாக்கையும் தமக்கு "*அரசு*" எனக்கருதி, அதற்குப் பணி செய்தல். இவ் வருள் நிகழ்வில் "*நாநமக்கு அரசு*" என்ற பொருண்மை நெஞ்சகத்தே தோன்றும். இந் நிலையில், இறைவனது பொற்பினை அல்லது பொருள்சேர் புகழினை, நாவுக்கரசு நவில்வது வருமாறு:–

"*நிற்பனவும்........நடப்பனவும் ஆகின்ற தன்மையனை நன்மையோடும் பொற்புடைய பேசக் கடவோம்; பெயர் பேசுவன பேசுதுமோ பிழையற்றோமே*" (மறுமாற்றத்திருத்தாண்டகம்.7.).

நாவுக்கரசர்தம் திருஅங்கமாலைப் பதிகமானது நா நமக்கு அரசு என்ற அடிப்படையில், நாக்கினால் அவன் பொற்பினைப் பேசுதலும், அவ்வாறு பேசுவோர்க்கு அடிமைத்திறம் பூணுதலுமாகிய இருவகைச் செயற்பாடுகளை, விளக்கும் பதிகமாக அமைந்துள்ளது.

உயிரினுள் சிவம் நின்ற நிலையும், உடம்பினுள் சிவம் நின்ற நிலையும் விளக்கிக்காட்டும், திருவருள் நலஞ்செறிந்த பாக்கள், நாவுக்கரசுதம் நற்றமிழ் பாக்கள் எனில் மிகையன்று.

அப்பருடைய வாழ்வியல் நிகழ்வுகள் அனைத்திலும், நாநலம் நன்கு மிளிரும் வண்ணம் நாவுக்கரசு என்னும் பெயர் நயப்புற மன்னும் வண்ணம், திருநெறியத் தேவாரத் திருப்பாக்கள் திகழ்கின்றன எனலாம்.

*நாடாளும் மன்னனுக்கும், உயிரைவவ்வும் நமனுக்கும் அஞ்சார்.*

இப் பொருண்மை பொதிந்த நாவுக்கரசர்தம் வாழ்வியலில் இணைந்த தேவாரத் திருப்பதிகவரி வருமாறு:–

"*நம்ஆர்க்கும் குடி அல்லோம் நமனை அஞ்சோம்*" இவ்வஞ்சாமைக்கெல்லாம் அடிப்படையாயிருப்பது, வாய்மையென்னும் வாழ்வியல் கொள்கையே, இக் கருத்தினை வள்ளுவப் பேராசான்.

"*உள்ளத்தால் பொய்யா தொழுகின்*" என்றும், "*மனத்தொடு வாய்மை மொழியின்*" என்றும், "*சான்றோர்க்குப் பொய்யாவிளக்கே விளக்கு*" என்றும், முடிவாக முத்தாய்ப்பு வைத்தாற் போல், "*யாம்மெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும் வாய்மையின் நல்லபிற*" (குறள்,300.). என்று மொழிந்தவற்றை நோக்குக; இவ்வாக்கினுக்கு மேலும் வலுவூட்டும் வண்ணம், வாய்மைப் பேறத்தை மனத்தகத்தில் பதிக்கும் பான்மையில் நாவுக்கரசர் நவில்வது:–

"*மெய்மையாம் உழவைச் செய்து விருப்பெனும் வித்தை வித்திப்*

*பொய்மையாம் களையை வாங்கிப் பொறையெனும் நீரைப் பாய்ச்சித்*

*தம்மையும் நோக்கிக் கண்டு தகவு எனும் வேலியிட்டுச்*

*செம்மையுள் நிற்பராயின் சிவகதி விளையுமன்றே*" (தேவா.4:76:2)

இப் பாடலானது வாய்மை, செம்மை இவற்றின் அடிப்படையில் வாழ்ந்த அப்பர் பெருமானின் அருளியல் வாழ்வினை, ஞாலத்தார்க்கு நெஞ்சில் நிலைநிறுத்தும் பான்மையில் அமைந்துள்ளது என்று தெளியலாம்.

அன்பர் பணி செய்வதற்கே தம்மை இறைவன் படைத்தான் என்பது நாவுக்கரசர் தம் வாழ்வியற்கொள்கை. தோன்றாத் துணையாய் அங்கிங்கெனாதபடி எஞ்ஞான்றும், நீக்கமற நிறைந்துள்ள பரம்பொருளை, நானிலத்தார் அனைவரும் தத்தம் நெஞ்சிற் கண்டு களிக்க வேண்டும் என்பதே நாவுக்கரசர்தம் எண்ணமாகும். மனம் செம்மையாகத் திகழ்ந்தால், உண்மையாம் பரம்பொருள் ஒளிரும் என்பது, திருநாவுக்கரசர் தம்திருவாக்கு. (எ.கா.) "*பனைக்கை மும்மத வேழம்உரித்தவன் நினைப்பவர் மனம் கோயிலாக் கொண்டவன்*".

ஆகையால் அனைவருக்கும் எல்லாம்வல்ல இறைவனை தத்தம் நெஞ்சில் நிலைபெறச் செய்தால் தீதொன்றும் நம்மைத் தீண்டாது. மாண்பு பலபெற்று நல்லவண்ணம் வாழலாம். ஞாலத்தார் ஆற்றவேண்டிய அரும்பணி மாதொரு பாகனை மனத்திலிறுத்துவதே. ஒன்றியிருந்து நினைப்பதேயாகும். "*ஒன்றியிருந்து நினை மின்கள் உந்தமக்கு ஊன மில்லை*" என்னும் திருப்பாட்டில், இக்கருத்தினை நிலைநிறுத்து கின்றார்.

நாவுக்கரசர் மன்பதைவாழ் மாந்தர்தம் மனத்தில் மலரும், அனைத்து உறவுகளிலும், பரம்பொருளைப், பார்த்தார், இந் நற்கருத்தினைத் தெரிவிக்கும், நாவுக்கரசர்தம் பாடல்:—

"அப்பன்நீ! அம்மைநீ! ஐயனும்நீ, அன்புடைய
மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ
ஒருகுலமுஞ் சுற்றமும் ஒரூரும் நீ
துய்ப்பனவும் உய்ப்பனவும் தோற்றுவாய் நீ
துணையாய் என் நெஞ்சத்துஉறப்பிப்பாய் நீ
இப்பொன் நீ இம்மணி நீ இம்முத்து
இறைவன் நீ ஏனூர்ந்த செல்வன் நீயே!"

குமுதாயத்தின் அனைத்துக் கூறுகளிலும், அம்மையப்பனைக் கண்டு களிக்கின்றார்.

வீணாகச் சாத்திரமும், குலமும் கோத்திரமும் பேசி, உள்ளத்தில் உறைகின்ற உத்தமனை உணராது ஆடம்பரமாக ஆற்றும் ஆரவாரச் செயல்கள் எல்லாம், பாழ்பட்டவையென்று பறைசாற்றுகின்றார்.

"*சாத்திரம் பலபேசுஞ் சழக்கர்காள் கோத்திரமும் குலமுங் கொண்டு என்செய்வீர் பாத்திரம்சிவமென்று பணிதிரேல்*

*மாத்திரைக்குள் அருளுமாற்பேறரே.*"

"*அச்சமில்லை நெஞ்சே அரன் நாமங்கள் நிச்சலும் நினையாய் வினை போயற*"

நாவுக்கரசர்தம் தேவாரத்திருப்பதிகங்கள் அனைத்தும், அனைத்து மாந்தர்தம் பிறப்புரிமையை இனிது எடுத்தியம்பும் செம்பதிகங்களாகும்.

நல்லாற்றல் நல்கி, இறைவன் மூச்சுக்காற்றாய் நம்முள் வந்து, நலம்பல தந்து, நம்மை வாழவைக்கும் வாழ்வியலுண்மையை, "*என்னில் ஆரும் எனக் கினி யார் இல்லை*

*என்னிலும் இனி யாளொருவன் உளன்*

*என்னுளே, உயிர்ப்பாய்ப் புறம் போந்துபுக்கு*

*என்னுள்ளே நிற்கும் இன்னம்பர் ஈசனே*" (தேவ.5:1.). என்று குறித்துள்ளார். இக் கருத்து அனைத்துச் சமயத்தார்க்கும், பொதுவான வாழ்வியல் கருத்தாகும். நாவுக்கரசரின் தேவாரத்திருப்பதிங்களை நுணுகி நோக்குவார்க்கு, இக் குமுகாயத்தில், மானுடச்சட்டை தாங்கிவந்ததன் மாண்பு நன்கு புலப்படும் "*நாமார்க்கும் குடியல்லோம்*" என்றும்,

"*நாம் யாவர்க்கும் இடைவோம் அல்லோம்*",

"*அஞ்சுவது யாதொன்று மில்லை, அஞ்சவருவதுமில்லை*",

"*அஞ்சேல் நெஞ்சே*".

"*புந்தி வட்டத்திடைப் புக்கு நின்றானையும் பொய்யென்பனோ*"

"*ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே, உலகுக்கு ஒருவனாய் நின்றாய் நீயே*",

"*கங்கைவார்சடைக் கரந்தார்க்கு அன்பராகில், அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுள்*",

"*குலமிலர் ஆகிலும் குலத்திற்கு ஏற்பதோர் நலமிகக்கொடுப்பது நமச்சிவாயவே*",

"*தேடிக்கண்டு கொண்டேன் திருமாலொடு நான்முகனும் தேடித் தேடொணாத் தேவனை என்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன்*", முதலான உறுதிமொழிகள் ஒளிர்வதைக் காணலாம்.

பற்றற்ற தொண்டே, பார்போற்றுந் தொண்டாகும் அன்பர்பணி செய்யும் அருள் வாழ்வே உலகோர் போற்றும் உயர்வாழ்வாகும். இவ் வாழ்விய லுண்மையைத் தாயுமானவர், "*அன்பர் பணிசெய்ய எனைஆளாக்கி விட்டுவிட்டால், இன்பநிலை தானே வந்தெய்தும் பராபரமே*" என்று விளக்குவதால், அறியலாம்.

புறந்தோல் போர்த்து எங்கும் புழுவழுக்கு மூடியுள்ள புலால்துருத்தியான, இவ் வுடம்பினைப் பூந்துருத்தியாக மாற்றி, இறைவனை எப்போதும் உடம்பில் நிலைபெறச் செய்யவேண்டும் என்பதே, நாவுக்கரசரின் வாழ்வியல் குறிக்கோளாகும்.

"*ஊனில் ஆவி உயிர்க்கும் பொழுதெல்லாம் நான் நிலாவியிருப்பன்*" என்று, இறைவனும் தானும் எப்பொழுதும் இணைந்திருக்கும் எழில் நிலையினைக் கூறும் பாங்கு, எல்லோரும் எளிதல் அறியும்வண்ணம் அமைந்துள்ளது.

எண்ணிலும், எழுத்திலும், சொல்லிலும், பொருளிலும், இறைவனைக் காணல்:-

ஒலியிலும், தன்மையாலும், ஒருபொருளைக் கேட்டும், துய்த்தும் அறிதல் போலவே, இறைவனை எண்ணாலும், எழுத்தாலும் அறியும், வாழ்வியல் நெறிமுறைகளை, அனைவரும் அறிந்து கொள்ளும் பான்மையில், அப்பரடிகள் விளக்கியுள்ளார்.

(எ.டு.) "*எண்ணவன் காண் எழுத்தவன் காண்*" (திருவலிவலம்; திருத்தாண்டகம்-7.).

"*எண்ணாகி எண்ணுக்கோர் எழுத்தும் ஆகி*" (நின்ற திருத்தாண்டகம்.2.).

"*எண்ணதனில் எழுத்தை*" (திருக்கற்குடித் திருத்தாண்டகம்-3.).

"*எண்ணாகி எழுத்தாகி இயல்புமாகி*" (திரப்பாசூர்த் திருத்தாண்டகம்-1).

"*எண்ணும் எழுத்தும் சொல்லானாய் போற்றி*" (வேற்றாகி மண்ணாகி என்ற கயிலைப் பதிகம்-7).

வள்ளுவர் வாக்கும் ஈங்கு எண்ணுதற் குரியதாகும்:-

"*எண்ணென்ப ஏனை எழுத்தென்ப இவ்விரண்டும் கண்ணென்ப வாழும் உயிர்க்கு*" (குறள்,392.).

எண்ணாகவும், எழுத்தாகவும் இறைவனைக் கண்ட நாவரசர், சொல்லாகவும் சொல்லின் பொருளாகவும், நம்முள் கலந்து, நமக்கு நன்மை புரிதற்பொருட்டே காத்துநிற்கின்றான். இறைவன் நின்றுநிலவும் இடம், மாந்தர்தம் உள்ளமே யாகும். நம்மை விட்டால் இறைவனைப் போற்றுவார் புகழ்பாடுவார் யாருமில்லை; "*ஒன்று*" என்ற எண்ணின் பொருண்மையினை, ஒன்றுதல் என்னும் வினைச்சொல்லாக நோக்கினால், இறைவனின் எளிவந்ததிறம், இனிது புலப்படும். தனிப்பெரும் பேரருளாளனாக மிளிரும் இறைவனை, ஒன்றியிருந்து நினைத்தால், அடியவரைத் தாங்கும் பொருட்டு, ஆதனுடன் (ஆன்மா) ஒன்றியிருந்து பணிசெய்யுந் தலைவனை, அனைவரும் எளிதல் உணரலாம். அதனாற்றான் அப்பரடிகள் தாம் சொல்லும் சொல்லிலும், எண்ணும் பொருளிலும் நீக்கமற நிறைந்துள்ள, இறைவனின் தன்மையினைத் தமது திருப்பதிகங்கள் மூலம் தெளிவுறுத்துகின்றார்:-

"*சொல்லொடு பொருளனைத்தும் ஆயினான்*" (திருக்கழுக்குன்றத் திருத்தாண்டகம்-2). "*சொல்லாகிச் சொல்லுக்கோர் பொருளுமாகி*" (நின்ற திருத்தாண்டகம்-3). "*சொல்லாதன எல்லாஞ்சொல்லி தொடர்ந்து இங்கு அடியேனை ஆளாய்க் கொண்டு*" (பூந்துருத்தி-திருத்தாண்டகம்-1).

"*வாராதசெல்வமும் வருவிப்பான் தீராத நோயுந் தீர்ப்பான்*":-

ஆராஅன்புப் பெருக்குடன் நாள்தொறும், நாம் இறைவனைத் தொழுதால், தீராதநோய் ஏதுமில்லை என்பது, நாவுக்கரசர்தம் நற்கொள்கை. எஞ்ஞான்றும் அவனை உள்ளத்திலிறுத்தும், பிரிவில்லாத அடியார்களுக்கு, வராத செல்வம் ஏதுமில்லை. அனைத்து வளங்களையும், நலங்களையும் வாரிவழங்கும் வள்ளல், எல்லா மாந்தரும், ஒன்றியிருந்து அவனை நினைத்தால், என்றும் இன்பம்தழைக்க இருக்கலாம். "*நமக்கு மந்திரமும் அவனே, தந்திரமும் அவனே, தீராதநோய்தீர்த்து நல்லாற்றுப்படுத்தி நம்மை நலப்படுத்தும் மருத்துவனும் அவனே*" என்னும் பொருண்மையில் அமைந்துள்ள, திருத்தாண்டகம் வருமாறு:-

"*பேராயிரம்பரவி வானோரேத்தும் பெம்மானைப் பிரிவிலா அடியார்க்கு என்றும் வாராத செல்வம் வருவிப்பானை*

*மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீராதநோய் தீர்த்தருள வல்லான் தன்னை*" (தேவா.6:7.)

நிறைவாக அப்பரடிகளின் திருத்தொண்டு உழவாரப்படையின் உயர்தொண்டாக, மிளிர்ந்தது. உள்ளம் என்னும் வயல்வெளியில், மெய்மையாம் உழவினைச் செய்தார். பொய்மைக் களையை அகற்றினார். விருப்பு என்னும் விதையினை நட்டார். "*தகவு*" எனும் வேலியினை அமைத்தார். முடிவில் செம்மையாஞ் சிவப்பயிரினை அறுவடை செய்து,

அகற்றினார். விருப்பு என்னும் விதையினை நட்டார். "*தகவு*" எனும் வேலியினை அமைத்தார். முடிவில் செம்மையாஞ் சிவப்பயிரினை அறுவடை செய்து, நானிலத்தில் தொண்டுநெறி நிலைக்கச் செய்த பெருமை, நாவுக்கரசரையே சாரும்.

"*தொண்டர்க்கு ஆணி*" என்று சிறப்பிக்கப்பட்ட பெருமை அப்பருக்கே, உரியது.

"தொண்டலால் துணையுமில்லை," என்ற திருப்பதிகத் தொடருக்கு இலக்கியம் படைத்தவர் நாவுக்கரசர்.

இவர்தம் பாடல்களில், தொண்டு, தொண்டர் எனுஞ் சொற்கள் ஆளப்பெற்றுள்ள பாங்கு, வருமாறு:—

"*தொண்டராகித் தொழுது பணிமினோ*" (5 திருமுறை7—ஆம் பாடல்).

"*தொண்டர்கள் தம்தகவி னுள்ளார் போலும்*" (6—ஆம் திருமுறை, 3—ஆம் பாடல்).

"*தொண்டர்கள் தொழவும் வைத்தார்*" (4ம் திருமுறை, 4—ஆம் பாடல்).

"*தொண்டர்குழாம் தொழுதேத்த அருள் செய்வானை*" (6ஆம் திருமுறை, 3—ஆம் பாடல்).

"*தொண்டர்க்குத் தூநெறியாய் நின்றான் தன்னை*" (6—ஆம் திருமுறை, 1—ஆம் பாடல்).

"*தொண்டர் தொழுதேத்துஞ் சோதி யேற்றார்*" (6—ஆம் திருமுறை, 5—ஆம் பாடல்).

"*தொண்டலால் துணையுமில்லை*" (6—ஆம் திருமுறை, திருவையாறு).

"*தொண்டே னேன் பிறந்து வாளா தொல்வினைக் குழியில் வீழ்ந்து*" (4—ஆம் திருமுறை, 2.).

"*தொண்டனேன் பட்ட தென்னே தூயகா விரியின் நன்னீர்*" "*தொண்டராய்ப் பணிவார்க் கணியார் தாமே*" (6—ஆம் திருமுறை, 6.).

"*தொண்டிலங்கும் அடியவர்க்கோர் நெறியினாரும்*", "*தொண்டுபடு தொண்டர்துயர் தீர்ப்பான்காண்*" (திருக்கச்சியேகம்பப்பதிகம் 88).

"*தொண்டுபாடியுந் தூமலர் தூவியும்*" (5—ஆம் திருமுறை 10.).

உழவாரத்திருத்தொண்டு:—

நாவுக்கரசரின் உழவாரத் திருத்தொண்டு குமுகாய வளர்ச்சியில் அவர் பூண்ட அன்பின் வெளிப்பாடாகும். அன்பு பெருகப் பெருக அமையுந் தொண்டே உழவாரம். நமது உள்ளத்தைத் தூய்மைசெய்ய, தமிழாளியாயிருந்து, திருப்பதிகத் தமிழ்நெறி வளர்த்தது போல், இறைவன் உறையும் திருக்கோயில்களையும், உழவாரப்படை கொண்டு தூய்மைசெய்தார். செம்பொன்னையும் ஓடாக மதித்தார். இந் நிகழ்வினைப் பற்றிச் சேக்கிழார் கூறுவது வருமாறு:—

"*கேடும் ஆக்கமும் கெட்டதிருவினார்*

*ஓடும் செம்பொன்னும் ஒக்கவே நோக்குவார்*

*கூடும் அன்பினில் கும்பிடுதலேயின்றி*

*வீடும்வேண்டா விறலின் விளங்கினார்*"

உழவாரக் குமுதாயத்தை முதன்முதல் உருவாக்கியவர் அப்பரே. ஏற்றத்தாழ்வற்ற திருநாட்டின் முதல் அடித்தொண்டராக, நாவுக்கரசர் மிளிர்வதை அவர்தம் நற்றமிழ் பாக்கள், உறுதி செய்கின்றன.

**நாவுக்கிதம்** *nāvu-k-kidam,* பெ. (n.) நாவுக்கு இனிமை; நாவிற்குச்சுவையாயிருக்கை; sweet and tasteful to the tongue. "*நாவுக்கிதமான தெல்லாம் உடல்நலத்திற்கு உகந்தல்ல*" (இ.வ.).

*[நாவுக்கு + skt. இதம்.]*

**நாவுப்புளித்தல்** *nāvu-p-puḷittal,* பெ. (n.) நாக்கில் புளிப்புச்சுவை உண்டாதல்; sourness of tongue due to billousness.

*[நாவு + புளித்தல்.]*

**நாவுப்புற்று** *nāvu-p-puṟṟu,* பெ. (n.) நாக்கிலுண்டாகும் புற்றுநோய்; cancer of the tongue.

*[நா → நாவு + புற்று.]*

**நாவுரி[1]** *nāvuri,* பெ. (n.) $1^{1/2}$ நாழிகொண்ட அளவை; a standard measure= $1^{1/2}$ nāḻi.

*[நாழி + உரி → நாடுரி → நாவுரி.]*

**நாவுரி²** *nāvuri,* பெ. (n.) கால்நடைகளின் அண்ணத்து வீக்கம் (இ.வ.); swollen condition of the hard palate in the cattle.

*[நா → நாவு → உரி.]*

**நாவுரி³** *nāvuri,* பெ. (n.) *நாயுருவி (நாஞ்.)* பார்க்க; see *nāyuruvi.*

*[நாயுரி → நாவுரி.]*

**நாவுலர்ச்சி** *nā-v-ularcci.* பெ. (n.) *நாவறட்சி* பார்க்க; see *nā-varaṭci.*

*[நா + உலர்ச்சி.]*

**நாவுழலை** *nā-v-uḻalai,* பெ. (n.) 1. விடாய் (வின்.); thirst. 2. நாக்குழறுகை; faltering of the tongue. 3. *நாவூறு* பார்க்க; see *nāvūṟu.*

*[நா + உழல் → உழலை.]*

**நாவுழற்று-தல்** *nā-v-uḻaṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) பொறாமைப்பட்டு பேசுதல் (நாஞ்.); to give expressions to one's jealousy.

*[நா + உழல்(து.வி) → உழற்று-(பி.வி.).]*

**நாவூறு** *nā-v-ūṟu,* பெ. (n.) 1. நாவால் வருங்கேடு (வின்.); harm resulting from evil tongue. 2. சவித்தலால் ஏற்படும் துன்பம்; affliction through curse. (சா.அக.).

*[நா + ஊறு.]*

**நாவூறுபடு-த்தல்** *nāvūṟu-paḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) நாவாற் சுடுதல்; to blight of the tongue

*[நாவூறு + படு-.]*

கொடிய சொற்களைக் கூறி, பிறர் மனத்தைப் புண்படுத்துதல்.

**நாவெடிப்பு** *nā-veḍippu.* பெ. (n.) நாக்கில் ஏற்படும் பிளவு; fissures of the tongue.

*[நா + வெடிப்பு.]*

**நாவெலும்பு** *nā-v-elumbu,* பெ. (n.) காலெலும்பு வகை (இங்.வை.15); seaphoid bone. a carpal bone.

*[நா + எலும்பு.]*

(நாவாய்) நாவுதல் என்னும் தொழில் பற்றிக் காலைக் குறித்து வழங்கிற்று.

**நாவெழாமை** *nā-v-eḻāmai,* பெ. (n.) நாக்கிலேற்படும் பிடிப்பினால் பேச இயலாமை; a peculiar form of aphasia due to spasm of the muscles of the tongue

*[நா + எழாமை.]*

**நாவேர்ப்பட்டை** *nā-vēr-p-paṭṭai,* பெ. (n.) காட்டுமரத்தின் பட்டை; bark of a forest tree.

*[நா + வேர்ப்பட்டை.]*

**நாவேறு** *nā-v-ēṟu,* பெ. (n.) *நாவூறு (வின்.)* பார்க்க; see *nāvūṟu.*

*[நாவூறு → நாவேறு.]*

**நாவேறுசெல்வி** *nā-v-ēṟu-šelvi*, பெ. (n.) கலைமகள்; Kalaimagaḷ, the goddess of learning. "*நாவேறு செல்வியு நாரணனு நான்மறையும்*" (திருவாச.10:1.).

*[நா + ஏறு + செல்வி.]*



**நாவை** *nāvai*, பெ. (n.) **1.** கலப்பை; the part of the plough that receives the share. **2.** கொழுநுனி; lower end of the plough share.

*[நாவு → நாவை.]*

**நாவொட்டிக்காய்ச்சல்** *nā-v-oṭṭi-k-kāyccal*, பெ. (n.) நாவறட்சியை உண்டாக்கும் சுரவகை (சீவரட்.); continuous fever in which the tongue becomes dry.

*[நா + ஒட்டி + காய்ச்சல்.]*

**நாழ்[1]** *nāḻ*, பெ. (n.) **1.** குற்றம்; fault **2.** செருக்கு; pride. "*நாழா லமர் முயன்ற வல்லரக்கன்*" *(திவ்.இயற்.பெரிய திருவந். 11).* **3.** இல்லாதது சொல்லுகை (ஈடு.4:6:9); fabrication, concoction. **4.** திறமை; skill. "*நாழிவளோ வென்னும்*" (திவ்.இயற்.திருவிருத்.71).

*[நலி → நாழ்.]*

**நாழ்[2]** *nāḻ*, பெ. (n.) நாள்; day. "*நாழ்மலர்த் தெரியல்*" *(கம்பரா. இலங்கைகாண்.47).*

*[நாள் → நாழ்.]*

**நாழ்மை** *nāḻmai*, பெ. (n.) **1.** ஆணவம், தன்முனைப்பு (திவ்.திருவாய்.4.6:9 பன்னீ.); vanity, self-conceit. **2.** குற்றம் (ஈடு.4.6:9); fault.

*[நான் → நாழ்[1] → நாழ்மை.]*

**நாழம்** *nāḻam*, பெ. (n.) தவறான வழியில் பயன் படுத்துகை, ஏசுகை; abuse "*பலபல நாழஞ் சொல்லிப் பழித்த சிசுபாலன்*" (திவ். பெரியாழ்.4.3:5).

*[நாழ் → நாழம்.]*

**நாழல்** *nāḻal*, பெ. (n.) ஞாழல் பார்க்க; see *ñāḻal*. "*பைந்த ணாழல்கள் சூழ் புறவார் பனங்காட்டூர்*" (தேவா.1016 : 9).

*[ஞாழல் → நாழல்.]*

**நாழி[1]** *nāḻi* பெ. (n.) **1.** உட்டுளைப்பொருள் (பிங்.); tubularity, tube. **2.** ஒருபடி; a measure of capacity, one measure= 8 ollocks. "*நாழி நவைதீ ருலகெல்லாம்*" (கம்பரா. சரபங்க.29). **3.** காற்படி; one fourth of a measure. "*உண்பது நாழி உடுப்பது நான்குமுழம்*" (நல்வழி,28). **4.** நாழிகை (பிங்.); indian hour= 24 minutes. **5.** நூனாழி; weaver's shuttle **6.** அம்பறாத்தூணி; quiver. "*ஆர்ததும்பு மயிலம்பு நிறைநாழி*" (பரிபா.18,30). **7.** நாழிவடிவான முற்கொழுங்கால் நாண்மீன்; (புரட்டாதி) (பிங்.); the 25th nakṣatra.

ம., க., நாழி.

*[நாளம் → நாளி → நாழி.]*

ஒருகா. நுள் → நள் → நாள் → நாளி → நாழி = உட்டுளைப் பொருள்,

மூங்கிற்படி, முகவைப்படி, நெசவுக்குழல், அம்பறாத்தூணி, கன்னல் (நாழிகைவட்டில்), நாழிகை போன்ற பொருண்மைகளை உள்ளடக்கிய சொல்.

நாழிக்கிணறு, நாழிச்செம்பு, நாழிமணி, நாழியோடு, நாழிவழி என்பன தொன்றுதொட்ட பெருவழக்குச் சொற்கள். (வ.வ.21).

**நாழி²** *nāḻi* பெ. (n.) 1. 16 பலம் கொண்ட நிறை; 16 palams weight or about 560 gms. 2. இரண்டுவரி கொண்ட அளவு; a measure consisting of two oories. (சா.அக.)

*[நாள் → நாளி → நாழி.]*

நாழி என்றால் ஒரு படி என்று பொருள் கூறப்பட்டுள்ளது. சென்னைப்பல்கலைக்கழக அகரமுதலியில், காலப்போக்கில் மக்களிடையே ஏற்பட்ட வழக்கிற்கு ஏற்றவாறு, 8 ஆழாக்கு கொண்ட அளவினை நாழி என்று குறித்துள்ளனர். இது பட்டணம்படி அல்லது பெரியபடி, என்றும் பெயர்பெறும்.

ஆனால் சாம்பசிவ மருத்துவ அகரமுதலி 5 ஆழாக்கு கொண்டஅளவினை நாழி என்று குறித்துள்ளது; சா.அக. கூறுவது வருமாறு:–

"இப்போது கூட வணிகர்கள் சிற்றூர்புறத்தில், பொருள்களை ஒரு தூக்கு என்கிற 50 பலம் எடைஅளவாக வாங்கி, 40 பலம் கொண்ட வீசையளவாக விற்று, நான்கில் ஒரு பங்கு ஊதியம் (இலாபம்) அடைவதைக் காணலாம் அதுபோலவே, முற்காலத்தில் ஐந்தாழாக்குக் கொண்ட படியளவாக வாங்கி, நான்கு ஆழாக்கு கொண்ட படியளவாக விற்று, நான்கில் ஒருபங்கு ஊதியம் (இலாபம்) அடைந்தனர். நான்கு ஆழாக்கு கொண்டபடி, சிறியபடி அல்லது பழைய படியாகும் ஐந்தாழாக்குக் கொண்ட படியைத்தான் நாழி என்றனர்", என்று குறித்துள்ளது.

இந்த அளவு, சாம்பசிவம்பிள்ளை அகரமுதலி தொகுத்த காலத்தே மக்களிடையே நிலவியது எனலாம். ஆனால் தற்பொழுது நாழி குறிக்கும் அளவு, மக்களிடையே வழக்கில் இல்லை என்பது, இங்கு குறிக்கத்தக்கது.

மேலும் சாம்பசிவம்பிள்ளை இதுபற்றிக் கூறுங்கால்:– *"உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்"* இந்த பழமொழியில் குறிப்பிட்டுள்ள "நாழி" ஐந்தாழாக்குக் கொண்ட படியேயாகும். ஒருவர், ஒரு நாளைக்கு உண்ண வேண்டியது நாழியில் பாதி அரிசியும், மற்றபாதி பருப்பு, கிழங்கு, இளங்கீரை, காய்கறி என நான்கும் ஆகும் என்று கூறியிருப்பது, கருதத்தக்கது.

**நாழிக்கட்டை** *nāḻi-k-kaṭṭai,* பெ. (n) ஏர்க்காலுக்கும், நுகத்தடிக்கும் இடையில் வைக்கும் கட்டை (இ.வ.); the joining piece between the thrill and the yoke.

*[நாளி → நாழி + கட்டை.]*



**நாழிக்கிணறு** *nāḻi-k-kiṇaṟu,* பெ. (n) 1. மகளிர் விளையாட்டிற்கு அமைக்கப்பட்ட கிணறு; well used for women's sport. 2. சிறுகிணறு; a kind of well with a very small mouth

*[நாளி → நாழி + கிணறு.]*

**நாழிகை** *nāḻigai,* பெ. (n.) 1. 24 நிமையம் கொண்ட நேரம்; indian hour = 24 minutes. *"உயிர்த்தில னொரு நாழிகை"* (கம்பரா. பிரமா.200). 2. இலவம் $38^{1/2}$ கொண்ட ஒரு காலஅளவு (மேருமந்.94,உரை); measure of time consisting of $38^{1/2}$ ilavam 3. *நாடா* பார்க்க; see *nāḍā.* *"நெய்யுநுண்ணு*

*னாழிகையி னிரம்பாநின்று சுழல்வாரே''* (சீவக.3019). 4. பிற்கொழுங்கல் (உத்திரட்டாதி) (சது.); the 26th nāṇmīṉ (naksatra.). 5. தெய்வப்படிமை இருக்கும் சிற்றறை அல்லது திருவுண்ணாழிகை; face of an idol or inner-most sanctuary of a temple. ''*உண்ணாழிகையா ருமையாளோடு*'' (தேவா.592:3).

த. நாழிகை → skt. *nāḍigā.*

க., நாளிகெ, நாளிகே (g.), ம., நாழிக. த. → நாழிகை → வ. நாடிகா.

*[நாள்> நாழி → நாழிகை (வ.வ.21).]*

24 நிலையம் = 1 நாழிகை. கணியத்தில் 60 நிமையம் = 1 நாழிகை ஆகும்.

**நாழிகைக்கணக்கன்** *nāḻigai-k-kaṇakkaṉ,* பெ. (n.) 1. நாழிகைவட்டிலிடுவோன்; one who calculates the time of the day from the hour- glass. 2. நாழிகையை அரசற்குப் பாடலின் மூலம் அறிவிப்போன் (சிலப்.5:46,உரை); the poet who announces to the king, the time of the day in verse.

*[நாள் → நாழிகை + கணக்கன்.]*

**நாழிகைக்கல்** *nāḻigai-k-kal,* பெ. (n.) தொலைவைக் குறித்திருக்கும் கல் (நாஞ்.); mile stone.

*[நாழிகை + கல்.]*

**நாழிகைக்கவி** *nāḻigai-k-kavi,* பெ. (n.) அரசருங் கடவுளரும் நாழிகை தோறுஞ் செய்யும் செயல்களை, 30 நேரிசை வெண் பாவிற்பாடும், சிற்றிலக்கிய வகை (பன்னிருபா. 290,291); a poem describing the hourly programme of gods and kings, generally in 30 nērisai-veṇbā.

*[நாழிகை + skt. கவி.]*

ஒரு நாளுக்கு 60 நாழிகையாதலின், தனிச்சொல் பெற்ற 30 நேரிசை வெண்பாக்கள், 60 குறட்பாக்களாகக் கருதப்படுதலின். இவ்வாறு அமைந்தது.

**நாழிகைக்குள்காயசித்தி** *nāḻigai-k-kuḷ-kāyaśitti,* பெ. (n) கருநெல்லி; a black variety of Indian goose berry

*[நாழிகைக்குள் + skt. காயசித்தி.]*

**நாழிகைத்தூம்பு** *nāḻigai-t-tūmbu,* பெ. (n) ''*நீர்வீசுங் கருவிவகை*'' (பெருங். உஞ்சைக். 38,106); a water-squirt

*[நாளி → நாழிகை + தூம்பு.]*

**நாழிகைப்பறை** *nāḻigai-p-paṟai,* பெ. (n.) ஒருவகைத் தோற்கருவி (சிலப்.3:279,உரை); a kind of hour-drum.

*[நாழிகை + பறை.]*

**நாழிகைவட்டம்** *nāḻigai-vaṭṭam,* பெ. (n.) 1. சூரிய கடிகாரம்; sun-dial. 2. கடிகாரம்; watch, clock. 3. கால்வாயிலிருந்து தண்ணீர் பகிர்ந்து கொள்ளுமுறை (இ.வ.); method of the distribution of water from a canal.

*[நாழிகை + வட்டம்.]*

**நாழிகைவட்டில்** *nāḻigai-vaṭṭil,* பெ. (n.) நாழிகையை அறிவிக்குங் கருவி; clepsydra, ancient clock worked by flow of water, hour-glass. ''*நாழிகை வட்டி லிடுவாரும் என்ப*'' (சிலப்.5:49,உரை).

*[நாழிகை + வட்டில்.]*

**நாழிகைவழி** *nāḻigai-vaḻi* பெ. (n.) *நாழிவழி* பார்க்க; see *nāḻi-vaḻi*.

*[நாழிகை + வழி.]*

**நாழிகைவெண்பா** *nāḻigai-veṇbā* பெ. (n.) *நாழிகைக்கவி* **(இலக்.வி.850)** பார்க்க; see *nāḻigai-k-kavi*.

*[நாழிகை + வெண்பா.]*

**நாழிச்செம்பு** *nāḻi-c-cembu,* பெ. (n.) செம்பு வகை (நாஞ்.); a kind of vessel.

*[நாளி → நாழி + செம்பு.]*

**நாழிப்பூட்டு** *nāḻi-p-pūṭṭu,* பெ. (n.) ஒருவகைப் பூட்டு; a kind of lock.

*[தாழி → நாழி + பூட்டு.]*

**நாழியுரி** *nāḻi-y-uri,* பெ. (n.) ஒன்றரைப்படி; a measured one and a half

*[நாழி + உரி.]*

**நாழியோடு** *nāḻi-y-ōḍu,* பெ. (n.) **1.** ஒருவகை ஓடு (இ.வ.); a kind of tile. **2.** வீட்டு முகட்டில் நீர்விழ வைக்கும் ஓடு (வின்.); water - spout for draining off water from the roof of a house.

*[நாழி + ஓடு= உள்துளையுள்ள ஓடு.]*

**நாழில்** *nāḻil,* பெ. (n) கொடிக்காந்தள்; moss creeper.

**நாழிவழி** *nāḻi-vaḻi,* பெ. (n.) ஒரு நாழிகைப் போதில் நடக்கக்கூடிய தொலைவு; distance travelled in one nāḻigai.

*[நாழி + வழி. ]*

**நாள்[1]** *nāl* பெ. (n.) **1.** ஒரு பகலும் இரவும் சேர்ந்த 24 மணி நேரக் காலப் பிரிவு; day of 24 hours. "*சாதலொருநா ளொரு பொழுதைத் துன்பம்*" (நாலடி,295). "*நாளென ஒன்று போல் காட்டி*" (குறள்.). **2.** காலம்; time "*பண்டை நாள்*"(கம்பரா.நட்பு,43). **3.** வாணாள்; life-time, life "*நாளோடு வாள் கொடுத்த நம்பன் றன்னை*" (தேவா.219:10). **4.** நல்லநாள்; auspicious day. "*நாட்கேட்டுக் கல்யாணஞ்செய்து*" (நாலடி,86). **5.** காலை; early dawn "*நாண்மோர் மாறும்*" (பெரும்பாண்.160). **6.** முற்பகல்; forenoon. "*நாணிழற்போல விளியுஞ் சிறியவர் கேண்மை*" (நாலடி,166). **7.** விண்மீன்; lunar austerism "*திங்களு நாளு முந்து கிளந் தன்ன*" (தொல்.எழுத்.286). **8.** நிலவு நிலை (வின்.); lunar day, period of the moon's passage through an asterism **9.** புதுமை; freshness, newness "*கோதையை நாணீராட்டி*" (சிலப்.16:8). **10.** இளமை; youth juvenility, tenderness "*நெளவி நாண்மறி*" (குறுந்.282). **11.** அன்றலர்ந்த பூ; new-blown flower. "*பொன் குறையு நாள் வேங்கை நீழலுள்*" (திணைமாலை.31).

**தெ.,** நாடு **ம.,** நாள்.

*[நள் → நாள்.]*

**ஒருகா.** ஞால் → ஞாள் → நாள்.

யா → யாஅலே → யால் → ஞால் → ஞாள் → நாள்.

இச் சொல் "யா" எனும் கருமைக் கருத்தினின்று முகிழ்த்தது என்பார் ப. அருளி. யா → யாமம் = நள்ளிரவு, நடுவிருள் நாள் என்பது

முழு இரவுப் பொழுதையே, முதற்கண் குறித்தது. "பானாள் கங்குல்" "பானாள் இரவு" "நடுநாள் யாமம்" முதலான கழகஇலக்கியச் சொல்லாட்சிகள், இதனை வலியுறுத்தும்.

"நாள்" என்பது தொடக்கத்தில் இரவுநேரத்தை மட்டுமே குறித்தது. மாலை 6.00 முதல், விடியல் 6.00 மணிவரையுள்ள காலமே நாள், எனப்பட்டது. "அரைநாள்" என்னும் சொல்லாட்சி, நள்ளிரவுப் பொருளில், அகநானூற்றில் மட்டும் ஏழு இடங்களில் ஆளப்பட்டுள்ளது (எ.டு.) அகம்:112–7; 138:15–9; 198:4–11; 260:11–13; 294:11–16; 298:10–14; 311:1–5.

நாள் என்னும் சொல், பகற்பொழுதைக் குறிக்கும் பாங்கு வருமாறு:–நெடுநல்:72–758; குறுந்: 280:3–5.

**நாள்²** *nāḷ*, பெ. (n.) 1. முழுஇரவு நேரம்; full-night. "பானாள் கங்குல்" (குறுந்.301:4.). 2. நள்ளிரவு; mid-night. *"பானாள் இரவின் வந்தெம் இடைமுலை பொருந்தி"* (அகம்,328:4.). *"உருகெழு நடுநாள்"* (அகம்.22:11.).

**நாள்³** *nāḷ*, பெ. (n.) வெண்பாவின் ஈற்றடியிறுதியில் வரும் ஓரசைச்சீர் வாய்ப்பாடு; a symbolic expression of the last metrical foot of one syllable, in veṇbā-verse.

*[நள் → நாள்.]*

வெண்பாவின் ஈற்றடியின் இறுதிச் சீர், நாள், மலர், காசு, பிறப்பு என்னும் நான்கினுள் ஒன்று பெற்று வரும்.

**நாள்காட்டி** *nāḷ-kāṭṭi*, பெ. (n.) குறிப்பிடும் ஆண்டுக்குரிய நாள், கிழமை,மாதம் முதலியவற்றைக் காட்டும் வண்ணம் அச்சடிக்கப்பட்ட தாள் அல்லது, தாள்கள் கொண்ட தொகுதி; Calendar. தற்பொழுது வரும் நாள்காட்டியில் கணியம், பொன்மொழி, மருத்துவக் குறிப்புகள் மிகுதி.

*[நாள் + காட்டி.]*

**நாள்குறிப்பு** *nāḷ-kuṟippu*, பெ. (n.) ஒருவர் தன்னுடைய அன்றாட நிகழ்வுகளைக் குறித்து வைத்துக் கொள்ளப் பயன்படுவதும், நாள். கிழமை, மாதம் முதலியவை, அச்சடிக்கப்பட்ட பக்கங்களை உடையதுமான ஏடு; diary "ஆனந்தரங்கம் பிள்ளையின் நாள்குறிப்பு, பிரெஞ்சுக்காரரின் புதுச்சேரி ஆட்சியை அறிய உதவுகிறது". (இ.வ.).

*[நாள் + குறிப்பு.]*

**நாள்கேள்–தல்(நாள்கேட்டல்)** *nāḷ-kēḷ-*. 11 செ.குன்றாவி. (v.t.) நன்னாள் குறிக்கும்படி கேட்டல்; to consult an astrologer or priest for fixing an auspicious day

*[நாள் + கேள் –.]*

**நாள்தள்ளு–தல்** *nāḷ-taḷḷu-*, 5 செ.கு.வி. (v.i.) காலங்கழித்தல்; to manage to pass one's days வாங்கிய பணத்தைத் திருப்பித் தராமல் நாள் தள்ளுவது நல்ல பழக்கமில்லை. (இ.வ.).

*[நாள் + தள்ளு –.]*

**நாள்பட்ட** *nāḷ-paṭṭa-*, பெ.எ. (adj.) 1. பல நாட்களாக இருந்து வரும்; நாட்பட்ட நட்பு எப்போதும் வளரும் (இ.வ.) of a pretty long-time. நாள்பட்ட இருமல் ஈளைநோயின் அறிகுறியாகும். 2. பல நாட்கள் கழிந்த; chronic, old. நாள்பட்ட கள், தேள்கொட்டியது போல் புளிக்கும். (இ.வ.).

*[நாள் + பட்ட.]*

**நாள்பட்டநோய்** *nāḷ-paṭṭa-nōy*, பெ. (n.) மருந்தினால் குணமாகாத நோய்; an incurable disease, chronic disease.

*[நாள்பட்ட + நோய்.]*

**நாள்பட்டமேகம்** *nāḷ-paṭṭa-mēgam,* பெ. (n.) வெள்ளையொழுக்கு; leucorrhoea.

*[நாள்பட்ட + மேகம்.]*

**நாள்படாநோய்** *nāḷ-paḍā-nōy,* பெ. (n.) **1.** விரைவில் தீரும் நோய்; a disease curable in a short-time. **2.** குணப்படும் நோய்; curable disease as opposed to tīrā-nōy.

*[நாள்படா + நோய்.]*

**நாள்பழக்கம்** *nāḷ-paḻakkam,* பெ. (n.) ஒவ்வொரு நாளும் மேற்கொள்ளும் பழக்கம்; daily routine.

**நாள்பார்க்கிறவன்** *nāḷ-pārkkiṟavaṉ,* பெ. (n.), கணியன்; astrologer. **2.** மனவுறுதி யற்றவன் (இ.வ.); fickle - minded person.

*[நாள் + பார்க்கிறவன்.]*

**(கேலக்சி முதல் அடுக்கில் 5 ஆயிரம் விண்மீன்களும், 55 கோள்களும், உள்ளனவாக வானியல் வல்லார் தெரிவித்துள்ளனர். 27 விண்மீன்களையும், 9 கோள்களையும் வைத்துக் கணக்கிட்டு, நாள்பார்ப்பவர்.**

**நாள்போக்கு—தல்** *nāḷ-pōkku-,* 5செ.குன்றாவி. (v.t.) வீணே, பொழுது போக்குதல் அல்லது யாதொரு பயனுமின்றிக் காலத்தைக் கழித்தல்; to spend time vainly. "*போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப் போற்றாதே ஆற்ற நாள் போக்கினேனே*" (நாவுக்கரசர் தேவாரம்.).

*[நாள் + போக்கு—.]*

**நாள்மஞ்சள்வாங்கு—தல்** *nāḷ-mañjaḷ vāṅgu-,* 5செ.கு.வி. (v.i.) திருமண உறுதியின் (நிச்சயத்தின்) அறிகுறியாக, பேசிமுடித்த நல்ல நாளில், பெண் வீட்டாரும் பிள்ளை வீட்டாரும் மஞ்சள் கைம்மாற்றுதல். (இ.வ); to exchange turmeric on an auspicious day as a token of the final settlement of a marriage.

*[நாள் + மஞ்சள் + வாங்கு—.]*

**நாள்வட்டம்** *nāḷ-vaṭṭam,* பெ. (n.), நாள்சுற்று; cycle of one day

*[நாள் + வட்டம்.]*

**நாள்வழி** *nāḷ-vaḻi,* பெ. (n.), *நாள்வழிக் கணக்கு* பார்க்க; see *nāḷ-vaḻi-k-kaṇakku.*

*[நாள் + வழி.]*

**நாள்வழிக்கணக்கு** *nāḷ-vaḻi-k-kaṇakku.* பெ. (n.), நாட்கணக்கு; day - book.

*[நாள்வழி + கணக்கு.]*

**நாள்விடு—தல்** *nāḷ-viḍu-* 20 செ.கு.வி. (v.i.). வாழ்க்கை நடத்துதல் (யாழ்.அக.); to spend one's life time.

*[நாள் + விடு—.]*

**நாள்வித்துப்பிடி—த்தல்** *nāḷ-vittu-p-piḍi-,* 4 செ.கு.வி. (v.i). நல்லநாளில் வயலில் விதை விதைத்தல்; (நாஞ்.); to sow on an auspicious day.

**மறுவ.** நாள்விதை போடல்.

*[நாள் + வித்து + பிடி—.]*

**நாள்வெயிற்காலம்** *nāḷ-veyiṟ-kālam,* பெ. (n.), புலர்காலைப் பொழுது (இ.வ.) (சூரியோதய காலம்); sunrise.

*[நாள்+ வெயில் + காலம்.]*

**நாள்வேலை** *nāḷ-vēlai,* பெ. (n.), 1. அன்றன்று செய்யும் வேலை (யாழ்.அக.); daily work 2. மணமகன் திருமணத்தன்று செய்து கொள்ளும் முகமழிக்கும் நிகழ்வு (சவரச் சடங்கு); (நெல்லை); the ceremonial shaving of a bridegroom on the day of marriage.

*[நாள் + வேலை.]*

**நாள்வை-த்தல்** *nāḷ-vai-,* 4 செ.கு.வி. (v i), மணநாள் உறுதி செய்தல்; to fix an auspicious day, as for a marriage.

*[நாள் + வை-.]*

**நாளக்கபாடம்** *nāḷa-k-kabāḍam,* பெ. (n.), நாளக்குழலின் பூட்டு; valve of the vein.

*[நாளம் + கவாடம் → கபாடம்.]*

**நாளகம்** *nāḷagam,* பெ. (n.), *நாளிகம்*[1] பார்க்க; see *nāḷigam*[1]

**நாளகி** *nāḷagi,* பெ. (n.) சூழ்ந்துமரம்; torch tree.

**நாளங்காடி** *nāḷ-aṅgāḍi-,* பெ. (n.), பகற்கடை; day-bazar, opp. to al-l-aṅkāḍi. "*நாளங்காடி யில் நடுக்கின்றி நிலைஇய*" (சிலப். 5, 62).

*[நாள் + அங் + காடி.]*

பண்டைத் தமிழக மாநகர்களில், சிறப்பாக வேந்தர் தலைநகர்களில், நாள்தோறும், பகலிலும், மாலையிலும், பல பண்டங்களும் விற்கும் அங்காடிச் சந்தைகள் நடைபெற்று வந்திருக்கின்றன. பகற்சந்தை '*நாளங்காடி*' யென்றும், மாலைச்சந்தை '*அல்லங்காடி*' யென்னும் பெயர் பெற்றிருக்கின்றன. "*நடுக்கின்றி நிலைஇய நாளங்காடியில்*" (சிலப்.5:63). அல்லங்காடியு முண்டாதலின், இதனை நாளங்காடி யென்றார் (அடியார்க்.உரை.). "*அல்லங்காடி யழிதரு கம்பலை*" (மதுரைக்.544.). "*நாளங்காடி அல்லங்காடியாகிய இரண்டு கூற்றையுடைத்தென்றார்*" (மதுரைக் 365,நச்.உரை).

'*அம்முதல்*' என்னும் வினைச்சொல். இற்றைத் தமிழகத்தில் வழங்காவிடினும் குமரிநாட்டில் வழங்கியிருத்தல் வேண்டும்.

அம்முதல் = பொருந்துதல், ஒத்தல், ஒத்தமதிப்புள்ள பொருளுக்கு மாறுதல்: தமிழ்மொழிக்குடும்பமாகிய தெலுங்கில் அம்முதல், 'விற்றல்' என்னும் பொருளில் வழக்கூன்றியுள்ளது.

கடை → கடி → காடி என்று திரிந்திருக்கலாம்.

(செ.சொ.அ-முதன்மடலம்-முதற்பகுதி. பக்.68)

**நாளச்சுருட்டு** *nāḷa-c-curuṭṭu,* பெ. (n.), நரம்புச் சுருட்டு; uneven, permanent dilatation of a vein, Varix

*[நாளம் + சுருட்டு.]*

**நாளஞ்சுருக்கி** *nāḷañ-surukki,* பெ. (n.). அரத்த நாளத்தைச் சுருக்கும் மருந்து; drug which contracts veins as alum.

**நாளடைவில்** *nāḷ-aḍaivil,* வி.எ. (adv.) நாள் செல்லச் செல்ல; incourse of time புதிய இடமும், புதிய உணவும் முதலில் சற்றுக் கடினமாகத் தோன்றினாலும், நாளைடைவில் பழக்கமாகிவிடும். (இ.வ.).

*[நாள் + அடைவில்.]*

**நாளத்தி** *nāḷatti,* பெ. (n.), ஊதும் உலைத்துருத்தி; bellows

**நாளத்தீதகம்** *nāḷattīdagm,* பெ. (n.), இரட்டை ஊதுதுருத்தி; double bellows.



**நாளத்தூதல்** *nāḷattūdal,* பெ. (n.), துருத்தியைக் கொண்டு ஊதல்; blowing with bellows.

**நாளதினாலே** *nāḷadiṉālē,* (வி.எ.) (adv.) நடப்பு நாளில்; on that day. "*நாளதினாலே கொடுத்த*" (S.I.I,ii. 3.).

*[நாள் + அதனாலே → அதினாலே.]*

**நாளது** *nāḷadu,* (வி.எ.) (adv.) நடப்பு, current, passing, present. நாளது ஆண்டு (இக்.வ.).

*[நாள் + அது.]*

**நாளதைலம்** *nāḷa-tailam,* பெ. (n.) நாட்பட்ட வயிற்றுப்போக்கினை நிறுத்துவதற்காகத் தேரையர் கூறும், நெய்மம்; a superior medicated oil described in Tēraiyar treatise and prescribed for chronic diarrhoea.

**நாளந்தகம்** *nāḷandagam,* பெ. (n.) தாமரை வளையம்; coils of lotus stalk.

**நாளந்தி** *nāḷ-andi,* பெ. (n.) சிறுசாலை. early morning. "*நாளந்திக் கோறின்று*" (ஆசாரக்.10);.

**நாளம்¹** *nāḷam,* பெ. (n.). 1. உட்டுளை (சூடா.), tubularity. "*கழுநீர் நாளத்தாளினா லொருத்தி யுண்டாள்*" (இராமநா. உண்டாட்.19). 2. தண்டு; pipe or tube, hollow stalk as of a lotus. "*கமல நாளத்திடை*" (கம்பரா. மிதிலைக் 75.). 3. நரம்பு; (யாழ்.அக.); vein, nerve. 4. பொன்னரிதாரம்; yellow orpiment.

*[நுள் → நள் → நாள் → நாளம் = உட்டுளை, உட்டுளைப் பொருள், தண்டு, (வே.க.3:18).]*

**நாளம்²** *nāḷam,* பெ. (n.). அரத்தம், தசைநீர் (நிணநீர்) கொழுப்புநீர், முதலானவற்றை, உடலின் பல பகுதிகளுக்கும் எடுத்துச்செல்லும் குழாய்; vessel. அரத்தநாளம். நிணநீர் நாளம்.(உ.வ.)

*[நள் → நா்ள் + அம் → நாளம்.]*

உடம்பிலுள்ள, தந்துகிகள் எனப்படும் சின்னஞ்சிறிய குழாய்களில் நிறைந்திருக்கும் அரத்தத்தை வாங்கிக்கொண்டு, நெஞ்சாங் குலைக்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும் காரரத்தக் குழாய்கள் என்று, சா.அக. கூறும்.

உடல் நலிவின்றி, நலமுடன் இயங்குதற்கு நாடிகளைப் போல, நாளங்களும், உறுதுணை புரிகின்றன. உடல்முழுவதும், நாளங்கள் பரந்து சென்று செயல்படுந்தன்மையன. நாடியைப் போலவே உள்நாளம், நடுநாளம், கடைநாளமென முத்திற அறைகளாகப் பிரிந்து செயல்படுபவை. ஆனால் நாடியைப் போன்று தடிப்பாயிராது. ஆனால், நாளத்தின் நடுவறை மட்டும் நாடியைக் காட்டிலும் தடித்தவை. உள்நாளம், கடைநாளத்தைவிட, நடுநாளம் கட்டித்தன்மை மிக்கது. எதிர்பாராத நிலையில் நாளம் அறுபட நேர்ந்தால், இதன் வடிவம் அழிந்தொழியும்.

அனைத்து நாளங்களும், நரம்பினால் இயன்ற (கபாடங்களால்) சவ்வுக்கூடங்களால், ஆக்கப்பட்டவை. இச் சவ்வுக்கூடங்கள், நாளத்தைக் கவர்ந்து கொண்டிருக்கும் தன்மையில் அமைந்தவை. சவ்வு மடிப்பினால்

ஆக்கப்பட்ட பெரிய நாடிகளுக்கும், ஆழ்ந்த நாளங்கள் உண்டு.

உடம்பில் அரத்த வோட்டத்தைச் சீராக வைக்கும் செயலினை, நாளங்கள் செய்கின்றன. இந் நாளங்களின் தலையாய, இப் பயன்பாட்டினை அடிப்படையாகக் கொண்டு, சாம்பசிவ மருத்துவ அகரமுதலி நாளங்களை 20 வகைகளாகப் பகுத்துள்ளது, வருமாறு:—

1. கேள்வி நாளம்.
2. நெஞ்சாங்குலை (இதய) நாளம்.
3. ஈரல் நாளம்.
4. குண்டிக்காய்நாளம்.
5. புப்புசநாளம்.
6. கன்னநாளம்.
7. மூலக்கருநாளம்.
8. மூளைநாளம்.
9. வயிற்று நாளம்.
10. தண்டுநாளம்.
11. முகநாளம்.
12. குதமூலநாளம்.
13. கழுத்துநாளம்.
14. பிடரிநாளம்.
15. கண்ணாளம்.
16. ஊணீர்(விந்து)நாளம்.
17. மண்ணீரல் நாளம்.
18. கழுத்திலுள்ள கேடயச்சுரப்பிநாளம்.
19. கொப்பூழ்(உந்தி)நாளம்.
20. தொடைநாளம்.

**நாளமில்லாசுரப்பி** *nāḷam-illā-c-curappi,* பெ. (n). நாளங்கள் மூலம் அல்லாமல், நேரடியாக நீர்மங்களை, அரத்தத்தில் சேர்க்கும் வகையில் அமைந்த சுரப்பி; ductless gland.

*[நாளமில்லா + சுரப்பி.]*

**நாளயம்** *nāḷayam,* பெ. (n.). சின்னம்மான் பச்சரிசி; thyme leaved spurge.

**நாளரம்** *nāḷaram,* பெ. (n) (சங்.அக.) *நாளிகம்*[1], பார்க்க; see *nāḷigam*[1].

**நாளராவம்** *nāḷarāvam,* பெ. (n) 1. காரரத்தக்குழலிலுள்ள அழுக்கு; impurities in the vein 2. அரத்தம் குத்தியெடுக்கை; blood letting bleeding

**நாளவம்** *nāḷavam,* பெ. (n.). ஒட்டநாளம்; elder wood tree vine.

**நாளவா** *nāḷavā,* பெ. (n) *நாளவம்* பார்க்க; see *nāḷavam.*

**நாளவிரிவு** *nāḷa-virivu,* பெ. (n.). அகன்று திருகிய அரத்தநாளம்; enlarged and twiseted veins.

*[நாளம் + விரிவு.]*

**நாளவை** *nāḷ-avai,* பெ. (n ). நாளோலக்கம்; the durbar of a king. "*செம்மனாளவை யண்ணாந்து புகுதல்*"; (புறநா.54.)

*[நாள் + அவை.]*

**நாளளத்தல்** *nāḷaḷattal,* பெ. (n.). திருமணத்திற்கு நாள் குறித்தல்; to fix a particular day as of a marriage. 'நாளைக்கு என் பெண்ணுக்கு நாளளக்கிறோம்' (மீனவ.).

*[நாள் + அளத்தல்.]*

**நாளளவு** *nāḷaḷavu,* பெ. (n.). இன்னமருந்தை, இத்தனை நாளைக்குத்தான், உட்கொள்ள வேண்டும் என்ற வரம்பு; limitation or restriction as to a particular medicine to be taken only for a particular period.

*[நாள் + அளவு.]*

**நாளறுதி¹** *nāḷ-aṟudi,* பெ. (n.). காலவெல்லை; expiration of a term

*[நாள் + அறுதி.]*

**நாளறுதி²** *nāḷ-aṟudi,* (கு.வி.எ.) (adv.) நாளடைவில் (வின்.); in course of time, gradually

*[நாள் + அறுதி.]*

**நாளாகநாளாக** *nāḷ-āga-nāḷ-āga,* வி.எ. (adv.). நாட்கள் செல்லச்செல்ல; as days go by day by day 'நாளாக நாளாக அவர் திரும்பி வருவார் என்ற நம்பிக்கை குறைந்து வருகிறது' (இக்.வ.)

மறுவ. நாளுக்கு நாள்.

*[நாள்ஆக + நாள்ஆக.]*

**நாளாகமம்** *nāḷ-āgamam,* பெ. (n.) கிறித்துவ மறை நூற்பகுதி; book of the chronicles

**நாளாசறுதி** *nāḷ-āšaṟudi,* (வி.எ.) (adv.) *நாளடைவில் (யாழ்.அக.)* பார்க்க; see *nāḷ-aḍaivil.*

**நாளாசறுதியில்** *nāḷ-āšaṟudiyil,* வி.எ. (adv.) *நாளடைவில் (வின்.)* பார்க்க; see *naḷ-aḍaivil.*

*[நாள் + ஆசறுதியில்.]*

**நாளாடகம்** *nāḷ-āḍagam,* வி.எ. (adv.) *நாடோறும். (இ.வ.)* பார்க்க; see *nadōṟum.*

**நாளாதல்** *nāḷ-ādal,* பெ. (n.) **1.** காலங்கழிதல்; passing away of time **2.** காலத்திற்கு உரியதன்றாதல் (இ.வ.); becoming out of date.

*[நாள் + ஆதல்.]*

**நாளாந்த** *nāḷānda,* பெ.எ. (adj.) அன்றாட; daily. 'நாளந்த வாழ்வு நாளந்த வேலை' (இலங்கை வழக்கு.).

*[நாள் → நாளாந்த.]*

**நாளாந்தம்** *nāḷāndam,* பெ. (n.). வி.எ. (adv.) **1.** ஒவ்வொரு நாளும்; daily. 'நாளந்தம் வாழ்க்கைச்செலவு கூடிக்கொண்டே போகிறது' (இலங்கை.). **2.** நாளிதழ்; daily news paper

**நாளாய்ந்தோர்** *nāḷ-āyndōr,* பெ. (n) (வாழ்நாளைக் கணிப்பவர்) மருத்துவர் (தைலவ.தைல.); physicians, as investigating the length of one's days

*[நாள் + ஆய்ந்தோர்.]*

**நாளாயபோ—தல்** *nāḷāya-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ஒவ்வொருநாளும் செல்லுதல்; to go daily. *"நாளாய போகாமே நஞ்சணியும் கண்டனுக்கே ஆளாய அன்பு செய்வோம் மடநெஞ்சே"* (தேவா.1).

*[நாள் + ஆய + போ—.]*

**நாளார்** *nāḷār,* பெ. (n) கூற்றுவன்; yamaṉ. *"நாளார் வந்தணுகி நலியாமுனம்"* (தேவா.326.6).

*[நாள் + ஆர் → நாளார். வாழ்வினிறுதி. நாளினை உறுதி செய்பவர். உடல்வேறு, உயிர்வேறாகக் கூறுபடுத்துங் கூற்றுவன்.]*

**நாளாவட்டத்தில்** *nāḷ-āvaṭṭattil,* வி.எ. (adv.) *நாளடைவில் (இக்.வ.)* பார்க்க; see *nāḷaḍaivil.* புதிய வேலை முதலில் துன்பம் தந்தாலும் நாளாவட்டத்தில் பழகிவிடும் (இ.வ.). அடிக்கடி மகப்பேற்றினால், தாய் நாளாவட்டத்தில் நலிவடைகிறாள் (இக்.வ.). மாற்றுமுறைப் பயிர் செய்யாவிடின், நாளாவட்டத்தில் நிலம் தன் ஊட்டச்சத்தை இழந்துவிடும்.(இக்.வ.).

*[நாள் + ஆ → நாளா + வட்டத்தில்.]*

**நாளாவட்டத்தில்குணப்படு—தல்** *nāḷā-vaṭṭattil-kuṇappaḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நாள் செல்லச்செல்ல, நோயகன்று நலம்பெறுதல்; to recover from illness gradually

*[நாளாவட்டத்தில் + குணப்படு—.]*

**நாளாவட்டம்** *nāḷā-vaṭṭam,* பெ. (n.) ஒவ்வொரு நாளும் கழிகை; after lapse of some days.

*[நாள் + ஆ + வட்டம்.]*

**நாளாவர்த்தியில்** *nāḷ-āvarttiyil,* வி.எ. (adv.) *நாளடைவில் (இக்.வ.)* பார்க்க; see *nāḷaḍaivil.*

*[நாள் + ஆவர்த்தியில்.]*

**நாளாவிர்த்தியில்** *nāḷ-āvirttiyil,* வி.எ. (adv.) *நாளாடைவில் (இ.வ.)* பார்க்க; see *nāḷaḍaivil.*

*[நாள் → ஆவர்த்தியில் → ஆவிர்த்தியில்.]*

**நாளி[1]** *nāḷi,* பெ. (n.) நாய். (அக.நி.); dog.

*[நா → நாளி*

*நா → நாய் → நாயி → நாளி. சொல்திரிபும் ஆகலாம். ள்→ய் = திரிபுபெறும் என்பது பாவாணர் முதல் தாய்மொழியின் குறிப்பு. வீட்டு வளர்ப்பு விளங்குகளில் பூனை இரவில் கண்விழித்து இயங்குவதும், நாய் பகலில் இயங்குவதும் பற்றி வந்த பெயர்.]*

**நாளி[2]** *nāḷi,* பெ. (n.) 1. உட்டுளையுள்ள மூங்கில்; bamboo-tube 2. மூங்கில், பனை முதலியவற்றிலுள்ள வெளிவயிரம்; hard outer part of the stem of a tree, as of bamboo and palmyra

*[நள் → நாள் → நாளம் → நாளி= பனை. உட்டுளையுள்ள மூங்கில், புறக்காழது. (வே.க.3:18.)]*

**நாளி[3]** *nāḷi,* பெ. (n.) உட்டுளையுள்ள மூங்கிற் படி; a measure.

*[நாள் → நாளம் →நாளி.]*

*உட்டுளையுள்ள மூங்கிற்படி. அரிசி அல்லது நெல்லளக்கும் படி முதன்முதல் மூங்கிற் குழாயாலேயே அமைந்தது. "புறக்காழனவே புல்லென மொழிப" (தொல்.மரபு.6.). என்னும் தொல்காப்பிய மரபியல் நூற்பாவால், தென்னையும் மூங்கிலொடு சேர்ந்து நாளியினமாம். (வே.க.3;18.).*

**நாளி[4]** *nāḷi,* பெ. (n.) *நாழிகை, 1,2,3.* பார்க்க; see *nāḷigai, 1,2,3.* "இலவமே நாளி மூழ்த்தம்" (மேருமந்.94).

*[நாழி → நாளி.]*

**நாளி[5]** *nāḷi,* பெ. (n.)1. கள் (யாழ்.அக.); toddy 2. கற்றாழை; aloe. 3. புளிச்சைக்கீரை; deccani hermp

*[ஞாளி → நாளி.]*

நாட்காலையில், பாளையில் கட்டிய பானையிலிருந்து எடுக்கப்படுவதால், வந்தபெயர்.

**நாளிக்கிருமுறை** *nāḷikkiru-muṟai,* பெ. (n.) 1. ஒரு நாளுக்குக் காலை, மாலை ஆகிய இருமுறை; twice a day viz. morning and evening. 2. நாளிற்கு இரண்டு தடவை; twice a day

*[நாளுக்கு → நாளிக்கு + இருமுறை.]*

**நாளிகம்** *nāḷigam,* பெ. (n.) 1. *இலாமிச்சை (மலை.)* பார்க்க; see *ilāmiccai.* cuscuss grass. 2. வள்ளைக்கொடி (சூடா.); wild pot-herb, aquatic plant, Ipomaea aquatica. 3. தாமரை (யாழ்.அக.); lotus. 4. கோட்டை மதிற் சுவரில் அமைக்கப்படும் எறிபடை வகை (சுக்கிரநீதி.328); a kind of machine planted on a fortwall for defence.

*[நாள் → நாளகம் → நாளிகம்.]*

**நாளிகயேலசம்** *nāḷigayēlaśam,* பெ. (n.) நறும்பிசின்; socotrine aloe (சா.அக.).

**நாளிகா** *nāḷigā,* பெ. (n.) சுனைக்கோரைப்புல்; rough sedge grass. (சா.அக.).

**நாளிகாசு** *nāḷi-kāšu,* பெ. (n) *நாளிகாதி* பார்க்க; see *nāḷi-kāti.* (சா.அக.).

**நாளிகாதி** *nāḷi-kādi,* பெ. (n.) 1. கிளிமுறுக்கு மரம்; indian Coral tree. 2. கட்டாமணக்கு; common physic nut.

**மறுவ.** முள்முறுக்கு.

*[நாளி → நாளிகாதி.]*

**நாளிகாயந்திரம்** *nāḷigā-yandiram.* பெ. (n.) மருந்தை வடிப்பதற்காகப் பயன்படுத்தும் வாலை எந்திரம்; distrillary appartus

**நாளிகாவித்து** *nāḷigā-vittu,* பெ. (n.) பாற்சோற்றி; a viscid liquid.

**நாளிகேரகிருதம்** *nāḷi-kēra-kirudam.* பெ. (n.) 1. தேங்காயெண்ணெய்; cocoanut oil 2. தேங்காய்ப்பாலுடன் ஏனைய கடைச் சரக்குகளைச் சேர்த்துக் காய்ச்சி வடிக்கும் மருந்தெண்ணெய்; a medicated oil prepared from milk of cocoanut kernel and other drugs.

*[நாளிகேரம் + skt. கிருதம்.]*

**நாளிகேரபாகம்** *nāḷikēra-bāgam,* பெ. (n.) *நாரிகேரம்* பார்க்க; see *nāḷikēram.*

*[நாலிகேரம் → நாளிகேரம் + பாகம்.]*

**நாளிகேரம்** *nāḷikēram.* பெ. (n.) தென்னை; common cocount *"வெள்ளை நாளிகேரம் விரியா நறும்பாளை"* (தேவா. 106:5).

*[நள் → நாள் → நாளம் = உட்டுளை, உட்டுளையுள்ள மூங்கில் படி. நாளம் → நாளி = உட்டுளையுள்ள புறக்காழ். ஒருகா. நால் → நாலி + கேரம் → நாலிகேரம் → நாளிகேரம்.]*

அரிசி அல்லது நெல்லளக்கும் படி, முதன்முதல் மூங்கிற் குழாயாலேயே அமைந்தது. "*புறக்காழனவே புல்லென மொழிப*" என்னும் தொல்காப்பிய மரபியல் நூற்பாவால், தென்னையும் மூங்கிலொடு சேர்ந்து நாளியினமாம்.

வேந்தன் குடிப்பெயரினின்று அவன் நாட்டுப்பெயர் திரிவதுண்டு.

*[(எ.டு.)பாண்டியன் → பாண்டியம் = பாண்டிநாடு. இம் முறைப்படி, சேரலன் → சேரலம். சேரன் → சேரம் என்று திரியும், தென்மொழிச்சகரம் வடமொழியில், 'க'கர மாகத் திரிவதால், சேரலம் → கேரளம்; சேரம் → கேரம் என்றாம். ஆகவே, நாலிகேர என்பது, சேரநாட்டில் சிறப்பாக வளரும் மூங்கிலொத்த புறக்காழ்த் தென்னை என்று பொருள்படலாம்.]*

*ஒருகா. நாளி + சேரம் → கேரம்.*

*வடமொழியில் தென்னைக்கு, 'நாலிகேர' என்று பெயர். அதினின்று கேரளம் என்னும் சொல்லைத் திரிக்கவுஞ் செய்வர். "நாலிகேர"* என்பது வடமொழியில் தன்னந்தனிச்செல்; அதற்கு அம் மொழியில் மூலமில்லை. கேரளம் என்பது சேரலம் என்பதன் திரிபாயிருக்கவும், அத் திரிபைத் தலைகீழாகக் காட்டுவது வடமொழியாளர் வழக்கம். ஆகவே, நாலிகேர என்பது, தமிழில் நாளிகேரம் என்னும் வடிவே கொள்ளும். (வே.க.3:18.).

**நாளிகேரளம்** *nāḷi-kēraḷam,* பெ. (n.) *நாளிகேளம்* பார்க்க; see *nāḷ-kēḷam.*

**நாளிகேளம்** *nāḷi-kēḷam,* பெ. (n.) *நாளிகேரம் (யாழ்.அக.)* பார்க்க; see *nāḷikēram.*

*[நாளிகேரம் → நாளிகேளம்.]*

**நாளிகை** *nāḷigai,* பெ. (n.) **1.** *நாழிகை* பார்க்க; see *nāḻigai.* **2.** நாளம்; a tube.

*[நாழி → நாளி → நாளிகை]*

**நாளிடு—தல்** *nāḷi-iḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நன்னாள் குறித்தல்; to fix or appoint an auspicious day, as for a marriage. "*நாளை வதுவை மணமென்று நாளிட்டு*" (திவ்.வாய்ச்.6:2).

*[நாள் + இடு–.]*

**நாளிதம்** *nāḷidam,* பெ. (n.) சேம்பு; arum colocasia.

*[நாள் + இதம் → நாளிதம்.]*

**நாளிதழ்** *nāḷidaḻ,* பெ. (n.) செய்தித்தாள்; news paper. இன்றை நாளிதழ்கள் பெரும்பாலும் நடுநிலையாகச் செய்திகளைத் தருவதில்லை. (இக்.வ.). மேனிலைப்பள்ளி மாணவர்களுக்காக, இன்றைய சில நாளிதழ்கள், வினாவிடைப் பகுதிகளை வெளியிடுகின்றன.

**மறுவ.** நாட்டுநடப்பு.

*[நாள் + இதழ்.]*

**நாளிது** *nāḷidu,* பெ.எ. (adj.) *நாளது (இ.வ.)* பார்க்க; see *nāḷ-adu.*

*[நாள் + இது.]*

**நாளிமியாவரை** *nāḷimiyāvarai,* பெ. (n.) சூரத்து நிலாவாரை; surat senna.

**நாளிருக்கை** *nāḷirukkai,* பெ. (n.) *நாளோலக்கம்* பார்க்க; see *nāḷ-ōlakkam.* "*பெருநாளிருக்கை விழுமியோர் குழீஇ*" (மதுரைக்.525.).

*[நாள் + இருக்கை.]*

**நாளில்** *nāḷil,* வி.எ. (adv.) *நாளடைவில்* பார்க்க; see *nāḷ-aḍaivil.* "*மனத்தினை நாளிற் றாழ்குழல்.....ஆக்கினான்*" (திருவாலவா.8:2.).

*[நாள் + இல்.]*

**நாளினி** *nāḷiṉi,* பெ. (n.) **1.** புளிமா (மலை.); hog. plum. **2.** புளி மாமரம்; sour mango tree.

*[நாள் → நாளினி.]*

புளிப்பு முற்றிய நிலையே இனிப்பாதலின் உற்றபெயர். புளிப்புக்கனியுண்டாக்கும் மாமரம் எனினும், ஒக்கும்.

**நாளினுநாளும்** *nāḷiṉu-nāḷum,* வி.எ.(adv.), ஒவ்வொரு நாளும்; every day. "*நம்பன் செல்லு நாளினுநாளு நலமிக்கே*" (சீவக. 363.).

*[நாள் + இனி+நாளும்.]*

**நாளீபம்** *nāḷīpam,* பெ. (n.) கடம்பு; cadamba tree.

**நாளுக்கு** *nāḷukku-,* வி.எ. (adv.) **1.** ஒரு நாளில் (வின்); for the day, on a day **1.** நாளுக்கு ஒரு புது வேட்டி கட்டுவது பகட்டாரவாரமாகும் (இ.வ.) **2.** நல்லநாளில் (யாழ்ப்); on an auspicious day

*[நாள் → நாளுக்கு.]*

**நாளுக்குநாள்** *nāḷukku-nāḷ-,* வி.எ. (adv.) ஒவ்வொரு நாளும்; from day to day. 'நாளுக்கு நாள் நோய் வாட்டுகிறது' (உ.வ.). 'நாளுக்கு நாள் வெயிலின் கொடுமை தாங்கமுடியவில்லை' (இக்.வ.). 'நாளுக்கு நாள் தண்ணீர்த்தட்டுப்பாடு கூடிக்கொண்டே போகிறது' (இக்.வ.).

*[நாளுக்கு + நாள்.]*

**நாளுநாளினும்** *nāḷu-nāḷiṉum,* வி.எ. (adv.) *நாளினு நாளும்* பார்க்க; see *nāḷiṉu-nāḷum.* "*நாளுநாளினு நைந்து*" (சீவக.1628.).

*[நாளு + நாளினும்.]*

**நாளும்** *nāḷum,* வி.எ. (adv.) ஒவ்வொருநாளும்; every day, "*நல்லறிவு நாளுந் தலைப்படுவார்*" (நாலடி,139.).

மறுவ. நாள்தோறும்.

*[நாள் → நாளும்.]*

**நாளும்நினை-த்தல்** *nāḷum-niṉai-,* 4. செ.கு.வி. (v.i.) ஒவ்வொருநாளும் இடைவிடாது எண்ணுதல்; to think everyday without break.

*[நாளும் + நினை-.]*

**நாளுல-த்தல்** *nāḷ-ula-,* 4. செ.கு.வி. (v.i.) இறத்தல்; to end one's days, *die.* "*தேனுக ணாசமாகி நாளுலப்ப*" (திவ்.திருச்சந். 80.).

*[நாள் + உல-.]*

உல் → உல.

**நாளெல்லை** *nāḷ-ellai,* பெ. (n.) **1.** அந்திநேரம் (யாழ்.அக.); sunset, close of the day **2.** இறுதிக்காலம், (மரண காலம்); the end of the one's days,time of death நாளெல்லைக் காலத்தில்தான் சிலருக்கு நல்லதுகெட்டது புரியும். (உ.வ.)

மறுவ. கதிரவன் மறைவு. வாழ்வினிறுதி.

*[நாள் + எல்லை.]*

**நாளேடு** *nāḷēḍu,* பெ. (n.) *நாளிதழ்* பார்க்க; see *nāḷidaḻ.* மக்களிடையே நாளேடு படிக்கும் பழக்கம் வளர்ந்துள்ளது (இ.வ.).

*[நாள் + ஏடு.]*

**நாளோர்வை-த்தல்** *nāḷēr-vai-,* 4செ.கு.வி. (v.i.) *நாளேரடி-த்தல்* பார்க்க; see *nāḷēr-aḍi-.*

*[நாள் + ஏர்+வை-.]*

**நாளேரடி—த்தல்** *nāḷ-ēr-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) நல்ல நாளில் உழத்தொடங்குதல் (இ.வ.); to begin ploughing on an auspicious day

மறுவ: நல்லேர் அடித்தல், பொன்னேர் பூட்டுதல்.

*[நாளேர் + அடி—.]*

**நாளை[1]** *nāḷai,* வி.எ. (adv.) 1. 'இன்று' என்று குறிப்பிடப்படும் நாளுக்கு அடுத்த நாள்; tomorrow. இன்றும் நாளையும் விடுமுறை (இக்.வ.). 2. எதிர்காலம்; the near future. நாளை என்பது நம் குழந்தைகள் கையில். (இக்.வ.). நாளைநடப்பதை யார் அறிவார்? (இக்.வ.) இன்று நீ செய்யும் தவற்றுக்கு நாளை பதில் சொல்ல வேண்டியிருக்கும்.(இக்.வ.)

*[நாள் → நாளை.]*

**நாளை[2]** *nāḷai,* வி.எ. (adv.) 1. அடுத்த நாளில்; tomorrow "*நாளை வதுவை மணமென்று நாளிட்டு*" (திவ்.நாய்ச்.6,2.). 2. எதிர்காலத்தில்; in the future. நாளை நடப்பதை அறிவார் யார்? (இ.வ.). இன்று நீ செய்யும் தவற்றுக்கு நாளை விடை சொல்ல வேண்டியிருக்கும் (இக்.வ.).

ம. நாள.

**நாளை[3]** *nāḷai,* பெ.எ. (adj.). நாளுக்குரிய; pertaining to a day. "*ஒருநாளை யின்பமே காமுறுவர்*" (நாலடி,54.).

*[நாள் → நாளை.]*

**நாளை[4]** *nāḷai,* பெ. (n.) மருந்துக் குணமுள்ள மரம்; a medicinal tree. (சா.அக.).

**நாளைக்கழித்து** *nāḷai-k-kaḻittu,* வி.எ. (adv.). *நாளைநின்று (இ.வ.).* பார்க்க; see *nāḷai-niṉṟu.*

*[நாளை + கழித்து.]*

**நாளைக்கு** *nāḷaikku.* வி.எ. (adv.). அடுத்த நாளில், மறுநாளில்; tomorrow.

க., நாளெகெ.

*[நாளை → நாளைக்கு.]*

**நாளைநின்றன்று** *nāḷai-niṉṟaṉṟu.* வி.எ. (adv.). *நாளை நின்று (இ.வ.)* பார்க்க; see *nāḷai-niṉṟu.*

**நாளைநின்று** *nāḷai-niṉṟu,* வி.எ. (adv.) பிற்றை நாளை அடுத்து (நெல்லை); on the day after tomorrow.

*[நாளை + நின்று.]*

**நாளைநீக்கி** *nāḷai-nīkki,* வி.எ. (adv.). *நாளை நின்று (இ.வ.).* பார்க்க; see *nāḷai-niṉṟu.*

*[நாளை + நீக்கி.]*

**நாளைமற்றைநாள்** *nāḷai-maṟṟai-nāḷ,* வி.எ. (adv.). நாளை அல்லது நாளை நின்று. (இ.வ.); tomorrow or the day after. 2. இனிமேல்; sometime hence 3. வருங்காலத்தில், பிற்காலத்தில்; here after

*[நாளை + மற்றை + நாள்.]*

**நாளைமறுநாள்** *nāḷai-maṟu-nāḷ,* பெ. (n.) 'நாளை' என்று குறிப்பிடப்படும் நாளுக்கு அடுத்து வரும் நாள்; day after tomorrow.

*[நாளை + மறுநாள்.]*

**நாளைய[1]** *nāḷaiya,* பெ.எ. (adj.) 1. தற்காலத்துக்குரிய; modern, of the present time. 'இந்நாளைய மனிதர்' (வின்.). 2. நாளுக்குரிய; pertaining to a day. "*பத்து*

*நாளைய வேலை*"(வின்.). 3. மறுநாட்குரிய; pertaining to the following day. 'நாளைய வேலை' (இக்.வ.).

*[நாள் → நாளை → நாளைய.]*

**நாளைய**[2] *nāḷaiya*, கு.பெ.எ. (adj.) எதிர்காலத்தில் வரவிருக்கும் of tomorrow, future. இன்றைய மாணவர்களே நாளைய ஆட்சியாளர்கள் (இக்.வ.). நாளைய தேவைகளைக் கணக்கில் கொண்டு அரசு தீட்டிய திட்டங்கள். (இக்.வ.).

*[நாள் → நாளை → நாளைய.]*

**நாளையினின்று:** *nāḷaiyiṉ-iṉṟu*, வி.எ. (adv.). *நாளைநின்று* பார்க்க; see *nāḷai-niṉṟu.*

**நாளொருமேனி** *nāḷoru-mēṉi*, பெ. (n.) தொடர்வளர்ச்சி; continuous growth "நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாகக் குழவி வளர்ந்து வருகிறது" (இ.வ.).

*[நாளொரு + மேனி.]*

இது மரபிணைமொழியாகும்.

**நாளோட்டு—தல்** *nāḷ-ōṭṭu-*, 5. செ.கு.வி. (v.i.) 1. காலங்கழித்தல்; to pass one's days. 2. காலத்தாழ்வு செய்தல்; to delay, procrastinate

*[நாள் + ஓட்டுதல்.]*

நாளோட்டுதல் என்னுமிச்சொல் மரபுத் தொடராக, மக்களிடையே வழக்கூன்றி யுள்ளது.

**நாளோதி** *nāḷ-ōdi*, பெ. (n.) ஐந்திறஓதுவோன்; (நன்.138, மயிலை); one whose duty is to make known the titi, nakṣatra etc., of every day.

*[நாள் + ஓதி.]*

**நாளோலக்கம்** *nāḷōlakkam*, பெ. (n). கடவுளர், அரசரது காலை யத்தாணியிருப்பு; durbar, assembly of state. "*நாளோலக்கமருள அரங்கத்தம்மா பள்ளி யெழுந்தருளாயே*" (திவ்.திருப்பள்ளி.9).

*[நாள் + ஓலக்கம்.]*

**நாளோலை** *nāḷ-ōlai*, பெ. (n.). 1. முழுத்த ஒலை; ōlai or notice of the auspicious hour, as of a marriage, sent round as invitation "*கொற்றவர் திருவுக்கேற்பக் குறித்து நாளோலை விட்டார்*" (பெரியபு. தடுத்தாட்.9). 2. வீடுவேய்தற்கு நல்லநாள் பார்த்து ஒலை வெட்டுகை; cutting ōlas on an auspicious day for thatching a house 3. நல்ல முழுத்தத்தில் வீட்டுக்கு ஒலைவேய்கை; thatching a house with ōlai in an auspicious hour, 4. கணியத்துளொரு வகை (யாழ்.அக.); horoscope.

*[நாள் + ஓலை.]*

**நாற்கணம்** *nāṟ-kaṇam*, பெ. (n.). உயிர்க்கணம், வன்கணம், மென்கணம், இடைக்கணமென்ற நால்வகை யெழுத்துக்கள் (யாழ்.அக.); the four kinds of letters, viz., uyir-k-kaṇam, vaṉkaṇam, meṉ-kaṇam, iḍai-k-kaṇam.

*[நாள் + கணம்.]*

**நாற்கதி** *nāṟ-kaḍi*, பெ. (n.). மக்கள், தேவர், நரகர்,விலங்கு என்ற நால்வகைப் பிறப்பு (யாழ்.அக.); the four modes of existence through which the soul may pass, according to its karmam, viz, makkaḷ, dēvar, naragar, vilaṅgu.

*[நால் + கதி.]*

சமணமதத்தின் இக் குறியீடு நாற்குழுப் பிறப்பு பற்றியது.

**நாற்கவி** *nāṟ-kavi,* பெ. (n.). 1. ஆசுகவி, மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்ற நால்வகைக்கவி (பிங்.); the four kinds of poetry viz, āšu-kavi, madura-kavi, cittira-kavi, vittāra-kavi. 2. ஆசுகவி முதலிய நால்வகைப் புலவர்கள் (வச்சணந்.செய்யு.1); the four classes of poets.

*[நால் + கவி]*

**நாற்கவிராசநம்பி** *nār-kavi-rāša-nambi,* பெ. (n.). அகப்பொருள் விளக்கம் இயற்றிய சைனவாசிரியர்; the jaina author of agapporuḷ-viḷakkam.

தொல்காப்பியம் எழுத்து, சொல் என்ற இரண்டதிகாரத்துக் கூறியவற்றை, நன்னூல் சுருக்கியும், திருத்தியும் எழுதிய செம்மை போன்றே, அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்ற நான்கு இயல்களில் கூறியவற்றைத் திறம்படத் தொகுத்தும், வகுத்தும் எழுதிய நூலாசிரியர்.

**நாற்காலி** *nāṟ-kāli,* பெ. (n.). 1. *நாற்காற்சீவன் (நாமதீப.234)* பார்க்க; see *nāṟ-kāṟ-šīvaṉ.* 2. நான்குகாலுள்ள பீடம். "*நாற்காலிப் பீடமொன்று*" (S.I.I.ii.195); any four legged seat, as a chair, a stool.

*[நால் + காலி. கால் → காலி.]*

'இ' உடைமை குறித்த ஈறு.



**நாற்காற்சீவன்** *nāṟ-kāṟ-šīvaṉ,* பெ. (n.). நாலுகால்களையுடைய விலங்கு (யாழ்.அக.); quadruped.

**நாற்குணம்** *nāṟ-kuṇam,* பெ. (n.) 1. ஆடுஉக்குணங்கள் நான்கு; the four masculine qualities. 2. மகடூஉக்குணங்கள் நான்கு; the four feminine qualities. "நாற்குணமு நாற்படையா" (நள.32).

*[நான்கு → நால் + குணம்.]*

அச்சம், மடம், நாணம், பயிர்ப்பு என்று, பெண்களின் பண்பாகக் கூறப்படும் நான்கு. அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி என நான்கு குணங்களை ஆடவர்க்குரியதாகப் பிங்கலம் கூறுகிறது.

**நாற்கைவிலங்கு** *nāṟkai-vilaṅgu,* பெ. (n). நான்கு கைகளையுடைய குரங்கு முதலான பாலூட்டிகள்; four handed animals like monkey, ape etc

*[நால்கை → நாற்கை + விலங்கு.]*



**நாற்கோணக்கொடி** *nāṟ-kōṇa-k-koḍi,* பெ. (n.). வெள்ளைவட்டச்சாரணை; white flowered trianthema.

*[நாற்கோணம் + கொடி.]*

**நாற்கோணம்** *nāṟ-kōṇam,* பெ. (n.). நான்கு கோணமுள்ள உருவம் (யாழ்.அக.). square; quadrangular figure, tetragon.

*[நால் + கோணம்]*

**நாற்சதுரம்** *nāṟ-caduram,* பெ. (n.). 1. சமநீளமும், சமஅகலமுமுடைய உருவம் (யாழ்.அக.); square. 2. *பிரண்டை;* square-stalked vine.

*[நால் + சதுரம்.]*

**நாற்சந்தி**[1] *nāṟ-šandi,* பெ. (n.) நாலுதெருக்கள் கூடுமிடம்; junction of four roads or streets.

*[நால் + சந்தி.]*

**நாற்சந்தி**[2] *nāṟ-šandi,* பெ. (n.). மூக்கின் உட்புறத்தில் காது, கண், தொண்டை முதலான நான்கு துளைகள் இணையுமிடம்; the pharyngeal opening or cavity which forms the junction of four passages viz- nose, ears, eyes and throat

*[நால்சந்து → நாற்சந்தி]*

**நாற்சாதி** *nāṟ-cādi,* பெ. (n.). 1. நான்கு வகை இனப்பகுப்பு; the four different castes. 2. கொக்கோகம் நூலிற் கூறியுள்ள நான்குவகைப்பெண்ணினம்; the four classes of women divided according to their lust. 3. நான்கு வகை ஆணினம்; the four classes of men divided according to their passion etc. 4. நான்குவகைப் பிரிவைக்குறிக்கும் பொதுச்சொல்; any classification into four

*[நால்சாதி → நாற்சாதி]*

**நாற்சாதிக்கரு** *nāṟ-cādi-k-karu,* பெ. (n.). நான்குவகைப்பெண்களின் வயிற்றிலுண்டாகும் கரு; the foetuses of the four classes of women

*[நாற்சாதி + கரு]*

**நாற்சாதிப்பெண்** *nāṟ-cādi-p-peṇ,* பெ. (n). பருவப்பொருண்மையில் பகுக்கப்பட்ட நான்குவகைப் பெண்கள்; women divided into four types according to her lifes span.

*[நால்சாதி → நாற்சாதி + பெண்.]*

சாம்பசிவ மருத்துவ அகரமுதலி பெண்களைப் பருவத்தின் அடிப்படையில் நான்கு வகையாகப் பிரித்துள்ளது. வருமாறு:–

1. குமரி (வாலை).
2. கன்னி (தருணி).
3. இளம்பெண் (பிரிவிடை).
4. பேரிளம்பெண் (விருத்தை).

**நாற்சாரும்வீடு** *nāṟ-cārum-vīḍu,* பெ. (n). வீட்டின் சுற்றுக்கட்டு (யாழ்ப்.); a square-built house with verandah inside.

*[நால் + சாரம் + வீடு → சாரும்வீடு.]*

**நாற்சி** *nāṟci,* பெ. (n.). தொங்குகை (யாழ்.அக.); hanging.

*[நால்சி→நாற்சி.]*

நாலுதல்=தொங்குதல்.

**நாற்சில்வண்டி** *nāṟcil-vaṇḍi,* பெ. (n.). நான்குசக்கரங்களையுடைய வண்டிவகை (பாண்டி.); four-wheeled carriage.

*[நால்சில் → நாற்சில் + வண்டி]*

**நாற்சீரடி** *nāṟ-cīraḍi,* பெ. (n.). நான்கு சீர்களைக் கொண்ட நேரடி; nēraḍi, which consists of four šīrs (metrical foot). "*வெண்பாவும், ஆசிரியப்பாவும், கலிப்பாவும் அவ் வடியினால் வரும்*" (இளம்.தொல்.செய்யுள். 64.).

மறுவ. அளவடி.

*[நால்சீர் + நாற்சீர + அடி.]*

1. நாற்சீரடி கொண்ட நேரிசை வெண்பா:–
"வெய்ய வினையிரண்டும் வெந்தகல மெய்யுருகிப்
பொய்யும் பொடியாகாது என்செய்கேன்–
செய்ய திருவார் பெருந்துறையான் தேனுந்து
செந்தீ மருவா திருந்தேன் மனத்து".

2. நாற்சீரடி கொண்ட ஆசிரியப்பா:–
"வேறுவேறுருவும் வேறுவேறு இயற்கையும்
நூறுநூறு ஆயிரம் இயல்பினதாகி
குதிரையைக் கொண்டு குடநாடு அதன்மிசைச்
சதுர்படச் சாத்தாய்த் தானெழுந்து அருளியும்"

3. நாற்சீரடி கொண்ட தரவுகொச்சகக் கலிப்பா:–
'வேனில்வேள் மலர்க்கணைக்கும் வெண்ணகைச்செவ் வாய்க்கரிய
பானலார் கண்ணியர்க்கும் பதைத்துருகும் பாழ்நெஞ்சே
ஊனெலாம் நின்றுருகப் புகுந்தாண்டான் இன்றுபோய்
வானுளான் காணாய் நீ மாளாவாழ்கின்றாயே'

**நாற்படை** *nāṟ-paḍai,* பெ. (n.). யானை, தேர், பரி, காலாள் என்ற நால்வகையான சேனை; the four division of army. viz, yāṉai, ter,pari-kālāl. "நாற்படைவன்னியர்" (கல்லா.37,15.).

*[நால் + படை.]*

**நாற்பத்துமுக்கோணம்** *nāṟ-pattu-mukkōṇam,* பெ. (n.). நாற்பது கோணங்களை உள்ளடக்கியதும் மாந்த ஆற்றலின் மந்தணங்களை உள்ளடக்கியதுமான மந்திரச் சக்கரம்; a mysterious diagram consisting of forty triangles.

*[நால்பத்து → நாற்பத்து + முக்கோணம்.]*

**நாற்பதாண்டுமூலி** *nāṟ-padāṇḍu-mūli,* பெ. (n.). பசியுணர்வு ஏற்படாமலிருக்கும் பொருட்டு 40 ஆண்டுகட்கு ஒருமுறை சித்தர்களால் உண்ணப்படும் மூலிகைமருந்து; a kind of rare medicinal drug used by siddhar's once in forty years to suppress or get over hunger. (சா.அக.)

*[நால்பது → நாற்பது + ஆண்டு + மூலி]*

**நாற்பால்மரம்** *nāṟ-pāl-maram,* பெ. (n ). ஆல், அரசு, அத்தி, இத்தி என்னும் நால்வகை மரம்; the four milk yielding trees banian, peepul, fig and nomboid leaved fig. (சா.அக.)

*[நால்பால் → நாற்பால் + மரம்.]*

**நாற்பொருள்** *nāṟ-poruḷ,* பெ. (n ). அறம், பொருள், இன்பம், வீடு எனும் நால்வகைப்பொருள்; the four fold virtues viz., aṟam, poruḷ, iṉbam, vīḍu.

*[நால்பொருள் → நாற்பொருள்.]*

**நாற்பொன்** *nāṟ-poṉ* பெ. (n.). நான்குவகை மாழைகள் (உலோகம்); the four kinds of metals.

*[நால்பொன் → நாற்பொன்.]*

நான்குவகை மாழைகளாகச் சாம்பசிவ மருத்துவ அகரமுதலி கூறுவது.

1. கரும்பொன் (இரும்பு)- black gold
2. செம்பொன் (செம்பு)-red gold.
3. வெண்பொன் (நிகர்வெள்ளி)-white gold.
4. மஞ்சட்பொன் (நற்பொன்– ஆணிப்பொன்)-yellow gold.

**நாற்றங்கருங்காலி** *nāṟṟaṅ-karuṅgāli,* பெ. (n.). கருங்காலி மரவகையுள்ளொன்று; a kind of karuṅgāli tree.

**நாற்றங்கால்**[1] *nāṟṟaṅgāl,* பெ. (n.). நெல்முதலியவற்றின் நாற்றுக்களை வளர்க்கும் இடம்; nursery for paddy and other seedlings.

*[நாறுதல் = தேன்றுதல், முளைத்தல். நாறு = நாற்று. நாற்று + அம் + கால்.] இளம்பயிர், அல்லது பறித்து நடக்கூடிய பயிர் முதலானவற்றை விதைக்கும் இடம்.*



**நாற்றங்கால்**[2] *nāṟṟaṅgāl,* பெ. (n.). கொள்கையாளர் கூட்டம் உருவாகக் கரணியமாக இருப்பவர்; a leader who trains people for a principle. 'மறைமலையடிகள் தனித்தமிழ் கொள்கைக்கு நாற்றங்காலாய்த் திகழ்ந்தார்' (உ.வ.).

*[நாற்றம் + கால்.]*

பயிர்நன்கு வளர்ந்து செழித்துப் பயன்தரவேண்டுமாயின், நாற்றங்காலின் தேவை மிகவும் அடிப்படையானது. நாற்றங்காலில் பாவிய நெல் பழுதின்றி வளர்ந்து, குறிப்பிட்ட காலத்திற்குப் பின்பு நடவுவயலில் நடவேண்டும். இஃதே போல், தனித்தமிழ் கொள்கைவித்து வளர்ந்து, செழித்தோங்குதற்கு அடிப் படையாகத் திகழ்ந்தவர், மறைமலை யடிகளாவார். இவர்தம் செம்மாந்த தனித்தமிழ்நடை, கல்வியாளரிடையே நாற்றங்காலாய்த் திகழ்ந்தது எனலாம்.

**நாற்றங்கேள்–தல்** *nāṟṟaṅ-kēḷ-,* 11. செ.குன்றாவி. (v.t.). மணமறிதல்; to smell. "நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர் கூற்று" (கம்பரா. தாடகை.63.).

*[நாற்றம் + கேள்–.]*

**நாற்றங்கொல்லை** *nāṟṟaṅkollai,* பெ. (n.). *நாற்றங்கால்* (P.T.L.) பார்க்க; see *nāṟṟaṅgāl.*

*[நாற்றம் + கொல்லை நாற்றுப்பாவுமிடம்.]*

**நாற்றசூதகம்** *nāṟṟa-śūdagam,* பெ. (n.). தீயமணத்தை விளைவிக்கும் மாதர்தம் அரத்தப்போக்கு; the discharge of menses characterised by an affensive odour

*[நாற்றம் + சூது.]*

**நாற்றடி** *nāṟṟaḍi,* பெ. (n.). *நாற்றங்கால்* (நாஞ்.) பார்க்க; see *nāṟṟaṅgāl.*

**நாற்றடிப்பாட்டம்** *nāṟṟaḍi-pāṭṭam,* பெ. (n.) ஒருவர் நிலத்தில் மற்றவர் நாற்றுப்பாவுதற்குக் கொடுக்குங் குத்தகை (நாஞ்.); lease given to raise seedlings.

*[நாற்று + அடி + பாட்டம்.]*

**நாற்றடிப்பாழ்** *nāṟṟaḍi-p-pāḻ,* பெ. (n.) நாற்று (இளநாற்று) பாழ்படுகை (S.I.I.vii,279); withering of seedlings

*[நாற்று + அடி + பாழ்.]*

**நாற்றத்தமானி** *nāṟṟa-t-tamāṉi,* பெ. (n.) 1. கொழுப்பு; fat. 2. இறைச்சி; flesh.

**நாற்றந்தகரை** *nāṟṟan-tagarai,* பெ. (n.) 1. பேயவரை (யாழ்ப்.); negro-coffe. 2. கெட்ட மணமுள்ள தகரை (சா.அக.); fetid cassia.

**நாற்றநரம்பு** *nāṟṟa-narambu,* பெ. (n.) 1. தொப்பூழ்க் கொடி; navel string. 2. காரரத்தக் குழல்; veins 3. நறுமணத்தை யுணர்த்தும் நரம்புகள்; nerves that perceive the smell.

*[நாற்றம் + நரம்பு.]*

**நாற்றம்**[1] *nāṟṟam,* பெ. (n.) 1. நன்மணம்; good smell, scent, odour. "*நாற்ற நாட்டத் தறுகாற் பறவை*" (புறநா.70). "*முகைமொக்குள் உள்ளது நாற்றம் போல்*" (குறள்,). 2. மூக்காலறியப்படும் புலனறிவு; sense of smell, one of aim-pulaṉ. "*சுவை யொளி யூறோசை நாற்றமென்று*" (குறள்,27). 3. தீ நாற்றம் அல்லது முடைநாற்றம் (இக்.வ.); offensive smell, stench. 4. வசம்பு (மலை.); sweet flag. 5. கள்(பிங்.); toddy. 6. தொடர்பு; connection. அவர்கள் நாற்றமே எனக்கு வேண்டாம் (உ.வ). 7. தோற்றம்; (சூடா.); origion, appearance.

க., து., நாட ம., நாற்றம்.

*[ஒருகா. நாறு → நாற்று → நாற்றம்.]*

நாறுதல்:– தோன்றுதல், தோன்றித் திகழ்ந்து நன்மணம் பரப்புதல் விதையிலிருந்து முளை தோன்றுதல்: நெல், துவரை, கம்பு, முளைகட்டுங்கால், (முளை தோன்றும்பொழுது) திகழும் நன்மணம். முளைப்பு வைத்த இடத்தினின்று நன்மணம் வெளிப்படின், முளை அரும்பத்தொடங்கிவிட்டது எனலாம், முளைஅரும்புதலும், நன்மணம் நாறுதலும் ஒரே காலத்தே நிகழ்வதாகும்.

*[நாறு →நாற்றம்.]*

['அம்'= தொ.பெ.ஈறு. உலகவழக்கில், நாற்றம் என்னுஞ் சொல், தீய மணத்தையே குறிக்கும். இலக்கிய வழக்கில், நல்லது, தீயது ஆகிய இரண்டிற்கும் பொதுவாம். முதற்கண் நறுநாற்றத்தை மட்டுங்குறித்த இச் சொல், காலப்போக்கில் வேறுபட்ட அல்லது மாறுபட்ட மணத்தையுங் குறிக்கலாயிற்று. தற்போது, தீ நாற்றம் அல்லது முடை நாற்றத்தைக் குறிக்கும் பொருண்மையில் வழக்கூன்றியுள்ளது.]

"நாற்றம் உரைக்கும் மலருண்மை" (நான்மணி).

**நாற்றம்**[2] *nāṟṟam,* பெ. (n.) 1. வாணகெந்தி; sulphur used in fire-works. 2. பித்தநீர் நாளம்; bile-duct. 3. தாளகம்; yellow orpiment. 4. புனுகு; civet.

*[நாறு →நாற்றம்.]*

**நாற்றம்போக்கி** *nāṟṟam-pōkki,* பெ. (n.) 1. *நாற்றமாற்றி* பார்க்க; see *nāṟṟa-māṟṟi.* 2. நாற்றமறச்செய்யும் மருந்து; a drug that over comes or destroys ill smells.

*[நாற்றம் + போக்கி.]*

**நாற்றம்வீசு—தல்** *nāṟṟam-vīšu-,* 5 செ.கு.வி. (v.i.) தீயநாற்ற மடித்தல்; to emit a bad smell, as a carcass

*[நாற்றம் + வீசு—.]*

வீச்சம் என்பது தீய நாற்றத்தைக் குறித்த உலகவழக்கு.

**நாற்றமாற்றி** *nāṟṟa-māṟṟi,* பெ. (n.) தீயமணத்தைத் தடுக்கும் பொருட்களான கரித்துகள், சாம்பல் மண், அரம்பத்தூள் முதலியன; deodorising powders such as charcoal dust, ashes earth, saw dust etc.

*[நாற்றம் + மாற்றி.]*

**நாற்றமெடு—த்தல்** *nāṟṟam-eḍu-,* 4 செ.கு.வி. (v.i.) ***நாற்றம் வீசு—தல்*** பார்க்க; see *nāṟṟam višu-.*

*[நாற்றம் + எடு—.]*

**நாற்றரத்தவொழுக்கு** *nāṟṟaratta-v-oḻukku,* பெ. (n.) சிரங்கு, புண் இவைகளினின்றும் கெட்ட மணத்துடன் ஊன், சூழ், அரத்தம் முதலானவை வெளிப்படுகை; a fetid ichorous discharge of serum, pus, blood etc., from a wound or ulcer.

*[நாற்றம் + அரத்தவொழுக்கு.]*

**நாற்றவுணவு** *nāṟṟa-v-uṇavu,* பெ. (n.) திருப்படையல்; oblation or burnt offerings "***நாற்றவுணவின்***" (மதுரைக்.458). "முகைமொக்குள் உள்ளது நாற்றம்" (குறள்.).

*[நாறு → நாற்றம் + உணவு.]*

**நாற்றி** *nāṟṟi,* பெ. (n.) நான்கு மடங்கு; four-fold. "***கிளந்தவற்றின்...நாற்றியே***" (சீவக.567).

*[நான்கு → நாற்றி.]*

**நாற்றிசை** *nāṟṟišai,* பெ. (n.) நான்கு (திக்கு) பக்கம்; the four cardinal points. "*நாற்றிசை முனிவரும்*" (திருவாச.4:3).

*[நால் + திசை → நாற்றிசை.]*

**நாற்று[1]—தல்** *nāṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தொங்கவிடுதல்; to hang, suspend "*முத்துத் தாம முறையொடு நாற்றுமின்*" (மணிமே.1:49). 2. தூக்குப் போடுதல் (வின்.), to hang a person.

*[ஞால் → நால் → நாலு – நாற்று → நாற்றுதல் –. தொங்குதல், நாற்றுதல்= தூக்கில் போடுதல்.]*

**நாற்று[2]** *nāṟṟu,* பெ. (n.) பிடுங்கி நடக்கூடிய பயிர்; seedlings reared for transplantation. 'நெல்நாற்று நெருக்கமாக இருந்தால், தூர்கட்டி விளச்சல் தராது' (இ.வ.). 'மிளகாய் நாற்றை முழுமையாக மறைக்கும் அளவுக்குக் களை வளர்ந்திருந்தது' (இக்.வ.).

*[நாறு → நாற்று.]*

வேறு இடத்தில் பிடுங்கி, நடுவதற்கான இளம்பயிர்.

**நாற்றுக்கட்டு** *nāṟṟu-k-kaṭṭu* பெ. (n.) நாற்று முடிகளின் தொகுதி; a bundle of nāṟṟu-muḍi

*[நாற்று + கட்டு.]*



**நாற்றுக்கற்றை** *nāṟṟu-k-kaṟṟai,* பெ. (n.) *நாற்றுக்கட்டு* பார்க்க; see *nāṟṟu-k-kaṭṭu.*

*[நாற்று + கற்றை.]*

**நாற்றுத்தேங்காய்** *nāṟṟu-t-tēṅgāy,* பெ. (n.) தேங்காய் நெற்று (யாழ்ப்.); seed coconut.

**மறுவ.** விதைத்தேங்காய், பிள்ளைத் தேங்காய்

*[நெற்று → நாற்று + தேங்காய்.]*

நெற்று → நாற்று = பேச்சுத்திரிபு.

நன்கு முற்றிய தேங்காய்.

**நாற்றுநடவு** *nāṟṟu-naḍavu,* பெ. (n.) நாற்று நடுகை; transplantation of seedlings.

*[நாற்று + நடவு.]*



**நாற்றுப்பறி-த்தல்** *nāṟṟu-p-paṟi-,* 4செ.குன்றாவி. (v.t.) நாற்றங்காலிலிருந்து நெல் நாற்றுகளைப் பெயர்த்து எடுத்தல்; to transplant as of paddy nursery.

*[நாற்று + பறி-.]*

**நாற்றுப்பாக்கு** *nāṟṟu-p-pākku,* பெ. (n) விதைக்குரிய பாக்கு (யாழ்ப்.); superior areca-nuts, used as seeds

*[நாற்று + பாக்கு.]*

**நாற்றுப்பாத்தி** *nāṟṟu-p-pātti,* பெ. (n.) நாற்று உண்டாக்கும் செய்; seed-bed, nursery

*[நாற்று + பாத்தி.]*

**நாற்றுப்பாவு-தல்** *nāṟṟu-p-pāvu-,* 5 செ.கு.வி (v.i.) 1. வித்தூன்றுதல் அல்லது விதை விதைத்தல்; to sow seeds. 2. இளஞ் செடிபதியம் வைத்தல்; to transplant seedlings.

*[நாற்று + பாவு-.]*

**நாற்றுப்பிடி** *nāṟṟu-p-piḍi,* பெ. (n.) *நாற்றுமுடி* பார்க்க; see *nāṟṟu-muḍi.*

*[நாற்று + பிடி.]*

**நாற்றுப்பிடுங்கு-தல்** *nāṟṟu-p-piḍuṅgu-,* 5செ.குன்றாவி. (v.t.) *நாற்றுப் பறி-த்தல்* பார்க்க; see *nāṟṟu-p-paṟi-.*

*[நாற்று + பிடுங்கு-.]*

**நாற்றுமரம்** *nāṟṟu-maram,* பெ. (n.) நாற்றுவிட்டுப் பிறகு எடுத்து நட்டுவளர்க்கும் மரம் (யாழ்ப்.); tree grown from a seedling.

*[நாற்று + மரம்.]*

தென்னை, மாமரம் முதலானவற்றை, முதற்கண், நாற்றங்கால் போன்ற இடத்தில் மரக்கன்றுகளாக வளர்ப்பர். தக்கபருவம் வந்தபின்பு, தோப்புகளில் பெயர்த்து நடுவர்.

**நாற்றுமுடிமாலை** *nāṟṟu-muḍi-mālai,* பெ. (n.) நாற்றங்காலிலிருந்து, நடவுவயலுக்கு வாய்க்காலில் இழுத்துச் செல்லும்படி நீண்டகயிற்றில் பிணைக்கப்பட்ட நாற்றுமுடித் தொகுதி; paddy plant bundle tied with long rope fecilitate pull via water canal.

*[நாற்றுமுடி + மாலை.]*

நாற்றுகளை, ஆற்றுப் பாசனம் அல்லது நீண்டவாய்க்கால் படுகையிலுள்ள வயல்கட்கு, எளிமையாகக் கொண்டு செல்லுதற்குப் பயன்பட்ட வழி எனலாம்.

**நாற்றுமுடி** *nāṟṟu-muḍi,* பெ. (n) ஒருசேரக் கட்டிய நாற்றின் முடிப்பு (ஏரெழு.31.); a small bundle of seedling for transplantation

*[நாற்று + முடி.]*



**நாற்றுவிடு—தல்** *nāṟṟu-viḍu-,* 18 செ. குன்றாவி. (v.t.) நாற்று உண்டாக்க விதை விதைத்தல்; to grow seedlings.

மறுவ. நாற்றுப்பாவுதல்.

*[நாற்று + விடு—.]*

*விதையை அல்லது தவசத்தை ஊறவைத்து, நிலத்தில் முளைக்கச் செய்வதற்காகப் பாவுதல்.*

**நாறடி—த்தல்** *nāṟaḍi-,* 4 செ.கு.வி. (v.i.) தரக்குறைவாக நடந்து மதிப்பின்மையை உருவாக்குதல்; to talk or behave in an extremely brazen manner

*[நல் → நறு → நாறு + அடி —.]*

*பொதுவாக உயர் பணியிலிருப் போர். தம்கடமையைச் செவ்வனே செய்யாது, கண்ணியக் குறைவாக நடத்தல். சால்புடைமையைக் குழி தோண்டிப் புதைத்துத் தரக்குறைவாக நடத்தல்.*

**நாறல்** *nāṟal,* பெ. (n) 1. நாறுகை; stinking, being offensive in smell 2. முடை நாற்றம்; stench, bad smell *"நாறற் பாழ்ந்துணி"* (அரிச்பு.சூழ்வி. 91.). 3. நாற்றமுடையது; stinking object. 4. தோன்றல்; coming to existence. 5. முளைத்தல்; spiringing out.

*[நாறு → நாறல்.]*

**நாறல்தேகம்** *nāṟal-tēgam,* பெ. (n.) நாற்றவுடம்பு; vile body.

**நாறல்வாயன்** *nāṟal-vāyaṉ,* பெ. (n.) வாய் நாற்றமுடையவன்; person whose mouth smells foul. 2. இவறன் (கஞ்சன்); miser *"நல்லவாயன் தேட்டை நாறல்வாயன் தின்னுவான்"* (பழ.). 3. யாவராலும் வெறுக்கத் தக்க வாய்முடை நாற்றத்தினன்; dirty, loath some person.

*[நாறல் + வாயன்.]*

**நாறற்பாக்கு** *nāṟaṟ-pākku,* பெ. (n.) சுவையுண்டாகத் தோலை அழுகுமாறு செய்த பாக்குவகை (யாழ்.அக.); areca-nut soaked in water till its husk begins to putrefy

[நாறல் + பாக்கு.]

பாக்கும் புகையிலையும் புற்று நோய்வருவிக்கும் தன்மையன. அதற்கு வெற்றிலை சேர்ப்பது மருந்தாகிச் செரிப்பிக்கும். இளைஞர்கள் பாக்கும் புகையிலைத்தூள்கலந்த பொக்கணமும் போடுவது மிகு கேடு.

**நாறனா** *nāṟaṉā*, பெ. (n) நெட்டி (மூ.அ.); sola pith

**நாறாக்கரந்தை** *nāṟā-k-karandai*, பெ. (n.) சிவகரந்தை; śivā's basil

**நாறி**[1] *nāṟi*, பெ. (n.) கற்றாழை (மலை.); aloe

[நார் → நாரி → நாறி = நாரினை மிகுதியாக உடையது.]

கற்றாழைகளில், சோற்றுக்கற்றாழை மருந்துப் பொருளாகவும், நீண்ட கற்றாழையில் நார் மிகுந்திருப்பதால் கயிறு போன்றவை திரிக்கவும் பயன்படுகிறது.

**நாறி**[2] *nāṟi*, பெ. (n.) நன்னாரி (சங்.அக.); indian sarasaparilla

[நார் → நாரி → நாறி.]

**நாறு**[1]**-தல்** *nāṟu-*, 5 செ.கு.வி. (v.i.) மணத்தல், to emit a sweet smell, to give forth perfume. "*நாறுபூம்பொழி னாரையூர்*" (தேவா.215:1.). 2. கெட்ட நாற்றம் வீசுதல்; to stink. "அழுகிய முட்டையைக் குளிர்பெட்டியில் வைத்ததால், காய்கறியெல்லாம் நாறுகிறது" "*நாறாதெடுத்தடவி வெரியூடே*" (திருப்பு.904.). 3. தோன்றுதல்; to appear, arise. "*திருநாறு விளக்கத்து*" (பதிற்றுப்.52,13.). 4. பிறத்தல்; to come into being, to be born "*தேர்பத்தினன் மகவென நாறி*" (கல்லா.94:25.). 5. முளைத்தல்; to sprout, shoot forth "*நிலத்திட்ட நல்வித்து நாறாமை யின்னா*" (இன்.நாற்.20.).

க., ம., நாறு.

[நுல் → நல் → நறு → நாறு-.]

தோன்றுதற்கருத்து வேரினின்று, இச் சொல் கிளைத்தது. காலப்போக்கில் நறுமணத்தைக் குறித்து நின்றது. இன்று மக்களிடையே முடைநாற்றத்தைக் குறிக்குஞ்சொல்லாக, வழக்கூன்றியுள்ளது. தற்காலத்தே, தகாத வழியில் பொருள் சேர்ப்போரின் செயற்பாடும், நாறுதல் என்னும் மக்கள்வழக்கு, குறித்தலுணர்க.

**நாறு**[2]**-தல்** *nāṟu-* 5 செ.குன்றாவி. (v.t.) முகர்தல்; smell "*உற்று நாறியுங் கண்டு முணர்ந்து*" (சீவக,885.).

[நறு → நாறு-.]

**நாறு**[3] *nāṟu*, பெ. (n.) 1. *நாற்று* பார்க்க; see *nāṟṟu* "*நாறிது பதமெனப் பறித்து*" (சீவக. 45). 2. முளை (வின்.); shoot, sprout

[நல் → நறு → நாறு.]

முளை, நாற்று போன்ற பொருண்மையில் கழகக்காலத்தே, இச்சொல் வழக்கூன்றி யிருந்தது. பதிற்றுப்பத்தும், கல்லாடமும் 'நாறு' பற்றிய சொல்லாட்சிக்கு நற்சான்றாய்த் திகழ்கின்றன. காலப் போக்கில், கழகக்காலத்திற்குப் பின்பு சீவகசிந்தாமணியிலும், இச் சொல் பற்றிய குறிப்புக் காணப்படுகிறது.

தெ., ம., நாறு. க., நாறே.

**நாறுகட்டி** *nāṟu-kaṭṭi*, பெ. (n.) பெருங்காயம் (யாழ்.அக.); asafoetida

[நாறு(ம்) + கட்டி.]

**நாறுகரந்தை** *nāṟu-karandai.* பெ. (n.) கொட்டைக்கரந்தை (குறிஞ்சிப். 76, உரை); indian globe thistle.

*[நாறு + கரந்தை.]*

**நாறுநறுவிலி** *nāṟu-naṟuvili.* பெ. (n.) கொட்டை நாகவகை; clove - leaved black plum

*[நாறு + நறுவிலி.]*

**நான்** *nāṉ.* ப. பெ. (pro n.) தன்மையொருமைப் பெயர்; first person singular one of three iḍam "*ஊனில்ஆவி உயிர்க்கும் பொழுதெல்லாம் நான் நிலாவியிருப்பன் என் நாதனை*". (அப்பர்.தேவாரம்).

தெ., நா. க., நான். ம., நான்.

Aust nganya

chin ngowo

*[யான் → நான்.]*

**நான்காம்குட்டம்** *nāṉgām-kuṭṭam,* பெ. (n.) உடம்பு முழுவதும் பச்சை வண்ணத்துடன் கூடிய புண்களை யுருவாக்கும் தொழுநோய்; a kind of leprosy marked by green pallor of the skin and lesions all over the body

*[நாலாம் → நான்காம் + skt. குட்டம்.]*

**நான்காம்வேதம்** *nāṉgām-vēdam,* பெ. (n) நான்காவது வடமொழி வேதமான அதர்வம்; the adarva-vēdam, as the fourth.

*[நான்கு + ஆம் + வேதம்.]*

ருக், யஜுர், சாம, அதர்வணமென்று வடமொழியில் நான்கு மறைகள் அன்றித் தமிழில் இருந்ததாகக் கருதும் அறம். பொருள். இன்பம். வீடு என்பனவற்றுள் வீடு ஆகும். இது குறித்து ஆய்வாளி டையே கருத்துவேறுபாடு உண்டு.

**நான்காமீற்றுப்பால்** *nāṉgām-īṟṟu-p-pāl* பெ. (n) நான்குமுறை கன்று போட்ட ஆவின்பால்; the milk yielded by the cow in its fourth calving

*[நாலாம் → நான்காம் + ஈத்து → ஈற்று + பால்.]*

**நான்காமுறைக்காய்ச்சல்** *nāṉgāmuṟai-k-kāyccal.* பெ. (n.) *நானாளை மாறன்* பார்க்க; see *nāṉāḷai-māṟaṉ*

*[நான்காமறை + காய்ச்சல்.]*

**நான்கு**[1] *nāṉgu.* பெ. (n) மூன்றுக்குமேல் ஒன்றுகூடும் எண்; the number four "அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும்" (நாலடி,82.).

தெ., நாலுகு ம. நாங்கு.

*[நால்–நால்கு→நான்கு.]*

*(ஒ.நோ.). நல்→ நால்→நாலம்→ ஞாலம்= உலகம்.*

*பர →பார்= ஞாலம், உலகம்.*

*இது குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என நால்வகைப்பட்ட நிலத்தின் பெயரினின்று தோன்றியதாகும். ஞாலத்திற்கு, நானிலம் என்னும் பெயருண்மை காண்க. (த.வ.149.).*

**நான்கு**[2] *nāṉgu,* பெ. (n.) நாலிலொரு பங்கு வட்டிக்காகச் சேர்த்து, அறுவடையானதும் கொடுப்பதாக ஏற்றுக்கொண்டு, பெறுந் தவசக்கடன் (இ.வ.); a system of loan by which grain is borrowed in the off season and repaid at the next harvest with an addition of 25 percent as interest.

*[நால்கு →நான்கு .]*

**நான்குகண்மீன்** *nāṉgu-kaṇ-mīṉ,* பெ. (n) காக்கை போன்ற கருமை நிறத்ததும், சேல்கெண்டை இனத்தைச் சேர்ந்ததுமான, மீன்வகை; a kind of blackish sēl fish.

*[நான்குகண் + மீன்.]*

*இதன் வாலின் இருபக்கத்திலும் கண்போன்று இருபுள்ளி களையுடைய, சேல்மீன்.*



**நான்குகைப்பிராணி** *nāṉku-kai-p-pirāṇi,* பெ. (n.) *நாற்கைவிலங்கு* பார்க்க; see *nāṟ-kai-vilaṅgu.*

*[நான்குகை + skt. பிராணி.]*

**நான்குலி** *nāṉguli,* பெ. (n) முன்னை மரம்; indian head acha tree

**நான்கெல்கைமால்** *nāṉgelgai-māl,* பெ. (n.) 1. நிலவெல்லை; limits or boundaries of a piece of land 2. அதிகாரவரம்பு; jurisdiction, as pertaining to boundaries

*[நால்கு → நான்கு + எல்லை → எல்கை + மால்.]*

**நான்மணிக்கடிகை** *nāṉmaṇi-k-kaḍigai,* பெ. (n.) பதினெண்கீழ்க்கணக்கினுள் அறம் என்னும் உறுதிப்பொருள் பற்றி, நூறு செய்யுட்களில், விளம்பிநாகனாரால் இயற்றப்பட்ட அறநூல்; an ancient didactic work by viḷambi-nāgaṉār in 100 stanzas, one of padiṉeṉ kīḻ-k-kaṇakku, (q.v )

*[நால் → நான். + மணி + கடிகை.]*

நான்கு மாணிக்கக்கற்கள் பதித்து ஆக்கிய கழுத்தணி என்னும் பெயர், ஒவ்வொரு பாவிலும் நான்கு கருத்துகள் வருவதைக் குறிக்கும் உத்தியைக் குறிப்பது.

"கள்ளிவயிற்றில் அகில் பிறக்கும். மான்வயிற்றில் ஒள்ளரிதாரம் பிறக்கும், பெருங்கடலுள் பல்விலைய முத்தம் பிறக்கும் – அறிவார் யார் நல்லாள் பிறக்கும் குடி" (நான்மணிக்கடிகை).

திரிகடுகம் மூன்றுகருத்துகளும், சிறுபஞ்சமூலம் ஐந்து கருத்துகளும், ஏலாதி ஆறுகருத்துகளும் கொண்டு வரும். அவை மூன்றும், மருந்து பற்றிய பெயர்களாக அமைய, இஃதொன்றே அணிகலன் பற்றியதாக அமைந்தது.

**நான்மணிமாலை** *nāṉ-maṇi-mālai.* பெ. (n). (அந்தாதி) ஈறு தொடக்கித் தொடையாகப் பாடப்பட்டதும், வெண்பா, கலித்துறை, அகவல், விருத்தம் என்பன, மாறி மாறி இயைந்து வரும் நாற்பது செய்யுள் கொண்டதுமான சிற்றிலக்கியவகை (பன்னிருபா. 255); a poem of 40 stanzas in andādi-t-toḍai (iṟū-toḍakki).

*[நான்கு(நான்)மணி + மாலை.]*

**நான்மருப்பியானை** *nāṉ-maruppi-yāṉai,* பெ. (n.) நாற்கொம்புடைய வெள்ளையானை (ஐராவதம்.) the four-tusked elephant of indiraṉ.

*[நால் → நால்கு → நான்கு + மருப்பு + யானை.]*

**நான்மருப்பியானையூர்தி** *nāṉ-maruppi-y-āṉai-y-ūrdi,* பெ. (n.). வெள்ளையானையை (ஐராவதத்தை) ஊர்தியாக உடைய இந்திரன் (சூடா.); indiraṉ, as riding airāvadam.

*[நால் → நால்கு → நான்கு + மருப்பு + யானை + ஊர்தி.]*

**நான்மலத்தார்** *nāṉ-malattār,* பெ. (n) தன்முனைப்பு (ஆணவம்), ஊழ்வினை, (கன்மம்), சுத்தமாயை (தூயமாயை) மறைப்பாற்றல் (திரோதாயி) என்னும் நான்கு மலமுடைய பிரளயாகலர் (தத்துவப்.21,உரை.); piraḷayā kalar having four malas, viz., taṉ-muṉaippu (āṇavam) ūḻviṉai, karumam, (kaṉmam) tūya-māyai (šutta-māyai) maṟaippāṟṟal (tirotāyi.).

(அனுக்கிருகம்) அருளல் சேர்த்துப் பிற்காலத்தில், மலம் ஐந்தென்றும் கூறுவர்.

**நான்மலர்** *nāṉ-malar,* பெ. (n). *நால்வகைப்பூ* பார்க்க; see *nāl-vaga-p-pū*

*[நால்வகை → நான்மலர்.]*

**நான்மறை** *nāṉ-maṟai,* பெ. (n.). ஆதனை வேதிக்கும் (பக்குவப்படுத்தும்) நான்கு மறைகள்; the four vēdās. "*நான்மறை முற்றிய அதங்கோட் டாசாற்கு*" (தொல்.பாயி).

*[நால்மறை → நான் மறை.]*

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் கூறுகள் என்பது தி.கா.சு.பிள்ளையின் தமிழர் சமயக்குறிப்பு.

நான்மறைபற்றி புலவர். இறைக்குருவனார் கூறுவது வருமாறு:–

வேதம், ஆகமம் என்னும் சொற்கள் அடுத்தடுத்து வைத்துப் பேசப்படுவதால், அவை இரண்டும் ஒரு நிகரன அல்ல. வேதம் – வேள்வி வழிபாட்டுக்குரிய வடபுலத்ததும், ஆகமம் கோயில் வழிபாட்டுக்குரிய தென்புலத்ததும் ஆகும்.

வேதம் முதலில் நான்காக இல்லை. இருக்கு (ரிக்) மட்டுமே, வேதமாக இருந்தது. பின்னர் அதனின்றும் பிரித்தெடுத்து, வேள்வி (எக்ஞம்) செய்வதற்கு ஏற்ப விரிவுபடுத்திய எசுர்வேதமும், இசைகூட்டிப் பாடுவதற்குச் செய்த சாமவேதமும் அமைக்கப்பட்டன.

இம் மூன்றினின்றும் பிரித்தெடுத்துச் சேர்த்ததே அதர்வன வேதம்.

நான்மறை என்னும் பழைய தமிழ் வழக்கையொட்டி, வடமொழி வேதங்களும் நால்வேதம் எனப்பட்டன.

நான்மறை என்னுஞ் சொல், தமிழில் தொல்காப்பியத்திலேயே இடம்பெற்றுள்ளது. வடமொழியில் நால்வேதம் அமைந்ததற்கு முந்தைய அதன் தொன்மையைச்சுட்டி, உரையாசிரியர் நச்சினார்க்கினியர், அந் நான்மறை, 'தமிழ்நான்மறை' என்று கூறுகிறார். அவர்கூறும் பெயர்கள் பிற்காலத்தன போலும்.

வாய்ப்பு நேர்ந்துழி நச்சினார்க்கினியரை வன்மையாக மறுத்தெழுதும் போக்குடைய மாதவச் சிவஞானமுனிவர், தாமெழுதிய தொல்காப்பியப் பாயிர விருத்தியில், நச்சினார்க்கினியரின் கருத்தை மறுத்தெழுதவு மில்லை, இருக்கு முதலாயினவென விரித்தெழுதவுமில்லை. ஆகவே, இனியர் கருத்து, முனிவர்க்கும் உடன்பாடென்றே கொள்ளலாம்.

இனி, பெரும் புலவர் அரசஞ் சண்முகனார் அவர்கள் தாமெழுதிய, தொல்காப்பிய பாயிரவிருத்தியில், நான்மறை பற்றி, நச்சினார்க்கினியர் கருத்தையே வழிமொழிகிறார். இதுபற்றிய அவர்தம் விளக்கம் வருமாறு:

"இனி, இருக்கும், யசுவும், சாமமும், அதர்வணமும் ஆகாவோவெனின், அவை அதங்கோட்டாசிரியர்க்கும், தொல் காப்பியனார்க்கும், பிற்காலத்தினராகிய வியாசமுனிவரால், சிலவாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினார்க்குப் பயன்படுமாறு, முன்னுள்ள மறையுட் சிலவற்றை, நான்கு கூறாகச் செய்யப்பட்டமையான் ஆகா வென்பது."

"இனித் தசரதன் மகன் இராகவன் காலத்திற்கு முன்னுள்ளதாகிய கபாடபுரம் தோன்றுவதற்கு முன்னும், தென் மதுரையைக் கடல்கொள்வதற்கு முன்னும், இந் நூல் செய்யப்பட்டமையானும், கபாடபுரமும் கடல்கொண்ட பின்னர், உத்தர மதுரை தோன்றிய காலத்துச் சந்துனுவின் மனைவியாகிய பரிமள கந்தியிடத்து வியாசமுனிவர் தோன்றியமையானும், அவர் பாரதத்துட் சமதக்கினி முனிவரையும், பரசுராமரையும் பற்றிக் கூறுதலால், சமதக்கினி முனிவர்க்கு மகனாரும், பரசுராமர்க்கு உடன் பிறந்தாருமாகிய, திரண தூமாக்கினி என்னும் இயற்பெயரையுடையவாசிரியர், தொல்காப்பியனார்க்கும், அவருடன் கற்ற அதங்கோட்டாசிரியர்க்கும், வியாசர் காலமும், அவர் புகுந்த நான்மறை காலமும், பிற்பட்டமை —யுணரப்படும்."

மொழிஞாயிறு பாவாணர் அவர்கள், ஆரிய வேதங்களை நான்காக வகுத்தமைத்த வியாசமுனிவரின் காலம், தொல்காப்பியர் காலத்துக்கு முந்நூறு யாண்டுகள் முந்தியது என்று கருதுகிறார். ஆகவே, ஆரிய நான்மறைகள் தொல்காப்பியத்துக்கு முந்தியன என்பதே அவர் கருத்து. இருப்பினும் தமிழில் மறைநூல்கள் மந்திரங்கள் எல்லாம் தொல்காப்பியர் கண்ட முந்துநூல்கட்கும் முந்தியன என்பதை அவர் வலியுறுத்துவது, ஈண்டுக் கருதத்தக்கது. ஆகவே, அவர் கூற்று தமிழ்நான்மறைகள் பற்றிய கருத்துக்கு முரணாமை அறியப்படும்.

இனி, தொல்காப்பியத்துக் கூறப்படும் மறையும், பிறவும் பற்றி அறிஞர் பா.வே. மாணிக்கனார் கூறுவது உளங்கொளத்தக்கது. அது வருமாறு:

தொல்காப்பியத்துச் சொன்ன மறை ஆரியமறை என்று ஒப்பினுங்கூட, உரையாசிரியர் கொள்கைப்படி, வியாசர் ஆரிய வேதங்களைச் சிக்கலகற்றித் தொகுப்பதற்கு நெடுங்காலத்துக்கு முன்னரே, தொல்காப்பியம் இயற்றலாயினது என்றலின், வியாசருக்குச் சில ஆண்டுகளுக்குப்பின்னர் வந்த, உரையாசிரியர் காலத்து வழங்கிய, இப்போது வழங்குகின்ற. உட்ராப்புத் துரையோ. மாக்கசுமுல்லரோ. பதிப்பித்த நான்கு வேதங்களல்ல என்பது. உரையாசிரியர் கூற்றாலேயே வெளிப்படை. வியாசருக்கு முந்திய ஆரியவேதமும். அவருக்குப் பிந்திய ஆரியவேதமும், ஒன்றற்கு ஒன்று படியாயின், வேதவியாசர் என்னும் பெயர்பெற்றார், புரட்டியது தான் என்ன?

வியாசருக்கு முந்திய தொல்காப்பியத்தில், வியாசருக்குப் பிந்தியதும், அவரால் திருத்தப் பட்டதுமான, ஆரிய வேதங்களினின்று திருத்தப்பட்டதுமான, ஆரிய வேதங்களினின்று உய்த்துப் பொருள்கோடல், தொல்லியல் ஆய்வு முறைக்கு ஒவ்வாது.

தொல்காப்பியத்தில் சொன்ன மறை இத்தகையது என்பது தெரிவதற்கு, நூலாவது, சுருதியாவது இப்போது இல்லை. அந்தணன் மறையைத் தழுவியே தொல்காப்பியம் எழுதப்பட்டிருக்கிறது என்பதும், தொல் காப்பியத்துட் காணாதது அந்த அந்தணர் மறையிற் காணலாகும் படியும், அவ்வந்தணர் மறையிற் காணாதவை தொல்காப்பியத்திற் காணலாகும் படியும் அமைந்திருக்கிறது என்பது, என் நம்பிக்கை.

ஆனால், அந்த அந்தணர் யாவர். அவர் மறை யாது என்பதுதான் புலப்படாதவற்றுட் சில. வடவேங்கடந் தென்குமரி ஆயிடைத் தமிழுலகத்து அந்தணர் என்பாரும், சிந்துநாட்டுப் பிராமணர் என்பாரும் ஒருவரா? தமிழ்நாட்டு அந்தணர் மறையும், சிந்துநாட்டுப் பிராமணர் வேதமும் ஒன்றேயா? நான்மறை — சதுர்வேதம், அந்தணர், அரசர், வணிகர் வேளாளர் — பிராமணர், சத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் போலிஒற்றுமை கொண்டு இரண்டும் ஒன்றென்பதா? உட்கிடை வேற்றுமை கண்டு அன்றென்பதா?

தொல்காப்பியம் சொன்ன தமிழகத்து அந்தணர் மறை, வியாசருக்குப் பிந்திய ஆரிய வேதம் அன்றென்பதற்குச் சான்று, தொல்காப்பிய நூலிற் பல்லிடங்களிற் காணலாம். சிற்சிலவே இம் முடங்கலிற் குறிக்கவியலும்.

தமிழகத்து அந்தணர் மறையோ, தெய்வம் அஃறிணை என்பது, மந்திரங்கள் மாந்தர் கிளந்தவை என்பது, அந்த மந்திரங்களுக்கு— ருக்குகள் போன்ற அளவு முறையாகிய கட்டுப்பாடில என்பது, கொடி நிலை, கந்தழி, வள்ளி என்ற சிறப்பின் மூன்றும் முதல் என்பது, ழ, ற, ன, எ ஒவ்வுமன்றி ஆய்தம் முதலிய முச்சார்புத்தொகையாகச் சாரவரும் எண்ணிறந்த எல்லா எழுத்து களுக்கும், அகத்தெழு வளியிசை நுவல்வது, இத்தகையவான பல அடிப்படைக் கொள்கை களினாலேயே, இப்போதைய ஆரிய வேதங் களின்றும், முற்றும் வேறுபட்டிருத்தல் காணலாம்.

'ஆர்ய' என்னுஞ் சொல், தொல்காப்பியக் காலத்துக்குப் பின்னும், திவாகரக் காலத்துக்கு முன்னும், வந்து நுழைந்திருத்தல் கூடும். அப்போது, அதற்கு மிலேச்சன் என்னும் பொருள் இருந்ததும், நமக்குத் தெரியுமன்றோ? இன்னும் பிற்காலத்தில் 'ஆர்ய' என்பது மிலேச்சன் என்னும் பொருளை இழந்து 'ஆசான்' என்னும் பொருளில் வந்ததும், தெரிந்ததே.

ஆகவே, ஆரியன் ஆசானான சில நூற்றாண்டுகளிற்றான், அந்த ஆரியர் தமிழர்க்கு நெறி கற்பிக்கக் கூடுமேயன்றி, ஆரியன் மிலேச்சனாய் இருந்த காலத்தும், ஆரியனே உண்டாயிராத தொல்காப்பியக் காலத்தும், அதன் முற்காலத்தும், முந்திய நாளையில், ஆரியன் போய் வியாசருக்குப் பிந்திய ஆரிய வேதத்தை வைத்துக்கொண்டு பண்டைத் தமிழர்க்கு நெறி கற்பித்திருப்பான் என்பது, தொல்லியல் ஆராய்ச்சிக்கும் பொருந்தாது.

அவையல் கிளவிகள் அடுக்கடுக்காய்க் கிடக்கும் வேத வேதாந்தங்கள் வியாகரணங் களையுடைய, பிற்காலத்துச் சிந்துநாட்டாரியன், முந்திய தொல்காப்பியக் காலத் தமிழனுக்கு நெறி கற்பித்திருப்பானேல் அவையல் கிளவிக்கு மறுப்புத் தொல்காப்பியத்தில், தோன்றியிராது.

ஆரியன் ஆசானான சில நூற்றாண்டுகளில், அவன் நெறியைக் கடை பிடித்துத் தமிழரும், அவையல் கிளவிகளைப் பேச்சிலும், எழுத்திலும், வழங்கி வருவது வெட்டவெளியாய்த்தெரிகின்றதன்றோ? ஆயினும் அவையல் கிளவிகளை மாத்திரம் ஆரிய மொழியிற்றான் வழங்குவார்கள். (தமிழகம். பக்.153–55.).

'பண்டாய நான்மறை', 'மூவா நான்மறை' எனத்திருவாசகம் அடைமொழி கொடுத்துக் கூறுவது, வடமொழி நான்மறையினின்றும் தமிழ் நான்மறையை வேறுபடுத்திக் காட்டுவதற்காகவே என்று, நல்லறிஞர்கள் கருதுகின்றனர்.

இது பற்றிய விரிவான செய்திகளை போா. கா.சு.எழுதிய திருநான்மறை விளக்கம் என்னும் நூலிற் காணலாம். பேரா. சாம்பசிவம் என்பார் அதனை மறுத்தெழுதினும், அம் மறுப்புக்கு அக்காலத் தமிழறிஞர்கள் உடன்படினும் கா.சு. வின் கருத்து வலிமை குன்றிவிடவில்லை.

பழைய தமிழ் நான்மறைகள் அழிந்து போனமையானும், வடமொழி நால் வேதங்கள் வைதிக நெறிக்குப் பொருந்துவதன்றி, அதனின் வேறுபட்ட சிவநெறிக்குச் சிறப்பு வகையில் பொருந்தாமையானும், இறையருள் பெற்ற சமயக் குரவர்கள் நால்வர் அருளிய, தேவார திருவாசகங்களைத் தமிழ் நான்மறைகள் என்பது பிற்கால வழக்கு. அதனால் இழுக்கு ஒன்றும் இல்லை.

தென்னாடுடைய சிவனே யாயினும் எந்நாட்டவர்க்கும் இறைவனாய் விளங்கு பவனைப் பொதுவியல்பு பற்றி 'ஆரியன்காண் தமிழன்காண்' என்றோ கூறுவதைப் பிழை என்று தக்கோர் யாருங் கூறார். அப் போக்கில் இன்னும் பலவும் கூறிக் கொண்டே போகலாம்.

ஆனால், இவற்றையெல்லாஞ் சுட்டித் தமிழ்நாட்டுத் திருக்கோயில்களில், தமிழ் மந்திரங்களை – திருமுறைகளை ஓதிக் குடமுழுக்குச் செய்யக்கூடாது என்பது, என்ன ஞாயம்?

வடபுல வைதிகத்தின் வேறுபட்ட தனித்தன்மை கொண்டது, தென்னாடுடைய சிவநெறி என்னும் உண்மையை, மறைப்பதுதான் முழுப்பூசணிக்காயைச் சோற்றில் மறைப்பது!

அன்று தமிழ்நாட்டில் சிவநெறியிடம் அடைக்கலம் புகுந்த வேத – வேள்விநெறிக்கு எதிராக நின்றன சமண, புத்த மதங்கள். இன்று தமிழ்நெறிக்கு எதிராக நிற்பது, இந்துமதத்தால் ஏற்றம் பெற்றுள்ள வைதிகநெறி!

திருஞானசம்பந்தர் முதலான அருளாளர்கள் அனைவரும், தமிழில் திருப்பதிகங்கள் ஓதித்தான், அருள்நிகழ்ச்சிகள் பலவற்றை நிகழ்த்தியிருப்பதாக, நூல்கள் கூறுகின்றனவே தவிர, யாரும், எவ் விடத்தும், பிறமொழி மந்திரங்களால் எச் செயலும் செய்ததாகச் சமய நூல்களில் சிறு குறிப்பும் இல்லை.

திருக்கோயில்களில், திருமுறைப் பதிகங்கள் பெற்ற கோயில்கள், 'பாடல்பெற்ற கோயில்கள்' என்று சிறப்பிக்கப்படுகின்றன. தனிப்பதிகம் இல்லாவிட்டாலும், பிற பதிகங்களில், ஊர்ப்பெயர் மட்டும் இடம் பெற்றிருப்பினும், அவையெல்லாம் 'வைப்புத் தலங்கள்' என்று, பெருமைப்படுத்தப்படுகின்றன. வடமொழியால் சிறப்புப் பெற்ற கோயில்கள் என்று ஏதும் இல்லை. தமிழ் என்றால், தெய்வநலங்கெழுமியது, அருள் நிறைந்தது என்று பொருள். அதனால்தான் அருணகிரியார், முருகன், முத்தமிழால் வைதாரையும் வாழவைப்பவன் என்று பாடியுள்ளார். திருமூலதேவநாயனாரும், "தமிழ்ச்செய்தல்" என்று, பாடியுள்ளமையும், இவ் வுண்மையினை உணர்த்துதற்பொருட்டே, எனலாம்.

வடமொழி தனிமொழியன்று. தேவநாகரி, கிரந்தம் போன்ற எழுத்துக்களால் ஆயமொழி. நன்கு செய்யப்பட்டது, கட்டப்பட்டது என்பதே, வடமொழிக்குரிய பொருளாகும். தனிஎழுத்து ஏதுமில்லாமொழியில் வாய்மொழியாகச் சொல்லப்பட்ட நான்மறைகள் இருப்பதை மட்டும் பொருளாக எடுத்துக்கொண்டு, நான்மறை நந்தமிழ்மொழியில் இல்லை என்று முடிவுக்கு வருதல். ஆய்வாளர்தம் நேர்வழிப்பாதை ஆகாது. வடமொழியால் பாடல் பெற்ற திருக்கோயில் ஏதும் தமிழகத்தில் இல்லை.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் வாழ்வியல் பொருண்மைகளைத் தன்னகத்தே கொண்ட திருக்குறள் முதலான கழகப்பனுவல்களும், நால்வர்தம் நற்றமிழ்ப் பாக்களும், நாலாயிரத்தெய்வப்பனுவலும், இறைவனின் திருவுளப்பாங்காலும், தமிழ்த் தாத்தா அவர்களின் விடாமுயற்சியாலுமே, நமக்குக் கிட்டியுள்ளன வெனில் மிகையன்று! அனல்வாதம், புனல்வாதத்தால் அழிந்துபட்ட சுவடிகளை யாரறிவார்.

இதுகாறும் கூறியவற்றால், நான்மறை நந்தமிழ் மொழியில் இருந்து, பார்ப்பனீயரால் அழிக்கப்பட்டுவிட்டது என்பதில். இருவேறு கருத்திற்கு இடமில்லை எனலாம்.

**நான்மறைமுதல்வன்** *nāṉ-maṟai-mudalvaṉ,* பெ. (n). அந்தணன்; (brahmin) andaṇaṉ
*"நான்மறை முதல்வர் திறம்புரி பசும்புற் பரப்பினர் கிடப்பி"* (புறநா.93.).

*[நான்மறை + முதல்வன்.]*

பழந்தமிழர்களின் பண்பாட்டுக் கூறுகளைச் சிதைப்பதற்காக ஆரியப் பிராமணர்களால் திரித்துக் கூறப்பட்டவை; நான்மறை, நான்மறையோன் என்பனவாகும்.

எழுதாக்கிளவியாகிய நான்குமறையை நெட்டுருச் செய்வதவர் முதலில் கூற, வல்லின 5 எழுத்துகளுக்கு 4 ஒலிக்கூறுமட்டும் கற்றவர்களின் கணபாடமாகக் கூறுவர்.

அந்தணன் என்பது, அறவோரையே குறிக்கும். எல்லோரிடத்தும் செந்தண்மை பூண்டு ஒழுகுபவரே அந்தணர். காலப்போக்கில் குறிப்பிட்ட இனத்தாரைக் குறித்து வழங்கலாயிற்று. வள்ளுவர் அறத்தின் வழிப் பட்டவரே அந்தணர். என்று குறட்பாக்களில் குறித்துள்ளது, ஈங்கு எண்ணத்தக்கது. (குறள்,30,543.).

நான்மறைக் கோட்பாடு, நானிலத்தார் அனைவருக்கும் பொதுவானது. குமுகாய மாந்தர்தம் வாழ்வியலுக்கு வழிகாட்டுவது. காலப்போக்கில் ஒரு குலத்தாரைக் (பார்ப்பனரை) குறித்து வழங்கும் சொல்லாயிற்று, எனலாம்.

**நான்மறையாளன்** *nāṉ-maṟai-y.āḷaṉ,* பெ. (n.) நான்குவேதத்திலும் வல்லவனான அந்தணன் (பிராமணன்); andaṇaṉ (brahmiṉ.) as versed in the four vēdās. "*தூயநான்மறையாளர் சோமுச்செய்ய*" (திவ்.பெரியதி.2:10:1.).

*[நான்மறை + ஆளன்.]*

ஓதும் முதல்வன் அன்றிக் கணபாடம் கூறுவாரில் சிலர் பொருளறிந்திருப்பர்.

**நான்மறையுதிர்த்தகரு** *nāṉ-maṟai-y-dirtta-karu,* பெ. (n.) பெண்குறி; the genital of female

**நான்மறையோன்**[1] *nāṉ-maṟaiyōṉ,* பெ. (n.)முப்புவல்லுநர்; the greatest scientist capable of finishing muppū.

*[நால்மறை → நான்மறையோன்.]*

நாலுதல் = விரிதல், நீட்டித்தல்.

மட்டமான மாழைகளைப் பொன்னாக்க முறைப்படித் தங்கமாக்குந் தன்மையுள்ள பொன்னாக் மூலியினைக் கண்டறிந்தவர், வாணாளை நீட்டிக்கச் செய்யும், பொன்னாக்க மூலியினை அறிந்தவர்.

**நான்மறையோன்**[2] *nāṉ-maṟaiyōṉ,* பெ. (n.). 1. பிரமன்; Brahmaṉ. 2. *நான்மறையாளன்* பார்க்க; see *nāṉ-maṟaiyāḷaṉ.* "*நந்தம்பாடியில் நான்மறையோனாய்*" (திருவாச.2:21.).

*[நான்மறை → நான்மறையோன்.]*

தமிழ்மறைகள் காலவெள்ளத்தில் அழிக்கப்பட்ட பின்பு, நான்கு வடமொழி மறைகள் மக்களிடையேச் சிறிதுசிறிதாக வழக்கூன்றலாயின. நான்மறையோதும் பார்ப்பனர், மன்னனின் அறியாமை அச்சத்தைப் பயன்படுத்திக் கொண்டு தமது பிழைப்பிற்காக, அரண்மனையில் நான்மறை ஓத ஆரம்பித்தனர். நான்கு முகங்கொண்ட பிரமன் என்னும் மூன்றாம் கடவுளைப் படைத்தனர் என்று, ஆய்வாளர் கருதுவர்.

**நான்மறைவல்லி** *nāṉ-māṟai-valli,* பெ. (n.) திருகுகள்ளி;(சா.அக.): twisted milk hedge.

*[நால்மறை → நான்மறை + வள்ளி.]*

அகன்ற முட்களுடன் கூடிய இலைகளையுடைய திருகுகள்ளி.

**நான்மாடக்கூடல்** *nāṉ-māḍa-k-kūḍal.* பெ. (n.) கூடல்மாநகர். Madurai city "*நான்மாடக்கூடன் மகளிரு மைந்தரும்*" (கலித்.92,65.).

**மறுவ.** தென்மதுரை.

*[நால்மடம் → நான்மாடம் + கூடல்.]*

திருக்கோயிலை மய்யமாகக் கொண்ட நான்கு மாடவீதிகளிலும், வானளாவிய வளமனைகள் விளங்கித் தோன்றும் மதுரை மாநகர்.

நான்மாடக்கூடலின் பெயர்க்கரணியம் குறித்து நச்சினார்க்கினியர் நவில்வது:— "திருஆலவாய், திருநள்ளாறு, திருமுடங்கை, திருநடுவூர் இவைகளுக்கு நடுவிருத்தலின் இப் பெயர் பெற்றது".

**நான்முகக்கள்ளி** *nāṉ-muga-k-kaḷḷi,* பெ. (n). சதுரக்கள்ளி; Squre spurge

*[நான்முகம் + கள்ளி.]*

**நான்முகத்தோன்** *nāṉ-mugattōṉ,* பெ. (n.). *நான்முகன்,1.(பிங்.)* பார்க்க; see *nāṉ-mugaṉ.*

*[நான்முகன் → நான்முகத்தோன்.]*

**நான்முகப்புல்** *nāṉ-mugappul,* பெ. (n) நாணல் (வின்.); kaus.

**மறுவ.** சதுரப்பட்டைப்புல்.

*[நான்முகம் + புல்.]*

நான்கு பக்கங்களிலும் பட்டையாகத் திகழும் அமைப்புடன் கூடிய புல்.

**நான்முகவேதியன்** *nāṉ-muga-vēdiyaṉ,* பெ. (n.) *கல்லாரை;* a kind of herbal.

**நான்முகன்** *nāṉ-mugaṉ,* பெ. (n) **1.** நாலுமுகமுடையவனாகக் கருதப்படும் பிரமன்; Brahmaṉ, as four-faced *"நான்முகற்கு...... மறைபயந்த பண்பன்"* (திவ்.இயற்.1:33.). **2.** அருகன்; Arhat

*[நால்முகன் → நான்முகன்.]*

**நான்முகன்கிழத்தி** *nāṉ-muagaṉ-kiḻatti,* பெ. (n.). நான்முகன் மனைவியாகிய கலைமகள் (பிங்.); Kalaımagaḷ, as the consort of Nāṉmugaṉ.

*[நால்முகன் + கிழத்தி.]*

நான்முகன் மனைவி கலைமகள் என்றும், திருமால் மனைவி திருமகள் என்றும் பிற்காலப் புனைகதைகள் கூறும்.

**நான்முகன்திருவந்தாதி** *nāṉ-mugaṉ-tiru-v-andādı,* பெ. (n). திருமழிசையாழ்வார் இயற்றியதும், நான்முகன் என்ற சொல்லால் தொடங்குவதுமான, நாலாயிரத்தெய்வப்பனுவல் பகுதி; a section nālāyira-p-pirabandam by Tiru.-maḻišai-y-āḻvar,commencing with the word nāṉ-mugaṉ.

*[நான்முகன் + திரு + அந்தாதி.]*

அந்தம் + ஆதி = ஈறுமுதலி.

**நான்முகன்தேவி** *nāṉ-mugaṉ-tēvi.* பெ. (n). நான்முகன் கிழத்தி; Kalaimagaḷ, as the cons ort of Nāṉ-mugaṉ **2.** மனோசிலை (யாழ்.அக.); a mineral poison.

*[நான்முகன் + தேவி.]*

**நான்முலையாயம்** *nāṉ-mulai-y-āyam,* பெ. (n.). ஆநிரைத்தொகுதி மாடு; hard of cows. *"நான்முலையாய நடுங்குபு நின்றிரங்கும்"* (சிலப்.17, உரைப்பாட்டுமடை,5.).

*[நால் + முலை + ஆயம்.]*

**நான்மைநன்னெறி** *nāṉmai-naṉṉerı,* பெ. (n.). திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், திருநாவலூரர், மாணிக்கவாசகர் முதலான நால்வர் பெருமக்களால், நானிலம் உய்யும்பொருட்டு வாழ்ந்து காட்டிய வாழ்வியல் நெறி; the fourfold life principles of nālvar viz., Tiruñāṉa-šampandar, Tirunāvu-k-karašar, Tirunāvalūrar (šundarar), Māṇıkka-vāšagar.

*[நான்மை → நன்னெறி.]*

**1. மகன்மைநெறி—** திருஞானசம்பந்தப் பெருமான், இறைவனைத் தந்தையாகவும், இறைவியைத் தாயாகவும், மேற்கொண் டொழுகி, ஞாலத்துவாழ் மாந்தர்தமக்கு நல்லொழுக்கம் கற்பித்த நன்னெறி.

(எ.டு.) 1. "சிந்தையே புகுந்தான் திருவாரூர்எம் எந்தை தானெனை யேன்று கொளுங் கொலோ"

2. "தாதையார் முனிவுறத்தான் எனைஆண்டவன்"

3. "வெந்தநீ றாடியார் ஆதியார் சோதியார் வேதகீதர் எந்தையாரூர் தொழுதுய்யலாம் மையல் கொண்டு அஞ்சல் நெஞ்சே"

4. "வெப்பொடுவிரவியோர் வினைவரினும் அப்பாவுன் உன்அடியலால் அரற்றாது என்நா"

5. "இன்புறும் எந்தை இணையடி ஏத்துவார்"

6. "வெந்துயர் தோன்றியோர் வெருவுறினும் எந்தாய் உன்னடியலால் ஏத்தாது என்நா"

மேற்குறித்த திருஞானசம்பந்தர் தம் திருப்பதிகப் பாடல் வரிகள்– இறைவன்பால் இவர்பூண்ட மகன்மை உறவினை எடுத்துக்காட்டுகின்றன எனலாம். சிவக்கொண்முடிபாளர், திருஞானசம்பந்தப் பெருமானைச் (சரியைநெறி) அல்லது நல்லொழுக்க நன்னெறியினைத் தமது வாழ்க்கையில் மேற்கொண்டு ஒழுகி, இவ் வையம் உய்யும் பொருட்டு, வாழ்ந்து காட்டிய புகலியர்கோன் என்று புகல்வர்.

சரியைநெறி அல்லது நல்லொழுக்க நன்னெறி என்பது, இறைவனின் புகழ்மொழிகளையே, எஞ்ஞான்றும் பேசுவதும், பாடுவதுமாகும். திருஞானசம்பந்தர், இறைவனுடைய பொருள் பொருந்திய புகழ்மொழிகளைத் தாமும் பாடி, பிறரையும் பாடச்செய்தார். இவர்தம் நல்லொழுக்க நன்னெறிக்கு எடுத்துக்காட்டாக, வள்ளுவர் வகுத்துள்ள வாய்மொழி வருமாறு:–

"இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு" (குறள்,5.)

இக் குறட்பாவினுக்கு இலக்கணமாய்த் திகழ்ந்தவர் சம்பந்தர். முடிவாக, ஞானசம்பந்தர், மண்ணில் நல்லவண்ணம், வையத்தார் வாழும் பொருட்டு, எல்லாம்வல்ல இறைவனின் பொருள் பொதிந்த புகழ்தரும் செஞ்சொற்களைத் திருப்பதிகத்தமிழ்நெறியின் வாயிலாகப் பாடி, திருவருளை அடைந்து, பிறப்பிறப்பற்ற முத்திநிலையை எய்தினார் எனலாம்.

**2. தொண்டுநெறி–திருநாவுக்கரசர்**

இவ் வையம் வாழ்வாங்கு வாழ்வதற்கு உறுதுணை புரியும்நெறி: மாந்த வாழ்வியக் கத்தின் அடிப்படைநெறி: அனைத்துச் சமயத் தவரும், தத்தம் வாழ்வில் கடைபிடித்து ஒழுக வேண்டிய பொதுநெறி. சமயப்பற்று அற்றவரும், சார்ந்து ஒழுகும் நன்னெறி. இந் நெறிபற்றி நாவுக்கரசர் குமுகாயத்தார்க்குக் கூறுவது

"நன்கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென்கடம்பைத் திருக்கரக்கோயிலான்
தன்கடன் அடியேனையுந் தாங்குதல்
என்கடன்பணி செய்து கிடப்பதே"
என்பதாகம்.

ஒவ்வொருவரும், அவரவர்தம் பணியினைச் செம்மையாகச் செய்து முடிக்க வேண்டும். என்னும் தொண்டு நெறியின் மூலப்பொருளை. இப் பாடல் பகர்கின்றது என்பார், திரு.வி.க.

தொண்டுநெறியின் பொருளாழம் குறித்து திரு.வி.க மேலும் கூறுவது வருமாறு:–

அஞ்சாமை, உண்மை, இன்பம்–இவற்றின் முதன்மையாகிய உரிமை–இவற்றைப் பெறுதற்கு நாவுக்கரசர் நவிலும் நல்வழியே–பணி என்னுஞ்செவ்வழி. பணியினால் அனைத்தும் பெறலாம். அப்பர், மனம், மொழி. மெய்களால் பணிபுரிந்தே, அஞ்சாமை, உண்மை. இன்பம். உரிமை என்பவைகளைப் பெற்றார்.

திருப்பணியை (service)ப் பற்றிப் பேசாத பெரியோரில்லை; நூலில்லை; பணிசெய்யாதார் உலகத்திலுளரோ? தோட்டியும் பணி செய்கிறான்; தொண்டைமானும் பணிசெய்கிறான்; அறவோனும் பணி செய்கிறான்; ஆண்டவனும் பணிசெய்கிறான்"

இவ்வுலகிலும் உயிர்கள் எல்லாம் ஓயாது பணிசெய்கின்றன. உலகமெல்லாம் "பணி" மயமாகவே பொலிகின்றன. எல்லா உயிர்கட்கும், பொதுவாயுள்ள பணியின் சிறப்பை, நாவுக்கரசர் "என்கடன் பணிசெய்துகிடப்பதே" என்னுந் திருப்பதிக வரியின் வாயிலாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைத்துள்ளார்.

இத் திருப்பதிகத் திருவரி காலதேசத்தைக் கடந்து நிற்கும் பொருட் பொருத்தப்பாட்டினைப்

புகல்வ,து எஞ்ஞான்றும் நின்றுநிலவும், செந் நெறியாம், தொண்டுநெறி பற்றியது. எவரெவர், எப்பணியில் காதல் கொண்டிருக்கிறாரோ, அவரவர் அவ்வப் பணிவழி நின்று, பயன்கருதா நன்னெஞ்சுடன் நற்றொண்டாற்ற வேண்டும் என்னும் பொருண்மையது.

இறைவன், தொண்டாற்றும் தூய அடியார்க்கு, எஞ்ஞான்றும் உறுதுணை புரிவா னெனும், வாழ்வியல் கொள்கை, நாவுக்கரசர் பாடல்களில் பரவலாக பதிந்துள்ளது எனலாம். நற்றமிழ்ப்பாக்களால், நானில மாந்தர்தம் மனத்தைத் தூய்மை செய்து, இறைமைத் தன்மையை வளர்த்ததுபோல், உழவாரப்படை கொண்டு, திருக்கோயில்கள் தோறும் சென்று, தூய்மைசெய்து—தொண்டு நெறியை வளர்த்தார். நல்லொழுக்கநெறி நின்று (சரியைநெறி) பயன்கருதாத் தொண்டாற்றிய பெருமை நாவுக்கரசரையே சாரும்.

### 3. ஓகநெறி தோழமைநெறி

ஓகம் என்றால் மனச்செறிவு; மனம் ஒருமுகப்பட்டு, எஞ்ஞான்றும் இறைவனைச் சார்ந்து நிற்றலே ஓகம். உடல், உயிர், உயிர்க்குயிராகிய இறைவன் ஆகிய வரிசை அமைப்பில். இடையில் நிற்கும் உயிர் உடலையும். உலகப்பொருள்களையுமே சார்ந்து நின்று. பிறவியில் அழுந்தும் தன்மைத்து. பிறப்பிற்குக் கரணியமாகத் திகழும் உலகவாழ்க்கையில் திளைக்காது. எப்பொழுதும் இறைவனுடன் ஒன்றியிருப்பதே ஓகமாகும். இந் நிலையில், இறைவனும் ஆதனும் ஓகநெறியில் (யோகமார்க்கத்தில்) தோழமைநெறியில் நிற்பார்கள் என்று, சிவக்கொண்முடிபாளர் விளக்குவர்.

இவ் வோக நெறியில் இறைவனுடன் தோழமை பூண்டு, ஒழுகியவர் நம்பியாரூரர் எனப்படும் சுந்தரராவார்.

நம்பியாரூரரால், ஏழாந்திருமுறையில் இத் தோழமை நெறி, பலவாறு சிறப்பித்துப் பேசப்படுகிறது.

"நம்மைஉமக்குத் தோழனாகத்தந்தோம்" என்று இறைவன் அருளிய திறம், உலகச்சமயவரலாற்றில் எஞ்ஞான்றும் நிகழ்ந்திலது என்பர், சிவக்கொண்முடிபாளர்

தமிழகத்துச் சைவம் தந்த, பெரும்பேறே தோழமைநெறி என்று, உலகத்தத்துவ அறிஞர்கள் கருதுகின்றனர். இறைவன் ஆதன் (ஆன்ம) உறவுமுறையைச் சமயவுலகில். நம்பியாரூரர் தவிர வேறு எவரும் மேற்கொண்டதாகத் தெரியவில்லை. தோழமை உறவினை விளக்கும் நம்பியாரூரரின் திருப்பாட்டு வருமாறு:– "ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி" (தேவா. 7:51:10).

### 4. மெய்யுணர்வுநெறி (ஞானம், அறிவம்)

எல்லாம்வல்ல பரம்பொருளை அறியும் நெறியே மெய்யுணர்வு நெறி. இம் மெய்யுணர்வு பெற்றோர் அடையும் உயர்நிலையை வள்ளுவப்பெருந்தகை "கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர் மற்றீண்டு வாராநெறி" (குறள்,356.) என்று விளக்குவது காண்க. மாணிக்கவாசகர் மெய்யுணர்வு நெறியில் (ஞானத்தில்) தலைநின்றவராவார். இவர் மெய்யுணர்வ நெறியில் (ஞானநெறியில்) பரம்பொருளால். ஆட்கொள்ளப்பட்டவர். இக் கருத்தினை.

> "நானேயோ தவம்செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்
> தேனாய் இன்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்
> தானேவந்து என்உளம்புகுந்து அடியேற்கு அருள்செய்தான்
> ஊனாரும் உயிர்வாழ்க்கை ஒறுத்தன்றே வெறுத்திடவே"

என்றபாடலின் மூலம் விளக்குகிறார். மெய்யறிவுபெற்றவர், மீண்டும் பிறவார். முத்தியில் திளைப்பர். இக் கருத்தினை "ஞானம் வந்தால் பின் நமக்கெது வேண்டும்?" என்று கூறுவதன் வாயிலாக, ஒளவையார் வலியுறுத்துவது காண்க.

உலகியல் பொருள்கள் மீது அதாவது மண், பெண், பொன் இவற்றில் கொண்டுள்ள

பற்றினையே, பற்றாகக்கொண்டு ஒழுகும் நெறியே. மெய்யறிவு (ஞான) நெறியாகும். பதியறிவு வாய்க்கப்பெற்றவரே மெய்யறிவு பெற்றோர். மாணிக்கவாசகரை இறைவன் தானாக வலியவந்து ஆட்கொண்டான். இக் கருத்தினை,

"ஊனாய் உயிராய் உணர்வாய் என்உட்கலந்து"........"தாமேவந்து எமைத் தலையளித்து ஆட்கொண்டருளும்" ஊன் கெட்டு, உயிர்கெட்டு, உணர்வுகெட்டு, என் உள்ளமும் போய், நான் கெட்டவா பாடித் தெள்ளேணம் கொட்டாமோ" என்ற பாடல்வரிகள் மாணிக்கவாசகரின் உள்ளத்தில், மெய்யுணர்வு அருள்நெறி, எஞ்ஞான்றும் நின்று நிலவியதற்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன என்று, சிவக்கொண்முடிபாளர் கருதுகின்றனர்.

(எ.டு) "இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள்வாழ்க" இம்மெய்ம்மை வரிகளே, ஜி.யு.போப் அவர்களை நெக்குருகச்செய்தன.

அவனருளாலே அவன்தாள் வணங்கியவர் மானிக்கவாசகர். இக் கருத்தினைச் "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன் எனக்கருளியவாறு ஆர்பெறுவார்அச்சோவே" என்ற பாடல்வரிகளில் தெளிவுறுத்துகிறார். இம் மும்மல நீக்கத்தை வள்ளுவர், "காமம்வெகுளிமயக்கம் இவை மூன்றின் நாமம்கெடக் கெடும் நோய்" (குறள்,360.). என்ற குறட்பாவில் விளக்குகிறார்.

**நான்றவாய்** *nāṉṟa-vāy*, பெ. (n). நால்வாய்; hanging mouth.

*[ஞால் → நால் → நான் → நான்ற + வாய்.]*

நாலுதல் = தொங்குதல்.

தொங்கிக்கொண்டிருக்கும் வாய்.

**நான்றீஅளவு** *nāṉṟi-aḷavu*, பெ. (n.). இரண்டு பலம் அல்லது இரண்டு வராகன் எடையளவு; six tōla weight or two pagōḍa weight.

**நான்று** *nāṉṟu*, பெ. (n.) காலம்; day, time "*உலகளந்து நான்று*" (திவ்.இயற்.1.17.).

*[ஞான்று → நான்று.]*

**நான்றுகொண்டுநில்–தல்** *nāṉṟu-koṇḍu-nil-*, 14 செ.கு.வி. (v.i.) *நான்று கொள்–* பார்க்க; see *nāṉṟu-koḷ-*

*[ஞால் → ஞான் → ஞான்று → நான்று + கொள் → கொண்டு → நில்–.]*

**நான்றுகொள்ளு–தல்** *nāṉṟu-koḷḷu-* 16 செ.கு.வி. (v.i.) கயிற்றைக் கழுத்திலிட்டுக் கொண்டு. தானாக உயிரை மாய்த்துக் கொள்ளுதல்; to hang oneself. "*நான்றியான் சாவலன்றே*" (சீவக.2513.).

*[ஞால் → நால் → நான்று+கொள்ளு–. கழுத்திற்சுருக்கிட்டுத் தொங்கிச் சாதல் (வே.க.3.16.).]*

**நானச்செப்பு** *nāṉa-c-ceppu*, பெ. (n.). புழுகுச் செப்பு; box or receptacle for civet "நானச்செப்போ டல்லவுங் கொள்க வென்றான்" (சீவக.558.).

*[நானம்[1] + செப்பு.]*

**நானம்[1]** *nāṉam*, பெ. (n.) 1. நறுமணப்பண்டம்; fragrant substance, "*நானங் கலந்திழியு நன்மலைமேல் வாலருவா*" (ஐந்.ஐம்.13.). 2. மான் (கத்தூரி)மணத்தி; mush "*நானங் கமழுங்கதுப்பினாய்*" (நாலடி,294.). 3. புனுகுப் பூனை; civet. "*தேமார்ந்த நானந் தோய்த்து*" (சீவக.1652.). 4. மான்மணத்தி (கத்தூரிமான்.); (சூடா.) mush deer. 5. பூசுவன (பிங்.); unguents for the body· perfumed oil for bathing scented hair. oil 6. நறுமணப்பொடி fragrant powder. "*நலத்தகு நானநின்றிடிக்கு*

*நல்லவர்*" (சீவக.92.). 7. கவரி மான் (பிங்.); yāk. Bos grunniens.

*[நானம்[1] + செப்பு.]*

**நானமா** *nāṉa-mā,* பெ. (n.). கத்தூரிமான்; musk-deer

**நானமாலி** *nāṉa-māli,* பெ. (n.). கவுரிவைப்பு நஞ்சு; a kind of prepared arsenic.

**நானல்கூர்கை** *nāṉal-gūrgai,* பெ. (n). அமைதியாய் இருக்கை; preserving silence.

*[நா + நல்கூர்கை.]*

**நானவெண்ணெய்** *nāṉa-v-eṇṇey,* பெ. (n.). நறுமணநெய்மம்; perfumed oil. "நான வெண்ணெய் கதுப்புரைத்து நறுநீராடி" (சீவக.2692.).

*[நறுமணம் + எண்ணெய்.]*

நீராடுங்கால், தேய்த்துக் குளிக்கும் நறுமண எண்ணெய்.

**நானா** *nāṉā,* பெ.எ. (adj.) ஒன்றுக்கு மேற்பட்ட பல: sundry, diverse, various, many. "*பிராரத்வ நானாவாகும்*" (கைவல்.தத்.97.).

*[நால்[2] → நாலா → நானா.]*

ஒ.நோ. தலை→தலா.

**நானாங்கள்ளி** *nāṉāṅ-kaḷḷi,* பெ. (n.) இலைக்கள்ளி (மலை.); ilaik kaḷḷi, spiral five tubercled spurge.

*[நால்[2] → நானாம் + கள்ளி.]* படம்



**நானாதேசி** *nāṉā-tēśi,* பெ. (n.). வணிகர் பிரிவு (I.M/P.cg.682) a class of merchants.

*[நாலா → நானா + தேசி.]*

நாட்டின் நாலாபக்கத்திலிருந்து வரும் வணிகர்.

**நானாமருந்து** *nāṉā-marundu,* பெ. (n.). பலவகைக் கடைச்சரக்குகளால் உருவாக்கப்பட்ட மருந்து; a mixture or compound of different medicinal drugs.

**நானார்த்தபதம்** *nāṉārtta-padam,* பெ. (n.) பலபொருளொரு சொல்; a word of many senses. "*உரிச்சொல்.....நானார்த்த பதமாகியும் அமானார்த்த பதமாகியும்*" (பி.வி. 18,உரை).

*[நால்[2] → நாலா → நானா + skt. அர்த்தம் + பதம்.]*

**நானாவிகாரி** *nāṉā-vigāri,* பெ. (n.). பல கோணங்களில் நிலைமாறுந் தன்மையுள்ள பொருள்; that which is subject to many transformations. "*நானாவிகாரியாய் நானறிந்தறி யாமையாய்*" (தாயு.ஆனந்த.7.).

*[நால்[2] → நாலா → நானா + skt. விகாரி.]*

**நானாவிதச்செடி** *nāṉā-vida-c-ceḍi,* பெ. (n.). வேப்பிலை நங்கை; pepper naṅgay.

*[நாலாவிதம் → நானாவிதம் + செடி.]*

**நானாவிதமாய்ப்போ—தல்** *nāṉā-vidamāy-p-pō-.* 8 செ.கு.வி. (v.i.) பலவகையாய்ச் சிதறுண்டு போதல் (இக்.வ.); to be scattered in many ways, as riches.

*[நாலா → நானா + விதமாய் + போ—.]*

நான்குதிசையிலும் பிரிந்துபோதல்.

**நானாளைமாறன்** *nāṉāḷai-māṟaṉ,* பெ. (n) நாலுநாளைக்கு ஒருமுறைவரும் காய்ச்சல் (சாதுர்த்திகம் (யாழ்.அக.); quartan fever

மறுவ. முறைக்காய்ச்சல்.

**நானாற்றிசை** *nāṉāṟṟisai,* பெ. (n). பலதிசை; different directions *"நானாற்றிசையும் பிணம் பிறங்க"* (களவழி.6.).

*[நால் + நால் + திசை.]*

கிழக்கு, மேற்கு, வடக்கு, தெற்கு என்னும் நான்கு திசைகள். வடகிழக்கு, வடமேற்கு, தென்கிழக்கு, தென்மேற்கு என்பதையும் குறிக்கும்.

**நானிலப்பிரிப்பு** *nāṉila-p-pirippu,* பெ. (n). *நானிலமுறை* பார்க்க: see *nāṉila-muṟai*

நால்நிலம் → நானிலம் + பிரிப்பு.

**நானிலம்** *nāṉilam,* பெ. (n) குறிஞ்சி, முல்லை, நெய்தல், மருதம் என்னும் நால்வகைப்பட்ட பிரிவுடைய நிலம்; earth, as consisting of the four kinds of tracts, viz kuriñji, mullai, neydal, marudam

*[ஒருகா. நான்கு + நிலம் → நாநிலம் → நானிலம்.]*

நால்வகை நிலத்தொகுதி (சொ.அ.பக்.45.).

"முல்லையும் குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்குதுயர்உறுத்து பாலை என்பதோர் படிவங்கொள்ளும்" (சிலம்பு). தமிழில் உலகத்தைக் குறிக்கும் பெயர்களுள் ஒன்று நானிலம். இது காரணப்பெயர். பழந்தமிழ் மக்கள், தாம் வாழ்ந்த உலகை—தமிழகத்தை—அதன் இயற்கை இயல்புகளை நோக்கி, நான்காகப் பகுத்தனர். தமிழர் தாம் கண்ட உலகினை, அதிற்காணும் மலை, காடு, வயல், கடல் ஆகியவற்றின் அடிப்படையிலான ,இயற்கைத் தன்மையை உளங்கொண்டு..... நன்றாகப் பகுத்துக் கண்டு—, அதற்கு நானிலம் என்று பெயரிட்டு வழங்கிய பாங்கு, தமிழர்தம் நிலநூலறிவினை உலகத்தார்க்குப் பறைசாற்றுந்தன்மையில் அமைந்துள்ளதெனலாம்.

**நானிலமுறை** *nāṉilamuṟai,* பெ. (n) *நானிலவொழுங்கு* பார்க்க; see *nāṉila-v-oḻuṅgu*

*[நால்நிலம் → நானிலம் + முறை.]*

**நானிலவைப்பு** *nāṉila-vaippu,* பெ. (n) *நானிலவொழுங்கு* பார்க்க; see *nāṉila-v-oḻuṅgu*

*[நானிலம் + வைப்பு.]*

1. குறிஞ்சி = மலையும்மலைசார்ந்த இடமும்.
2. முல்லை = காடும்காடு சார்ந்த இடமும்.
3. மருதம் = வயலும்வயல் சார்ந்த இடமும்.
4. நெய்தல் = கடலும், கடல்சார்ந்த இடமும்.

**நானிலவொழுங்கு** *nāṉila-v-oḻuṅgu,* பெ. (n.). *நானிலவைப்பு* பார்க்க; see *nāṉ-nila-vaippu*

*[நானிலம் + ஒழுங்கு.]*

**நானூல்** *nāṉūl,* பெ. (n.) மார்பிற் றொங்கும் நான்கு புரிகளையுடைய பூணூல்; sacred thread, as hanging on the shoulder "*நானூன் மார்க்க னணிக்குறி சொற்று*" (கல்லா.46,7.).

*[நால்[1] → நான் + நூல்.]*

*மார்பில் தொங்கும் பூணூல்.*

திருமணமாகும்முன், கல்வி முடிக்கும் பணி (பிரமச்சாரி) நிலையில் 4 புரியும், திருமணம் 48 அகவையில் முடிந்தபின், 8 புரிநூலணியும் பாங்கு, பார்ப்பனீயப் பண்பாகும்.

**நானூறு** *nāṉūṟu,* பெ. (n.) நான்கு நூறு கொண்ட எண்; four hundred

க. நானூறு.

*[நால்[2] + நான் + நூறு.]*

கடைக்கழகப் பாடல்களைப் புறம் பற்றித் தொகுத்தபோது, 400 பாக்கள் இருந்தால், அகநானூறு, (நற்றிணை) நட்டிணை, குறுந்தொகை என அகப்பாக்களையும், அடிவரம்பு பற்றி மூன்று நானூறுகளாகப் பிரித்தனர். பழமொழி நானூறு என்றும், ஒருதுறைக்கோவை நானூறு என்றும், இடைக்கால, பிற்காலங்களில் தமிழில் நானூறு எனும் சொல்லாட்சி, இலக்கியங்களைப் பிரிக்கும் பான்மையில் எழிலுற இடம்பெற்றுள்ளது.

